திருச்சிற்றம்பலம்.

# தத்துவநிஜாநுபோகசார அதிகார அட்டவணை.

## பூர்வபாகம் கன்மகாண்டம்.

## பொதுவானபிரகரணம்.



## பூர்வபாகம் கன்மகாண்டம் இரண்டாம் அதிகாரம்.

## வாதிகள்சமயம்.

## பூர்வபாகம் கன்மகாண்டம் மூன்றாவது அதிகாரம்.

## சங்கற்பப்பிரகரணம்.

உ

ஓம்பராபரப்பிரமணேநமஃ.

# தத்துவநிஜாநுபோகசாரம்.

## 1.—பூர்வபாகம்—கர்மகாண்டம்.

## க—ஆம்·பொதுமைப்பிரகரணம்.

### க-வது.—அத்தியாயம்.

### விநாயகர்துதி.

க. சச்சிதாநந்தமே தருமதமூன்றதாய்
தக்கதோங்காரஞ் சத்தியஞ்சதாய்
நிச்சிதாஞாதுரு ஞாநநேயமே
நீள்விழிக்கொம்பொன்று நீண்டசத்தியாய்க்
குச்சிதாஞ்சிவயீ சாதிநால்வாயதாய்க்
கூறிச்சையாதியே கும்பத்தலமதாய்
உச்சிதாஞ்செவியதே யோரிருமாயையா
யோங்கியகணபதி யுள்ளமென்னுள்ளமே.

(இதன்பொருள்)

சத்து சித்து ஆநந்தமாகிய மூன்றுமே மீறிநின்றுஎல்லாவற்றிற்குமுதலாய் விளங்குந் திருக்காகிற யானைக்கு மூன்றுமதமாயினதை மும்மதமென்பானே னென்னில், யானைக்கு மும்மதமு மிஞ்சினவிடத்தில் யானை தன்னையுணராமல், மதத்தின் வழியிற் சென்றாற்போலத், திருக்கானையுந் தன்னையறியாமல், சச்சிதாநந்தமே காட்டுகையாலும், மும்மதமுந்தீர்ந்தவிடத்து யானையுள்ளபடிநின்றாற்போல, சிவயோகிகளுக்குச் சச்சிதாநந்தந் தீர்ந்தவிடத்தில், திருக்கேநிற்கையால், மதமென்றதென்றறிக. ஐந்துகைகளையும் ஐந்துசத்தியென்பானே னென்னில், விக்கிநேசுவரனுக்குத் துதிக்கைகூட, ஐந்துகையாலெல்லாத்தொழிலுஞ்செய்வதுபோலப்,பிரமயானை பஞ்சசத்திகளாகிற கைகளாலே பிண்டாண்டஜகத்துக்க ளெண்ணிறந்தகோடிகளைச் சிருட்டியாதியைந்துதொழிலுஞ் செய்கையா லென்ற

றிக. ஞாதுரு ஞாநநேயத்தை மூன்றுகண்ணென்பதென்னெனில், விநாய கன்றனது மூன்றுகண்களாலே யெல்லாவற்றையும் விளக்குவதுபோல்பிர்ம விநாயகன், ஞாதுரு ஞாநநேயக் கண்களைக்கொண்டு, ஞாநங்கர்மமென்னு ம் ஞாநாஞ் ஞானங்களை விளக்குகின்றமையா லென்றறிக. கொம்பொன் றை, நீண்டசிற்சத்தி யென்பதென்னெனில், விநாயகன் கொம்பிரண்டி லொருகொம்பை யொடித்துக்கஜமுகாசூரனைக் கொன்றும், பாரதமெழுதி யும், நின்றகொம்பொன்றாலே உலகத்தையெல்லா நிறுத்தல்போல நிறு த்தலென்றது, இந்தச்சத்தியாகிறகொம்பால் என்னசெய்வாரோ என்றுகே ட்கில் ஞாநாஞ் ஞானசத்துரு உபத்திரவமில்லாமல் அதைநிறுத்த லென் றதென்றறிக. இனிப் பிர்மமாகிறயானைக்குச் சிற்சத்தி பரிக்கிரகசத்தியெ ன்ற இரண்டு கொம்பில், மாயையாகிற பரிக்கிரகசத்தியான கொம்பை யொடித்துச் சர்வசங்காரம்பண்ணி, ஒடியாத வொருகொம்பாகிற சிற் சத்திநோக்காலே பழமைபோற் சிருஷ்டித்து நிறுத்தலாலென்றறிக. சிவ ன் ஈஸ்வரன் கூடஸ்தன்பிரமம் என்றநாலையும் நால்வாயென்பதென்னெனி ல், யானைக்குலம்பமாய் நாலப்பட்டசைகிற வாய்போலப் பிர்மத்திலசைவா ன சித்தினிடமாய்ச், சிவேஸ்வர கூடஸ்தபிரமமாகிய நாலுமசைந்துநாலப் படுகையால் நால்வகையென்றறிக. இச்சாஞாநக்கிரியாசத்தி மூன்றையும், மூன்றுகும்பத்தலமென்பதென்னெனில்,யானைக்குச் சிரசின்மேல் இருபாரிச முமிரண்டுகும்பமும், அதின்கீழே துதிக்கைப் பிரதமவடியிலொருகும்பமும், இதினாலேஅழகும் பெலனுமுண்டாம். அஃதெப்படி எனில்,சிங்கமானது,மத் தகத்தின்மேலேறிக் கும்பத்தலத்திலே கைபோட்டவுடனே, யானைவலி மைகுன்றிச் செத்தாற்போலப், பிர்ம யானைக்கு இச்சாஞாநக்கிரியையே பெ லனுமழகாய் எல்லாவற்றையுமுண்டாக்கி, அழிக்கையாலென்றறிக. கூறிச் சை உண்டாக்கையாலென்றபிறகு, சர்வசங்காரத்தி லிச்சாஞாநக் கிரியை யாகிற கும்ப மூன்றுமுள்ள ஆதிசத்தியாகிற யானையைப் பராசத்தியாகிற சிங்கம் விழுங்கி, மண்டையைத்தின்ன, ஆதிசத்தி மடிந்ததென்றறிக. செ விகளிரண்டையும் இரண்டுமாயையென்பதென்[redacted]னனில். யானைக் கிரண்டு செவியும் எந்நேரமுமசைதல்போலப், பிர்மமுமாயையைக்கொண்டு எல்லா வற்றையும் அசைப்பிக்கிறதென்றறிக. ஓங்குகணபதியென்ப தென்னெனி ல், கணங்களுக்கெல்லாம் பதியாகைபோலப், பிர்மமும் எல்லாவற்றிற்கும் பதியாகையாலே, அவருள்ளமானது என்னுள்ளத்துள்ளேயிருக்க வணங் குவேனென்றறிக-என்றவாறு. (க)

உ-வது—அத்தியாயம்.

## கடவுள்வணக்கம்.

உ. சிற்சத்திபார்வையாலே சேர்மாயையண்டபிண்ட,
நிச்சித்தநிலையாதெல்லா. நீழ்பதிரோமமொன்றால்,

மெச்சித்துச்சாகசங்கள் வேணவாஞ்சிருட்டியாதி,
உச்சித்தமென்பாரல்ல வுவமையிலீசனுக்கே.

(இ-ள்)— சத்து சித்தாநந்தத்தில் நடுவானசித்தின் நினைவாலுண்டா னசிற்சத்தி பார்வையாலே அநாதிமாயையிலுண்டான பிண்டாண்ட பாண்டங்களெல்லாம், நிலைபடுத்தி நிச்சயிக்கப்போகாது, எல்லாஞ்சிவன்ரோமமொன்றிலே யுண்டாகிறதும் லயமாகிறதும்,சிவனுக்குத்தெரியாதென்றால், அந்தச்சிவனுனவர்சித்தர்கள்போல வெகுரூபங்களாய்த்தோன்றுவர், இவ்வாறுதோன்றிய அச்சிவத்தைச்சிலர்மெச்சித்திரிபுராதிகள் முதலானபேரைக் கொன்றுரொன்றும் வெகுவாய் ( வலோத்கார ) சாகசங்கள்பண்ணினுரொன்றும், வேண்டினவரங்களைக்கொடுத்தாரொன்றும், பஞ்சகிருத்தியங்களைப் பண்ணுவாரொன்றும், அவருக்கு இதுகளைப்பெருமையாகச்சொல்லுவதுகநமுமல்ல, தோத்திரமுமல்ல, அவ்விதுகளாலே மெச்சப்படுபவருமல்ல, அவர் உவமைக்கும் பெருமைக்கும் புகழுக்கு மெட்டாதவரானபடியாலென்றறிக. ஆனுல் அவருடைய சத்திகளாலேயுண்டான மூர்த்திகளுக்கு,இந்தத் தோத்திரமேனெனில்,அவர்கள்பஞ்சபூதங்களையுமீறிப், பஞ்சபூதத்துக்கும் அதிதெய்வமாகையால்,ஒவ்வொரு பூதாண்டங்கள் அநந்தமுண்டு, அதிலே ஒரு அண்டத்திலிருக்கிறபேரைக்கொல்வதும், வலோத்காரஞ்செய்வதும், ரட்சிப்பதும், அவர்களுக்கும்பெருமையல்லவென்றறிக. ஆனு லிதுக ளாருக்கென்னில், அந்தந்தவண்டங்களுக்கு அதிபராயிருக்கிறருத்திர விஷ்ணு பிர்மாதிகட்குச் சொல்வதென்றறிக. ஆனுல்முன்சொன்ன வீசனெப்படிப்பட்டவ னெனில், உவமையில்லாதவன்—எ-று. (க)

ரு. ஈசனுயந்தமாறு மெழிற்சச்சிதாதிதான்டி,
நேசனுய்த்தெசப்பாழ்தாண்டி நின்றிடுநிசங்காதீத,
வாசனுய்ப்பேதாபேத வாழ்பேதாவபேதமாகிக்,
காசனுய்ஞேத்திருபாங் கடவுளைவணக்கஞ்செய்வாம்.

(இ-ள்)—இப்படிப்பட்ட ஈசனுனவன், ஆநந்தாதீதனுமாய், சத்துசித்தாநந்தநித்திய பரிபூரணமைந்திற்குமதீதனுய், அநேகமான தெசப்பாழுக்கு மதீதனுய், நிசங்கமுகமதீதனுய், பத்துப்பாழிலும் வாசமாயிருப்பானுமாய், பேதம் அபேதம் பேதாபேதமுமாகி, இதுவுமல்லனுமாகி, பிரகாசஞேத்திருபமான கடவுளை இந்தச்சாத்திரமீடேறும்பொருட்டாக வணக்கஞ்செய்வேனென்றறிக—எ-று. (உ)

ரு-வது— அத்தியாயம்.

## அருளிறைவணக்கம்.

நேயமாமலாதிகந்ம நிகரிறத்துவங்களோடே,
ஆயமாய்க்கூட்டிப்பந்தித் தவிழ்க்கொணுச்சிக்குக்கூட்டைத்,

# தத்துவநிஜாநுபோகசாரம்.

தூயதாஞ்சற்சித்தான சொரூபனேகுருவாய்வந்து,
தாயதாயவிழ்த்துவிட்ட சற்குருபாதம்போற்றி.

(இ-ள்)— ஆத்மாவுக்கு அநாதியாக நேயத்துடனேகூடின மலமாயாதி கந்மங்களை நீக்கும்பொருட்டு, எண்ணிறந்த தத்துவங்களையுங் கூட்டிப்பந்தித்து, ஆயத்ததாநங்களாகக்கட்டித், தநுகரணபுவநபோகமாய்ச்செய்து, கட்டினகட்டை யாவராலுமவிழ்க்கப்படாமல், கட்டினகட்டுடனே அநந்தங்கோடிகற்பங்கள், ஜநநமெடுத்துத்திரிகிறவென்னைச் சச்சிதாநந்தப் பொருள்தானே குருவாய்வந்து, தாயானவள் பிள்ளையைக்கட்டிக்கிடந்து பிரலாபிக்கைகண்டு, அக்கட்டையவிழ்த்துவிட்டுச் சேர்த்தணைத்துக் கொண்டாற்போலுஞ்சிக்குக்கூடாகிற தேகத்தை, நேதிநேதி வாக்கியங்களாலேஇது நீயல்ல இது நீயல்ல என்றுகழித்து, அந்தக்கட்டுகளைப் பிரித்து அவிழ்த்துவிட்டு, ஆத்மாவைச் சுத்தனுக்கித் தன்னுடனே சேர்த்துக்கொண்ட குருபாதத்தைப்போற்றிசெய்வேன்—எ-று. (க)

ரு. போற்றியென்னங்கமெல்லாம் புளகிதமாகப்போதித்,
தாற்றவேயநுபோகத்தை யங்கங்கேநிறுத்திப்பாரொன்,
றேத்தியேயென்னைத்தானே யெங்குந்தான்ருனுய்நிற்கத்,
தேற்றியகுருவின்பாதஞ் சிந்தையுட்போற்றுவேனே.

(இ-ள்)—குருவைத் தோத்திரஞ்செய்தஅடியேனை (எப்படிவேறுசெய்துதன்னுடேகூட்டினதென்னில்)என்னங்கமெல்லாம்புளகாங்கிதமாக,முப்பத்தாறுதத்துவத்துடனேஎல்லாவற்றையும்வேறுசெய்து, எல்லாத்தத்துவமுமிறந்தவிடத்தில்,சமாதியாக்கி, என்னையறிவித்து, என்னையுமிறக்கப்பண்ணி, அங்கே பரனைத்தெரிசிப்பித்து, இப்பாலுமுள்ளவிடங்களிலேநிறுத்தி, எல்லாவிடங்களுமிறந்தவிடத்து, என்னைத்தானேகீழ்மேலெங்குநின்றவனுயறிவித்துப், பின்பு தான் தானுய்நின்றது தெரியத்தேற்றிப்போதித்த ஆசாரியரதுதிருவடியை, உள் அகண்டபூரணமாகவும், புறம்பு சகுணமாகவும் போற்றிசெய்வேன்—எ-று. (உ)

---

ச-வது—அத்தியாயம்.

## வேதச்சிறப்பு.

கூ. வேதமின்மினிவிளக்கு வெண்மதிகதிர்போற்காட்டும்,
பேதநால்விதத்துஞ்சிட்டிப் பிரபஞ்சத்தொழில்களெல்லாம்,
நீதமாய்க்காட்டிமோக்ஷ நிலைவகையொன்ருய்க்காட்டும்,
பேதமாமதங்கள்காட்டிப் பின்னிட்டுக்காட்டுமன்றே.

(இ-ள்)—வேதமானதுமின்மினிபோலக்காட்டுமென்றது— தநுகரணபுவநபோகமே நிவர்த்திபோகபோக்கியமான சுகம் இதைவிடவில்லையென்

றுவேதமுதலானதுசொல்லும். அதெப்படியென்னில், பஞ்சபூதமே பிரம மென்றும், பஞ்சகோசமேபிரமமென்றுஞ் சொல்லி, லௌகீக விஷயபோ கமே சுகமானமோட்சமென்றுசொல்லுகையாலே, மின்மினி விளக்கமென் றதென்றறிக. ஆனாலிம்மையிலே இந்தப் பஞ்சபூதவிஷயமுஞ் சுகத்தைக் கொடுக்கில், மறுமையிலே மோட்சமில்லையே, அவ்விட மந்தகாரமல்லவோ வென்னில், அதெப்படி யாணவக்கடையானபே ரந்தகாரத்திலே கிடந்தவ னுக்கு வேதமானது விஷயபோகங்களிலே ருசிக்கப்பண்ணிக் கலைஞாந தத்துவம் மின்மினிவிளக்கம்போல, ஆணவ அந்தகாரத்தைநீக்கிக் கிரியை யையெழுப்பி யானெனதென்கிற வபிமானத்தைப் பற்றப்பண்ணுவித்து, இந்த அப்பியாசமிகுதியால் லௌகீகத்திலே துக்கமும் மோக்ஷத்திலே கிஞ் சித்துஆசையு மொருபக்குவத்திற் பிறப்பிக்கும்பொருட்டாக வேதம் லௌ கீகசுகமெய்யென்றது. ஆனால் லௌகீகசுகமே ருசிப்பிக்கச்செய்யில் இம் மைதுக்கமென்றும்,மறுமைசுகமென்றும், இவனுக்குவருமோவென்னில்,வெ ய்யலிலடிபட்டவன்,நிழலும்பசித்தவனன்னமுந்தேடுகைபோல,இந்தச்சுகங் களாலேஅற்பத்துக்குஅற்பமும், கனத்துக்குக்கனமுமாகத்துக்கங்கள்அநுப வமாகவந்து மோக்ஷந்தேடச்செய்கையாலே, மின்மினிவிளக்கமென்றதென் றறிக. இனி விளக்கொளிபோலென்றது—புண்ணியமிது பாவமிது, சத்கர்ம மிது அசத்கர்மமிது, என்றுவேதமுதலானது சொல்லுகையாலே, பாவமா கிற அசத்கர்மங்களைவிட்டுப்புண்ணியமாகிற சத்கர்மங்களைச்செய்கையாலே, சொர்க்காதிபோகங்களை யுண்டாக்கையாலும், இந்ததர்மங்களிலே பதிதர் மங்கள் விசேடித்ததாதலால் பிரமாதிபதவியுண்டாய்ப்பின்பொரு ஜன்மத்தில் மோக்ஷாபேக்ஷையைத்தருதலால்,விளக்கொளிபோலாமென்றறிக. இனிச்சந் திரவிளக்கம்போலென்றது—பூரணச்சந்திரனானாலும் அவன்கிரணத்தாலேகா ணப்பட்டவிஷயமெல்லாமுள்ளபடிதோன்றாமைபோல், அணுப்போலவேத மும் யோகங்களிலே மோக்ஷமென்கையால்,இதிலேசமாதிவந்தாலும் நாதப்பி ரமலட்சியங்களை வெகுவாகக்கண்டு ஆநந்தித்தாலும், நிசமோக்ஷமான தன் னையும்தலைவனையு மறிவியாதபடியினாலே, சந்திரவிளக்கமென்றதென்றறிக. இனிச் சூரியவிளக்க மென்றது—சூரியன் பரிபூரணனா யந்தந்தச் சீவனு டைய சட்சுவிந்திரியப் பிரகாசத்தாலேயெல்லாருக்கும் ரூபங்களைக்காட்டு கைபோல, வேதமும் அவரவர்புத்திபேதங்களைப்போலவே, அகண்டபரிபூர ணாதீதப்பொருளையுள்ளபடியே சிவயோகநிஷ்டாபரருக்குக் காட்டுகையா லே கதிரொளி போலென்றதென்றறிக. பேதநால்வித்துஞ் சிருட்டிப்பிர பஞ்சத்தொழில்க ளெல்லாமென்றது— நால்வகையோனிமுதலான எழுவ கைத்தோற்றம் (அசு) லக்ஷம் அச்சுபேதசிருஷ்டிகளும், அதின்தொழில்பே தமும், ஆகாரபேதமும் ஜநநமரண வுற்பத்திபேதமும், நரகசொர்க்கபேதமு ம், மோக்ஷபேதமும், அதீதமான நிசமோக்ஷமும், பேதமான புறச்சமய மு முட்சமயமுமிந்த மதங்களையெல்லாம் நிராகரித்துப் பின்னிட்டு நிசமோ க்ஷத்தைக் காட்டுகையாலே வேதமே யெல்லாவற்றையும் விளக்குகின்ற தென்றறிக. (௪)

௬-வது—அத்தியாயம்.

## ஆகமச்சிறப்பு.

௭. வேதமனந்த மாயிரமென்ற விரிவெல்லா,
நாதமெடுத்ததி னர்த்தப்பொருளை நலமாக,
ஓதினனோதா துணர்ந்தவனாகம மொப்பாக,
ஆதியுமந்தமு மில்லாப்பொருளு மகற்றிடுமே,

(இ-ள்)—வேதமானது அநந்தமென்றுமாயிரமென்றுஞ் சொன்னதெல்லாம் நாதமெடுத்தென்றது—உதாத்த அநுதாத்த ஸ்வரிதமென்கிற நாதங்களோடுங்கூடவெடுத்து, அதி னர்த்தப்பொருளை நலமாக வோதும். ஓதாதுணர்ந்தவனென்றது—அதி னர்த்தமான பலவிதங்களையும் நன்மையாக எடுத்து—எல்லார்க்குந்தெரிய விஸ்தாரமாகப் பலவிதமான தந்திரங்களாகவும், படலமாகவும், இலக்கமில்லாத சங்கிதைகளாகவும், இருபத்தெட்டுக்கோடி யாகமஞ்சொன்னார். அதில் இருபத்தெட்டாகமமாய்ச் சங்க்ஷேபமாக்கினார். அவராரென்னில், சருவக்ஞராய் ஒருவரோதவுணராதவரான, அநாதிசதாசிவதேவர்சொன்னார் ஆதலால், ஆகமத்தின்பெருமையை ஆகமமறியுமென்றறிக. (௧)

---

௯-வது—அத்தியாயம்.

## நூற்பெயர்.

அ. அத்துவாமுதலதானவநந்ததத்துவங்கடன்னை,
மெத்தவேதிருக்கறுத்துன் மேவியநிசாநந்தத்தைக்,
கைத்தலத்திந்தாவென்னக் காட்சியாய்க்கொடுத்தலாலே,
தத்துவநிசாநுயோக சாரமாமிந்நூற்பேரே.

(இ-ள்)— ஆறத்துவாமுதலான விரிவாகியுள்ள அநந்த தத்துவங்களின்நாமரூபக்கிரியைகளையு மிதின் சுதந்தரஹானியானசடத்துவத்தையும்,சேடமானவிடத்தில், ஆணவமாயைகாமிக மலங்களையும்போக்கித் தன்னை யறிவித்தும், தன்னையுந் தத்துவங்களையும் பொருந்தப் பிரேரிக்கிறஞானசத்தியையு மிதற்குமுதலான பராசத்தியையு மிதற்குயிரான அருளையு மிதற்குயிரான சிவத்தையு மிதற்குமேலான பொருளையு மிதுகளின் திருக்குகளையு மறுத்து, இதற்குயிரான நிசப்பொருளைப் பக்குவராய்ப் பிரபஞ்சாபேக்ஷையுமோக்ஷாபேக்ஷையுமுள்ள சீஷனுக்கொரு பதார்த்தத்தைப்பிரத்தியக்ஷமாகக்கையிலே கொடுத்தல்போலச், சாராற்சாரமான தத்துவநிசாநுபோகசாரங்கொடுக்கும். அஃதெப்படியென்னில் தத்துவபதம்தத்துவங்களையெல்லாம் நீக்கியும்நிசபதம் மூன்சொன்ன பொருளெல்லாவற்றையுந்தாண்டி,நிசமான பொருளைக்காட்டியும்அநுபோகபதம்,சிவயோகசமாதியில் போகமான மோ

கூத்தையநுபவிக்கசெய்தும், ஒருசொல்லுபதேசத்தாலே, சாராற்சாரமான பொருளைக்கொடுக்குமென்றறிக. (௬)

---

## எ-வது—அத்தியாயம்.

### நூலுரை.

### இத்திறநூலை யிசைத்ததுசித்தே.

௬௬. அருள்சிவகலாதிகூடி யந்தநற்கரணத்தேய்ந்து,
மருளதாமிந்தியபோக வாழ்செகமயமாமென்னைப்,
பொருளதாய்ச்செய்யமுன்னே புகன்றதைப்போக்கித்தானு
குருவதாஞ்சித்தின்னூலைக் கூறியதென்றுகொள்ளே. [ய்க்,

(இ-ள்)— அருளானது பராசத்தியை யெழுப்ப பராசத்தி யிச்சா ஞானக்கிரியாசத்திகளை யெழுப்ப,இதுகள் சிவதத்துவத்தையெழுப்ப இதுகாலதத்துவத்தையெழுப்ப,இதில்கலை வித்தை ராகமூன்றும் ஆத்மாவின் இச்சாஞானக்கிரியை யெழுப்ப,இது அந்தக்கரணம் ஞானேந்திரிய கன்மேந்திரியத்தையெழுப்ப,இது பூதங்களை யெழுப்பி யித்தோடே சீவனுனதுகூடிவிஷயத்திலே விழுந்து போகங்களைப் பொசிக்கப் போகமுந் தேகமுஞ் செகமுந் தானுய் வேறொன்றுந்தோன்றாமல் செனனமரணந் தொலையாதிருந்த என்னை யொருபக்குவத்திலே குருவாய் வந்து கிருபையாலே முன் சொன்னபிரேரவகையுந் தத்துவங்களையும் அறிவித்தன்னியப்படுத்தி அநித்தியமாக்கி அவ்விடத்திலென்சொரூபத்தைத் தெளிவித்து என்னையுந்தான்விழுங்கிச் சாட்சாத்காரமாய்த்தானின்று என்னையில்லையாக்கி உட்புறம் பெல்லாந் தானுய்ப் பொங்கிநின்று, சித்தாகிற சிற்பிரமமே தத்துவலிங்க தேவனென்னுந்திருநாமத்தையடைந்து அடியேனுக்கு மனோ வாக்குக் காயங்களாய் நின்று இந்நூலைச் சொன்னதென்றறிக. (க)

௰. தத்துவநிசானுபோக சாரத்தைத்தமிழினலே,
மெத்தவேயுசாவிப்பன்னூல் விரிகலையாவுஞ்சேர்த்துச்,
சித்துருஞானத்தேனைப் பானமாய்ச்செய்வோர்க்காகத்,
தத்துவலிங்கதேவ சற்குருசாற்றினுரே.

(இ-ள்)— தத்துவநிசானு போகமாகிற சாத்திரத்தைத் தமிழாகச்சொல்லவேண்டிப்,பலநூல்கள் விரிந்த கலைகளில் வெகுவாக உசாவிச் சோதித்து, அபூர்வபதங்களைச்சங்க்ஷேபமாகச் சேர்த்துச் சித்துச்சொரூபமாகிற ஞானரசமான தேனைப் பானமாக வுள்ளேகொண்டு,தெவிட்டாத தீவரதரத்திற் றீவரதரமான சத்திநிபாதர்க்காகத்,தத்துவலிங்கதேவசற்குரு சாற்றினுரேயென்றது, தத்துவமாகிற சராசரபிண்டபிரமாண்டங்களுக்கும், வீவியமகமிருட்டிலியசிருட்டிக்கும், ஆதாரபூதமாய்விளங்கும் லிங்கமாகிறதெய்வஞ்ச

ற்குரு ரூபமாயெல்லாவற்றிற்குமீறி, அதீதபூரணமா யுள்ளேநின்றுபிரேரித்துப் புறம்பே சகுணமாய்நின்றுசொன்னதென்றறிக. (உ)

௰க. சாற்றினரந்தமாறிற் சதுர்த்தசவித்தையாலு,
மாற்றர்கணூலினுலு மாரணுகமங்களாலும்,
வேற்றினர்சமையவாத வெகுபலநூல்களாலு,
மேற்றினர்சாராற்சார வீறெலாம்பனுவலாக.

(இ-ள்)— வேதாந்த சித்தாந்த போதாந்த யோகாந்த நாதாந்த காலாந்தங்களிலும், இனி வேதம் - ச - அங்கம் - சு - மீமாம்சை நியாயம் உ-புராணம் தருமசாத்திரம்-உ-ஆகப்பதினன்குவித்தைகளிலும் ஆருதார வாக்கியங்களிலும் ஆறுசமயநூல்களிலும் மற்றுமுள்ள பாரகாவியப்பிரபந்தங்களிலும் வேதாகமங்களிலுஞ் சரசாத்திரங்கள் சாமித்திரிகை கொக்கோகசாத்திரங்க ளிதுகளிலும் மற்றுமுள்ளநூல்களிலும் ஞானுங்கமானவிதில் சாராற்சாரங்களை ஞானகாண்டமான வுத்திரகாண்டத்திற் சேர்த்துங் கன்மாங்கமானஇதில் சாராற்சாரத்தைக் கன்மகாண்டமான பூர்வபாகதெட்சணகாண்டத்திற்சேர்த்துப் பனுவலாகச்சொன்னதென்றறிக. இதிலேற்றினரென்ற பதத்தி னர்த்தஞ் சித்தானபொருளுள்ளமாயென்னுள்ளத்துள்நின்றுஏற்றிப் பிரேரிக்கையா லிதுகளின் சாரத்தையெடுத்துச் சொன்னது சித்தேயென்றறிக. (௩)

௰உ. ஈக்கொசுத்தேனரிப்ப னிரணியமெறும்பரக்கு, [லுங்,
வாய்க்கொளுமத்தால்வெண்ணெய் வாரிசேர் வெய்யில்போ
தீக்கடைந்தனலுநூலை சிலந்தியுஞ்சேர்த்தொன்றும்போ,
லூக்கொளவனேகஞான நூற்கெற்பமொன்றாய்ச்சொல்வாம்.

(இ-ள்)— ஈயுங் கொசுகும் பலபுட்ப ரசங்களையெடுத்துத் தேன்கூடு வைப்பதுபோலும், அரிப்பன நாறுப்புழுதிகளையு மரித்துப் பொன்னெடுத்தொருகுளிகை செய்தாற்போலும், எறும்புகள் நாறு மரங்களின் பால்பிசினைக்கூட்டிக் கொம்பரக்குசெய்வதுபோலுந், தயிருகளில் மத்தானதுகடைந்துவாங்கி வெண்ணெய்திரட்டுவதுபோலும், வெய்யிலானது வருஷகிரணங்களாலே சகலசெலங்களையும் பீலித்து மேகங்களிற்கட்டிவருஷித்தாற்போலுந், திரணகாஷ்டங்களி லக்கினியெடுத்துச்சுவாலாக்கினியாக்கினது போலுஞ், சிலந்தி நூல்களைச் சேர்த்துக் கூடாக்கல்போலும், வெகுவான ஞானநூல்களிலிருக்கிற ஆழ்ந்த அர்த்தங்களைச்சேர்த்து, இதிலூக்கொளவென்ற பதத்தாலேசிவன் சம்மதியாக உட்கொண்டுள்ளே பிரேரிக்கையாற் சேர்த்தெடுத்ததென்றறிக. (ச)

௰௩. முன்னூல்களனந்தங்கோடி முப்பொருளதனைச்சொல்ல,
வின்நூலைச்சேர்ப்பதேதுக் கெனிலதிலற்பாதிக்கம்,

பன்னூலுமுரைத்தொண்ணூதாப்பரம்பொருளுமறைவுமாகச்,
சொன்னூலுமெல்லாமித்திற்றோன்றவேசொற்பொருட்டே.

(இ-ள்)—முன்னூல்களணந்தங்கோடிசாத்திரம் பதி பசு பாசத்தையுஞ் சக சீவ பரத்தையு மிந்தமூன்று பொருளேயுஞ்சொல்லி மோட்சமுஞ்சொல்லி யிருக்க இந்தநூலைப் புதிதாகப் பிரயாசப்பட்டுச் சேர்த்தெடுத்ததேதுக் கென்னில், அந்த முன்னூல்களிலே ஒன்றையற்பமாகவும் ஒன்றைவிரிவாகவுஞ் சொல்லுகையாலும் ஒன்றைச்சொல்லியு மொன்றைச்சொல்லாமலுந்திரி பதார்த்தங்களைமறைவாகச்சொல்லுகையாலு, மிந்நூலிலற்பமானவிடங்களி லே யதிகமாகவுஞ் சொல்லாததுகளைச்சொல்லியுஞ் சொன்னதுகளையுஞ்சொ ல்லியுந் திரிபதார்த்தங்கள் எல்லார்க்குந் தெரியவுந் தத்துவச்சிக்கு விகற்ப ங்கள் நன்றாய்த்தெரியவும் பனுவலாக எல்லார்க்குந்தோன்ற எவர்களுக்கு ஏதுபார்க்கவேண்டிற்றோ அதுகளெல்லா மீதிலே சங்கிரகமாகஎல்லாந்தோ ன்றி விளங்கும்பொருட்டாக இந்தநூலைச்சேர்த்ததென்றறிக. (ரு)

---

## ௬-வது—அத்தியாயம்.

## அவையடக்கம்.

அறிஞர்க்கடிமையா யவையடக்கஞ்சொலல்.

௰௪. ஆகியபெரியோர்முன்னே யடியேன்சொல்லேதையொக்கும்,
போகியமழைகடானும் பொழிந்திடவேணுமென்றே,
யேகியவிடிகளுக்கு யெதிரதாய்த் தவளைதானு,
மூகிபேயொலிக்குமாபோ லுரைத்தனனிந்நூறன்னே.

௰௫. தன்னேபேகயிலாயத்தின் குருபரம்பரையாயுள்ள,
மின்னியரேகளிகை வீரியவீரசைவத்,
துன்னியசம்பிரதாயத் துகந்தோர்சிடனுகி,
மன்னியதத்துவலிங்க மாயருட்செய்ததென்னே.

## ௭-வது---அத்தியாயம்.

## இந்நூலுக்குமுன்னூல்.

இந்நூலுரைத்தற்கெதிர்நூல்சமூகம்.

இந்த தத்துவசிசானுபோகசாரஞ் சொல்வதற்கு முன்னூற்பிரமாணங் களேதென்னில்.

# தத்துவநிஜாநுபோகசாரம்.

## சதுர்வேதம்.

முதல்முக்கியபிரமாணம்- இருக்குவேதம்- எசுர்வேதம் - சாமவேதம்-அதர்வணவேதமென்னுமிவைகள், இவைசுவயம்புவென்றும், ஈச்சுரனாற்சொல்லப்பட்டவைகளென்றுஞ்சொல்லப்படும். அவற்றுள் இருக்குவேதம்- இருபத்தொருபேதம். எசுர்வேதம்- நூற்றொருபேதம். சாமவேதம் - சகஸ்திரபேதம். அதர்வணவேதம் நவபேதமாம்.

## வேதவாதசதுஷ்டயம.

அந்தவேதம், எதைச்சொல்லுமென்றால், விதிவாதம், அர்த்தவாதம்,மந்திரவாதம், நாமதேயமென நான்குபேதத்தால் சமஸ்ததர்மங்களையுஞ்சொல்லும். அவற்றுள்இராசாவாக்கினையைப்போல மனிதனைநிஷேதகர்மஞ்செய்யாமல் திருப்பிச் சுகர்மஞ்செய்ய வேண்டு மென்பதே விதிவாதம். பட்டுக்களைப்போல ஸ்துதிக்கிறதே அர்த்தவாதம். ஆசாரியனைப்போலச் செய்யத்தக்கவைகளைக் காட்டுகிறதே மந்திரவாதம். பிதாவைப்போல யாகாதிகளுக்குப் பெயரிடுகிறதே நாமதேயமாம்.

## வேதாங்கம்.

அந்தவேதத்துக்கு- பாதம், அஸ்தம், முகம், கிராணம், நேத்திரம், சுரோத்திரமென்னும் அனுக்கிரமத்தில், சந்தசு, கற்பம், வியாகரணம், சிக்ஷை, ஜோதிஷம், நிருத்தியமாகிய ஆறும் அங்கங்களாம். அவற்றுள், சந்தசு—மந்திரசுலோகாதிகளுக்கு அக்ஷரகணிதஞ் செய்யும். கற்பம்—ஆசுவலாயன, போதாயன, ஆபஸ்தம்பாதி சூத்திரங்களில் யக்கியப்பிரயோகாதிகளைக் கற்பிக்கும். வியாகரணம்— வைதீகசாஸ்திரார்த்தசித்தியைச் சமர்ப்பிக்கும். சிக்ஷை— உதாத்த—அனுதாத்த, ஸ்வரித, பிரசயமென்னுஞ்சதுர்விதஸ்வர கரண பூர்வகமான பதபாளிக்கிரமவேதாத்தியாயனாதிகளைச்சொல்லும். சோதிஷம்—லக்கின, திதி வார, நக்ஷத்திர, யோக கரணாதிகளால், வைதீககர்மங்களுக்குக்,காலங்தெளிவிக்கும். நிருத்தி-வைதிக சப்த நிர்வசனத்தை நியமிக்கும்.

அந்தவேதத்துக்கு, ஸ்மிருதி, புராண, நியாய, மீமாங்கிசை என்னும் நான்கும் உபாங்கமாம். இவற்றினிலக்கணமேற்சொல்லுதும்.

## வேதோபாங்கம்.

அந்தவேதத்துக்கு, ஸ்மிருதி, புராண, நியாய, மீமாங்கிசை என்னும் நான்கும் உபாங்கமாம். இவற்றிலக்கணமேற்சொல்லுதும்.

## உபவேதம்.

அந்தவேதத்துக்கு, ஆயுள்வேதம், அர்த்தவேதம், தனுர்வேதம், காந்தருவவேதமென உபவேதம் நான்குண்டு. அவற்றுள், ஆயுள்வேதம்—வியா

திபிதானம் வியாதிச்சின்னம், மந்திரௌஷதாதி சிகிச்சைகளால் ஆயுராரோக்கியாதிகளைக் காட்டும். அர்த்தவேதம், தக்ஷிணை, ஆச்சியம், சருமுதலான உபகரணங்களால் தர்மாதி சதுஷ்டயத்துக்குச் சாதனமாம். தனுர்வேதம்—சத்துரு க்ஷயார்த்தமான மந்திராஸ்திரப்பிரயோகங்களைக் கற்பிக்கும். காந்தருவவேதம்—சாமவேதாதிகளின், ச-ரி-க-ம-ப-த-நி-என்னும்சத்தஸ்வரகீதப்பிரபந்தங்களை விவகரிக்கும்.

## உபநிஷத்து.

அந்தவேதத்தில், சிருத்திரம், பிரகதாரண்ணியம, சுவேதாசுவதரம,கைவல்லியம், காலாக்கினி, கடம், வல்லி, காத்தியாயனம், பிரமம், நாராயணம், அங்கிசம், பரமாங்கிசம், பாஸ்கரம், பிரமபிந்து. ஆருணி, அமிர்தபிந்து, சுரசபிந்து, பிரமசிபாலம், தேஜோபிந்து, வாசசநேயம், போதாயனீயம், ஆசுவலாயனீயம், சாங்கியாயனீயம், வாசியாயனீயம், சௌனகீயம், சிவசங்கற்பம், சிரவணம், பராக்கிரமம், புரோக்ஷயம், முத்கலம், முண்டகம், மைத்திராயனீயம், என்னும்-௩௨- உபநிஷத்துக்களும் ஞானங்கமானவிபூதி ருத்திராக்ஷாதிகளையும், பிரமஞ்ஞானிகளையும் விவகரிக்கும்.

## ஸ்மிருதி.

மனு, அத்திரி, ஔரிதம், விஷ்ணு, யாஞ்ஞவற்கியம், உசனம், ஆங்கீரசம், யமம், ஆபஸ்தம்பம், சம்வர்த்தம், காத்தியாயனம், பிரகஸ்பதி, பராசரம், வியாசம், சங்கலிதம், தக்ஷம், கௌதமம், சாதான்மம். வசிஷ்டம், என அந்தந்தநாமதேயமுள்ளவர்களால் சொல்லப்பட்டதர்மசாஸ்திரம்.

## யுகதர்மம்.

கிரேதாயுகத்தில் மநுஸ்மிருதிதர்மமும், திரேதாயுகத்தில் கௌதமஸ்மிருதிதர்மமும், துவாபரயுகத்திற்சங்கலிதஸ்மிருதிதர்மமும், கலியுகத்தில் பராசரஸ்மிருதிதர்மமும் முக்கியமாம். இந்தஸ்மிருதிகளில், சாதிவருணாச்சிரமங்களும், தாயாதிவிவகாரங்களும், அஷ்டாதசவிவகாரங்களுடைய பேதங்களும், மகாபாதகங்களுக்குபிராயச்சித்தாதிவிதிகளும் சொல்லும்.

## சாதிவருணங்கள்

அவற்றுள் கம்மியம். அல்லது மஹாராஷ்டிரம், கன்னடம், ஆந்திரம், திரவிடம் எனச் சாதி-௪.— பிர்ம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரனெ வர்ணம் - ௪.

## ஆச்சிரமம்.

பிரமசரியம், கிரகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசமெனை ஆச்சிரமம்-௪.

## விவகாரபதம்.

கடன்கோடல், உபநிதி, கூடிமேம்படல், நல்கியதைநல்காமை, ஒப்பி ப்பணிசெய்யாமை, கூலிகொடாமை, உடையனல்லான்விற்றல், விற்றுக் கொடாமை, கொண்டுள்ளமொப்பாமை, கட்டுப்பாடுகடத்தல், நிலவழக்கு, மாதராடவர் தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்ட க்கொடுமை, சூது, ஒழிபு என்னும் விவகாரபதங்கள் - ௰அ.

## அஷ்டாதசபுராணம்.

பிரமம், பதுமம், விஷ்ணு, சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண் டேயம், ஆக்கினேயம், பௌஷ்யம், பிரமகைவர்த்தம், இலிங்கம், வராகம் ஸ்காந்தம், வாமனம். கூர்மம், மச்சியம், காரூடம், பிரமாண்டம் எனச் சிவ ப்பிரசாதத்தால் வியாசரிஷிஈஸ்வரர்சொன்னவேத நிஷ்டசாரார்த்தப் பிரதி பாதகமான நாலுலக்ஷஞ் சங்கியையுள்ள அஷ்டாதச புராணங்களில் - சை வஸ்காந்த, இலிங்க, கூர்ம, வாமன, வராக, பௌஷ்ய, மச்சிய,மார்க்கண் டேய, பிர்மாண்டமென்னுமிவை - ௰-ம்சிவபுராணம், நாரதீயம், பாகவதம், காரூட விஷ்ணுவென்னு மிவை, ௪-ம் விஷ்ணுபுராணம். பிரமம், பதுமம் எ ன்னுமிவை-உ-ம் பிரமபுராணம். பிரமகைவர்த்தம்-சூரியபுராணம். ஆக்கினே யம்-அக்கினிபுராணம். இந்த ஏற்றற்றூழ்விலேயே தேவதாதாரதம்மியமு மறிந்துகொள்க.

## சர்க்காதி பஞ்சலக்ஷணம்.

இந்தப்புராணங்களில் - சர்க்க- பிரிதிசர்க்க, வங்கிச, மனுவந்தர, வங் கிசர்னுசரிதம் என்னும் பஞ்சலக்ஷணங்களும், வைதீக தாந்திரீககர்மமுஞ் சொல்லும்.

## உபபுராணம்.

சனற்குமாரம், நாரசிங்கம், நந்தி, சிவதருமம்,தூர்வாசம், நாரதீயம். கபி லம், மானவம், உசனம், பிரம்மாண்டம், வாருணம், காளி, வாசிஷ்டலிங் கம், சாம்பவம், சௌரவம், பராசரம், மாரீச்சியம், பராக்கவம் என்னுமிந்த நாமதேயமுள்ளவர்களால் நிர்ம்மிதமான அஷ்டாதசவுபபுராணம், வைதீகத ர்மமே பிரதிபாதிக்கும்.

## இதியாசம்.

பாரதஇராமாயணாதிகள்வியாச வான்மீகாதிகளாலுண்டான இதியாச ங்கள், சத்துவாதிகுண பேதங்களும், தேவத்திரயலக்ஷணங்களும், தேவதா னவாதிகள்சனனக்கிரமமும், யுதிஷ்டிர ராமச்சந்திராதிகள்சரித்திரங்களும், வைதீகாதிதர்ம்மங்களும், திரிடீகரித்துச்சொல்லும்.

## அவைதிக சாஸ்திரத்திரயம்.

இதற்குமேல், பிரகஸ்பதி, ஆகித, சுகதரென்னு மிவர்களால் கிரமத்திற்சொல்லப்பட்ட- சாருவாக- ஜைந- பௌத்தமென அவைதிகசாஸ்திரத்திரயமுண்டு, அவற்றுள்- சார்வாகமாவது- பிருதிவியாதிசதுர்விதபூதவிகாரமான சகத்துள், சுகமேசுவர்க்கம்- துக்கமேநரகம்- இவையன்றி வேறேசுவர்க்கநரகமில்லையென்றுபிரதிபாதிக்கும்.

சைநமாவது - சித்த, பத்த, நாரகீகளென்னும் புருஷத்திரய லக்ஷணங்களையும், ஓட்டீச - ஓட்டாமிலேச, சுவாவினகற்ப, பதுமாவதிகற்ப, சாரதாகற்ப - குக்குடாதி கற்பாதிகளையும், மந்திரௌஷதாதிப்பிரியோத்திருக்களான பரமசித்தர்களையும், ஊனகேச, திகம்பர, பாணிபாத்திர, மயூரபிஞ்ச, பஞ்சமலதாரணாதிகளின் கொலை, களவு, கள், காமம், பொய்களில்லையான பஞ்சாணு விரதங்களில் மதுக, பலண்டு, முதலானநிஷேததிரவிய* ங்களைவர்ச்சித்து. தப்தசிலாசயனாதி உக்கிரதபசாசரிக்கிற முனிவிருத்திகளையும், ஏமசந்திர, நாகசந்திர, நேமிசந்திர. ஏகிசந்திர, மாகசந்திர, அருகந்த-ஆதிநாத- அசகள- பாரீஸ்வநாத- சௌகத- சுருதிகீர்த்தி- ஸ்ரீமத்காமரகிதமுனிசுவாமி முதலான - (௨௪) தீர்த்தகரருடையசரித்திரங்களையும், சாதாஸ்தி, சாதாஸ்தி, முதலான சத்தபங்கிகளையும், சீவ, சற்சீவ, நிர்ச்சீவ, நிர்ச்சர ஆசிரவ, பந்த மோக்ஷமென்னும் சத்த பதார்த்தங்களையும், பிரதிபாதிக்கும்

பௌத்தமாவாது சௌத்திராந்திகம், வைபாடிகம், யோகாசாரம், மாத்தியமிகமென,நான்கு பிரகாரமாய்ப் பிருதிவியாதி புத்தி, யாந்தமான-(௨௩) தத்துவாத்மகமான பிரபஞ்சம், தீபச் சுவாலையைப்போல க்ஷணிகமாத்திரமென்று பிரதிபாதிக்கும்.

## சாக்திகபாஞ்சராத்திரம்.

இதற்குமேல் நிஷேதகர்ம்மசாஸ்திரங்களுண்டு. அவை-சத்தியநாதர், சதோகநாதர், ஆதிநாதர்அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர்,மச்சேந்திரநாதர்,கடேந்திரநாதர், கோரக்கநாதர்,என்னும்,நவநாதசித்தர்களால் கற்பிதமான- கௌள யாமளாதி- இம்சை- மைதுனாதி- நிஷேதகர்ம்மமுள்ளசாஸ்திராந்திரங்கள், அபிசார கர்ம்மசனிதவியாதியாதியால், அகால மிருத்துரூபமான மரணசுமுத்தி விஷமூர்ச்சாதிரூபமோகனமும், அக்கினிஸ்தம்பனை, ஜலஸ்தம்பனை, இந்திரியஸ்தம்பனை, கட்கஸ்தம்பனை, சிங்வைஸ்தம்பனை, கதிஸ்தம்பனாதி ஸ்தம்பனமும், பூர்வசுகாசிரமநிரசனாத்மகமான- உச்சாடணமும், வஸ்திராபரண வனிதாதி வஸ்துக்களை நிஜஸ்தானத்திலிருந்து அழைப்பிக்கும் ஆகருஷணமும், பிராண சிநேகமானவிடத்தில் அந்நியோந்நிய விரோதமுண்டாக்குகிறவித்வேஷணமுமான, ஷட்கருமங்களையும், ராஜவசியாதிவ

சியுங்களையும், சுராசுரபூதக்கிரகா வேசங்களையும், பாதுகாசித்தி, அஞ்சன சித்தி, குடிகாசித்தி, மூலிகாசித்தி, ரசவாதங்களையும் பிரதிபாதிக்கும்.

இதற்குமேல், சத்திதத்துவ வாசியென்னும், ஒருஆத்துமனாலும், வாசு தேவனாலும் கிரமத்தில் பிரதிபாதிக்கப்பட்ட அனுக்கிரமத்தில்சாத்தீகம்-பாஞ்சராத்திரமென சாஸ்திராந்தரத்துவயமுண்டு- அவற்றுள்-சாத்தீகம்-சடாசடப்பிரபஞ்சமெல்லாம்சத்திபரிணாமமென்பது முதலாகமதவிஸ்தாரஞ்செய்யும்.

பாஞ்சராத்திரம் - பிருதிவியாதிமான சாந்தமானசதுர்விம்சதி தத்துவத்துக்குமேல் குணதத்வாத்மக வாசு தேவனால் சக்திதாதாத்மீகமாயுண்டானகிருஷ்ண- அனிருத்த- மகரத்துவச ரௌகிணேயரென்னும் நால்வராலுற்பத்தி முதலான கிருத்திய மென்று பிரதிபாதிக்கும். இதன்மேல்லௌகிக- வைதிக- ஆத்தியாத்மக- ஆதிமார்க்கிக- மாந்திரிகமென பஞ்சவிதசாஸ்திரங்களுண்டு- அவற்றுள்.

## லௌகிகசாஸ்திரம்.

தன்மந்திரியாதிகளாற் சொல்லப்பட்ட ஆயுள்வேததண்டநீதிமுதலான சாஸ்திரம், திருஷ்டபலன்களைப்பிரதிபாதிக்கும்.

## வைதிகசாஸ்திரம்.

ஜைமுனி-அக்ஷபாத-கணாதரென்னும்ரிஷியீச்சுரர்களால்கிரமத்திற்சொல்லப்பட்ட- பூர்வமீமாங்கிசை- நியாய- வைசேடிகமென திருஷ்டா - திருஷ்டபலன்களைப் பிரதிபாதிக்கிற சாஸ்திரத்திரயமுண்டு-அவற்றுள்- பூர்வமீமாங்கிசையென்பது, உபக்கிரமமுதலான சட்விதலிங்கதாற்பரியத்தால், வேதவாக்கிய விசாரபூருவகமாய், சோதிஷ்டோம யாகாதிகர்ம்மங்களைவிதியுக்தமாகச்சொல்லும்.

நியாயமாவது- பிரமாண- பிரமேய- சம்சய- பிரயோசன- திருஷ்டாந்த-சித்தாந்த- அவயவ- தர்க்க- நிர்ணய- வாத- ஜல்ப-விதண்டா - ஏத்துவாபாச-சல-சாதிநிக்கிரக, ஸ்தானமென்னும் சோடசபதார்த்தமுஞ் சொல்லிப், பிரபஞ்சத்துக்கு ஈச்சுரனே கர்த்தாவென்று நிச்சயிக்கும்.

வைசேடிகமாவது. திரவிய, குண, கர்ம்ம, சாமான்னிய, விசேஷ,சமவாய அபாவமென்னும்-சத்தபதார்த்தபிரதிபாதகத்தால். பிரபஞ்சசொரூபத்தை விவகரிக்கும்.

## ஆத்தியாத்மீகசாஸ்திரம்.

கபில- பதஞ்சலி-வியாசரென்னு முனிவர்களால்கிரமத்திற் சொல்லப்பட்ட- சாங்கிய-பாதஞ்சல- வேதாந்தமென - ஆத்மக்கியான பலன்களுள்ள ஆத்தியாத்மீக சாஸ்திரத்திரயமுண்டு-அவற்றுள்.

சாங்கியம்-நித்தியநிர்ம்மலமானஆத்மசந்நிதானத்தில் குணத்திரயாத்மகப் பிரகிருதியே பஞ்சவிம்சதிதத்துவாத்மகசகத்தாய் விவகரிப்பதே சம்சார பந்தமென்றும் - சத்துவாதி குணத்திரயானுக்கிரமத்தால்சேதமப்பிரகிருதி-

பித்தப்பிரகிருதி - வாதப்பிரகிருதியினுள்ளசாந்தி- குரோதமூடாதிகுண யுக்தமான- உத்தம- மத்திம- அதம-புருஷத்திரய வர்ண- நீதி-முதலானவைகளுண்டாமென்று சொல்லும்.

பாதஞ்சலம்- இயம - நியமாதி அஷ்டாங்கயோகத்தால், மனோநிச்சல சித்தியாமென்றுசொல்லும்.

உத்தரமீமாங்கிசை- உபநிஷதர்த்தப் பிரதிபாதகமான வேதாந்தம்-பிரபஞ்சத்துக்கு மித்தியாத்துவஞ்சாதித்து, அதனால் பிரமாத்தும ஐக்கியத்துவம்வர்ணிக்கப்பட்டும், பாஸ்கரீயம், மாயாவாதம், சத்தப்பிரமவாதம், கிரீடாப்பிரமவாதமென நான்குபேதமாம். இதற்குமேல்.

## ஆதிமார்கிகசாஸ்திரம்.

மாயாதத்துவ- வித்தியாதத்துவ வாசிகளானருத்திராற் சொல்லப்பட்ட பாசுபத- காபாலிக- மாவிரதமெனஆதிமார்க்கிகசாஸ்திரத்திரயமுண்டு. அவற்றுள்.

பாசுபதம், மாயாகர்ம்மாதிகளைச்சொல்லும்.

காபாலிகம், நரகபாலபிக்ஷாடனாதிகளைச்சொல்லும்.

மாவிரதம் - அஸ்திதாரணாதிகளைச்சொல்லும்.

## நாநாமதஸ்தர்களுடைய ஆத்துமநிருபணம்.

இப்படிச்சொன்ன சமஸ்தமதாந்தரங்களில் பிரதிபாதிக்கும் ஆத்மசொரூபமாவது.

சார்வாகன்- ஆத்துமன்- தேகமேயென்பன்.

சார்வாகஏகதேசி- ஆத்துமன்- இந்திரியமேயென்பன்.

இரணியகர்ப்பனென்னுஞ் சார்வாக ஏகதேசி - ஆத்துமன்- பிராணனேயென்பன்.

சைநன்- ஆத்துமன்- தேகாதிவிலக்ஷணனாய்தேகபரிணமிதனாய், பரிணமித்த மத்தியையில் சங்கோசவிகாசதர்ம்ம யுக்தனாயிருப்பனென்பன்.

பௌத்தன் - ஆத்துமன்- புத்தியேயென்பன்.

கௌளயாமளசாக்துமிகர் - ஆத்துமன் - ஆனந்தமேயென்பர்.

பாஞ்சராத்திரன், ஆத்துமன், நாடிமத்தியகதனாய், அணுப்பிரமாணமாகவே யிருப்பனென்பன்.

லௌகிகன், ஆத்துமன்- தேகபுத்திர களத்திராதி ரூபனென்பன்.

மீமாங்கிசபேதர்களான பாட்டப்பிரபாகரர் ஆத்துமன் ஸ்வதப் பிரமாணமான ஞானசொரூபனென்பர்.

நியாயவைசேடிகர், ஆத்துமன், ககனம்போல மகத்பரிணாமனாய், பா

ஷாணம்போலச்சடரூபனுனாலும், மனசுசம்யோகத்தால் சித்துசம யுக்தனு யிருப்பனென்பர்.

சாங்கியபாதஞ்சலிகர் - ஆத்துமன், அசங்க சின்மாத்திரமென்பர்.
வேதாந்திகள், ஆத்துமன், நிருப்திமாத்திர னென்பர்.

பாசுபதகாபாலிக மாவிரதிகள்- ஆத்துமன், நித்தியவியாபக சைதந் நியனென்பர்.

மாந்திரசமிஞ்ஞாசித்தாந்திகள்- ஆத்துமன்நித்தியவியாபக ஞானக்கி ரியா சொரூபனென்பர்.

இனி இந்தச்சகலசமயவாதிகளால் பிரதிபாதிக்கப்பட்டமோக்ஷலக்ஷ ணமாவது.

சார்வாகாலெளகிகர்- மரணமேமோக்ஷமென்பர்.
ஜைநன், ஆகாச மத்தியத்துளுத்தரோத் திரகமனமேமோக்ஷமென்பன்.
பௌத்தன், சுகதுக்காதிகளால் மயக்கப்படாமலிருக்கும் சுத்தபுத் தி சந்ததியே மோக்ஷமென்பன்.

கௌளயாமளர், ஆகாசகமனுதிசித்திப்பிராப்தியேமோக்ஷமென்பர்.
சாத்துவீகன், ஆனந்தப்பிராப்தியே மோக்ஷமென்பன்.

பாஞ்சராத்திரிகள், வாசுதேவாத்துமகப் பிரகிருதியில் சொரூப ஆ னியில்லாது அடங்குவதே மோக்ஷமென்பர்.

லௌகிகர், இகலோகத்தில் புத்திரதாராதிகளுடன் கூடிவியாதியா தி துக்கமில்லாமல், சுகத்திலிருக்கிறதே மோக்ஷமென்பர்.

பூர்வமீமாங்கிசிகள், சுவர்க்காதிலோகப் பிராப்தியேமோக்ஷமென்பர்
நியாய வைசேடிகர், ஆத்துமன் சரீரேந்திரியாதிஇருபத்தொருதுக்கஆ த்தியந்தநாசத்தால் பாஷாணம் போலிருப்பதே மோக்ஷமென்பர்.
சாங்கியர், பிரகிருதி புருஷவிவேகத்தால்,அவித்தியா நாசமானதேமோ க்ஷமென்பர்.
பாதஞ்சலிகர், யோகாப்பியாச பலத்தான் மனேலயத்துவாரத்தால் அ ஞ்ஞானமழிந்ததே மோக்ஷமென்பர்.

வேதாந்திகள், பிரமாத்தும வைக்கிய ஞானத்தால் விவகாராதி சம்சா ரபந்த நிவர்த்தியே மோக்ஷமென்பர்.

பாசுபதர்,பிரவாகேஸ்வரத்தால்ஈச்சுரத்துவம்அந்நியருக்குக்கொடுத்து ஆ த்துமன்நிருப்திமாத்திரமா யிருப்பதே மோக்ஷமென்பர்.

காபாலிகமாவிரதிகள், கர்த்துருத்வமான சம்சாரபாவத்தை விட்டு,நிருப் திமாத்திரமாயிருப்பதேமோக்ஷமென்பர்.

மாந்திரசமிஞ்ஞா சித்தாந்திகள், ஆத்துமன்சடத்துவாதீத சிவசமான த்துவமாவதேமோக்ஷமென்பர்.

இந்தவாதிகளில் சார்வாக - ஜைந - பௌத்த-மீமாங்கிச- சாங்கிய ரென்பவர்- நிரீச்சுரவாதிகளாம்.

மற்றவர்களெல்லாம் ஈசுரவாதிகள். இந்தமகாவாதிகளில் - சார்வாகாதிகளனைவரும், பேதவாதவாதிகளாம் - வேதாந்தி யொருவனே யபேதவாதியாம்.

## மீமாங்கிசசாஸ்திரவிவரம்.

இப்படிச் சொல்லப்பட்ட, சகலசாஸ்திரங்களுக்குள்- வேதம்- (ச) வேதாங்கம்- (சு) வேதோபாங்கம் - (ச) இவை சதுர்த்தசவித்தையென்னப்படும். இந்தச்சதுர்த்தசவித்தையுள், மீமாங்கிசையாவது, மிகுதியும்விசிஷ்டமாய், இருபது அத்தியாயமாய், அர்த்தப்பிரதிபாதகத்தால், துவிபாகமாம். அவற்றுள், பிரதமபாகம், ஜைமுனிசூத்திரரூபத்தால், துவாதச அத்தியாயமாய், தர்ம்மார்த்தப் பிரதிபாதகமாய், லோகவேதாதிகரண மென்பது முதலான, சகஸ்திரநியாயத்தால், பூர்வமீமாங்கிசையென்னப்படும். அந்தஜைமுனிசூத்திரத்துக்கு, சாபரனுல்சாபரமென்னும்பாஷியஞ் செய்யப்பட்டது. அதற்கே பாட்டாச்சாரியரால், வார்த்திகரூபத்தில் பாட்டமென்றொருமதாந்தரஞ் செய்யப்பட்டது. அந்தப் பாட்டருடையசிஷ்யரான பிரபாகரரால் அந்தசாபரபாஷியத்துக்கே பிரபாகர மென்றொரு மதாந்தரஞ் செய்யப்பட்டது.

இரண்டாம்பாகம்-வியாசர் சூத்திரரூபத்தால் எட்டத்தியாயமாய்ப் பிரமாத்துமக பிரதிபாதகத்தால், உத்தரமீமாங்கிசையென்னப்படும். அதனுள் பூர்வம், நான்கத்தியாயமும் தேவதாகாண்டமாம். அதில்மந்திரவாதத்தைப் போலத்தேவதாலக்ஷணங்கள் பலபத்திரராமரால்பிரதிபாதிக்கப்பட்டது.

உத்தரமான நான்கத்தியாயமும்பிரமகாண்டமாம். அதனுள், பிரமாத்துமவயிக்கியப் பிரதிபாதகமாய்ச் சங்கராசாரியரால் பாஷியஞ்செய்யப்பட்டது. அந்தப்பாஷியத்துக்கே விவரணாசாரியரால், விவரணஞ்செய்யப்பட்டது. அந்த விவரணமே வேதாந்தசாஸ்திரமாம்.

---

ம-வது— அத்தியாயம்.

## இந்நூலில்சொன்னஅத்தியாயப்பெயர்கள்.

### இந்நூல்தன்னி லெடுத்தவத்தியாயம்.

விநாயகஸ்துதி-கடவுள்வணக்கம்- அருளிறைவணக்கம்- வேதச்சிறப்பு- ஆகமச்சிறப்பு- நூற்பெயர்-நூலுரை அவையடக்கம்- இந்நூலுக்குமுன்னூல்- இந்நூலிற்சொன்ன அத்தியாயப்பெயர்கள்- பிறவியருமையுரைத்தல்-இதோவுபதேசம்- பிராமணன்சரிதை- க்ஷத்திரியன்சரிதை- வைசியன்சரிதை- சூத்திரன்சரிதை- பிரமசாரிசரிதை-கிரகஸ்தன்சரிதை - வானப்பிரஸ்தன்சரிதை- சன்னியாசிசரிதை- அதிவன்னாச்சிரமிசரிதை- உடலிழிவு- குடும்பவிழி

வு - போகவிழிவு- மகளிரிழிவு- பொருளிழிவு- அரசிழிவு-சொற்கவிழிவு- சென்
னசக்கரம்- சென்னவிருக்ஷம்- அசேஷதுக்கம்- அந்தியதெரிசனம்- வீடுபற்
று - பிதுராயனதெட்சணுயணம் - தேவாயனஉத்தராயணம் - ஞானிகள்
கெதி-பாவிகள்கெதி - சமையபேதங்களில்நின்றபோர்நிலே-ஞானிமகாத்மியம்
ஞானிபூசை-ஞானிசீலம்- ஞானிபூண்பலன்-ஞானியேவல்- ஞானியையிகழ்ந்
தோர்கேடு-கூடாவொழுக்கம்பிரபஞ்சவுற்பத்தி- சிருஷ்டி-இரட்சிப்பு-சங்கார
ம்-திரோபவம்- அநுக்கிரகம்-பிண்டிகிருதம்-பிண்டோற்பத்தி-கெற்பந்தரிக்கு
நாள்பேதம்-சையோகவிதத்திலுற்பத்திபேதம்-ஜாமத்திலுற்பத்திசாத்திலுற்
பத்திபேதம்-காலசக்கிரபேதம்-சரத்தில்வருஷபலன்நவக்கிரகராசிநட்சத்திரஞ்
சரத்தில்நடப்பது-சன்மார்க்கம்- சாதிசங்கற்பம்-பொதுவானஅத்தியாயம் (௯௨)

சமையத்தொகுதி- கிரீடபிரமவாதம்- லீலாபிரமவாதம் - பிரதிபிம்பவா
திமதம்- மாயாவாதிமதம்- வைதீகவேதாந்தம்- சுத்தவேதாந்தம் - இதில்பின்
ஞெருசிவன்முத்தர் அச்சுமாருதவாதிமதம் - சாங்கியன்மதம்- நிரீஸ்வரசா
ங்கியன்மதம்- (பதஞ்சலிமதம்) - பூர்வமீமாங்கிசை-வைசேஷியன்மதம்-நை
யாயிகன்மதம் - சிவாத்துவிதிமதம்- பாஸ்கரியன்மதம்- சத்தப்பிரமவாதிமத
ம்- வையாகரணிமதம்- பாட்டமதம்- பிரபாகரமதம் - ஆறந்தபேதம்-இதில்-
முதல்நாதாந்தம்- இரண்டாவதுசித்தாந்தம்- மூன்றுவது போதாந்தம்- நான்
காவது யோகாந்தம் - ஐந்தாவது காலாந்தம் ஆறுவது வேதாந்தம் - ஏழாவ
து வேதாந்தசித்தாந்தம் - எட்டாவது சித்தாந்தவேதாந்தம் - புராணிகன்ம
தம்- பாஞ்சராத்திரன்மதம்- மகேஸ்வரன் சரிதை-ஆகமம்வந்தவரலாறு- சுத்
தசைவசித்தாந்தம் - வேதாந்தசித்தாந்தத் துபக்கிரமஞ்சரியாகச்சொல்வது-
சிவசமவாதிமதம்- அயிக்கவாதிமதம்- பாசுபதிமதம்- சங்கிராந்திவாதிமதம்-பி
றவாஹேஸ்வரவாதிமதம்- மகாவிரதிமதம்- காளாமுகன்மதம் - காபாலீகமத
ம்- அவ்விகாரவாதிமதம் - சம்மேளிதசைவன்மதம் - சைவத்திற் பேதாபேத
வாதிமதம்- வீரசைவம்- அனேகேசுரவாதிமதம்- வாமமதம்- வைரவமதம்-க
வுளயாமளமதம்- ஊர்த்தசைவம்- அநுதிசைவம்-ஆதிசைவம் - மகாசைவம்-
பேதசைவம் - அபேதசைவம்-அந்தரசைவம்- குணசைவம் - நிற்குணசைவ
ம்- அத்துவாசைவம் - யோகசைவம் - ஞானசைவம்- அணுசைவம் - கிரியா
சைவம்- நாலுபாதசைவம்- சுத்தசைவம்-லோகாயுதன்மதம்- புத்தரிற்சவுந்தி
ராந்திகன்மதம்- யோகாசாரன்மதம் மாயத்தமிகன்மதம்-வைபாஷிகன்மதம்-
அருகரில்நிகண்டவாதிமதம்- ஆசீவகன்மதம்- பிருதிவிபூதவாதிமதம் அப்புபூத
வாதிமதம்-அக்கினிபூதவாதிமதம்-வாய்வுபூதவாதிமதம்-ஆகாசபூதவாதிமதம்-
பஞ்சகோசவாதிமதம்-நவக்கிரகவாதிமதம்- சூரியவாதிமதம்-சந்திரவாதிமதம்-
ஊழ்வாதிமதம்- காலவாதிமதம்-மந்திரவாதிமதம்-அந்திரவாதிமதம்- அவிழ்தவா
திமதம்—வாதிகள்பிரகரணம் (௭௧)

தீர்த்தசங்கற்பம்-அர்ச்சனசங்கற்பம்- பஞ்சாட்சரமுதலானமந்திரங்கள்-
சிவபூசாவிதி- அத்துவாசங்கற்பவாதி- தற்கவாதிசங்கற்பம்- தானசங்கற்பம்-
விரதசங்கற்பம்- சரிதைசங்கற்பம்- துலுக்கமதம் - அளவைப்பிரமாணலக்ஷ
ணம் - அண்டகோசலக்ஷணம் -யோகசமுகம்— சங்கர்ப்பபிரகரணம் (௧௯)

தத்துவவர்க்கநாமம்- சத்தினிபாதமுறைமை- சகலர்முதற்சத்தினிபாதம்வருமாறு-மும்மலமுடைய அதமரானசகலரிலக்கணமுஞ் சத்தினிபாதமும்வருமாறு- மத்திமரான இருமல முடையபிரளயாகலரிலக்கணமுஞ்சத்தினிபாதமும்ஒருமலமுடையஉத்தமரானவிஞ்ஞானகலரிலக்கணமுஞ்சத்தினிபாதமும்-உத்தமரானவிஞ்ஞானகலர்மத்திமரானபிரளயாகலர் அதமரானசகலர்-பிரளயாகலர்தீட்சாலட்சணம் - சகலர்க்குவருகிற குருநாமசமுகம்-இந்தகுருவானவர் சகலரில் அபக்குவர்க்குச்செய்கிற தீக்ஷாக்கிரமம்-சகலரில்பக்குவர்க்கு தீட்சாக்கிரமஞ்செய்கிறவகை- தீட்சாசமுகநாமம்-சற்சிஷன்லட்சணம்-அசற்சிஷன்சரித்திரம் பக்குவதேகியானசிஷனுக்குத்தத்துவங்கள்போதிக்கிறமுறைமை-பஞ்சபூதசிருட்டிவிதசமுகம்-பஞ்சபூதத்திறமம்-பஞ்சபூதங்காரியப்பட்டவிபரம்-காரியபூததெரிசனம்-பிருதிவிபூத சதுர்விததெரிசனம்-அப்புபூதமென்பதெதை-தேயுபூதமென்பதெதை-வாய்வுபூத சதுர்விததெரிசனம்-ஆகாசஞ்சதுர்விததெரிசனம்-அஞ்சுக்குங்காரியத்தில்- பஞ்சபூதத்தின்வன்னம்-பஞ்சபூதஅதிதேவதைதெரிசனம்-பஞ்ச பூதங்களுமணுத்திரணகாஷ்டங்கள்-சரசீவன்அசரசீவன் சராசரசீவன்இம்மூன்றுவிதத்திலும்-ஒருசீவன்வேறொருசீவனுகிறது-பூதவேற்றுமையாலே ரோமோற்பவபேதம்-பூதாஷ்டகுணம்- பஞ்சபூதத்திற்பூசரகேசரவனசரம்-எண்ணிறந்தசீவராசிகளுக்குமெண்ணிறந்தகுணபேதம்-ஒருதனுவிலேபஞ்சபூதசீவராசிகளிலெண்ணிறந்தபேதம் பஞ்சபூதகுணுதிகோற்பவம்- பஞ்சபூதமுமெழுபத்தைந்துகுணமாகிறதுபஞ்சபூதத்தின்குணதெரிசனம்-பஞ்சபூதமுஞ்சத்தாதிகளையறியும்வகை-பஞ்சபூதத்துக்கும்வியாத்திவியாபகதெரிசனம்-பிண்டகோசலட்சணம்- நவக்கிரகங்களும்பிண்டத்திலிருக்கும்படி-நக்ஷத்திரராசிநிலே- அண்டத்திற்பஞ்சபூதபிரளயதெரிசனம்-சர்வசங்காரபிரளயம்-பிண்டத்திற்பஞ்சபூதபிரளயம்- பிண்டமிருக்கப்பிண்டாவஸ்தைபெறுவது-பிண்டாவஸ்தையில்ஆயிசுபிரமாணம்- ஸ்தூலபஞ்சபூதமானதுபஞ்சீகரித்தொன்றிலொன்றுகலந்துஅஞ்சுபூதமுமிருக்கிறதுஞானேந்திரியநாமம்- ஞானேந்திரியகிரியையிற்சுரோத்திரகிரியையாவது-தொக்கின்கிரியையாவது-சட்சுக்கிரியையாவது-சிங்குவைக்கிரியையாவது- ஆக்கிராணகிரியையாவது- ரூபமாவது- தொக்குத்திரையோ தெரிசனமாவது- சட்சுதிரையோதெரிசனம்- சிங்குவைரூபத்திரையோ தெரிசனம் - ஆக்கிராணரூபத் திரையோதெரிசனம் - சத்தாதிநாமமாவது - சத்தாதியின்கிரியையாவது- சத்தாதி சமுகமாவது தத்துவரூபம் தத்துவதெரிசனம் தத்துவசுத்தி-ஏகேந்திரியசீவமாவது-துதியோ விந்திரியதெரிசனமாவது-திரிதியோயிந்திரியதெரிசனம்-சதுர்த்தோவிந்திரியதெரிசனம்- பஞ்சேந்திரியதெரிசனம்-கன்மேந்திரியநாமமாவது- பாதத்திரயோ தெரிசனமாவது - பாணித்திரையோ தெரிசனமாவது- பாயுத்திரையோ தெரிசனமாவது - குய்யத் திரையோதெரிசனமாவது- கன்மேந்திரியவிஷயமானவசனுதிதெரிசனம் - வசனுதியின் கிரியையாவது- அந்தக்கரண சிருஷ்டிபேதமாவது- அந்தக்கரணநாமமாவது- அந்தக் கரணத்தின் கிரியையாவது - அந்தக்கரணத்தைச் சிவன் நடத்தும் ஆஞ்ஞாசக் கரமாவது- பூர்வகதைகளுண்டு - மனோரூபத் திரையோ தெரிச

ணம்- புத்திருபத் திரையோ தெரிசனம்- ஆங்காரரூபத்திரையோதெரிசனம் சித்தத்திரையோதெரிசனம்- காலதத்துவநாம தெரிசனம்- காலதத்துவமரு பின் கிரியைசொல்வது- இதிற்கலையின்கிரியையாவது - வித்தையின்கிரியை யாவது- இராகத்தின்கிரியையாவது- நியதிக்கிரியையாவது - சுத்ததத்துவங் களுடைய நாமசமூகங்களாவது- சுத்ததத்துவ உற்பத்தியும் கிரியையும்சோ ல்வது- ஈஸ்வரத்திரையமாவது- சதாசிவமென்பதெதை - சத்திதத்துவமெ ன்பதெதை-சிவதத்துவமென்பதெதை-அவஸ்தைநாமசமூக தெரிசனமாவது அவஸ்தையி னுடைய கிரியைசொல்வது- கேவலத்தின்காரியமான கீழாலவ த்தையாவது- அதீததிரையோ தெரிசனமாவது - சுத்தாவத்தையின்தெரிச னவரலாறு- தாதுகெதாஅவஸ்தையாவது - குணசம்பந்தாஅவஸ்தையாவது அவஸ்தாந்தாஅவஸ்தையாவது- ஆதாரகெதாவத்தையாவது - கரணகெதாவ த்தையாவது- சங்க்ஷேபரவவத்தையாவது- அனுபாவவவத்தையாவது- நிமி ஷாஅவத்தையாவது— தத்துவபிரகரணம்(க0௬)

குருவுபதேசம்- ஊனுயிர்வேறுசெய்தல்- பஞ்சபூதப்பழிப்பு - பொறி-ப த்துமற வுணர்தல்தெரிசனம். இந்திரியம்வேறுசெய்தல்- அந்தக்கரணம் வே வேறுசெய்தல்- காலதத்துவம் வேறுசெய்தல் - சுத்ததத்துவதெரிசனம்- த த்துவாதீதமாவது- முத்திச்சகலமாவது முத்திக்கேவலதெரிசனமாவது-முத் திக்கேவலாதீதமாவது- தன்னுண்மைதெரிசனம்-சைதன்னியதெரிசனம்-ஞா னசத்திதெரிசனம்- பரைதெரிசனம்- பரையில்வியாபகமாவது - பரையோக மாவது- முத்திசாக்கிரமாவது- சாக்கிராதீதமாவது- பரையாதீதமாவது- சுத் தாஅவத்தையாவது- சுகசாரூபமாவது- சுகாதீதமாவது - சிவப்பேறுவது-ப ரமானந்ததரிசனமாவது - பரமானந்தயோகமாவது - பரமானந்தபோகமாவ து- பரமானந்தமேலீடாவது- பரமானந்தவசமாவது- தசகாரியமாவது- சிவ ன்முத்திபரமுத்தியாவது—சிந்தாந்தவுபதேசப்பிரகரணம்- (௩௨)

மகாவாக்கிய சொரூபலட்சணம்-தேகம்வேறுசெய்தல்- புலன்வேறுசெ ய்தல்- அந்தக்கரணம்வேறுசெய்தல்- பிராண வாயுவை வேறுசெய்தல் - மூ ன்றுதேகமான ஏழு உபாதிவேறுசெய்தல் - காரணஉபாதியான ஏழுஉபாதி (அஞ்ஞானபூமிஞானபூமி) உயிருண்மைதெரிசனம் - அந்தகாரமானசுழுத்தி க்குஅவசரப்பேராவது- துரியவிநுவாவது- துரியசொரூபமாவது- துரியதெரி சனமாவது- துரியவிலாசமாவது - துரியமகாத்மியமாவது - தொம்பதசுத்தி யாவது- காலபரமாவது- பரசாக்கிரமாவது- பரசொற்பனமாவது - பரசுழு த்திவிநுவாவது- பரசுழுத்திதெரிசனமாவது - முன்சொன்ன பரசுழுத்தியா கிறஅதீதவிலக்கணமாவது- அதீததெரிசனமாவது- அதீததூஷணமாவது-பர விநுவாவது- பரவிலக்கணமாவது-பரதெரிசனமாவது - பரவனுபூதியாவது- விசுவவிநுவாவது- விஸ்வம் நிலையாமையாவது - விஸ்வக்கிராச தெரிசனமா வது பரிபூரணமாவது தொம்பதசுத்தியாவது பரதூஷணமாவது அசிபதமா வது அசிபதவிநுவாவது உபசாந்த தெரிசனமாவது சிவசாக்கிரமாவது சிவ சொற்பனமாவது சிவசுழுத்தியாவது உபசாந்ததூஷணமாவது சிவவிலக்க

ணங்கூறுவது சிவதெரிசனமாவது சிவசொரூபானுபூதியாவது அசிபதசத்தியாவது சத்தியாதிதெரிசனமாவது சித்துசொரூப தெரிசனமாவது முத்திரைநாமமாவது சொஸ்சொரூபவ தெரிசனமாவது ஆருவதானருக்கு மதுரியசொரூபதெரிசனமாவது அதிருக்குமதுரிய தெரிசனமாவது மகாருக்குமதுரியசொரூபதெரிசனமாவது சூக்குமசத்தியாதி தெரிசனமாவது சத்தியாவது திருக்குவிவேகமாவது பத்தாவதுதிருக்கு சொரூபமாவது சுவானுபூதிவந்தபேர்கள். மாகத்தன். மாயோகி. மாத்தியாகி சமாதிகளில் மௌனமுத்திரைநாலுவிதம். சொல் மௌனம் காஷ்டமௌனம். கரணமௌனம். சுழுத்திமௌனம். இப்படி நின்றவர்களடையும்பதமேதெனில் சகுணவயிக்கியம். நிற்குணவயிக்கியம். சகசவயிக்கியம். நிதநியமுத்தி வயிக்கியம். இப்படிநாலாம். இந்தப்பிரமமே குருவானதுசொரூபம். சுபாவம். பரிபூரணம்.—வேதாந்தவுபதேசப்பிரகரணம்(ருரு)



## ம்க- வது—அத்தியாயம்.

## பிறவி யருமையுரைத்தல்.

### பிறவியருமை பெருமையுரைத்தல்.

அறிவானந்தசித்தியாரில்,

ம்சு. தேரிற்சதுரயுகமிரண்டாயிர நாட்டிங்காரன்
டோரிலைந்நூற்றி லயன்மாண்கொந்தமுமுற்றுத்தென்பாற்
சேருநுகத்துளையில் வடபாற்கழிசெல்லெளிது
சாரும்பிறப்பொழித்திம்மானிடத்திற்சனிக்கரிதே.

ம்எ. அரியதிம்மானிடமாகியருஞ்சுனைநீரருந்தித்
திரியுமன்னுட்டிடைத்தப்பிநன்னுட்டைச்சேர்வரிதிங்
குரியப்பிரவஞ்சநூலினைப்பொய்யென்றிங்குண்மை நன்னூல்
தெரிதலரிதுபயன்கேட்டதனிலைசேர்வரிதே.

(இ-ள்)— விசாரிக்குமிடத்து நாலுயுகமுங்கூடின சதுர்யுகம்-உத- தரம் திரும்பில் பிர்மாவுக்கு ஒருநாளாம். இது - ஙூ0- கூடில்வருஷமாம். இது நூறு கூடில்பிர்மாவுக்குப் பரமாயுசாம், அப்போதுபிருதிவிபூதமாயிரங்கோடியண்டங்களையுந் தூலப்பிருதிவி பூதத்தையும், அப்புப்பூதமிஞ்சிவிழுங்கியெல்லாங் கரைந்து பிருதிவிமயந் தோறாமல், திரும்பப் பிர்மாயிசுபரியந்தஞ் சலமயமாய் நிற்கும்போது தெற்குச்சமுத்திரத்திற்போட்டநுகத்தடியும், வடக்குச்

சமுத்திரத்திற்போட்டவடகயிறும் வந்துகூடுகிறதருமையல்ல, அஃதன்றி அலைகளடிக்கும் போதெல்லாங் கரைகளிலொதுங்கி முன்பின் அலைகளிற் போக்குவருத்தால் நுகத்தடித்துவாரத்திற் கயிறுவந்து நுழைவதும் அருமையல்ல எழுவகைத்தோற்றத்திலுந் தாவராதிமுதல் -அ௰௪ - லட்சம்அச்சுபேதத்தி லொவ்வொன்றில் வெகுவாகச்செனனமெடுத்து அதுகளைத் தாண்டி மனிதயோனியிலேபிறக்கிறதரிது. பிறந்தாலுஞ் சிலையாலே யுயிரைக்கொன்றுதின்கிறதேசமும், வலையா லுயிரைக்கொன்றுதின்கிறதேசமும். சுனையில்நீரொடுத்துத்தேற்றிப்புசிக்குந்தேசமும், எந்நேரமுங்காய்ச்சல் குளிரினலே சூலைம்வயிறுபற்றி யுபாதிப்படுகிறதேசமும், எந்நேரமுஞ்சோனைமாரியிலே யுபாதிப்படுந்தேசமு மிப்படியனேக மிலேச்சபூமிகளைவிட்டு ஷட்ருசிமுதலான சர்வபதார்த்தங்களும் நல்லநீர்களும் நல்லசுகவேதுக்களு முண்டாகிய தேவதாபூமிகளிலே வந்துபிறக்கிறதருமை அதிலேபிறந்தாலும்நான்கு வருணத்தாருள் பிராமணனாய்ப் பிறப்பதரிது பிறந்தாலும் சேவகஞ் செய்தும் மாவுத்தராயும், ஆயுதங்கள்பிடித்தும், மூட்டைகள்சுமந்தும். வியாபாரஞ்செய்தும், பரஸ்திரீகெமனம்பண்ணியுங்கெடாமல் இதுகளைவிட்டு வேதபாரகனாவதரிது. ஆனாலும் எக்ஞமும் ஆக்ஞைபண்ணுகிறநாலும் செய்கிறதரிது. இதிலும்வேதாந்தமோதுவதரிது. ஓதினாலும்மாயையைநீக்கி யானென்னதற்றுமோக்ஷத்தில்அன்புவருவதரிது இதில்வந்தாலுஞ்சற் குருவையடைந்து அவன்சேர்வைசெய்து அவனுக்கெல்லாமொப்புவித்துத்துறந்து நிஜமோக்ஷமடைகிறதரிதென்றறிக.

சமயசூடாமணியில் ஒன்றுக்கொன்றுமேலாவதற்குவிருத்தம்.

௰அ. அலங்குசினைத்தருமுதலாந்தாவரத்திலறிந்திலங்கு மவைமேலாமவற்றின்மேலாம், விலங்குபறவைக்குலங்களவற்றின்மேலா மிக்கநரரவற்றின்மேல்வேதந்தேர்வோர்,நலங்கிளருமவரின்மேற்றருமந்தான நல்லொழுக்கற்றுடையோர் மேனவலோர்க, டலங்கிளருஞானிகள்மேலவரின்மேலாந் தற்பரனையுணர்ந்தவர்தாந் தலைவர்தாமே.

இப்படிஒன்றுக் கொன்றுமேலாவதரிது. இதிற்புல்லுமுதலானதாவராதிசீவன்கள் மனிதயோனிக்கு வருகிறதெப்படி யென்றுதேவர் நிமித்தியந்தபோநிமித்தியம் புசிப்புநிமித்தியம் எக்ஞநிமித்தியங் கொம்புமரங்களுதவுகையாலும். இனிப்புல்லுப்பூடுகள் பசுக்கள் சித்தபுருஷர்கள் புசிக்கையாலும், பூக்களாகையாலும் அசைகிறசீவனாய்க்கிரமமாய் முன்விருத்தப்படியே மனிதயோனியாமென்றறிக.

௰உ-வது—அத்தியாயம்.

# ஹிதோபதேசம்.

## ஈங்கிசையில்லாவிதோபதேசம்

மெய்மொழியில்.

௰௯. சத்தியமுரைக்கநாளுஞ் சகலபல்லுயிர்கட்கெல்லா
நித்தலுமிதமேசெய்ய நினைப்பதுசிவத்தையென்று
மத்தன்வேதாகமத்தி லருளியபொருளிம்மூன்று
மெத்திறச்சமயத்தோர்க்குமெம்மதங்களுக்குமிட்டம்.

(இ-ள்)—சத்தியமேயுரைக்கவேணும், அவ்விடத்திற்பிறருக்கும், அன்னிதா சீவனுக்கும், இம்சைவருமிடத்தில் அசத்தியமாகிலு மந்தவிடமாத்திரஞ் சொல்லிச் சீவனைக்காப்பதேசத்தியம். ஒருசீவனைவெட்டும்போது அதின்பழிக்குத்தன்தலையைமுந்திநீட்டிபின்வெட்டவேணும். ஆகையாலே ஒருசீவனையுங்கொல்லவொண்ணாது, கொல்லநினைக்கிலுஞ்சொன்னாலுங்கேட்டாலும் பார்த்திருந்தாலுந்தின்றாலுங் கொல்லுகிறத்துக்குச்சரி. கொல்லாததன்மம்கொல்லாதது றவு கொல்லாதஞானங் கொல்லாதசெல்வம் இதுகளேதருமம் துறவு ஞானம்வாழ்வென்றறிக. இனிக்கொலைகளவு கள் காமம் பொய் இதுகளைவிட்டு எவர்க்குமிட்டுண்டு பஞ்சேந்திரியமடக்கிபெரியோரைச்சேரவென்றறிக.

மூதுரையில்.

உ௰. சாந்தனையுந்தீயனவேசெய்திடினுந்தாமவரை
யாந்தனையுங்காப்பரறிவுடையோர்- மாந்தர்
குறைக்குந்தனையுங்குளிர்நிழலைத்தந்து
மறைக்குமாங்கண்டீர் மரம்.

(இ-ள்)— ஒருவர்சாந்தனையுங் கொல்லவகையிட்டாலு மவரைத் தான் சாகுந்தனையுங்காக்கிறதறிவு. அஃதெப்படியென்னில், மனிதன் மரத்தினிழலிலிருந்துமரத்தைவெட்டும்போது தான் அற்றுவீழுந்தனையும் வெட்டுகிறவனுக்கு நிழலானதுபோலவென்றறிக.

உக. கற்பிளவோடொப்பர்கயவர்கடுஞ்சினத்துப்
பொற்பிளவோடொப்பாரும்போல்வாரோ-விற்பிடித்து
நீர்கிழியவெய்தவடுப்போலமாறுமே
சீரொழுகுசான்றோர் சினம்.

இனி மண்குடமுடைந்தால் மீண்டுபிரயோசனப்படாவாறுபோலக்கோபமானவனுக்கேகேடாய்அபூச்சியனுமாம். கோபமடக்கும் பொறுமையுடையவன், பொன்னின்குடமுடைந்தால் முதல்விலைபோகாதுபோலும், ஆன்பால் காய்ச்சக்காய்ச்ச ரசம் அதிகமாவாற்போலுஞ், சந்தனமுரைக்கவுரைக்க அதிகவாசனைமேலிட்டது போலுஞ், சங்கு சுட்டாலும்வெண்மை யதிகமாவாற் போலுங்கற்றூண்பெரும்பாரந்தாங்கினலும் வளையாமற்பிளத்தல் போலுந், தனக்குஹானிவருகிறவிடத்திலுந்தன் பொறுமையாலே பகையாளிக்குமிதஞ் செய்வதறிவுடைமையென்றறிக.

திருக்குறளில்.

உஉ. தன்னைத்தான்காக்கிற்சினங்காக்ககாவாக்காற்
றன்னையேகொல்லுஞ்சினம்

உ௩. தீவினை தீயபயத்தலாற்றீயவை
தீயினுமஞ்சப்படும்

---

௰௩-வது—அத்தியாயம்.

## பிராமணன்சரிதை

மறையவன்சரிதை வகையதுரைத்தது.

கர்ப்பாதானம், புங்சவனம், சீமந்தம், உன்னயனம், சாதகர்மம், நாமகரணம், உபநிஷ்கிரமணம், அன்னப் பிராசனம், சௌளம், உபநயனம், மகாநாமியம், மகாவிரதம், உபநிஷத்து, சோபனம், உத்துவகனம் மிருதியென்னும் சோடசகர்மங்களுடனே, யசன, யாசன, அத்தியயன, அத்தியாபன, தான, பிரதிக்கிரகமென்னுஞ் சட்கர்மமும், சிவபத்தியாதி சகலசற்குணங்களுடனே கூடினவன் பிராமணன்.

இதற்குச்சாட்சி திரட்டில்.

உச. கறைசெயைம்புலன்களைக் கரணநான்குடன்
றுறைதுறையடக்கலுந் தவமுந்தூய்மையும்
பொறையொடுகல்வியும் பொருந்துஞானமு
மறையவர்தொழிலென மதிக்கப்பட்டதே.

௰௪-வது—அத்தியாயம்.

## க்ஷத்திரியன்சரிதை.

சத்திரியன்சரிதைசரித்திரமுரைத்தது.

பிரசாபாலன, யசன, அத்தியயன. துர்ச்சன, துஷ்டமிருகம், பக்ஷி, சத்துருசங்காரம், அன்னதானம், வஸ்திரதானம், கன்னிகாதானம், பூதானம், கோதானம், உபயமுகிதானம், இரண்ணியதானம், மகிஷதானம், அசுவதானம், சுவேதாசுவதானம், காலதானம், காளாமுகிதானம், மகாமேருதானம், கற்பகவிருக்ஷதானம், வித்தியாதானம், மகாதானுந்தரார்த்தமாகிக் காலதேச பாத்திரபரீக்ஷை விஷ்ணுபத்தியாதி கர்மயுத்தனானவன் க்ஷத்திரியன்.

உதாரணம்-பகவற்கீதையில்.

உரு. தலைமையுங்கொடைமையுந்தறுகணாண்மையு
நிலைமையுங்கீழ்ப்படாநெஞ்சுசீடலுங்
கொலைபயில்போர்களிற் புறங்கொடாமையுஞ்
சிலைமலிதோளினுயரசர்செய்கையே.



௰௫-வது—அத்தியாயம்.

## வைசியன்சரிதை.

வைசியன்சரிதைவாணிச்சியமுரைத்தது.

பிரதமஸ்தானாதி- ௲ - ஸ்தானபரியந்தமான-யக்கம்- தசம்- சதம்-சகஸ்திரம்- தசசகஸ்திரம்- லக்ஷம்- தசலக்ஷம்-கோடி- தசகோடி- சதகோடி- அற்புதம்-நிற்புதம்- கர்வம்-மகாகர்வம்-பற்மம்-மகாபற்மம்-க்ஷோணி-மகாக்ஷோணி- சங்கம்-மகாசங்கம்- க்ஷிதி-மகாக்ஷிதி- க்ஷோபம்-மகாக்ஷோபம்-நிதி-மகாநிதி- சாகரம்- மகாசாகரம்-அரி-மகாஅரி- சங்கை-மகாசங்கை-பணி-மகாபணி-கிருது-மகாகிருது, இலக்கங்களும், யக்கம் —ஏகம்ரூபம்-பூமியாதிசமிஞ்ஞை, (க)துவே—துவவ்துவந்துவ துவிதம், துவய, விதிய; யுக்கும, யுகள, யுக, உபய, பாகு, பாத, பக்ஷ, நயனாதி, சமிஞ்ஞை, (உ)திரி—திரய,திரிதிய ஹாரநயன, அக்கினி, புராதிசமிஞ்ஞை, (௩) சௌள—சதுர்த்தி, வேத, வர்ண, ஆச்சிரமாதிசமிஞ்ஞை, (௪)பஞ்ச—ஹரவக்த்ரகஷாய, விருத, இந்திரிய, விஷய, பாணபாண்டவபூதாதிசமிஞ்ஞை, (ரு) ஷடு—பாவ,ராசாங்க, இருது, ரச, ஸ்கந்த

முக, வேதாங்க, வர்ணகர்ம, தரிசனுதிசமிஞ்ஞை, (சு) சத்த—முனி,கிரி, தாளங்க, ராசாங்க, தாரக, தாது, சாபரங்க, ஸ்வர, சாகராதிசமிஞ்ஞை, (எ) அஷ்ட—வசு, திக்கு, கஜ, மத, விகாரகாமாதிசமிஞ்ஞை, (அ)நவ—திரவியாந்திரு, நிதி. கிரக, ரத்நாதிசமிஞ்ஞை, (க) தச—பிந்து, சூன்னிய, நாஸ்தி, அவதார, ககனுதி சமிஞ்ஞை, (ம) இவைமுதலான சமிஞ்ஞையுமறிந்து, கிரமுகாதிவஸ்துக்கள்எண்ணியறிந்து, பத்தரைப்பணத்தினிறைகழஞ்சு, கழஞ்சு (ச)கூடினது கரிஷம்,கரிஷம்(ச)கூடினது,பலம்-பலம்(சம)கூடினது.வீசை, வீசை, (ரு) கூடினதுதுலாம், துலாம், (கூ௰உ) கூடினது, பாரம், பாரம் (ம) கூடினது, அஸ்தமென்று கர்ப்பூராதிதூக்கி அறிந்து, ஒருசிட்டிநிகுஞ்சம்-நிகுஞ்சம்(ச)கூடினது-குடுவம்-குடுவம்(ச) கூடினது, பிரஸ்தம்-பிரஸ்தம்(உ) கூடினது வாகம், வாகம், (உ) கூடினது-ஆடகம்-ஆடகம்(ச) கூடினது- துரோணம்- துரோணம் (ரு) கூடினது-கரி என்னுந் தான்னியாதி யளந்தறிந்து, சுவர்ணத்தின்மாற்று, பிரவாளத்தின் கழஞ்சு, மணியின் சவ்வு-ரத்தினத்தின் சூத்திரபரீக்ஷை, வச்சிரத்தின்மஞ்சாடி, பச்சையின்ரதியமுதலியவறிந்து, கிரயம், வட்டம், வட்டிமுதலியவறிந்து செய்கிறவாணிச்சியம், கிருஷி கௌபாலிகம், யசன, அத்தியயன தானமுடன்சூரியாதிபத்திகர்மயுத்தனுனவன் வைசியன்.



௰சு-வது—அத்தியாயம்.

## சூத்திரன்சரிதை.

உயர்சூத்திரன்றனுழவுதொழில்சொலல்

பிராமணுதிவர்ணத்திரய சேவை க்ஷேத்திரரக்ஷை சகலதேவதாபத்திமுதலான கர்மயுத்தனுனவன் சூத்திரன்.

---

௰எ-வது—அத்தியாயம்.

## பிரமசாரிசரிதை.

பிறவிமுதலுருப்பிரமசாரிநடை.

உதாரணம்- திரட்டில்,

உசு. இரவுனலெனன்னைய்சாந்தமேமைழயர்கலவிமற்றும்
விரைவறப்புலன்கள்வென்றுவேதமங்கந்தரித்து

மருவிமுப்போதுநிட்டைமாசிலூண்பிச்சைகொண்டு
பரமஈற்பிரமாசாரம்பகர்ந்தனமறைகளன்றே.

உஎ. சடையெனமயிர்பேணுதுதனைகிடைபுணர்வுபிச்சை
மிடைதருவிடயமெல்லாம்விட்டுமௌனவிரவலின்றி
யடைதருபிரமாசாரத்தறைந்ததிலொன்றுதப்பிற்
கடுநரகுறுவரிந்தக்காசினியளவுமன்றே.

அறிவானந்தசித்தியாரில்.

உஅ. தலைசிகையூண்பிச்சைசார்கலையோதறனைசயன
நிலைபெறவேபுலன்வென்றுமுப்போதுநன்னிட்டையிலே
மலைவுறுபிரமசாரிக்கிரவுணன்மாற்றியெண்ணே
யலைவுறத்தள்ளிநில்லாதொன்றுதப்பிலருநரகே.



௰அ-வது—அத்தியாயம்.

## கிரகஸ்தன்சரிதை.

சம்சாரிக்குத்தகுமறமுறைத்தல்.

உதாரணம் - திரட்டில்.

உகூ. துறந்தவர்மூவர்தேவர்துளக்கமில்பிதிரர்நோய
ரறந்திகழ்விருத்தர்பாலரபலரந்தகர்விருத்தர்
சிறந்ததாய்தந்தைசுற்றந்திருத்தறற்றற்பின்மிக்க
வறந்தருமில்லாளோடுமருந்தலில்லறமதென்னே.

௩௰. கொலையொடுகளவுகட்காமங்கோபமென்
புலைகடிந்தைவகைத்திறனும்போற்றிநன்
நிலைதனிலனுவதுவருவலில்லற
மலைவுறுநரகிடையடைக்குமல்லவோ.

அறிவானந்தசித்தியாரில்.

௩க. தீயகொலைபொய்கட்காமமற்றில்லறஞ்சேர்ந்தவர்தான்
றூயதுறவருடன்மூவர்தேவர்கடொல்பிதிரர்

தாயர்நற்பாலர்மனைவியரந்தகர்தந்தைதம
ராயும்விருத்தரகுதியைக்காக்கிலர்க்காழ்நரகே.

---

௰௯-வது—அத்தியாயம்.

## வானப்பிரஸ்தன்சரிதை.

வனத்திற்றவத்தோன்வானப்பிரத்தனே.

உதாரணம்.

௩உ. தனமுதற்றுறந்துகானத்துறைந்துசாகாதியூணைய்
நினைவருஞ்செபந்தியானநிட்டனுய்ப்புலன்கள்வென்றே
பனிவெயிற்றனிபதைத்துப்பஞ்சவங்கியுட்டபித்து
வனசரமுயலும்வண்ணம்வழுவின்மாநிலையமாமே.

இந்தவானப்பிரஸ்தனில் ஸ்திரியுந்தானும் திரிவதுமுண்டென்றறிக.



உ௰-வது—அத்தியாயம்.

## சன்னியாசிசரிதை.

சன்னியாசியாவதானெலாந்துறத்தல்.

௩௩. தரித்தவச்சிகைநூன்மாற்றித்தரித்துச்செந்துகிலுந்தண்டும்
புரித்தநற்கலைகளோதிப்பொழுதுமுக்காலுமூழ்கித்
தரித்தவப்பிச்சையூணைய்ச்சகலமுமீசர்க்கற்பித்
திருத்தல்சன்னியாசந்தப்பிலீறிலாநிலையமென்னே.

இந்தச்சன்னியாசமும் நாலுவிதச்சரித்திரமென்றறிக.

---

உக-வது—அத்தியாயம்.

## அதிவன்னாச்சிரமிசரிதை.

அல்லாங்கடந்தவனதிவன்னாச்சிரமி.

௩௪. சாக்கிராதியளின்றியவற்றினு
நீக்கமில்லறிவாகிநிமலமாய்த்

தாக்கியாவையுந்தாக்கறுசோதிதா
மாக்குவாரதிவன்ஞச்சிரமரோ.

௩௫. பூதபௌதிகமாய்ப்பொலிபேதமு
மேதமின்றியிருஞ்சிவமாயிடப்
போதமாயனுபூதியிற்கண்டவ
ராதியாமதிவன்ஞச்சிரமரோ.

௩௬. மையலாகியவைபத்தினைவெறும்
பொய்யதாயிடவேபரிபூரண
மெய்யதாமனுபூதியிற்கண்டவ
ரையகேளதிவன்ஞச்சிரமரோ.

அறிவானந்தசித்தியார்.

௩௭. சாற்றுமிப்பூதப்பௌதிகமாய்ப்பொலி சார்வையெல்லாந்
தோற்றமறவனுபூதியிலான சுகசொருப
மாற்றெங்குநின்ற பொருளென்றறிந்ததுவாகியுற்றோ
ரேற்றுமிவரதிவன்ஞச்சிரம ரெனுமறையே.

௩௮. பிறிவற்றமுத்திகமையன்றி வேறொருபேறிலையென்
றறிவுற்றவரதிவன்ஞச்சிரம ரவரொவர்க்கும்
நெறியுற்றநிட்டைநியமமதனை நினைவொன்று
செறிவுற்றகாற்பெரு மாமறையானதுசெப்பிடுமே.

---

உஉ-வது- அத்தியாயம்.

## உடலிழிவு.

உற்றபெரும்பயனென்றிதினில்லையென்

றற்றவுடலிழிவாகவுரைத்தது.

உடலை யீசல்சிறகளவு கனத்திலே தோல்மூடியிருப்பதைப்பார்த்து இவன்மன்மதன் இவள்ரம்பை யென்று சொல்லில் அந்தத்தோல் போகிலுயிரோடேதானே நாய்கள் நரிகள் பக்ஷிகள் பிடுங்கித்தின்னமல்தெண்டு கொண்டு ஓட்டிக்கொண்டிருக்கவும் எறும்பீய்கள் மொய்க்கவு மிப்படியா

வதல்லாமல் தோல்மூடியாகியஇத்தேகத்திற்கு நிமிஷமுஞ்சுகமில்லை யென்றறிக. அஃதெப்படியென்னில்.

உதாரணம்.

௩௧. செறியுமயிர்தோலுதிரமிறைச்சிமேதை
திரணரம்புகுடலெலும்பு சீழ்புன்கோழை
முறியுமுதிர்புழுமலநீர்மூளைமச்சை
முழுவழும்புபிளையிவைமுதலாயுள்ள
மறியுமுடல்நீயல்லையென்பதாக.

எண்சாணுயரமும் நாற்சாண்பருமனுமுள்ள இத்தேகமானது மரணமடையுமேயானால் [illegible] நாறியழுகி [illegible] அடையும்போது ஒரு அணுமாத்திரமாகிலும் இந்தவுடம்பிலே நல்லவஸ்துவாய் காணவேண்டுமென்அரிதேயாகும். இதன்றியும் பிறந்தபேரெல்லாமிறந்து மணக்கோட்டுப் பிணக்கோட்டுக் காகையாலும், உயிரோடேதேகங்கள்புழுத்துநாறுகையாலும், தேகத்தை யெந்நேரமுஞ் சுத்திசெய்யாவிட்டால் நாறுகையாலும், மலத்தாலே ஒருபாண்டம் பண்ணினதாகையாலும், உடலெப்படியு மழிகையாலு மிந்தவுடலாலே துக்கங்களெல்லாம்வருகையாலும், உடலைஇழிவென்றதென்றறிக.



-௨௩-வது-அத்தியாயம்

## குடும்பவிழிவு.

குடும்பங்கூற்றெனக்கொண்டிழிவுரைத்தது.

தாய் தகப்பன் பெண்டு பிள்ளை அண்ணன்தம்பிதங்கைதமக்கை மாமன் மைத்துனன் பேரன் பேத்தி யிதுமுதலானபந்துக்களுடனும், இடம்பொருளேவலுடனுஞ் சகலபாக்கியத்துடனுங்கூடியிருக்கிற குடும்பிக்குச்சுகமுண்டென்னில், முன்சொன்னபேர்களெல்லா மொவ்வொருவேளையிலே வெகுதுக்கங்களையும், ஆபத்துகளையும் விளைவிக்கையாலும், இவர்கள் சாகிறபொழுதும் நோய்வந்தபொழுதுந் தன்னுடம்பில் வந்ததைப்பார்க்கிலும் மிகவருத்தப்பட்டுத்துக்கிப்பார்கள், தனக்கொருவேளையிலிடாதபோதும் கலகங் கருப்பு வந்தால் இத்தனைஜனங்களை யெப்படிக் காப்பாற்றுகிறதென்றும் கைப்பொருளெல்லாம்போய்த்தரித்திரம் வந்தபோது [illegible] சுற்றத்தாரைகாப்பாற்றுநிமித்தம் பலதொழில்செய்துவருவதினால் வயோதிகனாய் வியாதிவந்தடுத்து நாட்படவிருந்தால் எல்லாரும்வெறுக்கையாலும், இவன்மரித்தபோது திரு

டனைப்போலக்கைகால்களை முறித்துக்கட்டியும் உடைமை பிடவை முதலா னதெல்லாம் வாங்கிக்கொண்டும் பிறகேயொருவருந் துணையில்லாமல் எம வாதைப்பட்டுப்போகையாலுங், குடும்பந்துக்கமேயல்லாமல் நிமிஷமுஞ்சுக மில்லையென்றறிக.

உதாரணம்-திருமந்திரம்.

சயு, பண்டம்பொய்க்கூரைபழுகிவிழுதலா
லுண்டவிப்பெண்டிரு மக்களும்பின்செலார்
கொண்டவிரதமுஞானமு மல்லது
மண்டியவருடன்வழிநடவாதே.

அமிர்தசாரம்.

சக, திடம்படுசீலந்திகழ்கல்விகேள்வி
யிடம்படுமேதைதசீரெல்லாம்- பசுமட்
குடம்படுநீர்போற் குடம்பியைக்கைவிட்
டுடம்போடுகூட வுகும்.



உச-வது-அத்தியாயம்.

## போகவிழிவு.

### போகம்பொருளினிற்பொல்லாதென்பது.

போகங்களையனுபவிக்கிறதேசுகமென்னில், புசிப்புச்சுவுக்கியங்கள் தே கசவுக்கியங்கள் விசேஷசவுக்கியங்களைத் தேடும்போதுந்துக்கம், அதுகள்கி டையாதபோதுந்துக்கம், அதுகள்கொள்ளைபறிபோகிலுந்துக்கம், தரித்திரம் வந்தபோது முன்பொசித்ததெல்லாம் நினைத்துக் கைகால்வீங்கி இடுவாரற் றுச் செத்தும்,போகம் புசிக்கச்சே அதின்பிறகேதானே துக்கமென்றறிக.எ த்தனைபோகமெய்ச்சினும் அத்தனைக்கும் அத்தனைதுக்கமென்றறிக. அ தெப்படியென்னில்,காணிசுகத்துக்குக் கோடிதுக்கமென்று வழக்கவசன மு ண்டாதலாலென்றறிக.

உதாரணம் அமிர்தசாரம்.

சஉ, சிந்தாகுலமனிதர் சீசீசெவிமுதலா
மைந்தானுமீட்டழிவ ரல்லரோ- வைந்திலொரு

வேட்கையசுண மிபம்விட்டின்மீன்வண்டு
கேட்கைமுதலோரொன்றிற் கேடு.

(இ-ள்)—சிந்தாகுலமாகிற துக்கமேவளருகிறமனுஷர் சீசீயென்று ரோசப்பட்டசெவிமுதல் ஞானேந்திரியமைந்திலுமீடழியமாட்டார். அதெப்படியென்னில்,ஒவ்வொருவிந்திரியவாசையாலேஒவ்வொருசீவன்அழிந்துபோம். அதெப்படி, அசுணப்பட்சிசெவியாலேகேட்கிறகடினசத்தத்தாலேசாம். யானை பரிசத்தாலேசாம். விட்டில்வண்டு ரூபத்தாலேசாம். மீன்நாக்குருசியாலேசாம். கருவண்டுமூக்குவாசனையாலேசாம். இனிக்கன்மேந்திரிய மைந்தாலுஞ்சாவு முலைச்சலும்வரும். இப்படி -அச-லக்ஷம்- அச்சுபேதமானசீவன்களெல்லாந் தத்தமிந்திரியங்களாலே சாமென்றறிக. துக்கமில்லாத போகம்பிர்மாதிகளுக்குமில்லை. ஆதலால் போகம் இழிவென்றதென்றறிக.

திருமந்திரம்.

சங, ஆசையறுமின்களாசையறுமின்க
ளீசனோடாயினுமாசையறுமின்க
ளாசைபடப்படவாய்வருந்துன்பங்க
ளாசைவிடவிடவானந்தமாமே.



## உரு-வது-அத்தியாயம்.

## மகளிரிழிவு.

மகளிர்யோனிவஞ்சக்குழியே.

சற்சந்தனவனிதாதிபோகம்நல்லதென்னில்,நல்லதல்ல. வனிதையர்முலை யோனிகண்முதலான அவயவங்களே மனுஷரைக்கொல்லும், அவர்கள்புணர்ச்சியினாலேதொன்றுதொட்டுவருகிற துக்கங்களைச்சொல்லமுடியாது. ஆகையாலே-மான்குளப்படிமாத்திரமானயோனியிலே சகலசீவராசிகளுமுழுகியெழும்பி யேறமாட்டாமல் எல்லாமுள்ளே யமிழ்ந்திப்போயிற்றென்றறிக.

உதாரணம்-அமிர்தசாரம்.

சச, எரிகொண்டுமல்ல வெறிபடைகொண்டல்ல
வருநஞ்சுங்கூற்றுங்கொண் டல்ல-கருதிநெஞ்சத்
தம்மாதர்தம்மைப் படைத்ததணியிழையார்
தம்மாலேயாகத் தகும்.

ஆகையால் மனுஷருக்கு இகத்திலுந்துக்கம் பரத்திலுந்துக்கம் இதல்லா மல்ளத்தாலேவருகிறதுக்கமு மிவர்கள் பொருட்டென்றறிக.

---

உசுஎ-வது-அத்தியாயம்.

## பொருளிழிவு.

பொருளாற்றுக்கம்பொங்குமென்றுரைத்தது.

திரவியத்தைத்தேடும்பொழுதுங் காப்பாற்றிலுஞ் செலவழிக்கிலும்இராசாக்கள்-கள்ளர்-கோளர்-அண்ணன்-தம்பி-பெண்டு-பிள்ளை- சத்துருக்கள்-உள்ளறிந்தபேர்-பிறத்தியார்- இவர்கள்முதலான-பேர்களாலே துக்கமும்பயமுமேயுள்ளதென்றறிக.

உதாரணம்-அமிர்தசாரம்.

சடு. இன்னலாமீட்டுங்கா லீட்டிஞ்லியாவனையு
மொன்னலராக்கு முயிரிறுக்கு- மன்னு
மனத்தைவேறுய்மபக்கு மானடுக்கஞ்செய்யுந்
தனத்தின்வேறுண்டோ தவறு.

இப்படித் திரவியவாற்சிதங்களாலு ஆற்சியாவிட்டாலுந் துக்கமென்றறிக.

---

உஎ-வது-அத்தியாயம்.

## அரசிழிவு.

அரசியல்வருஞ்சுக மற்பமென்றுரைத்தது.

பதினுலுமனுக்களும் ஆறுசக்கரவர்த்திகளும் திரிச்சங்கு அரிச்சந்திரன் முதலான இட்சுவாகுவங்கிசமும், புரூரவர் தன்மபுத்திராதிகள் பாண்டியராஜாக்கள்முதலானபேரும்,பிரமாதிதேவர்களும் இராக்ஷதர்முதலானபேர்களும் அனுபவித்த சுகமுந்துக்கமும், புராணங்களிலேபார்க்கில், துக்கங்கள்வந்தனுபவிக்குமிடத்தில் அறியாமல்இராஜபோகம்அனுபவிக்கின்றோமெனறும்,இந்த துக்கத்தின் முன்னே,வந்தசுகம் ஒரு அணுமாத்திரமில்லையென்றும்,அவர்கள் பட்டபாடுகளையும்,அவர்கள்துக்கங்களையும், அவர்கள்அரசுக்காக மடிந்ததுஞ் சொல்லிமுடியாதென்றறிக.

உதாரணம்-அமிர்தசாரம்.

சசு. முரசுவிளங்குதம் முற்றத்திற்றெற்றி
யரசுவணங்குங் கழலா-ரொருசுணங்கன்
கவ்வியகாலிற்கடைகடோறுஞ்சுழல்வர்
வெவ்வியசொல்லவெறுத்து.

நாலடியார்.

சஎ. யானையெருத்தம்பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத்தலைவராய்ச்-சென்றோரு-மேனை
வினையுலப்பவேறாகி வீழ்வர்தாங்கொண்ட
மனையாளைமாற்றார் கொள.

ஆகையால் அரசிழிவென்றறிக.

---

-உஅ-வது—அத்தியாயம்.

## சொர்க்கவிழிவு.

சொற்கஞ்சுகமெனில் தோற்பையிற்காலே.

தோலாகிறதுருத்தியிலே காற்று உப்புவதும் வாடுவதும் போலென்றறிக. அதெப்படி, சொற்கத்தில் இரம்பாசம்போகம் அனுபவிக்கில் மேனகை-உளர்வசி-திலோர்த்தமை முதலானபேர்களாசையாலும்,அதிலேஒருவர்மேலான போகங்களைக்கண்டு நமக்கப்படி யில்லையென்கையாலும்,இதுதொலைந்தவுடனேசெனனமெடுத்துவெகுபாவத்தாலே அதோகதியாகையாலும் மேலான பிர்மாதி போகங்களையிச்சிக்கையாலும், எப்போதுஞ் சுகம் அற்பம் துக்கம் வெகுவாகையால்,சொற்கவிழிவாம்.

உதாரணம்- அமிர்தசாரம்

சஅ. பொதுமாதர்தோளே புணர்வதமிர்த
மதுபானமுண்டே மகிழ்வ-தெதுகோடி
சாவார்பிறப்பார் சதுமுகனோர்நாளினிது
தேவாதிபரெய்துஞ் சீர்.

ஆகையால் சொற்கவிழிவென்றறிக.



## உகூ-வது—அத்தியாயம்.

## செனனசாகரம்.

### செனனசாகர நிலைசெப்பரிதே.

உதாரணம்-திரட்டில்.

சகூ. காலமாம்பொல்லாவஞ்சக் கடுமகரத்தான்மிக்க
சாலவேபயத்தைப்பண்ணித்தப்பொணுவகைசுழித்துக்
கோலியேயொருவரித்தைப் பார்க்கவுங்கூடவொட்டா
வாலிதாம்பெருமைத்தாகு மாபவக்கடலிதையா.

ருய. சுற்றமாமுவட்டாற்றந்தைமைந்தராந்துரால்கள்சேர்ந்து
குற்றவாங்காரவாமை குறியறவுடைத்தாயாசைப்
பற்றதாமீன்கணத்தாற் பரந்துபாய்போகப்பாம்பாற்
செற்றிபேகிடக்கும்பவ்வத்திறத்திணையின்னங்கோராய்.

(இ-ள்)— இடைவிடாமலிடமோ செய்துஇலக்கமில்லாத ஷழியூழிதோறு மடைக்கப்பட்ட பாசசாலமாகிற பிறவிச்சமுத்திரத்தில்,யானையின்மதம்போலமதத்த பாசங்களாகிற நுரைதிரையாலும், சதியாகிற முதலைகள் தாவுகையாலுங் காலமாகிற வஞ்சக்கடுமகரத்தாலுந் தினமானது செல்லுகிற சுழிப்பாலும் ஒருவராலும் பார்க்க பயமாகிற பாசக்கடலாவது சுற்றமாகிற உவட்டெடுத்துந் தந்தைமைந்தராகிற துரால்கள்சேர்ந்து ஆங்காரமாகிற வாமைகளாலும், ஆசைகளாகிற மீன்களாலும்,போகமாகிற பாம்புகளாலுங் கூடியிருக்கிறசெனனசமுத்திர மென்றறிக. செனனசாகரத்தில்விழுந்தவனைக் காலமாகிறமகரமீன்கள்ஆயுளைவிழுங்கி நரை திரைமூப்பாகிறபல்லாலேதைையக்கடிக்கக் காமமாகிற முதலைகள் பற்றி ஈஷணுத்திரயமாகிற ஆழத்திலேபதைக்கப்பதைக்கவிழுக்கக் குரோதமுதலாகிறஅட்டைகள்பற்றி இரத்தங்களைக் குடிக்க நண்டுகள் தவளைகள் சிறுமீன்களாகிற தரித்திரபந்துக்கள் பிடுங்கித்தின்ன பெரும்பாம்புகளாகிற அண்ணன் தம்பி பிள்ளை பேரன்மார் தாயாதிகளாகிற பாம்புகள்கடித்துவிஷந்தலைமண்டை கொள்ள இவர்கள்சுடுசொல்லாகிறசப்புக் காறல் கொள்ளப்போகாமல் அலைய, போகஸ்திரிகளாகிற,புலால்நாற்றம் பொறுக்கப்போகாதிருக்கநுரைதிரைகளாகிறவியாதிகள்வந்தலைக்க தரித்திரமாகிற உப்புத்தண்ணீர் குடிக்கப்போகாமலலைய, இந்திரியவிஷயங்களாகிற ஆழங்காணுமலலைய அந்தக்கரணவிகாரமாகிற அளவுநீளம் அகலவிரிவு காணுதிருக்க இப்படிச் சம்சாரசமுத்திரத்தினிலை காணுமலலைவதென்றறிக. இந்தச் சமுத்திரத்தைஞானச்சோங்கேறிப் பிர்மமாகிற,கரையிலேறுவாரொன்றறிக.

௩௰-வது—அத்தியாயம்.

# ஜெனனவிருட்சம்.

## செப்பியமாயையே ஜெனனமாமரமெனல்.

௫௧. வேர்மேலதுதலைகீழதுவீவில்லதுவேதத்
தேர்மேவியவிலைமேவியதியாரும்புகறலிஞ
லார்மேவியவசுவத்தமதெனவேயரசதனின்
பேர்மேயதுபெருமாயைசெப்பிறவிப்பெருமரமே

(இ-ள்)—இந்தமரத்தி னியல்பாவது மேலான பிரமத்தினிடையாகச்சித்துத்தோன்றி சித்தில் வேர்கொண்டமாயையாகையால் வேர்மேலென்றது. இனிமாயையில் நின்றும் -௩௰௬- தத்துவமுதலான உயிர்உலகங்களெல்லா மாயைக்குமேலில்லாமல் அதோமுகமாகையாலே தலைகீழென்றது. இப்படிக்கொத்த மகாமாயையாகிற அச்சுவத்தமரமானது; ஒருகாலத்திலுங்கெடுகிற தல்ல. சுழலப்பட்டபிறவித்தொடர்ச்சி பாழாகவொருக்காலுமழியாதது. வேதந்தேறப்பட்டது. இலைகள்மேவியது நீபோவிருக்கிற புத்திரருள்ளது. வாள்வவிகளால்வெட்டப்போகாதது கருப்புற்றநாள்முதல்விளைவானது. வாய்வளரப்பட்டகாதலுடையது. வேதமே, இலைகளாவது. வருநாளிலொருநாள் பெறுவதில்லையாய் மாயையாகிற அசுவத்தமரமென்று பேராமென்றறிக. இந்த ஜெனனவிருக்ஷத்துக்குவிளைவெப்படியென்னில், அஞ்ஞானமேவிரை மாயையேமுளை சிவதத்துவமங்குரிப்பது காலதத்துவந்துளிர் ஆத்மதத்துவம் சின்னகொம்பு சாகைகளிருபத்தைந்தாய், விஷயங்களைந்தும் ஐந்து பனைமரமாய்,மற்றதத்துவங்கள் கிளைக்கொம்புகளாய், நரகமுதலான திலைகளாய்,ஆகாரம்நித்திரை மைதுனம் பயம் பழுப்பிலையாகிறநரைகளாய்,பாசபந்தம்விழுதாய்,யோனிகள் முள்ளாய்,புசிப்புமுகிளாய்,உலைச்சலரும்பாய்,மண்பெண் பொன் பூவாய், சுகதுக்கங்காயாய், பூச்சியம் பூச்சியம் பழமாய் புலனுசையே நிழலாய் பொருமை வஞ்சனைகளேபழரசமாய் பூர்வசமஸ்காரமே கொட்டையாய், இதுகளைப் புசிக்கப் புலனுன ஐந்துசிறகு பட்சிகளும் அனேகதத்துவமாகிற பட்சிகளு முள்ளதாய்,இப்படிதழைக்கிற ஜெனனவிருக்ஷமென்றறிக. இப்படியானவிருக்ஷத்தை ஞான வொளியாகிறவாளைக்கைபற்றிக்குருவின்பாதச்சாணைபிடித்துக் கூரிதானசமாதியாலே வேரறவெட்டில்விழும் சாதனமாகிய முயற்சியால் வேரையுங்களைந்துபோடில் ஜெனனவிருக்ஷம் வேரோடேபோமென்றறிக.



## ௩க-வது—அத்தியாயம்.

# அசேஷதுக்கம்.

கருநாண்முதலாய்க் கவலையுற்றுழற லரிதாமசேஷதுக்கமதாமே.

௫௨. புனலிடைமூழ்கிநின்று புகடடவஞ்செய்வார்போலே
கனலிடைவயிற்றினுள்ளே கருப்படும்வருத்தந்தன்னைப்
பினயிகநடுங்குமுன்னில் வாயுமைகுளறுஞ்சொல்லி
னினைதொறுமுள்ளஞ்சோரு நிறைதளர்ந்தழியுநெஞ்சம்.

ஆலையிற்கரும்புஞ் செக்கிலெள்ளும்போல யோனிவாயில் நெரிந்துபிறப்படும்போதும்,கருப்பத்திற் கருப்பற்றும்போது கோடிதேள் கொட்டினதுபோலும்,பிறந்தவுடனேசெவ்வாப்புமுதலானவியாதியாலும் மருந்துகளாலும் அமுக்கிக்காது குத்திலும், வளர்க்கிலும்சாதித்தொழிலர்லும் வாசிக்கும்போதும் அதிலே தெண்டனையாம் போதும்குமாரப்பருவத்தில் வியாதியாலும்தருணத்தில் பெண்ணுசையாலும், அப்போதுதரித்திரத்தினுலும்அதின்பயன்வியாதியாலும் உழவுத்தொழில்முதலான கிருஷிகளாலும் உண்ணும்போதுமிகினுங்குறையினும்உண்ணவில்லாமலாலும்அறுசுவைகள் குறையினும்மிகினும்பேதையர் கூடினும்பிரியினுங் கூடாதபோதும்இழைதலிலும் ஆசையிலும்நித்திரையாலும் ஆகாதசொற்பனத்தாலும் நனவில் விஷயங்களிற்கடுமணங் கடுருசி கடுரூபு கடுபரிசம் கடுசத்தம் வினைகள் நவக்கிரகங்கள் அதின்தோஷம் சலிகை சலிகை யில்லாது மலஜலத்தால் மலஜலம்விடாவிட்டாற் றரித்திரம் அயிஸ்வரியம் பொருளால் பொருளில்லையால் வந்ததுபோதாமல் வாராவிடில் பனி குளிர் வெய்யில் மழை இடி மின்னல் இதுகளாலும் இதுகளில்லாவிடினும் வாயுமிகுதியடிக்கிலும் அடியாவிட்டாலும் தாய் தகப்பன் பெண்டு பிள்ளை அண்ணன் தம்பி தங்கை தமக்கை பந்துக்கள் தாயாதிகள் சத்துருக்களாலும்,இவர்களில்லாதபோதும்.ஆளடிமை காணி மனைகள் இதுகளில்லாவிட்டாலும்,கள்ளர் வேடர் கலகங் கருப்பு இடுவந்தி கோள் படு சாக சக்கிரராலும் இஷ்டரால் வலியாலும் நரை திரை-மூப்பு தளர்ச்சி ஈ-கொசுகு பேன் மூடு எறும்பு தேள் பாம்பு நாய் நரி இதுமுதலானதுஷ்டமிருகங்களாலும்,இதுகள் முதலானதுக்கங்கள்சொல்லில் அனந்தமுண்டு. இதல்லாமல் கடையில்மரணவேதனையாலும்.,அப்போதுஈஷணத்திரையங்கள்போகையாலும்,மரணத்தாலும் மரணமானபிறகு யமதெண்டமும்நரகதெண்டமும்இப்படிச் செனனமுதல் மரணந்தமும் அப்பாலுந்துக்கமேயல்லாமற் சுகமில்லையென்றறிக. இனித்திவ்வியதேகமானதேவதைகளுக்குத் துக்கமும் வியாதிகளுமுண்டாய்அஸ்வனிதேவதைகள்வயித்தியருமுண்டென்றால்,மனுஷர்துக்கஞ்சொல்லமுடியாதென்றறிக.

௫௩. மனையவளேவாகமகச் சவலையாக மனையிடிந்துவிழுமாடுங்கெ டமுன்றந்த, வனையர்கடன் றனக்கலைக்கவடிமைசாக வரியவிருந்தி னர்வரவூர்க்கிறையும்பூண, மினையிலொருபொருளின்றி வாங்கலா கு மிடந்தேடவழக்கினருந்தடுக்கநின்று, நினைவரியசலமதிபோற் குறையும் பொல்லா நிலையிற்குடும்பிதுயா நினையிலந்தோ.

இப்படிக் குடும்பிக்கு ஒருநாளிலே யிந்தத் துயரம்வந்தா லிந்தத்துக்கத் துக் களவில்லை. ஆனல் சுகமாவதேதென்னில் துறவு நல்லது.

௫௪. உடலினைபமபணல்விட்டா ரொன்றியசெல்வம்விட்டார்
விடலருஞ்சுற்றம்விட்டார் வேட்கைவேரோடும்விட்டா
ரிடனுடைக்குலமும்விட்டா ரியானெனதறவேவிட்டார்
கடனுடைக்கலைவிட்டார் கற்பனைமுழுதும்விட்டார்.

௫௫. போற்றியதெவையும்விட்டார் புண்ணியபாவம்விட்டார்
வேற்றுவேதனைகாயத்துக் கியல்பதுவென்றுவிட்டார்
மாற்றருந் துவந்துவங்கள் வந்திடத்தோற்றுவிட்டா
ராற்றவேதுறவிநெஞ்சத் தசைவிலாவரியவீரர்.

௫௬. ஊரொடுபேரும்விட்டா ருலகியல்முழுதும்விட்டா
ராரொடுமோர்வம்விட்டா ரதனினுஞ்செற்றம்விட்டார்
பாரொடுவின்னுந்துன்ப மெனப்பழுதறவேவிட்டா
ரோதிசுமெழுவையும்பேய்த்தே ரெனநகைசெய்துவிட்டார்.

இப்படியெல்லாவற்றையும்விட்டுத்துறந்து அஷ்டாங்கயோக அப்பியா சத்தாலே சிவயோகத்திலே நிற்பதுசுகமென்றறிக. ( செம்மையச்செல்வ மே சிவானுபூதியே ) ஆகையால் சிவானுபூதியேசுகமென்றறிக. அல்லதுது றவு வாராமற் குடும்பியானூற் சுகதுக்கங்கள்வந்தவிடங்களிலுஞ் சகலவிஷய ங்களையுஞ் சிவாற்பணமாக்கித் தானென்றுந் தனதென்று மில்லாமல் எல் லாஞ் சிவனுடைமையென்றறிந்து எல்லாஞ்சிவன் செயலென்று நடைநொ டி பாவனைமூன்றிலுஞ் சிவாற்பிதமாகச் செய்தால்இதுவுஞ்சுகமென்றறிக. இந்தவிதமிரண்டிலல்லாமல் வேறேசுகமில்லை யென்றறிக.



## ௩௨-வது—அத்தியாயம்.

## அநித்தியதெரிசனம்.

எல்லாமிறப்பதேயியல்பதாகையாற்-

பொல்லாவநித்தியமெனவேபுகறல்.

௫எ. பாலனும்பருவமாயும் பன்னியகுமாரமாயுங்
கோலயெவ்வனமுமாயுங் குலவியநலமுமாயும்
வாலியசெல்வமாயும் வலியுடனனைத்துமாயுஞ்
சாலவேநிலைஞாலத்துத தானிலையாமையன்றே.

௫அ. தேடியபொருளுமாயுந் திகழ்ந்திடுகலவிமாயு
நாடியவீரமாயு நலந்திகழ்குணமுமாயுங்
கூடியசுற்றமாயுங் கொண்டாடுமனைத்துமாயு
நீடியஞாலமெல்லா நிலையாமைமயமென்றோ.

௫கூ. இந்திரன்செல்வமாயு மிமையவர்பதங்கண்மாயு
மந்தரம்பொடியாய் வீழு மறிகடல்வறளதாகுஞ்
சந்திரனிரவிமாண்டு தரையதுமழியுமென்று
லிந்தநீர்க்குமிழியாக்கையியல்பினையிசைத்தற்குண்டோ.

௬0. நீரின்மேலெழுத்தைபதனின்மேலெழுந்த மொக்குளேநிகரில் பேய்த்தேரைக், காரின்மேன்மின்னே யென்னுடம்பென்று கருதினேன் கடைப்பிடிகாணேன், மேருவேவில்லாய்த்திரிபுரமெரித்த விகிர்தனேமேவுவெண்காடா, யாருநேரொவ்வாவை யனேயடியேன் செய்வதென் னருளிச்செய்யாயே.

ஆகையால் கருவிலுங் கெற்பத்திலும் பிறக்கிலும்,பிறந்தபிறகு,நிமிஷம்-நாழிகை-தினம்-மாசம்- வருஷம்-ஒன்றுமுதல் நூறளவாக நிச்சயமில்லாமல் ஆதிபவுதீகம், ஆதியாத்மீகம ஆதிதெய்வீகமாகிய மூன்றிஞல் மாணமடைந்தும், நால்வகை யோனி யெழுவிதத்தோற்றம் - அ௯ - லக்ஷம் - அச்சிலும் நிசமில்லையாலுங், காண்பானுங் காணப்பட்ட பொருளு மழிகையாலுஞ் சாகிறதேமெய், இருக்கிறதேபொய்யாகையாலும், தாய்-தகப்பன்-பிள்ளை- பெண்டீர் முதலானபேரும்தான் தேடினதிரவியமுதலான பண்டபதார்த்தங்களும் தனக்கு முன்பின்போனல், நடுவேயிருக்கிறதானும் போவானெ

ன்றும், நிமிஷ நிமிஷார்த்தமுதல் சங்காரங்களுஞ் சர்வசங்காரங்களும் வந்து அழிகையாற் பிண்டாண்ட மனித்தியமென்றறிக. நித்தியமேதென்றால் பிரம மொன்றுமே நித்தியமாகும். மற்றதெல்லா மனித்தியமென்றுணர்ந்து கொள்வாய்.



௲௩-வது—அத்தியாயம்.

## வீ டு ப ற் று.

வீடுபற்றுவதுவிடுவதுந்தொடுவது நீடியசீவனிலையாமென்றது.

காலவரம்பின்படிசீவன்தூலதேகத்தை விட்டுப் பிரிவதெப்படி யெனறால், சர்ப்பமானது, மாசமாகிய காலவரம்பிற்றவறாது தன்னுடலைமறைத்துக் கொண்டிருக்கும் சருமத்தைவிடுத்து வெளிப்படுவதுபோலும், பட்சிகள்தனக்குரியகருவானமுட்டையினிடத்தில் காலவளவின்படிதங்கி வெளிப்படுவது போலும், சொர்ப்பனவஸ்தையிற் கண்டகாக்ஷிகளும், வியவகாரங்களும் விழித்தானைவிட்டு விலகுமாறுபோலுமென்றறிக. மலர்சென்றவிட மெல்லாம்,மணஞ்சென்று நின்றாற்போல் மனஞ் சென்று நின்றவிடத்தே சீவனுஞ்சென்று புரியட்டக சரீரத்தோடு கட்டுண்டு நரகமோக்ஷ, பலப்பிராப்திகளை அடைந்து வினைச்சேடத்திற்கேற்க மீண்டுந் தூலதேகத்திற் பிரவேசிக்குமென்றறிக.அஃதெப்படிபோலுமென்றால்,மனிதர்க்கு குளிர்முதலானதைநீக்குஞ் சட்டைகிழிந்தவிடத்தில்வேறுசட்டை கொண்டபின் அதனைவிடுவார்போலென்றறிக.

௲௧. வாக்கைமுதலாயுள்ளகரணந்தன்னை மனத்தினுடன் கூட்டியந்
தமன்னார்தம்மைப், போக்கரியபிராணனுடன்கூடியங்கேபொ
ருளனைத்தும்பொதிந்துகொடுபுறப்படுங்கான், மூக்கினொடே
வாக்கினொடேமுன்கணொடே முதல்புகிருஞ்சென்னியொடே
யுடலைவிட்டுச், சாக்கியொடே கூடிக்கொலடுலகமெல்லாஞ்ச
ஞ்சரித்துத்திரியும்வனாஞ்சாற்றலாமே.

௲௨. விட்டிடுந்திசையிற்செய்த வினைதனக்கள்விற்சென்று
கட்டிடுங்காயந்தன்முன் கனவுபோற்புளரக்கண்டு
விட்டிடுங்கருத்தங்குற்று வினையுடன்காலங்கூட்டிக்
கட்டிடும்பாத்திரத்தைக் காரணநீட்டுமாயை.

௲௩. தோயுமுன்னுடலைவிட்டுச் சூக்குமத்தோடும்போது
வாயுவாகனமாய்த்தங்தை வாயுவினோடுபுக்குப்

பாயுமாதாவிடத்தே பாய்ந்துபின்பாயசத்தி
லேயுமிவ்விருநீர்மெய்யா மிட்டவித்தெழுந்தாங்கன்றே.

சுச. உறக்கம்வந்தெய்தும்போது மூனுயிர்வாழும்போது
மிறக்குமப்போதுந்தன்னோ டிசைவின்றியெய்துமாபோற்
பிறக்குமப்பெற்றிதானும் பேணுநால்வகையுந்தன்னை
மறக்கவந்தியாவுஞ்சிவன் மறுதியின்புணர்ப்பினன்றே.

சுரு. பிறப்பனவுந்திரிவனவும் பிரிவனவுமறைவனவுந்
துறப்பனவுமிவையைந்தாற் சுழலுறுங்கட்டாறகைபோற்
பிறப்பனவுந்திரிவனவும் பிறிவனவுமறைவனவுந்
துறப்பனவுமைவகையாற் சுழலுமுலகுயிர்தானே.

சுசு. கருவினிற்றோன்றுயோனி காட்டத்திலுயிர்கள்போல
வுருவினைக்கொண்டுநீங்கு மும்பர்தந்தோற்றமெல்லாந்
தெரிவுறிற்றீபமோங்கிச் செறிதல்போற்சிவன்றன்னில்
விரிவுறவோங்கலின்றிவிடுவதோர்காலமின்றும்.



கஉ-வது—அத்தியாயம்.

## பிதுராயனதெட்சணாயனம்.

### தெட்சணவயனஞ் சீவன்போம்வழி.

இப்படிசீவன்விடுவதுந்தொடுவதுமென்றறிக.

இந்தபூமியின் கண்ணிலே ஏரி குளந் தடாகங் கிணறு நடைவாவிமுத லானதுந் தோப்புமுதலானதும் அன்னதானமுதலான ஷோடசதானங்களு ம் ஜோதிஷ்டோமயாகம் அஸ்வமேதயாக முதலெல்லா தர்மங்களும் பண் ணினவன் சீவன் விடும்போது இடதுபுறத்தி விடைநாடியாலே சீவன் போ கையால் தெட்சணாயனமென்றாயிற்று. இந்தநாடியாலேசீவன்போகும்பொ ழுது மேகதேவதைபக்கல்விட, இது இராத்திரியில்விட, இது கிருஷ்ணப க்ஷத்தில்விட, இது தெட்சணாயனத்தில் விட, இது வருஷத்தில் விட், இது பிதிர்லோகத்தில்விட, இது ஆகாசத்தில்விட, இது சந்திரனில்விட, இந்தக்கிர மத்தாலே சொற்கலோகமேபோய் இந்திரன்சமீபத்திலே யிருந்து போகங்க ளைப் புசித்து இப்படிமுன்சொன்ன மேகமுதலான தேவதைகளனைவரும் ஒன்றொன்றாகத் தாண்டவிட, மேலேறிப்போய் இந்திரபோகம் புசிக்கும்

போது இந்தப் பிரியவிஷயபோகம் க்ஷயமாகுதென்றும், அந்தச் சொற்கத்திலே அதிசயபோகங்களைக்கண்டு பொறாமையும் இத்தைவிட்டுப் போகிறோமென்கிற துக்கத்தினாலே யங்கழுந்தி யிருந்த போகந்தீர்ந்தாற் புனராவிர்த்தியாகத் திரும்பிப் பிறப்பான். அஃதெப்படியென்னில், முதலாகாசத்திலிறங்கி, இதுவாயுவி லிறங்கி, இது தூமத்தில் விட்டு, இது மேகத்தில் விட்டு, இது விருஷியில்விட்டு, இது அன்னத்திலிறங்கி இது பஞ்சபூதாத்மீகமானஷட்ருசிகளோடுங்கூடிப்புசிப்பான். இதைப் புசித்த சீவனுடைய உதராக்கினியினாலே பாகமாய் இது திப்பி ரஸமென்று இரண்டுவிதமாம். இதில்திப்பியானதுபன்னிரண்டுதானத்திற் பன்னிரண்டுவிதமலமாம். இனிரஸமானதுதூலமென்றுஞ் சூட்சுமமென்றும் இரண்டுவிதமாம். இதில் சூட்சுமரஸத்தாலே பிராணுதியிந்திரியம் அந்தக்கரணங்களுக்குப் பலமுண்டாகப்போஷிக்கும். இனித்தூல ரஸமாவது சத்ததாதுக்களாய் வற்திக்கும். இதில் சீவனானது தாதுமயத்தோடே கூடிப் புருஷ சுக்கிலத்திலே மூன்றுமாசமிருந்து புருஷ ஸ்ரீசையோகத்தில் ஸ்ரீ ருதுவானதுமுதல் (௰௫) நாளிற் காலகர்ம வசத்தால் பெண் கற்பா சயத்தில் விரோதமில்லாமல்வாயுவசத்தாலே பிரவேசிக்கும். இதுபிண்டோற்பத்திப்பிரகாரம் பிறந்துதிரும்பச் செனனமரணப்படும். இதைப்பிதிராயணமென்றுஞ் சொல்லுவார்கள்.

உதாரணம்.

கூஎ- அருமறைகள்விதித்தவழி யிரண்டவத்தை யறைந்திடினுத்தரந்தெற்காமயனமாற்க, மருவுமதிற்றெற்கயனம்புகைகறுப்பு மிருளாரங்கற்பாகத்தோடுங்கூடி,விரவியவக்காலதேவதைகடம்மைமேவியவாமீண்டிடுவாமீளாதாபோ, லுரவியவுத்தரமாற்கபரிசையுந்தானுரைத்திடுவனத்தனையுமுணர்கவையா.

இது ஆடிமாசமுதலாறுமாசமுந் தெட்சணாயனமென்றுஞ் சொல்வார் இது பிதுராயனமென்றும்பேர்,

---

கூரு-வது—அத்தியாயம்.

## தேவாயன உத்தராயனம்.

நன்மார்க்கத்தால் நற்கதிசெல்ல லுன்மார்க்கமதாமுத்தராயனமே.

இனிச் சகுணப்பிர்மமான பிர்மா விஷ்ணு ருத்திரன் சூரியன் முதலான பேரிடத்திற் பத்தி ஞான வயிராக்கியமுள்ளபத்தர்கள் வலதுபாரிச நாசியிட

த்திலே பிங்கலையில் சீவன்விட்டால் முதல் சுவாலையில் புகுந்து இது தினத் தில்விட,இதுசுக்கிலபட்சத்தில்விட,இது உத்தராயனத்தில்விட,இது வருஷத் தில்விட, இது வாயுவில்விட,இது சூரியனில்விட,இது சந்திரனில்விட, இது மி ன்னலில்விட,இது இந்திரனில்விட,இது பிர்மாவில்விட,இது விஷ்ணுவில்விட, இது ருத்திரனில்விட, இவர்க ளந்தந்த லோகங்களிலே போய் அவரவர் வாகனங் காமதேனுக்கள் போல் சாலோக சாமீப சாரூபங்களைப் பெ ற்றிருப்பார். பின்பு பிரளய சங்காரகாலத்தி லந்தந்தத்தேவதைகளோடே கூடிச் சங்காரப்படாமலிருப்பார். பின்பு வயிராக்கியத்திலாவது சம்மியஞா னத்திலாவது சன்மார்க்கமானசெனனங்களையெடுத்துப்பிரத்தியக்ஷ ஞானோ தயத்தினால் ஏகசமோக்ஷ மடைவாரென்றறிக.

௬அ. அழலினொடும்வெளியினொடுமகத்தினோடு மதுக்குடலாமும் பக்கந்தன்னினோடுங், கழிவில்லாவறுதிங்களான்மிடிற்புக்குக் கடுகிய வாயுவையடைந்துவாயுவாலே, கழலவிடவிரவியினூர்மண்டலத்தை க் கழித்துப்போந்துயிந்துவினுருலகதனைக்கண்டுமீப்போய்ப்,பொ ழிகின்ற வயனுகிற்போய்மீளவின்றிப் பூசுரர்களெல்லாரும்போவர் காணே.

௬௯. அங்கியொடுபகல்வெண்மையாங்காலதேவதைகளவர்களோடு தங்குமறுதிங்களிடையுத்தராயணஞ்சார்வார் மறித்துஞ்சார்கார்,கங் குல்புகைகறுப்பென்னுங் காலதேவதையடைந்துபிறக்குங்கண்டா, யெங்குமறுதிங்களிடை தெக்கணயனத்திறந்தயோகியென்பான்.

இனி யோகீஸ்வரர் உத்தராயனமார்க்கஞ் செல்லும்படி அஷ்டாங்க யோகத்தினாலே இரேசகாதிசப்த பூரணயாமத்தாலே சுழிமுனைநாடிமார்க்க த்திலே சிரோரந்தரத்தாலே நாடிமார்க்கமாகிற வலமிடமில்லாமல் சீவன்விட் டபேர் சுவேச்சா லோகப்பிராப்தியையும், அல்லது சற்சந்தனவனிதாதிபோ கங்களைநீக்கி நிஷ்காமியாகி இருந்தால் தத்துவாதீதமான சிவனையுமடைவார். இதெல்லாம் ஒருவிதம்.

எய. விதித்ததாகமமறுவகைத்தவத்தையும்விளம்பில்மந்திரத்தோ டு, மதித்தவப்பதவன்னஙற்புவனதத்துவங்களையவைதன்னை, விதி த்தவாறதுவிளம்பியவகைகளும்விதியெல்லாமுடிவிற்போ, யுதித்த வன்மையிற்கொண்டிடும்பரிசது முண்மையாமுணர்மைந்தா.

எக. நின்றவிடத்தினின்று நீங்கிவேறிடத்தைநோக்கிச்
சென்றிடுநெறியதாகுஞ் செப்பிடிறத்துவத்தா

ஞென்றவமாற்கமங்கே தென்றிடிவிருஞ்சிவத்தோ
டொன்றிடவுயிர்கள்செல்லு மொண்ணெறியாகுமன்றே.

௭௨. செடிபடுமாயர்கூட்டங் தேசிகன்சிரமத்தாலே
யடியெடுத்தடிவைத்தாற்போ லகிலதத்துவங்களெல்லாம்
படியவிட்டேறிமென்மேற் பரந்தபாவனையாற்பெத்த
முடலைவிட்டுயிரைமூத்தி கூட்டிடுநெறியம்மார்க்கம்.

௭௩. திகழுமாமறைதெற்கொடுத்தரமெனத் திகழ்த்தியவகைசெப்பி, லகழுமாசுரந்தெற்கதுற்பவத்திருட் கேதுவாமதுக்ன்ம, நிகழு தெய்வவுத்தரந்திகழ்கீடொளிநிகழ் நிவர்த்தியதென்றே, புகழுமா ரணமிருநெறிமுடிபொருள் போதமாய்விடலேகாண்.

இப்படியோகசித்தர் ஆருதாரமுதல் அதிச்சக்கிரபுவனங்களேயும், ஆறத்துவாவையும் ஒன்றைவிட்டொன்றிலேறிப் போகிறமாற்கமாவது அனலாகிற மூலாக்கினியிற்புகுந்து தினமாகிற சுவாசத்திற்புக்குச்சுக்கிலநாடியிற் பிரவேசித்து உத்தராயனமாகிற வலமிடஞ் சாதித்து வருஷமாகிறகாலசக்கரத்திற்புகுந்து வாயுவாலே சூரிய சந்திர மண்டலம்புக்கு அங்குள்ளமின்னல் பிரகாசம்புகுந்து இந்திரபோகமான அமிர்தபோகங்களேப் புசித்துப் பிர்மாமுதலான அதிதேவதைகளேக்கண்டு அப்பால் ஈதெல்லாமிறந்தவிடத்தில் மோட்சமடைவார்களென்றறிக.

---

## ௩௬-வது—அத்தியாயம்.

## ஞானிகள்கதி.

நிசமோட்சம்பெறல்-நீள்ஞானகதியாம்.

ஆசாரியன்அனுக்கிரகவாக்கியத்திருல் நேதிநேதிசெய்து இதுநீயல்ல இதுநீயல்லவென்று ஒன்றைப்பற்றி யொன்றைவிட்டு மேலேறி மும்மலமுமெண்ணிறந்த தத்துவமு நீங்கிச் சிவபரவயிக்கியமாகிப் போகையால் இதுவேயுத்தராயனமென்றறிக. இவர்கள் இடைபிங்கலை சுழிமுனை நவத்துவாரங்களிலும், நல்லதலம் பொல்லாததலங்களிலும், நல்லகாலம் பொல்லாதகாலத்திலேயாகிலும், நினைவோடே நினைவுகெட்டாகிலுந் தேகம்விட்டால் சுழிமுனைப்பலனல்லாமல் நிசமோட்சம்பெறுவார்களென்றறிக.

## ௬௭-வது—அத்தியாயம்.

## பாவிகள்கதி.

### படுநரகாவதுபாவிகள்கதியே.

சன்மார்க்கமார்க்கயோக ஞானங்கள் தானதர்மபரோபகாரமில்லாமல்பாதகரானபாவிகள் அட்டையைப்போலும், சாணளப்பான புழுப்போலும், ஒருதலைப்பற்றி யொருதலைவிட்டாற்போல யாதனுசரீரத்தில் குதகுய்யத்தாலே சீவன்விட்டால் நரகத்தில் யமதண்டனைப்படுவார். இதல்லாமல் மத்திமசீவன்கள் குத குய்யத்தாலே சீவன்விட்டால் பிசாசுலோகம்புகுவார். நாவாலேவிட்டால் தயித்தியலோகம்புகுவார். மூலையாலேவிட்டால் காமதேனுலோகம்புகுவார். கண்ணாலேவிட்டால் சொற்கலோகம்புகுவார். மூக்காலேவிட்டால் மத்தியலோகம்புகுவார். காதாலேவிட்டால் பிதிர் லோகம்புகுவார். இப்படியேபல வேற்றுமையாற்புகுவா ரென்றறிக. அற்பபுண்ணியம் வெகுபாவங்களாலு மிப்படிக்கொத்தலோகம் புகுவாரென்றறிக. இதனை அந்தரங்கத்திலேஅத்துவாவென்றும், பாயரங்கத்திலே உத்தராயன மென்றுந் தெட்சணாயனமென்றும் வேதாகமஞ்சொல்லுமென்றறிக.



## ௬௮-வது—அத்தியாயம்.

## சமயபேதங்களில் நின்றபேர்நிலை.

### சமயநிலையினிற்சாற்றுதுமுறையே.

கவுளயாமளாதிகள் பசாசலோகம்புகுவார். சார்வாகர் சோதிஷர் பூர்வமீமாங்கிசர் தூலபூதாந்தரபுவனம் புகுவார். ஸ்மாத்தர் தன்மாத்திரைலோகம்புகுவார். இந்திரியசைதன்னியர்இந்திரியபுவனம்புகுவார். அந்தக்கரணசைதன்னியர் அந்தக்கரணபுவனம்புகுவார். பாட்டன் நையாயிகன் வைசேஷிகன் புத்திதத்துவபுவனம் புகுவார். சயினருஞ் சத்துவசம்போகவாதியுங் குணதத்துவபுவனத்திற்புகுவார். பாஞ்சராத்திரி பிரகிருதிபுவனத்திற் புகுவார். சாங்கியர் பிரகிருதிபுருஷ புவனத்திற்புகுவார். நியாயவைசேஷிகர் சமஸ்தக புவனம்புகுவார். அத்வைதிகள் புருஷதத்துவபுவனம் புகுவார். புராணிகர்இராகபுவனம்புகுவார். காபாலிகள்காலபுவனம்புகுவார். உபபத்தியசாமிவாதியும் ஆவேசசாமியவாதியு மாயாபுவனம் புகுவார். மகாவிரதர்வித்தைபுவனம் புகுவார். சிவப்பிரயோக்கியகத்துறுத்துவவாதியும்வீசுவரகவுதாசன்னியகத்துறுவாதியும் ஈசுவரபுவனம்புகுவார். காருடதெட்சணவாம பூததாந்திரிக

ர்நிவர்த்தியாதிபுவனத்திற்புகுவார். சுத்தசாத்தேயர்சத்திபுவனத்திற் புகுவார். சைவர் பரசிவ சமானமிருப்பர். சகலமதாதீதராய் நிஷ்டா னுபோகசமாதீ சுவரரானபேர்நிச்மோட்சமடைவார். இதுசித்தம். இப்படியென்றறிக. இனி ப்பிதிராயனமாவது, கீழாலவத்தை போலுந் தேவாயனமேலாலவத்தைபோ லுமென்றறிக. திரும்பி செனனமரணத்துக்கு ஏதுவாகிறசமயங்கள் முத லெல்லாந் தெட்சணாயனபிதிராயனமாம். இனிசெனனமரணமில்லாத சம யங்கள் முதலெல்லாமுத்தராயனதேவாயனமாம். இப்படியண்டத்திலும்பி ண்டத்திலுமென்றறிக.

---

## கூ-வது — அத்தியாயம்.

## ஞானிமகாத்மியம்.

ஐவரும்போற்றுதற்-கவனுஞானியைத்

தெய்வமகாத்மியந்தேறியுரைத்தது.

எச, அடியறிந்தாறியமர்ந்தவரைம்புலவாசலெல்லா
மொடியெறிந்தார்மனமுள்ளத்தமிர்தினையுண்ணவைத்தார்
முடியெறிந்தார்முன்பு செய்வினையன்றிமற்றில்லையென்று
வெடியெறிந்தார்வேதவான்பொருள்பற்றியவித்தகரே.

எரு. கன்றுதலின்றியாறிக் கழிந்தகாமத்தனாகி
யொன்றறவெவ்வுயிருந்தன்னை யொக்கவேயுணருஞானி
சென்றதோர்நெறிபின் செல்வன் சென்னிமேலவன்காற்றூளி
தூன்றுமேற்சுத்தனாவேனெனுமிது துணிவிற்கொண்டே.

எகூ. அத்துவிதந்தானாகுமவிகற்பத்தடைந்தபோதே
புத்தியினினைப்பும்போகும் போகுமிப்பிறப்புநேரா
வெத்திகழ்வாலும்பேத மின்மையாலிறையேயென்னுந்
தத்துவவித்தையென்றன் றலையினால்வணங்கத்தக்கான்.

எஎ- ஒழுக்கமேபுரிந்தோனாத லதனைவிட்டொழிந்தோனாத
விழுக்கஞ்செய்மூர்க்கனாதல் பண்டிதனாதலெல்லணிற்
பழிப்பருஞானந்தன்னின் முயல்பவன்பணியத்தக்கோன்
றொழுத்தகுஞானியென்று சொல்லவேண்டுவதுமுண்டோ.

சய-வது—அத்தியாயம்.

## ஞானிபூசை.

ஞானிபூசையேநலனெனக்கூறுதல்.

எஅ. மன்னனைமனிதரெல்லா மணிமன்றுதனத்துள்வைத்து
மன்னியவுபசாரத்தால் வந்தனைசெய்யுமாபோற்
பன்னருமறையினந்தம் பயின்றநன்ஞானிதன்னைப்
பொன்னுலகதனிற்றேவரிருடிகள்பூசைசெய்வார்.

எகூ. யாவர்தன்னில்லில்ஞானி யெய்திடுமவனைக்கண்டு
மேவியபிதிரரெல்லாம் விரும்பிநின்றுடாநிற்பர்
பாவியநரகமென்னும் பற்றினையொருவியென்று
மோவிலாவீடுபெற்றே மெனவெழுமுவகையாலே.

அய. கரையின்மெய்ஞ்ஞானவின்பப் பிரமமாங்கடலினுள்ளே
யொருவனதுள்ளமொன்றி யொடுங்குமேலவனைப்பெற்றாள்
பெரியபேறெல்லாம்பெற்றாள் பேணுமக்குலமுந்தூய்தாம்
பொருவிலோனிருந்ததேசம் புண்ணியபூமியன்றே.

அக. சிற்சொரூபத்துஞானி சேர்ந்திடமிகவுமென்றுங்
குற்சித்ததானமேயுங் கோடிவிற்கிடைக்குமொங்குந்
தற்சிவத்தானஞ்சுத்தந் தபோவனந்தீர்த்தமாகு
நற்சுடர்புக்கிடந்தா னன்மையால்விளங்குமாங்கே.

அஉ. யாதொருபொருளையெல்லா வுயிர்களுமிருள்போற்காணு
மோதருஞானியத்தை யுளங்கையிற்கனிபோற்காணும்
யாதொருபொருளையெல்லாவுயிர்களுமென்றுங்காண்பர்
காதலில்ஞானியத்தைக் கண்ணிலுற்றெரியக்காணான்.

அந. அஞ்சையுமறுத்துமிக்கோ ரடிதொழுதெழுவாராகில்
வஞ்சமாயனத்தரோனு மதித்துறவணங்கவேண்டுஞ்
செஞ்சடையொருவன்கண்டஞ் சேர்தரப்படுதலாலே
நஞ்சையிவ்வுலகமெல்லாந் தொழப்படுநலத்ததன்றே.

அச. அழுக்குடைசாதியோரு மடைந்துமெய்ஞ்ஞானிதன்னை
விழுப்புடன்றலைவராவர் வேதகக்குளிகைசேர்ந்த

விழுக்குடையிரும்புஞ்செம்புமிலங்குசெம்பொன்னுமாங்கை
யொழுக்கமோடவன்ருள்சேர்மினேைக்குவீடெய்தலுற்றீர்.



சக-வது—அத்தியாயம்.

## ஞானிசீலம்.

ஞானிசீலமே நன்னடக்கை நவிற்றல்.

அரு. நல்லமுதூட்டினு நஞ்சையூட்டினுந்
துல்லியமாக்கினுந் தொழிலைமாற்றினுங்
கல்லினும்பொனனினு மொத்தகாட்சியார்
சொல்லிறந்தோரெனத் தொகுத்ததெங்கணும்.

அசு. காலமுமகாலமுங் கருதலின்மையுஞ்
சீலமதொருவராற் றெரியொணுமையும்
பாலவுன்மத்த பசாசமாவது
மேலவர்தம்மிலக் கணத்தின்பெற்றியே.

அஎ. வேதனைப்படுத்தினும் விடினுமொப்பவர்
சாதலும்வாழ்தலுமொக்குந் தன்மையர்
யாதொருபொருளினு மிசைவிலாதவ
ருதியமதுதனை யுணர்ந்தவுத்தமர்.

அஅ. தெரிதருமொழியிடைச் செவிடர்போலவு
முருவுகடெரிவிடைக் குருடர்போலவும்
பரிவுடையமுதிடைப் பாலர்போலவும்
பெரியவர்தம்மிலக்கணத்தின்பெற்றியே.

அகூ. வையினும்வாழ்த்தினு மலர்கொண்டேற்றினும்
வெய்யவாயாவிடை வீழநூக்கினு
மெய்யினுமெறியினும் யாதுசெய்யினு
நைவொடுமகிழ்விலாஞானி சீலமே.

கூ0. செத்திலேன்புகழிலேன் செஞ்சாந்தணிகிலேன்
மத்தகத்தேயுளிநாட்டி மறிக்கிலேன்

வித்தகஞ்சிவிதிவழியல்லது
தத்துவஞானிகடன்மைமகுன்றுரோ.

கூக. ஆனையுழக்கிலே னம்பூட்டுறுக்கிலேன்
கானத்துழுவைகலந்துவிளைக்கிலே
னேனப்பெரும்பன்றியெங்குமடக்கிலேன்
ஞானத்துழவினை நானுழுவேனே.

கூஉ. கணக்கன்னுங்கல்விக்கண்ணுங் காரியத்தியல்பிற்கண்ணு,
மணக்கண்ணுமகளிர்கண்ணு மாநிலத்தனைத்தின்கண்ணு,
மிணக்கண்ணுமிளைஞர்கண்ணு மெங்கணுமியோகிநோக்கிற் [ம்.
பிணக்கண்ணும்பேயிக்கண்ணும் யானைக்கண்ணும்போலும்யாவ

கூங. மதியார்மனைவாழ்வுகள்மன்னரையுந்
துதியாரவரோடுதுடக்கறியார்
நிதியான்மகிழார்நினைவற்றவிடம்
பதியாகியதத்துவபராயணரோ.

## சஉ-வது—அத்தியாயம்.

## ஞானியுண்பலன்.

உண்டதுஞானியுலகெலாந்திருப்தியாம்.

கூச. ஓதியபரமயோகியுண்ட தெவ்வுலகுமுண்ட
தாதலாலவனைப்பூசித்தவனுலகங்கள்மூன்று
கோதிலாச்சிவன்மாலோடுங் கூடவேகுறைவில்பூசை
காதலாற்செய்தானென்றே யருளினன்கருணைவாரி.

திருமந்திரம்.

கூரு. தண்டறுசிந்தை தபோதனர்தாமகிழ்ந்
துண்டதுமூன்றுபுவனமு முண்டது
கொண்டதுமூன்றுபுவனமுங்கொண்டதென்
றெண்டிசைநந்தி யெடுத்துரைத்தானே.

அறிவானந்தசித்தியார்.

௬௫. பரிந்தொருகோடிமறையோர்க்குப்பூமிபொன்பண்புடனே
வருந்துமிடிகெடவைப்பது தன்னின்மறைமுடிவு
தெரிந்தமெய்ஞ்ஞானிக் கொருபிடிபிச்சைசிறப்புடனே
பொருந்தவமைப்பதற் கொவ்வாதெனமறைபோற்றிடுமே.

திருமந்திரம்.

௬௭. நிலமத்தனையே சிவஞானிக்கீந்தால்
பலமுத்திசித்தி பரலோகமெய்து
நிலமத்தனைபொன்னை நிர்மூடர்க்கீயிற்
பலமுமற்றேபர போகமுங்குன்றுமே.

நாலடியார்.

௬௮. கடிப்பிடுகண்முரசங்காதத்தோர்கேட்ப
ரிடித்துமுழங்கியதோ ரோசனையோர்-கேட்ப
ரடுக்கியமூவுலகுங் கேட்குமேசான்றோர்
கொடுத்தாரெனப்படுஞ்சொல்.



௪௩-வது—அத்தியாயம்.

## ஞானியேவல்.

ஞானியேவலா னற்புதமாமெனல்.

அறிவானந்த சித்தியார்.

௬௬. துன்னுமெய்ஞ்ஞானிதனக் கேவல்செய்தவர்துஞ்சிலவ்வான்
மன்னும்விமானஞ் சிவலோகமேற்றமகிழ்ந்தங்கது
தன்னிலொருகற்பகோடிபின் வைகுந்தந்தன்னில்வந்தே
யுன்னுமொருகற்பகோடியுறைந்தய னூர்புகுமே.

௭௰. உறைந்தயனூரினெடுங்காலம் வாழ்ந்திந்திரனுலகிற்
செறிந்ததிகாலமியக்கர்கந்தருமென்னதேசந்தன்னி

லறந்தருமானுடமாகிக் குருபரர்க்கன்புசெய்தே
சிறந்தமுன்னேவற்குறை முடித்தேமுத்திசேர்வர்களே.

௱க. நலமுடைஞானியிங்கார்மனையாயினு நன்னிலவன்
குலபிதிரானவர் கூத்தாடுவருற்றுக்கோதறுநற்
றலமதில்வைத்துப சாரங்கள்செய்திடிற்சாருநர
கிலேநமக்கென்று பரகதிசேர்வரொனுமறையே.

வேறு.

௱உ. அஞ்சிபாசைமுதலாய வவலபேதமனைத்தினையுந் [த்தூங்கும்
துஞ்சிப்பிறக்குந்தொழிற் கிளைத்துத்தோன்றாத்துணைவனடி
விஞ்சைக்குகையில்வீற்றிருக்கும் விரதவேதியோகிதனை
நெஞ்சத்தவரைநினைத்தாலு நிரந்தவினைகணீங்கிடுமே.



சச-வது—அத்தியாயம்.

## ஞானியை யிகழ்ந்தோர்கேடு.

ஞானியையிகழ்ந்தோர் நரகத்தாழ்வகை.

௱௩. தேவர்க்குந்தேவனாகித் தெரிதருஞானிதன்னைப்
பாவத்தினொருவன்மிக்குப் பன்னியநிந்தைசொல்லிற்
றுவற்றவயன்மாலீசன் றன்முதல்சகத்தியார்க்கு
மேவற்றகொடிய நிந்தையெனமறையுரைக்குமன்றே.

௱௪. தன்னுணர்பரமயோகி தனக்கிழுக்கதனைச்சொல்ல
மன்னுறுமறையோர்தம்மை வதைத்தபாதகத்திற்கோடி
சொன்னதுகெட்டலோகத் துணிதல்கோவதையிற்கோடி
யென்னவேமறைகளெல்லா மெடுத்துரைசெய்ததன்றே.

௱௫. தத்துவவித்தாமேலோன்றனக்கொரு தீமைதன்னைப்
புத்தியானினையினுந்தான் பொருட்களவதனிற்கோடி
மத்தமாமவரிற்கூடல் மத்தியபானத்திற்கோடி
யொத்தபாதகங்களென்றேயுரைத்தனமறைகளன்றே.

௱சுசு. தோமறுஞானியைத் துகளுரைத்தவ
ரேமுறக்கேட்டவரிசைந்திருந்தவ
ராமெனமதித்தவரவரிற்கூடியோர்
தாமிவர்பஞ்சபாதகரிற்றன்னியோர்.

௱எ. உள்ளத்தேயுணர்வுகட்ட யோகியைநிந்தைகேட்கிற்
றுள்ளோத்தன்செவிபுதைத்துத்தூரத்தாம்போவதேயாங்
கள்ளத்தார்தம்மைக்காணல்கருதுதல்மொழிதல்வேண்டா
மள்ளம்பாதகரைக்கோறலறத்தையுய்வித்ததன்றே.



சரு-வது—அத்தியாயம்.

## கூடாவொழுக்கம்.

ஞானிகள்விஷய நன்றெனவருந்த
லானகூடாவொழுக்கமாவதுவே.

அறிவானந்த சித்தியார்.

௱அ. தனக்குத்தன்னெஞ்சது சான்றுயிருக்கவுந்தானிங்குண்மை
யனைத்துமுற்றுமென்றரும் பஞ்சபாதகராய்த்தபுரை
யெனைத்துற்றுக்கேட்டுப் பரிசித்திருந்தவிருவருந்தான்
மனத்துக்கமுற்றுயெரிவாய் நிரையமயங்குவரோ.

௱சுூ. விரிந்தநல்வேதபுராணங்களாகம மிக்ககலை
தெரிந்துபடித்துப்பொருட்செப்பியன்னிலே சேர்ந்துநில்லா
ரிருந்தசண்டாளரி லேற்றங்கழுதையெனிற்குங்குமம்
பரிந்துசுமந்துபில் வஞ்சம்பன்னுதபயனெழிலே.

௱ய. ஞானமாமிலிங்கந்தம் முளத்தின்றி ஞானிகள்வேடமேமருவி
யூனதேவளர்த்தங்குண்டி மைதுனத்தின்பொருட்டிறவுழிதரு
கின்ற, வீனமாஞ்சோரஞானிகணிரைய மெய்துவரொய்தியங்
குழைத்துத், தீனமாந்திரியயோனியையடைந்து செனிப்ப
துமரிப்பதாவர்களோ.

௱௰௧. விடையவேலையிலிட்ட சாரத்தனையிமிக்குச்
சுடருநற்றுறவிற் சோராவொழுகியதியின
மிடையினற்புதர்மறைந்துபுட்படுத்திடும்வேட
னடையுநற்பதமவன்றனதறந் திரிந்திலனால்.

வாக்குமனாதீதமான பொருளா யாதியந்தமில்லாததான ஆனந்தத்தைப் புசித்தால் அவர்கள் கானல்நீர் போலான விஷயங்களை விரும்பிப் புசிக்கில் அவர்கள் நாய்க்கும்ஊர்ப்பன்றிக்குங்கழுதைக்குஞ்சரி. இப்படியேயென்னிற் பாயசம் பண்ணி முன்னேயிருக்க அப்பாலாயிருக்கிற மலநாற்றம் பிடித்துப்போய்த் தின்கையா லதற்கொப்பென்றறிக. இனி அதிவன்னச்சிரமிகீழுறிற்சொல்லொணுப்பதிதன் நாலாசிரமத்தாரு மந்தந்தவாசிரமங்கள்விட்டுக் கீழுறிற் பதிதனய் நரகில் வீழ்வார். உண்மைப்பொருளைக்காண வொருப்படும்பொழுது இகபர மருவருத்துத் துறந்தாரொன்னிற் பரவமிர்தை யுண்டவர் விஷயத்தில்நின்றுற் பரத்தையறிந்தவரல்ல நரகத்திலும் விழுவான் நெய் பால் ஷடு ருசியையுண்டவன் தவிட்டுக்கூழுக்கிச்சியான்போல ஞானவமிர்தம் புசித்தவன் விஷயத்தி லிறங்கானென்றறிக. இறங்குவானுயின்கூடாவொழுக்கமென்றறிக.



௪௬-வது—அத்தியாயம்.

## பிரபஞ்சவுற்பத்தி.

பிரபஞ்சவுற்பத்தி பேதமாம்வகைசொலல்

௱௰௨. அலகில்கடைச்சமையிகடா னகிலமுதல்கொளுமாறு
நிலவியசிர்மறைமுடிவு நிகழ்த்தியிடும்பரிசதுவுங்
குலவியநற்சிவாகமங்கள் குறித்துரைத்தவதுதானு
மிலகுதவத்தெழின் முனியேயிசைத்தருளியிடவேண்டும்.

௱௰௩. சாற்றுமாயத்தமிகன்சகவிதைதான் சதுட்கோடிசூனியமென்னு, மேற்றுபுத்தியாஞ் சித்தெனவியோக வாசானுமிசைக்கின்றுன், மாற்றும்வைபாடி யனுவெனுமற்றவ னவ்வணுப்படணர்வென்னும், போற்றுமிவ்வகை புகன்றனர்புத்தராம்போதவீனர்களையா.

அருகமதத்தர் உலகத்தைகன்மமே யுண்டாக்குமென்றும், இதற்கு குணபரிகன்மமினமிதமென்றும், நிலையாமை நித்தம் இல்லது உள்ளது ஒன்று பல இப்படிஆறுவிதமான இயல் போடும்வருமென்றும், மூலம் வேறொன்றுயின்று அதில் உலகம்உற்பவிக்குமென்றும்,சொல்லுவார்கள். சாருவாகமதத்தர் நான்குபூதங்களினாலுலக முண்டாமென்றும், பரமென்பதொன்றுண்டாகியிதனையியற்றவில்லையென்றும், ஆவதுமழிவதும் இயல்பேயல்லாமல் வேறில்லையென்றுங்கூறுவார்கள். மீமாங்கிச மதஸ்தர்கள் சீவனானது சித்தேவடிவாய் உலகங்களைச்சிருட்டித்து இகபரங்களைப் பெறுவதல்லால் வேறொருபரனுண் டென்ப தில்லவேயில்லை. வித்துமாய்விளைவுமாய் நிற்பதெல்லாஞ் சீவனேயென்று சொல்லுவார்கள். சாங்கியமதத்தர்சீவாத்மாவேபரமாத்மாவாதலால்அச்சன்னிதானத்தின்பகுதியே விகுதியான வுலகங்களாய்விரிந்தொடுங்கும், இதுவேசகத்துக்குவிதையாகுமென்றுஞ்சொல்லுவார்கள். புத்தர் வைபாடியர்போல் நியாயவைசேடியர் அணுவாவது இரண்டுவிதமாம். இதில் முதலணுச்சத்தாயிருக்கும் இரண்டாமணுவுலகாய் அசத்தாமென்றுஞ் சகங்களைச் சிவனுடைய குணத்தைக்கொண்டு அணுச்செய்யுமென்றும், அந்தசிவம் சத்தமாகிற வொலியென்றும் தேகமும் ஆத்மாவும் உலகமும் உலகமூலமும் ஒலியேயல்லாமல் வேறில்லை யென்றுஞ் சொல்லுவார்கள். சைவமதஸ்தர் பதிபசுபாசமானது நித்தியமாய் அநாதிசித்தமென்றும், உலகுண்டாகிறதற்கு அதுகளேவிதையான தென்றுஞ்சொல்வவார்கள். சத்திமதஸ்தர் சத்தியே பரப்பிரமமாம் உலகமுதலான விபரீதங்கட்கு அஃதே முதற்காரணமாய்நின்று உதித்தொடுங்குமென்றுஞ் சொல்லுவார்கள்.சிவாத்வைதிகள்சிவமேஉலகமாய் விரிந்தொடுங்குமென்றுசொல்லுவார்கள்.மாயாவாதிகள் அவிகாரியாகிறபிரமசன்னிதானத்திலிருக்கின்ற மாயையானது விசாரிக்கிற் பொய்யாய் இதுதானே உலகங்களாய் விரிந்து தோன்றுமென்றுஞ் சொல்லுவார்களென்றறிக.

௱௰௪. பரமன்செயலறியாது படைத்தானுலகெல்லா
மரனென்பவரரியென்பவ ரயனெனன்பவர்சிலரிந்
திரனென்பவர்முத்தேவர்கள் செயலென்பவர்செடமா
மருவுங்குணவடிவென்பவ ரணுவென்பவர்மயலால்.

௱௰௫. வானிலாவோசையென்பார் வந்தொருகணத்திற்றோன்றி
யானியாம்புத்தியென்பாரடையவுங்கேட்டுநின்ற
சூனியமென்பார்பூதத் தொழிலெனச்சொல்லாநிற்பா
ரானவாறொருவராலென் றடையவுமியல்பேயென்பார்.

இப்படி பலவிதங்களாகப் பிண்டாண்டங்களுண்டானதென்று பலசமயமுஞ்சொல்லும். இதெல்லாம் வேதாகமங்கள் ஸ்மிருதிகள் சுருதினவழிக்குவிரோதமென்றறிக. இதுகளை யல்லவென்று உபநிஷத்துச்சொல்லும்.

ாயசு. தோன்றலாற்சித்துமாகித் தமத்தொடுகலந்துநின்றே
யான்றவமுனிகள்பன்னுமனனத்தாலளப்பொணுதாய்ச்
சான்றதாயெங்குநின்ற தற்பரனுடைத்தாயொன்ரு
யின்றிடுமுலகமெல்லாமெனமறையறையுமன்றே.

ாயஎ. சுத்தையாய்ப்பரையா யிருந்துளசுருதி சுருங்கிட நிகழ்த்திய பொருளே, நித்தவாகமங்கணெறிமையால்விரித்து நிகழ்த்திடு மெங்ஙனமென்னிற், சித்ததாய்நின்றேதமத்தொடுகலந்ததெ ன்றவத்தெரிவரும்பொருளை, வித்தகமாகவிளங்கிடவுணர்த் துமதுதனைவிருப்புடன்கேளாய்.

இத்தை மெய்மொழிச்சரிதையிற் செகத்தினுற்பத்தியிற் கண்டுகொள் ளென்றறிக.

அமிர்தசாரம்.

ாயஅ. உற்பத்தியாந்தந்தை வாயுவுடன்கூடிப்
பொற்புற்றகொங்கையர்தம் போகத்தே-கெற்பத்தைக்
கொண்டேதைசெல்லுமெனக்கூறுவீர்கூறீர்கள்
மண்டேகஞ் சென்றவழி.



சஎ-வது—அத்தியாயம்.

## சிருஷ்டி.

சிருட்டியென்பது-செகமுண்டாக்கல்.

இனிப் பரப்பிர்ம சிருஷ்டியாவது நிஸ்தரங்கமாயொன்று மில்லாதபோது பிர்மகிரணமானசித்திலொருநினைவுண்டாய் அதுதானே சிற்சத்தியாய் அருள்சத்தி இன்பசத்தி சுகசத்தி ஆனந்தசத்திவிஷயசத்தி யென்றும் அனேகம்பேராம். இதுசித்துச்சிருஷ்டி யிந்தச்சித்தானது எப்படிச் சிருஷ்டித்ததென்னில்.

அமிர்தசாரம்.

ாயகூ. ஞானனந்தச்சுடராய் நன்ருகியொன்ருன
தானகியபடத்திற் ருன்றன்னல்-நானவா
யார்த்த கடலுலகமாமோ வியயெழுதிப்
பார்த்துமகிழ்ந்தான்பரன்.

இனிச்சத்திசிருஷ்டியாவது முன்சித்தில்வந்த சிற்சத்தியினிடமாகப்பராசத்திமுதற்பஞ்சசத்திகள் தோன்றி யிந்தச்சிற்சத்தி மகாமாயையோடேகூடிக் கலங்கல்செய்து ஐவகையோனிமுதல் ( ௰௪ ) வகைத்தோற்றமான ௮௪ லக்ஷம் அச்சுபேதத்தின் தனுகரண புவனபோகமுண்டாம். இந்தச்சீவராசிகளெல்லாஞ் சரம் அசரம் சராசரமென்னுமிம்மூன்றிலடங்கும். இந்தச் சத்திகளைக்கொண்டு சித்தேசிருஷ்டிக்கும் அதெப்படி,

௱௨௰. அந்தத்துளதன்சத்தியைபடை வுற்றுளதாமிச்
செந்துக்கள்செய்கருமந்திகழ் காலம்பருவஞ்செய்
தெந்தப்பொருள்களுமாகுக வெனவேயிறையுன்னாப்
பந்தப்படமுன்போற்பல வுலகங்கள்படைத்தான்.

௱௨௧. காலமுங்கன்மந்தானும் பரிபாகமானவாறே
ஞாலமுண்டாக்கிநல்ல குணத்தினைக்கலந்துநிற்கும்
பாலதொன்றில்லாவிந்தச் சத்திமான்படைத்தற்காக
வேலவேயெல்லாமாவேமென்றுகொண்டிசைந்துபார்த்தான்.

இந்தப்பிரகாரஞ் சத்திகளைக் கொண்டு சிவன் சர்வத்தையுஞ் சிருஷ்டிக்கையாலே இது சத்திசிருஷ்டியென்றறிக. இனி மூர்த்திசிருஷ்டியாவது, முன்சொன்னசத்திகளிடமாகப் பஞ்சசாதாக்கியங்களுண்டா யிதில் ஐந்தாவதான கன்மசாதாக்கியத்திற்சதாசிவாதி பஞ்சமூர்த்திகளொன்றி லொன்றுண்டாகி யிந்தமூர்த்திகள் முன்புசிற்சத்தி மகாமாயையாலே யுண்டான தனுகரணபுவன போகங்களையுஞ் சீவராசிகளையு முன்புண்டான அச்சுப்படியே யுகாந்தங்கள்தோறும் அதுகளைத்திரும்ப உண்டாக்கிப் பஞ்ச கிருத்தியங்களைப் பண்ணுவாரென்றறிக. இவர்கள் முன்புள்ள சித்துச்சிருஷ்டியாகிற யுகபத்சிருஷ்டி யச்சுப்படியல்லாமல் வேறொரு அச்சைச் சிருஷ்டிக்கமாட்டார்களென்றறிக.

௱௨௨. ஒருகாலமரன்படைப்ப னொருகாலமயன்படைப்ப னுலக
மெல்லா, மொருகாலமரிபடைப்ப னொருகாலமுனிவர்படை
ப்புள்ளதாகு, மொருகாலம்புயத்துதிப்பனொருகால்வாரியிலு
திப்பனுயர்ந்தவேதா, வொருகாலண்டத்துதிப்ப னொருகால்
விண்ணகத்துதிப்பனோர்ந்துகொள்ளே.

௱௨௩. வன்மரங்களெனநெருங்கு மொருபடைப்பிலொருபடைப்
பின்மனிதர்துன்னும், பன்மலைகளெனநெருங்கு மொருபடை
ப்பிலொருபடைப்பிற் படர்மண்ணாகுங், கன்மயமாமொருப

டைப்பி லொருபடைப்பிற்றசைமயமாய்க்காணலாகும், பொ
ன்மயமாமொருபடைப்பிலிப்படியேபலவிதமாம் பூமிதானே.

ாஉச. வான்முதலாமண்முதலாநீர்முதலாந்தீமுதலாமற்றைவாயுத்
தான்முதலாமிப்படியே சிருட்டிதொறுமோரொன்றுதலைமை
யாகும், யான்முதலோரயன் சிருட்டியுனக்குரைத்தேனதுதன்
னையடைவாய்க்கொள்வாய், யேன்முதலாய்நியமமதற்கொன்
றுகவேறுபலவிதமாய்த்தோன்றும்.

இதுமூர்த்திகள்சிருஷ்டி. இனிநவப்பிறசாபதிகள்சிருஷ்டிகாசிபூர்முதலா
ன ஒன்பதுபேரும் ஒவ்வொருவுகாந்தங்கள்நடுவே யிறந்துபோன விடங்களி
லே பஞ்சமூர்த்திகள் அனுக்கிரகத்தாலே யவர்கள் சிருஷ்டித்தபடியே சிரு
ஷ்டிப்பார்களென்றறிக. இந்தவெகுவிதசிருஷ்டிகளெல்லாம்உபக்கிரமசிருஷ்
டிகிரமசிருஷ்டிஎன்று இரண்டுவிதமாம். இதிலேயுபக்கிரமசிருஷ்டியாவதுநி
ஸ்தரங்க சமுத்திரத்திலே வாய்வுசத்தாலே தரங்கவுற்பத்தியாகுற் போல
ச் சச்சிதானந்த வாத்மகப் பிரமத்தில் சித்தினது சங்கற்பசித்தியால் மூல
மாயாவிவர்த்த ரூபநாமமயமானமாயையாலே பிர்மாமுதலான மாயாப்பி
ரபஞ்ச மெண்ணிறந்ததுண்டாம். அஃதெப்படியென்னில்,

ாஉரு. சுருக்கமில்சிவத்திற்சத்தி தோய்ந்தபின்மாயாசத்தி
தருக்கியேகெற்பந்தாங்கிச் சகத்தைமுன்பின்றதன்மை
யருக்கன்றன்கிரணயோகா லந்தரத்திலங்குமேகம்
பெருக்கநீர் கெற்பந்தாங்கிப் பெய்யுமாமழைபோலன்றே.

இனிக் கிரமசிருஷ்டியாவது தமப்பிரதானகாரணமாயையிலிருந்துண்
டானதத்துவங்கள் கிரமப்படியே பாரம்பரையாகவுண்டான பிர்மாண்ட
பாண்டமகாஅண்ட பாண்டங்கள் பிண்டாண்டங்கள் முதலாக எண்ணிறந்
தசீவராசிகளும்மூர்த்திசிருஷ்டிகளு முண்டானதென்றறிக. இதுவேதாந்த
சித்தாந்த முதலான வெகுவிதசாத்திரம் வெகுவிதசிருஷ்டிகளைச் சொல்லு
மென்றறிக. இந்தச்சிருஷ்டியைச்சிற்சத்திமுதலாக ரிஷிகளந்தமாகவுண்டா
க்குவதென்றறிக.

ாஉசா. அறியாமைவடிவாயுள்ள புவனங்களமைத்துப்பின்பு
பிறியாதகன்மந்தன்னின் வசத்தினுலுயிர்கட்கெல்லாஞ்
செறிவானகாலபாக மானபின்னீசன்றானே
பிறிதாகுநான்குயோனிபிறந்திடும் வகையேசெய்வான்.

௱உஎ. திண்ணூர்சிலையின்மண்கேந் தேசுகொண்டவியல்புபோல்
விண்ணூர்மேகம்வித்தின்றி விளைந்தவாறுபோலுயிர்க
டண்ணூர்சகளஞ்சாரலின்றிச்சகளிகரித்துமுற்கருத்தாற்[வால்
பெண்ணுணலியும்வேற்றுமையும் பிறந்துதம்மிற்பிணித்தன.

௱உஅ. உணர்வுயிரொடுங்கிமாத ருதரத்திலேய்ந்தயோனி
புணர்வழிபோந்தோர்தாமுன் புணர்ப்பவையுணர்வார்போல
வுணருமெவ்வுயிருஞ்சத்தி யிடனுடனொடுங்கியத்தின்
புணர்வழியாகத்தோற்றும் புமான்களுமதனையோர.

௱உகூ. ஈசனுமிறைவனொத்த வறிவினுலெங்குமாகிப்
பேசிடுநாமரூபப் பின்புபோலுண்டாய்ப்பேணு
மாசிலாச்சித்துத்தானே யுளதுபோலாயினுலு
மீசனையொழியவேறு நிற்பதொன்றில்லையென்றும்.

வேறு.

௱௩௰. சிலந்தியுமிழ்ந்து விழுங்குவதெப்படிதேகத்தே
மலந்தருகேச ரோமமதெப்படிமண்ணிற்கே
பலந்தருமோட்சதி யெப்படியீசனருட்படியே
யலந்ததடங்கவெறுங்கன வொக்குமதாயுங்கால்.

இதுவேதாகம சிருஷ்டியென்றறிக.



சஅ-வது—அத்தியாயம்.

இரட்சிப்பு.

எண்ணிலாவுயிரெல்லாம்பிழைத்துடல்

நண்ணிடலாவது ரட்சிப்பதுவே.

திருவெண்பா.

௱௩க. ஆனகடங்களளவிலவற்றுள் புகுந்து
வானகந்தானின்றவாறொக்கும்-யோனிகளெல்

பத்துநானூறாயிரமாய்ப்படைத்தவற்று
ணித்தனூர்நின்றநிலே.

இப்படிச்சிவனிற்கையாலே ரட்சிக்கிறவிதமெப்படி யென்னின், முன்புசிருஷ்டியானசீவராசிகளெடுத்தவுடலுக் கடைத்தபொறியைந்தையும் பயிரிட்டவன் பயிரழியாமற் காப்பான்போல அந்தந்தச் சீவன்களுக்கு அந்தந்தப் புவனங்களி லுண்டான புசிப்புகளைக் கொடுத்துப் புசிப்பித்துக் காப்பாற்றுகிறதானல் சிவன்அவரவர்க்குக்கொண்டுவந்துகொடுப்பாறோ வென்னில், அறுவகைத்தொழில் முதலானஎண்ணிறந்ததொழிலாலுபாயமுண்டாகப்பிரேரிக்கிறபொருள் உள்ளேயிருக்கையாலே சிவனே ரட்சிக்கிறவனென்றறிக. அந்தந்தச்சீவனுக்குத்தக்கவுபாயங்களில் கொசுகுமுதலானசீவனெல்லாம் பிழைக்கும்படி தந்திரங்களாயுள்ளே பிரேரித்து ரட்சிப்பானென்றறிக.





சகூ-வது—அத்தியாயம்.

# ச ங் கா ர ம்.

அசையாதசைவன வாமுயிரெல்லா
நிசமாய்க்கொன்று நிறுத்தல்சங்காரமே.

முன்னிரட்சிக்கப்பட்டசீவராசிகளை யெல்லாங் கன்மத்துக்கீடாகப்புசித்துத்தொலைந்தவுடனே பயிரிட்டவன் பயிரழியாமற்காத்துப்பின்பு சந்தோஷமாயறுக்கிறதுபோலக் கருப்பற்றினநாள்முதல் நிமிஷம்-நாழிகை-நாள்-வாரம்-பட்சம்-மாசம்-வருஷம்-ஒன்றுமுதல்நூறளவில் இதுகளையெப்போதுகொல்லவேண்டுமோஅப்போதுகொன்றும்,பின்புசர்வசங்காரமாகத்தனுகரணபுவனபோகமெல்லாமில்லாமற்சங்கரித்துச்சீவராசிகளைப் புரியட்டகத்துடனேகெடாமல்நிறுத்திப்பின்பு மாறுபுவனங்களிலே அதற்கேற்றதனுவையுஞ் சுகதுக்க போகங்களையும் புசிப்பித்துப் பின்பு சர்வசங்காரத்திலே தனுவாதி முதலானதெல்லாமாற்றிச் சீவராசிகளை மாயையிலே யாதனுசரீரத்துடனே யடக்குவனென்றறிக. அஃதெப்படி என்னில்,

திருவெண்பா.

ராகூஉ. ஆறுவுடம்பனைத்து மைம்பூதத்தேயழியும்
வாறுதிபூதமிறு மாயையினி-லுறு

வெர்ழிந்தமாமாயையிரு ளுள்ளொளியாயும்ப
ரொழுந்தஞானத்தாலிறும்.

௱௨௰௩: எச்சராசரமுமிற்றுவிடுமித்தரையிலே யெத்தராதலமுமப்
பிலிறுமப்பனலிலழியு, மிச்சமாகும்வளியிற்கனலுமிற்றுவிடு
ம்வின் மீதுமாம்வளிமாயையினில்வான்மீறுமா, லச்சமாயை
யெனுமாரிருளுமாசிலறிவா மரியசிவனிலழிந்திடுமெகண்டபர
மாய்ச், செச்சவேதிகழ்பரம்பிரமமாபறுமவன் றீர்விலாநிலை
பரம்பிர்மமென்றுதெளிவாய்.

இப்படி நிமிஷ சங்காரமுதற் சர்வசங்காரபரியந்தமுஞ் சங்காரம்பண்ணுவானென்றறிக. சிவன்வந்துகொல்லுகிறானோவென்னில், சிவன்அவரவர்கன்மத்துக்கீடாகப் புசிப்புத்தொலைந்தவுடனே அவ னவ ளது முன்னிலையாகப் பிரேரித்துக் கொல்லுவதும், விதியதுவர்கின் மதியதுவா மென்கையாலும், தன்தனக்கே சீவன்போவதுஞ் சிவனையறியாதே சீவன்போகாதென்கையாலு; மெந்தவிதங்களிலே யுடல்போனாலும், யமதூதரழைத்துப் போவாரென்கையாலுஞ் சிவனேகொன்றானென்றறிக.

௱௨௰௪. உருவமாமெவையுமாளுமுலகங்களதிலே யுலகமண்டமதின்
மாளுமுறுமண்டமெவையும், வெருவமாளுமிகுபூதமதின்மே
வியமிகானதனின் மாளுமவைமாநிலமகமாளுமதுதான்; மரு
விலாவிருளதாகுமுதலாமுடலிலே மாளுமாளவதன்மேலுய
ருஞ்சொதியொளியாம், றிரியமாளும்வகையேயெழுமவ்வாற
ழியுமிச்செயலு நாயகன்விளைதமலதேதுமிலையால்.

௱௨௰௫. வானின்மேகமதெழுந்தழியுமாறுநிலை நீர்வந்துபுற்பிதமெழு
ந்தழியுமாறுமனல்சேர், மேனிலாவுபொறிவந்தழியு மாறுமெ
னவேமிகுமுலோகமுயிர்காலம்வினைமேவியவெலா, மூனிலா
தொழிவிலாதழிவிலாதசொரூப னொளியிலாயழியு முன்மை
யிதுவென்னமன்றயோ, டானவாகமபுராணமனுவாதியயன்மா
லரனுமேதமறமேயறையுமாறதறிவாய்.

இப்படிச்சங்காரமென்றறிக.

ருய-வது—அத்தியாயம்.

## திரோபவம்.

திரோபவமுற்பிற்-செயலது மறத்தல்.

இந்த இகலோகங்களிலேசெய்த புண்ணியபாவவிவகார முதலானதெ ல்லாம் பரலோகங்களிலேதெரியாமலும், பரலோகத்தில்நரகசொற்கமுதலான விவகாரமும்இகலோகங்களிற்பிறந்தபோதுதெரியாமலுஞ்; சங்காரகாலத்தின் தன்மை திரும்பச்சிருஷ்டிக்கிற காலத்திலே தெரியாமலுஞ்; சிருஷ்டிக்கிற காலவியாபாரஞ் சங்காரகாலத்திற்றெரியாமலும்,இதல்லாமல் அவத்தைகளிலு ங் கருப்பற்றினநாள்முதல் மரணாந்தமும், அசதிமறதிகளும் வயோவவஸ்தை களிலுஞ் சாக்கிரத்திலும் இதுகள்முதலாக எங்கேமறப்புவந்தாலுந் திரோப வமென்றறிக.



ருக-வது—அத்தியாயம்.

## அநுக்கிரகம்.

இறந்தவிடத்தி லெல்லாவுயிரை

யறந்தான்முன்போலாக்குதலறியே.

சர்வசங்காரத்திலே யெல்லாமிறந்துபோயும் மாயையில் அடங்கித்த மதாண வத்தால் மூடப்பட்டிருந்த ஜீவராசிகளைச் சத்தி மாயை யோ டே கூட்டித் தனுகரணபுவன போகங்களைமுன்போலே பலநாளுஞ் சிருஷ் டி திதி சங்காரந் திரோபாவமெல்லாம் நடக்கப் பிரமாதிநாலுபேரையுமுண் டாக்கி உண்மையை அநுக்கிரகித்து எப்போதும்போல ஐந்து தொழிலும் நடப்பிக்கிறது அநுக்கிரகமென்றறிக. ஆனாலிந்த ஐந்து தொழிலும் ஐந்து பேரையுங் கொண்டு பிரமம் நடத்துமென்றுசொன்னால் சிருட்டிபல்விதஞ் சொல்வதெப்படி, அதுபிரமமே ஒருபடம்போலேயிருந்து அதிலேயெல்லாச் சித்திரமுமெழுத் ஆதரவாகையாலே யதுவேபிரமசிருஷ்டி. அதிலேசித்திர மெழுதல் போல் சத்திகளாலே மாயையாலுண்டாவது சத்திசிருஷ்டி. இந் தச்சித்திரமறைந்துபோனாற் றிரும்பவுமந்தப்படியே மினுக்கிறதுபோலச் செய்கிறது மூர்த்தி சிருஷ்டி. இந்தமினுக்கினசித்திரம் நடுவே அவயவங்க ள் விகாதங்களானா லந்தப்படியே அவயவங்களைத்திருத்தி முன்போலவைப் பது நவப்பிரசாபதி சிருஷ்டி. இப்படியெண்ணிறந்த அபேதவாதிகள் சிரு ட்டிகளும் பேதவாதிகள் சிருட்டிகளுஞ் சித்தாந்தானே பஞ்சமூர்த்திகள்

பேராலே விளங்கச்செய்கிறதென்றறிக. இதல்லாமலும் பின்னுஞ்சொல்வா ருமுளர். அதெப்படி, சீவபேதங்களை இரட்சிக்கவேண்டித்தனுகரணபுவன போகங்களைக் கொடுப்பது சிருட்டி. கொடுத்தபடியே சிலநாள் நிறுத்தல் திதி. நிறுத்தினதையழிப்பது சங்காரம். பக்குவம்வருமளவுஞ் சிவனுடைமை யென்று தெரியாமல் மறைப்பதுதிரோபவம். பின்பு குருவாய்வந்துசென னமு மரணமு மலாதியுநீக்கி மோட்சத்திலே சேர்ப்பதநுக்கிரகம். பின்னு மொருவிதம், தத்துவநூலைக் கொடுப்பதுசிருட்டி. அந்தப்படி அர்த்தங்க ளைமனதில் நிறுத்துவது திதி. இதுகளைநேதிகளைந்து நீயல்லவென்பதுசங் காரம். எல்லாமிறந்தவிடத்தில் தன்னைத் தோணுதது திரோபவம். தன்னை த்தோணக் குருக்காட்டுவது அநுக்கிரகம். இப்படியின்னமு முண்டென்ற றிக. பஞ்சகிருத்தியங்கள்வெகுவிதஞ் சொல்வது, உகாந்தபேதங்களாலும் யு கபேதங்களாலுமென்றறிக. சிருஷ்டிபேதங்களாயெத்தனை சொன்னலுஞ் சித்தேபிரதானமாகையாற் சிருஷ்டியும்பேதமில்லையென்றறிக.

## ௩௨-வது— அத்தியாயம்.

## பிண்டகிருதம்.

பிண்டாகிருதியாய்ப்பேருடம்புசிப்பா

லுண்டாய்வளர்வதுள் பிண்டகிருதமே.

பிருதிவியண்டம் ஆயிரத்தெட்டு கோடி இதிலொரு அண்டத்தில் மத்தி யலோகம் பூமிவிஸ்தாரம் நூறுகோடியோசனையில் சம்புத்தீவு லட்சம்யோ சனை இது ஒன்பதுகண்டமாம். இந்த ஒன்பதில் பரதகண்டம் ஒன்பதிலொ ன்றும் எட்டுப்பங்காம். இந்த எட்டில்குமரிகண்டமாயிரம் யோசனையில் சி லபூமி சமுத்திரம்பருவத ங்கொண்டுபோக மீந்தயோசனையிற் செந்நெல்மு தலாகப் பதினேழுவகைத் தானியம் விளையும் இதுகள் தண்டுலமும் பிண் டிபேதமுமாம். இதல்லாம லிந்த அண்டத்திலும் தீவுகளிலும் இருக்கிறபேர் க்கெல்லாம் புசிப்பும் ஆயுளும் வெவ்வேறென்றறிக. இனிமுன்சொன்ன த ண்டுலம் பிண்டிபேதமான புசிப்புகளை நரதனுக்கள்புசிக்கும். புசிக்கும்போ து தண்டுலம் பிண்டியை அக்கினியினலும் நீரினலும் பாகப்படுத்திஓதனு திகளா யருந்தப்பட்டு அருந்தினது அமரவாசையமாகிற பையில்விழுந்துபி ன்பு பானத்தோடேகூடிப் பக்குவாசையப் பையில்விழுந்து இதைப் பிரா ணவாயு விரண்டுகூறாக்கி யொருகூறு கிட்டமாகிறதிப்பியு மொருகூறு சா ரமாகிற ரசமுமாக்கும். இந்தவிரண்டில் ரசமானது தாதுக்களாயும்திப்பியா னதுமலமுமாம். அதெப்படிநாள்தோறு மருந்தின அன்னபானமுதல் ஆறு

ருசிகளுந் தேகத்தில் மூன்று நாளி விரதமாம். இதின் திப்பி மலப்பை யில் மலமுஞ் சலப்பையிற் சலமுமாய் நாள்தோறுங் கழியும் மிந்த இரத ம் மூன்றுநாளிலுதிரமாம் இதின் திப்பி தோலும்உரோமமுமாம். இந்த உதிர ம் மூன்றுநாளில்மாங்கிசமாம். இதின்திப்பி சேத்துமமாம். இந்தமாங்கிசம்மூ ன்றுநாளில் மேதையாம். இதின்திப்பி பித்தமாம். இந்தமேதை மூன்றுநாளி லெலும்பாம். இதின்திப்பி நகங்களாம். இந்தஎலும்பு மூன்றுநாளில்மச்சை யாம் மிதின்திப்பி குறும்பிபீளையாம். இந்தமச்சை மூன்றுநாளிற் சுக்கிலமா ம். இதின்மலம் முகத்திற் பருவுநெய்ப்புமாம். இந்தச்சுக்கிலம் மூன்றுநாளிற் றேகத்தின்பெலமாம். இதின் திப்பி நிரந்தரம் நீங்குகிறநாலங்குலவாய்வுமா ம். இந்தப்பலம் மூன்றுநாளிற் பிரகாசமா யேழுதாதுக்களுக்கு முள்ளா யோங்கிப் பின்பு நீங்கிப் பரத்தோடேகூடிப் பரமேயாகும். இந்தப்பெலங் கூடத் தாதுஎட்டுக்குந் திப்பியாகிறமலம் பதினுலுமிருக்கிறதானங்கள் கண் ணிற் பீளை காதிற்குறும்பிமூக்கிற்சேத்துமம் நாக்கில்வழும்புபல்விளூத்தை மிடற்றிற்கோழை நகத்திலழுக்கு தேகத்தில்வெயர்வை குதத்தில்நாற்றம் கு ய்யத்தில்வெடிப்புவீணுதண்டுப்பூவில்வழும்புகஷ்டங்களில் மயிரிற்பற்றியநா ற்றம் உடம்புவெடிப்புநாற்றம் குதத்தில் அபானவாய்வுநாற்றங் இப்படிப்ப தினுலு தானங்களிலு மலங்களிருந்து அவலமாய்நாறும். இதல்லாமற்பின் னுமொருபாடம்.

௱ஈசு. ஒழியாமனுடோறுமுன்னுமன்ன மொருகூறுமலமாகியுத
ரமொன்றிக், கழியாமனின்றமலமிரண்டேதென்னிற் காயமு
ம்புத்தியுமென்றேகழறும்வேதம்,பழியாமல்மேலணிந்ததோ
ல்போமாகிற் பழைபமலத்திற்கடையாய்ப்பார்க்கலாகா, விழி
வாணுங்காணவேகாகநாய்தி வெம்பருந்துவந்தருந்த விளியு
ங்காணே.

இதின்அர்த்தம் புசிப்பு மூன்றுவிதமாம் இதில் தூலமானது திப்பியா ய் மலமூத்திரமாய்க் கழிந்துபோம் சூட்சுமமான ரசமானது சத்ததாதுக் களாய்த் தூலதேகமாம். இனி அதிசூட்சுமமானது பத்திந்திரியங்களுக்குப் பெலனாய் நிற்குமென்றறிக. ஆகையாலே யிப்படித்தேகம் பரிணமித்த பிண் டிகிருதமென்றறிக. இப்படிப் பிண்டிகிருதமான தேகங் கெற்பத்தி லுற்ப த்தியாங்கிரம மெப்படியென்னில்.

## ௩௩-வது—அத்தியாயம்.

## பிண்டோற்பத்தி.

கருவினிற்பற்றுங் காளையர்தங்க
ளுருவந்தரிக்குமுன்மையுரைப்பது.

௩௩௭. மைந்தகேள்கெற்பத்தின் வழியினைப்பராபரத்தில்
வந்ததாமதன்றன்சத்தி மற்றதிற்பரமுண்டாக
முந்தியபரமன்றன்னின் முற்புரைதோன்றவற்றிற்
றெந்தமாமிச்சாஞானக் கிரியைகடோன்றலாலே.

௩௩௮. மன்னுயிரொருமூன்றாகவருதரு கேவலத்திற்
றுன்னியவுயிரைமாயை தோன்றியேயெழுப்பத்தானுய்ப்
பின்னமாமிச்சாஞானக் கிரியைமாயையினாற்பெற்றிட்
டன்னமாயையினாலாறைந் தானதத்துவங்கடோன்ற.

௩௩௯. ஐயைந்தாமாத்மதத்துவ மாறதாம்வித்தியாதத்துவஞ்
செய்கின்றசிவதத்துவங்கள் சேர்ந்தவாவாறினோடும்
பொய்யொன்றுதொண்ணூற்றாறு மாத்மதத்துவங்கள்முற்ற
மெய்யொன்றுமரத்தில்வித்து வித்தின்மெய்மரமாம்போல.

௩௪0. தொன்றுதொட்டடவினாலே யுடலெலாந்தோன்றுமெங்ஙன்
றென்றுமோதனத்தூண்டன்னா லூறுமலமலமுடம்பா
மன்றியேமலநாடோறு மழிந்திடுமெண்விகார
மொன்றியேகாமமாதி விகாரமெட்டுடனேயூட்டும்.

௩௪௧. காயமாங்கூறுமூன்று நாட்கருதிரதமாகி
யாயபின்மூன்றுநாளி லஃதிரத்தமதேயாகி
யேயதுமூன்றுநாளி லெய்துமாங்கிசமேயாகி
யாயபின்மூன்றுசென்றால் மேதையின்மூன்றுமத்தி.

௩௪௨. அன்னதினன்மூன்றற்று லாவதாமச்சையன்றிப்
பின்னொருமூன்றுட்சென்றாற் பெயர்ந்துசுக்கிலமதாகுந்
தன்னதுபுல்லிற்றங்குந் தருபனிப்பிரமாணத்தா
முன்னியவிந்துபேத மீரொட்டாமொழியுங்காலே.

இப்படி அமூர்த்தகலை பதினாறுபேதமுடைத்தாயிருக்கும் இது பெண்களுடனே கூடும் போதுண்டாகும் இலட்சணம். இதற்குதாரணம்.

௱௪௩. ஆங்கதிலதிசுகத்தோ டம்பமேயுபையத்தாக
வொங்கியவின்பமூன்று லுற்றபெண்ணுடனாண்பிள்ளை
தாங்கியவலியாம்விந்து தானொருமூன்றுண்டாகு
மாங்கதிலீரெட்டான வதுன்வகையடங்குமன்றே.

௱௪௪. ஆதலானாரியோனி யதனிலாநாடிமூன்று
மேதகுபுருடலிங்கத் திரண்டதாமிக்கநாடி
போதுமூத்திரமேசோணி விந்துவாம்புறமேநாப்ப
ணாதகவுள்ளநாரிக் கிரண்டதாமாடவர்க்கே.

௱௪௫. கறைபடுமுதனாண்மூன்றுட் காரிகையுதரந்தன்னி
லுறைமலஞ்சலமேசீத மருந்துகொண்டறவேமாற்றி
முறைமையாய்முழுகுநாளின் முற்றுமிற்றொருவர்காணா
திறைவனைநோக்க நோக்காலேயுளபுணர்வேயெய்தி.

என்றது மூன்று கவிக்குமர்த்தம் அதிகசுகம் அற்பசுகம் அற்பாற்பசுகமாகிற சுகத்தினாலே விந்துவு மூன்றுவிதமாய் முன்கிரமமாய்ப் பெண் ஆண் அலி மூன்றும். முன்மூன்றுவிந்துவிலும் பதினாறுகலைகளுமடங்கும். இனி நாரி யோனியில் மூன்றுநாடி யிது மூன்றும் மூத்திரம் இரத்தம் விந்து இது மூன்றும் மூன்றுநாடியாம். ஆணுக்கிரண்டுநாடிமூத்திரமுஞ் சுக்கிலமும்வருகிறநாடி நாரி ருதுகமானபோது மூன்றுநாளும் வயிற்றிலிருக்கிற மலஞ் சலஞ் சீதம் போக மருந்துகொண்டுமாற்றி முழுகு நாளி லொருவரையுங் காணாமலிறைவனைத்தியானநோக்காலேயுணர்ந்து கூடி யிப்படிச்சிவனைநோக்கி யிருந்தவளைப் புருஷன் கூடும்போதுண்டாங் கூறுபாட்டுக்குதாரணம்.

௱௪௬. ஓதியவுதிரச்சேற்றி லுறைத்தசுக்கிலநீர்பாய்ச்சி
மீதுறவிந்துநாத மேனிவித்ததனைவித்தி
யாதலையழிதல்தன்னை யன்பைநோய்மூப்பைச்சாவை
நாதனுமன்றேசெய்து நர்கருவுருவைநட்டான்.

௱௪௭. தொழிலும்வினையுந் துயருஞ்சுகமு
மழியும்பெறும்பே றவையுமடைவுங்
கழியுமிடமுங் கதியின்பதமுங்
குழுவுங்கருவித்துடனே குணமாம்.

௱௪௮. இறையானவையு மனுவானவையு
மறையாரணமுமருளாகமமு
முறையார்கலையு மொழியார்தமிழு
மிறையார்கருவித்துடனே யிசைவாம்.

இப்படிக்கருவிலெல்லாவற்றையும் பதித்தகருப்பரிணமிக்கிறவிதம்.

இதற்குதாரணம்.

௱௪௯. விட்டவவ்வுடலாற்செய்த வினைக்குடல்பிதாவாற்பெற்று
மட்டவிழ்செறிமென்கூந்தன் மாதாவினுதரம்புக்குக்
கட்டியேகெற்பந்தேரிற் கருப்புன்னைவெண்முத்தன்ன
மொட்டலர்பவளம்போலு முதனுளென்றறிகவன்றே.

௱௫௰. நீருறுகுமிழ்போல நிரம்புமைந்தாநாளண்டச்
சீருறுபதினைந்தாநாட் சிரந்தோன்றுந்திங்களொன்றின்
மார்புறுதோளுந்தோன்று மிரண்டினில்வயிறுமூன்றிற்
பேர்வுறுதாளிரண்டும் பிறந்திடுநாலாமாதம்.

௱௫௧. மாதமைந்துக்குளெல்லா வவயவம்வகுத்துப்பின்பு
பேதமிலாமையின்றன் பிண்டம்போன்றிருக்குமாறிற்
சேதமொன்றின்றியென்பு சிக்கெனுமேழாமாதம்
போதமும்படுமுரோம நகங்களும்பொருந்தியாங்கே.

எரிகலையிலே யமுர்தகலைபோய்ச் சுழன்றுவிழுகின்றது அதுவே இடமாக மாதாவின்சுரோணிதத்திலே படுகிற கன்றையெடுக்கத் தாய் தொடர்ந்துசென்றாற்போலப் பிராணவாயுவை யுள்ளே போகவிட்டுக் கிழிச்சீலை வாய்போலே கெற்பாசயத்தைச்சுருக்கிக் கருவை வேலியாகவளைத்துக்கொண்டு கருவைவளர்க்கும்.

௱௫௨. ஆனபினெட்டாமாத மாக்கையினூக்கம்போதந்
தானுமுண்டாகிப்பின்பு நவதிங்கட்சார்ந்தபோது
ஞானமுமிகுத்துத்தோன்றி நன்னிலையிறுதியோர்ந்தே
யூனமாங்கெற்பத்துன்ப முணர்ந்திடவுற்றதன்றே.

௱௫௩. உற்றெரிகொளுநீரொத்த வானமைபோலுதரத்தீயி
னொற்றிடுந்துன்பமாற்றே னென்றிருவினையைநொந்து

மற்றினிப்பிறவாவண்ண மாற்றிடெம்மிறைவாவென்று
தற்சொரூபத்தைநோக்கித் தாய்வீறுதலன்டைச்சாரும்.

இப்பால் பத்துமாதஞ்சென்றவாறேவருத்தமாய்ப்பிறக்குமென்றறிக.பின்னுமொருவிதம், புரியட்டகாயமானதுபிதாஅருந்தின அன்னபானங்களுடனேகூடியவனுதரத்திற்புகுந்துசுக்கிலத்திற்பரய்ந்து மூன்றுமாதமிருந்து கருவாய்மாதர்ருதுவிற்கூடும்போது அவள்பகத்தாலேபோய்க்கருப்பையிற்பதிந்து பவளப்பையில் முத்துப்போலச்சீவன் பிராணவாயுவாகனமாய்மனதுவழியாகச் சிவாக்னையாலே சுரோணிதந்திரண்டு இந்தத்திரட்சியாலே ஆயுள்செய்தொழில் சுஞ்ஞானம் அஞ்ஞானம் தர்மம் இந்த ஐந்துடனுங்கூடி விகிதமாய்ஒருநாளிற்குன்றிமணிமாத்திரந்திரண்டுதோய்ந்தபாலாம்-ரு-ல்,நீர்க்குமிழியாம்-எ-ல்-இளனுறும்-ம-ல்,சுரோணிதத்திற்கலக்கும் -மச - ல், செந்நீர்பரந்துஊறும்-மரு-ல்,மாங்கிசப்பிசினியாம்.உச-ல்;பூரணமாங்கிசமாம்-உரு ல்,பஞ்சாங்குரமாம். மாதமொன்றில் பஞ்சபூதமுமொருமிக்கக்கூடிப் பீஜம் சிறிதுதிக்கும். இரண்டாமாதம் மாங்கிசமுமேதையுமுண்டாம். மூன்ருமாதம் மச்சைஅஸ்திகளுமுண்டாம் நாலாமாதம் தோலுங்கேசமுமாம். ஐந்தாமாதம் கண்ணுநாசியுமாம். இனி ஆருமாதமுதல் மாதாவுதரத்தில் விழுந்த அன்னசார மிவள் வயிற்றுக்கும் பிள்ளைநாபிக்கு மொருநாளமாயிருந்து அந்தத்தாயினுடைய அன்னசாரம் அந்த நாளத்தின்வழியாகச்சென்று பிள்ளையுந்தியாலேபோ யிந்த அன்னசாரத்தின்மிகுதியாலே சுழிமுனைநாடியடைபட்டு இடைபிங்கலைதுறந்து பிராணவாயுவுஞ் சுழிமுனையைவிட்டு இடைபிங்கலையிற்புகுந்து மேல்நோக்கி நாசித்துவாரங்களாலே விட்டவெழுத்தாலே நாளொன்றுக்கு- இருபத்தோராயிரத்தறுநூறு-சுவாசந்தோன்றும்இதல்லாமல்சிங்குவைமுதல்நவத்துவாரமுங்கரந்தரமுமுண்டாம்-எ-ல்,குய்யமும்பாதமுமாம்-அ-ல்,சந்துகள்சர்வாங்கங்களுமுண்டாம்-கூ-ல்-உச- தத்துவமுதலான சகலதத்துவமுமுண்டாம்அப்போதுசெனனமரணமொழிந்து மோட்சம்பெறவேண்டுமென்றுசிவத்தியானத்திலேயிருக்கும்-ம-ல்,பிறப்புநோக்கும்அப்போதுமலைகீழ்கப்பட்டவன்போலக் கருப்பாசயப்பையில்கட்டுபட்டுச் சமுத்திரத்தில்அமிழ்ந்தவன் போலக்கருப்பாசயவெள்ளத்திலமுந்திஊமைக்குடத்தில்நீர்போலஉதராக்கினியில்வெந்துபிறவிநோக்கும்பொழுது தலைகீழாகிஆருமாதமுதல்நாளொன்றுக்கு-இருபத்தோராயிரத்தறுநூறு- ஆக மாதம்- ரு க்கு- நாள்-கறும க்கு-௱உ லட்சத்து ச000 உருச்சென்றவாறே உதரகன்மந்தொலைந்து மாதாவினுதரத்தில் நிற்கிறபிராணவாயுவிலே சிவன்சத்தியதிட்டித்து இவனுடையபுஜம் பூமியிலே பதிக்கவேண்டி புஜாபத்தியென்னும் பெயர்பெற்றுஇவனுடைய போதம் போலே யிவனுடையதேகமுங் கீழ்நோக்கிவிழும்படி தன்னுடையபெலத்தாலே தலைகீழாகத்தள்ளி ஆலைவாயிற்கரும்புபோல்நெருக்குண்டுஇந்தவேதனையாற் கன்மங்கூடிப்பிறவிநோக்கும். உதாரணம்-சிவதருமோத்தரம்.

௱௫௪. சிரமேகளமேசிறுபுறமே திரள்டுதுணிந்த சேருகமே
வருமேதினமோராறைந்தின் மற்றையிரண்டாமாதத்திற்
கரமேபதமேகடிதடமே கலிபாரிசமேகாத்திரமே
வருமேமாதமொருமூன்றின் வடிவிற்சந்தின்வகுப்பெல்லாம்.

௱௫௫. உதிக்கும்விரல்கள்சதுர்மாதத் தொளிசேர்முகநாசிகைகன்
முதிக்குங்குய்யமுகிர்தந்தமொழுங்கூன் மாதமோரைந்தி [ன
னுதிக்குமோசைபுழைகன்ன முற்றமாதமோராறு
ளுதிக்குமாதமோரேழி னுபத்தமிலிங்கமொளிபெறவேய.

௱௫௬. குதமுந்தோன்றுங்கொப்பூழுங் கூறுஞ்சந்தின்பேதமெலா
முடையமானவிருநான்கிலுதிக்குங்கேச முயர்சிரத்திற் [ம்
றிதமேயங்கம்பிறத்தியாங்கஞ் செறிந்தமற்றையுறுப்பெல்லா
விதமாம்பிராணவாயுமுத லைந்தும்விரவிவிளங்கிடுமே.

இனிக்கெற்பாசயபூமியில் வித்து முளைத்தெழுந்தாற்போல அங்குரமாகிற அவயவங்களுண்டாம். இனித்தேவர்கள் பிறப்பு தீபமோங்கி யெரிதல்போலச் சீவனில் தேகந்தானே சிவனாலே கற்பிதமாய் தேஸஸாய்ப் பிரகாசிக்கும் இந்தத்தேகஞ் சீவனைவிட்டுவிழுகிறதல்ல இனிநரசீவன்கள் சுக்கில சுரோணிதத்தாலே வேறேதேகமெடுத்து வேறேவிழுந்து சீவன்பிரத்தியேகமாம். இதல்லாமற் பெண்ணாகிற கெற்பத்துக்கு முதல்நாள்கல்லமாம் இரண்டாநாள் புற்பனியாம் மூன்றுநாள் யலைவயாம்-௪-ல் குன்றியாம்-௫ ல் பெருமுத்தாம் ௰ ல் மூன்றுகுன்றியாம் ௰௫ ல் சுண்டைக்காயாம் மாதமொன்றில் தான்றிக்காயாம். இரண்டாமாதம் விளாங்காயாம். மூன்றுமாதம் படுவாம்இதுபெண்கெற்பத்துக்கு ஆண்கெற்பமாகிற் சதுரமாம். அலியாகிற் பிறைபோலேயாம். இங்ஙனமாதலால் இந்தக்குணங்களில் முன்சொன்னஇரண்டாமாதமுதலாய் வருகிறதெல்லாம் பெண்ணுக்கும் அலிக்குங்கொள்க வென்றறிக. இந்தப்பிண்டோற்பத்திநாள்களேறக்குறையப்பலவிதஞ் சொல்வதால்தோஷமில்லை. அஃதெப்படி, சூதகம்நின்றால் கெற்பச்சின்னங்கள் தோன்றுகிறதும் பத்தாமாதம் பிறக்கிறதுஞ் சாத்திரப்படி இஷ்டமானகையாலென்றறிக.



ருச-வது—அத்தியாயம்.

## கெற்பந்தரிக்குநாள்பேதம்.

உள்ளநாட்பேதத் துற்பத்தியாம்பிள்ளை

கள்ளநதியுடல்கதிவெகுவிதமாம்.

கெற்பந்தரிக்கிற நாள் பேதத்தாலே பிறக்கும்பிள்ளைகள் குணமுந் தேகமும்பலவிதங்களாம். அஃதெப்படி, அமாவாசைநாள் கெற்பந்தரிக்கில் கறுவலாய் நாலுவிர லாறுவிரலாய்ப்பிறக்கும் தூரப்பிரயாணம்போன ஆண்பிள்ளை யன்றிராத்திரி பெண்ணைக்கூடிற் பிறந்தபிள்ளை யாலே தேடின பொருளும் போக்கடித்து அந்தப்பிள்ளையும் அகுதியாம். தூரத்தில் நடந்துவந்த பெண்ணை யன்றிராத்திரிக்கூடில் அறிவில்லாதநீதிமானுவன். புணர்ந்தவுடனேமுழுகில் நல்லதாய்ப்பிறக்கும். புணர்ந்து முழுகாதநாள் பிள்ளை ஆகாதாம். அமாவாசை பிரதமைநாளிற்கூடில் பொய்பேசுகிறவனுவன். அமாவாசை கழிந்த மூன்றுநாள் கூடிப்பிறந்தபிள்ளை அற்பாயுளாம். பௌர்ணை பூரண சந்திரனுள் கூடிப் பிறந்தது ஆனைவடிவாம். மற்றுநாள்பிரதமையிற்கூடிப் பிறக்கிறது குமரகண்டன்வலியாம். பிறைபிறந்த முதல்நாளும் நடுவிற்பதினைந்தாநாளும் ஒடுக்கத்துநாளுங் கூடிப் பிள்ளையுண்டாகிற் பித்தன்வெண்குட்டங் கருங்குட்டம் முசலகன்வலியுமாம். புணர்ச்சியிற்பேசாததைப் பேசினுற் பெட்டைநாயாம். அம்மணமாய்ப் பெண்புணரிற் பிறந்தபிள்ளைமிடியனும். வேறொருத்தியை நினைத்துப்புணரில்ஆறுவிரல் நாலுவிரலாம். பிறைகண்டமூன்றுநாளும் ஐந்தாநாளும் எட்டாநாளும் பத்தாநாளும் எல்லாமாதத்திலுஞ்சேரவொண்ணுது. வெள்ளிநாள் பகல் மூன்றுஞ் சாமத்திற் கூடிப் பிறந்தபிள்ளை மாறுகண்ணும். இருவர்கூடும்பொழுது வழும்பைப் பெண்புடைவையிற்றுடைக்கிற் பெண்ணீங்கும். ஆண்புடைவையிலே பெண்துடைக்கில்ஆணீங்கும். பெண் ருதுகமான மூன்றுநாள் கூடிப்பிறந்த பிள்ளை கள்ளனும் நாலாநாள்பாவியாய் மூடனுய்த் தன்வயிறுவளர்க்கிற தருமையாம். ஐந்தாநாள் புலவனும். ஆறுநாள்விருதகேடனும். ஏழாநாள் தயாபரனும். எட்டாநாள் தரித்திரனும். ஒன்பதாநாள் குபேரனும். பத்தாநாள் காமிகனும். பதினோராநாள்வியாதியாளனும். பன்னிரண்டாநாள் பண்டிதனும். பதின்மூன்றுநாள்விவேகியாம். பதினாலாநாள் யோகியாம். பதினைந்தாநாள் ராசாவாவன். பதினாறுநாள் சிவயோகியாவன். பதினேழாநாள் முதற்கூடிற் கெற்பந்தரியாதென்றறிக.

## ருரு-வது—அத்தியாயம்.

## சாமத்திலுற்பத்தி.

ஓதுமென்சாமத் துதிக்கும்பிள்ளை

பேதமுந்தீமைபெருநல முரைத்தது.

முதற்சாமஞ் சூரியோதையத்திற்பிறக்கி லழுகிறபேரைக் கண்டுவிட்டுப்போகாமலந்தஸ்திரிகளையூனங்கள் செய்கிறபாவியாவன். பின்புஅந்தச்சாமத்துக்குள்ளாகப் பிறந்தவன் கோபியாவன். இரண்டாஞ்சாம மத்தியானத்திற்பிறந்தவன்சாந்திதாந்திசமைதமையுள்ளவனுவன். மூன்முஞ்சாமத்திற்பாதகனும் நாலாஞ்சாமத்தில் அஸ்தமன சமீபத்திற்பிறந்தபிள்ளை ஹானியாவன். இனி இராத்திரிகால முதற்சாமத்தில் அதமனுவன். இரண்டாஞ்சாமம் பாதிராத்திரியிற் சாந்தி தாந்தி சமை தமையுள்ளவனுவன். மூன்முஞ்சாமத்திற் றீதுள்ளவனுவன். நாலாஞ்சாமத்திற் காந்தியுடையவனு யோகியாவன். இப்படிச்சாமபேதங்களென்றறிக.



## ருசு-வது—அத்தியாயம்.

## சுரத்திலுற்பத்தி.

சுரபேதத்தாற் றேன்றியகெற்பம்

வரமாஞ்சிருட்டி வகையதுரைத்தல்.

சுரத்திற்புத்திரோற்பத்திவிதம் விஷயத்தி லிங்கம்நேர்ந்து நீளிற் பெண்ணும். பருத்துநீளி லாணும். அடியும் பருத்து நடுவும் பருக்கிலாண் பெண் மாறி மாறிப் பிறக்கும் புருஷன் வலநாடிநடந்து சுக்கிலமும்பெருகி லாணும் புருஷன் வீரியம்யோனியிற்பாயும்பொழுதுபெண்ணுக்கு அபானவாயுவெதிராகிலும் பெண்கெற்பத்தில் வாயுவெதிர்க்கிலும் கருவுசிதறி மைந்தர்கள்பலவாகும். தகப்பன்வாயுக் குறளாகப்பாயிற் குறளாகும். வாயு நின்றுநின்றுபாயில் முடமாகும் வாயு கெற்ப நடுப்படிற் கூனுகும். புருஷன் வாயு மிகுத்துப்பாயில் தரணியாளும். அக்கினி மிகுத்தாற் கெற்பத்திற் பாயந்ததுபாழாம். வாயு தீர்க்கமா யுயரப்பாயி லுயரமாவன். பாய்கின்ற வாயு கெற்பத்தில் நடுவல்லாமல் விலகில் அந்தப்பிள்ளை தாய்வயிற்றில் மரித்து தாயுமடியும். இளைப்பாயிருக்கும்பொழுது பாயில் முடமாம். வாயுச் சிதறிலுங் கூனும். அக்கினி

மிருக்கி லாண்மலடாம். தகப்பனுக்குவாயுப் பூரகமாயிருக்கும்பொழுது பாயி ல் நல்லபிள்ளை ஆயுசுடையனும். ரேசிக்கும்பொழுதுபாயிற் கெற்பமில்லையா ம். தகப்பன்வாயுக் கும்பகமாகிற் சிவரூபாயுசுடையவனும். வலத்தில் நடக் கும்பொழுது பாய்ந்தாலாணும். இடத்தில்நடக்கையிற்பெண்ணும். இருபாரி சமுஞ் சரியாகில் அலியாம். பாய்கின்ற வாயுக்குறையிற் குறளாகும். பாய் கின்றவாயுவிளைகில் முடமாகும். பாய்கின்றவாயு நடுப்படிற் கூனாகும். பாய் கின்றவாயு மாதாவுக்கில்லையேல்தகப்பனுக்கு அப்போ தெந்தக்குண முண் டோ அந்தக்குணமாம். எந்தப் பூதமாறிநடந்ததோ பிள்ளையுமந்தப் பூதசிற மாம். தகப்பனுக்குவாயுவெங்கும் பூரியாமல் நடக்கும்போது பாய்கிறபிள்ளை க் கவயவங்களீனமாம். தகப்பன்வாயு வலதுபாரிசத்தில்மாறி ஐந்துநாழிகை யுந் தப்பாமல் நடக்கும்போது வலதுபாரிசப்பிரவேசத்திற்கூடில் வயதுநூ றும். இந்தவாயு ஐந்துநாழிகை நடக்கிறவனுக்குச்சென்றநாழிகைபோய் நி ன்றநாழிகை யெம்மாத்திரமுண்டோ அம்மாத்திரத்துக்குவயதுண்டாம். அஃ தெப்படி ஒருமா நாழிகைகுறையி லாயுசு ஒருவருஷங் குறையும். இப்படி ப் பெண்கெற்பத்தில் வீரியம் பாயும்பொழுது ஆணுக்கு ஒருமாநாழிகையி ருந்தா லொருவருஷமாயுளா மென்றறிக. ஒருமாநாழிகையிலிருந்து ஏறின த்திற்கெல்லாம் ஐந்துநாழிகைமட்டாய்ச்சேரும். ஒருமாநாழிகைமுத லெத்த னை நாழிகை குறைகின்றதோ அதற்கு மாவுக்கொருநாழிகை குறையுமென் றறிக. இப்படி தகப்பன்வாயு ஐந்துநாழிகைக் கொவ்வொருதர மாறிநடவா மலாறுநாழிகை முதற் பத்துநாழிகைமட்டாக ஏறிமாறி மாறி நடக்கிறவே ளையிற்பாயி லிதற்கு மொருநாழிகைக்கு இருபதுவயது குறையுமென்றறிக. பின்னுந்தகப்பனுக்கு ஒருபாரிசமாகப் பத்து முதல் அறுபது நாழிகைமட்டா கவு மொருநாள்முத லொருமாதமட்டாகவும் ஏகநாடியில் நடக்குங்காற்கூடி ல் அந்தந்த நாள்களுக்குத் தக்கதாகக் கால சக்கரத்தில் ஏகநாடிநடக்கிறவ னுக்கு ஆயுளெப்படிசொல்லியிருக்குதோ அதைப்பார்த்து அப்படியறிய வும். ( இனிப்பெண்பால்இலட்சணம் ) பெண் யோனிஆழமாகிற்பெண்பெ றும் தாயுதரத்தில் மலமிகில் மந்தனும். சலமிகில் மூங்கையாம். மலஞ் சலஞ் சரியாகிற் கண்ணில்லாதாம். பெண்ணுக்குக் கருப்பைசாய்ந்தாலும், புழுமிகி னும் அக்கினி மிகினும் வாயுமிகினும்பெண்மலடாம். பின்னொருபாடம். மலமி கினூமையாமென்றும், பெண்புருஷனைக் கூடும்போது வயிராக்கியமாய் மல ம்விட வாரத்தை யடக்கிற் பிள்ளைகுருடுகளாம்.சலமடக்கி னூமையாம். இனி ஆண்பால் பெண்பா லிரண்டுக்குஞ்சரியாகச்சொல்வது யோனிலிங்க மாழஞ் சரியாகில் அலியாகும். புருஷனுக்குச் சந்திரனும் பெண்ணுக்குச் சூரியனுமா கிற் பெண்ணும். புருஷனுக்குச் சூரியனும்பெண்ணுக்குச் சந்திரனுமாகி லா ணும். இருவருக்கு மிப்படி நடக்கிறவாயு இடைவிடாமற் சரியாகநடக்கி லா ணாகிலும், பெண்ணாகிலுஞ் சகல சற்குணத்துடன்கூடி அழகாய்ப் பிறக்கு ம். இருவருக்குஞ் சரிகும்பக மாகிற்கெற்பமில்லை. இருவருக்குஞ் சூரியனாகில் அலியாம். இருவருக்குஞ் சந்திரனாகிற் சிகண்டியாம். சுக்கில சுரோணிதமொ க்கில் அலியாம். இருவருக்கு மொருவர்மேலொருவரன்பாய்ப் புணரும்போது

இருவருக்குமேகநாடி தீவரமாய்நடந்தாலும் ராசாவாவன். இருவருக்குமிருபா ரிசத்திலுமோடிச் சுக்கிலமு மிரத்தமுஞ் சமனுகிற் பிள்ளைசெத்துவிழும் இருவர்வாயுவு மொன்றாய்க் கலக்கி லதுஅணிலமா வுயிர்ப்பாய் வந்தியங்கியழியும். இனி யோகியானவன் தன்பெண்சாதியுடனே புணரி லந்தப் பிள்ளை வாழுநாளுஞ் சாவுநாளுமறிவான். சரசாத்திரஞ் சோதிஷமறிந்தவன் புணரிற் பெண்ணுணுகிறதும் பலாபலமுமறிவான். இருவருக்குஞ் சுவாச மெடுக்கிற பிள்ளைகள் நாலுவிதமாய்ப் பலவாய்ப் பிறக்குமென்றறிக. ஆறாற்கெற்போற்பத்தி இத்தனைவிதமாய்ச் சொல்லுகையினுலே யெது நிபத்தியாவதென்னிற் சிவன்அவரவரிடமாயிருந்து பிரேரிக்கிறதினுலே யவரவர் கன்மங்களுக்கேற்க முன்கெற்பத்துக்குச் சொன்னலட்சணங்களெல்லாங் கூடியும் பிறக்கும். அல்லது முன்சொன்ன ஒவ்வொரு விதங்களாலே பிறந்தாலு மந்தக்கெற்ப மெப்படியாகவேண்டுமோ அப்படிக்குத் தெய்வஞ் சககாரியாகப் பிரேரிக்குமென்றறிக. எப்படிப் பிரேரிக்குமென்றால், வித்தின்வழி வித்துப் போலவும் அச்சின்வழி யச்சுப்போலவு மிப்படியுமல்லாமல் ஒரு அச்சில்ஒருஅச்சாயும் மனேகற்பிதங்களாலும் இதெல்லா மனிதயோனிக் கென்றறிக. மனிதயோனியாவது பையிற்பிறப்பதெல்லாமாம் பையிற் பிறக்கிற தேதென்றால் பட்சிகளாகிலும் மிருகங்களாகிலுந் தோல்க் காதாயிருக்கிற சீவனெல்லாம் பையிலேபிறக்கும். இதல்லாமல் தோல்க்காது முண்டாய் கையிலெடுத்து வாயிலே போடுகிறதுமாய் குந்தியிருப்பதுமான சீவனெல்லாம்மனித யோனியென்றறக. இப்படி தெய்வம்பிறப்பின்விதம்அனேகஞ் செய்யுமென்றறிக.



௩௭-வது—அத்தியாயம்.

## காலசக்கரம்.

ஆயுப்பரிட்சை யறியும்வகையைக்

காயத்துள்ளாங் காலசக்கரமே.

௱௩௭. சாற்றியயோகசித்தி தான்வருமளவுஞ்செல்ல
வாற்றவங்காயுவேண்டு மாதலாலதனையிங்ங
னேற்றியவகையேசோதித் தாயுவினெல்லைகண்டு
போற்றுகயோகமென்றே புகன்றனமறைகணின்றே.

௱௩௮. மிக்கநல்போகந்தன்னைச் செய்யுமாவிரும்பினோற்
றக்கவவ்வுடலினின்றுஞ் சாவுநீர்வழங்கினுற்போ

லுக்கவப்பிராணன்ருனு முயிர்நிலைகாலமென்னுஞ்
சக்கரத்தறியவேண்டுஞ் சக்கரத்தன்மைகேண்மோ.

௱௫௯. ஓங்குநல்லயனந்தன்னுள் மலாதிகழொழித்துப்பின்னை
யாங்குசீதன்னைபாடி யடிசிலுமொருபோதார்ந்து
திங்கதாங்காயநீக்கச் சிவனிருதாளுஞ்சென்னி
தாங்கியமனத்தனாகித் தாமரைத்தலத்திற்சார்க.

௱௬௰. அன்றதுவடதிசையயனமாயிடி
லொன்றியவிடமலால் வலத்தினின்றெழும்
தென்றிசையயனமேற்றிகழ் செய்வாயுவு
நின்றதோர்வலமலா விடத்தினின்றெழும்.

இப்படி அயனகாலத்தி லொருபொழுதாகவுண்டு மலசுத்தி சரீரசுத்தி செய்து கொண்டு உத்தராயனமாகிற தைமாதப்பிறப்பில் நாழிகைதப்பா மல் அறிந்து அந்தநாழிகையிலேயிடத்திலோடினாலும் வலமாக்கிக்கொண்டு உத்தராயனஉதையநாழிகைமுதலாய் முந்தமுந்தவலத்தில்ஐந்துநாழிகைநட ந்து பின்பு,இடத்தில் ஐந்துநாழிகைநடந்து இப்படிமாறிமாறித்தப்பாம லந்த மாதமெல்லாம் நடந்தால்,வயது நூறென்றறிக. இனித் தெட்சணாயனஉதை யநாழிகைதப்பாமற் சோதித்து அறிந்து அந்தநாழிகையில் வலத்திலோடி னாலும்இடமாக்கிக்கொண்டு முந்த இடம் ஐந்துநாழிகை பின்பு வலம் ஐந்து நாழிகையாக இப்படிமாறிமாறித் தப்பாமலந்தமாதமெல்லாம்நடந்தால் வய து நூறுண்டென்றறிக.

உதாரணத் திரட்டு.

௱௬௧. ஐந்துமுதல்பத்துப் பதினைந்தோடாறைந்தாய்
வந்தகடிகையின்கீழ் மன்னிடுமாண்டுக
ளைந்துக்குநூறென்ப தறுபத்திரண்டுபின்
வந்தைம்பதின்பி னெட்டொன்றறைகுவாம்.

என்றது ஐந்துநாழிகைக்குவயது நூறு ௬-க்கு-அ௰- ௭-க்கு-௬௰௨-அ- க்கு ரு௰- ௯-க்கு-௩௰௨- இப்படி-ரு-முதல்-௯-மட்டாக வருஷமாயுளென்றறிக.

௱௬௨. இருபத்தெட் டிருபத்தைந் தீராறுண்டிவையெல்லாங்
கருதியகடிகைக்குக் கணக்காகக் கழிந்த தற்பின்.

என்றது-டஇ-உடஅ-டருஇ-உடரு-ஙடஇ-டஉ இப்படி ஐந்துமுதலென்றக விக்கு இலக்கம்-அ-க்கு-வருஷலக்கம்-அ-ம்-இதுஉத்தராயனநாழிகைமுத விரண்டுபாரிசமுமாறிமாறிநடக்கிலிப்படிவயதுண்டென்றறிக.

ரசுங. உற்றறிவைந்துமுணர்ந்தறிவாரோழுங்
கற்றறிவெட்டுங் கலந்தறிவொன்பதும்
பற்றியபத்தும்பலவகைநாழிகை
யற்றதறியா தழிகின்றவாறே.

ரசுச. அழிகின்றவாண்டவையைந்துமூன்று
மொழிகின்றமுப்பது மூன்றென்பதாகுங்
கழிகின்றகாலறுபத்திரண்டென்ப
தெழுகின்றவீரைம்பதெண்ணற்றிருந்தே.

என்றது அன்னுவயமுமாக- ட-கூ-அ-எ-சு-ரு-ஆவகை-சுஇ-உடஅ-ஙடங-ருட-சுஉ-அட-ள- இப்படிஆயுள்பேதமென்றறிக. இப்படிமாறிமாறிநடவாமல்வலதுநாடியில் ஏகநாடியாக முப்பத்து மூன்றுநாள் நடக்கில்.நாள் - க - நாளெல்லா மேகநாடிநடக்கில்-ட-வருஉ-நாள்நடக்கில்-அ-வரு- மூன்றுநாள்நடக்கில்-சு-வரு- நாலுநாள்நடக்கில் -ச-வரு-ம்.

ரசுரு. பெருகுநாளொன்றிரண்டு மூன்றுநாலென்றும்பேயாக்
கொருபத்தெட்டாறே டொருநாலாண்டொட்டிடுக.

ரசுசு. நாளைந்துபத்துபதினைந்துநாட்டியதற்
காளந்தகுமூவான்டிரண்டொன்றுகுமால்
மாளநாள்கணூலிந்தோடையைந்துமாய்
வீளையிற்சூழ்திங்களாறுடனே முத்திங்கடொன்றிடுமே.

என்றது -ரு- க்கு - வரு - ங -ட- க்கு - வரு -உ-டரு- க்கு-வரு- க-நாள்-உட-க்கு-மீ - சு -உரு- க்கு- மீ - ங -உசு- க்கு - மீ- உ- உஎ - க்கு-மீ- க -உஅ- க்கு-நாள்-டரு- உகூ- க்கு- நாள்-ட-ஙட-க்குநாள்-எ-ஙக-க்கு-நாள் ங-ஙஉ-க்கு-நாள்-உ-ஙங-க்கு-நாள்-க- இப்படி - ஒருநாள்முதல் முப்பத்துமூன்றுநாள்மட்டாக ஏகநாடிவலதுபாரிசமாய் நடக்கில் வெகுவாய் வியாதியும் பீடையு முபத்திரவமும்பட்டுஇங்கேசொன்னபடி வருஷம் மாதம் நாள்களிலே சாவானென்றறிக. இந்தப்படிக்குத்திரட்டில் முன்கவியிருபத்தைந்து நாளுமல்லாமல்.

௱௬௰௭. இருபத்தாறாதியா யெண்ணான்குநாளீறாய்
வருதரநாள்களுக்கு மதியிரண்டொன்றாகு
மொருபத்தைந்தொருபத்தேழொன்மூன்றிரண்டாகு
மருகுநாளதுவறிவாராப்பிலாயோகிகளே.

௱௬௰௮. உண்ணாடிவட்டந்தன்னிலோங்குமுப்பத்துமூன்றில்
விண்ணாடுநாளான்றாகும் விளங்கிடவறிந்துகொள்க
பண்ணாடுமொழியினாய்கேள்பகரொணாவாயுக்காணுங்
கண்ணாடியனையகாலச்சக்கரக்கணக்கிதாலே.

௱௬௰௯. தலைவனிடம்வலஞ் சாதிப்பாரில்லை
தலைவனிடம்வலமாயிடிற்றையற்
றலைவனிடம்வலந் தன்வழியஞ்சிற்
றலைவனிடம்வலந்தன்வழிநூறே.

௱௭௰. ஏறியவாறினி லெண்பதுசென்றிடுந்
தேறியவேழிற் சிறக்கும்வகையெண்ணி
லாறொருபத்தாயமர்ந்தவிரண்டையுந்
தேறியேநின்றுதெளியிவ் வகையே.

௱௭௰௧. இவ்வகையெட்டுமிடம்பெறவோடி
லவ்வகையொன்பதே யென்னவறியலாஞ்
செவ்வகையொன்பதுஞ்சேரவேநின்றிடின்
முவ்வகையாமதுமுப்பத்துமூன்றே.

௱௭௰௨. மும்மூன்றுமொன்று முடிவுறநின்றிடி
லெண்மூன்றினுமிட வகையாய்நிற்கு
மைம்மூன்றுமோடியகலவேநின்றிடிற்
பன்மூன்றோடீராறுபார்க்கலுமாமே.

௱௭௰௩. பார்க்கலுமாகும் பகல்முப்பதாகி
லாக்கலுமாகுமவ் வாறிரண்டுள்ளிட்டும்
போக்கலுமாகும் புகலறவொன்றெனிற்
றேக்கலுமாகுந்திருந்தியபத்தே.

௱௭௪. ஏயிருநாளுமியல்புறமேவாடிடிற்
பாயிருநாளும் பகையுறநின்றிடுந்
தேய்வுறமூன்றுந்திகழுவேநின்றிடி
லாயுருவாமென்றளக்கலு மாமே.

௱௭௫. அளக்கும்வகைநாலு மவ்வகையோடிடில்
விளக்குமொருநாலுமெய்ப்படநிற்குந்
துளக்கும்வகையைந்து தூயநெறியோடிற்
களக்கமறமூன்றுகாணலுமாமே.

௱௭௬. காணலுமாகுங்கருதியபத்தோடிற்
காணலுமாகுங்கலந்தவிரண்டையுங்
காணலுமாகுங்கலப்பறமூவைந்தேற்
காணலுமாகுங்கருத்துறவொன்றே.

௱௭௭. கருதுமிருபதிற்காணவாறாகுங்
கருதிவையைந்திற்காண்பதுமூன்றாங்
சருதுமிருபதுட்ஞறுகாணிற்
கருதுமிரண்டெனக்காட்டலுமாமே.

௱௭௮. காட்டலுமாகுங்கலந் திருபத்தேழிற்
காட்டலுமாகுங்கலந்தேழு மொன்றெனிற்
காட்டலுமாகுங்கலந்திருபத்தெட்டிற்
காட்டலுமாகுங்கலந்தவீரைந்தே.

௱௭௯. ஈரைந்துமைந்துமிருமூன்றுமெட்டுக்கும்
பாரஞ்சிநின்றபகைபத்துநாளாகும்
வாரஞ்செய்திவ்வகையாறஞ்சாமாகி
லோரஞ்சோடொன்றென்னவொன்றாகுநாளே,

௱௮௰. ஒன்றியநாள்களொருமுப்பத்தொன்றாகிற்
கன்றியநாளுங்கருத்துறமூன்றாகுஞ்
சென்றுயிர்நாலெட்டுஞ்சேரவேநின்றிடின்
மன்றியலாகுமனையிலிரண்டே.

௱அ௧. மனையினிலொன்றுகுமாதமுமூன்றுஞ்
சுனையினிலொன்றுய்த்தொனித்தனனங்கி
வினையினிலோங்கிவெளிசெய்துநின்றும்
றனையுறநின்றுதலைவனுமாமே.

இந்தப்பதின்மூன்று திருமந்திரமு முன்சொன்னதிரட்டுப்படி ஆயுளுக்கு சொன்னதுசரியென்றறிக. இப்படியொருநாழிகைமுதல் முப்பதுநாழிகையுமி ருபாரிசமுமாறிநடக்கில்நாழிகைக்குச்சொன்னவாயுளுண்டாமென்றறிக. இனி ஒருநாள்முதல் முப்பதுநாளும் உத்தராயனமுதலாக ஏகநாடியி லொருபாரிச மாய்நடக்கிற் சூரியனிலாகிற்சாவு சந்திரனிலேகநாடி நடக்கிற் சகல வியாதி முதலியவற்றுற்றுக்கப்பட்டுப்பிழைப்பான்சாவில்லையென்றறிக. உத்தராயண இருதுக்கு வலத்தில்நடவாமலிடத்திலேகநாடியாய் அந்தமாதமெல்லாம்நடக்கி ல்உபாதியுண்டாய்ச் சாவில்லை. தெட்சணாயனத்துக்குஇடத்தில் நடவாமல்வல த்தில் அந்தமாதமெல்லாம் நடக்கில் உபாதிபட்டுச்சாவா னென்றறிக.

௱அ௨. இடையினிலியங்குமதியம்பிங்கலையி லிரவிதானியங்கிடும்பி
ராண,னிடமுறவிடையிற்பிங்கலைதானின் றியங்கும்போதுத்த
ரவயனங், திடமுறவிடையினின்றுபிங்கலையிற் செல்வதுதென்
றிசையயன,மடைவுறவிரண்டின்சந்தியின்பிராண னஃதமாவா
சையென்றறைவாம்.

என்றது இடையிலியங்குவது சந்திரன் பிங்கலையிற் சூரியன் இப்படிசு பாவ மியங்குகிறது இப்படி உத்தராயனத்தில் பிங்கலைநடவாமற் பிராணன் இடப்பாரிசத்தில் நடக்கிலுந் தெட்சணாயனத்தில் இடையில்நடவாமற் பிங் கலையில்நடக்கிலும் இப்படிமாறியேக நாடி யொருபாரிசமாய்நடக்கில் ஆயுள் குறையு மென்றறிக. இடைபிங்கலை யிரண்டின் சந்திப்பு அமாவாசையெ ன்றறிக இதல்லாமல் முன் உத்தராயனந் தெட்சணாயனத்துக்குச் சுபாவம் வலத்திலு மிடத்திலும் நடக்கில் அந்த மாதமெல்லாம் பார்த்து ஆயுளறிகி றது சொல்லிப் பின்னொருவிதம் உத்தர தெட்சணஞ் சொல்லுகிறோம் அதெ ப்படியென்றால்

௱அ௩. பற்றிநாஞ்சொன்னபடி யயனமுன்னுட் பகலோர்போழ்து
ண்டுபரிசுத்தனுகி, மற்றைநாளுத்தராயனமாந் தன்னின்மாறி
யிடந்தனிலோடும்வலந்தெற்காகும், பெற்றதோர்நாழிகைதா
னைந்துநாறும்பெறுங்கடிகைதனிற்குறையிற்பிராணனுசு,முற்
றொருமாநாழிகைக்கோராண்டுதாழு முமையேநாமுரைத்தக
னக்குண்மைதானே.

என்றது- அயனம்பிறக்கிறமுன்னுள்பகலி லொருபொழுதுண்டு பரிசுத்தனுய் மற்றுநாள் உத்தராயனம் பிறக்கிற நாழிகையில் வலதுபக்கம்நடக்கும் அப்படிநடவாமல் இடதுபக்கமாகத் திருப்பித்தெட்சணத்துக்கு இடது பாரிசம்நடக்கும் அப்படிநடவாமல் வலதுபக்கமாகத் திருப்பிக்கொண்டுபார்க்கி லிதற்கு ஐந்துநாழிகை யந்த மாதமெல்லாம் மாறிமாறிநடக்கில் வயது நூறுண்டாமென்றறிக. இப்படி ஐந்துநாழிகைநடவாம லொருமாநாழிகை யேறி நடக்கில் ஒருமாவுக்கு ஒருவருஷமாகவும் ஒருநாழிகைக்கு இருபது வ வருஷமாகவும் இப்படி ஏறினநாழிகைக்கெல்லாம் ஆயுள் குறையுமென்றறிக. இப்படிநாழிகையேறி யிருபாரிசமும்நடக்கி லேறிநடக்கிறநாழிகைகண்டு ஆயுள் இத்தனையென்றறிந்து சென்றவருஷந்தள்ளி யினி யித்தனைவருஷமென்றறிக திருப்புகிறதெப்படி யென்னில் அயனகாலத்து முன்னுள்ராத்திரிவலக்கைகீழாய்ப்படுத்து உத்தராயனப்பிறப்பி லிடதுபுறமாக்கிக்கொள்ள தெட்சணயனத்துக்கு இடக்கைகீழாய் முன்னுள்ராத்திரிபடுத்து உத்தராயனப்பிறப்பில் வலப்புறமாக்கிக் கொள்ளவும் இப்படிப்பார்க்கில் ஐந்துநாழிகைக்குமேலேறி நடக்கிற நாழிகையை யந்தமாதமெல்லாங்கூட்டி ஐந்துமுதல்முப்பதுநாழிகைக்குச் சொன்னவயதின்படி கண்டுகொள்க. இனி யொருநாள்முதல்அந்தமாதமெல்லாமேகநாடியிலோடில் அந்தநாளுக்குச்சொன்னவயதுஞ்சென்றவயதுந்தள்ளிநின்றவயதென்றறிக. கொஞ்சநாளாகிற்சென்ற காலந்தள்ளக் காரியமில்லையென்றறிக. 'இனி மேஷசங்கிராந்தியாகிற் சித்திரைமாதப்பிறப்புக்கு முன்னுளே வலதுபாகமான வாயுவைச்சோதித்துப் பார்த்துச் சூரியோதையத்திலிருந்து சித்திரைவிஷு வுதையவேளையில்இடது பாரிசத்தி லிடைவிடாமலந்தப்பாரிசமாகத்தானேமாறிநடவாமல்இடமாகவே ஐந்துநாழிகைநடக்கில் வயது -ஈ- கூ-க்கு-கூ0-எ-க்கு -அ0-அ-க்கு-எ0-கூ-க்கு கூ0-0-க்கு-டு0-0க-க்கு-ச0-0உ-க்கு-ங0-0ங-க்கு-உ0-0ச-க்கு-0-0டு-க்கு-க-இனிப் பகல் முப்பதுநாழிகை யொருநாடியிலும்இராத்திரிமுப்பதுநாழிகையொருநாடியிலும்நடக்கில் - மீ - ச - இராத்திரிபகலறுபதுநாழிகையும் ஒருநாடியில்நடக்கில் - மீ- க - இதல்லாமல்சூரியன்ஐந்துமாதம்நடந்து ஆறுமாதம்முதல்நாளில்சந்திரன்நடந்து இரண்டாநாள்சூரியன்இராப்பகல் நடந்தால் நாள் பத்து அந்தச் சூரியனிலொருசாமம் நடந்தால் வயது பதினறு இனி யொருநாள்சந்திரன்நடந்து மற்றஐந்துமாதப்பிறப்புஞ்சூரியன்நடந்தால் நாள்பத்து இனித்துலாசங்கிராந்தியாகிறஅற்பிசிமாதப் பிறப்புமுதற் சூரியோதையத்திலிருந்து சூரியனிடைவிடாம லொருநாளெல்லாஞ் சூரியநாடி யேகமாய்நடக்கில் வருஷம் ங. உ-க்கு உ. ங-க்கு க. உதையமுதல் பத்துநாழிகை நடக்கில் மீ-க-என்றும்-கூ-என்றுஞ் சொல்லும். சூரியன் -க-மீ- நடக்கிலொருநாளென்றுஞ்சொல்லும் இப்படிச்சூரியனொரு பாரிசத்திலாயின் ஆயுள்க்ஷீணமென்றறிக. இனிச்சிங்கமான ஆவணிமாதப்பிறப்பில் இடையில் ஐந்துநாளோடில் வருஷம்-ச-இனித்தனுவாகிற மார்கழி,மீ-டு-நாளிடத்தேயோடில் வருஷம்-கூ-இனி ரிஷபமாகிற வைகாசிமீ பிறப்பில் இடையிலைந்துநாளோ

டில் வருஷம் அ. இனி மீனமாகிற பங்குனிமீ ப் பிறப்பில்இடையில் நின்று பிங்கலையிற்பாய்ந்து ஐந்துநாளோடில் வருஷம்-ம- இனிக் கன்னியாகிற புரட்டாசி-மீ ப்-பிறப்பில்இடத்தி லேந்துநாளோடில் வருஷம்-கூ-இனிக் கும்பமாகிற மாசி-மீ ப்- பிறப்பில்இடையிலேந்துநாளோடில் வருஷம்-கூ-இனித் தேளாகிற கார்த்திகைமாதப் பிறப்பில்இடையிலேந்து நாளோடில்வருஷம் ச- இனி மிதுனமாகிற ஆனி-மீ ப்-பிறப்பில் வலத்தில் ஐந்துநாளோடில் வருஷம் கூ, இப்படி நடக்குமென்றறிக. இதுகளைத் தொகையாகச் சொல்வது தைமீ ப்பிறப்பில்வலமிடமாகமாறிநடக்கில்ஆயுள்விர்த்தியாகும்ஆடிமாதப் பிறப்பில்இடம்வலமாகநடக்க ஆயுள்விர்த்தியாம் இனிஆயு க்ஷீணங்களுக்குள் தைமாதப் பிறப்பில்இடமும்ஆடிமாதப் பிறப்பில்வலமும் பங்குனியும்அற்பிசியும்வலமும் இனிஆவணிமார்க்கழிவைகாசி புரட்டாசி மாசிகார்த்திகைஆனி சித்திரை யிந்தஎட்டுமாதமும் இடதுபுறமாக நடக்கும் ஆ-மீ-ம௨இ- இப்படி ஆயுட்க்ஷீணமாகுமென்றறிக. ஷை-மீ-களில் சூரியனில் ஏகநாடிநடக்கிற்சாவு நிச்சயமென்றறிக. சந்திரனில் ஏகநாடிநடக்கிலானியுஞ் சஞ்சலமுந் துக்கமும்வாதையுமுண்டாய்ச் சாவில்லாமற் போமென்றறிக இப்படி வருஷம் மாதம்பட்ச மறிவதென்றறிக. இனி சமசத்தகத்திற் சூரியனிருக்கிறவன் சென்மதாரகத்திற் சந்திரனைக்கூடிற் சுரம்பார்த்தாற் பார்த்தகாலத்தைத் திரும்பிப்பார்க்கவரும் அதெப்படி அப்போது சூரியன்ஏகநாடியிலொருசாமம் நடந்தால் வருஷம்-மகூ-நாலுசாமம் நடந்தால் வருஷம்-ம௨ - ஒருநாள் நடக்கில் வருஷம்-ம- பத்துநாள்நடக்கில் வருஷம் -க- மாதம்நடக்கிலாயுநாள்-க- இனிப் பத்துநாளிருபாரிசத்திலும் வாய்வானதிடைவிடாமல் நடக்கில்-மீ-கூ-மூக்கில் நடவாமல் வாயில்நடக்கில்நாள் -ரு - இப்படிச் சரசமபந்தம் வெகுவாயுண்டென்றறிக. பிறருடையகண் சோதியில் தன்னிழல்பிரதிபலியாமற்போனால் மரணஞ்சமீபம்.

ருஅச. ஆண்டறுதிங்கள்மூன்றுநாள்பத்தே மூஞ்சாமூன்றனவை
யடைவே, நீண்டகாதுள்ளங்கைசெவி நெற்றிநிறைந்தவைது
டிப்பிலவாகிற், காண்டிடாருருவஞ்செவிமுழக்கம்பின் கண்
ணில்வட்டத்தொளிகரக்கு, மீண்டுநாவிரதமாறு நாழிகையே
நேர்நிவிரும்பிடப்பாரோ.

என்றது உள்ளங்கா லுள்ளங்கை கன்னம்நெற்றி யிவைகளிற்றுடிப்புகளில்லையாகிற்கிரமமாக வருஷம்-க-மாதம்-கூ-மாதம் -ரு- நாள்-ம- இப்படி-ஆயுளென்றறிக. செவிசத்தம்போனால் - நாள்-எ- பின்னொருசரத்தில் மாதம்-க பரிசந்தோணுவிடில்நாள்-கூ-கண்ணொளி தோணுவிடில்-நாள்-ரு- இரசந்தோணுவிடில் நாள்-ரு- கந்தந்தோணுவிடில்நாள்-௨- மூக்குநுனிதோணுவிடில்நாள் ரு-புருவமத்தியந்தோணுவிடில் நாள்-௨-நாக்கு நுனி தோணுவிடில் நாள்-க-உள்ளங்கையில்வைத்த தார்த்தந்தோணுவிடில் நாள்-க-இந்நாளில்மரண

மாம் இதுகளுக்குப் பின்னுமொருசாத்திரஞ் சற்றேறக்குறையச் சொல்லும் இனிப் பசிதாக மல மூத்திரஞ் சுக்கில மிவ்வைந்துஞ் சரியாய்விழுந்தால்-௩ ன்றுதானேமரணம். மார்பு நெற்றி கை கால் வயிறுஉதடு களிற்பூசின சந்தங்கடுக உலர்ந்தாலுங் குளிக்கும்போதுயிந்தத்தானங்களிற்றண்ணீர்நில்லாம லுலர்ந்தாலும் பத்துநாளென்றும் மூன்றுமாதமென்றுமாம். விஷையவேளைகளிற் சுக்கிலங்கறுப்பாகிலுங் கண்டநாத முள்ளேயெழும்பினலுந் தன்னிழலிலேதலைதோணுவிடிலும் ஆயுள்-மீ-க- வீணுதண்டம்வற்றிப் பூரிப்பில்லாமற்போனால் மாதம் உ- ஷண் முகிபிடித்துச் சமுத்திரகோஷம் வெகுவாயுண்டாயானந்தமானால் ஆயுள்விர்த்தியுண்டுநாக்குக்கறுத்தாலும்உடல்கெட்டைவிடாவிடிலுஞ் சுரவீனமானாலும்மரணநாள்-ஈ-திஷ்டி- ஊர்த்தமாகிலும் நாபிமட்டாகக் குளிர்ந்துபோனாலுங் கேவலங்- தாகமெடுத்தாலும் நாள்-உ- நற்சாக்கிறத்தில் நாக்குத் தீண்டுகிறவ னுக்குத் தீண்டாவிடிலுங் கண்பஞ்சடைந்தாலுஞ் சாவுசமீபம். இனிச்சந்திரனைச் சூரியனைவட்டகையில் நீர்வார்த்து அதிலே தோன்றினநிழலை யிமையாமற் பார்க்கத்தெற்குக் குறையில் மாதமாறு மேற்குக்குறையில் மாதம்-ஈ-வடக்குக்குறையில் மாதம்-உ- கிழக்குக் குறையில் மாதம்-க-நடுக்குழியில்-நாள்-௰- உள்ளங்கைவிரல்களைக் கண்ணிமைப்- புருவத்தில் வைத்து அண்ணாந்துபார்க்க அங்குரங்குறைந்தால் நாள்-௰-புருவந்தோணுவிடில் நாள்-கூ-தன்னிழலைப்பார்க்கத் தோணுவிடி லன்றுதானேசாவு. ஆகாசத்தில்மேகமில்லாமற்களங்கமற்றவேளையில்பத்தடிமுதற் கொண்டு ஐந்தடியாகிறபரியந்தமும் நிழலை யிமை கொட்டாமற் பார்த்து ஆகாசத்திலே சாயாபுருஷனைப் பார்க்க அந்தப்புருஷனிலே தன்ரூபமெல்லாங்கண்டால் தீர்க்காயுசு கையிரண்டுந் தோணுவிடில் வருஷம் -க- தலை தோணுவிடில் மாதம் கூ. பிஷ்டபாகத்துக்குச் சரியான முன்பாரிசம் நாபிக்குக்கீழ்பீசமட்டாகத்தோணுவிடில்பெண்சாதிமரித்துச்சவுக்கியம்போம் பாதமுநடுவுந்தோணுவிடில்மாதமூன்றிற்குத்துப்படும். கறுப்பாய்க்கண்டால் ஹானிவரும். பொன்வர்ணம்ரோகம்வரும் புகைவர்ணந் துக்கம் வெள்ளைஆரோக்கியசவுக்கியம் சிவப்புராச்சியமாளும்இனி யிந்திரதனுசு பார்ப்பது ஆகாசங்களங்கமில்லாதவேளை பார்த்து. காற்றடிக்கின்ற பின்பாரிசமாகத் தன்னிழல் முன்னாகப்பார்த்துச் சலத்திலேநின்று வாய்நிரம்ப நீர்மொண்டுத் தூம்பிரமாய்ப் பறக்க உமிழ்ந்தால்வானிலிந்திரதனுசுபஞ்சவர்ணமாய் நீரிலேயெழுந்தத் தோன்றும் பழக்கமானபிறகு வெளியிலுந்தோன்றும்அந்தவில்லுபூரணமாய்த்தோன்றில் -௵-க - இரண்டாய்முறிந்து பாதிதோன்றில் அவ்வாண்டிற்சாவு. முறிந்தவில்லில் யமனாகிலும் ஸ்ரீ யாகிலுந்தோணில் -மீ -கூ- இனிச் சூரியனைத் தண்ணீரில் நெய்யிற் பார்த்தாற்சூரியவிம்பம் பாதிதோன்றில் மீ-ஈ-வெண்மைதோன்றிலுயிர்வாழ்வு. பொன்மையாகிற்கேடு. சிவப்பாகில் நோய். கறுப்பாகில்மரணம்புகையாகிற்றுக்கம்இப்படியென்றறிக. உள்ளங்கையை யுச்சந்தலைமேல்வைத்துப்பார்க்கில் நேராய்முன்கை தோன்றிலாயுளாம் அஸ்தம் பருத்துவிரட்டிப்பாகில் - மீ-க - படல்போலேகைவிரியில்ந

ள் ஙரு- அமாவாசை பவுரணையிற் சூரியனைச் சந்திரனைத் தன்வலக்கையா லே யிடக்கண்ணைமூடித் தன்கைப்பெருவிரல் நுனியங்குலத்திலே சசி ரவி யடங்கிற் தீர்க்காயு ளாம் இதிலடங்காமல் கண்ணுக்குக்காண்பித்தால்-மீ-க. இனி மூலசரத்தில் லிங்கம் வலத்திற் சாய்தல் நன்று இடத்திற் சாய்தல்தீது நடுவாகில் மத்திமம் மத்தியபானமணக்கில் வாழ்வு புலால்நாறிற் புதல்வருண் டு பொல்லாதநாற்றமாகில் வறுமை தலைபருக்கில்மிடிக்கும் நடுநேர்கிற் றுக்க ம் குவளை யரும்புபோலாகிற் செல்வம் பலநரம்புபிணைந்து பருத்துத்தோ ன்றிற் றீங்கு லிங்கமொத்து நேர்ந்துபருக்கிற் றீங்கில்லைகுறிதாயிருந்துபருக் கிலாணும் நேர்ந்திருந்துபருக்கிற் பெண்ணும்தனுப்போலேவளையிலும் பருத் து நீளிலும்பெரியமிடியாய்மரிக்கும் அண்டமொன்றியாகிலு மொன்றேடொ ன்றுருவ் வாதாகிலுந் தேகமிளைக்கினுமிடியனும் அண்டமுந் தண்டுஞ் சரியா கிற் புரவலனும் இப்படிலிங்கநிலையறிக ஒருநாளி லபானவாயு-ரு-தும்பல்-ந- மலம் -உ- நல்லது இனிநீர்விடும்போது.

ா அரு. இயல்பாகவலம்புரிந்துநிலத்தைக்குத்தி யேகமாய்வெளுத்
துமணந்திரட்டிப்பாகச், சயமானதுளிகள்விழிற் றனமுமு
ளடாய்த் தலம்புகழுமன்னவராய்ச்சதாயுவாழ்வர், மயல்பா
ய்ந்துவிடம்புரிந்துபெரிப்புநாறி வானுக்கிப்பலகலையாய்ம
ண்குத்தாம, லயல்பாய்ந்துதுளியொற்றித்தனிநீர்சிந்தி லாரா
லுமிகழமிடியாவர்நோயே.

பின்பு நீர்கருகிவிழில்நோயாகும் இரண்டுதாரையாகில் இனைத்தகாரியம்பலியா து இடதுபாரிசமாகநீர்சிந்தில் அன்னியராலே பிணக்குண்டாம்வலத்திற்சிந்தி ல் நண்பர்பகைபோலச் செல்வர் அண்டம்நனைய நீர்விழிற்பிணியாற்சாவு நீரி டமாய்ப்பின்புவலமாய் வலமிடமா யிடம்வலமாய் இப்படி முன்பின்திரிந்துவி ழிற்றருக்கில்லையாம் இனி அமாவாசை பவுரணை ஞாயிறு செவ்வாய் புதன் இ துகளிற் சலமிற்றுவிழிற்சாவுதப்பாது நோவாய்க்கிடக்கிலு நீர்மண்ணைக்குத் தியோடிலுஞ்சாவில்லை இலிங்கம்உரத்துவிகாரம்பெறினுஞ்சாவில்லை நீர்தலங் குத்தாமலிற்றுத்துளியாய் விழுந்து உவர்ப்புநாறிற் சாவு சலத்திலேவிழினும்ப கைவருண்டு இனி யொருவட்டகையிலாமற்சலத்தில்எண்ணைத்துளிகளைவிட் டுப்பார்க்கச் சாவுகாலங்கள்வருகிறதற்கும்நன்மை தீமைநோவுகள் வருகிற தற்கும் அதிலேசிலசின்னங்கள்தோன்றும் இதுமூலசரத்திற்காண்கவென்ற றிக. மூக்கிற்சுவாச மோடாமல் வாயாலோடில்மூன்றுநாளிற்சாவு மலஞ் சல ஞ் சுக்கில மிந்தமூன்றுமெப்போதும்போலேயல்லாமல் மெத்தக்குறைந்து விழில்ஒருபருவத்திலுயிர்போம் ஆறுமாதந்தன்னுடல் அலையாமலிருக்கத் த ன்னிழலிலையிற் சாவுசமீபமாம். பஞ்சேந்திரியமும்பஞ்சவர்ணமும் ஆறுருசியு மொன்றொன்றாக மாறுபாடாய்க் காணில் மாதம் -சு.

ா அசு. அருந்துதிநாநுனிதுருவனுனிமூக்கினுனிமற்றை
பொருந்துபூபார்விண்டுபதம்புருவநடுகட்கடைக

டிருந்தியிடுமா துருமண்டலமாகுமிவைதெரியா
திருந்திடுமேற்சின்னாளின்மறலி நகர்க்கெய்துவரால்.

என்றது; அருந்துதிநானுனி துருவநுனி மூக்குநுனி விஷ்ணுபதம் புருவநடு மாதுருமண்டலமாவது, கண்ணின்கடை யிவைகள்தெரியாவிடிற் சிலநாளிற் சாவன் இதழ் நாக்கு மிடறுக ளீரமில்லாமலுலர்ந்துபோகில் மாதம் -கூ-உதடு நாக்கு பல்லு பல்லீறுகள்கறுக்கில் மாதம் -கூ- தெற்குத்திசையிற் சூரியன் தேர்நடக்கக்காணிலும் பவுஷணகாலத்திலே பொன்னிறமாகிலுங் கறுப்பாகிலும் வெளியிலே யொருவுருக்காணில் - ங - ரூ - சாவு மூன்றுமாதத்திலுஞ்சொல்லுஞ் சென்மத்துந் திங்களு மேழாமிடத்திலுஞ்சாவு ஆகாசத்தில் மதப்பட்டகறுத்தயானை பகலிலேதோன்றில் -கூ - ரு-சாவு ஈரருவாள்போலிருக்கிற‧ஓணன் தலைமேல்விழிற் சிலநாளிற்சாவு தன்தேகமாகிலும் புத்தியாகிலுந்தடுமாறிலும் இராத்திரியில்வில்லிடக்கண்டாலுஞ் சந்திரன்சூரியன் இரண்டாய் முன்னேதோன்றிலுங் கல்லில் மரத்திற் கந்தர்வநகரமெதிர்ந்திடக்கண்டாலும்-ரு-க-பகலில்நட்சத்திரந்தெரிந்து இராத்திரியிற்சூரன்றாதிலுஞ் சிலநாளிற்சாவன்இராத்திரியில்நாலுதிசையிற் சந்திரன்தோன்றிலும் பகலிற் கண்ணிற்சூரன்றபேயாடிலுந் தன்னிழல்தெற்குத்தோன்றிலுஞ்சிலநாளிற் சீவன்போம். பேய்- பூதம்- நரி- கழுதை-யசுரர்- இராக்ஷதர் - கருங்காக்கை- பருந்து - குரங்கு - கடுஞ்செந்நாய்- இவைகள் தன்னைத் தின்னக் கனவுகாணிற் சிலநாளிற்சாவு சிவப்பு சிவப்புப்புடவை சிவப்புச்சாந்து சிவப்புச்சந்தனங் கனவிலே தேகத்திற்பூசிற் சாவு -ரு- அ - புற்றிற் கம்பத்திற் றன்னை மோதக்காணிலும் எண்ணெயிட்டு விரித்ததலையுடனே தென்புலத்தோ ரொருவர் கொடுபோகவு மிவர்தன்மேலேறவுந் தான்புல்லுச்சுமக்கவும் அதைக் கன்றுகள்தின்னவுங்காணில் மாதம் -க. கறுப்பாய்க் குள்ளியாயிருந்தவளைக் கனவிற் கூடிலுங் கறுப்புக்குதைகொண்டு கறுப்புப்புடவையுடுத்துக் கறுவலாய்த் தன்னைத் தாண்டக்காணில் மாதம் -க- குரங்குவந்து கிழக்குத்திசைகொண் டுபோகக்காணில் நாள் -டு- ஈந்தவ ரியாவிடிலு மியாதவரீந்தாலுஞ் சிலநாளிற்சாவார். துருவன் அருந்ததி சந்திரச்சாயைதண்டு வழி யிதுகள் தெரியாவிட்டால் வருஷம் -க-கிரணமில்லாத சூரியன் கிரணமுண்டான வக்கினி கண்டாற் சிலநாளிற்சாவு இனிச் சாக்கிர சொற்பனத்தில் பொன்வெள்ளிமேல் மனதுண்டாகில் மாதம் ய- பூதப் பிரேத பசாசு கந்தர்வ நகரங்களுஞ் சுவர்ணமய மரங்களுங் கண்டால் மாதம் கூ- நிமித்தமில்லாம விளைத்தவன் பருத்து பருத்தவனிளைத்தாலும் உடம்புகறுத்தாலும் மாதம் அ- பின்னொருபாடத்தில் மாதம் க-மலவிலுஞ் சேற்றிலுந் தன்னடி முன்னாகிலும் பின்னாகிலும் பாதியாகில் மாதம் எ-இது சிலநாளிலென்றுஞ்சொல்லும் காக்கை கோட்டான் கபோதாதிபட்சிகள் தன்தலைமே லிருந்து போனால் மாதம் கூ- மணல்மழை தன்மேல்பெய்தாலுந் தன்னிழலிலே கரசரணாதிகள் விகிர்தமாய்க்கண்டாலும் -ரு-ரு-ச-தெற்கில் மேகமில்லாதமின்னலும் நீரிலிந்திரதனுசுங்கண்டால் -ரு-ங- நின்மலக்கண்ணாடியிலும் நீரி

லும்நெய்யிலும்தன்சிரசு காணுமற்போனாலுந் தன்னை யன்னிய புருஷனை யக்கண்டாலும் மாதம்-க- தன்தேகம்பிணநாற்றம் வெப்புநாற்றமாகில் நாள் ௰௫- இடைவிடாமற் றேகம் நடுக்கெடுத்தால் பிராணன்போம் சொற்பனத் திற் கரடிகுதிரையைக்கூடித் தெற்குத்திசைபோனாலுங்கறுப்புவஸ்திரங்கட் டின ஸ்திரீயையுங் கறுப்புப் புருஷனையுங்கூடித்தெற்குத்திசைபோனாலுந்தா ன்கறுப்புப்புடவையுடுத்துநீலக்குடை பிடித்துக்கொண்டுநிர்வாணமாய்நடந் தாலும்மரணந்துரிதமாம்பகலிலேவெகுநட்சத்திரந்தெரிந்தும்இராத்திரியிலிந் திரதனுசும்இரத்தவர்னச்சந்திரனையுங்கறுப்புவர்னச்சூரியனையுங் கண்டாற்சீ க்கிரம் மரணம் பின்னுங் கறுவலான மொட்டைத்தலையன்கல்லாலெறியக்க ண்டாற்சீக்கிரம் மரணம் சூரியோதையத்திலே நரிகூப்பிட்டுத்தன்னைக்கடிக் கக்கண்டாலு மரணஞ்சமீபம்சொர்ப்பனத்திலேமயிரைவிரித்துக்கொண்டுஆ டிப்பாடித் தெற்குத்திசைபோனால் மரணம் வெள்ளையானையைத்தெற்குதி சையிற்கண்டாலும் ஒட்டகங் கழுதை குதிரை கட்டின தேரிற்போனாலும் மரணம் இந்தவிதங்களால் மரணகாலங்களையறிந்து பரமேஸ்வரனையிடைவி டாமல்பாவித்து தியானஞ்செய்வானாயினும் அன்றி - ஞானசமாதிபுரிந்தானா யினும்மோக்ஷமடைவானென்றறிக.

---

## ரு அ-வது—அத்தியாயம்.

## சரத்தில்வருஷபலன்.

### வருஷ யயன மாதம் பட்சந் தினமுஞ்சரத்திற்செய்பலன்சொல்லல்.

இனிச்சரத்தில் வருஷபலன் பங்குனிமாதம் அமாவாசைராத்திரி சுத் தாத்மனாய நாடிசோதித்துச் சுபதத்துவத்திலேசூரியன்நடக்கும்பாயின்வலக் கை கீழாய்ப் படுத்து அருணோதையத்தி லெழுந்து பார்த்துச் சோமன் சுப தத்துவத்தில் நடக்கும்போதுகிழக்குவடக்கு வாரசூலமில்லாமலிடக்காலைமூந் தவைத்து ஐந்தடிநடக்க இப்படி மூன்றுநாள் சோமனடக்கப் பார்த்துக் கொண்டால் ஒருவருஷபலனுண்டு இதிலொருநாள்சோம னடவாமற்போனா லொருகந்தாயப்பலனில்லைஇனி அயனபலன்உத்தராயனந்தைமாதப்பிறப்பி ன்முன்னைநாளிராத்திரிசூரியனடக்கும்போது அந்தக்கைகீழாகப் படுத்துஅரு ணோதயமெழுந்துசந்திரன்சுபதத்துவம்நடக்கப்பார்த்துப் படுத்தவிடத்திலெ ழுந்து கிழக்கு வடக்கு வாரசூலமில்லாம் விடக்கால் முன்னாக ஐந்தடிநடக்க ஆறுமாதப்பலனுண்டு இனித்தெட்சணாயனம் ஆடிமாதப்பிறப்பின் முன் னாளிராத்திரி சந்திரனைச்சோதித்து இடக்கைகீழாகப்படுத்துஅருணோதையத் திலெழுந்து சூரியசுபதத்துவம் நடக்கப்பார்த்து தெற்குவடக்கு வாரசூலந்த ப்பி வலக்கால் முன்னாகவைத்து நாலடிநடக்க ஆறுமாதப்பலனுண்டு இனி மாதபலம் மற்றப் பத்து மாதத்துக்கும் அமாவாசைவிதியைநாளிலேசந்திரோ

தையத்திற் சந்திரன் சுபதத்துவத்தில்நடக்கப் பிரதமை யுதையத்திலெழுந்து சோமனுடிநடக்கும்போதிடக்கால்முன்னாக ஏழடிவைத்து வடக்குக்கிழக்கு வாரசூலமில்லாமல் மூன்றுநாள்நடக்கப் பட்சபலனெல்லா முண்டு இதிலொருநாள் சோமனுடவாவிடில் ஐந்துநாட் பலனில்லை இனிப் பட்சபலமாவது கிருஷ்ணபட்சம் அமாவாசை ராத்திரி சூரியன் சுபதத்துவ மநடக்கும்போதுவலக்கை கீழாய்ப்படுத்துச் சுற்றிப்பார்த்துக்கொள்ள பக்ஷமாதப்பலனுண்டு இனிச் சுக்கிலபட்சம் பவுரணை பூரணச்சந்திரன் சுபதத்துவத்தி லந்தவிராத்திரி யிடக்கைகீழாய்ப்படுத்து அருணோதையத்திலெழுந்து சூரியனடக்கையில் மற்றநாள் பகுளபாட்டியமியில் மேற்குத்தெற்கு வாரசூலந்தப்பி வலக்கால்முன்னாக மூன்றடிநடக்க ஐந்துநாட்பலனுண்டு பகுள விதியைப்பார்க்கப் பத்துநாட் பலன் திறிதிகைபார்க்கப் பதினைந்துநாட்பலன் இப்படி மூன்றுநாளும்பார்க்க மூவைந்துநாட்பலனுமாம் இனிவாரபலன்.

௱அ௭. வெள்ளிவெண்டிங்கள்விளங்கும்புதனிட
மெள்ளியமந்தனிரவிசெவ்வாய்வலம்
வள்ளியபொன்னேவளரும்பிறையிடந்
தள்ளியதேய்பிறைதான்வலமாமே.

என்றது, வெள்ளி திங்கள் புதன் மூன்றுநாளைக்கும் முன்னைநாளிராத்திரி வலக்கை கீழாய்ப்படுத்து உதையத்திற் சந்திரனடக்கில் நல்லது செவ்வாய் சனி ஞாயிறு மூன்றுக்கு முன்னைநாள்ராத்திரிசந்திரனிடக்கை கீழாய்ப்படுத்து உதையத்திற் சூரியனடக்கில்நல்லது இனிவியாழக்கிழமைமுன்வாரம்-உ-ம்வளர்பிறைபின்வாரம்-உ-ம்-தேய்பிறை ஆ-வாரம்-எ-இனி முன்வாரமூன்றுக்குங்கிழக்குவடக்குவாரசூலமில்லாமலிடக்கால் மூன்றடிநடக்கப் பின்மூன்றுவாரமுந்தெற்குமேற்குச்சூலந்தப்பிவலக்கால்முன்னாகமூன்றடிவைக்க இப்படித் தப்பாமல்நடக்கிறவனுக்கு-ஹ-மீ-பட்சம் வாரமிதுகளிலேவருகிறநவக்கிரகப் பீடைகளும்தின தோஷங்கள் நட்சத்திரதோஷங்களெல்லாந்தீருமென்றறிக இப்படிச்சரம்பாராதபேருக்கெல்லாம் எல்லாப்பீடைகளு முண்டென்றறிக.

---

௩௬-வது—அத்தியாயம்.

## நவக்கிரகராசிநட்சத்திரஞ்சரத்தில்நடப்பது.

நவக்கிரகராசிநட்சத்திரங்க

ளுபக்கிரமமாய்ச்சரமுள்ளிலடைப்பது.

இனிக்கிரகநிலை சந்திரனடக்கையிற் பிருதிவியில்வியாழம் நீரிற்சோமன் வன்னியில் வெள்ளி வாயுவிற் புதன் வானில்வாஸ்கஇந்த வைந்துகிரகமுஞ் சந்திர

ருடி பஞ்சபூதத்தில்நடக்குமென்றறிக. இனிச் சூரியன் நடக்கையில் மண்ணில் சூரியன் நீரில்சனி தேயுவிற்செவ்வாய் வாயுவில்ராகு வானில் கேது இந்த-ரு-ஞ்-சூரியனில்நடக்குமென்றறிக. இனியிராசிசரத்தில்நடப்பது மேஷங் கடகந்துலாம்மகரம்இந்நான்குஞ்சூரியருடி சராசியாய்நடக்கும்இதில் பவுஷியகாலமறிய தனுசுமிதுனங் கன்னி மீனம்இந்நான்குஞ்சுழிமுனை நடுமூக்குத்தண்டாகத்தாதன் எதிராகக்கொண்டுவர்த்தமானகாலங்களறிய இது அனல்ராசியாகக்கொள்கவிருச்சிகஞ்சிங்கம்இரிஷபம்கும்பம்இந்நான்குஞ் சந்திரனில்திராசியாய்பூதகாலங்களையறியஇப்படிப்பன்னிரண்டு ராசியுஞ்சூரியன்சுழிமுனை சந்திரனில் நடக்கும் இதல்லாமற் பஞ்சபூதத்திலு நடக்குமென்றறிக. இனி நட்சத்திரம் பூரமாதி மூலமந்தமாக நட்சத்திரம் -கூ- ம்-ரோகணிசதைய மிருகசீரிடம்-ஆ-ங-ஆகப்பன்னிரண்டுநட்சத்திரமுஞ்சூரியனாகையால் சூரியன்சரத்திலேநடக்குமென்றறிக. இனி அசுவனிபரணிகார்த்திகை-ஆ-ங-திருவாதிரைமுதல் மகமந்தம்-ரு-ம்- பூராடமாதி ரேவதியந்தமாகச் சதையந்தள்ளி நட்சத்திரம் -எ-ஆ-நட்சத்திரம்பதினைந்துஞ் சந்திரனாகையால்சந்திரசரத்தில்நடக்குமென்றறிகஇப்படிநவக்கிரகராசிநட்சத்திரபலன்களைச் சோதிடத்திலே யறிந்து சரமறிந்தவன் சரத்திலே கண்டுதனக்குங் கேட்டவர்க்கும் பலாபலன்சொல்வது இப்படியறிந்த சர ஞானிக்குத் திதி வாரம் நட்சத்திரம்ராசி யிந்நாலுவிதமும் வாரசரத்தோடு கூடி நடந்தால் மெத்த உத்தமம் இதில் மூன்றுநடந்தால் மத்திமம் இதி லிரண்டுநடந்தால் அதமம் ஒன்றாகில் அதமாதமம் இப்படிப்பார்த்து மூன்று காலமுமறிவானென்றறிக. இது வெகு சங்க்ஷேபமாகச் சொல்லு[redacted]யாலே சரசாத்திரத்திலே வெகுவாய்ப் பாடுபட்டவனுக்கு இதுநன்றாய்த்தெரியுமென்றறிக.



### கூ௰-வது—அத்தியாயம்.

## சன்மார்க்கம்.

சன்மார்க்கங்களை நாடியறிந்து

துன்மார்க்கம்விடல் தூயசன்மார்க்கமே.

௱அஅ. பன்னியமறையினூதி பனுவல்கட்டளையின்றன்மை
புன்னியவனுபூதிக்க ணுணர்ருவாரல்லாதுன்னோர்
மன்னியசிறப்பபாலித்தின் வான்பொருட்கொள்வர்நல்லோர்
துன்னியகுற்றந்தேடிச் சொல்லுவர்சிறியோரன்றே.

என்றது, சொல்லப்பட்டவேதமுதலானதில் பனுவல் கட்டளைகளை விசாரித்து அதிலே யனுபூதிகள்சொல்வதைத்தெரிந்து அல்லாதகை விட்டு உன்

னப்பட்டசந்தோஷமாய் பிரமத்தையேகொள்வர் நல்லோர் அல்லது கன்ம காண்டங்களைக்கற்றுப்பெரியோர்களுக்குக் [redacted]ற்றங்கள் தேடிச் சொல்லுவர் சிறியோரென்றறிக.

௱அகூ. நற்பெ[redacted]ளாங்குங்கொண்டு நன்மலாதெங்குநீக்கி
யற்புதவன்னபேடயென்ன வரும்பயன்கொள்வதன்றித்
தற்பொருளொன்றுமத்தைத் தமதவர்ப்பொருளதென்று
பற்பலகூறிக்காதும் பரிசதுபெரியோர்க்கின்றே.

௱கூ0. எடுத்தவெம்மதமெந்நூல்க ளியர்வையுந்தமதாயங்கு
வடித்தநற்பொருளேகொண்டு வரம்படமகிழ்வதல்லாற்
படித்தொருபொருளைப்பற்றிப் பாங்கினலதினைதுங்கிப்
பிடித்ததுபிடித்துக்காதும் பேதமைபெரியோர்க்கின்றே.

அறிவிக்கிறவன் அறிகிறவன் ஞானந் தவம் இந்நான்கும் கைகூடினவ னுக்குக்குருவானவர்கைத்தலத்துநெல்லிப்பழமும் கையில்மணியும்போலஒரு பொருளைக் காட்டக்கண்டு அது ஒருசொல்லாலே கணத்திற்பலிக்கு நெறியா கி யிந்த அனுபவத்தை யனுபவித்துத் தன்னை யிழந்த குருபத்தியுமுடையவ னாயிருப்பதே சன்மார்க்கமாகும். இதல்லாமல்வேதாகம புராண சாத்திரங்களை க்கற்றுயுக்திதற்கவாதங்களாலே வாசாபிரமஞ்சொல்லிக்கொண்டு தனக்குஅ னுபவ[redacted]டையில்லாம லிருக்கின்றது அசன்மார்க்கமென்றறிக.

திருவெண்பா.

௱கூக. எய்தவெளிதாமிறையருளில்லையே
லெய்தவரிதாமியாவர்க்கு - மெய்தெளிந்தா
லெம்மார்க்கத்தோடு மிகலற்றிருக்குமகே
சன்மார்க்கமாகு நெறிதான்.

---

## கூக-வது—அத்தியாயம்.

## சாதிசங்கற்பம்.

சாதிவேறில்லைத்தானெலாமொன்றெனு
வாதியில்வரும்விதமறிவித்துரைத்தது.

அநாதியிலே விராட்புருஷனுடைய முகத்திலே பிராமணனும் புசத்திலே க்ஷத்திரியனுந் துடையிலேவைசியனும்பாதத்திலேசூத்திரனும்பிறந்தார்களெ ன்று புருஷசூக்தத்திற்சொல்ல இதல்லாமல் மேல்சாதிபுருஷனுங் கீழ்சா

திபெண்சாதியுங் கூடிப்பிறந்தவன் அனுலோமனென்றுங்கீழ்சாதியானும்மேல்சாதிபெண்ணுங் கூடிப்பிறந்தவன்பிரதிலோமனென்றும் புருஷனையறியாமல் விபசாரம்பண்ணிப் பின்னொருவனுக்குப்பிறந்தபிள்ளை குண்டகனென்றுங் கைம்பெண்சாதிக்குப் பிறந்தபிள்ளை கோளகனென்றும் போகஸ்திரீகளுக்குப் பிறந்தபிள்ளைகெடிலனென்றும்வெள்ளாட்டிபிள்ளை விடலனென்றும் இப்படி அனேகவிதமாகவும் இருநூற்று நாற்பது சாதியாகவும் வேதாகமபுராணங்கள்சூதசங்கிதை முதலானதெல்லாஞ் சொல்லும் இதுமெய்யாம்அதெப்படியென்னில், முன்வேதஞ்சொன்னதானங்களிலேமுகத்திலேபிராமணருகிலீஸ்வரனும் புஜத்திலே க்ஷத்திரியருகில்விஷ்ணுவுந் தொடையிலேவைசியருகிற்பிர்மாவும் பாதத்திலேசூத்திரருகில்இந்திரனும் இப்படிநால்வருஞ்சிருஷ்டியாரம்பத்திலேபிறந்தார்களென்னில்இப்போது அந்தத்தானங்களிலேநாலுவர்னத்தாரும் பிறவாமற்சுக்கில சுரோணிதங்களாகியஸ்தூலபஞ்சபூததிரட்சியாலேவித்தின்கண்வித்துபோலவுடலின்கணுடல் தோன்றுகையாலேயிவர்கள்முன்சொன்னதானத்திலல்லவென்றறிக.

௱௯௨. ஆதியிற்பிரமனேதா னனைவர்க்கும்பித॥ வா॥ மயமை மூயய
வேதியர்வேந்தர்மிக்க வணிகர்சூத்திரர்கள்மற்று
நீதியிற்சங்கரங்கணீசராம் பறையராதி
சாதிபேதங்கள்சொல்லுந் தன்மையாமறிகிலேமே

௱௯௩. தந்தையாம்பிரமன்றன்பாற் சனித்தவத்தானந்தோறு
மந்தணராதிசாதி யன்றுபோற்பிறக்கக்காணே
முந்தியிலுதிரவுத்தை யொழுக்கறுயோனியாலே
வந்தெலாம்பிறந்துசொல்லும் வாசியேசாதியையா.

இதல்லாமலெண்ணிறந்தசராசர சீவனெல்லாம் பஞ்சபூதாத்மீகமானபடியாலேயெல்லாச்சீவனுமொன்றென்னிலொருசாதியோனியிலேயொருசாதிசீவனுற்பத்தியாகாதபடியாலே சீவராசிகள்முதலானதாவராதிகளெல்லாம்வேறுவேறுசாதியாம் இதல்லாமற்பிறப்பின்விதங்களனேகமாயோனிபேதங்களனேகமாய்ப்பிறக்கையாற்சாதிவேறுவேறும் ஆனால்-அசாத- அச்சுபேதங்களும் -அசாத- சாதியென்று ஒருவிதத்திற் சொல்லலாம்ஆதியிலேமனிதர்மாத்திரமெத்தனைசாதியுண்டாகிலு மத்தனையு மொருசாதியென்றறிக,

௱௯௪. தாதுவின்மயமதொக்குஞ் சகலபூதங்களொக்கு
மோதுநன்புலன்களொக்கு மவ்வவருருவந்தோறு
மாதியாய்நின்றநாத னொருவனேயாதலொக்கும்
பேதமாஞ்சாதிபேத மென்கொடுபேசினுயே.

என்றது,பஞ்சபூதங்கள் சத்ததாதுக்கள்-௨௫- தத்துவமுதலான தத்து

வங்கள் ஆகாரம்-நித்திரை-மைதுனம்-பயங்கள்-ஆத்மா-சீவன்-சுக-துக்கம்-சுக்கில சுரோணிதம்-யோனி-விந்துதண்டம்-[illegible]ராகம்-இதுமுதலானதெல்லாம் நரதனுவுக்குச் சரியாகையாலே மனி[illegible]யோனி யெல்லா மொருசாதி யென்றறிக.

௱௬௫. பிரமனுக்குறுவசி பெற்றபிள்ளைதான்
வரமுடைவசிட்டனவ் வசிட்டமாமுனி
விரைவினிற்குணுங்கிதோள்விழையப்பெற்றனள்
சரதமாஞ்சத்திமாமுனிவன்றன்னையே.

௱௬௬. சத்திமாமுனிவன்றன்பாற் பராசரன் பராசரர்க்கு
மச்சியகேந்தியென்பாள் வயிற்றிலேயவதரித்து
விச்சையின்மிகுதியாலே வியாசனாமுனியுமானான்
கொச்சைநீசாதிபேத மென்கொடுகூறினையே.

௱௬௭. சாதியொன்றுயர்ந்தது தாழ்ந்ததொன்றெனப்
பேதமேவல்லராய்ப் பிதற்றுவார்சிலர்
சோதிபேபனுதியாய்த் துன்னிநின்றமை
போதியாமையால்வரும் புன்மைவேதமே.

என்றது,பிரமற்குக் கூத்திவயிற்றிற்பிறந்தவசிஷ்டருக்குச் சண்டாளிச்சிவயிற்றிற்பிறந்த சத்திமாமுனியுஞ் சத்திமாமுனிக்குப் புங்கனூர்மரபிற் புலைச்சிவயிற்றிற்பிறந்த பராசரும் பராசருக்கு மீன்வாணிச்சிவயிற்றிற்பிறந்த வியாசரும் இதல்லாமற் பின்னுங் கழுதை நாய் முதலியயோனிகளிலும் பிறந்துயோகஞானங்களாலே ரிஷிகளானாரென்றறிக. இனிப் பிராமணனே அதிகமென்றுவேதாகமபுராணஞ் சொல்லுகையால் எல்லாருக்கும்மேல் பிராமணனென்னில் அதற் கடையாளமொன்றதிகமாகவேணும்அது இல்லாமல்பஞ்சபூதம்-தத்துவம்-ஆகாரம்-நித்திரை-மைதுனம்-பயம் - குணம்வேஷம்-நவக்கிரகநட்சத்திரராசி- நாள்- பட்சம்-மாதம்- வருஷம்- புண்ணியபாவம்-சொற்கநரகம்- மழை-காற்று- வெய்யில்-நிலவு-இதுகளெல்லாஞ் சரியாகையாலே யெல்லாருஞ் சரியென்றறிக. இனிவேதம் பிராமணனேயல்லாமல்மற்றபேர் படிக்கப் போகாதென்னில். வேதமுஞ் சந்தகோடி மகாமந்திரங்களுங் கற்றவர்களுக்கெல்லாம் பாடமாகையாலுஞ் சிவனு மாத்மாவுந்தொயில்லாதாகையாலும் விளைகிற பண்டபதார்த்தங்கள் ஷடுருசிகள் மரங்கள் புல்லுகள் கந்தபுட்பங்கள் தூபதீபங்கள் சுக துக்க வியாதி செனன மரண நரை திரை மூப்பு பிணமாகிறது நாறுகிறது தெய்வப்பிரசன்னங்க ளிதுகள் முதலானதெல்லாஞ் சரியாகையாலுஞ் சாதிபேத மில்லையென்றறிக. ஆனாற் பிராமண பீஜம் வேறேயென்னி லொருமரத்தின்விளையை

யொருமரத்திலேயிட்டா லந்தவிரைப்படியேமரத்திலே மரமுளைக்குமல்லாம லந்த மரம்போலாகிற தில்லையாலும் பிராமணன் பறைச்சியோடுகூடி அவ ன் விந்து பறைச்சியோனியாகிற் பூமியிலேவிழுந்தா லந்தப் பிராமணனுக ப்பிறவாமற் பறைப்பிள்ளையென் றெடுத்துப்போகாமல் விட்டுப்போகையா லும் பிராமணபீசமவேறேயல்ல அதற்கு திஷ்டம் ரிஷிக ளாந்த யோனி யைக் கூடினாலு மந்தரிஷிகளுடையபிள்ளைகளாய்த்தகப்பனைப்போலேரிஷி களாகையாலே விரையொன்றென்றறிக. இதல்லாமல் விரைகள் வேற்று மைக்கு இன்னம் பூரண திஷ்டஞ் சொல்வது நாயும் நரியும் மானையுங்குதி ரையுங் கரடியும் புலியுங் கோணுயுங் குரங்குங் கூடினால திலேசெற்பந்தரி யாமற் போகையாலே யதுகளைப்பீசபேத மென்றுஞ் சொல்லலாம் மனித சாதியெல்லா மொன்றாகையாலே பலிப்புண்டாமென்றறிக. சாதிவேறென் றுசொல்வது அவரவர்செய்தொழில்களாலும் நடக்கையாலுஞ் சாதிவேறெ ன்றறிக.

௱கூஅ. பிறப்பொக்குமெல்லாவுயிர்க்குஞ்சிறப்பொவ்வா
செய்தொழில்வேற்றுமையால்

திருமந்திரம்.

௱கூகூ. இக்குலமக்குலமென்புவரேழைக
ளொக்குலமாயிலென்னெவ்வுயிராகிலென்
சுக்கிலமல்லவோதோன்றுங்குலமெல்லாந்
தொக்கவர்க்கல்லவோதோன்றுவனீசனே.

சிவவாக்கியம்.

உ௱. பறைச்சியாவதேதடா பணத்தியாவதேதடா
விறைச்சிதோலெலும்பிலே யிலக்கமிட்டிருக்குதோ
பறைச்சிபோகம்வேறதோ பணத்திபோகம்வேறதோ
பறைச்சியும்பணத்தியும் பகுந்துபாருமும்முளே.

ஞானரத்நாகரம்.

உ௱க. மன்கொடுகடங்களைவனைந்துபலபேரிட்
டென்கொளினியற்கைகளின்மன்கள்பலவாமோ
தன்குலன்மறைக்குலனெனச்சகலசாதி
யின்கொள்முதலேந்தின்விகாரமலதுன்டோ.

சிவவாக்கியம்.

உ௱உ. சாதியாவதேதடா சலந்திரண்டநீரலோ
பூதம்வாசலொன்றலோ புக்குய்வாசலொன்றலோ
காதிலேர்லேகம்பிவாளிபாடகம் பொன்னொன்றலோ
சாதிபேதமோதுகின்ற தன்மையென்னதன்மைதான்.

நல்வழி.

௨௱௩. சாதியிரண்டொழிய வேறில்லைசாற்றுங்கால்
நீதிவழுவாநெறிமுறையின்-மேதினியி
லிட்டார்பெரியோ ரிடாதாரிழிகுலத்தோர்
பட்டாங்கிலுள்ள படி.

அமிர்தசாரம்.

௨௱௪. ஆதிபேதந்தா னிலாமையறிந்தவர்கள்
சாதிபேதஞ்சிறிதுஞ் சாற்றுவரோ-சாதிகுல
நல்லார்தொழத்தக்க ஞானமுடையவரோ
யல்லாரிழிகுலத்த ராம்.

இன்னம் மனித சாதியெல்லா மொருசாதியென்கிறதற்குத்திருஷ்டாந்தம்.

௨௱௫. சந்தனமரமும்வேம்புந் தனித்தனிக்கந்தநாறு
மந்தணர்தீயின்வெந்தாலதின்மணநாறக்காணேஞ்
செந்தழல்புலையர்போலத் தீயினில்வெந்துநாறும்
பந்தமுந்தீயும்வேறோ பாச்சலூர்கிராமத்தாரே.

௨௱௬.குலந்தனைக்கேட்டீராகிற் குடுமியும்பூணுநூலுங்
கலந்துடன்பிறந்தாருண்டோ கல்வியால்வகுத்துக்கொண்டீர்
நலந்தருபூவுநீரு நான்முகன்வகுத்துவிட்டாற்
பலவிதஞ்சொல்வதேதோ பாச்சலூர்கிராமத்தாரே.

இப்படி யொருசாதியென்கிறதற்குச் சாத்திரமுகங்கள் வெகுவாயுண்டென்றறிக. வேறேசாதி யுண்டென்பது - ௮௰சாத - அச்சு பேதமும் ௮௰சாத-சாதிவேறென்றறிக. அதில் ஊர்வையிற் சிற்றெறும்பெல்லா மொருசாதிபோல நாலு அச்சில் ஒவ்வொரு அச்சின் குலமெண்ணிறந்ததுண்டாம் ஆதலால் - ௬ாத - அச்சில் இரண்டுகாலுடைய நரரெல்லாமொருசாதியென்றறிக. இதுகளும் ஞானகாண்டத்துக்குச் சரியென்றறிக. எண்ணிறந்த பேதமுந் தூலபூத சூட்சும பூதாத்மீகமாகையாலெல்லா மொரேசாதியென்றறிக. வேதமும் ஏகசாதியென்றேசொல்லும். 1.— ஆகையால் சாதி பேதமில்லையென்றறிக.

தத்துவநிஜாநுபோகசாரம்.

௧-வது—பொதுமைப்பிரகரணம்-முற்றுப்பெற்றது.

௮-அத்தியாயம்- ௬௰௧-இ-உதாரணமுட்படச் செய்யுள்-௨௱௬.

உ

ஓம்பராபரப்பிரமணேநமஃ.

# தத்துவநிஜாநுபோகசாரம்.

## 1.—பூர்வபாகம்—கர்மகாண்டம்.

## உ-ஆம்-அதிகாரம்-வாதிகள்சமயம்.

### க-வது—அத்தியாயம்.

### சமயத்தொகுதி.

பலசமயங்களைப்பாயிரமாகத்

தலைமையாய்ச்சேர்த்தல் சமயத்தொகுதியே.

க. மன்னியசமையங்கூறி லாகமநெறியில்வைகு
மன்னவையெட்டாம்பேதத் தாகியவெட்டாம்வேறுந்
துன்னியவட்டவாதஞ் சொல்லுசாங்கியத்தோடெட்டும்
பின்னியபுறத்துமூன்றும் பேசுசங்கற்பமற்றும்.

உ. பாட்டமேபாஸ்கரியம் பகர்பிரபாகரத்தோ
டீட்டியநாற்பதோடங் கெய்தியவிரண்டுமன்றிக்
கூட்டிடுபாஷண்டந்தொண் ணூறுடன்குலவுபூவி
லீட்டியமிலேச்சராதி யென்னுஞ்சமயபேதம்.

என்றது-ஆகமநெறியாகச் சொல்லுஞ் சமையம்-அ-இதிற்பேதம்-அ-வேறுஅஷ்டவாதம் சாங்கியத்தோடு-அ-பின்னும் புறச்சமயம் -ங- பின்னும் பாட்டம்-பாஸ்கரியம்-பிரபாகரம்-ஆ-சமயம் - ஙஅ - இதல்லாமற் பாஷண்டமதம் -கூ0- இனி பூமியில் மிலேச்சராதிகள்கொள்வது இலக்கமில்லாதசமயம் இந்தத்தொகையி னர்த்தம் விளங்க உதாரணம் முறையாய்ச்சொல்லுகின்றும். சிவனுடன் சம்பந்தமாகிறசைவம் எட்டுக்கும்பெயர்.

ங. சிவனுடன்சம்பந்தத்தாஞ் சைவமேசிவாத்துவிதம்பின்
சிவனொடுகூடுசம்மே ளனம்பாசுபதமேற்செப்பிற்

பவமின்மாவிரதங்காளா முகம்வாமம்வயிரவத்தோ
டெவமிலாகமத்துட்பட்ட சமயமெட்டமைந்ததாமே.

சிவாத்துவிதம்-சம்மேளனம்-பாசுபதம்-மகாவிரதம் - காளாமுகம்- வாமம் வயிரவம் ஆ-எ.

ச. சைவபேதங்கள்சாற்றி னூற்தமேயநுதிசைவஞ்
செவ்வைசேராதிசைவ மகாசைவந்திகழ்பேதத்தோ
டவ்வையினபேதசைவ மந்தரசைவம்வேறுங்
கவ்வைசேர்குணமேநிற் குணத்தசைவங்கள்காணே.

என்றது-சைவத்துக்குப்பேதமானசைவங்கள்- ஊற்தசைவம் - அநுதிசைவம்-ஆதிசைவம்-மகாசைவம்-பேதசைவம்-அபேதசைவம்-அந்தரசைவம்-குணசைவம்-நிற்குணசைவம்-.

ரு. ஓதியவத்துவாசைவம் யோகமேஞானசைவ
மாதியிலவாந்தரத்த சைவமேகிரியாசைவ
மேதமில்சுத்தசைவ மிலகுநாற்பதத்தசைவம்
பேதகசைவமீரொட் டாயினபேசுங்காலே.

என்றது-அத்துவாசைவம்-யோகசைவம்-ஞானசைவம்- அவாந்தரசைவம்-கிரியாசைவம்-சுத்தசைவம்-நாலுபாதசைவம்-பேதசைவம்-ஆ-அ- இஃது ஒவ்வொன்று -

சு. சைவமேயாதியான சைவநாலாறதாகு
மவ்வகையிவைதான்மிக்க குண்டலிசத்திவியாத்த
தெய்வுறுமிதனைமாமாயையின் தொணிமாலைட்
டவ்வகையியற்றலாமே யவைசுத்தமுத்தியாகா.

இவையல்லாமல்-அஷ்டவாதமென்றது-சிவசமவாதி- அயிக்கவாதி-சங்கிராந்தவாதி-பிறவாஹேஸ்வரவாதி-காபாலிகவாதி-அவிகாரவாதி- பேதாபேதவாதி-அனேகேஸ்வரவாதி-

எ. மறைநெறிவைதிகத்தால் வந்திடுசமயமெட்டா
மறைதருநியாயவைசே ஷிகங்கிகழ்மீமாங்கிசத்தோ
டறைதருசாங்கியம்பின் வைணவம்பாட்டகத்தோ
டுறைபிரபாகரந்தா னுயர்வியாகரணத்தோடே.

என்றது-வேதாங்கீகாரமான வைதீகத்திற்பேதமானது நியாயம்- வைசேஷிகம்-மீமாங்கிசம்-சாங்கியம்-வைணவம்-பாட்டம்-பிரபாகரம்- வியாகரணம்-ஆ-அ. மாயாவாதம் - பாஸ்கரியம் - சத்தப்பிரமவாதி-புராணிகன்-ஆ-ச ஆ - சமயம் - சஂ௯ச - இ-நாலுவித சமயம்-ருூஉ-வைதீக பேதம் - அ- பின்னும் புறம்பென்றது-ரு- மாயாவாதம்-க- ஆ-சஂ௯ச- இது - தத்துவாத்நாகா

த்திற் சொல்லுகிறதென்றறிக. இதல்லாமலும் மற்றுமுள்ள சாத்திரங்களில் நவமாகச்சொன்ன சமயங்களுங் கூட்டிக்கொண்டு இந்த தத்துவநிஜானுபோர் கசாரத்திற் சொன்னதென்றறிக.

அ. வானிலாவோசையென்பார் வந்தொருகணத்திற்றேன்றி
யானியாம்புத்தியென்பா ரண்டயவுங்கேட்டுநின்ற
சூனியமென்பார்பூதத் தொழிலெனச்சொல்லாநிற்பா
ரானவாறொருவராலென் றண்டயவுமியல்பேயென்பார்.

கூ. ஆனந்தங்காரணமென்றறையுமொன்று ஆத்மாவேகாரணமெ ன்றறையுமொன்று,வானின்றுமூலகம்வருமென்னுமொன்றுமாயை யினுல்வருமென்னுமற்றதொன்று, தானுந்தானுகுமெனுந் தனியே யொன்றுசத்தியினின்றும்பிறப்பதெனுமற்றொன்று, வானுந்தன் பெருமைகொடுவந்ததென்று மறைமொழிகடன்னிற்றேன் மயங்கு ங்கானே.

கலித்துறை.

ய. ஆணவங்காமிய மாயையனுய தாதியனு
வேணுநின்லீலைய லீலையிலென்பர் வெகுவிதமாந்
தாணுவிலென்பர் பிறப்பிறப்பித்திற் றரிப்பதெத்தைக்
பூணுநல்லியோகிக் கொண்கலிங்கேசவொளிவெளியே

யக. அருவென்பருருவென்பவரீசன்றன்னை யனேகமுமர்பழிக்கு மென்பரேகமென்பர், கருவென்பவெவ்வுயிருங் கடந்தானெ ன்பர் கன்னெனன்பர்கரியென்பர்காணியலானென்பர், தெருளெ ன்பனாம்பூதஞ்சேரானென்பர்சிவனேசிவனட்டமூர்த்தியென் பர், பொருண்முன்புபுகன்றவற்றைத்தாமுங்கேட்டுப் புகன் றுபுகன் றேவிடுவர்பொருள்காணுரே.

யஉ. ஈசனியல்பையுயிர்க்குரைப்பருயிரைக்கரணங்களுக்கிசைப்ப பேசுங்கரணமுடற்குரைப்ப ருடலைப்பூதங்களிற்பிணிப்பர் [ர் பாசபூதமுடற்குமுடல் கரணங்களுக்கும்பகர்கரணந் [மே தேசத்துயிர்க்கு முயிரியல்பைச் சிவர்க்குமுரைப்பர்சிலர்தா.

இப்படி நானுவிதமான சமயங்களிலே வேஷதாரிகளாவர் ரிலக்கணம்.

யங. தலைமயிர்பறிப்பார் சடையினைப்பறிப்பார் தண்டுதோல்குண் டிகைசுமப்பார், நிலையினைத்துறப்பார்நியதிபுற்றினைப்பார் நித் தமோருர்புகத்திரிவார், கலையினைத்துறப்பார்கலைகளைத்தரிப்

பார்கல்லொடுகுமிடிடைத்துயில்வா,ரிலேயினிற்றுயப்பாரிறை வனெட்டிடுமோ விவரிளைத்திடுவதேயென்னே.

மச. செந்துகில்புனைவார்சிவரந்தரிப்பார் திரிதண்டோடொருதண் டுபிடிப்பார், தந்தமூத்திரைகள்பலபலதரிப்பார் தவமெனத் தம்முடம்பொறுப்பார், முந்துகாய்கிழங்கோ டிலேய்யின்றிடு வார் மோனமென்பார்கதறிடுவா, ரிந்தவாகுலத்தாலீசன்மே விடுமோவிவர்துயருறுவதேயந்தோ.

இப்படி எண்ணிறந்த சமயபேதத்தி லிந்நாடு இத்தேசத்திலுள்ள ச மயங்களிலே சில எடுத்துச் சங்க்ஷேபமாகச் சொன்னதென்றறிக. இப்பால் வேதாந்திகாரமதங்கள் சொல்வது.



உ-வது—அத்தியாயம்.

## கிரீடாப்பிரமவாதி.

பிரமக்ஷோபம் பெயருமுக்குணத்தால்
நெறிமைகிரீடாப்பிரமநிலையே.

இனி பிரமத்திலே முக்குணமாரோபித்து இந்த மூன்று குணத்திலுங் கூடி மும்மூர்த்திகளாய் இவர்களாலே சிருஷ்டி திதி சம்மாரங்க ளுண்டாய்ச் செகத் பிரவர்த்தமெல்லா மிவர்களேசெய்யப் பிரமமானது சாட்சிபூதமாய்-நித்த-புத்த-சுத்த - முத்தனுய்-தன்குணங்களிலே யந்தமூவரையு மடக்கியும் விட்டும் இந்தப்படி நிவிர்த்திப்பிரவிர்த்திகளைச்செய்து தனக்கு இந்தவியாபார மில்லாம லிருக்குமென்றறிக. இதில்(சொரூபலட்சணமாவது) ஏகமாய்இரண் டாவதில்லாதிருப்பது. இனி(தடத்தலட்சணமாவது) இராசத-தாமச-சாத்வீத குணாரோபத்தில்மும்மூர்த்தியுண்டாவது. இனி(பெத்தநிலையாவது)இவர்களா லேசெகத்துண்டாய்ச் சீவர்கள்செனனமரணப்படுவது (முத்தியாவது) இது களைவிட்டுக்குருவினலே மோட்சமடைவதென்றறிக.



ங-வது—அத்தியாயம்.

## லீலாப்பிரமவாதி.

வாரிதரங்கம்போலவசிப்பது நேருலீலாப்பிரமநிலையே.

இனி (சொரூபலட்சணமாவது) தனிப்பொருளாய் நிற்பது. ( தடத்தல ட்சணமாவது) சமுத்திரமானது தானேதரங்கமானாற்போல ஏகமானபிரம ம் தானேமாயைமுதல் செகத்பிரவர்த்தங்களான தனுகரணபுவனபோகபோச் கியங்களானதென்றறிக. இனி (பெத்தநிலையாவது) இப்படியானசெகத்பிர வர்த்தங்களிலே சீவராசியென்றுபெயராய்ச்செனனமரணப்படுவதுபோல் பி

ராந்தியாலே கன்மங்களிலே கூடியிருப்பது. இனி (முத்தியாவது)சமுத்திரத்திலேதரங்கமடங்கும்போதுந் தரங்கமுண்டாகிறபோதுஞ் சமுத்திரமொன்றே நின்றாற்போலப் பிரமந் தானொருவனாய் நின்றாலுந் தன்சுயலீலையாலே தன்னிடத்திலுண்டான அனேகவிவகாரவஸ்துக்களுடனே நானாவாய்விநோதியாய்நின்று வெகுவானவஸ்துக்களெல்லாமனித்தியமும்அசத்தியமுமாய் எல்லாந் தன்னிலே யடக்கித் தானே தற்போதமுமா யெல்லா மடங்குகிறதற்கும் ஒடுங்குகிறதற்கும்பிரமமேயல்லாமல் வேறொன்றில்லை இப்பிரமத்தைவிடச் செனனமரணமில்லையாமென்றறிக.



ச-வது—அத்தியாயம்.

## பிரதிவிம்பவாதி.

செலசூரியன்போலத்தேகங்கடோறும்
பெலமாஞ்சீவன் பிரதிவிம்பமென்னே.

இதில் (சொரூபலட்சணம்) பிரமமொன்றுமேநின்றது. இனி (தடத்தலக்ஷணம்) சுத்திகாரசிதம்போல் பிரமத்திலேமாயையுண்டாய் மாயையாலேபஞ்சபூதமுதலான செகத்துண்டாக இதிற்சூரியன் கடோபாதிப் பரிச்சின்னகங்களாலே யனேகமாய்த் தோன்றுமிடத்தில்அந்தக்கடசலத்தில்வந்த உபாதியாலே பிரதிவில்பித்தசூரிய னுபாதிப்பட்டதுபோலக் காணப்படும். இதுமுதற்சூரியனுக்கில்லாததுபோலும் அந்தச்சூரியனல்லாமலந்தப் பிரதிவிம்பம் மற்றொன்றல்லாததுபோலும் பிரமமுந்தேகோபாதிப்பரிச்சின்னங்களாலே யனேகசீவராசிகளாய்ப் பிரதிவிம்பித்து அந்தந்ததேகோபாதிகளில்வந்த சுகதுக்கங்களை யந்தந்த சீவராசிகளுக்கேயாக்கித்தனக்கில்லாமல்நின்ற நிலையென்றறிக. இனி (பெத்தநிலையாவது)மாயைமுதலானசெகத்திற் பிரதிவிம்பமானவாத்மாக்கள் தேகோபாதிகளாலே பெந்தப்பட்டுச் செனனமரணப்படுவதென்றறிக. (முத்திநிலையாவது) கடமுடைந்தாற்கடசூரியவிம்பம் முதற்சூரியனில்கலந்தாற்போல் தேகோபாதிகள்நீங்கிக் குருகடாக்ஷத்தாலே யாத்மசொரூபம்விளங்கி நிட்டைசாதித்துக்கூடுகிறபோதுஞ் செகமெல்லாம் நிமிஷத்திலே சர்வசங்காரமாம்போதும் பிரமமொன்றுமே மிகுந்திருந்து அப்பிரமத்தோடெல்லாமயிக்கியமாவதே மோட்சமென்றறிக.



ரு-வது—அத்தியாயம்.

## மாயாவாதிமதம்.

மாயைமித்தையெனவாதித்து
வாய்பொருளொன்றெனன் மாயாவாதமே.

(சொரூபலட்சணம்)நிட்களநிஜானந்த நின்மலநிசப்பிரகாசநிராமய நிஸ்

தரங்கமாய் வெருட்டிமாத்திரமானபிரமமே நீயாகிறவனென்றறிக. இனி (தட த்தலட்சணம்).

௯௫. சாற்றியபிரமமென்னு மவிகாரிசந்நிதிக்கே
யேற்றியமாயைதானிவ் வுலகுயிரனைத்துமாகித்
தோற்றருமனந்தபேத மாய்ச்சுழன்றழியுந்தானே
யாற்றரும்பெற்றமுத்தி பேறிழுவவையுமித்தை.

௯௬. ஆதலாலிகழுமித்தை பரமதுதானுமித்தை
பேதமதறவுமற்றை யகமெனுமதுவுமித்தை
யோதியமயல்போய்ப்போத முத்தமதென்பதுவுமித்தை
சாதமேபிரமமுத்தன் முனவிகாரியென்றும்.

௯௭. சாற்றியவதுநீயென்று தான்மறைகுரவர்கூற
வேற்றியவதுவோநானென் றிசைத்தன்மாத்திரமேஞானம்
போற்றியவதுவுமோரிற் பொய்யதாமாயையின்றே
யாற்றவங்கறிதன்மாயா வாதமத்துவிதமையா.

௯௮. சுத்தவத்துவிதம்கங்க டுகளறத்துணியாவாகா
மெய்த்தகுபிரமந்தாங்கள் டனுபவித்திடல்வீடென்ப
ரத்தகுபிரமங்காணி லழிவுறுமறியாரேது
மித்தையென்றிச்சைசெய்தே விளையாடித்திரிவரையோ.

மறுப்பு.

௯௯. அவிகாரம்பிரமமாயை விகாரமாமெனவுமென்று
யவிகாரவிகாரங்கண்டங் கறிந்துசாற்றிடலேதையா
வவிகாரமென்னிற்றுன்போய் விகாரியாமாயைபேலுன்
னவிகாரந்தானும்பொய்யாய் மாயையாயழியுமென்றே.

என்றது,பிரமம் விகாரமென்றும் எல்லாம் பிராந்தியல்லா தொன்று மில்லை. மாயைதானேயெல்லாமாயிருக்குமென்றுங் காந்தத்தின்முன்னேஇரு ம்பு திரிந்தாற்போல் சைதன்னிய சந்நிதிக்கே புத்திநடக்குமென்றும், ப முதையிற் பாம்புருப்போலும் நீரின்சலனத்தைச் சந்திரன்சலிக்கின்றனெ ன்றும், நானேபிரமம் ஞானம் பேய்த்தேனென்றும், அனிர்வசனமாகிறமாயை யிலே உலகமுண்டானதென்றும், இதுவில்லையாகிலுலகமுதியாதென்று மிய ல்பாகி லழியாதென்றுங், கிளிஞ்சில் வெள்ளிப்பிரமை போலப் பிராந்தியாகி றமாயையினாலே செகத்துண்டானதென்றும், ஆகாசத்திலே மேகசஞ்சாரந் தோன்றி யொன்றுமில்லாததுபோலுஞ் சிலந்தி நூல்களையுண்டாக்கி யில்லா மல் விழுங்குவதுபோலும், பிரமத்தின் சந்நிதியில்மாயை செகத்தையுண்டா க்கும். அஃதெப்படி யுண்டாக்குமென்னில், பிரமத்தில் வாறு யிதிலொன்றி

லொன்று மையைந்துபூதமுமாகி யிதில்தானியமுண்டா யிதிலன்னமா யிதிலாறு தாதுவாயிவ்வாறுமொன்றி லொன்றுகூடிப்பஞ்சகோசமா யிந்தக்கோசவுரு விற் பிரமம் பிரதிவிம்பிக்கும் சூரியகிரணத்தாலே பலபாண்டத்தில் விம்ப சூரியன்பற்றில்லாததுபோலுந் தோன்றித்தோன்றினதெல்லா மித்தையாய்ப் போம். பிரமமேநித்தியம்இப்படிப்பிரமசன்னதியில் மாயாப்பிரவர்த்தந் தோன்றி மித்தையாகுமென்றறிக. இது (தடத்தலட்சணம்)இனிப் பெத்தமாவது சீவராசிகள் முன்சொன்ன பஞ்சகோசவுருக்களிலே கடோபாதி பேதங் களால் சூரியன் நாலுவானதுபோலும், நாலுவிரத்திநங் கோத்த சரடு நாலு வர்ணங்கள் போலும், சீவராசிகளானவிடத்தில்அந்தக் கடத்தில்வங்க வுபாதி கடசூரியனுக்கல்லாமல் முதற் சூரியனுக்கில்லாதனுபோலு கடசலமுடைந்தால் முதற்சூரியனோடேகூடுமென்றும் இப்படி தான்பெத்தமென்றறிக. இனி (முத்திநிலையாவது)தத்துவங்கள் முதலானதெல்லாம் வித்தையாகாரியமென் றும் இஃதிரண்டும் விசாரித்து மித்தையென்றறியில் ஞானம்பிறக்கும். அஃ தெப்படி யென்னில் சந்தி காயத்திரி அநுஷ்டானமுதலான சற்கர்மங்கள் செய்து சுசிற்பூதனுகில்அந்தக்கரணசுத்தியாம் இச்சுத்தியால்ஞானமுண்டாம் இஞ்ஞானம் பிரமத்தை நானென்றறிவிக்கும் இது தானேதானாய் தன்னிற் றன்னையேயனுபவித்து மாயாகாரியபூதங்கள் மித்தையாகத்தான் பிரகாசித்து நானேயுள்ளதென்று தெளிவது அத்துவிதஞானமென்றறிக. இதற்குத் தத்துவமசியை யுணர்ந்தா லதுவே நீயேன்றும் நீயேயதுவென்றும் இந்தப்படி வராவிட்டாற் சன்னியாசியாய் பஞ்ச சாதனமும் பெற்று அஷ்டாங்க யோகங்களைச்செய்து சமாதி நிலைவந்து எல்லாமித்தையாய்நின்று தானேதானென்றறிவது மோட்சமென்றறிக.

உ௰. பேதமோடபேதபேதா பேதமேபிறமூமூன்று
லோதியமாயாவாதத் துன்மையையுரைக்குங்காலை
பேதமாய்ப்பிரமமென்னப் பேதமாம்பேதாபேதத்
தோதலாம்பிரமமென்ன மூவகையுளதாயன்றே.

என்றது, பிரமம் பேதம் அபேதம் பேதாபேதமாயிருக்குமென்றறிக. பின்னுமொருவிதசிருஷ்டி சோதியே வினைவா யிருக்கின்ற தூய்தான வெளியிலே யவிஞ்சையாகிற மாயை யங்குரித்து இதிலே ஐம்பூதமாய்ப் பணைத்து உலகுண்டானதென்றறிக. இஃது வியாசர்கற்பிதம்.

சு-வது—அத்தியாயம்.

## வைதீகவேதாந்தம்.

வேதப்பொருளின் விரிவைத்தள்ளிச்
சோதியதிவேசொலில்வேதாந்தமே.

சுத்தவைதிகவேதாந்தமாவது, வேதங்களைச்சிரசிலேதரித்துக்கொண்டு

தானுமறியாம லிருக்கிற உபநிஷத் பிரமாணமான விவேகசிந்துவாகிற சாத்திரத்திற் றிருதியப்பிரகரணந் தத்துவசிருட்டி சொல்வது. இனி (சொரூபமாவது) சத்தி சக்கரத்துக்குப்பின்னெப்திமாத்திரமான அறிவே ஞாதுருஞான நேயமாம் இவைகளடங்குவதற்குத் தானமாய்நிற்பதுநிட்கள நிர்மலநிசானந்த பரப்பிரம அறிவென்றறிக. இதைஞானமென்றா லறிகிறதில்லை. அஞ்ஞானமென்றால் மறப்பில்லை. அபாவமென்றால் சுத்தசைதன்னியம் ஆனந்தசொரூபம் உள்ளதென்றால் வாங்கப்போகாது இல்லையென்றால்விடக்கூடாது நித்திரைசெய்கின்றவனையெழுப்பும் எழுந்தவனை யெச்சரிக்கும் எச்சரித்தவனைப் போகிக்கச்செய்யும் இப்படிச்செய்தாலுந் தானொன்றிலுந்தோயால் ஒருபடிகப்பருவதம்போல் பெரியதிலெல்லாம் பெரியது களங்கமில்லாதது பிடித்தாற் கடினப்படாமலிருப்பது பிரமசொரூபவிலக்கணமென்றறிக. இஃது ஆகாசம் போலவெளியாய் வியாபியாய் வியாபகவெளியாயிருக்கும். பிர்மாதிபஞ்சமூர்த்திகள் தங்கள்வியாபாரஞ்செய்து வோய்வானவேளையி விளைப்பாறுகிறதற்கு நிஜமானவீடு அங்கேவித்தையவித்தையில்லை அகம்பிய ஸ்வஸொரூபவேத்தியம் அதுவே நீயாகிறபிரமமென்றறிக. இனி (தடத்தலட்சணமாவது) ஆகாசவீதியிலே மேகசஞ்சாரங்காண்பித்தாற்போல் முன்சொன்னபிரமத்திலே மாயாபடலங்காண்பித்தது இதுகெட்டால் சுயம்புவாயிருக்கும். இந்தமாயாதேவி ரஜஸிலே பிரமாதிதேவதைகளும் அபரிமிதபாலகர்களும்பிறந்தார்கள் இந்தமூலமாயைக்கு முன்சொன்ன பூரணசைதன்னியமே முதலென்றறிக. இந்தமாயை பிரமத்திலேயுள்ளது இதுவிவர்த்தனம் இதுவேதாந்தசித்தாந்த உபநிஷத்துக்களாலே நிச்சயிக்கப்பட்டது. இதுபிரமாணசித்தம். இனிவிவர்த்தனமாயை பிரமத்தைப்போல் தானும்நிர்விகாரமுமாய்அன்னியஆபாசமா யிதின்நிசாகாரம் விகற்பியாமலிருக்கும். சூரியப்பிரகாசத்தாலே கானற்சலமுண்டாவதுபோல் பிரமத்திலேவிவர்த்தங்கள் காண்பித்தது. இருளிற்பழுதை பாம்புபோலத் தோன்றிற்று. இந்தமாயாப்பிரம விவர்த்தனம் இங்கேகுணசாம்பியமென்பது சங்கேதம். இந்தவாக்கியஞ்சாங்கியன்பிரகிருதி புருஷனென்றுகொண்டான். இது குணத்திரையசம்மதம். இது ஈஸ்வரனுன்மணி அவத்தை யிந்த விவர்த்னமாயையை முன்சொன்ன பூரணசைதன்னியபிர்மதிருஷ்டியால் இந்தமாயைதானே மகாமாயையாயிற்று. இஃதே சுத்தசாத்மீகமான ஸ்வரூபானுசந்தானமாய் நானேபிரமமென்றாயிற்று. இது மித்தியாபாசமாம். இஃதே பிரமவிவர்த்தனம் அஃதெப்படியந்தமகாமாயைக்குப்பிரமகாந்தியினாலே ஞானபூர்த்தியங்குரித்ததென்றால், பிரமமெத்தனையுண்டு, அத்தனையும்வியாபித்து இந்தமாயா தேவிதானே பிரமமாயிருக்கும்.:இந்தமாயைபிரமத்தின்முன்னேயில்லாமையேகாண்பிக்கும். பிரமமில்லாதபோது தன்னைத்தெரிவித்துக்கொண்டு பிரமாதிதேவதைகளைத் தன்னகத்தி லடக்கிக்கொண்டு கடனாகடன சாமர்த்தியத்தோடிருக்கும். இது அசம்பாவனாமாயை அனிர்வாச்சியம் ஆகையாலே மித்தியா

ப்பிரசாந்தி வியார்த்த ஆபாசமாயிருக்கும். இந்தமகாமாயை பிர்மதிருஷ்டி
யாலே ஈஸ்வரனுண்டானான். இவனுக்குப்பரமபுருஷனென்றும்பரமாத்மாவெ
ன்றும்பெயராம். இவனைச்சாங்கியன்பிரகிருதி புருஷனென்றுகொண்டான்
இந்தப்பரமபுருஷனுக்குஇந்தமாயைநிஜசத்தியாயிற்று. இந்தமாயையோடே
கூடின பரமபுருஷனைச்சகுணப்பிர்மாயீஸ்வரனாய்ப்பரந்தாமனாய் ஆதிமூலமா
ய் வாசுதேவரானதென்று வைணவர்கொள்ளுவர். இந்தப்பரமபுருஷனுக்கு
மாயைகூட்டமெப்படியென்னில், எங்கேகடமுண்டாயிற்றோ அதற்குமுன்
னேயாகாசம்இருப்பதுபோலமாயைக்குமுன்னே சைதன்னியம்வியாபித்திரு
க்கும் சமுத்திரதரங்கத்துக்குமுன்னேசலம்வியாபித்தாற்போலமாயையங்குரி
த்தவிடமெல்லாம் அதற்குமுன்னேபிரமம்வியாபித்திருக்கும். இந்தமாயையி
லேவியாபித்தபிரமமேசகுணம்.இந்தமாயையோடேகூடாததுநிற்குணம்இது
விவர்த்தனமூலப்பிரகிருதிக்குப்பின்னமாயிருக்கும்இதற்குச்சாட்சியாய்நின்று
பிரகிருதியையவனறிவான்பிரகிருதியவனையறியாது அவனிராபாசன் இதுபிர
காசரூபம் அவன்சுயம்பிரகாசரூபன் பிரகிருதிவேத்தியம்அவன்வேத்தா அது
ஞேயம்அவன்ஞாதா இந்தப்பிரகிருதிபுருஷாளுநிசகவாசமாயிருப்பர்இவர்களு
க்கு வர்ணங்களில்லைபிரகிருதிஅமூர்த்திகள்இவர்கள்சொரூபநிலையைத்தன்நிச
ஸ்வரூபானுபவத்திலேயறியவேண்டும்இந்தப்புருஷன்பரமாத்மாசுயஞ்சோதி
விஞ்ஞானாத்மாஇதுமுதலானபேரனேகமுண்டுஇந்தப்பரமாத்மாதானேசீவத்
துவத்தையடையவேண்டிமகாமாயையைநோக்கிப்பார்த்தபோது பிரதிவிம்பமா
கிறமகதத்துவமுண்டாயிற்று. இந்தமகதத்துவத்துக்கு அவ்வியாகிருதமென்
றும்பேர் இந்தசீவனாகவேண்டுமென்றவன்ஞானவிக்கிரகம்பரமேஸ்வரன்சர்
வாத்மாநிர்விகாரன் அவன்சொரூபமேயல்லாமல் தன்சொரூபத்திலே மறப்
பில்லை பிறவிர்த்திநிவிர்த்திசெய்வதில் சமர்த்தன் இவனொருவனேகர்த்தாஇ
வனது அஞ்ஞானஅவதாரமான பிரமாதிகளெதற்கென்றால், இவன் சகுணப்
பிரமமாய் மாயையோடேகூடிச் சிருட்டியாதிசெய்வதற்கென்றறிக. இந்த
மகாமாயையின் சுத்தப்பிரதிவிம்பமான மகதத்துவத்தோடு முன்சொன்ன
பரமபுருஷன்கூடிப் பிரதிவிம்பித்தபோது சீவாத்மாவென்றும்பேராம். இந்
தச் சுத்தமாயை மகதத்துவமிரண்டுங்கூடினது கூடத்துவமாகிற தத்துவ
கெற்பத்திலேமக்கினமாயிற்று இதுபரமபுருஷன்காரணதேகம்இதைஉருத்தி
ரனாலேசங்கரிக்கச்செய்யும் அதற்குஅஃதேவீடுஇந்தச்சீவாத்மாவுக்குத் தத்து
வங்கள் கூட்டிப் புசிப்பிக்கவேண்டி முன்சொன்ன பரமபுருஷன்அவ்வியா
கிருதத்திலேகூடி அதிஷ்டித்தபோது அங்கேதிரிவிதாங்கார முண்டாயிற்று
மாயையின் குணச்சேட்டையாலேசாத்வீக ராசத தாமசாங்காரத்திரயமூ
லமாயிற்று. இதில் சாத்வீகத்தில்ஞானசத்தியும் இராசதத்திற் கிரியாசத்தியு
ந்தாமசத்திற்றிரவியசத்தியுமாகி மூன்றுமுண்டாயிற்று. இதில்திரவிய சத்தி
யைச்சர்வேஸ்வரன்பார்த்தபோது பின்னுமொரு தாமசாங்காரமும் பஞ்சத
ன்மாத்திரையும் பஞ்சபூதமு முண்டாயிற்று ஆகையாலே சத்தாதிவிஷய
பஞ்சகத்துக்கும் பஞ்சபூதத்துக்குங்காரணகாரியபாவமாயிற்று. பின்பு கிரி

# தத்துவநிஜாநுபோகசாரம்.

யாசத்தி சமேதனுயதினுலேஇராசதாங்காரமுண்டாய் இதில் ஞானேந்திரியம் கன்மேந்திரியம் பிராணபஞ்சகம்ஆ-௰௫-ம்-உண்டாயிற்று பின்பு ஞானசத்தியை அதிட்டித்தபோது சாத்வீகாங்காரம் உண்டாய் இதில் அந்தக்கரண சூரியாதி தேவதைதயுண்டாயிற்று. இந்தமூன்றிலுஞ் சர்வேசன்கூடஅன்னியகுண தத்துவமுண்டாயிற்று. இதில்சாத்துவிதாங்காரத்தில்தத்துவம் தொக்குசாதகமாயிற்று. இனிராசதாங்காரத்திற் சுரோத்திராதிஞானேந்திரியம்தோற்ற த்சாத்தியசாதகமாய்ச் சகலவிஷயமும் பகுக்கப்பட்டது இதைக் கர்த்தா போக்தாவென்பர் இனி தாமதத்தில் தத்துவம்போக்கிய சாதகமாயிற்றுஇனிக்கர்த்தா காரணகாரியம் போக்தாபோகபோக்கியம் இது திரிபுடியாம் பின்பு அந்தக்கரணமேபோகம் இந்திரியமேபோகத்துக்குச்சாதனம் பஞ்சபூதவிஷயரூபத்திலே யிருந்து போக்கியமாம் ஒவ்வொருபோக்கிய சாதகத்துக்குமூன்று கூடவேண்டும் அங்கேசைதன்னியம் நிற்சங்கமாயொவ்வொருபூதத்தில் வியாபித்திருக்கும்பரஸ்பரமாய்ஆகாச அம்ஸம் அந்தக்கரணம்-௫-வாய்வம்ஸம் பிராணுதிவாயு-௫-அக்கினிஅம்ஸம் ஞானேந்திரியம்-௫-அப்புஅம்ஸம்விஷயம்- ௫- பிருதிவியம்ஸம் கன்மேந்திரியம்-௫-இது ஒன்றிலொன்று கலக்கையால் பஞ்சீகரணமென்றறிக. இதுகளில்ஆகாசத்திலிருந்து அந்தக்கரணஞ்சமானவாயுவாதாரமாய் சுரோத்திரத்துவாரத்திலிருந்து வாக்குச்கிதமான சத்தங்கொள்ளும் மனமானதுவாயுவிலிருந்து வியானவாயுவாதாரமாய் தொக்கிந்திரியத்தாலே பாணிசகிதமாய்ப் பரிசங்கொள்ளும் இனிப்புத்தியானது அக்கினியிலிருந்து உதானவாயுவாதாரமாய் சக்ஷுவிந்திரியத்தாலே பாதசகிதமாய் ரூபங்கொள்ளும். இனிச்சித்தமானது அப்புவிலிருந்துஅபானவாய்வாதாரமாய் சிங்குவையால்குய்யசகிதமாய் ரசங்கொள்ளும் இனி ஆங்காரமானது பிருதிவியிலிருந்து பிராணவாயுவாதாரமாய் ஆக்கிராணத்தாலே பாயுசகிதமாய் கந்தங் கொள்ளும் இவ்வாறு சத்தாதிவிடயங்களைக்கொள்வதென்றறிக. இனிப்பஞ்சபூதமும் பஞ்சவிஷயத்திலிருந்து தாமசாங்கார அம்ஸமாய் அவ்வியத்தமாயிற்று. அஃதே பஞ்சமகாபூதம் அஃதே சொரூபத்துக்கும்வந்தது பரஸ்பரகூட்டமாகி இந்தக்கூட்டங்களையொருவிடத்திலே கூட்டவேண்டுமென்று ஈஸ்வரன் மாயையிலே பிரேரித்தாரென்றறிக. இதெல்லாஞ் சங்க்ஷேபமாய்ச்சொல்வது. முன்சொன்னபிரமம் விவர்த்தனமாயையை அதிட்டித்தபோதுமகாமாயையாய் சுத்தமாயையுண்டாயிற்று. இந்தமாயையிலே பிரமம்திஷ்டித்தபோதுபரமாத்மாவாய்ப் பிரதிவிம்பித்தது இந்த சர்வேசுரன் மகாமாயையைப்பார்த்தபோது மகதத்துவமுண்டாய் மகதத்துவத்தில் அந்த பரமாத்மாபிரதிவிம்பித்த போது சீவனுண்டாயிற்று இப்பலிந்த சீவனுக்காக தத்துவசிருஷ்டி யுண்டானதென்றறிக. சர்வேஸ்வரன் பஞ்சபூதத்திலேபிரவேசித்து அதிட்டிக்கப்பஞ்சீகிருதமாயிற்று உண்ணிலையென்றுபெயராய் முன்சொன்ன-௨௰௫-மாம்இனித் தூல பூத அம்ஸ கூட்டங்களாவது பிருதிவிக்கு மயிர்-தோல்- எலும்பு- நரம்பு-மாம்ஸம்-ஆ-௫-கூட மற்றநாலுபூதத்துக்கும்-௨௰-ஆ-௨௰௫-இது புற

நிலையென்றும்பெயராம். இனித்தூலவியற் பஞ்சவிங்சதியாவதுளதிர்விஷை
யம்-௰-ஞானேந்திரியங்-கன்மேந்திரியம்- ௰- அந்தக் கரணம்-௪-உயிர்-௧-ஆ-
௨௰௫-இனித் (தூலபஞ்சவிங்சதியாவது) -சுரோத்திராதி- வாக்காதிதானம்-௰-
அவத்தைதானம்-௫-பிருதிவியின் கூறுமயிராதி-௫-அப்புவின் கூறுசோரிமுத
ல்-௫-ஆ-௨௰௫-இனி (சூட்சுமபஞ்சவிங்சதியாவது) சத்தாதி-வசனாதி-௰-அக்
கினி சம்பந்தம்-ஆகாரம்- நித்திரை-பயம்-மைதுனம்-மறப்பு-ஆ-௫-வாயுவி
ன்கூறுண-ஓடலிருத்தல்-கிடத்தல்-நடத்தல்-வலித்தல்-ஆ-௫- ஆகாயத்தின்
கூறுண-காமக்குரோத-லோப-மோக-மதம்-ஆ-௫-ஆ- ௨௰௫-இனிப் (பொறி
யிற்பஞ்சவிங்சதியாவது) ஞானேந்திரியங்-கன்மேந்திரியம்-௰- வாயு-௰-கரண
ம்-௪-உயிர்-௧-ஆ-௨௰௫-இனி (மறையில்பஞ்சவிங்சதியாவது) பூதம்-௫- ஞா
னேந்திரியம் -௫-விஷயம்-௰-கரணம்-௪-உயிர்-௧-ஆ-௨௰௫-இனி (பூதவியற்ப
ஞ்சவிங்சதியாவது) சுரோத்திராதி-௫-வாக்காதி-௫- விஷயம்-௰ - அந்தக்கர
ணம்-௪-பகுதி-௧-ஆ-௨௰௫-இப்படி யேழுவிதப் பஞ்சவிங்சதி யென்றறிக.
இனிச் சதுர்த்தோபிரகரணம் ஈஸ்வரதனுத்திரையம் அஃதாவது மகாதேவ
ன் தன்னிச்சையாலே பஞ்சமகாபூதத்தை யிருபதுபங்காக்கி நிசாம்ஸமே
நிறுத்தி மீந்ததைக்கூட்டினார் அதிலே ஒருபாகத்தை யிருபத்தைந்து பாக
மாக்கி இந்த -௨௫-ம்- ஈஸ்வராம்ஸமாம் பத்து திக்குஞ் சுரோத்திரம் வாய்வு
தொக்கு சட்சுசூரியன் சிங்குவை வருணன் ஆக்கிராணம் அஸ்வனிதேவதை
கள் இதிவிரணியகெற்பனிந்திரியம்-வாக்குவன்னி-பாணிசுரபதி - பாதமுபே
ந்திரன்-குய்யம்-பிரசாபதி- குதம்-நிருதி - இது கன்மேந்திரியமாம் இது பிர
மாண்டத்தில் வர்த்தித்தது பிண்டத்திலுஞ் சரியாம் இனி அந்தக்கரணம் வி
ஷ்ணு-மனது-சந்திரன்-புத்தி கமலாசனன்-சித்தம்நாராயணன்- அகங்காரம்
உருத்திரன் விஷயம்பத்தும் அண்டத்திலிருக்கையா லதுவே விஷயம் இ
ந்த அண்டத்தில்-௨௰௫-குணதேவதையு மீஸ்வரலிங்கதேகமாம் இந்தசூக்ஷு
மபூதமே யீஸ்வரன் லிங்கதேகமென்றுசுருதி ஸ்மிருதி பிரசித்தம். இந்தஅண்
டத்தில்-௨௰௫-தேவதையும் பிண்டத்திலே சீவராசிகளுக் கிருக்கின்றதத்துவ
ம்-௨௰௫-ம்-அதிதேவதைகளாம் இனி யீஸ்வரன் தூலதேகமாவது பஞ்சீகிரு
தபூதமாயிற்று அதெப்படியென்றால் ஈஸ்வரன் பஞ்சபூதத்தையும் ஒவ்வொ
ன்றாய்ப்பார்த்து ஆகாயத்திலேகரணம்-௫-முண்டாக்கி மற்ற அம்ஸம்பாதி அ
ந்தக்கரணத்தை நிறுத்தும் மற்றநாலையு நாலுபூதத்திற்கலப்பித்து வாயுவை-
௫-ஆக்கி யிதிற்பாதிநிறுத்தி மற்றநாலும் நாலுபூதத்திற் கலப்பித்து மற்ற
மூன்றுபூதத்துக்குமற்ற அம்ஸம் பாதிநிறுத்திமற்றநன்னான்கு பங்கையும்நா
லுபூதத்திற் கலப்பித்து ஆகாயங்கரணம்-௫-வாயுவசனாதி-௫-அக்கினி சுரோ
த்திராதி-௫-அப்பு சத்தாதி- ௫-பிருதிவி வாக்காதி-௫-ஆ-௨௰௫-ம்- தூலபஞ்சீ
கிருததத்துவமாயிற்று. இந்தப் பூதங்கள்ஒவ்வொன்றுக்கு மூன்று மூன்றாகக்
குணதர்மகர்மங்களுண்டென்றறிக. அதெப்படியென்றால்ஆகாயத்துக்குநிர்ம
லமே தர்மம்-அவகாசமே-கர்மஞ்சத்தமேகுணம்- வாயுவுக்குக்குணம்சத்தம்-ப
ரிசம்-௨-சாஞ்சல்லியமே தர்மம்உலாத்துகிறதேகர்மம்அக்கினிக்குசத்தாதிகுண

ம்-௬-ஊஷ்ணமேதர்மம்பாகமேகர்மம் அப்புவுக்குச்சத்தாதிகுணம்-௪-நெகிழ்ச்சியே-தர்மம்- பதஞ்செய்வதேகர்மம்-பிரிருதிக்குகுணம்-௫- கடினமேதர்மம்தாரணாதிகமேகர்மம்சத்தாதிகுணம்-௫- இப்படியென்றறிக. காரணபூதத்தில்குணங்காரிய ரூபமாய்ப்பிரவர்த்திக்கும் ஆகாசமுதலொன்றிலொன்றுபிறக்கையாலொவ்வொன்றுக் கொவ்வொருகுணமதிகமாயிற்று. இப்படியுண்டான சத்த-பரிசரூப-ரச-கந்தம்-௫-ம்-சுரோத்திராதி-௫-ல்-அறியப்படும்இந்தபஞ்சமகாபூதத்தைச் சருவேஸ்வரன் பஞ்சீகிருதமுண்டாக்கினபிறகுதூலதேகமான அனந்தமெப்படி நிர்மித்தானென்னில்,தன்னிச்சாமாத்திரத்திலே பஞ்சமகாபூதமும் விசித்திரமாக இரசதன்மாத்திரத்திலே கலந்துகற்பிதஞ்செய்து நிர்மலதேக பாவனையான பிர்மாண்டோற்பத்தியாயிற்று அந்ததேவதாமய விலிங்கதேகத்துக்குப் பிரமாண்டமேஸ்ரீகம்அவயவயுக்தமாய் தூலதேகமாயிற்று சத்தபாதாளமே யுள்ளங்கால்முதலாய்-தராதலம்- இரஸாதலம்- மகாதலம்-பாதாளம்-சுதலம்-விதலம்-அதலம்-பூலோகம்-புவலோகம்-சுரலோகம்- மகாலோகம்- சனலோகம்- தவலோகம்- சத்தியலோகம் -இந்தப்பதினாலுலோகமும் விராட்புருஷனுக்கு அவயவங்களாம் இந்தப்பதினாலு லோகத்திலுள்ளதெல்லாம் அவன்வயிற்றுக்குள்ளே யிருக்கிறது இதெல்லாங்கூடினதுபிர்மாண்டத்திரிபுவனமாம் இது பிருதிவியாவரணம் இப்படி ஐந்துபூதமு மொன்றுக்கொன்று பதின்மடங்காவரணமாயிருக்கும் பின்பு மகதகங்காரம்மகதத்துவம் இப்படி ஏழாவரணமும் பரனுக்குச் சத்ததாதுவாம் இப்படி அனந்தகோடிபிர்மாண்டமும் மாயாதேவிகெற்பத்திலே யிருக்கும் இந்தபிரமாண்டங்களீஸ்வரனுக்குத் தூலசரீரம் இந்த தத்துவசிருட்டி சாக்கிரம் இதற்குப்பிர்மாஅபிமானி சிருஷ்டிகர்த்தாவிது பிரதமசரணம் அகாரபீசாக்ஷர முதலிய சகலமுங்கெற்பீகரித்திருக்கும் இனி (இரண்யகெற்பலிங்கதேகமாவது) இதற்குத் திதி விஷ்ணுகற்தா அவஸ்தை சொற்பனம் உகாரபீசம் சகலமுங்கெற்பீகரிக்கும் இது இரண்டாமாத்திரிகை இனி ( ஈஸ்வரன்காரணதேகமாவது ) பிரகிருதிமகாப்பிரளயமான சுழுத்தி இது மூன்றுங் கௌரிபதிக்குங் கயிலாசபதிக்குந் தனுத்திரயமாயும் இதற்கு ஆதாரபூதமாயுமிருக்கும் மகாரபீஜம் இது பிரணவத்தில் மூன்றாமாத்திரிகையாம் இதுசகலமும் ஓங்காரவிஸ்தாரணமாயிருக்கு மென்றறிக. இனி விராட்டு இரணியகெற்பன் மாயாவிது மூன்று மீஸ்வரன் தனுத்திரயமாம் உற்பத்தி திதி லயம் இது அவத்தாத்திரயமாம் பிரம- விஷ்ணு - ருத்திரன் - அபிமானிகளாம் அகாரம் மூன்றுமாத்திரிகை குணமூன்று இஃதெல்லாமாயாவிஸ்தாரம் இனிகாரணவுபாதிக்குச்சர்வேஸ்வரனே சகலமாய்வர்த்திக்கும் இது கேவலப்பிரமத்திலில்லை யிதுகாரணவுபாதியின் பிரிவென்றறிக. இனிச்சகலதத்துவார்த்தமு முன்னே சொல்லுகிறோம்இது ஈஸ்வரன்தனுத்திரய முடிந்த தென்றறிக. இதைநாலாம்பிரகாணத்தில்சொன்ன தென்றறிக.

(பெத்தநிலையாவது) முன்சொன்னபரமாத்மாவே பிரதிவிம்பித்த சீவாத்மாவுக்குக்காமகர்மஅவித்தை மூடப்பட்டு அஞ்ஞானத்தாலே தன்சொரூபத்தை மறந்து சுகதுக்கவியாகூலனாய் ஜெனனமரணப்பட்டுச்சொர்க்கநரகங்க

னிலே திரிந்துதிரும்பவும் பிறந்திறந்துதிரிவான் இவனைத்திரோபவசத்தியால் மறைப்பித்து ஞானசத்தியாலேதிருப்புகிறது ஈஸ்வரனும் எப்படியென்றால் வெள்ளத்திலகப்பட்டவனை நீயக்கற்றவன் அவ்வெள்ளத்திற் குதித்துப்பிடித்துவந்து கரையில்விடவேண்டும் நித்திரைசெய்கின்றவனைவிழித்திருக்கின்றவன் எழுப்பவேண்டும் அவித்தையாபந்தம் எப்போதுமித்தையேயிதுசத்தியமானால் விடுவிக்கக்கூடாது ஈஸ்வரன் ஆதாரசிருஷ்டிவேணுமென்றுநிச்சயித்துபிரபஞ்சத்தின்அனு சந்தானத்தாலேகிஞ்சித்மாத்திரம்விசித்திரசொரூபனானவுடனே அனந்தகோடிபக்தர்களுதயமாய் முகிளித அஸ்தமானார் அந்தசொரூபத்தில் கிஞ்சித்மாத்திரமானதுதான் அஞ்ஞானலட்சணத்தினாலே சைதன்னியனுக்குஅகங்காரபாவமுதையமாயிற்றுஅஃதெப்படியென்றால், ஒருதேகத்திலே அவயஅஸ்தபாதரோமதந்தமுகமுற்பத்திபோலும் அஞ்ஞானஸ்வரூபமாயாதேவியாலே வெகுவாம். ஒருபுத்திக்கு அனேகவிர்த்திதோன்றுவதுபோல அறிவில் மறைப்புக்கூடுகையாலே அந்தமாயாதேவிஎத்தனைவிதமானாலும் அத்தனைக்கு மீஸ்வரன்கூடி அஞ்ஞானலட்சண அவயவரூபனாய்ப்பிரவேசித்தான் அதினால் சூரியன் கடோபாதியாலே அனேகனும்போல்ஒருசீவனே உபாதிபேதத்தால் அனந்தவிதசீவனானான் அந்தச்சீவனுக்கெல்லா மீஸ்வரனுமாவான்ஆனாலுமீஸ்வரன்நித்தியன் சீவன்நாசமாம்சீவகர்ம சுகதுக்கமீஸ்வரனுக்கில்லை ஆனாலுஞ் சலத்தைவிடத்தரங்க மில்லை சலந்தரங்கதர்மத்தைவிடும் இதுபோலபரமாத்மாநிஜவான பிரதிவிம்பத்திலேசீவதர்மம் வர்த்தித்து அது அஞ்ஞானத்தில் பிரவேசிக்க விபரீதஞான முண்டாயிற்றுஇதுபழுதைபாம்பானதுபோலென்றறிக. அஃதெப்படிஅஞ்ஞானம்பழுதை விபரீதஞானஞ் சற்பம்போலேயாம் இதல்லாமற் சூரியகிரணத்தாலே மேகமுண்டாய்அதுதானேசூரியனைமறைத்ததுபோல்ஆத்மாவினால்வந்தஅஞ்ஞானம்ஆத்மாவைமறைக்கும் மறைத்தாலுஞ் சூரியன் நடக்கிறகெதியையும் நாழிகையுந்தடுக்கமாட்டாததுபோல் ஆத்மாவின் உண்மைஞானத்தைத்தடுக்காது அஞ்ஞானம் அவித்தையும் ஆவரணவிபரீதாஞ்ஞானவிக்ஷேபமாகிறதே சிவசங்கற்பகாரணம் (அவித்தையாவது) மூலப்பிரகிருதிஅம்ஸம் அதற்குப்பிரகிருதியேதேகம்சீவன்பரமபுருஷாம்ஸம் ஆகையால்சீவனையும்புருஷனெனப்படும்.இதுபிரஹதாரணஉபநிஷத்திற்கூறுவதால்சீவசிருஷ்டியுமாயையும் அனுதிசித்தம் இந்தசீவனுக்குப் பிரகிருதியாகிற அவித்தையேகாரண தேகம் இதிலே யுண்டான தத்துவங்கள்கூடி அன்னிதாஞானமாய் இலிங்கதேமாகிறசூட்சுமதேகத்தில்தர்ப்பண பிரதிவிம்பம் போலச் சிவன்காரணதேகத்தினின்றுலிங்க தேகத்திற் பிரதிபலித்தவுடனேஅனந்த கோடிரூபமானான். செனனமரணதுக்க முதலானது வர்த்தித்த தென்றறிக. இந்த இலிங்கதேகம்இரணியகெற்பன் இதேலிங்கதேகம்இந்தலிங்கதேகமே நெளிவுஊர்வன முதல் - அடிசாத - சீவபேதமும் இதுவுமல்லாமல் தூலதேகம் வரும்படியிந்த இலிங்கதேகஞ் செய்தபுண்ணியபாவவிதத்தாலேநானாயோனியாம்.இந்த விலிங்கதேகத்துடன் கூடினசீவன்உசுவாசநிசுவாசத்தாகிலும் அன்னபான

இயிலாகிலுங் கர்மாதீனத்தாலே சீவன் அணுரூபமாய் பதினெட்டுதான்னியத்திலே ஒருவிதத்திலீனமாய் அன்னமய ஷடு தாதுகாரணமாம் அஃதெப்படியென்னில், புசிப்புகளிலே அன்னரஸமுதலானதுடன்கூடி தகப்பன் தேகத்திலேயிரசமாய் இதுஜடராக்கினிசம்பந்தத்தாலே ஆறுதாதுவாகிமீண்டு பதினலுநாளிற்சுக்கிலமாய் ருதுகாலத்தில் மாதாவின்சுரோணிதத்திலே கூடிப் பரிணமித்து தூலதேகமாமென்றறிக. இப்படிக்காரணசூட்சும ஸ்தூலமாகிய மூன்றுதேகத்துக்கும் விராட்டுஇரணியகெற்பஅவ்வியாகிருதனென பரமாத்மாவின் மூன்றுதேகமேயுட்கருவியாய்ப் பிரேரிக்குமென்றறிக. சீவனுக்கு அஞ்ஞானத்தினலேபிறப்பிறப்புவந்ததென்றறிக. இனி (முத்திநிலையாவது) முன்சொன்னசீவனுக்குப் பாசபந்தமானபிரகிருதி லிங்கதேகந்தூலதேகமுதலானதத்துவங்களையெல்லாம்நீயல்லவென்றுநேதிபண்ணித்தனுகரண புவனபோகமெல்லாம் இரச்சுசற்ப பிராந்தியானதுபோலாயிற்றென்று அனுபவபூமிநாலில் முதற்பூமி (விக்ஷிப்தஆவது) பிரமாப்பியாசஞ் சந்தேகமாய் சொருபத்திலே சித்தசமரசமானது அதைவிட்டுச் சம்சாரவிவகாரத்திலே புகுவது இனி இரண்டாம்பூமி(கதாயாதமாவது)சித்தஞ் சொருபத்திலே லயமாய் விவகாரத்திலெட்டிப்பார்த்துதிரும்பச் சமாதியாவது இனி மூன்றும்பூமி (ஸுஸ்லிஷ்டதமாவது) மனது பிரமத்திற்கலந்து ததாகாரமாயானந்தம் பொசிக்கும் இனி நான்காம்பூமி ( ஸுலீநதமாவது ) பிரமத்திலேசித்தஞ் சேடமில்லாமல் லயமாய் ஞெப்திமாத்திரமாவது இதனல் பிரமாப்பியாசமாகிற பரிபூரணம்பிறக்கும் இந்திரியம் பற்றுமிடமெல்லாஞ் சுலீனதநிஷ்டையில் நிற்ப தென்றறிக. இனிஇப்படிக் குருவாலே சாம்பவி கேசரி ஞான மவுனமுத்திரைகளைப்பெற்று ஜெகசீவபரமெல்லாம் பிரமத்தைவிட வேறில்லையென்று தெளிவதே மோட்சமென்றறிக. இந்தமாயாவாதவைதீகவேதாந்தம் வியாசகற்பிதமென்றறிக. இனிச் சச்சிதாநந்தத்துக்கு அர்த்தம் சத்தேபரப்பிரமம் சித்தேபிரமத்தின் சிற்கிரண பிரபாவமானசித்பிம்பம் ஆனந்தமேயிந்தவிரண்டின்மத்தியமானவிலாசம் இம்மூன்றுமொருமித்தலேயீஸ்வரன்பிரமமேசத்ததனு சித்து சிற்கிரணதனுஆனந்தமேயீஸ்வரதனுதற்பத நிற்குணம் சிற்பதம் சகுணம்ஆனந்தமேசகுணநிற்குணம்சற்பதம் பிரவர்த்தி நிவர்த்தியில்லாததுசிற்பதம்மாயையுமாயாபிரவர்த்திநிவர்த்தியுமுள்ளது இது சத்துமல்லஅசத்துமல்ல சத்துஅகர்த்தா சித்துகர்த்தாகிரியாரூபம் ஆனந்தம் சகலகர்த்தவ்வியத்துக்குங்காரணம் இது உத்தரமீமாங்கிசையென்றுபோராய் உபநிஷத்தார்த்தப் பிரதிபாதிகமாய் பிரபஞ்சத்துக்கு மித்தியாதத்துவஞ் சாதிக்கையாலே பிரமாத்மம் அயிக்கியத்துவஞ் சொல்லுமென்றறிக. ஞெப்திமாத்திரமாகியஆத்மா பிரமாயிக்கஞானத்தாலே விவகாரபந்தநிவர்த்தியாவதே மோட்சமென்றறிக.

## எ-வது—அத்தியாயம்.

## சுத்தவேதாந்தம்.

சத்தியமாகச்சக சிவபரத்தைச்
சுத்தமதாய்ச்சொலல் சுத்தவேதாந்தமே.

சொரூபலட்சணம் விவேகசிந்தாமணியிற்சொல்வது திருக்கு திரிசிய ம் என்றிரண்டாம் இதில் திருக்குவிவேகமாவது அதிருக்குமவானந்தம் பரிபூரணஞாதுருஞானவிர்த்தி ஞாதுரு ஞான ஞேயஞ் சத்து சித்து ஆனந்த ஞ்செக சிவ பரம் இதுகளொன்றுமில்லாதவிடத்திலேதிர்த்தபொருளாய்ச் சுத்தசூனியமாய் சுத்தஞெப்திமாத்திரமாயிருக்கிற பொருளொன்றுண்டென்பது. இனி (தடத்தலட்சணமாவது) முன்சொன்ன திருக்குவினிடத்தில்-சுகத பேதம், சுஜாதிபேதம், விஜாதிபேதமென நிராகரிக்கத்தக்க பேதத்திரயமுண்டு. அவைகட்குத்திருஷ்டாந்தம். ஒருவிருக்ஷத்திற்குப் பத்திரபுஷ்பபலாதிகளேசுகதபேதம். விருக்ஷாந்தரமே சுஜாதிபேதம், பாஷாணாதியேவிஜாதிபேதம். திருக்கானசத்ரூபபிரமம் ககனம்போலநிரவயவமாகையாலும், சத்துக்கு வேறொரு சத்தில்லாமையாலும் சுகதபேதம். சுஜாதிபேதமில்லாதிருந்தாலும், சகத்காரண மாயையுண்டாகையால் விஜாதிபேத முண்டென்னின், சித்திரிகனைவிட்டுச் சித்திரசத்திக்கு வேறே தோன்றுவதில்லாததெப்படியோ அப்படிச் சின்மாத்திரபிரமத்தைவிட்டு, மாயைக்கு விலக்ஷணத்துவமில்லையாகையால், விஜாதிபேதமில்லையென்பதே நிச்சயம் இந்தஅர்த்தத்தில், "ஏகமேவத்துதியமென்னும், பதத்திரயத்துக்குஜக்கிய, அவதாரணை, துவைதநிஷேதமென அர்த்தத்திரயமாகையால், அந்தக்கிரமத்தில், சுகத, சுஜாதி, விஜாதி பேதத்திரயமில்லையென்பதேபிரமாணமென்றறிக. இனி (கற்பிதத்துவயம்) அத்தியாரோபம், அபவாதமெனக் கற்பிதத்துவயமுண்டு. அவற்றுள், உண்டான ரச்சு, சுத்தி, ஸ்தாணுவாதியில், பிரமத்தில் இல்லாதசர்ப்ப, ரசித, சோராதிகற்பிதம்போலச் சத்ரூபபிரமத்தில் இல்லாதமாயாப்பிரபஞ்ச கற்பனையே, அத்தியாரோபமாம். இது சர்ப்பமல்லரச்சுவே, இது ரசிதமல்ல சுத்தியே இது சோரனல்ல ஸ்தாணுவேயென்பதுபோல விசாரமுகத்தால், இது பிரபஞ்சமல்ல பிரமமென்பதே அபவாதமென்றறிக. இனி (உபாயத்திரயம்) அதத்துவியா விருத்திலக்ஷணை - தடத்தலக்ஷணை - சொரூபலக்ஷணையெனத் திருக்குரூபவஸ்து சாக்ஷாத்காரத்துக்கு உபாயத்திரயமுண்டு. அவற்றுள், தேகாதி அநாத்துமவர்க்கங்களை யுத்தியால் நேதித்து,நின்றஆத்மனை அறிவிப்பதே அதத்துவியா விருத்திலக்ஷணையாம். விருக்ஷத்தின்மேலே சந்திரனிருப்பானென்பதுபோலப்பூதாதிசகத்காரணத்திருந்த, ஆத்மனை அறிவிப்பதே தடத்தலக்ஷணையாம். பிரகிருஷ்டோஷ்ணப் பிரகாசரூபமே சூரியனென்பது

போல, "ஆத்மன்நிசரூபமறிவிப்பதே சொரூபலக்ஷணையாமென்றறிக. ( ஆத்மசொரூபலக்ஷணபஞ்சகம்) சத்து,சித்து. ஆனந்தம். நித்தியம்,பூரணமெனஆத்மாவின் சொரூபலக்ஷணபஞ்சகமுண்டு. அவற்றுள், அறிவேன் அறியேனென்பதிலும், காமாதிவிருத்தி தோன்றுமிடத்திலும், தோன்றாவிடத்திலும், சாக்கிராதி அவஸ்தையிலும், தனக்கொருவாதை யில்லாமலுண்டென்பதே சத்துரூபமாம். சாவாவஸ்தையிலும் விஷயங்களை இடைவிடாதறிகிறதே சித்துரூபமாம். பரமப்பிரீதியில் விஷயமாவதேஆனந்தரூபமாம். சதோதிதமாவதே நித்தியரூபமாம். சர்வார்த்த சாதகமாகையால், சர்வசம்பந்தத்துவமே பூரணரூபமாம். சச்சிதானந்தமே ஆத்மசொரூமானால், சத்துஞ்சித்தும்போலச் சர்வபுத்தி விருத்தியிலும், ஆனந்தரூபத்துக்கு அபிவியக்தி யுண்டாகவேண்டும். அஃதில்லாமையால் ஆனந்தம். ஆத்மசொரூபமல்லவென்றால் திருஷ்டாந்தம். உஷ்ணப் பிரகாசமானதீபப்பிரகாசமே கிரகத்தில் வியாபித்திருக்கும் உஷ்ணம் வியாப்தமாகாது. சலத்தில் உஷ்ணமேபிரகடித்திருக்கும், பிரகாசம்பிரகடிதமாகாது. காஷ்டத்தில் உஷ்ணமும், பிரகாசமும், இரண்டும் பிரகடமாயிருக்கும். அப்படியே பிரமத்தின் சத்துபாஷாணாதிகளில், அபிவியக்தி யாகிறதல்லாமல் சிதானந்தங்கள்பிரகாசியாது, புத்தியின் தமோகுணத்தால் அஞ்ஞானமயமான மூடவிருத்தியிலும், ரஜோகுணத்தால் ராகமயமான குரோதவிருத்தியிலும், சத்துச் சித்திரண்டும் பிரகாசிக்கிறதல்லாமல், ஆனந்தம் பிரகாசியாது. சத்துவகுணத்தால், வைராக்கியமயமான சாந்தவிருத்தியில், சச்சிதானந்தமென்னுந் திரிரூபத்துக்கும் ஸ்புரணை காண்பிக்கும். ஆகையாலானந்தம் ஆத்மசொரூபமாம், இந்தப்பஞ்சரூபத்துக்கும் உபாதிபேதமாவது. ( சத்துத்திரயம் ) வியாவகாரிகசத்து, பிராதிபாலிகசத்து, பாரமார்த்திகசத்து, எனச்சத்துமூன்றாம். அவற்றுள்-சாக்கிரத்தில் கடாதிசத்தே விதேககைவல்லியபரியந்தம் சுழுத்திமூர்ச்சைமுதலான அவஸ்தையிற்றோன்றாமல், எழுந்தபொழுது முன்போலத்தோன்றுகையால், வியாவகாரிகசத்து. சுத்திகாரசித சொப்பனவிஷயாதிசத்துத் தோன்றுகிறகாலத்தல்லாமல், விழித்தகாலத்தில்லாமையால், பிராதிபாலிகசத்து, சமஸ்தகற்பனைக்கும் அதிஷ்டானமாய்த் தோன்றாதடங்காதிருக்கிற பிரமசத்தே பாரமார்த்திகசத்தென்றறிக. இனி (சித்துசதுஷ்டயம்) சீவ ஈச்சுர கூடஸ்த பிரமமென்னுநான்குஞ்சித்துசதுஷ்டயமாம், இதற்கு திருஷ்டாந்தம் சலப்பிரதிபிம்பாகாசம், மேகாகாசம், கடாவச்சின்னாகாசம், மகதாகாசமெனக்கிரமத்தில் திருஷ்டாந்தசதுஷ்டயமாமென்றறிக.

இனி ( ஆனந்தாஷ்டகம் ) விஷயானந்தம், பிரமானந்தம், வாசனானந்தம், முக்கியானந்தம், நிசானந்தம், ஆத்மானந்தம், அத்வைதானந்தம், வித்தியானந்தமெனஆனந்தம்அஷ்டபேதமாம். அவற்றுள். வனிதாதிவிஷயலாபத்திற் றோன்றுவதேவிஷயானந்தம். நித்திராகாலத்திற்றோன்றுவதேபிரமானந்தம்- நித்திரைதெளிந்துந் தெளியாவிடத்திற்றோன்றுவதேவாசனானந்தம். ஸ்தானஸ்தானமில்லாத வுபேக்ஷாபுத்தியிற்றோன்றுவதே முக்கி

யானந்தம். யோகாப்பியாசபலத்தால், மனோலயமானவிடத்திற் றோன்றுவ தேநிசானந்தம். பிரியமான வனிதாதி விஷயமத்தியில் தானே பிரியாத், மக னென்றறிந்தவிடத்திற் றோன்றுவதே, ஆத்மானந்தம். நாமரூபப்பிரபஞ் சமெல்லாமித்தை, தானேசத்தியமென்றுவிவேகத்திற் றோன்றுவதே அத் வைதானந்தம். தத்வமசி யாதிவாக்கிய சந்நியமான அபரோக்ஷஞானத்திற் றோன்றுவதே வித்தியானந்தமென்றறிக. இனி (அபாவசதுஷ்டயம்) பிராக பாவம், பிரத்வம்சாபாவம், அந்நியோந்நியாபாவம், அத்தியந்தாபாவமென ப்பிரமசித்தியபதத்துட்புகாத அபாவசதுஷ்டயம்நான்கு. அவற்றுள்-மிருத்தி கைமுதலானதில் கடாதிமுன்னில்லாததேபிராகபாவம். உண்டானகடம்பின் னில்லாததே பிரத்வம் சாபாவம். கடத்திற்படமில்லை, படத்திற்கடமில்லை யென்பதே அந்நியோந்நியாபாவம். ககனகுசுமாதிகமே, அத்தியந்தாபாவமா மென்றறிக. இனி ( பரிச்சேதத்திரயம் ) காலபரிச்சேதம், தேசபரிச்சேதம். வஸ்துபரிச்சேதமெனப்பிரமபூரண பதத்துள் நிராகரிக்கத்தக்க பரிசேதத்திர யமுண்டு. அவற்றுள்- ஒருகாலத்துண்டு ஒருகாலத்தில்லையென்பதே காலபரி ச்சேதம், ஒருதேசத்துண்டு ஒருதேசத்தில்லையென்பதே தேசபரிச்சேதம். ஒருவஸ்திதுவாகும், ஒருவஸ்திதுவல்லவென்பதேவஸ்துபரிச்சேதமென்றறிக

இனி இருக்குவேதமெசுர்வேதஞ் சாமவேதம்-அதர்வணவேதமிந்நான் கில்பிரக்ஞானம்பிரமம் அஹம்பிர்மாஸ்மிதத்வமசிஅயமாத்மாபிரமம்இந்நாலு ஞ் சித்தார்த்தபோதகம் இந்நான்குமகாவாக்கியத்தில் தத்துவமசிமுக்கியம் இது தத் துவம் அசி என்கிற பதத்திரையத்துக்குச் சிவசீவ வயிக்கியமே கிரமமான வர்த்தத்திரயமெனப்படும், பின்னும் பதபதார்த்தவாக்கி யத்து க்குச்சொல்வது, சாமாநாதிகாரணசம்பந்தம் விசேஷணவிசேஷிய சம்பந்த ம் இலக்ஷியலக்ஷண சம்பந்தம், இப்படிக்கிரம சம்பந்தத்திரயமுண்டு. இந் ல் (சாமாநாதிகரணசம்பந்தமாவது) நீலோற்பலவாக்கியத்தில் நீலபதமும் உ ற்பலபதமும் ஒருஉற்பலத்திரவியத்தி லிருக்கிறதுபோல தத்துவமென்னும் வாக்கியத்தில் தற்பதமுந் துவம்பதமு மொருசைதன்னியத்திலிருப்பது (வி சேஷணவிசேஷியசம்பந்தமாம் ) சோயந்தேவதத்தனென்னும் வாக்கியத் திற்சத்தவாச்சியமான தேசகாலவிசிஷ்டத்தில் தேசமுங்காலமும் விசேஷ ணம் புருஷன் விசேஷியம் இதுபோலத்தத்துவமென்னும் வாக்கியத்தில் த ற்பதவாச்சியமானசர்வஞ்ஞத்துவவிசிஷ்டத்திற்சர்வஞ்ஞத்துவ உபாதிவிசே ஷணம் இது நீங்குமிடத்தில்நின்றசுவரசைதன்னியம்விசேஷியம். இனித்து வம்பதத்துக்குவாச்சியமானகிஞ்சஞ்ஞத்துவ விசிஷ்டத்திற் காரியோபாதிவி சேஷணம் இது நீங்குமிடத்தில்நின்ற சீவசைதன்னியம்விசேஷியம் இனில க்ஷணலக்ஷிய சம்பந்தமாவது தற்பத துவம் பதங்களுக்கு வாச்சியமான ச ர்வஞ்ஞத்துவ கிஞ்சஞ்ஞத்துவவிசிஷ்டங்களுக்கு அயிக்கியங்கூடாத படியா ல் தற்பதத்துக்கு வாச்சியமான சர்வஞ்ஞத்துவத்தைவிட்டுச் சைதன்னி யமாத்திரம் லட்சணம். இனி துவம் பதத்துக்கும் அதின்வாச்சியமான கிஞ் சஞ்ஞத் துவத்தைவிட்டுச் சைதன்னியமாத்திரம் லட்சணம் ஆகையால்

அசிபதத்தினுலே தற்பத துவம் பதலட்சியங்களுக்கு ஐயிக்கியஞ்சொல்லு கையினுல் அகண்டப்பிரம விஷய சாக்ஷாத்காரஞ் சித்திக்கும் இந்தலட் சியசொரூபமானசைதன்னியந் தானேசாக்கிராதி அவஸ்த அபிமானியானவி ரண்டுவிதஅவஸ்தைக்குமபிமானிவிஸ்வாதிவிராட்டாதிக்குஞ் சீவாத்மா பரமா த்மாவுக்கும் பிரித்தறியப்படாத போது தத்துவமசிவாக்கியத்துக்கு வாச்சி யார்த்தமாகப் பிரித்து சைதன்னியமாத்திரமாகவறியப் பட்டபோதுலட்சிய சொரூபமான அவஸ்தாத்திரயஸிமித்தியமாய்நித்தியசுத்த புத்த முத்தசத்திய ஞானனந்தாகண்டதுரியப் பிரமமாத்திரமேயாம் இதற்குத்தானே பின்னு ம்விவேகசிந்தாமணியில் தத்துவமசி பதத்திரயங்களுக்கு வாச்சியார்த்தல ட்சியார்த்தமென்றுஅர்த்தத்துவயமுண்டு. அதெப்படி, பூர்வோக்ததூலாதி தனுத்திரயசமஷ்டி ரூபத்துக்கு விராட்டு முதல்மூன்றும் பிரமத்தைக்கூ டிதப்தாயப்பிண்டம்போல ஏகாகாரமாய்க்காண்கிறது வாக்கியார்த்த முக்கி யார்த்தமென்றும் அபிதார்த்தமென்றுஞ்சொல்லப்படும். இனி துவம்பதத்து க்குந்தனுத்திரய வியஷ்டிரூபத்திலே விஸ்வாதிகள்பிரத்தியே காத்மாவைக் கூடித்தப்தாயபிண்டம் போல யொன்ருயிருக்கும் இது துவம் பதத்துக்கு வாச்சியார்த்த முக்கியார்த்த அபிதார்த்தமாம். இனிவிராட் புருஷனை வேறு செய்துமீறிநின்ற நிருபாதிகப் பிரமம் தற்பதத்துக்கு லக்ஷியார்த்தமென்று ஞ் சோதிதத்பதார்த்த மென்றுமாம் இனி விஸ்வாதிகளை வேறுசெய்த நி ருபாதிகப் பிரத்தியேகாத்மாவைத் துவம்பதலட்சியார்த்தஞ்சோதித்துவம்ப தார்த்தமாம் பின்னும் மூன்றுலக்ஷணவாக்கியமுண்டு அஃதுவிட்ட லக்ஷ ணை விடாதலக்ஷணை விட்டு விடாதலக்ஷணை யென மூன்ரும் கங்காச த்தம் பிரவாகரூபமானமுக்கியார்த்தமல்லாமல் கங்கையிற் கோஷமில்லை க ங்கைக்கரைச்சேரியிலே கோஷமென்றுகொள்ளல் இனிக்குந்தசத்தம் ஈட் டிக்குத்துமென்ருல் ஈட்டிப்பிடித்தவனைக்காட்டும் இனிச்சோயமென்கிறச த்தம் பூதகாலதேசவயோவிசிஷ்டஞன தேவதத்தனைக்காட்டும் அயசத்தம் வர்த்தமானகாலதேசவயோவிசிஷ்டஞன தேவதத்தனைச் சொல்லுந் தே சகாலவயோவிசிஷ்டங்களைவிட்டு தேவதத்தனை யவனே யிவன் இவனேய வனென்று சொல்லும் இனிஜகலக்ஷணை அஜகலக்ஷணை ஜகதஜக லக்ஷணை யென்றும் அர்த்தலக்ஷணை யென்றும் பாகத்தியாகலக்ஷணை யென்றும் பரி யாயநாமம் தத்துவமசியிலுதாரணமாயிவற்றிலொன்றைச்சொல்ல யோக்கி மாமோவென்னில் தற்பதம்வாச்சியார்த்தமாய் சர்வஞ்ஞத்துவாதி விசிஷ் டகுண பரோக்ஷஞனசிவனைச்சொல்லும் துவம்பதம்வாச்சியார்த்த மாய் கி ஞ்சஞ்ஞத்துவாதிகுணவிசிஷ்டஞன அபரோக்ஷ சீவனைச்சொல்லும் இர் தஉபயவிருத்த உபாதி பதார்த்தத்துக்கு ஏகத்துவஞ் சொல்லாததினுலே பின்னுமிந்த உபயபதார்த்தமான பரோக்ஷத்துவாதி விருத்த தன்மாம்ச த்தைவிட்டுவிருத்தமில்லாதசைதன்னியமாத்திரமாய் லக்ஷியார்த்தமான பிர மகூடஸ்தனை அங்கீகரித்து அஃதேயிது இஃதேஅது இந்தவிதத்தில்தாதாத் மிய முண்டாக்கும் பின்னும் அசிபதம் உபயலக்ஷியார்த்தத்திற் பரோக்ஷம்

அபரோக்ஷம் வித்தையாகற்பிதமெனச்சொல்லும் அசிபதமாய்ந்த வாத்மா வைக்கண்டயிக்கதஸ்போதமாத் திரமேசித்தமென்று வாக்கியார்த்த லக்ஷணம் இப்படி உபநிஷத்துகளிலேயறிக. இஃது தமிழில்செகலட்சணையாவதுவிட்ட லட்சணையாம் இவ்விரண்டின் உபாதிகளைவிட்டது (அசகலக்ஷணை யாவது) விடாதலக்ஷணையாம் இது உபாதிகளைவிட்டாற்சீவனும் பரனும்விடாமலொன்றென்பது (செகதசெகலக்ஷணையாவது) விட்டுவிடாதலக்ஷணையாம் இது விட்ட உபாதியும் விடாத சீவனும் பரனுமொன்றென்று இப்படிச்சொன்ன அர்த்தலட்சணையை வேறுபண்ணினதும்ஒன்றாக்கினதும்பாகத்தியாகம் இப்படித்தமிழிலென்றறிக.

இனி (சீவநாமரூபவிவகாரம்) பூர்வோக்தசித்துபேதமானசீவ ஈச்சுராதிகளுக்கு - நாம, ரூப, விவகாரகற்பனையாவது சீவனே - விசுவ, தைசத- பிராக்கியனென மூன்றும், அவற்றுள்- தூலசரீர வியஷ்டியபிமானி, வியாவகாரிகசீவன், புத்திபிரதி பலிதசைதந்நியன், சிதாபாசன், விக்ஷேபரூபன் க்ஷேத்திரஞ்ஞன், சரீரி, பிரமார்த்துரு, கர்த்துரு-போக்துரு-சமுசாரி - விஷயி, பாவாத்துமன், விஞ்ஞானமயன், துவம்பதமுக்கியார்த்தன், முதலானவைவிசுவனுக்குப் பரியாயநாமமாம். சூக்ஷமசரீரவியஷ்டியபிமானி, பிரதிபாசிகசீவன், சொர்ப்பனகற்பிதன், முதலானவைதைஜதனுக்குப் பரியாயநாமமாம். காரணசரீரவியஷ்டியபிமானி, அவித்தியோபாதிகன், முதலானவை பிராக்கியனுக்குப் பரியாயநாமமாமென்றறிக.

இனி ( ஆத்மத்திரயம் ) சீவாத்மா, அந்தராத்மா, பரமாத்மாவென ஆத்மத்திரயமுண்டு, அவற்றுள்- தப்தாய பிண்டம்போலத் தேகங்கட்குள்ளே சம்பந்தித்துச் சகலசமுசார விவகாரமுள்ளவனே சீவாத்துமா. கமலபத்திரோதகம்போலச் சமுசாரம் பொருந்தியும் பொருந்தாதவனே அந்தராத்துமா. லோகவிவகாரத்துக்குச் சாக்ஷிசூரிய னெப்படியோ வப்படிச்சீவாந்திரவிவகாரசாக்ஷிகனே பரமாத்துமா. இனி (சமுசாரகற்பனை) சலத்தின் சஞ்சலம், சூரியன்சஞ்சல மென்பதுபோலவும், மேகமோடச் சந்திரனோடு மென்பது போலவும், நதியில் ஓடமோடத் தீரத்தின் விருக்ஷமோடுமென்பது போலவும் ,மனையிந்துவாரத்திற் பிரகாசிக்கின்ற சூரியகிரணம், கையசைக்கும்போது அசையுமென்பதுபோலவும், தேகத்தின் சனனமரணம், ஆத்துமனுக்கென்பதுபோலவும், நிர்விகாராத்துமனுக்குத்,தேகாதியுபாதியாலான அவஸ்தாகற்பனைசமுசார விவகாரமாம். இனி ( ஈச்சுரனுமரூபவிவகாரம் ) ஈச்சுரனே- விராட்புருஷன், இரணியகர்ப்பன். அந்தரியாமி யெனமூவராம். அவருள், தூலசரீரசமஷ்டியபிமானி ஈச்சுரன் தத்பதமுக்கியார்த்தன், முதலானவை விராட்புருஷனுக்குப் பரியாயநாமமாம். லிங்கசரீர சமஷ்டியபிமானி, மகாப்பிராணன்- சூத்திராத்மன்- முதலானவை யிரணியகற்பனுக்குப்பரியாய நாமமாம். காரணசரீர சமஷ்டியபிமானி, அக்கியானோ பயிதசைதந்நியன்- காரணோபாதிகன், மாயோபாதிகன்- மாயாபாசகன், மாயாவயவி, ஜகத்தியோனி, ஆனந்தமயன், அக்ஷரன் , அவ்வியாகிருதன், சபளப்பிரமன், ச

குணப்பிரமன்,பரன்,பரமன், பரதேவதை. முதலானவை அந்தரியாமிக்குப்ப ரியாயநாமமாம். இனி (அந்தஈச்சுரன்தேகதிருஷ்டாந்தம்) சித்திரபடமான து நாநாவர்ணங்கூடுமுன்னே வெள்ளைப்புடைவையென்றும், மேற்கஞ்சிகூ ழ்அனுலோபத்தால் கடிதமென்றும், மேல்நீலமஷிகாரத்தா லாஞ்சிதமென் றும், மேவிதயோக்கியவர்ண பூரணத்தால் ரஞ்சிதமென்றும், சொல்லப்படு ம். அப்படிப்பிரமமுதல் மாயாதத்காரியாதீதமானதே சித்தென்றும், சர்வ காரணமான மாயோபாதியினால், அந்தரியாமியென்றும், அவ்வியக்தமான சூ க்ஷமசரீர சமஷ்டியுபாதியினால்,சூத்ராத்துமனென்றும், வியக்தமானபஞ்சீகி ருத பூதகாரியரூப, தூலசரீர சமஷ்டியு பாதியினால், விராட்புருஷனென்று ஞ் சொல்லப்படும். பிரமத்துக்குச சித்திரப்படம் திருஷ்டாந்தமானால், அதி ல்,சித்திரம் யாதென்னில்,விரிஞ்சனாதி திரணாந்தமான சேதனபிராணிகளும், கிரியாதி அசேதன விஷயங்களுமான சடாசடரூப சகமென்றறிக. பாரமார் த்திகமான சித்ரூபமொன்றில், மித்தியாத்மகபகுசேதனா சேதனரூபசகமிருக் கை யெப்படியென்னில் சித்திரபடத்திலெழுதப்பட்டு நாநாவர்ண பேதமா ன சீதாதிகளை நிவிர்த்திசெய்வதற்கு அசமர்தமான வஸ்திராபாசங்களும் சீ தாதிகளைப் பரிகாரஞ்செய்கிற சத்தியமான ஆதாரபடமும், ஏகாகாரமாக வி ருந்த போதைக்கும், சித்திரபடத்திலிருந்த கிரி நதியாதிகள் அந்தசித்திராதா ரபடத்துடன்,சமானமாகாதபடியே சித்ரூபப்பிரமத்தில்,வெவ்வேறாகத்தோ ன்றப்பட்ட சிதாபாசசைதந்யரான வியாவசாரிகசீவர்கள்,சித்துடனேசமா னமாய்த்தோற்றினும், மிருத்திகைமுதலான சடரூபங்கள், சமானமாகாததி னாலே சேதனா சேதனமான சகத்து, சித்ரூபப்பிரமத்தில், கற்பிதமென்றே நிச்சயிக்கப்படுமென்றறிக. இனி (ஈச்சுரன்முக்கியகுணம்) சர்வக்ஞத்துவ ம், சர்வேச்சுரத்துவம், சர்வநியந்தரத்துவம், சர்வாந்தரியாமித்துவம், சர்வக ர்த்தத்துவம், சர்வசக்தித்துவாதிகளே ஈச்சுரனுடைய முக்கியகுணமாமெ ன்றறிக.

(ஈச்சுரன்பிரபுத்வ சாமர்த்தியகுணத்திரயம்.) கர்த்துருத்துவம்,அகர்த்துரு த்துவம், அந்நியதாகர்த்துருத்துவமென ஈச்சுரன் பிரபுத்துவ சாமர்த்தியகு ணத்திரயமுண்டென்றறிக. இனி (ஈச்சுரன்பஞ்சகிர்த்தியம்.) சிருஷ்டி,திதி சங்காரம், திரோபவம்,அனுக்கிரகமென ஈச்சுரன்பஞ்சகிர்த்தியம்உண்டு ஆனா ல், நிர்விகாரத்துவமாகிய பிரமசொரூபனான ஈச்சுரனிடத்தில், சிருஷ்டியா திவியாபாரவெகுகிர்த்தியங்கள்எந்தப்பிரகாரத்தாலாமென்றால், எப்படிச்சூரி யன் இச்சாயத்தனமில்லாமல், தன் வருஷகிரணத்தால், விருஷ்டிரூபமான சலத்தைவிட்டுப் பின்னந்தசலத்திற்றானேபிரதிபிம்பித்து மேகாதிகளால்அத னைமறைத்து,இமகிரணத்தால்அதனைத்தடுத்துஉஷ்ணகிரணத்தால் அந்தசல த்தைத்திரும்பவாங்கிக்கொண்டு அந்தப் பிரதிபிம்பத்தைத் தன்னுடனே கூ ட்டிக்கொள்ளுவன்,அப்படியே யீச்சுரனுந்தன்மாயாசத்தியுடனேகூடிச்சித் துப்பிரதானத்தால், நிமித்தியகாரணனாயும் சடப்பிரதானத்தால், உபாதான காரணனாயும், புத்தியாதிகாரியங்களைச் சிருஷ்டித்துச் சீவரூபத்தாற்றானே

பிரவேசித்துக்கர் மத்தால், போக்துருவென்றும், நியமகசத்தியால் போக்கிய போக்துருக்களென்றும் நியமித்து ருத்திரரூபத்தால் அந்தக்காரியரூபங்களை சங்கரித்துப்பின் சுருதிகுருரூபத்தால் அந்தச் சீவனைத் தன்னுடனே யைக்கியஞ்செய்துகொள்ளுவனென்றறிக.

இனி ( ரூபத்துவயம் ) வியஷ்டி, சமஷ்டியென சீவ ஈச்சுரருக்கு விபகார வியாபகத்துவயமுண்டு, அவற்றுள், அநேக விருக்ஷமுள்ளது ஒருவனமென்றாற் போல, அநேக சீவரெல்லாரையும், தன்னாத்தும னென்னும் அபிமானமே ஈச்சுரனுடைய சமஷ்டிரூபமாம். அந்தவனத்தில் இதுவொருவிருக்ஷம், இதுவொரு விருக்ஷமென்று வெவ்வேறே குறியிடுவதுபோலப் பின்னபின்ன தேகத்துவாபிமானமே சீவனுடைய வியஷ்டிரூபமாமென்றறிக, இனி ( கூடஸ்தன்பரியாயநாமம்) விஸ்வாதி சீவத்திரயாதிஷ்டான சைதந்நியன், துரியன், சுயஞ்சத்தார்த்தன், சாக்ஷிகன், பாரமார்த்திகசீவன், பிரத்தியேகாத்மன், அனுசந்தாத்துரு, அவிச்சின்னசீவன், துவம்பதலக்ஷியார்த்தன் முதலானவை கூடஸ்தன்பரியாயநாமமாமென்றறிக. இனி (பிரமத்தின்பரியாயநாமம்) அந்தரியாமியாதி, ஈச்சுர திரயாதிஷ்டாத்துரு, பரமாத்மன், பரதத்துவம், பரப்பிரமம், சர்வாதிஷ்டாத்ரு, விசுத்தசித்து, தற்பத லக்ஷியார்த்தன் முதலானவை பிரமத்தின் பரியாய நாமமாம் இஃது மிருத்திகையொன்றே நாமரூபத்தால் கடாதிவெகுபேத மானாற்போலவும், சுவர்ணமொன்றே வங்கிசாரம்பத்தால் கடக, மகுடாதியாபரண மானாற்போலவும்,சலமொன்றேவாயுவசத்தால்,பேன,புற்புத,தரங்காதிசமுதாய மானாற்போலவும்,தீபமொன்றே-கடத்தின்துவாரபேதத்தால், வெகுரூபமானாற்போலவும், மாருதமொன்றே வேணுரந்திரத்தால் மந்தர, மத்திம,தாரமானாற்போலவும், சுரமொன்றே-பாடுவான்குறிப்பால்நாநாஇராகமானாற்போல்வும் கதலீதள தீபமொன்றே-கண்டத்தால், கரிதுரகாதி நாநாபேத மானாற்போலவும், இலக்கமொன்றே-பிந்துபேதத்தால், தச, சத, சகஸ்திராதியானாற்போலவும், சித்தொன்றே-பூர்வோக்தசீவேச்சுராதிபேதவிகாரமாயிற்றென்றுசொல்லப்படும்இவையெல்லாந் திருக்குவிவேகமென்றறிக.இனி(திர்சியவிவேகம்)சந்திரனிடத்தில் அநாதிகளங்கமானது எப்படிச் சந்திரனையாசிரயித்து அவனை மறையாமல் அவனால் விளங்குகிறதெப்படியோ அப்படியேநானென்னை அறியேனென்னும் லோகப்பிரசித்தவிவகாரத்தால், ஆத்மனையடுத்து அவனைமறையாமல் அவனாலறிவித்துக்கொள்வதாகியும், அக்கினியின்சுடுந்தொழில், மணிமந்திராதி பிரயோகத்தால் பந்திக்கப்பட்டுத்தான் அக்கினிரூபமுமல்லாமல் அக்கினியைவிட்டு தோற்றுவதுஞ்செய்யாமல், ஸ்போடகாதிகாரியோதய மெப்படியோ அப்படியே பிரமசொரூபமு மல்லாமல், பிரமவிலக்ஷண மாயுந் தோன்றாமல் ஆகாசாதிகாரியோதய முண்டாக்குகிறவளாகியும், அகடிதகடனசமர்த்தி யாகியும், சர்வதத்துவங்களுக்குங் காரணமானதே திர்சியரூப மாயாசத்தியென்றறிக. இனி (மாயாலக்ஷணபஞ்சகம்) அசத்து, சடம்,துக்கம், அநித்தியம், கண்டிதமென மாயாலக்ஷணபஞ்சகமுண்டு, அவற்றுள், சச

கிருங்கமுதலானவை அசத்துரூபமாம், பாஷாணாதிகளே சடரூபமாம், ரஜ த மோமயமான புத்தியினுடைய குரோதமூடவிருத்தியாதிகமே துக்கரூபமாம் தோன்றிக்கெடுகிற தேகாதிகமே அநித்தியரூபமாம் - காலபரிச்சேதாதிகமே கண்டிதரூபமாமென்றறிக.

இனி (மாயாநிர்வாச்சியநவப்பிரகாரம்) பின்ன,அபின்ன,பின்னுபின்ன சத்து, அசத்து, சதசத்து, சாவயவ, நிரவயவ, சாவயவநிரவயவ, இவை யல்லவென்பதே மாயா நிர்வாச்சிய நவப்பிரகாரமாம் அந்தமாயையே - சுருதிசம்பந்தஞானம், யுத்திசம்பந்தஞானம், லோகசம்பந்தஞானமென்னும் ஞானத்திரயங்களுடனேகூடி கிரமத்தில், ககனகுசுமம்போலத்துச்சமென்றும், சுத்திகாரசிதம்போல, அநிர்வாச்சியமென்றும்ஆத்மனைப்போலநித்தியமென்றுஞ்சொல்லப்படுமென்றறிக,இனி(மாயாநாமபஞ்சகம்) தமசு, மாயை,மோகம்,அவித்தை, அனுர்தமெனமாயாநாமபஞ்சகமுண்டு. அவற்றுள்சிவசைதந்நியத்தைமறைக்கையால்தமசென்றும்,சகத்ரூபமான தன்னிதரதோற்றத்துக்குக்காரணமாகையால்மாயையென்றும், அப்படித்தோன்றினசகத்தில்சுத்திகாரசிதாதி விபரீதமுண்டாக்கையால் மோகமென்றும், வித்தையினிடமாய்க்கெடுகையால் அவித்தையென்றும், சத்ரூபத்துக்கு அந்நியமாகையால் அனுர்தமென்றும் பெயராமென்றறிக. இனி (மாயாதர்மத்துவயம்) சங்கோச, விகாசமென மாயாதர்மத்துவயமுண்டு அவை யெப்படியெனின், சித்திரபடமானது, தன்பிரசாரணையால், நாநாவித சித்திரங்காண்பித்துச் சங்கோசத்தால் அந்த நாநாசித்திரமுமறையும். அப்படியேமாயை தன்விகாசதர்மத்தால் அகிலப்பிரபஞ்சமுந் தோற்றுவித்துச் சங்கோசதர்மத்தாலடங்கச் செய்யுமென்றறிக. இனி(மாயாகுணத்துவயம்) அசுவதந்திரம், சுவதந்திரமெனமாயாகுணத்துவயமுண்டு. அவற்றுள், மாயைமித்தையாகையால் சத்ரூபசைதந்நியம்விட்டுத் தானுக்த்தோன்றாததே அஸ்வதந்திரமாம். சாக்ஷிகனுமாய் அசங்கனுமான ஆத்மாவைச் சீவாதிப்பிரபஞ்சமயமாகப் பண்ணுவிப்பதே சுவதந்திரமாம். மாயைமித்தையென்பது ககனகுசுமம்போலச் சர்வதாசூநியமல்ல-சொப்பனதேகாதிகம்போலத்தோற்றி விசாரிக்க இல்லாதமித்தையேமாயையென்றறிக.இனி(மாயாவிர்த்தித்திரயம்)விசுத்தசத்துவரூபமாயை,மலினசத்துவரூபமவித்தை, தமப்பிரதானரூபப்பிரகிருதியென்மாயாவிர்த்தித்திரயமுண்டு. அவற்றுள். மாயைசுழுத்திலயங்களிலே பிரமத்துடனே அத்தியாசவைக்கியமாயிருந்து, பின் சாக்கிரசிருஷ்டியில் கிருசித்துப்பேதாவஸ்தையாமளவில் அந்தப்பிரமசைதந்நியந்தன்னிடத்திற் பிரதிபலித்துத்தானே சர்வஞ்ஞத்து வாதி. குண விசிஷ்ட சைதந்நியனை ஈச்சுரனென்றும், பதிபதார்த்தமென்றும், பிரேரக விதுருவென்றுங், கொள்வதினால், அந்த ஈச்சுரனுக்கு உபாதியாகி அமோககாரணியென்றுஞ் சொல்லப்படும். அவித்தை தன்னிடத்திற் பிரதிபிம்பித்து, போக்துருக்களான பசுபதார்த்த சீவருக்கு உபாதியாகி மோககாரணியென்றுஞ் சொல்லப்படும், பிரகிருதிபோக்கியாத்மகத்துவத்தாற் பாசபதார்த்தமென்றும் குணத்திரயசாமான்னி யா

வஸ்தையால் அந்தஅவித்தையிற்பிரதிபிம்பித்தசிவருடையபோகார்த்தமாய்ச் சகலகாரியமு மாகவேண்டி ஈச்சுரன் சந்நிதானலக்ஷண வீக்ஷணமாத்திரத்தில், விரிந்துமுதற்காலதத்துவமுண்டாய்,மேற்காலவசத்தாற்பரிணமித்து, மகதத்துவமாம், அந்த மகதத்துவமானது, விதைத்துத் தண்ணீர்வார்க்க அங்குரமுமாகாமல், பீசநியாயமுங்காட்டாமல் உற்பின்னுவஸ்தையையடைந்தபீசம்போலக் காரணப்பிரகிருதியுமல்லாமல், காரியகங்காரமுமல்லாமல், மித்தியாக்ஞான நிர்விகற்பசொருபத்தால் மத்தியாவஸ்தையாம், பின்னும் அந்தமகதத்துவத்திற் குணபேதமாய் மித்தியாக்ஞான சவிகற்பசொருபமான பிரதமாத்தியாச மெனப்படுகிற மூலாங்கார முற்பத்தியா மென்றறிக. இனி (குணத்திரயசிருஷ்டி) சத்துவ, ரஜ, தமமெனக்குணத்திரயமுண்டு. பிரகாசபிரவிர்த்தி மோகமெனக்கிரமத்தில் சத்துவாதிகுணரூபமுண்டு. தைஜசம்,வைகாரிகம், பூதாதிகமெனச் சத்துவாதிகுணங்களுக்குப் பரியாயநாமமாம். அவற்றுள் சத்துவகுணத்தில்-மனமாதி அந்தக்கரணசதுஷ்டயமும், சுரோத்திராதி ஞானேந்திரியபஞ்சகமுந்தோன்றும்,ரஜோகுணத்தில்-வாக்காதிகர்மேந்திரியபஞ்சகமும், பிராணாதிவாயுபஞ்சகமும் உதிக்கும்,தமோகுணத்தில் ஆகாசாதிபூதபஞ்சக முற்பத்தியாம்,பின் பூதபஞ்சீகரண சம்மேளனத்தால் பிரமாண்டா புவனசரீரகடாதிவிஷயங்க ளுண்டாம், அந்தமனமாதி அந்தக்கரணங்கிரமத்தில் விஷயங்களை, நினைப்பது, நிச்சயிப்பது, அபிமானிப்பது, அவதரிப்பது, வியாபாரமாம், இதற்குச்சந்திரன் சதுர்முகன், க்ஷேத்திரக்ஞன், திரிபுராந்தகன், அதிதேவதைகளாம், இதயமேகோளகஸ்தானம் அந்தச்சுரோத்திராதி ஞானேந்திரியங்களுக்குக்கிரமத்தில், சத்தாதிவிஷயங்களைக் கேட்டல், பரிசித்தல், பார்த்தல், ருசித்தல், மணங்கொள்ளுதல், வியாபாரமாம். இதற்குத்திக்கு, மாருதம், இந்திரன் வருணன், அஸ்வினி அதிதேவதைகளாம் கரணாதிகளே கோளகஸ்தானம் சுரோத்திராதி ஞானேந்திரியங்களுக்குப் பாகியசத்தாதிவிஷயங்களை யறிவதுபோலச், செவியையங்குலியான் மூடப்பிராணவாயுசடராக்கினியிலுள்ள சத்தக்கிரகணம் அன்னபானோத்காரமாக,சீதஸ்பரிசகிரகணம் நேத்திரத்தைமூட ஆப்பியந்தரதமோரூபகிரகணம். ஏப்பமாக ஆப்பியந்தராசக்கிரகணம். வாந்தியாக ஆப்பியந்தரகந்தக்கிரகணம். இப்படி ஆப்பியந்தரசத்தாதி விஷயக்கிரகணமுண்டு. அந்தவாக்காதி கர்மேந்திரியங்களுக்கு கிரமத்தில் சொல்வது, வசனிப்பது, நடப்பது, பிடிப்பது, விடுவது, ஆனந்திப்பதுவியாபாரம். இதற்கு அக்கினி, இந்திரன், ரவி, மிருத்தியு, பிரதேசன் அதிதேவதைகளாம். முகாதிகோளகஸ்தானம் அந்தக்கரண ஞானேந்திரிய கர்மேந்திரியமென்னும் பதினன்கும், ஆதியாத்மிகமாம். இவற்றின்விஷயமே ஆதிபௌதிகம். அதிதேவதையே ஆதிதெய்வீகம்அந்தச்சந்திராதிதேவதைகளே விராட்புருஷன். அவனுடையதே தூலசரீரம். அந்தக்கரணேந்திரியாதிகமே இரணியகர்ப்பன் சூக்ஷமசரீரம் அந்தச்சரீரமே தமோரூபத்தால் அந்தரியாமிக்கு ஆவரணமாமென்றறிக. இனி அந்தப்பிராணவாயு

இதயஸ்தானத்திலிருந்து,உச்வாசநிசுவாசம்பண்ணும், அபானவாயு குதஸ்தானத்திலிருந்து, மலமூத்திரத்தைக் கழிப்பிக்கும், சமானவாயுநாபிஸ்தானத்திலிருந்து, உண்ட அன்னசாரத்தைச் சர்வாங்கத்துக்கும் பகுத்துக்கொடுக்கும் உதானவாயுகண்டஸ்தானத்திலிருந்து, வாந்திபண்ணுவிக்கும், வியானவாயு சர்வாங்கத்திலுமிருந்து,தேகத்தைநிறுத்திவிக்கும். கிரமத்தில்பிராணவாயுவிற் றோன்றினநாகவாயுமெய்யைமுறுக்கிக்கொட்டாவிவிடும். கூர்மவாயுவிக்கலேப்பமிடும். கிரிகரவாயு தும்மலிருமலுண்டாக்கும். தேவதத்தவாயு சிரிக்கும்,வசனிக்கும், தனஞ்சயவாயு துர்க்கந்தங்களை யெழுப்பிப், பிராணன்போயும் ஐந்துநாளிருந்து தேகத்தை வீங்கச்செய்து தலைவெடிக்கப் பண்ணிப்போமென்றறிக.

இனி நாகாதிவாயுவைந்தும் பாகியவாயுவென்று சொல்லப்பட்டு, வாக்காதி கர்ம்மேந்திரியங்களைச் சேஷ்டிக்கிறதற்கேதுவாம், பிராணாதிவாயுவைந்தும், ஆப்பியந்தரவாயுவென்று சொல்லப்பட்டுச், சுரோத்திராதி ஞானேந்திரியங்களைச் சேஷ்டிக்கிறதற்கேதுவாம். வைரம்பன், முக்கியன், பிரபஞ்சன், அந்தரியாமி யென்னுமிந்நான்குஞ் சீவசம்பந்தவாயுக்களாய் மனமாதியந்தக் கரணங்களைச்சேஷ்டிப்பிக்குமென்றறிக. இனிஅந்தப்பூமியாதிபஞ்சபூதங்களுக்குக்கிரமத்தில் தாரணை, பிண்டீகரணம், பாகஞ்செய்தல், உலாவல், அவகாசிப்பித்தல் வியாபாரமாம், இவைகளுக்குப் பிரம்மா- விஷ்ணு-ருத்திரன்-மகேச்சுரன்-சதாசிவன்-அதிதேவதைகளாம். கந்தாதியேகுணங்களாம் அதெப்படியெனின், ஆகாசத்துக்குப் பிரிதித்தொனி ரூபமான சத்தகுணம்-(க) வாயுக்குச்சத்தம் உஷ்ணசீத ஸ்பரிசத்தோடு - (உ) அக்கினிக்குச்சத்த உஷ்ணஸ்பரிசம்-பிரபாரூபத்தோடு- (௩) சலத்துக்குச் சத்தம், சீதஸ்பரிசம், சுவேதரூபம், மதுரரசத்தோடு-ச-பூமிக்கு, சத்தம், கடினஸ்பரிசம், நீலாதிவிசித்திரரூபம், மதுராதிநாநாரசம், துவிதகந்தத்தோடு-ரு-என்றறிக. இனி (திரிபுடி) ஞாதுரு, ஞான, ஞேயமெனத் திரிபுடியுண்டு. அவற்றுள், மூலாங்காரத்தில் பிரிதிபலிக்குஞ் சீவசைதந்நியமே ஞாதுரு. மனதிற்பிரதிபலிக்குஞ்சைதந்நியமேஞானம். பூதபௌதிகவிஷயங்களில் பிரதிபலிக்குஞ் சைதந்நியமேஞேயம். அவற்றுள் மனமே - உச - ஆம் தத்துவம், மூலாங்காரமே - உ௫ - ஆம் தத்துவம், அகங்காரகதசிதாபாச சீவனே, உ௬ - ஆம் தத்துவம். மாயோபாதிகனான ஈச்சுரனே-உஎ-ஆம் தத்துவம், அகங்காரசீவர்க்கு அதிஷ்டானமான கூடஸ்தனே-உஅ- ஆம் தத்துவம், இந்தமாயா ஈச்சுரருக்கு அதிஷ்டானமான பிரமமே- உ௯- ஆம் தத்துவமாமென்றறிக. இனிப் (பிரகிருதிகாரியோதயத்வயம்) அவைகிரமசிருஷ்டியென்றும், யுகபத்சிருஷ்டியென்றுமிரண்டு. அவற்றுள்-மூலப்பிரகிருதியில், மகத்தத்துவமும், அகமும், தன்மாத்திரபஞ்சகமுமெனச் சத்தப்பிரகிருதியுண்டு. அவற்றுள், பஞ்சபூதம் அதிற் பிரமாண்டபுவன சரீரகடாதிபிரபஞ்சோதயமே கிரமசிருஷ்டியாம். நிஸ்தரங்க சமுத்திரத்துள் ஏககாலத்தில், வாயுவசத்தால் விசித்திர,பேன.

தரங்க, புற்புதாதிகளுதயமாவதுபோலச், சச்சிதானந்த பிரமத்தில் ஏககாலத்தி
லுதித்தமாயாமயநாமரூபப்பிரசாரணையேயுகபத்சிருஷ்டியாம். இந்த இரண்
டுபிரகாரமும் சுருதிசித்தமாகையால்அங்கீகாரமாம். அவற்றுள்அதிரோகிதபிர
மசொரூபமான விகாரமில்லாத ஈச்சுரனால், சடப் பிரகிருதியில், சகலகா
ரியோதய மெப்படி என்றால், இச்சாதிகமில்லாத சூரியனால் யத்தனாதிகமி
ல்லாத சூரியகாந்தத்தில், அக்கினிஜொலிக்குமாபோல ஈச்சுரனால், பிரகிருதி
யில் மகதாதிகாரியோதயத்துக்குவிரோதமில்லை யென்றறிக. இனி (மாயாகா
ரியோதயசதுஷ்டயம்) விருத்தி, பரிணாமம், ஆரம்பம், விவர்த்தமென-மாயா
காரியோதய சதுஷ்டயமுண்டு. அவற்றுள்-படகுடீரபாவ, க்ஷீரத்ததியாகா
ர தந்துபடமியாய-ரச்சுசர்ப்பரூபமெனக்கிரமத்தில் திருஷ்டாந்த சதுஷ்டய
முண்டு. சத்ரூபப்பிரமத்தில், மித்தியாவஸ்து கற்பனைக்கு ரச்சுசர்ப்ப ஸ்தா
ணுசோர, சொப்பனேந்திரசால, கந்தர்வநகர. சுத்திகாரசித, நீலககன, மரீ
சிகாசல முதலானவை திருஷ்டாந்த சமூகமாம். நிர்விகாரசொரூபாத்துவயஞா
ன-ஆத்மனிடத்தில், மித்தியாவஸ்து கற்பிதமானால், அந்தப்பிராந்தி யாருக்கு
த்தோன்றினதென்றால், யாதாமொருயோகீச்சுரனிடத்தில் சதிரதிகாங்கைக்ஷ
யென்னுந் திரிவிதரூபங்களும் சொப்பனத்தில் ஏககாலத்திற்றோன்றினும், அ
தனால் அவனுக்குயாதொரு ஆனியுமில்லாததுபோலச்சாக்ஷிகனான ஆத்மனி
டத்திற் குணத்திரயாத்து மகப்பிரகிருதியில் பிராந்திஞாதுரு, பிராந்திஞானம்
பிராந்தி ஞேயமென்னுந் திரிபுடிமயப் பிரபஞ்சம் ஏககாலத்திற் கற்பிதமா
னாலும் அந்த ஆத்மாவுக்குயாதொரு ஆனியுமில்லை. இனி ஈச்சுரனால் சிருஷ்
டியானமாயாமய வியோமாதி பிரபஞ்சமானது, சொருபத்தில் ஏகப்பிரகா
ரமாமென்றறிக. இனி (விஷயத்திரயம்) அதனிடத்தில்சீவபுத்தி கற்பிதமான,
போக்கியத்வரூபமே-பிரீதிவிஷயம், துவேஷவிஷயம், உபேக்ஷாவிஷயமென
த்திரிவிதமுண்டு. அவற்றுள், வனிதாதிவிஷயமேபிரீதிவிஷயமாம்வியாக்கிராதி
விஷயமேதுவேஷவிஷயமாம். வீதித்திரணாதிகமேஉபேக்ஷாவிஷயமாம். அந்த
விஷயமொன்றில் ஈச்சுரநிர்ம்மிதமானஏகாகாரமும், சீவகற்பிதமான அநேகா
ரமு முண்டு. இப்பாலும் விவேகசிந்தாமணியில் வெகுவாகத் திருஷ்டாந்தஞ்
சொல்லுகையால் விரிவாமென்று இம்மட்டில் முடித்ததென்றறிக.

இப்பால்உபநிஷத்து விக்ஷேபசத்தியென்றும் ஆச்சாதானசத்தியென்
றுஞ்சொல்லும். இவற்றுள் விக்ஷேபசத்தியென்றது, அபின்னசத்தி சிற்சத்
தி ஆனந்தசத்தி சுகசத்தி என்றும்பெயராம், இனி ஆச்சாதானமாவது ஆ
த்மஞானத்தைமூடிக்கொண்டு அஞ்ஞானமாயிருக்கும் இதுசித்தினிடத்தில்
சந்திரன் களங்குபோலவுண்டான விவர்த்தனமாயை யென்றறிக. இனிவி
க்ஷேபமென்றது முன்சொன்ன ஆச்சாதானசத்தி அஞ்ஞானமாய் மூடிக்
கொண்டிருப்பதை வெளியாகத்துறந்து ஆத்மாவுக்கு விஷயஞானங்களைக்
காட்ட மூலமாயைமுதல் பஞ்சீகிருதங்கண்டியாகத்தத்துவசிருஷ்டியான தெ
ன்றறிக. ஆச்சாதானமாவது ஆத்மஞானத்தைமூடுகிற அஞ்ஞானம், விக்ஷே
பமாவது மூடின அஞ்ஞானத்தைக்கெட்டியாய்ப்பற்றிக்கொண்டு சகலதுக்க

விஷயங்களிலழுந்திச்செனனமரணதுக்கத்துக் கேதுவாக்குமென்று சொல்வாரு முளர். இந்தச் சடசத்திதானே முன்சொன்ன மூன்றுமாயையுமாய் காலதத்துவம்- கர்த்தத்துவம்- மூலாங்காரம் - முக்குணம் - மூன்றுங்காரம் உ௰௪ - கரணம் பஞ்சீகிருதத்த்துவம் பிண்டப்பிரமாண்டங்களெல்லாமு மா னதென்றறிக. இதுவே சீவேசுரர்க்கு உபாதியானதென்றறிக. இனிப் பிரம சிற்கிரணமே சித்தாகிறபிரமம் இந்தச்சித்திலுண்டானது மாயை யிந்தமா யையிலே சித்துப்பிரதிவிம்பித்துச் சீவேஸ்வர கூடஸ்தபிரமமென்று நா ன்குவிதமாம். இதில் சிற்கிரணசித்து ஓட்டற்று நிற்கையால் அஃதே பிரம மென்றும் அனுபவத்தில் மூன்றுபாழுங்கடந்ததற்கப்பாலானதென்றுஞ் சீ வேஸ்வரகூடஸ்தனுக் கப்பாலானதென்றுஞ்சொல்லும். இனி ஜெகசீவபரமு ண்டாகிறவிடமாயும் மூலமாயைக்கிடமாயுமிருப்பதால் கூடஸ்தமென்றும் இ தைத்தானே துரியனுக்குக்கூடஸ்தமென்று மீஸ்வரனேபிரமமென்றுஞ்சொ ல்லும். இனிப்பஞ்சகிருத்தியங்களுக்கு அதிஷ்டானமாகையால் ஈஸ்வரனென் றுஞ் செனனமரணப்பட்டுச் சீவிக்கையால் சீவனென்றும் இப்படிச்சிருஷ்டி பேதஸ்தானபேதங்களால் பெயர் வெவ்வேறானதென்றறிக. இப்படிச்சிற்ச டசத்திகளால் தூலசூட்சுமகாரணப்பிரபஞ்சமெல்லாமுண்டானதென்றறிக. இதைஆகமங்கள் விரிவாகச்சொல்லும்.

௨௧. மன்னுநற்சிவத்திற்சத்தி மதித்திடிலிருவகைத்தாம்
பின்னமற்றிருப்பதொன்று பின்னமாயிருப்பதொன்று
மன்னியசிவத்தபின்ன மாசில்சிற்சத்தியாகும்
பின்னமாவதுசடந்தான் பேர்சொலின்மாயையென்னே.

௨௨. அரியனுயிர்தற்கொண்ணு வருபரஞ்சிவத்தைநாளுந்
தெரியுமாறதனைச்செய்யுஞ் சிறந்தசிற்சத்திதானும்
பிரிவிலாச்சிவனுக்கென்று பின்னமாமாயாசத்தி
விரியுமாம்சகத்துக்கென்றும் வித்தாயுமேவுமன்றே.

இனி (முத்திநிலையாவது) சுத்தஞானஆத்மா பிரகிருதியோடுகூடிப் புருஷ பாவத்தையடைந்து விகுர்தியாலுண்டான புத்தியாதிகளால் பந்தப்பட்டுசெ னனமரணமெடுக்கிற அறியாமை நீங்கவேண்டிச் சற்குருவையடைந்து முன் சொன்ன உபக்கிரமத்தாலுள்ள மாயை முதலான தத்துவங்க ளெல்லாம் நேதி நேதியால் வேறுபண்ணிச் சடமானபின்பு தத்துவங்களாலே வருகி ற சுகதுக்கமெல்லாம் பிரகிருதிக்குள்ளது தனக்கில்லையென்று குருவால் அனு க்கிரகிக்கப்பட்டு அவித்தியாசம்பந்தமான குணத்திரயங்களும் விகுர்தி சம் பந்தமுமடங்கச் சமாதிசாதித்து எல்லாமிறந்தவிடத்தி லாத்மாவைக்கண்டு சி த்துத்துரிய மூன்றையுங்கடந்து சத்தாகிறபொருளாய் நீலோற்பலவாக்கிய திஷ்டாந்தத்தால்தானேபிரமசொருபமாவது மோக்ஷமென்றறிக. வேதாந் திகளாத்மாவை ஞெப்திமாத்திரமென்றும் மகத்பரிமாணமென்றுஞ் சொல்வா

ர்கள்இதுவியாசகற்பிதமென்றறிக. இந்தவேதாந்தசித்தாந்தம்நியாயசம்பந்த ங்கூட்டிச் சொல்வதென்றறிக. இனி முன்சொன்னகிரீடாப்பிரமவாதத்துக்கும் பிறகுசொன்ன லீலாப்பிரமவாதத்துக்கும்பேதமெப்படியென்னில், அவன் பிரமத்தின் முக்குணத்தில் மும்மூர்த்திகளால் செகமுண்டானதென்று சொல்லில் லீலாப்பிரமவாதம் சமுத்திரமுந் தரங்கமும்போல் பிரமந்தானே செகமானதென்று சொல்லுகையால் அதற்குமிதற்கும் பேதமுண்டென்றறிக. லீலாப் பிரமவாதிக்கும் பிரதிவிம்பவாதிக்கும் பேத மென்னெனில் அவன் சமுத்திரதரங்கம்போலப் பிரமமென்று சொல்லில் இவன் சூரியன் கடசலத்தில் பிரதிவிம்பம்போலப்பிரமமுந் தேகோபாதிகளாகியபேதத்தால்நானாவாய்த்தோன்றி செகமாமென்று சொல்கையாலவனுக்கு மிவனுக்கும்பேதமுண்டென்றறிக.இனிப்பிரதிவிம்பவாதிக்கும்மாயாவாதிக்கும்பேதமென்னெனில்அவன் கடோபாதிசூரியன்போலப் பிரமமே சீவனுமென்றுசொல்லில் இவன் பிரமமாகிற வவிகாரி சந்நிதானத்தில் மாயைமுதலிய பிண்டாண்டசத்துகளாகி யனந்தபேதமாயழியுமென்றும் அந்தமாயை மித்தையென்றும் மாயையாலேகற்பிதமானதெல்லாம் பொய்யென்றும் ரச்சு சர்ப்ப பிராந்திபோலென்றுஞ் சொல்லுகையாற் பேதமுண்டென்றறிக. இனி முன்சொன்னமாயாவாதிக்கும் சுத்தவேதாந்திக்கும் பேதமென்னெனி லவன் பிரமமொன்றுமேநித்தியம் மற்றதெல்லா மநித்தியமாயழிந்துபோமென்றுஞ் சொல்லுகையால்இவன் சத்தி சக்கரத்துக்குப்பின்னமானனுப்கியே நிஷ்களமென்றும் ஆகாசத்தில்மேகசஞ்சாரம்போல் மாயாபடலமென்றும இந்தமாயையானதில்லாமற்போஞற் பிரமமேயிருந்திருக்குமென்றும் இரச்சுசர்ப்ப பிரமைபோல் மாயாவிகற்பமெல்லாம் பிரமையென்றுஞ் சொல்லுகையால்பேதமுண்டென்றறிக. இனி யிந்தவைதீகவேதாந்திக்குஞ் சுத்தவேதாந்திக்கும்பேதமென்னென்னில் அவன் முன்சொன்னதுபோலே யிருக்க இவன் பிரமமானது - ௫ -விதமென்றும்இதிற்சித்து நாலுவிதமென்றுஞ் சந்திரன்களங்குபோலச் சித்தினிடத்தில்மாயையுண்டானதென்றும் இதெல்லாம் பொய்யென்றுஞ் சீவாத்மா பராத்மாவுண்டென்றுஞ் சொல்லுகையாற்பேதமுண்டென்றறிக. இனி வேதாந்தத்திற் பின்னுமொருவித சிருஷ்டிபேதம்.

௨௩. சிற்சிவஞ்சிற்சத்திசன்வியோமஞ்செய்காலபர
நச்சும்புருடன்பகுதியுமாய்நல்லகங்கரண
மெச்சியமுக்குணந்தன்னிலீரெட்டினின்மேவுபஞ்சி
நிச்சயம்பஞ்சீகரித்தண்டம்பூதங்கருல்கே.

என்றது- சிற்சீவனானது சித்து. இதிலீஸ்வரன் இதில்வியோமமாகிறமாயை யிதில்காலபரம் இதைச் சித்தாந்தி காலதத்துவமேழாக விரித்துச்சொல்லுவான் இந்தக்காலபரத்திற் புருடன் இதில்மூலப்பகுதி யிதிலகங்காரம் இதில் மூன்றுகுணம் இதில்தைசத வைகாரி பூதாதி ஆ ஆங்காரம்- ௩-

இதில் முன்புசொன்ன வதங்கரணத்திலே முக்குணந்திரண்டதுசித்தம் சித்தத்திற் புத்தி புத்தியில்மூன்றுங்காரமுண்டா யிதிற் றைசதத்தில் மனமும் ஞானேந்திரியமும் வைகரியிற் கன்மேந் திரியமும் பூதாதியிற்சத்தாதியுமிந்தப்பதினைறும் முக்குணஞ்சார்வாகவுண்டாம் இந்தச்சத்தாதியிற் பஞ்சபூதமுண்டாம் இது பஞ்சீகரித்து பிண்டப்பிரமாண்டங்களாமென்றறிக. முன்சொன்ன சிருஷ்டிக்கு மிதுக்கும் பேதமென்னெனி லிந்தச் சிருஷ்டியில் ஈஸ்வரனிடத்துமாயையுண்டென்றதுங்காலபரத்திற்புருடனுணதும் மூன்றுங்காரத்திலுந் தத்துவசிருஷ்டியிலும் பேதமாகையாற் பேதமென்றதென்றறிக. இதுவும்வேதாகமவங்கீகாரமாம். இதில் சொருபந் தடம் பந்த முத்தியாகியஇந்நான்கும் முன்சொன்னது போலென்றறிக. முன்சொன்னவேதாந்திகளெல்லாரும் ஆறுபிரமாணங்கொள்ளுவர் இந்தமாயாவாதமுதலானவேதாந்தங்களைப்பிரதிபாதிக்கிற உபநிஷத்துக்களில் சிலவாக்கியவிபரம்

உச. உபாதியொழிந்தாலுயிர்பரமதொன்றே
சுபாசுபர்களாய்நின்றதோற்றம் - உபாதி
கடாகாயமாகாயம் வேறாகக்காண்கை
யடாய்காணறிவொன்றேயாம்.

இப்படி யிந்தவேதாந்தம் வியாசர்முதல் சங்கராசாரியரீறான வனேகம்பேரால் சகலசாஸ்திரசம்மதியாய்உபநிஷதப்பிரமாணங்களாகச் சொல்லப்பட்டதென்றறிக. இந்தவேதாந்திகள் ஆத்மாவை ஞப்திமாத்திர மென்பார்கள் இப்போதுசொன்ன வேதாந்தமார்க்கமேழுவிதமும் உத்தரமீமாங்கிசையின் பேதமென்றறிக.

---

அ-வது—அத்தியாயம்.

## அச்சுமாறுதவாதிமதம்.

அச்சுமாறுதலுவாயிருத்தல் மெச்சியவாதமெய்யிதுவாமே.

(அம்சாத) சீவராசிகளும் பெண்ணச்சுப்பெண்ணுகவும் ஆணச்சு ஆணுகவும்அந்தந்தசீவன் அந்தந்தவச்சாய் ஒருசீவனச்சுஒருசீவனுகாமல் அந்தந்தசீவனச்சாகத்தானே யாண்பெண்ணுய்ப் பிறக்குமென்றறிக. இப்படிச்சிருட்டிகாலத்திலும் இலயகாலத்திலும்அந்தந்தவச்சுப்பிரகாரமேயிருக்கும்இப்படியச்சுகள்கலையாமலிருக்கிறதே சொரூபம். திரும்பிச்சிருட்டிகாலத்திலும் பூர்வம்போலச்சுகள்கலையாமற்பிறக்கிறதே தடத்தலக்ஷணம். அந்தந்தச்சீவனச்சுப்பின்னொருசீவனச்சாகாமல் அந்தந்தவச்சாகச் சென்னமரணப் படுகின்றதே பந்தமென்றறிக. இனிச்சிவனைப்பூசைபண்ணியந்தந்தவச்சுகளாய் மீண்டுமீண்டும் பிறவாமல் சிவன்சந்நிதானத்திலிருப்பதேமுத்தியென்றறிக. இதற்கு (மறுப்பு) அகலிகை கல்லாயும் அரிபல அவதாரங்களாயும் பிறந்தும் சிலந்தி

அரவு ஆனை எலி யிதுகள் மனுஷராயுஞ் சாபங்களினுல் ஒருஅச்சு வே ெருரு அச்சாயுஞ் சித்தபுருஷர்கள் கிருஷ்ணன் முதலானபேர் அனேகம் வேறுவேறு அச்சுகளாயும் ஆண்பெண்ணுயும் பெண்ணுணுயும்ஒருசிவன்தா னே - அமசாத - அச்சுமெடுக்குமென்றும் வேதாகமபுராண முதலானது சொல்லும் இப்படி வேதாகமபுராணங்கள் சொன்னதல்லாமல் பிரத்தியக்ஷ மாய் ஒரு அச்சு வேறொரு அச்சு ஆனதில்லையென்ருல் கறுத்த வண் டுகள் குண்டலபுழுக்களை யெடுத்துப்போய் மரங்களைத்துளைத்துவைத்தும் பஞ்சவர்ணங்களாயிருக்கிறகுளவிகளும் அதற்கதற்கேற்ற நீண்டபுழுக்களை யெடுத்துப்போய் கோயில்கள் வீட்டுச்சுவர்கள் இறப்புகள் இது முதலான விடங்களில் வச்சிரக்கூடு போலுந்தேன்கூடுபோலும் அறை யறையாகச் செய்துஅதிலேவைத்துப் பின்னையொருஉருவாயெடுத்துப்போய்வைத்த கு ளவிகள் கிறமாய்ப்பறந்துபோயும் பின்னையொருவிதங் குளவிகள் சுவர்களை அடியிற்றுளைத்துப் புல்லுக்கிளிகளைக் கொண்டுவந்துபத்திருபதிடத்தில் வை த்து மூடிப்போட்டும் இப்படி அனேகவிதமான வண்டுகள் குளவிகள் புழுக் களைக்கொண்டுவந்துவைத்து வாசலைமூடிப்போட்டுச் சிலநாள்சென்றபிறகு பூர்வபுழுக்க ளச்சுப்போய் எதுகொண்டுவந்துவைத்ததோ அந்தவண்டுக் குளவிக ளச்சாய்க் கூட்டைத்துளைத்துப் பறந்துபோகும் இதல்லாமல் ம யிற்குட்டியென்கிற புழுக்கள் தன்னைத்தானே திரணங்களாலே தாயத்து போலக் கூடுகட்டிக்கொண்டு அந்தக்கூட்டைச் செடிகளிலே பற்றவைத் துத்தொங்குங்கால் சிலநாள்சென்றபிறகுமனுஷனைக் கொட்டுகிறகுளவியா ய்ப்பறந்துபோகும் இதல்லாமல் புல்லுகள் செடிகள் காடுகளில் நீண்ட பச் சைப்புழுக்கள் தொத்திக்கொண்டு பனிகள்விழுந்து நுனிபோலும் உமிழ் ந்ததுபோலும் கூடுகட்டிக்கொண்டு அந்தப்புழுத்தானே சுருங்கிப் பருப்பு போல வட்டமாய்ச் சிவப்பாய் நுரையாம் பூச்சியென்று பறந்துபோகும் இதல்லாமல் தண்டலைச்செடிகளிலும் சிலசெடிமரத்தினிலைகளிலும் பலவர் ணமான பட்டாம்பூச்சிகள்வந்து அரும்புபதித்தாற்போலே முட்டைகளைப்பீ ச்சி யந்தமுட்டைகள் சிலபொழுதில் மயிரிமைபோலே புழுக்களாயிலைகளை யெரித்துத்தின்று பெரிய எரிப்புழுக்களாயுங் கம்பிளிப்பூச்சியாயும் இதுகள் முதிராதவுடனே யூர்ந்துபோய்ச் சுவர்கள் இறப்புகள் மரத்தடிகளிலே நெ ருங்கித் திரளாய்க்கூடிச் சிலந்திநூல்போல் மேலெல்லாங்கூடு கட்டிக்கொ ண்டு இதின்மயிர்களுதிர்ந்துபோய்ச் சிலநாட்சென்றபிறகு எந்தவர்ணப் பூ ச்சி முட்டை யிட்டுதோ அந்த வர்ணப்பூச்சியாகி யிறகு முளைத்துப்பற ந்துபோகும் இதல்லாமல் பசிரிக்காய்ச் சிலந்திப்பூச்சியென்கிறது தன்னை நூல்களாலே பெரிய பட்டுநூற்கூடாய்க் கட்டிச் சிலநாட்சென்றபிறகுகு ரியபுடம்போலுஞ் சுளுகுப்பட்டுப் போலும் பட்டாம்பூச்சிகளாய்ப் பறந் துபோகும் பின்னும் அழிஞ்சில்க் கொட்டை உதிர்ந்தவிடத்தில் மழைபெ ய்துபிறகுஅந்தக் கொட்டைகளுப்பிக்கொண்டு அதிலே புழுக்களுண்டாய்

ளர்ந்துபோ யந்தமரங்களுடனேயொட்டிக்கொண்டு சிலநாளையிலே வெள்ளைப்பட்டாம்பூச்சியாய்ப் பறந்துபோகும் பின்னும்மரங்கள் செடிகளிலேது டப்பம்பருமத்திலே நீண்டபசிசைபுழு நீண்டபட்டுக்கூடாகக்கட்டிக்கொண்டுதொங்கி அதுவுஞ்சிலநாளைக்குப்பிறகு மெல்லியதும்பியாகப்பறந்துபோகும் பின்னுந் தாயத்துபோலும்பருத்திக்காய்போலும்நூறுமாற்றுத் தங்கநிறமாகவும் பின்னும் அனேகவிதங்களாகக் கூடுகட்டிக்கொண்டு பின்னையொரு வண்டாய்ப்பறந்துபோகும் தண்ணீரில்நெற்பயிர்விளையுமிடங்களில் நாலுகாலாய்ச சிலபூச்சிகளிருக்கும் இதுகள்கெற்பித்து அதின்முதுகைத் துளைத்துநீண்டதும்பிகளாய்ப்பறந்துபோகும் நண்டுகள் தங்கள் தேகமிருக்கும்போதே யதில்வேறொருதேகமுண்டாய் முன்தேகத்தைப் பாம்புதோலுரித்தாற்போல்தள்ளிப் பால்நண்டாய் முதிர்ந்து பெருநண்டாகும் பாம்பு -கூ- ஞூ - சென்றபிறகு பட்சியாய்ப்பறந்துபோகும் ஒரு அச்சிலே ஒரு அச்சுப்புழுக்கிறது நால்வகையோனியல்லாமல் ஓமங்களில்மந்திரங்களில் நினைவுகளில் ஒருயோனியி லொருயோனி பிறப்பதும் ஒருசீவன் ஒருசீவனைத்தன் னச்சுப்போலாக்குகிறதும் ஒருசீவன் தான்தானேவேறொருஅச்சாக்குகிறதும் ஒரு அச்சுச்சீவன் தானே பலசீவனுகிறதும் இப்படியிந்தத்தீவுமுதலான எல்லா வண்டங்களிலும் ஒரு அச்சிலே வேறொருஅச்சுப்பிறக்கையாலும் அச்சுமாறுதென்றது தப்பாம். இங்ஙனமிருக்க எல்லா வச்சுகளும் அந்தந்த வச்சுகளாகப்பிறக்குமென்பது அச்சுமாறுதவாதிமதமென்றறிக.

---

## கூ-வது—அத்தியாயம்.

## சாங்கியன்மதம்.

பகுதிபுருடன்பாலகனுதி விகுதியாற்பந்தமேவுசாங்கியமே.

சொருபலட்சணம் அழுக்கில்லாத சுத்தமா யொன்றையுமறியாததாய் அறிவே சொருபமாய் அசங்க சின்மாத்திரமாய் பிரகிர்தி விகிர்திக்குவேறாய் நித்தியமாய் விவர்த்தமாய் முத்தராய்ப் பலவாயு மிருக்கு மாத்மாவென்றறிக. இனித் (தடத்தலட்சணம்) முன்சொன்ன சுத்தாத்மாவில்பிரகிர்தியானது நித்தமாய் விவர்த்தமாய் சடமாய் எல்லாப்பதார்த்தங்களுக்குங் காரணமாய்முக்குணங்களு மொத்துநிற்கிறநிலையே தனக்குவடிவாய்மூர்த்தமாயிருக்கும் இதில் விகிர்தியானது புத்திதத்துவமுதல் பிருதிவி பூதங்கடையாகத் தத்துவம் - உ௰ங - விகிர்தி - க - ஆ - உ௰ச - ம் புருடனுகிற ஆத்மசந்நிதிமுன்னே பிரகிருதியாலே விகிர்தி சேட்டையைப்பெற்று பிரகிருதி தூலசூக்கும பரமாய் யோனிபலவினும் விரிந்தொடுங்கி யாத்மாவாகிறபுருஷனைப் பந்திக்கும் இனிச் சுத்தாத்மாவானவனுலே சிருட்டியில்லையாம். எங்ஙனமென்றால் பிரகிர்தி விகிர்திக்கு வேறானவனுகையாலென் றறிக. இவனுலேதடத்தலட்சணம்வருமோவென்னில்முன்சுத்தாத்மாவின்சந்நிதியிலே

மூலப்பிரகிருதி சேட்டையைப்பெற்று விகிர்தியுண்டாய் இதில்தத்துவங்களெல்லாமுண்டாகி பிரகிருதிமூலம் புரியஷ்டகம் விகிர்தி யென மூன்றாய் இந்தமூன்றுந் தூல சூக்கும பரமாய்நின்று சிருட்டியுண்டாக்கையால் தடத்தலட்சணஞ் சொல்லப்பட்டது.

௨௫. இலங்கியபுருடன்மற்று மெய்த்தநற்பகுதியென்னத்
துலங்கியவிரண்டுமுண்மை சொல்லியபகுதியின்பால்
மலங்கெழுமாஙுங்காரம் வகுத்தனவிகுதியெல்லாஞ்
சலங்கெழுங்கட்டுவீடுந் தனக்குத்தான்புருடன்செய்யும்.

௨௬. பகுதியில்விகுதியாகிப் பரந்தெழுமின்பதுன்பந்
தகுதிநற்சித்தாந்தன்மே லெற்றுதல்பெத்தமாகும்
விகுதிநற்பகுதியெல்லா மெனக்கில்லையென்றுபார்க்க
வகலுமற்றதுவேவீடா மருளமற்றிறைவேறின்றே.

௨௭. சித்தமானபகுதிகிழ் சிறந்தமூவைந்தொருபதோ
டொத்ததானவிகுதிதன்னில் விகுதியொன்பகுதியில்
வைத்தலாற்பகுதியவ் விகுதியிற்பதைத்தலால்
நித்தமானமுத்தியென்று நீடுசாங்கியவாதமே.

௨௮. பகுதிபூமான்மெய்ப் பகுதிவிகுதி
சகலந்தனதென்கைபந்தம்-விகுதியாம்
யாதும்பகுதியுடையதெனக்கல்லையென்னும்
வேதநஞ்சாங்கியன்றன்வீடு.

என்றது- முன்சொன்ன நாலுகவிக்குமார்த்தம்பிரகிருதியும் மாயையும் அனாதியேயுள்ள தாகையாற் பகுதியால்வந்தவிகுதியாலே ஆத்மா தன்னைப்பந்தப்படுத்திக்கொண்டு செனனமரணப்பட்டுச் சுகதுக்கங்களை யனுபவிப்பதே பந்தநிலையென்றறிக. இனி முத்திநிலையாவது சுத்தனான ஆத்மா பிரகிருதி புருஷபாவத்தையறிந்து புத்தியாதிகளையடைந்திருக்கிற அறியாமையைப் போக்கி விகிர்தியாலுண்டான சுகதுக்கங்கள் பிரகிருதிக்குள்ளது தனக்கில்லையென்று குருவால் அனுக்கிரகிக்கப்பட்டு அவித்தையாசம் பந்தமான குணத்திரயங்களடங்கச் சமாதிசாதித்துப் பார்த்து தான் அனாதியில் சுத்தனென்றும் பிரகிருதியோடுகூடி வேஷதாரியாய் விஞ்ஞானமாத்திரமாய் நின்றோமேயல்லாமல் நமக்குப்பெத்தமில்லையென்று தெளிவதே மோட்சமென்றறிக.



## ௰-வது—அத்தியாயம்.

## நிரீஸ்வரசாங்கியன்மதம்.

புருடன்சந்நிதிபொலியும்பகுதியென்

ணிருடியாகுநிரீஸ்வரசாங்கியே.

௨௬. மூலம்புரியஷ்டகம்விகிர்தி யென்றுமூன்றுயிதுதானே, தூல ஞ்சூக்குமபரமெனவே சுத்தபுருடன்சந்நிதியிற், பாலன்சே ட்டைபுரிந்துலகம் யோனிபலவாய்ப்பரந்தொடுங்குஞ், சால வென்றுநிரீஸ்வர சாங்கியன்முன்சாற்றிடுமே.

என்றது-பிரகிருதியானது மூலம் புரியஷ்டகம் விகிர்தி யென்றுமூன் றும் இதுதானே தூலஞ் சூட்சுமம் பரம் என்றுபெயராய் சுத்தபுருஷன் சந்நிதியிலே முன்பிரகிருதியானது பாலனைப்போலச் சேஷ்டைபுரிந்து யோ னிபலவாய்ப்பரந்தொடுங்கித்திரிவதுவேகுற்றமென்று நிரீஸ்வர சாங்கியன் சாற்றுவான்.

௩௰. இன்னசாங்கிய மெனைத்திறனுமொரு சங்கையன்றியிடுநி றைவனூல், சொன்னசாங்கியநிரீசவீசுர சாங்கியத்திறனொடு தோன்றுமா, லன்னதானவைகரணவன்றனி லசத்ததாயழி யுமாதலாம், சொன்னசாங்கியநியாயமாதிசமயங்கண்மாயையி டைதோன்றுமே.

இந்தச் சாங்கியத்திலே பேதமானவிதம்- யோகசாங்கியம்- ஞானசாங் கியம்- நிரீஸ்வரசாங்கியம்-இச்சாசாங்கியம்-புருடசாங்கியம் - பேதசாங்கியம் ஆ - சு - முன் - ரு - ஆ - சு - இதின் வகைகள் நித்திய நின்மலாத் மா சந்நிதானத்திலே குணத்திரயாத்மீகப் பிரகிருதி பஞ்சவிம்ஸதி தத்துவா த்மகமான செகமாய் விவகரித்துச் சம்சாரபந்தமுஞ் சத்துவாதிகுணத்திர யக்கிரமத்தில் வாதபித்தசிலேத்துமமாகிய மூன்றும் பிரகிருதி சாந்தி கு ரோத மூடகாதி குணமான உத்தம மத்திம அதம புருஷத் திரயத்தில் வர்ணாதி முதலானது விவகரிக்கும் இவர்கள் பிரத்தியட்சம் அனுமானம் ஆகமம் இந்தமூன்று பிரமாணமுங்கொள்ளுவார்கள் ஆத்மாவை யசங்கசின் மாத்திரமென்பர் இதுபேதவாதமாகியதுவிதமென்றறிக. இதுகபிலர்சூத்திர ப்படியமைக்கப்பட்டு வேதாந்தத்துக்கு விகற்பமான வாக்கியங்களாம். இனிப் (பாதஞ்சலமதம்) இயமாதியஷ்டாங்கத்தாலேமனோநிர்ச்சலஞ் சித்திக் கும் ஆத்மா யோகத்தில் மனோலயமாய் அஞ்ஞானங்கெடுகிறதே மோட்ச மென்பர் ஆத்மாவை அசங்கசின்மாத்திரமென்பார் முன்சொன்ன வேதா ந்திக்கு மிவனுக்கும் பேதமென்னெனில், அவன் சீவன் பரன் மாயையு ண்டென்றும் அயிக்கமென்றுஞ் சொல்லுவான். சாங்கியன் புருடன் பிரகி

ருதி அனுதியென்றும் பகுதியில் விகிர்தியுண்டாய் அதினுல் புருடன் பந்தப்பட்டு பாலன்போல விளையாடுவனென்கையாற் பேதமென்றறிக.



கக-வது- அத்தியாயம்.

## பூருவமீமாங்கிசை.

சத்தம்பிரமந் தமம்விவர்த்தனுத்மா
வொத்தபூர்வமீ மாங்கிசையுரையே.

சொரூபலட்சணம் நாதமாகிறசத்தமே பரப்பிரமமாயிருக்கும் அந்தப்பிரமமானசத்தமாப் ஒருவராலுண்டானதல்லாததாய் சுயம்பாயிருக்கிற சத்தமே பிரமம். இனித் (தடத்தலக்ஷணமாவது) சத்தப்பிரமமானது விவர்த்தனமாயையால் பஞ்சபூதங்களையுண்டாக்கி யிந்தப்பஞ்சபூதங்களால் பிண்டப்பிரமாண்டங்களெல்லாமானதென்றறிக. இனிப் (பெத்தநிலையாவது) ஆத்மாவானவன் அறிவுள்ளவனு யனேகமாத்மாவாய் வியாபியாய்ப் புத்தியைத் தனக்குக் குணமாகவுடையனுய்ப் புத்தியைபொறிகளிலே பிரவேசிக்கச் செய்துவிஷயங்களை அனுபவிக்கும்பொருட்டு முன்சொன்னபூதத்தை புத்திமுதலானதத்துவங்களாகவும், தூலசூக்குமதேகமாகவுங்கொண்டு நல்வினை தீவினைக்கீடாக நரக சொர்க்கங்களையனுபவிப்பதாயிருப்பனென்றும்,உடலையுஞ் சுக துக்கங்களையுங் கொடுப்பதுகன்ம மல்லாமல் வேறொருதெய்வங்கொடுக்கிறதில்லையென்றும், ஞானங்களால் வீடில்லையென்றும், வினைகள் விடுகிறதற்கு வேறுவிதியில்லை யென்றும்,பசுப்படித் தியாகஞ்செய் தந்தயாகத்தினு லுண்டான பலன்களைச் சொற்கத்தி லனுபவித்து அந்தப்பலன் நசித்துத் திரும்பி வேறுவிதியில்லாமற் பூமியில் பிறக்குமென்றுஞ், சுருதிமந்திரங்களால் செபம்பண்ணினுல் கருதியபலன்களைக் கொடுக்குமென்றும் இப்படிச் சொன்னவிதங்களா லாத்மா கட்டுப்பட்டுத்திரிவானென்றறிக. இனி உபக்கிரமாதி ஷடுவித லிங்க தாற்பரியத்தால் வேதவாக்கிய விசாரபூர்வகமாய் ஜோதிஷ்டோம யாகாதிகளைவிதிக்கும்.

௩௧. பெந்தமூன்றுளபேசிற்பகுதியும்
வந்ததெக்கணுவத்தம்வைகாரிகந்
தந்தவ்வியத்தமுதன்முத்திஞானமு
முந்துமிச்சாதி மூடற்பெந்தமே.

௩௨. ஏதமீறெக்கணுவத்தமென்பது
ஓதுகசோதிட்டோதிமாதிப்பிரபந்தனஞ்
சாதவைகாரிகந்தன்னைச்சாற்றிடிற்
பேதபஞ்சவெஞ்ஞாதிப்பிரபந்தனம்.

என்றது-பகுதியென்றுந் தெட்சணாவத்தமென்றும் அவ்வியத்தமென்றும் மூன்றுபந்தமாம். இதில் தெட்சணா வத்தமாவது ஜோதிஷ்டோமாதி பந்தனம். வைகாரிகமாவது பஞ்சவெஞ்ஞுபந்தனமாம். அவ்வியத்தமாவது ஞான யெஞ்ஞுபந்தனமாம். இதனாலேசொர்க்க நரக செனன முண்டாமென்றறிக.

௯௩. அறிவுறுமனேகமாத்மா வனேகமும்வியாபிபுத்தி
பொறியுறுகுணமாமென்றும் பூதமீருடல்களாகிச்
செறிவுறுநரகசொற்கஞ் சேர்ந்தவல்வினையால்முத்தி
பிறிவுறுமறிவுசத்தம் பிரமமீமாங்கிசர்க்கே.

௯௪. உண்டானபொருளைமறையுரைத்ததென்று மோவாமற்காரியத்தையுரைக்குமென்றும், விண்டார்க்குஞானத்தால்வீடுமில்லை வினைகடனைவிடுகைக்கு விதியுமில்லை, கண்டானுமுலகு தனைக்கர்த்தாவேகாண் காரணனாயிருப்பானோரீசனில்லை, யுண்டாகிற்சுவர்க்கமலமொன்றுமில்லை யொத்திருக்குமிதுபொருளென்றுரைக்கின்றாரே.

௯௫. காரியமாங்கருமத்தையெல்லாஞ்செய்து காமியபாவக்கருமமெல்லாம்விட்டுக், கூரியனாய்மேற்குறையுஞ்செய்யோமென்று, குறித்திருந்தவவனுடையகுரம்பைவீழ்கா, லீரியல்பாமிருவினைகளெல்லாங்கூடி யிவனுக்கோர்குரம்பையினையெடுத்ததற்கே, யாருயிரைக்கருமபலமாண்டுநின்றால் வானகத்தேமுத்தியெனமதிக்கின்றாரே.

௯௬. நரகசொற்கந்தீங்கு நன்றாங்கருமந்
தருமிறைதானன்றியிலை தானும்-பிரமவொலி
நாடுங்குணம்புத்தி ஞானமில்பாடாணம்போல்
வீடென்றான்மீமாங் கிசன்.

ஆத்மா புத்தி சையோகத்தால் சிற்சொரூபனாய் புத்திசம்பந்த சமாதியி லயமானால் ஆகாசம்போல் மகத் பரிமாணமாய்ப் பாஷாணம் போலிருக்கும் புத்திகூடிற்சுதப்பிரமாணஞானசமேதனாயிருக்கு மென்றறிக. வாசுதேவாத்மகப் பிரகிருதிசொருபத்தோடடையுஞ் சொற்கமேமோட்சமென்பரென்றறிக. இது பேதவாதிமதம், இஃது பூர்வமீமாங்கிசைபேதமாய் சைமுனியென்பவரா லிதற்குச்சூத்திரஞ்சொல்லப்பட்டது.முன்சொன்னசாங்கியனுக்கும் இவனுக்கும்பேதமென்னெனிற், சாங்கியன் பிரகிருதி விகிர்தியாலே தன்னைத்தானேகட்டிக்கொண்டுதானே விட்டுக்கொள்ளுவானென்பான்

இவன்சத்தமேபிரமமென்றும் அதிலே ஆத்மா புத்தியாதிகுண விகாரங்கள் கெட்டுப் பாஷாணம்போல் கிடப்பது முத்தியென்கையால் பேத முண்டென்றறிக.



## கஉ-வது-அத்தியாயம்.

## வைசேஷியன்மதம்.

செடமாயனேகராய்ச் சேஷ்டைகுணங்குணியா
யிடமாஞ்சிவனியல்லவைசேஷியே.

சொரூபமாவது சுகசொரூபியாய் நித்தியனாயிருக்கிற சிவனொருவனுண்டென்பது. இனி (தடத்தமாவது) முன்சொன்னசிவன் கருவிகளைக்கொண்டுபிரேரித்து ஆத்மாவுக்கறிவிப்பன். அதெப்படி யென்னில், சரீரமுண்டாய் இதி லிந்திரியங்களுண்டா யிதுகளில்மனங்கூடுகையால் ஞானமுண்டாயிந்த ஞானத்தாலே புண்ணியா புண்ணியமான கன்மமுண்டா யிதனால் சொர்க்கநரகப்பிராப்தி யுண்டாய்ச் செனனமரணப்பட்டுத் திரும்பியுஞ்சகடக்கால்போற் றிரிவனென்றறிக. இந்தப்படிக்கு நடத்திவிப்பவனீஸ்வரனும்.

௬எ. முத்திசேரிடத்துநிற்குணத்ததாகுமூதுயிர்
பெத்ததாமிடத்தின் முக்குணத்தொடானபேதமாம்
புத்தியானமுத்திநல்கபாவனைதியாலுறும்
வைத்ததாமவத்தைமேவுமன்னுயிர்சடத்ததாம்.

௬அ. மைவண்ணமில்லாதபொருள்கடம்மால் வைத்ததெரிசனம் வைசேடிகமேயன்றோ, அவ்வண்ணமதனுடைய மதமுங்கூறி லாத்மாக்கள்செடராகியனேகராகி, மெய்வண்ணங்குணங்குணியாயவத்தைமேவி யிபன்பாசபெந்தர்களாய்ப்பிறந்திறந்து, உய்வண்ணமதுவின்றியுறுவார்தங்கட் குயர்வீடுபாவனையாலுளவாமன்றே.

௬௯. அரும்பாசத்தகப்பட்டபெத்தாத்மாக்க ளனேகபவந்தனின் முயன்றவறங்கடன்னாற், றிரும்பாதபத்தியதுசிவன்பாலுண்டாய்ச் சிவனைதினம் பாவித்தங்காராதிக்கப், பெரும்பாவங் கருடனையேபாவித்தத்தாற் பெருவிடந்தீர்ந்ததுபோலப்பாசம்விட்டுப், பரன்போலுநிற்குணனாயவத்தைகெட்டுப் பரனொத்தங்கிருப்பதுவேபகர்வீடாமே.

இனிப் பெத்தமாவது இந்தவாத்மாக்கள் பெத்தப்படு நிமித்தியமாக இவனுக்குஉபகரணங்களாய்க் கூடினதத்துவங்க ளெத்தனையென்னில், பிர

மாதிவிஷயபதார்த்தங்களாவது திரவியங் குணங் கருமஞ் சாமான்னியம் விசேஷஞ் சமவாயம் இப்படி ஷட்பதார்த்தமென்றும்,இதல்லாமலபாவங்கூடி ஏழென்றும்இந்தவெழுவிதத்தில் (திரவியமாவது) பூதம்-௪-ஆகாசம்-௧-ஆ-௫-இனி காலம்-திக்கு- ஆத்மா-மனம்-ஆ-௪-ஆ-௯ இதுகள் நித்தியமு மனித்தியமுமாயிருக்கும். அதெப்படியென்றால், பரமாணுரூபாயிருக்கிற காரணத்தினாலே நித்தியமுங் காரியரூபத்தால் அநித்தியமுமாயிருக்கும். இந்த -௫- ல் பஞ்சபூதங்கள்தானே ஞானேந்திரியங்களாய் அதன்குணமான சத்தாதிவிஷயங்களைக் கிறிகிக்குமென்றும், விஷயங்கள் பஞ்சபூதத்தின் குணமென்றும், இதல்லாமல் ஆகாசமொன்றுக்குமே சத்தம் மற்றநான்கிற்குஞ் சத்தமில்லை ஆகாசத்தினுடையவாகிளையத்தா லுண்டானதென்றுஞ் சொல்லும். இனிக் (காலமாவது) பூதவர்த்தபவுஷியமானபடியால் நித்தியமென்றும், திக்குகளாவது தெசதிக்குகளென்றும்இனி (ஆத்மாவானது) சித்ததன்மயுக்தரா யனேகராய்ச்செடராய்க் குணகுணிபாவமாய் அவத்தையிற்சுழன்று வேறுவேறுபாச பெத்தர்களாய்ப் பிறந்திறந்து புண்ணியாபுண்ணிய கன்மமுண்டாய் மனதின் கூட்டரவா லுண்டான ஞானத்தால் ஆத்மாவானது முன்சொன்ன சரீரசமுகங்களால் செனனமரணப்பட்டுச் சொர்க்கநரகங்களனுபவிக்குமென்றறிக.

இனி (மனமாவது) ஆத்மாவுக்குச் சகலதத்துவங்களையுங் கூட்டிக்கொண்டு அறிவைக்கொடுக்கும் ஆகத்திரவியம் -௯- இதில் முன்சொன்ன பூதங்களைந்திற்கும் காரியம் இந்திரியம் விஷயமென்றும் ரூபத்தால்- ௫- விதமாம். இதிற் (காரியமாவது) பிரகிருதியினுடைய ரூபமானதுசரீரம் பூலோகத்தில் நம்முடைய சரீரமுதலான எழுவகைத்தோற்ற சரீரங்களாம். இனி யிந்திரியமாவது கெந்தத்தைத்தோற்றுவிக்கும் விஷயமாவது காணப்பட்டகடபடாதிகள்- ஆ-௫- இனி அப்புவினுடையகாரியரூபமான சரீரம் வருணலோகத்திலும் இந்தவுலகத்திலுங்காண்க. இந்திரியமாவது இரஸத்தைத் தோற்றுவிக்கும். விஷயமாவது சமுத்திர மழைமுதலானவைகள், ஆ-௫- இனித்தேயுவினுடைய காரியரூபமான சரீரம் ஆதித்தலோகத்தில் காண்க. இந்திரியமுருவத்தைத்தோற்றுவிக்கும். விஷயமாவது பௌமம் திவ்வியம் அவுதாரியம் ஆகாசம் எனநான்காம். இதில் பௌமமாவது காஷ்டாதியிலுள்ள வக்கினி. திவ்வியமாவது நக்ஷத்திரங்கள். அவுதாரியமாவதுஉதராக்கினி. ஆகரஜமாவது இரத்தினுதிகள்-ஆ-௪- இனி வாயுவினுடையகாரியரூபமானசரீரம் வாயுலோகத்திற்காண்க. இந்திரியமாவது பரிசத்தைத்தோற்றிவிக்கும் விஷயமாவது விருக்ஷமுதலானதிற் சலனுதிகள்- ஆ-௫- இனி ஆகாயத்தினுடைய காரியரூபமானசரீரம். ஆகாயலோகத்திற் காண்க. இந்திரியமாவது சத்தத்தைத்தோற்றிவிக்கும். (விஷயமாவது) முன்சொன்னநான்கு பூதத்திற்கும் வேறாய் சத்தத்துக்குக் காரணமாய் நித்தியமுமா யிருக்கும் - ஆ-௫- இதிற் காலமுந் திக்கு மிதற்கு வேறாய் நித்தியமுமா யிருக்கும். ஆத்மாக்க ளிவற்றிற் கெல்லாம் வேறாய் முத்தராய் நித்தராயனே

கரா யிருப்பார்கள். இனி மனமானது இவற்றிற்கு வேருய் ஞானுதிகளு க்குமேதுவாய் நித்தியமுமாயிருக்கும். இந்த நவதிரவியங்களுக்கும் வேறுட ட்டிருக்கும். அதாவது, குணம். அவை சுக்கிலாதி குணபதார்த்தமாய் ரூபம்- ரசம்- கந்தம் - பரிசம்- சங்கியை - பரிமாணம்- வேருதல் - சையோ கம்- பிரபாகம்- பரத்துவம்- அபரத்துவம்- குருத்துவம்- திரவத்துவம்- சிநேக ம்- சத்தம்- புத்தி- சுகம்- துக்கம்- விருப்பு- வெறுப்பு- முயற்சி- புண்ணியம்- பாவம்- வாசனை- யென்னும்பேதத்தால்- உச - இனி கன்மமாவது எழுதல் விழுதல்-முடக்கல்-நீட்டல்-நடத்தலென்னுங்கூறுபாட்டால்- ரு - ம் - இனிச் (சாமான்னியமாவது) பரமென்று மபரமென்றும் இரண்டாம். இது கோத்து வமுதலாயுள்ளசாதிகள் இனி விசேஷமாவது எல்லாத்திரவியங்களிலு முண் டாயிருப்பதால் அனந்தமாயிருக்கும். இனிச் சமவாயமாவது ஸம்யோகமென் றுஞ்சமவாயமென்றுமிரண்டாம். இதில் ஸம்யோகமாவது அனித்தியசம்பந்தம் சமவாயமாவது நித்தியசம்பந்தம்,இதுவுமிவற்றிற்கு வேருயிருக்கும். இனி (அ பாவமாவது)பிராக்கபாவம்பிரத்தொம்சாபாவம்அன்னுன்னியாபாவம் அத்ய ந்தாபாவம்எனநான்காம்இதில்பிராக்கபாவமாவது அனுதிசம்மந்தமாயிருக்கும் அனுதியாகிலு முடிவுள்ளதாயிருக்கும் இதற்கு உதாரணமிறந்தகாலம் இனிப் பிரத்தொம்சாபாவமாவது முதலுண்டாய் முடிவற்றது இதற்கு உதாரணம் எதிர்காலம் இனி அன்னுன்னியாபாவமாவது தாதான்மியபாவம் இதுகடமி ல்லைபட முண்டென்கைபடமில்லைகடமுண்டென்கை இனி அத்தியந்தாபா வமாவது அனுதிரணம் அத்தியந்தாபாவம் இது ஆதியந்தமற்றிருக்கை, யித ற்கு உதாரணம் ஆதியந்தமற்றிருக்கிற ஈஸ்வரன் இதில் அபாவபதார்த்தத் தைவிட்டு மற்ற வாறுபதார்த்தமுங் கொள்வாருமுளர். இனி முன்சொன்ன ஆத்மாவானவன் இப்படிச்சொல்லப்பட்ட பதார்த்தசையோகத்தாலே ஞா னமுதலானவையுண்டாய்ச் செனனப்படுவனென்றறிக.

இவர்கள் பிரத்தியட்சமும் அனுமானமுங் கொள்ளுவார்கள். வேதா கமங்க ளீஸ்வரனு லருளிச்செய்தது, ஈஸ்வரன் அறிவிக்கிறவன் இந்தவி தங்களினுல் பந்தப்பட்டவன் ஆத்மாவென்றறிக. இனி முத்தி நிலையாவ து முன்சொன்ன ஏபதார்த்தங்களையும் இதினுடைய வெகுவிதவிஸ்தார உண்மைகளையுமறிந்து மனதினுடைய கூட்டரவால் வந்தஞானங்களெல்லா மிறந்துபோகும்படி பத்தியினுல் சிவனைத்தியானம்பண்ணினுற் கன்மக்ஷய முண்டாம் இதனுல் ஆகாயம்போல் மகத்பரிமாணமாய் நிற்குணனுய்ப் பா ஷாணம்போல் விகாரமற்றிருப்பது மோட்சமென்றறிக. அனைத்திலும் யா னெனதென்றபிமானங் கொள்கையாலகங்காரமே யாத்மா வென்றுங்காய ம்போனுலகங்காரபுவனந் தன்னிற்பொருந்துமென்றுஞ், சிவத்தியானத்தா ல்விகாரமற்றமோட்சம்வருமென்றுஞ் சொல்லும் பின்னுஞ் சையோகத்தால் சித்ததன்ம யுத்தனென்றுஞ் சரீரேந்திரியாதிகமாகிற- உக- பேதமான துக்க ம் நீங்கிப்பாஷாணம்போல் இருப்பது முத்தியென்றுஞ் சொல்லும். இது

இருளும் வெளியும் போலச் சிவனுமாத்மாவு மிரண்டாகையாலிதுவும் பேத வாத சித்தாந்தமாம் இந்தச்சமய நூல் கணநாதர் கற்பிதமென்றறிக.

சஶ. முத்தியினினிற்குணனாய் முன்னங்குணகுணியாய்
பத்தியினின்முத்தியுறும் பாவனையாற்-சுத்த
சடபாஷாணவத்தை சார்தலாலான்மா
கடனென்றான் வைசேடிகன்.

இனி முன்சொன்ன மீமாம்சிசனுக்கு மிவனுக்கும் பேத மென்னெனின் அவன் சத்தமேபிரமமென்றும் புத்தியே குணமான வாத்மா புத்திவிக ற்பங்கெட்டுப் பாஷாணம் போல்வது முத்தியென்றும், இவன் சிவனுண் டென்றும் ஆத்மாவுக்கு மனதினுடைய கூட்டரவினால் விஷயஞானங்களு ண்டாம் இதுநீங்கும்படியாகச் சிவத்தியானஞ்செய்து விகாரமற்றிருப்பது மோக்ஷமென்கையா லவனுக்கு மிவனுக்கும் பேதமுண்டென்றறிக.



கஈ-வது—அத்தியாயம்.

## நையாயிகன்மதம்.

ஈசனுங்கன்மமு மியலுமாருயிர்க்குப்
பாசங்கட்டுதல் பகர்நையாயிகமே.

சொரூபலக்ஷணமாவது சிவன்நித்தியனாய் எல்லா வியாபாரத்துக்குங் க ர்த்தனாயிருப்பானென்றறிக. இனித் (தடத்தலட்சணமாவது) ஈஸ்வரனா வன் சித்ததன்மயுத்தமான ஆத்மாக்கள் செய்த கன்மத்தைக்கொண்டு அந் தக் கன்மமு மீஸ்வரனுமாக ஆத்மாக்களைப் பாசபந்தப்படுத்திச் செனனமர ணங்களில் விட்டுச் சொர்க்க நரகப்படுத்துவானென்றறிக.

சக. அறிவுறுமனேகவியாபி யாருமாத்மாக்கடாமே
நிறைகுணம்புத்திவித்தா நிகழ்தருமுத்திகூறிற்
செறிபிணம்போலவந்தக் கரணமேசொற்றலாரு
மிறையுருவுன்மைசெய்த வினைபெத்தமுத்தியேய்க்கும்.

இனிப் (பெத்தநிலையாவது) இந்தவாத்மாக்கள் கன்மத்திற்கூடியது தத்துவ பதார்த்தங்களாவது யாதென்றால்.

சஉ. திரவியமைந்துநான்கு செறிகுணம்பத்தோடேழு
திரவியகருமமைந்து நிகழிலக்கணங்கண்மூன்று
விரவியதகிலமாத்மா வியாபிகள்குணமும்புத்தி
கரவியல்கட்டுவீடுங் கன்மமுங்கத்தாவாலும்.

என்றது, திரவியமைந்து நான்கென்பது பிரிதிவிமுதற்பூதம் - ரு - திக்கு- மனம்- புத்தி - யாத்மா-அ - திரவியம்-க - செறிகுணம்பத்தோடேழென்பது பரிச ரூப ரஸ கந்தமுஞ் சங்கியை பரிமாணம் பிரத்தியக்ஷம்ஸம்யோகம் கெந்தருவாகம் பரத்துவம் அபரத்துவம் புத்தி சுகந்துக்கம் இச்சை சேஷம் பிறஞசனம்-அ-குணம்-௰எ-கிரவியகரும மைந்தென்பது எழுதல் விழுதல்முடக்கல்நீட்டல் நடத்தல் அ-ரு-நிகழிலக்கணங்கண் மூன்றென்பது சாமான்னிய விசேஷசமவாயமுமென-ங-இதில்முன்சொன்ன திரவியங் குணங் கருமம் - ங- இனி இலக்கணமாகிற சாமான்னிய விசேஷவாய்மை அ-சு- இந்தவாறு மிச்சாத்திர விஸ்தார வர்த்தங்களுக்கெல்லா முதன்மையான சமுகமென்றறிக. இதிற்பூதம்- ரு - ம் - தானே சுரோத்திராதிகளாயிருந்து தன்குணமான சத்தாதி விஷயங்களைக் கிரிகிக்கு மென்றும்.

இப்பூதங்களணுக்கூட்டமென்று மிதில் அனுதியணுச்சத்தாய்க் கெடாதிருக்குமென்றும்காரியமாகியவணுக்கள் வேருயிருந்து உலகங்களாய்ச்சத்தாய்ச் செடமாய் நித்தியமுமாய்க் கெடுமென்றும், இப்படிச் சூக்ஷம ஸ்தூல வணுக்க ளிரண்டுவிதமென்றும். விரவியதகிலமென்றது முன்சொன்னதிரவியங் குணம் கருமமென-ங-ம்- சாமான்னிய விசேஷ சமவாயமுமென - ங- இந்த வாறுபதார்த்தமு மசத்தான வணுக்களா யிதினுடைய சமுகங்களே யகிலங்களாயிற் றென்றுசொல்லும். ஆத்மா வியாபிகுணமும் புத்தி யென்றது முன்சொன்ன வகிலங்களிலாத்மாக்கள் வியாபிகளா யனேகமாயிருக்குமென்றும் இந்தவாத்மாக்களின் குணமானது புத்தியென்றுசொல்லும். கரவியல் கட்டுவீடுங் கன்மமுங்கத்தாவாலு மென்பது, முன்சொன்ன பதார்த்தமான வகிலங்களிற் குணம் புத்தியாயிருக்கிற வாத்மாக்களியல்பாக வதில்மறைந்து கட்டுப்பட்டுச் செனனமரண துக்கவேதுவாமென்றும், இந்தவாத்மாக்களைக் கட்டுவதும் விடுவதுங்கன்மத்தாலுங்கர்த்தாவாலுமென்றறிக. ஆத்மாவுக்குத் தனக்கென்றறிவில்லை யிவனுக்குப் புத்திமுதலான அந்தக்கரணவறிவைக் கொடுக்குமென்றும், இதுகளைக்கொண்டுசருவஞ்ஞசீவன் ஆத்மாவுக்குக் கன்மத்திஞல் அறிவிப்பானென்றும். காலம்பூதவர்த்தபவுஷிகமாகையால் நித்தியமென்றும், இனிப்பிரத்தியட்சாதி பிரமாணங்கள் பிரமேயசித்தியர்த்தமாக வறியப்படும். இனிப்பிரமேயமாவது ஆன்மாதேகம் இந்திரியம் அர்த்தம் புத்தி மனம் தோஷம் பிரவர்த்தி பிரேத்தியாபாவம் துக்கம் பலம் மோட்சம்ஆகப்பிரமேயங்கூடி - ௰உ - இவைகளைப் பிரேரிக்கிறவ னீஸ்வரனு மென்றறிக. இனி பெத்தநிலையாவது தர்க்கயுத்திமுதலான சோடசபதார்த்தமா யிருக்கும் அதாவது பிரமாணம் பிரமேயம் ஸம்ஸயம் பிரயோசனம் திஷ்டாந்தம் சித்தாந்தம் அவயவம் தர்க்கம் நிண்ணயம் வாதம் சற்பம் விதண்டை எத்துவாபாசம் ஜலம் ஜாதி நிக்கிரகஸ்தானமென்று இப்படி சோடசபதார்த்தமுதலானது ஈஸ்வரகர்த்தத்துவத்தை நிச்சயிக்கும். இனிப் பிரபஞ்சத்துக்குச் சரீரேந்திரியாதியாகிற வாத்மா வாகாயம்போல் மகத்பரிமாணமாய்ப்

பாஷாணம்போல் சடமாய் மனச்சையோகத்தால் சித்தத்தர்மயுத்தனென்பர். இனி முத்திநிலையாவது முன்சொன்னதெல்லாம்விட்டு நீங்கிப் புத்திமுதலா னகரணவிகற்பங்கெட் டாகாயம்போலும் பிணம்போலுஞ் சமாதிபொரு ந்தியிதற்கிடையூருன - ௨௰௪ - பேதத்துவமாகிற துக்கம் நீங்கிப் பாஷா ணம்போல்வது முத்தியென்றறிக. இருளும் வெளியும்போ லாத்மாவுஞ் சி வனுமிரண்டாயிருக்கையால் இதுவும் பேதசித்தாந்தமென்றறிக. இவர்கள்பி ரத்தியட்சம் அனுமானம் உவமானம் மூன்றுங்கொள்வார்கள் இந்நூல் அட் சபாதராலே கற்பிக்கப்பட்டது முன்சொன்ன வைசேஷிகனுக்கு மிவனுக் கும் பேதமென்னெனில் எல்லாஞ்சரியாளுலும் அவன் ஆத்மாவுக்கு அந்த க்கரணங்கள் வேருயிருந்து அறிவிக்குமென்று சொன்னுல் இவன்ஆத்மகுண ம் புத்தியென்றுஞ் சிலபதார்த்தங்களேறக்குறையச் சொல்லுகையால் பேத முண்டென்றறிக.

௪௩. அணங்குற்றவாத்மா வனேகம்வியாபி
குணம்புத்தியாமுத்தி கூறிற்- பிணம்போல்கை
மெய்யாமிறைவனேயும் வீடுகட்டுக்கேதுவா
நையாயிகனு னலம்.

௪௪. செறிதிரவியமைம்பூதந் திசைகாலமனமோடாத்மா
வுறுகுணம்பரிசமாதி நாலோடென்பரிமாணந்தான்
பிறிவொடுகூட்டம்பேசுஞ் சராசரம்புத்தியின்பந்
கிறிதருதுன்பம்வேண்டல் வேண்டாமைமுயற்சிகேடே.

௪௫. ஏற்றியகருமமைந்து மிலங்கிடவறியக்கூறிற்
போற்றியபக்வாபக்வம் புகன்றிடும்விரிவொடுக்க
மேற்றியகமனமென்றுங் கைந்தினி னிலக்கணந்தான்
சாற்றியவிசேடஞ்சாமானியஞ் சமவாயமாமே.

௪௬. சட்டமேயகிலமாத்மா சகலமும்வியாபிபுத்தி
யிட்டமாங்கன்மந்தானு மீசனுமெவ்வுயிர்க்கும்
கட்டுவீடிரண்டினுக்குங் காரணமென்றுகொண்டு
தட்டினேயோராநையா யிகனூர்தாஞ்சாற்றலென்றூர்.

## ௧௪-வது—அத்தியாயம்.

## சிவாத்துவிதமதம்.

துவிதமல்லாமற் ரோன்றியதெல்லாஞ்

சிவாத்துவிதமாஞ் சிவாத்துவிதியே.

பசுபதிலட்சணம் நித்த புத்த சுத்த முத்தனுய்த் தனக்கிரண்டா வானில்லானுய் ஏகனுய் அறிவேவடிவாயிருப்பனென்றறிக. இனித் தடத்த லட்சணமாவது அக்கினியானது பொறியும் புகையு மாறுற்போலும், அப்பு அலையும் நுரையும் புற்புதமுமாறுற்போலும் முன்சொன்ன பிரமந்தானே தன்னுருவைப் பகுத்து உயிர்களையுஞ் செகங்களையு முண்டாக்கித் தன்னை த்தானே மறைத்துக்கொண்டு உபாதிகளில்நின்று சுகதுக்கம்போல் விளையா டுவன் பின்பு தன்னையொழியச் சுகதுக்கங்களைப்பெறுவதும் பெருமற்போ வதும் ஏற்பானு மீவானும் வேறில்லாமையா லெல்லாச்சுகதுக்கத்தோடுந் திருவிளையாடல் செய்துகொண் டிருப்பானென்றறிக.

௪௭. அனுதிசிவன்சகத்து மாருயிருமாகத்
தனுதுருவைத்தானே பகுத்துத் - தனுலொழியப்
பேறிழவில்லைப் பெறுவானுமீவானும்
வேறில்லையென்றறிகை வீடு.

௪௮. தனிற்சிவந்தானுகித் தடுப்பரியயுலகமதாய்
முனிற்றுனேகத்தாவாய் முடியாதவினைப்பிறப்பைப்
பினிற்றுனுஞ்சீவனையே பெந்தித்துவிரித்தெல்லா
மினித்தாயவின்பதுய ரீவானுய்ப்பெறுவானும்.

௪௯. முத்திதான்கொடுப்பானுனுய் முன்னைத்தானடையும்வண்ண
சத்தியாலிவையேசெய்து தானிகழ்தலனுதியாகும் [ஞ்
பத்தியினுலிவர்பரவிப் பழையதனையிவனடைதல்
சித்தியாஞ்சிவாத்துவிதத் திகழ்த்தியவீ டதுவன்றே.

இனிப் பெத்தநிலையாவது தன்னைத்தானேபகுத்து ஆத்மாவாய்ச்செகமு ம் புண்ணியபாவமுமாய் மூடிக்கொள்வது பெத்தநிலை. இனி முத்திநிலை யாவது முன்சொன்ன படித்துவத்தையெல்லாமறிந்து குருவால் சாம்பவி தீட்சை பெற்று அனுபவநிஷ்டையி லயமாய்ப் பெறுவான் பேறில்லாம லெல்லாம்பிரமமாகிற தென்றறிக. இதுவும் பேதாபேதமாய்த் துவிதமா மென்றறிக. இருவரும்ஞப்திமாத்திரமென்பர் இனி முன்சொன்னநையாயி கனுக்கு மிவனுக்கும் பேதமென்னெனில் அவன் ஆத்மா வியாபியென்றும்

புத்தி குணமென்று மீஸ்வரனுங்கன்மமு மாத்மாவைப் பாசபந்தப்படுத்து மென்றுஞ்சொல்வதுபோல் இவனும் பிரமமே யெல்லாமா யானதென்கை யால் பேதமுண்டென்றறிக.



கரு-வது—அத்தியாயம்

## பாஸ்கரியன்மதம்.

சித்தசித்தாகிய சிவசெகத்தெல்லா
முத்தனேயானது முதல்பாஸ்கரியமே.

சொரூபலக்ஷணமாவது பிரமம் சத்து சித்து ஆனந்தம் நித்திய வியாபகமாயிருக்குமென்பது இனி தடத்தலட்சணம் முன்சொன்னபிரமமே சித்து அசித்துக்களாயிருக்கிற செகசீவர்முத லெல்லாமாய்ப் பரிணமிக்கும்போது அண்டாண்டபுவன போகங்களும் பிண்டாண்டதனுகரண போக்கியங்களும் இந்தப் பிண்டங்களில் போதங்களாகிற தத்துவங்களுமாய்ப் பரிணமிக்கும். அஃதெப்படி யென்னில் இலவணத்தீர்த்தம் இலவணக்கட்டியானாற்போலும், பொன் மண் நூல், பூஷணங் கட படமானாற்போலும் வித்து மரங்களானாற்போலும், பரிணமிக்கும் ஆனாலிப்படிப் பரிணமித்தால் முதற்பொருள் கெட்டுப்போமென்னில் அப்படியல்லாமற் சத்தம் பிறந்தபோது அர்த்தமாகத்தோன்றியும் அர்த்தமாகிற பதார்த்தங்களைக்கண்டபோது சத்தம்வேறு அர்த்தம்வேறானாற்போல சிவன் தானே சத்தங் கெடாதது போலநின்று செகசீவர்கள் அர்த்தம்போலவேறாய் சிவன் தானேயெல்லாப்பரிணாமமுங் கெடாமல் நிற்பதென்றறிக. இனிப் பெத்தமாவது இந்த அர்த்தம்போல வேறான சீவராசிகள்செகத்துகள் இஃதோடுகூடிப்பந்தப் பட்டுச் செனனமரணப்படுவது. இனி முத்தியாவது முன்பரிணமித்த போதங்களெல்லாமிறந்து போதசீவனானவன் குருவால் வேதாந்தஞானம் பெற்றுச் சமாதிபொருந்தி மனோலயமான விடத்தில் தன்னையறிந்துதானும் லயமாகப் பூரணசமாதி நிஷ்டைசாதித்து எல்லாம்பிரமத்தி லொடுங்கிப் பிரமமாகிறதேமுத்தியென்றறிக.

௩௰. சித்தாயசித்தாய்ப்பரிணமித்துச் சிவனாகித்திகழ்ந்தமையாற்,
சத்தேயல்லாமுத்திதனைச் சாரக்கண்டஞானங்கள்,வைத்தே
மொழியுமாமறைகள் சொன்னமரபேவந்தக்கா,லொத்தேகெ
ட்டுப்பிரமத்தோ டொன்றாய்ப்போமென்றுரைத்தனனே.

இதுவும்பேதமா யபேதமாய்த்துவைதமாம் இது பதஞ்சலர்கற்பிதமென்றறிக. முன்சொன்ன சிவாத்துவிதிக்கு மிவனுக்கும் பேதமென்னெனிற்சிவாத்துவிதி அக்கினியிற்பொறி புகைபோலச் செகசீவமாயிற் றென்றான் இவன் சிவமேயெல்லாமாய்ப் பரிணமித்த தென்கையாற் பேதமுண்டென்றறிக.



கரு-வது—அத்தியாயம்.

## சத்தப்பிரமவாதிமதம்.

சத்தந்தானேசகமுமிருடலெனச்
சத்தப்பிரமவாதிகன்சாற்றுமே.

சொரூபமாவது வசனிக்கிற சத்தசொரூபமாய் நித்தியமா யழியாததாய் சர்வத்துக்குங் காரணமாயிருக்கிற சத்தந்தானே பரப்பிரமம். இனி தடத்தலட்சணம் இந்தச்சத்தம் பரிணமவிவர்த்தனமான மாயையால் செகங்களை யுண்டாக்கும். இந்தச் சத்தமாகிற பிரமத்தினது விவகாரந்தானே கருவிப்பொருளாகிற அர்த்தத்தைக் கொடுக்கையினாலும் சகலபதார்த்தங்களுமுண்டாகையாலுஞ் சத்தத்தாலெல்லா விவகாரமுந்தோன்று கையாலும் மோட்சமடைதற்குக் கருவியா யிருத்தலாலும் தடத்தமென்றறிக. இனிப் பெத்தமாவது பரிணமவிவர்த்தன மாயையால்பிண்டப்பிரமாண்டங்க ளெல்லாஞ் சத்தத்தில் தோன்றுகையால் சீவராசிகளெல்லா மந்தச் சத்தத்தில் தோன்றி யதுதானேபந்தப்படும். அஃதெப்படி விவர்த்தனமாயையி லுண்டானதல்லாமல் சத்தத்தில் செகத்பிரவர்த்த முண்டாகாதென்னில் உண்டாம். அதெப்படி யென்னில் ஒரு சத்தமெழுகிறபோது பொருள்களெல்லா முன்னேதோன்றுதபடியால்சத்தத்தில் பொருள் தோன்றுதென்றும் அப்படியல்ல பொருள் சத்தத்தி லுண்டாம்வகை பூமாவென்றபோதும்நெற்பொரியென்றபோதும் இந்தச் சத்தமும் பொருளுமொன்றுபோ லிருக்கிலுஞ் சத்தத்தி லந்தப் பூமாவும் நெற்பொரியு மில்லாததுபோ லதைக்காட்டுகையால் பொருள் வேறு சத்தம்வேறும் சத்தத்தினாலாகிய பதத்தி லந்தப்பொருளில்லையாய்ப் பதமேநின்று பின்பு பொருளைக் காட்டிச் சத்தங்காட்டின பொருளெல்லாந்தோன்றி தினவிருதியில்நாசமாய்ச்சத்தமொன்றுங் கெடாமல் மீண்டுமீண்டும் வருகையால் சத்தமே யுள்ளதாயிருக்கும் பொருள்களனித்தியமாம். இந்தப் பொருள்களெல்லாஞ் சத்தத்தையல்லாமல் மாயைமுதலான தேகங்களுண்டாகாது சத்தத்தைசொன்னபோது சத்தந் தானே யர்த்தமாகத் தோன்றியு மர்த்தத்தைக் கண்டபோதுசத்தம்வேறு அர்த்தம்வேறுயிருப்பதுபோலச் சத்தமாகிறபிரமந்தானேசத்தமு மர்த்தமுமா யிருக்குமென்றறிக.

ருக. பரிணமவிவர்த்தனமாயையதில்
தருமாமுலகுள்ளது சத்தமதே
பொருளானவைசொல்லனமல்லவெனின்
மருளாதுபொருட்டிறமற்றிலையே.

ருஉ. பூமாவெனவேபுரையும்பொருளு
மாமாவடிவொன்றிலனாந்திலதாம்

நாமாதரவேயதுநன்கருவாய்த்
தாமாம்பொருணைம்பொரிதானெனவே.

௫௩. சொல்வந்தெழலும்பொருடோன்றுதலாற்
சொல்லேபொருளென்றுதுணிந்திடுநீ
சொல்லும்பொருளும்முடனின்றதெனிற்
சொல்லும்பொருளின்றுசொன்னின்றதுவே.

௫௪. தருமொழிபிரமமதெனச்சமைந்திடு
மகமுறுமறிவிலியகிலமூலமு
மிகுதருமொழியலதலதுவேறென
விகபரமதுவறியாமலோதுவான்.

இந்தச் சத்தத்திலெல்லாப் பொருளுங் காட்டப்படுகையால் இதுவே பந்தமிலையென்றறிக. இனி முத்தியாவது சத்தம் மாயையோடுகூடி யுலக மானதென்றும் அர்த்தமாகிறபொருள் சத்தத்திலொட்டாமற் பொருள்வே றாய் நீங்குகையால் சத்தமேபொருளெனக்கொள்வது முத்தியென்றறிக. இவன் ஆறுபிரமாணமுங்கொள்வன் இது வியாசர்கற்பிதமாய் அபேதா[illegible]த சித்தாந்தமா மென்றறிக. முன்சொன்ன பாஸ்கரியனுக்கு மிவனுக்கும் பேத மென்னெனில் பாஸ்கரியன் பிரமந்தானே ஜெகசீவர் முதலான வெல்லாமாய்ப்பரிணமிக்குமென்னில் இவன் சத்தமே யெல்லாமாயானதெ னக்கூறினமையால் பேதமுண்டென்றறிக.



௧௭-வது-அத்தியாயம்.

வையாகரணிமதம்.

௫௫. மெய்யாலக்கணலக்கியமதுறை
செய்யாவுற்றெழுசெற்பவிகற்பொடு.
நையாவத்துவைநாடுதல்வீடென
வையாகரணிமதத்தொடுகூறுமால்.



௧௮-வது-அத்தியாயம்.

பாட்டமதம்.

மறைகளேசுயம்புவாயைம்பூதனுக்காரா
யிறையுலகுயிரொனவியல் பாட்டமதமே.

சொரூபலக்ஷணமாவது வேதமானது நித்தியமா யனாதியாய் சுயம்பு வாய்த் தோற்றமின்றி முடிவின்றி ஓரியல்பாய் நாதப்பிரமமா யழிவில்லாத

தா யிருக்கும் இனித் தடத்தலக்ஷணமாவது இந்த வேதத்தை யொருவரா
ல் கற்பிக்கப் பட்டதென்று சொல்லிற் சகுணமானகடவுள் சொல்வாருகில
வனுஞ் சீவர் களுக்குள் ளொருவனு யிந்திரியகரணங்களுடனே கூடினவ
னுவன் அவன் படித்தமாத்திரம் ஞாநங்காண்பன். அருவனுவன் சொல்வா
னுகிற் கருதிச்சொல்ல வுருவமில்லாதபடியால் சொல்லக்கூடாது ஆகையா
ல் வேதஞ் சுயம்புவாம் இந்தவேதத்துக்கு அங்கமாக-சந்தசு- கற்பம்-வியா
கரணம்-சிட்சை-சோதிடம்- நிருத்தம்-இந்த- ஆறையுங்-கை- கால்-முக-மூக்
கு-கண்-செவி- யெனக்கொண்டது இனி உபவேதமாவது ஆயுள்வேதம் அ
ர்த்தவேதம் காந்தர்வவேதம் தனுர்வேதம் இந்தநாலுடனும் வாகு-தாது- பி
ரத்தியம்-பிராதிபதிகம். இந்த நாலுறுப்புடனுங் கூடியிருக்கும். இனி இருக்
குவேதம்- உக- பேதமும், எசுர்வேதம் - கக - பேதமும் சாமவேதம் - ௲-
பேதமும் அதர்வணவேதம்- ௯- பேதமு மிந்தநாலுங்கிரமமாக விதிவாதம்
அர்த்தவாதம் மந்திரவாதம் நாமதேயமென நான்கு விதமாம். இந்தவேதா
ங்கீகாரமான புராணம் - கஅ - உபபுராணம்- கஅ- ஸ்மிருதி- கஞ- இதுகளி
ல் சதுர்த்தசவித்தை- கச- ம்- முக்கியமாம். அதாவது வேதம்-ச - அங்கம்
௬- நியாய மீமாம்சை-உ- புராண ஸ்மிருதி-உ- ஆ-கச- இனி (உபநிஷத்து
க்களாவது) சீருத்திரம், பிரகதாரண்ணியம், சுவேதாசுவதரம், கைவல்லிய
ம், காலாக்கினி, கடம், வல்லி, காத்தியாயனம், பிரமம், நாராயணம், அங்
கிசம், பிரமாங்கிசம், பாஸ்கரம், பிரமபிந்து, ஆருணி, அமிர்தபிந்து, சுரச
பிந்து, பிரமசுபாலம், தேஜோபிந்து, வாசஸ்நேயம், போதாயநீயம், ஆஸ்வ
லாயநீயம், சாங்கியாயநீயம், வாஸ்யாயநீயம், சௌனகீயம், சிவசங்கற்பம்,
சிரவணம், பராக்கிரமம், புரோக்ஷயம், முத்கலம், முண்டகம், மைத்திராயநீ
யம், என்னும்- ௩உ- உபநிஷத்துக்களும் ஞானங்கமானவிபூதி ருத்திராக்ஷா
திகளையும், பிரமக்ஞானுதிகளையும் விவகரிக்கும். இதனையும் வேதந்தன்னு
ள்ளேயடக்கிக்கொண்டு ஆரணம், பன்னம், பனிசையிதல்லாமல் வேதமோ
துகிறசாதி விவர்த்தகன், நிவர்த்தகனென்று இரண்டுசாதியாம், இதில், வி
வர்த்தகன், விசுத்தனுகிறவன், நிவர்த்தகன், சங்கரனுபதேசிகன். இப்படி
சகஸ்த்ரவேதமுண்டு அனந்தாவைவேதமென்றுஞ் சொல்லப்பட்டவிரிவெ
ல்லாம் லௌகிக வைதிக ஆத்தியாத்மக, ஆதிமாற்கீக மாந்திரீக. இந்த-௫-ல்
அடங்கும் இதல்லாமலும் பொ உபநிஷத்துக்கள் முதலான வேதாந்தங்க
ளெல்லாம்விரிந்துங் குவிந்துமிருக்கிறதேதடத்தலக்ஷணம் இனிப் ( பந்தமா
வது ) பஞ்சபூதமானது அனுதியே யியல்பாய்ப் போக்குவரவில்லாமல் ஆ
க்குவாரழிப்பாரில்லாமல் சுயம்புவான வணுக்களாகி யிதுவும் வினைகளோடு
கூடிக் காரியங்களாகிற வுலகங்களானது தத்துவங்கள் பிண்டாண்டங்க
ளாய்விரியுமென்றறிக. இதல்லாம லுயிரானது பஞ்சபூதங்களால் நானுவு
ருக்க ளெடுத்துப்புலன்வழி யுலாவித்திரியு மென்றுஞ் செனனந்தோறுஞ்
செய்தவினைமாய்ந்து சிந்தையில் பந்தித்துச் செனன மெடுக்குமென்றும்,

இதுவயலி விட்ட எருத் தழை மாய்ந்து பின்பு பயிருக்குப்பலிப்பது போல வுயிருக்குப்பலிக்குமென்றும், இதுகளையெல்லாஞ் சொல்வது வேதமாகையால் அதிலே பந்தப்படுவது பந்தமென்றறிக.

இனி முத்திநிலையாவது முன்சொன்ன சுயம்புவான வேதத்தைத்தேவர் முனிவர் சித்தர் இவர்கள் முதலானபேர் பாரம்பரையாகக்கற்று நல்ல கன்மங்களைச்செய்து இந்தவேதத்தால் கல்வி கேள்வி போதந் தர்மஞ் சற்கர்மம் ஞானமுண்டாய் நித்தியகர்மங்களை வேதஞ்சொன்னபடி செய்து சோமயர்க மாதியாக வனேகம்யாகங்களை யெக்ஞங்களைப் பசுப்படுத்திச் செய்து வேதமந்திரங்களால் ஜெபதபங்களைச்செய்து பசியானவனுண்டுபசிதீர்ந்தாற்போலக் கன்மஞானங்களிரண்டுங் காலாகக்கொண்டு விண்ணிலேறி வீடாகிறசொற்கங்களைப் பெறலாமென்பதென்றறிக.

௫௫. எட்டாமறையேதருவேழ்விக
டட்டாநூல்வழிசெய்திடுந்தன்மையினு
லொட்டாதானவைசொற்கமுறுமெனப்
பட்டாசாரியனேபகராவிடும்.

இந்தவேதமில்லாதபோது மூங்கைபோலுங் குழவிபோலுமிருந்து மோட்சங்களையறியாமற் செனனமரணப்படுவாரென்றறிக. இதின்சங்க்ஷேபம் வேதமுமநாதி அணுக்கள்ளாகிற பூதமுதலுலகங்களுமநாதி உயிர்களுமநாதியிந்த மூன்றுஞ் சுயம்புவாய்க் கெடாம லிருக்கையால் இது பேதசித்தாந்தமென்றறிக. இவர்களாத்மாவைச் சுத்தப்பிரமாண ஞானசமேத னென்பர். இந்தச்சாஸ்திரஞ் சைமினிகற்பிதமென்றறிக. இதில் முன்சொன்ன பஞ்சவிதசாத்திரத்தில் (லௌகிகமாவது) தன்மந்திரிகற்பிதமான ஆயுள்வேத தண்டநீதி திஷ்டிபலன் களைச்சொல்லும் (இனி வைதிகமாவது) ஜெயமுனி அக்ஷபாதர் கணநாதரால் சொன்னபூர்வ மீமாங்கிசை நியாய வைசேஷிக முதலியவற்றைச்சொல்லும் இனி (ஆத்தியாத்மீகமாவது) கபிலர் பதஞ்சலர் வியாசர் இந்தமூவராலே சாங்கியபாதஞ்சல வேதாந்தமாகிற ஆத்மஞானத்தைச்சொல்லும் இனி (யதிமாற்கீகமாவது) மாயாதத்துவ வித்தியாதத்துவத்திலேயிருக்கிற மூன்றுருத்திரரால் பாசுபத காபாலிக மகாவிரதமுதலியவற்றைச்சொல்லும் இனி (மாந்திரிகமாவது) பரசிவகற்பிதமான மந்திரங்களே மோட்சமாகிற சரியைகிரியை யோகங்களைச்சொல்லும் இப்படி யிந்த ஐந்துவிதசாத்திரத்தில் வந்தபேதங்களென்றறிக. இனி முன்சொன்ன சுத்தப்பிரமவாதிக்கு மிவனுக்கும் பேத மென்னெனில் அவன் தொனிக்கிறசத்தமே பிரமம் இதில் அர்த்தமாகிறபொருள் நாசமாய்ச் சத்தங் கெடாதென்றுசொன்னதற்கும். இவன் வேதமும் பூதமுஞ் சீவனு மிந்தமூன்றுமநாதி நித்தமென்கைக்கும் பேதமுண்டென்றறிக.



௧௯-வது— அத்தியாயம்.

## பிரபாகரமதம்.

வேதம்பிரமம் வினையாற்சீவ னுதலழிதலாம் பிரபாகரமே.

பட்டாசாரியனிற் பேதமான பிரபாகரமதத்தின் சொரூபநிலையாவது இவனும்வேதமே பிரமமென்பான். இனி(நடத்தமாவது) சீவராசிகள்செய்ய ப்பட்ட செயலின்கன்மங்கள் விரிகின்றது.

௫௬. அருஞ்செயலின்பாவத்தே பூர்வமெனும்வினைதோன்றித்
தருஞ்செயலினின்றழியிற்றுன்பலிப்பதாகுமது
வருஞ்செயலொன்றின்றியே மண்சிலைபோலாமுத்தி
தருஞ்செயலுமெனவுரைத்துத் தாரணிமேலவன்சாற்றும்.

என்றது அரிதாகச்செய்கிறசெயலின்பாவத்தால் பூர்வமாகவிருக்கிறக ன்மந் தோன்றிச் சகலபுசிப்பும் புசித்து தொன்றுதொட்டுச் சென்னமரண ங்களெடுத்துப் புசிக்கும்போதெல்லாஞ் செய்யப்பட்டவினைகள் மீண்டும் எருத்தழைப்போலச் சீவனுக்குப்பலித்து வருவதே நடத்தலட்சணமாம். இனிப் (பந்தமாவது) சீவராசிகள் வேதஞ்சொன்ன கன்மங்களைச் செய்து அதனால்கன்மங்கட்டுப்படுவது. இனி(முத்தியாவது) முன்சொன்ன வேதப் பிரமாணமானகன்மகாண்டத்தின் செயலொழிந்து ஈஸ்வரதத்துவத்துக்கன் னியமாய் ஆத்மஞானமாத்திரமேயாய் சுதப்பிரமாண ஞானசமேதனுயிருக் கிற ஆத்மாவானவன் விஷயஞானங்கெட்டு மண்சிலைபோல் சமாதியில் பொருந்தியிருப்பது முத்திநிலை இதுவுஞ் சைமினிகற்பிதமென்றறிக. இனி முன்சொன்ன பாட்டனுக்கு மிவனுக்கும் பேதமென்னெனில் அவன்வே தங்களால் சொர்க்கப் பிராப்தியடைவதே மோட்சமென்றுசொல்ல இவன்ச மாதியில்மண்சிலைபோலிருக்கவேண்டு மென்கையால்பேதமுண்டென்றறிக.

௫௭. சிலையெனமன்னெனச் செப்பவொப்பமே
தலைதருகரணமைம் தடக்கிமுத்தியாம்
நிலைபிரபாகரனின்றுசெப்பலா
லலையதிகாரம்வி டன்றுமாயையாம்.



௨0-வது—அத்தியாயம்.

## ஆறந்தபேதம்.

ஆறந்தமாவததுவதின்முடிவிற்றேறாந்தமானதெளிவுரைப்பதுவே

இதில் நாதாந்தமாவது.

௫௮. மேவும்பிரமனே விண்டுவுருத்திரன்
மேவுமெய்யீசன் சதாசிவன்மிக்கப்பால்

மேவும்பரவிந்து நாதம்விடவுரு
வோவும்பொழுதனுவொன்றுள்ளதாகுமே.

என்று பிரமாமுதற் பஞ்சகர்த்தாக்களுக்குமேல் அகார உகார மகார விந்து நாதம் இந்தநாதத்துக்கு மேலாத்மா இந்தவாத்மாவே நாதத்துக்கு அந்தமானவாத்மா இது ஆத்ம தெரிசனமாம். இதுவேயல்லாமல் அப்பால் வேறொன்றுமில்லையென்று நிச்சயிப்பதுநாதாந்த மென்றறிக.

இனிச்சித்தாந்தமாவது.

ருகூ. நித்தபரனோடுயிருற்று நீண்மனஞ்
சத்தமுதலைந்துந் தத்துவத்தானீங்கிச்
சுத்தமசுத்தந்தொடராவகைநினோந்
தத்தன்பரன்பாலடைதல்சித்தாந்தமே.

கூ0. உடலானவைந்து மோராறுமைந்து
மடலானமாமாயை கூட்டத்துநீவப்
படலானகேவல பாசந்துடைந்திட்
டிடலாந்தனையுன்னல்சித்தாந்தமாமே.

கூக. நோாமலவகை நீடுமவத்தையி
னோரானவாறுன்னி நீடுனனவினி
னோராமலமைந்து நேரோதெரிசித்து
நேராம்பரத்துட னிற்பதுசித்தமே.

என்றது முன்சொன்னநாதாந்தந் தீர்வானவாத்மாவைக் கூட்டிக்கொண்டு இந்தவாத்மா நியதியால், ஆத்மதத்துவம்-உரு- காலதத்துவம்- கூ- சிவதத்துவம்- ரு- ஆ- தத்துவம்- கூகூ- இந்த மூன்றுவித தத்துவத்தையுமுண்டாக்கின மூன்று விதமாயையும் நீங்கினவிடத்தி லுண்டான கேவலமாகிற ஆணவமும் நீங்கி இது நீங்கும்போது சுத்தாவத்தையாகிற நின்மலாவத்தை- ரு- ல்- ரு- மலமும் போக்கித் தான் சுத்தனுய்த் தன்னையுந் தெரிசித்துப் பரதெரிசனமு மனுபவித்துப் பரனுகிற பதியோடேகூடிக் கலந்து நிற்கும். ஆகையால் சீவாத்மா பரமாத்மா பாசம் இந்த மூன்றிற்பாசத்தை நீங்கிப் பசுவான வாத்மா பரனுகிறபதியோடு கூடி நிற்பது சைவசித்தாந்தமென்றறிக.

இனிப் போதாந்தமாவது.

கூஉ. உள்ளுயிராறுற தாகுமுபாதியைத்
தெள்ளியகன்றுநா தாந்தத்தைச்செற்றுமே
லுள்ளவிருணீங்கவோருணர்வாகுமே.
லெள்ளவில்போதாந்தத்தெய்திடும்போதமே.

௩௩. வேதாந்தந்தன்னிலுபாதிமேலேழ்விட
நாதாந்தபாசம் விடுநல்லதொம்பத
மீதாந்தகாரணோபாதியேழ்மெய்ப்பரன்
போதாந்ததற்பத மயிக்கியமாமே.

என்றது- உள்ளான வுயிர்க்கு உபாதியான- ௯௬- தத்துவந் தெளி ய நீங்கி நாதாந்தமாகிற ஆத்ம தெரிசனத்தினால் இருளாகிறமலம் நீங்கின ஆத்மாவையும், பனையாகிற பரனையுமொன்றாய்க் கூட்டுவது. இனிவேதாந்த த்திற் காரியோபாதியேழும் நீங்கினவிடத்தில் நாதாந்த பாசமாகிற சீவோ பாதி நீங்கித் தொம்பதசுத்தியாய்ப் பின்பு காரணோபாதியும் நீங்கி பரமாத் ம தெரிசனமாய்த் தற்பதசுத்தியாய்ச் சீவாத்மா பரமாத்மபேதந் தோன் றாம லிரண்டற்றுநிற்பது போதாந்தமென்றறிக.

இனி யோகாந்தமாவது.

௩௪. தேடுமியம நியமாதிசென்றகன்
றூடுஞ்சமாதியிலுற்றுப் படர்சிவன்
பாடுறச்சீவன்பரமாகப்பற்றறக்
கூடுமுபசாந்தம்யோகாந்தக்கொள்கையே.

என்றது, இயம நியமாதியான அஷ்டாங்கயோகமுஞ் சாதகமாகச்செய் து யிதுகளைக் கடந்து நிலையான சமாதியிலுற்று தான் முன்கண்ட பரம சிவசொரூபத்திற் கலந்து இப்படிச் சமாதியானால் உபசாந்தங்கை கூடி ச் செகசீவபர மூன்றுமொன்றாகி அசிபத சுத்தியா யகண்டார்த்தவயிக் கியமானது யோகாந்தமென்றறிக.

இனிக் காலாந்தமாவது.

௩௫. கொள்கையிலான கலாந்தங்குறிக்கொள்ளில்
விள்கையிலான நிவிர்த்தாதிமேதாதிக்
குள்ளனவாம்விந்து வுள்ளேயொடுங்கலுந்
தெள்ளியதனைத் தெளிதலுமாமே.

௩௩. தெளியுமிவையன்றித் தேசாங்கலைவே
றொளியுளமைத்துள்ள தோரவல்லார்கட்
களியவனாகிய மந்திரதந்திரத்
தெளிவுபதேசஞா னத்தொடைந்தாமே.

என்றது முன்சொன்ன அகண்டார்த்தத்தில் நிற்கையினால் தான்க ண்டுவந்த சீவபர சிவசம்பந்த மெல்லாஞ் சத்தியாகையால் இந்தச் சத்தி சித்தினுடைய சிற்கிரணமாகையால் இந்தச் சிற்கிரண சிற்சத்தியானது ம காமாயையோடு கூடி யுறைந்தபோது கலைகளுண்டாம். இந்தக் கொள்கை யில்லாத காலாந்தத்தைக்குறிக்கொள்ளில் மனதுவிடுகிற மனோலயத்தில் நி

வர்த்தியாதிகலைகள் மேதாதிஞானமாவதற்கு உள்ளதான சிற்சத்தியாகிற விந்துவில் ஒடுங்கையால் தெளிவாய் அதனைத் தெளியக்கண்டு அதில் உண்டாகிற ஒளியில் கூடிச் சிற்கிரணங்களை யனுபவிக்கும்போது மந்திரதந்திரத் தெளிவுபதேசம் நானமென்கிற தந்திரம் ஐந்துவிதமாம். இந்தவைந்து விதத்திலும் பிரகாசமாகிற சுகசத்தியான ஆனந்தத்தில் அழுந்தி ஆனந்தத்துக்குமுதலான சித்து சொரூபமாய் நிற்பதென்றும், இது மௌன நிஷ்டையில் அடங்குமென்றறிக.

இனி வேதாந்தம்.

கூஎ. தானானவேதாந்தந் தானென்னுஞ்சித்தாந்த
மானாத்துரியத்தனுவன் றனைக்கண்டு
தேனார்பராபரஞ்சேர்சிவயோகமா
யானமலமற் றருஞ்சித்தியாதலே.

என்றது வேதாந்தமாவது தானே யெல்லாங்கண்டுபோய்த்தானே சத்துச்சித்து ஆனந்த மூன்றையுங் கொண்டுநின்ற முதலாய் நீலோற்பல இ[illegible] நின்றதென்றும், இனிச் சித்தாந்தமாவது தானொருவன் வேறுன்டென்றும், இனித் துரியனைக்கண்டு பரம் பராபரஞ் சேர்ந்தது சிவோகமாம், இது ஞாதுரு ஞானஞேய மௌனமெல்லாந் தானாகிவிளங்கி மலங்களெல்லாம் நீங்கினது வேதாந்த மென்றும், சச்சிதானந்தத்தைக் கொண்டு நின்ற முதலென்றும், சாம்பவி கேசரி ஞானமௌனமெல்லாந் தானாகிநான்குமுத்திரையுந் தன்னிலடங்குமென்றறிக.

இனி வேதாந்தசித்தாந்தமாவது.

கூஅ. உயிரைப்பரனை யுயர்சிவனறன்னை
யயர்வற்றறிதொந்தத்தசியதனும்
செயலற்றறிவாகியுஞ் சென்றடங்கி
யயர்வற்றவேதாந்த சித்தாந்தமாமே.

கூகூ. சிவனைப்பரமனுட் சீவனுட்காட்டு
மவமற்றவேதாந்த சித்தாந்தமானால்
நவமுற்றவத்தையில் ஞானஞ்சிவமாந்
தவமிக்குணர்ந்தவர் தத்துவத்தோரே.

என்றது உயிரைப் பரனைச் சிவனை யிந்தமூன்றையு மயர்வில்லாமற் கண்டு தேர்ந்தசியால் நிச்சயஞ்செய்து எல்லாச்செயலு மற்று நீலோற்பலமானது மணம் சோபை நிறம் மெருகு இந்த நாலுங்கெடாமற்கொண்டு நின்று நீலோற்பலமென்றது போல சீவ ஈஸ்வரகூடஸ்தப்பிரமமானசித்தையுஞ் சத்தையுங் கொண்டு நின்ற முதலென்றும், இரண்டாமந்திரத்தில் ந

வாக்கத்தையில் நின்றஞானமே சிவமென்றுசொல்லுகையால் ஒன்பது துரிய ஞகிற ஒன்பதவத்தையும் உற்றுநின்ற ஞானஞ் சிவமென்றதென்றறிக.

இனிச் சித்தாந்தவேகாந்தம்.

எ௰. சித்தாந்தத்தேசீவன் முத்திசித்தித்தலாற்
சித்தாந்தத்தேநிற்போர்முத்திசித்தித்தவர்
சித்தாந்தவேதாந்தஞ் செம்பொருளாதலாற்
சித்தாந்தவேதாந்தங் காட்டுஞ்சிவனையே.

என்றது சித்தாந்தத்தில் சிவன் எடுத்த சென்மத்தில் மோட்சஞ் சித்திப்பிக்கையால் சித்தாந்தத்தில் நின்றபேர் முத்தி சித்தித்தவர் இது செம்பொருளாதலாற் சிவனைக்காட்டு மென்றறிக.

எக. வேதாந்தஞ்சித்தாந்தம்வேறிலாமுத்திரை
போதாந்தஞானம் போகாந்தம்பொதுஞேய
நாதாந்தமானந்தஞ் சீரோதயமாகு
மூதாந்தமுத்திரை மோனத்துமூழ்கவே.

எஉ. ஆறந்தமுன்சென்றடங்கு மந்நேயத்தே
யாறந்தஞேயமடங்கிடுஞாதுரு
கூறியஞானக்குறியுடன்வீடவே
தேறியமோனஞ்சிவானந்தவுண்மையே.



உக-வது—அத்தியாயம்.

## புராணிகன்மதம்.

அண்டபிண்டங்களு மாந்தொழில்விதங்களும்
பண்டையதாகப் பயிற்றும்புராணமே.

சொரூபமாவது மும்மூர்த்திகள்முதலான எழுவகைத்தோற்றங்கள் பிண்டப்பிரமாண்டங்க ளிதுமுதலாக விரிவான வெல்லாவற்றையு மறிவித்துத்தான்கெடாமலிருக்கையால் புராணங்களே பிரமமென்றறிக. இனி தடத்தலட்சணமாவது புராணம்-௧௮-உபபுராணம்-௧௮-தர்மசாத்திரம்-௧௧-ஸ்மிருதியிதிகாச பாரத விராமாயணம் ஆபஸ்தம்பாயனங் காத்தியாயனம் போதாயனம் பாஷியங்கள் இதுமுதலாக காட கரலங்காரப் பிரபந்தகாவியங்கள் இப்படி யனந்தவிதநூல்களாகவிரிந்திருக்கும் இதுகளெதைச் சொல்லுமென்னில் வைதிககர்மங்கள் சாங்கிய பாதஞ்சல பாஞ்சராத்திர பாசுபத சைவ மிதுமுதலானமதமு மதின்விதங்களு மும்மூர்த்திகள் சரித்திரங்களும் அவர்

தொழில்களும் அவர்சாகசங்களும் அவர்க ளொருவருக் கொருவருண்டாம் ஈனுதிகங்களும் அவரவர் தானவைபவங்களும் அதிலே யடைகிறபே ரிருக்கிற போகசவுக்கியங்களும் கொலுவுகள் இருஷிகள் முனிகள் பிறப்புகள் அவர்தபோவனங்கள் அவர்தபோமுக்கியங்கள் வயிராக்கியங்கள் அவரவர்பெறுகிறவரங்கள் அவரவர் பலாபலன்கள் ஆயுள்கள் சாபானுக்கிரக சாமார்த்தியங்கள் தபோபிரஷ்டத்துவங்கள் காசிபர் முதலான நவப்பிரசாபதிகள் சிருஷ்டியும் சந்தசு முதல் அங்கமாறின் விரிவுகளும் உபவேதநாலின் அர்த்தங்களும் முதல்வேத நாலின் அர்த்தங்களும் கேசகரண கோகரணலாகு நோக்கு அஸ்தலாகு டொம்பரவித்தையுஞ் சவுனவித்தையுஞ் சோராதிசூதங்களும் அஸ்வவித்தை ஜகவித்தைதவில்வித்தைஅஸ்வப்பிரயோகம் பாணவித்தையுஞ் சகுனங்களும் மணிமந்திர அவிழ்தங்களுஞ் சக்கரபேதமும் யந்திரபேதமும் தந்திரங்களுஞ் சொல்லிக் கடையில் நிசமோட்சமும் அவர்மகிமைகள் இராட்சதர் தபசுகள் அவர்வரங்கள் அவர் அயிஸ்வரியங்கள்அவர் தேவர்களைச்சிறைச்சூறைபிடித்து உபத்திரவஞ்,செய்ததும் தேவர்கள் பலத்து இராட்சதரைச்சிறைச்சூறை பிடித்துக்கொன்றதும்ஒருவர்க்கொருவர்வஞ்சனைகளுஞ்சூதங்களும் பிண்டப்பிரமாண்ட புவனபோகங்களுண்டானதும் அதினுடைய லட்சணங்களும் ஒரு அண்டலட்சணம் நூறுகோடியுயரமும் நூறுகோடியகலமும்இதிலடங்கின லோகங்கள் இதில் தீவுகள் இதில் மகாமேருமுதலான பருவதங்கள் நதிகள் இந்தத்தீவுகளாண்ட சக்கரவர்த்தி கள் மனுமாந்தாதிகள் தீவிலுள்ளபேர் ஆசாரங்கள் வயதுகள் அந்த அண்டங்களைப்போல் பத்துபங்கதிகமாக அனேககோடி அண்டங்கள் நவக்கிரக நக்ஷத்திரந் திதி வாரம் கரணம் யோகம் மாதம் வருஷம் அயனம் ருது காலங்கள் நெய்தல் முல்லை வனங்கள் பருவதங்கள் தீர்த்த மூர்த்தி முக்கியங்கள் ஸ்தலமகிமைகள் சந்திர சூரியகதிகள் நக்ஷத்திர கதிகள் இராசிகதிகள் பிண்டோற்பத்தி பிண்டகோசலட்சணம் நால்வகையோனி எழுவகைத்தோற்றம் - அம்சாத - யோனிபேதங்கள் தத்துவபேதங்கள் உபதேசபேதங்கள் சன்மார்க்கம் அசன்மார்க்கம் புண்ணியம் பாவம் பலாபலன் செப தப தியான யோக சமாதி அஷ்டாங்கயோகம் அணிமாதிசித்தி அஷ்டஅயிஸ்வரியம் அனேகவிதயோகம் அதின்பலன் அதுசெய்கிற தந்திரம் எக்ஞாதிகன்மம் அதற்கேற்ற உபவாசங்களு முபவாசபலன்களும் மகாநவமிதீபாவளி யுகாதி விநாயகசவுத்தி அனந்தவிரதம் கேதாரிவிரதம் கோகுலாஷ்டமி நாகல்சவுத்தி மாதசங்கிராந்தி வருஷசங்கிராந்தி வரலட்சுமிநோன்பு ஆடிகார்த்திகை சங்கிராந்தி அயனகாலங் கிரகணகாலம் இதுகளைக்கெடுத்தஅபலன்களும் தீர்த்தவிசேஷந் தீர்த்தயாத்திரை விசேஷம் ஸ்தானவிசேஷஞ் சாந்திராயண கிரசிராயண பிரதோஷம் அஷ்டமி ஏகாதசி துவாதசி சிவராத்திரி சோமவாரமுதலான ஏழுவாரம் இதின்பலன்களும் இருமுதலான புண்ணியகால பண்டிகை விசிஷ்டங்களும் இதின்பலன்களும் மாகசினுன

பலன்களும் சூரியபூசை துர்க்கிபூசை விநாயகபூசை கந்தன் வீரபத்திரன்பிர்மா விஷ்ணு ருத்திரன் பூசாபலன்களும் பெலிகளுந் தேர் திருநாள்களும் கலியாணங்கள் சோபனங்களும் நவக்கிரகபூசை நவக்கிரகசாந்தி பிராயச்சித்தங்கள் உச்சாடன மோகன ஸ்தம்பன வசிய ஆக்ருஷ்ண வித்துவேஷண மாரணத் துவேஷங்களும் இதின் தந்திரங்களும் அஸ்தப் பிரயோகங்களும் அதின்மந்திரங்களுஞ் சத்தகோடி மந்திரங்களும் மந்திரபுனற் சரணைகளும் விபூதி ருத்திராட்ச பஞ்சாட்சரமகிமைகளும் விஷ்ணுமந்திரங்களும் காயத்திரி சாவித்திரிபலன்களும் மந்திரவாத விரஸவாது தந்திரவாத யந்திரவாத விஷவாத மருத்துவாத பூதாவேச சக்கரதந்திரசித்திகளும்-கூ௰௪- சித்திவிதங்களும் இராசவசிய முகவசிய செனவசிய ஸ்திரிவசிய மிருகவசியபூதப்பிரேதவசியங்களும்நரகமும் அதின்வாதனையும்யமதண்டனையுஞ் சொற்கபோகமும்சொற்கசவுக்கியமுஞ் சற்குரு அசற்குரு சற்சீஷன் அசற்சீஷன் உபதேசவிதங்களும் வர்ணச்சிரமமும் அதிவர்ணச்சிரமமும் அதிவர்ணச்சிரமநடக்கையும் ஆசிரமங்களும் ஆசிரமநடக்கையும் அவர்பெருமையும் யதீஸ்வரர்பூசையும் அவர்பெருமையுஞ் சித்திரகுத்தன் யமராசனியல்பும் பிண்டீகரணம் பெலிகரணங்களுஞ் சமாதியுந் தகனமும் பதிவிரதையியல்பும் விபசாரியியல்பும் பிதுர்கன்மங்களும் பிதுர்ப்பிரிதிபூசைகளுங் குண்டக கோளக அனுலோம பிரதிலோமகெடிகவிடல இதுமுதலான சங்கரசாதிகளுஞ் சாதியீனதிக்கமுஞ்சாலோகாதிபதங்களும்பலசமயமும்அதின்கெதிகளும் பலவிரதமு மனுமாந்தாதி சக்கிரவர்த்திகள் சரித்திரமும் மணிமந்திர சற்கப் பிரதிசற்க வங்கிசானுசரித்திரமும் இதுமுதலாக அனந்தவிதங்களாய்ப் புராணங்கள் விரிவாகையால் நடத்தலட்சணமென்றறிக. இனி ( பெத்தநிலையாவது ) இந்தபுராணங்கள் சொல்லுகிறபடிக்கு நடவாமல் இதின் ஆக்ஞைதப்பி நடப்பதே பந்தமானதென்றறிக. இனி (முத்திநிலையாவது) இந்தபுராணங்களாலே யிகலோக பரலோகங்களை யறிந்துகற்றுங்கேட்டுந் தப்பாமல் நடக்கிறதே மோட்சமென்றறிக. இது சங்க்ஷேபமாகச் சொன்னது இந்தபுராணங்கள் வியாசர்கற்பிதம் இனி முன்சொன்ன ஆறந்தத்துக்கு மிவனுக்கும் பேதமென்னெனில் அவன் அந்தமுடிவிலே நிசமோட்சஞ் சொல்லில் இவன் புராணங்களைக்கேட்டு மும்மூர்த்திகள் பதமடைதலேமோட்சமென்கையாற் பேதமுண்டென்றறிக.

உஉ-வது—அத்தியாயம்.

## பாஞ்சராத்திரமதம்.

தேசவிதவைஷ்ணவர் தெய்வமொன்றுமவன்.

புசபலன்புகழும் போதகஞ்சொல்வது.

சொரூபநிலையாவது, ஆதியாயருவமாகி யகண்டபூரணனாய் ஞானச்சாதியாய்நின்றமாயன்னென, உலகசிருஷ்டி விநோதார்த்தமாகமூலப்பிரகிர்தி

யாகிறமாயையோடுங்கூடிச், சகுணமாய்ப் பரந்தாமனென்றும் ஆதிமூலமெ
னிறும் பரவாசுதேவனென்றும் ஆதிவிஷ்ணுவென்றும் பெயராம். இந்தப்
பரசுதேவர் பிருதிவியாதி மனமீறாக - உ௰௪ - தத்துவத்தின்மேல் குண
தத்துவாத்மீக வாசுதேவராய் நித்த புத்த சுத்த முத்தராய் அனந்தகலியா
ண குணமுடையராய் அனந்தானந்தகளாப்பிரசன்னமுடையராய்ச் சங்கு
சக்கரதாரியாய் லட்சுமியையுத்தனாய்ச் சகுணப்பிரதிவிம்பமாய் அஷ்டகுண
ணந்தனாய் சத்திபலவயிஸ்வரிய தேஜோவீர்ய வைஷ்ணவஷ்டகுண சகித
னாய் அந்தரதாமச பஞ்சாத்மீக நீலவர்ன சர்வசோபிதராய்ச் சர்வாலங்கா
ரத்துடன் ஞானசத்தி இருக்குமாங்கதர் சங்கருஷ்ணர் பிரத்தியும்மின் அ
னுருத்தர் புடைசூழ மச்ச கூர்ம வராக வாமன நாரசிங்க பிறசுராம ரகு
ராமபலராம கிருஷ்ணகலிகி யிப்படித் தசாவதார யுக்தனாய் அனிருத்தனாய்
இருக்குமாங்கத பிரகலாத நாரத பராசர புண்டரீக வியாச அம்பரீஷ சு
க சௌனக பீஷ்ம தாலப்பிய அர்ச்சுன வசிஷ்ட பலி விபீஷண கசேந்
திர அக்குரூர முசுகுந்த குசல ஞான உத்தவ துருவ முதலாகிய பரம
பாகவதர்கள் சேவிக்க வைகுந்தத்தில் ஆதிமூலமாயிருப்பர். இது சொரூபம்.

இனி (தடத்தமாவது) கர்த்தமரிஷி பெண்சாதி தேவஹூதி யென்பவள்
யிற்றில் விஷ்ணுவானவர் அவதாரஞ்செய்தார் கபிலமகாரிஷியாய் அவரை
தேவஹூதி யென்கிற தாயானவள் தன்குமாரனாகிய கபிலனைநோக்கி இவ்வுல
கச்சிருஷ்டிக்கிரமங்களை யெனக்குச்சொல்லவேண்டு மென்றுகேட்கத்தாயா
ருக்குச்சொல்வது பாகவதத்திலிரண்டா மாசுவாசத்திலென்றறிக. இனிதேவ
ஹூதி ஆத்மசொரூப மாவதெதுவெனக்கேட்க அநாதிபுருஷனாய்சத்துவாதிகு
ணசூனியனாய்பிரகிர்தி விலக்ஷணனாய்பிரத்தியேக சொரூபனாய்சுயம்பிரகாச
னாய்பிரபஞ்சத்துக் காதாரபூதனாய் சர்வசலட்சணனாய் இருக்கிறவனென்றும்
நாம் நம்முடையசத்திக்ஷேபமாகிற சூட்சும குணத்திரயத்தால் பிரகிர்தியி
லேவிலாசார்த்தமாய்ப் பிரவேசித்துப்புகுந்தபோது அந்தப்பிரகிர்தியுங் குண
த்திரய மயமாய் தன்ரூபமான செகத்தையுண்டாக்கினது அப்போது ஆத்
மாவானவ னதைப்பார்த்து மோகிதனாய் அஞ்ஞானமூடப்பட்டு அநாதியா
ன பிரகிர்திகுணந் தன்னிடமாக ஆரோபிதமாயிற்று. கிரியாசொரூபமான
மனோகாரியத்தினா லஞ்ஞானகத்துருத்துவ முண்டாகிச் சம்சாரபந்தனாய்
பரதந்திரனாயிருப்பன் இந்த வாத்மா பிரகிர்தியாதீனமென்றறிக. இனி (சு
கதுக்க போக்துருத்துவம்) பிரகிர்தி முதலானவெல்லாமவற்றிற்கும் விலட்
சணனாய் கத்துருத்துவ சூனியமான ஈஸ்வரன் சாட்சிமாத்திர மென்றறிக.

இப்படி சொல்லக்கேட்ட தேவஹூதி கபிலரைப்பார்த்துக் கேழ்க்கின்
றாள் பிரகிர்தி புருஷார்த்தமான ஆத்மாவுக்கு காரணமாகையால் இந்தப்
பிரகிர்தி ஆத்மலட்சண மெனக்குத்தெரியவில்லை விளங்கச்சொல்ல வேண்
டுமென்று கேட்க, கபிலர்சொல்லுவார் கிரமத்தில் முக்குணம் பிரகிர்தி
அவ்வியத்தம் நித்தியமாய் சத்துமாயிருக்கும் இந்த அசுத்தோடு கூடின

வாத்மா பிரதானமும் முன்சொன்ன குணம் பிரகிர்தியே சிரேஷ்டமென்றுஞ் சொல்லுமாகையால் இந்தப் பிரகிர்தியே - உச - தத்துவமாயிற்று அஃதெப்படியென்னில் பஞ்சமகாபூதமும் பஞ்சதன்மாத்திரையான சத்தாதியும் ஞானேந்திரியமான சுரோத்திராதியுங் கன்மேந்திரியமான வாக்காதியும் அந்தக்கரண நான்கும் ஆ - உச - தத்துவமாயிற்று. இந்த உச - தத்துவங் கூடினது மானதப்பிரம ஸமஸ்தானஞ் சொன்னோம் கால புருஷன் - உரு - தத்துவ மென்றாயிற்று. சிலர் புருஷ சத்தவாசியான ஈஸ்வரனை பௌஷியகால சத்தத்தினால் சொல்லப்படும். இனிச் சிவனை அகங்கார மோகிதனாய் பிரகிர்தி குணத்தோடு பிறப்பித்துப் பகவான் சேஷாவிசேஷத்தினால் காலமென்றுஞ்சொல்லலாம். இதனை அந்தரங்கத்தில் புருஷனென்றும் பாயரங்கத்தில் காலமென்றும் பெயராமென்றறிக.

இனி முன்சொன்னதத்துவ உற்பலபேதம், ஆத்மா மாயையானதத்துவத்தில் அந்தர்கேதமான ஈஸ்வரன் சிவனால் சங்குசிதமான பிரகிர்தியில் பரமபுருஷன்கூடிச் சித்பிரவர்த்த வீரியத்தினால் பிரகிர்தியில் இரண்ணியமயமான மகதத்துவமுண்டாயிற்று. அதன்பிறகு சகல பிரபஞ்ச காரணமான ஈஸ்வரன்தன்சூட்சுமவிக்கிரகத்தினால் மகதாதிபிரபஞ்சத்தைப்பார்த்துத் தன்சுயம்பிரகாசத்தினு லுண்டானதாகையால் அஃதே ஆத்மாவைப்பிரவர்த்திக்கிற கன்மச்செய்கையால்தமசாயிற்று. இனித் திவ்வியமானவாசுதேவன் யூகசதுஷ்டயம திரிலோகத்திலுஞ் சேவிக்கிறதென்று சொல்லலாம். எல்லாங்கடந்தது வாசுதேவயூகம் இதின் பிரம்ம மகதத்துவத்திலிருந்து கிரியாசத்திரூபமான அகங்காரமுண்டாயிற்று. இந்த அகங்காரத்தில் வைகாரிக தைசத தாமசமென்று மூன்றுங்கார முண்டாயிற்று. இதில் வைகாரிகத்தில் மனது ஞானேந்திரிய பஞ்சபூதமும் தைசதத்திற் புத்தியும் பிராணனு முண்டாயிற்று. தாமசாங்காரந் திரிகுண கூட்டத்தில்ஆதாரமாயிருக்கும் இந்த ஆங்காரத்தில் வைத்த ஸஹஸ்ரபணி மண்டலாபிராமனாகிற அனந்தன் சங்கருஷ்ண புருஷனுவான் இவன் இரண்டாம்யூகத்தில் புத்தேந்திரியமான சமனாய் கத்துருத்துவ காரியத்துவ காரணத்துவ சாந்தத்துவ கோரத்துவ மூடத்வாதி லட்சணலட்சித உல்லாசனாயிருக்கிற புருஷனால் இரண்டாவதான வைகாரிகத்தில் தமமுண்டாயிற்று. இதில் சாமான்னியசிந்தை விசேஷ சிந்தையி லுண்டான சங்கற்ப விகற்பமாகையா லிதிற் காமசம்பவனாகிற அனுருத்திர யூகமிருக்கும் இவன் தௌசினத்தில் புத்தியுண்டாயிற்று. தைசதாங்காரத்தில் ஞானேந்திரியங் கன்மேந்திரியங் கிரியாஞானசாதனமாயிருக்கும். இனிப் பிராணவாயுவால் கிரியாசத்தியும் புத்தியில் ஞானசத்தியுமுண்டாகி இந்திரியசாதனமாயிருக்கும்.

இனித் தாமசாங்காரத்தில் சத்த தன்மாத்திரையுண்டாகி யிதி லொன்றி லொன்று கலந்து பஞ்சபூதமுண்டாயிற்று. இதுவே பஞ்சீகரித்துத் தூலபூத முதலான தத்துவக்கூட்ட முண்டாதலால் இதிற் பிரத்தியும்மின்யூ

கம் மூன்றுவதென்றும். இப்படிப் பாகவதத்தில் சிருஷ்டிகள் நாலைந்து பேதமாய்ச் சொல்லியிருக்கும் அதுகளி லிங்கேகூறியது பிரதானசிருஷ்டியென்றறிக. இது நிற்க, ஆதிமூலமாகிற விஷ்ணு மெய்ஞ்ஞானாகாசததில் வந்தார் அவர்மனதில் அயன்வந்தாரென்றும், பின்புமாயாதிதனு யிருந்து மாயையினால் சுவேச்சாவினோத சிருஷ்டி யார்த்தமாகக் கிருபையினால் பால்சமுத்திரத்தில் சேஷசயனரா யிருந்து ஆகமங்களை யுண்டுபண்ணித்தனது நாபிகமலத்தில் பிரமாவையுண்டாக்கி அவனைச்சிருஷ்டி கர்த்தாவாக்கி யந்தப் பிரமாவினுடைய நெற்றியிலொரு வுருத்திரனையுண்டாக்கி அவனைச் சங்கார கர்த்தாவாக்கித் தான்திதி கர்த்தாவா யெல்லாவற்றிற்குமதிகார கர்த்தாவாய் முத்தொழிலு மும்மூர்த்தியுந் தானேயாய் மாயையாய் மாயாகாரியமுமா யுயிர்களுமா யுயிர்களுக்கு மாலையினால் பந்தமுஞ்செய்து அதனை விடுவித்து மாயையைப் போக்கி வைகுந்தத்தில் வைக்கிறவரா யிருப்பர் இவர் வைகுந்தத்தில் ஏகதேசமா யிருந்தும் பிண்டப் பிரமாண்டங்களுக்கெல்லாம் வியாபகராய்ச் சர்வம் விஷ்ணுமயஞ் செகத்தாயிருப்பர் இது தடத்தலட்சணமென்றறிக. இனிப் (பெத்தநிலை யாவது) சீவராசிகளும் பிரகிர்தியும் விஷ்ணுவைப்போல் அநுதியாய் சுயமாய் ஒருவரா லுண்டாக்கப்பட்டதல்லனவா யிருக்கும் இப்படி அநாதியாய் நாடிமத்திய கதனுய் அணுப்பிரமாணமான சீவராசிகளைக் கட்டுப்படுத்தி மாயாகன்மங்களால் செனனமரணப்பட்டுச் சொற்க நரகங்களை யனுபவித்துக்கொண்டு பிரகிர்தி மாயாகாரியத்தால் பகவானை யறியாமற் றிரிவது பெத்தநிலையென்றறிக.

இனி (முத்தியாவது) இந்தச் சீவனுக்கு முன் அனந்தகோடி செனமங்களினுலுஞ் செய்த சுகிர்தத்தால் பகவத்சொரூபமான சற்குருவையடைந்து பிரதானமான தத்துவம் - உ௪-ங் - தெளிந்து இதனைச் சடமென்று கழித்து இதில் ஸ்தூல சூட்சும காரணதேகமல்லவென்று போக்கி-உ௫-ஆவதாய் நின்ற ஆத்மாவை யறிந்து மூலப்பிரகிர்தி மகதத்துவம் அகங்காரமுங் காலபுருடனையும் போக்கி அப்பால் நின்ற பரமபுருஷனே ஆதிமூல பரவாசுதேவனென்று அனுபவத்திற்கண்டு சீவாத்மா பரமாத்ம வயிக்கியமாகி யிப்படி ஞானத்தினுல் அந்தரங்கத்திற்கண்டு பாயரங்கத்தில் எல்லாவற்றிற்குங் காரணமான பிரகிர்திக்குமேலாயிருப்பதே பிரதமவியூகம் பரவாசுதேவரோ பரமாத்மா, இரண்டாம்வியூகஞ் சீவனுகிற சங்கிருஷ்ணன், மூன்றாம்வியூக மனமேபிரத்தியும்மின், நான்காம்வியூக மகங்காரமே யனுருத்தன் இப்படிப் பிரகிர்தி சீவன் மனம் ஆங்காரம் இந்த நான்கு வியூகத்திலும் நான்கு சொரூபமாயிருக்கிற பரவாசுதேவர் சங்கிருஷ்ணன் பிரத்தியும்மின் அனுருத்தனென்று பெயராய்ச் சமனுக நால்வரு மிருப்பரென்றறிக. இவர்களை யந்தரங்கத்தில் கண்டும் பாயரங்கத்திலும் வைகுந்தத்திலும் இப்படி யிருப்பாரென்று சமாராதனைபண்ணியவுயிர்க ளிவர்க ளிடமாகப் பரமபதமெய்திக் கெடாதவியூகமாகிற இன்பத்தில் பொருந்தி அனேககாட்சென்றபிறகு அவ்

டநிக்கிரக சிஷ்டபரிபாலன நிமித்தமாய்த் தசாவதாரமெடுத்து மீண்டுந்தசாவதாரமெடுத்த அம்சம் பரவாசுதேவரிற்போய்க்கலக்கும், இப்படியாகிய பரத்தையடைவதே பரமபதமென்றறிக. இதல்லாமற் பாயரங்கத்தில் அவதாரவிக்கிரகங்களையாவது லட்சுமிசையுத்தனை ஆதிமூலத்தையாவது விக்கிரகமூலமாயாராதித்துச் சங்கு சக்கரத்தைத்தேகத்தில் பொருத்திக்கொண்டு கேசவனுமம்-௨௪-ம்-உச்சரித்து-௰௨-நாமமுந் தரித்துத்தான்வைஷ்ணவனாய்ப் பரம பாகவதர்க் கிச்சைசெய்து சங்கு சக்கரமே குறியாகக் கொண்டு கீழ்சாதி மேல்சாதி யென்னாமல் விஷ்ணுபத்தர்களுக்கெல்லாங் கயிங்கிரியஞ் செய்து நீறிடுகிறபேரைக்கண்டா லவர்களைச்சேராமல் மதுபான சுராபானம் மந்திரவசத்தாகக் கொண்டு தன்னைவிஷ்ணுவாகவும்ஸ்திரிகளை லட்சுமியாகவும் பாவித்து விஷயமும் பொருந்தி அஷ்டாக்ஷரியைச் செபித்துப் பாஷியக் காரர் முதலான பத்தர்களும் பொய்கையார் முதலான பன்னிரண்டாழ்வார் மகிமையும் அவர்கள்பாடலு முள்ளராய்ப் பரமபாகவதரை அடியேன்தாசனென்று வணங்கி யவர்களையு மாரா்தனைசெய்து அர்த்தப்பிராண அபிமானங்கள் தன்னதென்னமற் குருசேர்வையுஞ்செய்து முக்கியமான திருப்பதிகள் சேவித்துத் தீர்த்தமாடிக் குருவினுடைய விசேஷதீர்த்தப் பிரசாதமுங்கொண்டு மற்றொருதெய்வங்களை யாசிரியாமல் விஷ்ணுவே தெய்வமென்று கொண்டால் அநித்தியகாலத்தில் இவன் விமானரூடனாய் விரஜாநதியில் ஸ்நானஞ் செய்து பிரகிர்திதேகம் வெந்து சாம்பலாய்த் திவ்வியதேகமான அப்பிராகிர்ததேகத்தை யெடுத்துக் கொண்டு அப்பாலனேகஞ் சோதிப் பிரகாசங்களுங்கடந்து அப்பால் ஸ்ரீவைஷ்ணவர் புருஷாகாரத்தையடைந்து பின்பு அந்தப் புருஷாகாரத்தை உலகுடையானிடத்திற் சேர்க்க அதனைத்திருமகளிடத்திற் சேர்க்க அந்தப்புருஷாகாரத்தைவிஷ்ணு திருவடியிற் கூட்ட அப்போது விஷ்ணுவைப்போல் சங்குசக்கரதாரியாய்ப் பரமபதத்தில் அமர்ந்திருப்பது அமலமானமோட்சமென்றும், கைவல்லியமென்றுஞ் சொல்லுவார்கள்.

இனி முன்சொன்ன ஆதிமூலமான விஷ்ணு அவதாரங்களெடுத்துத்துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனஞ் செய்த மகிமையைச் சொல்லத்துடங்கில் சோமுகாசுரன் வேதத்தையெடுத்துக் கொண்டு சமுத்திரத்தில் விழுந்தானென்கிற முறையீடுகேட்டு மச்சாவதார மெடுத்துச் சமுத்திரத்திற் குதித்து அவன் வயிற்றைப்பீறிக் கொன்று, அவன் தின்று மீந்த ஏடுகளை எடுத்துவந்து வியாஸர்முதலான ரிஷிகளைக் கோவையிடச்சொல்லி யுலகத்தை ரட்சித்தானென்றும், இதல்லாமல் பிரமாபிறந்தபோது மதுகையிடவனென்கிற இராட்சதன்வேதங்களை யெடுத்துப்போக அப்போது பிரமாவந்து விஷ்ணுவை நமஸ்காரஞ்செய்து வேண்ட அவனைக்கொன்று வேதங்களைவாங்கிவந்து அயக்கிரீவவதாரமெடுத்துக் குருவாய்ப் போதித்தானென்று காருடபுராணத்திலே சொல்லுவதென்றும், சமுத்திர சஞ்சாரஞ்செய்யும்போது அந்தசமுத்திரக்கரையிலே சத்தியவிரதனென்கிற விராசாவும் ஏழுபிராமணருந் தபஞ்செய்துகொண்டிருக்க அவர்கள்முன்னே போய்நின்று இரா

சாவுக்கும்பிராமணருக்கும் ஞானசாங்கியம்போதித்து அதனாலே யிராசாங்கிச மோட்சம்பெற்று ஏழுபிராமணருஞ் சத்தரிஷிகளானாரென்றும், இனிக் கூர்மாவதார மெடுத்து மகமேருவின்கீழேபுகுந்து தாங்கிக்கொண்டு அண்டசராசரங்களையும் நிறுத்தினாரென்றும், இனி வராகவதார மெடுத்து இரணியாட்சன் பூமி யெல்லாவற்றையும்பாயாகச் சுருட்டிக்கொண்டு பாதாளத்திலே விழுந்தபோது அவனைக்கொன்று பூமியைக் கொம்பால்கிளப்பி யெடுத்துவைத்து உலகத்தை யிரட்சித்தாரென்றும், இனி நரசிங்காவதார மெடுத்து இரணியநமாவென்றுந் தானே செகத்துக்கெல்லாங் கர்த்தனென்றுந்தன்மகனான பிரகலாதனைச சொல்லச்சொல்ல அவன்விஷ்ணுவேதெய்வம் நீதெய்வமல்லவென்று விஷ்ணுவேநமவென்றுசொல்ல ஆனாலுன்தெய்வமெங்கே யிருக்குமென்னத் தூண்துரும்பு முதலெங்கும் பரிபூரணனாயிருப்பானென்ன ஆனால் தான் சாய்ந்துகொண் டிருக்கிற கற்றூணிலு மிருப்பானோவென்று தூணைக்காட்ட அந்தத்தூணிலிருந்துதோன்றி யிரணியன் முதலான சதுரங்கபலத்தையும் பஞ்சியில் நெருப்புப்பற்றினாற்போல் பற்றிக்கொண்டு இரணியனையும் வெகுவாகப் பங்கப்படுத்திக்கொன்று பிரகலாதனுக்கு மோட்சங்கொடுத்தாரென்றும்,

இனி வாமனவதார மெடுத்து மகாபெலியை மூன்றடி பூமி தானங் கேட்டுக் கீழ்மேலெல்லா மிரண்டுபாதத்திலே யடக்கிக்கொண்டு மற்றவோரடிக்காக அவனைச் சிறையிலே வைத்துப் பிர்மாதிகள் பயந்தீர்த்தாரென்றும், இனிப் பரசுராமாவதார மெடுத்துக் கார்த்திகைவீரியார்ச்சுனன் முதலான இராஜாக்களை யெல்லாங்கொன்று அவர்களுடைய இரத்தப்பிரவாகத்தில் திலதர்ப்பணஞ்செய்து தானே ராஜேந்திரனாயிருந்தாரென்றும், இனி இராமாவதாரமெடுத்து அந்த அவதாரத்தில் விஷ்ணு பாற்கடலிலே பள்ளி கொண்டிருக்கும்போது இராவண னுபத்திரவத்தாலே தேவர்கள் முறையிட அவர்களுக்கு நாம் தசரதகுமாரனாய்வந்து அவனைக் கொன்று உங்களுபத்திரவந் தீர்க்கின்றோம் நீங்கள் குரங்கு சேனையாய் வாருங்களென்று சொல்ல அப்படியே தசரதகுமாரனாய் வில்வித்தை முதலிய வெல்லாங்கற்றுப்பிறகு பூப்ரதட்சணமாகத் தீர்த்தயாத்திரையாடி வந்தவுடனே பதினைந்துவயதில் ஞானவயிராக்கியம் பிறந்து பொன் மண் பெண் மூன்றும் வெறுத்துநித்தியா நித்திய வஸ்து விவேகம்பிறந்து பேயன்போ லிருந்தகாலத்தில் விசுவாமித்திரன் தாடகி சம்மாரத்துக்காக வந்தழைக்க அதைக்கேட்டதசரதமகாராஜன்இராமனிளையவனாதலால்தாடகையைச்சம்மாரஞ் செய்யமாட்டான் இதன்றியுமவன்பயித்தியம் பிடித்தாற்போ லிருக்கின்றானென்ன அதைக்கேட்ட வசிஷ்டரும் விசுவாமித்திரரும் இராமரை யழைத்துக் கேட்கும்போது எனக்கு விராச்சியபார முதலான போகபோக்கிய மெல்லாம் வேண்டாம்செனன மரணமில்லாத பிரமஞ்ஞானம் போதித்தாற்போதியுங்கள் அல்லவென்றால் காட்டுக்குப்போகிறே னென்று சொன்னார் அதைக்கேட்ட வசிஷ்டருக்கும் விசுவாமித்திரருக்கும் மிகுந்த சந்தோஷமாய் பிர்மாபோதித்த அத்தியாத்மீக விஷயத்தை வசிஷ்டர் இராமருக்குப் போ

த்து முன்னே பிரமக்ஞானநிர்விகற்பசமாதி சாதிக்கச்செய்து மோட்சம டைந்த கதையாக நாற்பத்து நான்கு கதையை வாசிட்ட ராமாயணம் ஆறாயிரங் கிரந்தஞ்சொல்லி யவர்மனதைத் தெளிவித்து விசுவாமித்திரர் த ன்னுடன் அழைத்துப்போனார் அப்போது எக்ஞங்களை யழிக்கிற தாடகை யைசம்மாரஞ்செய்தும், அகலிகை சாபந்தீர்த்தும் பரசுராமனைச்செயித்தும் சீதாபிராட்டியை மணஞ்சூட்டியும் அயோத்தியில்பரதனை யிராச்சியபாரமா ளும்படியாகச்சொல்லிவிட்டுப்பதினான்குவருஷம் வனவாசஞ்செய்து இராட் சதருடைய வுபத்திரவம் பொறுக்காமல் தேவர்கள் முறையீடுக்காக விராவ ணசம்மாரஞ்செய்தும் பின்பு மயில்ராவணசம்மாரஞ்செய்தும் தேவர்சிறை யையும்சீதாபிராட்டிச்சிறையையு மீட்டுக்கொண்டு அயோத்திக்குப் போய் பட்டாபிஷேகங் கட்டிக்கொண்டு இராச்சியபரிபாலனஞ்செய்தாரென்றும்,

இனிப் பலபத்திரராமாவதாரமெடுத்துக் கலப்பையே யாயுதமாகப் பிடி த்துத் தேனுகாசுரன் முதலான அனேகரைக்கொன்றும், பௌத்தாவதார மெடுத்துத் திரிபுராதிகள் விரதங்களைக் கெடுத்து இலிங்கபூசைகளை விடுவி த்து அவர்கள் விரதங்கெட்டார்களென்று சிவனிடத்திற் சொல்லித் திரிபு ராதிகளைச் சிவன் கொல்லமாட்டாமல் வில்லைப்பிடித்தபடியே பிரமித்து எ ப்படிக் கொல்லுவோமென்று அழுதுகொண்டு நிற்க விஷ்ணுபோய் உன் னாலவர்க ளிறக்கமாட்டார்கள் நாமுனக்கு அம்பாகிறோம் நம்மை நாணிற்பூ ட்டிப் பிரயோகிக்கச் சொல்ல அப்போது பிரமதேவன் விஷ்ணுபஞ்சரத் தைச் சிவனுக் குபதேசஞ்செய்ய அந்த மந்திரத்தைச்செபித்துப் பரமாத் மாவான விஷ்ணுவைத் தியானஞ்செய்து அந்தவம்பை விட்டபடியால் சிவ ன் திரிபுரத்தையெரித்தாரென்றும் இதல்லாமல் (பாரதத்தில்) சகலதே வதைகளுந் திரிபுரசங்கார நிமித்தமாய்ச் சிவனுக்குத் தங்கள் சத்தியிலர்த் தபாகங்கொடுத்து நாங்க ளெல்லாரும் நீர் ஏறுகிற இரதமும்இரதத்துக்கேற் ற உபகரணமுமாகிறோம் நீர்திரிபுரத்தைச் செயிக்கவேண்டுமென்று சொல் லஅப்படியேயாகட்டுமென்று சிவன்சொல்ல அப்போது - அம்சாத - பசுவ ர்க்கத்தின் சத்திகளி லர்த்தபாகங்கொண்டு மூர்த்திகரிக்கையால் பசுபதியெ ன்கிற நாமங்கொடுக்கப்பட்டு விஷ்ணுவாதிகள் சகாயத்தால் திரிபுராதிகளை ச் செயித்தாரென்றும், இனிக் கிருஷ்ணாவதாரத்தில் வசுதேவன் தேவகிக்குப் பிறந்து சத்துருநிமித்தமாக யாதவர் வீட்டில் நந்தகோபனிடத்திலே வள ர்ந்து அவர்கள் வீட்டில் வெண்ணெய்தயிர்களைத் திருடித்தின்றதினால் யாத வஸ்திரீக ளுரலிலேகட்டித் தாம்பா லடிக்கையி லதைப்பொறுக்காமல் வா ய்திறந்தழும்போதவர்வயிற்றி லிருக்கிற அண்டங்களைக்கண்டு பயப்பட்டா ரென்றும்,

இனி இந்திரன்யாதவர்மேல் கோபமாய்ச் சத்தமேகங்களை வருஷி க்கச்சொல்லி யப்படியேவருஷிக்க யாதவர்முதலான ஆடுமாடுகள் சாகும் போது கோவர்த்தனகிரியை யொருவிரலிற்றாங்கி யாதவர்முதலானவர்களை யிரட்சித்தாரென்றும், பிரந்தாவனத்தில் முன் இராமாவதாரத்தில் - ஜகுத- ரிஷிக ளவரழகைக்கண்டுமயங்கி நாங்க ளும்மோடுகூடிச் சரசமாயிருக்கவே

ண்டுமென்றுசொல்ல அப்படியே எமது கிருஷ்ணாவதாரத்தில் நாமுங்களைக் கூடுகிறோம் நீங்கள் கோபஸ்திரீகளாய் வாருங்களென்று சொல்ல அந்த ௲௬-ஸ்திரீகளை நரகாசுரன் சிறையில் வைக்க அப்போது நரகாசுரனைக் கொன்று- ௲௬- ஸ்திரீகளைக்கூடும்போது- ௲௬ - கிருஷ்ணனாய் சொரூபங்கொண்டு மவர்கள்மோகம் நீங்கும்படி- ௬௪- கலையோடுங்கூடி யிருந்தாரொன்றும், பின்புகிருஷ்ணனுக்கு ஈஸ்வரிமதனகோபாலனாய்ப் பிறந்தாளென்றும் ஈஸ்வரன் எட்டுஸ்திரீகளாய்ப் பிறந்து கிருஷ்ணனுக்கு எட்டுஸ்திரீகளானதொன்றும், பூதகி தாய்ருபமாய்வந்து முலைகொடுக்கும்போது முலைப்பாலுடனேயவளைக்கொன்றும், சிசுபாலன் தந்தவக்கிரன் கஞ்சன் வற்சாசுரன் நரகாசுரன் முரகாசுரன் இவர்கள் முதலான வசுரரைக்கொன்றும், கஞ்சன் வாயலிலிருந்தயானை கிருஷ்ணனைக்கொல்லவர அந்தயானையைக்கொன்று உதிரத்தைச் சிந்துரத்திலதமாய் நுதலி விட்டாரொன்றும்,பாண்டவர்களைக் கொண்டு துரியோதனாதிகளைக் கொன்றதொன்றும், துரியோதனாதிகள் செய்த பொய்சிங்காசனத்திலிருந்து திரிவிக்ரமாவதாரம்போல வளர்ந்து படுகுழியி லிருந்தவரைக் காலினாற்கொன்றும், சகாதேவனுடனேயேகாந்தம்பேசின மண்டபத்தில்- ௲௬- தூணிலும்- ௲௬- உருவுகொண்டு சகாதேவன் உயிர்ப்பறிந்து பிடித்தாரொன்றும், கிருஷ்ணன் முழந்தாளை யர்ச்சுனன் பூசிக்க அந்தப்புஷ்பமெல்லாஞ் சிவன்திருமுடியிற் காட்டியும் கிருஷ்ணன் தர்ப்பணஞ்செய்ய அந்தசலத்தில் கந்தருவன் உமிழ்ந்தாரொன்று மவனைத்துரத்தும்போதவன்போயர்ச்சுனனை யடைக்கலம் புகுந்ததற்காக ஐவருங்கூடி கிருஷ்ணனோடுயுத்தஞ்செய்ய அவர்சக்கரப்பிரயோகஞ்செய்ய ஈஸ்வரன்வந்து கிருஷ்ணனை ஸ்தோத்திரஞ்செய்து வேண்டிக்கொண்டு அவர்களை விடுவித்தாரொன்றும்,

இனி வாணாசுரன்சிவனைநோக்கித் தவஞ்செய்து நித்தியத்துவம்பெற்று விஷ்ணு வாதிகள் தன்னோடு சரியாகாமலுமீஸ்வரனைத்தன்வாயற் காவலாளியாயிருக்க வரம்வாங்கிக்கொண் டொருவருமெதிரில்லாமலிருக்கிறநாளில் வாணாசுரன்தன்மக ளுசாதை யென்பவளுக்கு கிருஷ்ணனுடையபேரன் அநுருத்திரனைக் கணவனாக்கி வைத்ததற்காகக் கிருஷ்ணன் கோபித்தவன் மேலுத்தஞ்செய் தவனுடைய சிரங்களையுங் கைகளையு மறுக்கும்போது வாணாசுரன் சிவனைத் தோத்திரஞ்செய்யச் சிவன்வந்து கிருஷ்ணனோ டுத்தஞ்செய் தவரைச்செயிக்கமுடியாம லவரைவணங்கிவாணாசுரனை மீட்டுக்கொண்டு போனதொன்றும்,

இனி துரியோதனாதிகளிறந்து போர்க்களஞ்சோதிக்கும்போது காந்தாரி கிருஷ்ணனைப் பார்த்து நீயல்லவோ என்பிள்ளைகளெல்லாங் கொல்லச்செய்தாய் நீயுமுன்பிள்ளைகளு மிவ்வாறேசாகக்கடவதென்று சபித்தாளொன்றும், பின்பவதாரமுடிவில் விஸ்வாமித்திரன்துர்வாசன் பரத்துவாசன் மூவருமிடத்தில்கோபிகா குமாரர்களெல்லாங்கூடிச் சாம்பனுக்குநிறைகெர்ப்பம் போலவேடந்தரித்து இவளென்ன பிள்ளை பெறுவாளென்று கேட்க அவர்

களைப்பார்த்துக் கோபித்து உங்கள் வம்சமெல்லாமழிக்க வொரு இருப்புத்த ண்டு பிறக்குதென்றுசொல்ல அப்படியே யொரு இருப்புத்தண்டு பிறக்க அதை ராவிப்பொடியாக்கி ராவாமலிருந்த முனைத்துண்டும் சமுத்திரத்திற் போடுவித்தார் அதனை மக்ஷமெடுத்து விழுங்கிற்று ராவினபொடியெல்லாஞ் சம்பாய் முளைத்தது. இதுநிற்க இராமாவதார அந்தத்தில் அங்கதனையழை த்து நாமுன்தகப்பனைக்கொன்ற கோபமுனக்குத்தீரவில்லை யாதலால் நீவே டனுய்ப்பிறந்து நம்மை கிருஷ்ணவதாரத்தில் கொல்லென்று சொன்னபடி யா லப்படியே வேடனுய்வந்து மக்ஷம் விழுங்கின இரும்புமுனையைத் தன் னம்புக்குக்குப்பியாய்ச் செய்திருந்தான். கிருஷ்ணன் வைகுந்தம்போகவே ண்டித்தன்வம்சத்தோடு சமுத்திரக்கரையோரம்போகும்போது அந்தசம்பை க்கண்டு பிள்ளைகளெல்லாம் பிடுங்கி ஒருவரையொருவ ரடித்துக்கொண்டு ரிஷிகள்சாபத்தாலும் காந்தாரி சாபத்தாலு மிறந்து கிருஷ்ணனொருவனும் பிள்ளைகள் மாய்த்த துக்கத்தால் சாய்ந்துகொண்டிருக்க முன்புதுர்வாசர் பிரசாதங்காலில்தடவாதபடியால் சரையென்கிற விராக்ஷதிபூர்வ வயிரத்தா ல் கிருஷ்ணன்கால் மிருகாகாரமாய்க் காண்பிக்க வேடன் மிருகமென்று அம்பை யெய்தான் அப்போது கிருஷ்ணன் தேகம்விடுகிறசமையத்தில் பா ண்டவர்கள் துக்கிக்க அவர்கள் துக்கந்தீர்த்து நீங்கள் வைகுந்தம் வாருங் கள் கலியுகம் பிறக்குதென்கிற அடையாளஞ்சொல்ல அதுகண்டவுடன் வாருங்களென்று தாமும் வைகுந்தஞ் சேர்ந்தார். அந்ததேகத்தைத் தர்ம புத்திரர்களெடுத்துத் தகனஞ்செய்ய அர்த்ததேகந் தகனமாயு மாகாமலுமிரு க்கஅதைச்சமுத்திரம்பொங்கி யலையொதுக்கின ஜெகனாதத்தில் அந்தக்குறை யாயிருக்கிற அங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து பூசித்தாரொன்றறிக.

இப்படி அவதாரமெடுத்த தல்லாமற் பிரமாவுக்கு அஜனென்கிற பிள்ளை யாயுங் கற்தமரிஷிக்குந் தேவஹுதிக்குங் கபிலனுய்ப்பிறந்தும், அதிதிக்கு இந் திரானுசனுய்ப்பிறந்தும் அத்திரிரிஷிக்கும் அனுசூயைக்குந் தத்தாத்திரய னுய்ப்பிறந்துங் கிருஷணன்தேவகிக்குப் பிறந்தும் பாதராயணனுக்கும்ஆகூ ந்தரிக்கும் நிருசனுய்ப்பிறந்தும் சத்தியவதிக்கும்பராசரனுக்கும்வியாசனுய்ப்பி றந்தும் மேருதேவிக்கும் நாபி மேதினிபதிக்கும் விருஷபனென்று பிறந்தும் இப்படிப்பாகவதத்தில் இரட்சிக்கும்பொருட்டாகஅவதாரமெடுத்தாரொன்றும் சொல்லும். இனி இராமபத்திரனை நோக்கிச் சிவன் காசியில் தபஞ்செய்யஅ வர் பிரசன்னமாய்ச்சிவனுக்கு இராம மந்திரமாகிற தாரகப் பிரமத்தையுபதே சஞ்செய்துகாசியிலிருந்து இங்கே மரணமாகிற பேர்க்கெல்லாங் காதிலேயுப தேசஞ்செய்துமோட்சமுண்டாக்குமென்று அனுக்கிரகஞ் செய்தாரொன்றும், சிவனைநோக்கிப் பார்வதிதவஞ்செய்யச் சிவன் உமைக்கு அந்தமந்திரத்தை யுபதேசஞ்செய்தாரொன்றும், இனி அண்டங்களை யொருகாலத்தில்உருத்திர னுபத்திரவஞ்செய்கையாலவர்களையிரட்சிப்பான்பொருட்டு உலகமெல்லாம்வி ழுங்கி வயிற்றில்வைத்துக் காத்துக்கொண்டு ஆலிலைமேற் போயிருந்தாரொ ன்றுங்,கஜேந்திரன் முறையீடுகேட்டு அவனுக்காகச் சக்கரத்தினுல் முதலை யைக்கொன்று யானையை மீட்டு அதற்கு மோக்ஷங் கொடுத்தாரொன்றும்

அந்த யானை முறையிடும்போது பிண்டப் பிரமாண்டங்களுக்கெல்லா மெவன் கர்த்தன் பஞ்சகிருத்தியங்களுக்கு மெவன்கர்த்தனெவன்பரமமாகிறவனோ அவன் வந்து என்னைக்காப்பாற்றுவானென்று முறையிடும்போது விஷ்ணு பரப்பிரமமாகையால் விஷ்ணுவே காப்பாற்றினானென்றும், சமுத்திரத்தைக் கடந்தபோது அதிற்பிறந்த அமிர்தத்தையும் அதிற்பிறந்த பேயையும் விஷ்ணுவானவர் ஸ்திரீரூபமெடுத்துத் தேவர்களுக்குப் பகுந்து கொடுத்து உருத்திரன் தாமசகுண மந்தனென்று விஷத்தையு மெருக்கையுங் கொடுத்தாரென்றும், பிர்மாவினுடைய சிரசையுருத்திரனறுக்கும்போது அந்தப்பிர்மகபாலங்கையைவிடாமற் பிராந்தனாய்ப் பிட்சையெடுக்கும்போது லட்சுமிதேவிவந்து பிட்சையிட்டவுடனே பிர்மகபாலங் கையைவிட்டு விழுந்துபோயிற்றென்றும் (இதல்லாமல் மச்சபுராணத்தில்) சிவன் பார்வதியைப்பார்த்துச் சொல்வது, உமது விவாகத்தில் பிர்மாசெய்தசேஷ்டையாலே வலதுகைநகத்தாலவன்சிரசைக்கிள்ளினேம் அப்போது பிர்மாவானவன் நம்மிடத்தில் குற்றமில்லாமல் நாமுனக்குத் தகப்பனுயுங் குருவாயுமிருக்கக் குருபாதகஞ்செய்தாய் நீகபாலியாய்த்திரியென்று சபித்தான் அப்போது நாம் புண்ணியதீர்தங்களாடியிமோற்பருவதத்திலேபோய் நாராயணனைப் பிட்சைகேட்டோம் அப்போது அவர் தமது துடையைக் கீறிக் கபாலநிறைய வுதரம்விட்டவுடனே கபாலம் பொடியாய்ப் போனதென்றும், பின்னொருகாலம் விஷ்ணு தம்முடைய வெயர்வையைக் கபாலம்நிரம்ப வழித்துவிட்டார் அப்போது கபாலமுடைந்து போனதென்றும், விஷ்ணுதன்மோத்தரத்தில் சிவன் விஷங்கொள்ளுகிறபோது விஷ்ணு நாமத்திரயத்தைச் செபித்துக்கொள்ளுகையாற் பிழைத்தானென்றும், இராமாயணத்தில் பாசுராமன் இராமருக்குச் சொன்னது சிவனும் விஷ்ணுவு மொருகாலத்தி லுத்தஞ்செய்யும்போது விஷ்ணு ஓங்காரஞ்செய்யச் சிவன் விவசனாகி மூர்ச்சைபோகையால் விஷ்ணுவே பரப்பிரமமென்று தேவர்கள்வணங்கினார்களென்றும்,

இனிப் பாரதத்திற் பத்ரிகாசிரமத்தில் விஷ்ணு தவஞ்செய்யும்போது சிவனிந்தவேளையிற் போய் யுத்தஞ்செய்து செயிக்கவேண்டுமென்று யுத்தஞ்செய்ய அப்போதுசிவன்தோற்றுப் பிராணச்சேதம்வர அப்போதகப்பனுகிற பிரமதேவன்வந்து விஷ்ணுவிடத்தில் முறையிடவப்போது உருத்திரனைவிட்டானென்றும், பின்னும் பாரதத்திற் பிர்மாவுமுருத்திரனும் விஷ்ணுவை நோக்கிக் கோடியுகந் தவஞ்செய்து சிருஷ்டிசங்கார வதிகாரங்களைப்பெற்றாரென்றும், பாரதத்தில் விஷ்ணு பிர்மாவையழைத்துக் கற்பாந்தரங்களெல்லாம் நமக்குக் குமாரனாய்ப்பிறக்க வரங்கொடுத்தாரென்றும்,

அயசொருபக்கியானத்தில்பிர்மா சொல்வது நான்பிறந்தது, நாராயணன் மனதில்முதலாவது கண்ணி லிரண்டாவது வாக்கில்மூன்றாவது காதினான்காவது மூக்கிலைந்தாவது அண்டத்திலாறாவது நாபியிலேழாவது இப்படிப் பிறந்தேன். இனி வருகிறயுகங்களிலு மிப்படிப்பிறப்பேனென்றும்பின்னும் உபநிஷத்தில் நாரணன் மனதில் நினைத்தவுடனே அவர்நெற்றியில் வெயர்வைபிறந்து அது மகாசலமாயதில் பொன்னண்டம்பிறந்தது அதில் பிரமன்

பிறந்தாரொன்றும் இனிக்கன்மகாண்டத்தில் பார்வதிக்குச்சிவன்சொல்வது நாராயணன் அண்டபகிரண்டங்களெல்லாம் விழுங்கி யது வயிற்றிற்சீரணித்துப்போகாமல் காப்பாற்றிப்பின்பு அந்தப்படியே நிறுத்தியும் ஆதாரமில்லாத மாயைக்கு ஆதாரமாய் நின்றும் பிரமாதி தேவதைகளெல்லா மிறந்துபோனாலும் நாரணனே நிற்கிறவனென்று சிவன்சொன்னானென்றும், விஷ்ணு தன்மோத்தரத்தில் பிரமாஉருத்திரன்இந்திரன்சந்திர சூரியாதி தேவதைகள் முதலான சகலசீவர்களும் விஷ்ணுகாந்தியால் விளங்கிப் பிறகு விஷ்ணுகாந்தியில் ஒடுங்குவார்களென்றும், வராகபுராணத்தில் அகஸ்தியருடன் சிவன் சொன்னது ராசத சாத்மீககுணத்தால் பிரமாவையும் ராசத தாமதத்தால் என்னையும் பிறப்பித்தாரொன்றும், இனி நாரஸிம்ம புராணத்தில் விஷ்ணு நாபியில் பிரமாபிறந்து விஷ்ணுவை நோக்கி யுலகசிருஷ்டி வேண்டுமென்றுநினைக்க அப்போது அவருக்கு சிருட்டிக்கச் சக்தியில்லாமற்போனமையாற் பிரமாவுக்குவெகுகோபம்வந்தது அந்தக்கோபத்தால்அவருடைய தொடையில் உருத்திரன்பிறந்தாரொன்றும், இனி அந்தப்பாலன் அழுதுகொண்டு பிறக்கையால்அந்தப்பாலனை உருத்திரனென்று பெயரிட்டாரொன்றும்,

இனிப்பாகவதத்தில் பிருகுமகாரிஷி சிவனைநீபிரமமல்ல உன்னையடைந்தபேர்கள் மோட்சம் பெறார்களாகையால் விஷ்ணுவே பிரமமென்று சிவனைச் சபித்தாரொன்றும், பின்னொருகால் நாரணன் நினைக்க நெற்றியில் வெயர்வை பிறந்து அதில் ஒருதுமிழிபிறந்தது அதில்மூன்று கண்ணுஞ் சூலமுமாக ஒரு பாலன்பிறந்து உருத்திரனெனப்பெயர் பெற்றது அப்போது நாரணன் இரிஷிகளைப் பார்த்து இப்படி நம்முடைய வெயர்வையில் பிறந்த பிரமாவும் உருத்திரனும் அண்ணன்தம்பியாகையால் இவர்கள்தானே லோகாலோகங்களுக்குக் கர்த்தரா யுங்களுக்கெல்லாம் வரங்களைக்கொடுப்பாரொன்றும், பின்னும் விஷ்ணுதொடையில் நீலலோகித னுருனென்றும், அவனுக்கு ஏழுபெயர்கொடுத்து முதற்பெயர்கூடி எட்டுபேருக்கு மெட்டுத்தல மெட்டுப்பெண்கள் எட்டுக்குமாரர்களென்றும், அத்திரிதபசில் மூன்றுபேரும் அவர்பெண்சாதி கெற்பத்தில் பிறந்தாரொன்றும், சிவனுக்கு இரிஷிகளால்சாபம்வர அந்தச்சாபங்களைத் தவிர்ப்பித்தாரொன்றும், பத்மாசுரன்உருத்திரனைநோக்கித் தபஞ்செய்து தன்கையை எவர்கள்தலைமேல் வைத்தாலும் அவர்களெல்லாரும்பஸ்பமாகவேண்டுமென்று வரங்கேட்டுப்பிறகு உருத்திரன் சிரசில் தான்கையைவைத்து எரித்துப்போடுவோமென்று உருத்திரனைத்துரத்த ஓடிப்போய் ஐவிரலிக்காய்க்குள்புகுந்தார் அப்போது உருத்திரனையிரட்சிக்கவேண்டி விஷ்ணு மோகினி ரூபெடுத்து உபாயத்திற்கொன்று உருத்திரனையிரட்சித்தாரொன்றும்,உலகமெல்லாம் விஷ்ணுஎடுத்துவிழுங்கினபோது சிவனையும் விழுங்கி யவர்வயிற்றில் இருக்க மார்க்கண்டமுனி சிவனைப்பூசிக்கப் பாற்கடலெல்லாந்தேட அப்போது விஷ்ணுவானவர் நம்முடையவயிற்றி லிருக்கின்றாரென்று வாயைத்திறந்துகாட்ட அப்போது மார்க்கண்டன் அவர்வாயால் போய்ப் பூசைசெய்தாரொன்றாகிக.

இனிப் பிரசேதனென்கிற இராசாசிவனைநோக்கித் தவஞ்செய்துஎவர்பரப்பிரமம் எவராலெனக்கு மோட்சமுண்டு அவரை யனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்றுகேட்கச் சிவன் விஷ்ணுவே பரத்துவம் விஷ்ணுவே மோட்சங் கொடுக்கிறவனென்றும் நாமும் விஷ்ணுவை யாராதனை செய்வோமென்றும் நீயும் விஷ்ணுவை யாராதனைசெய்து மோட்சம்பெறுவீரென்றுஞ் சொன்னானென்றும், சிவன் அந்தகாசுரனுடனே யுத்தஞ்செய்ய அவனுதிர மொருதுளி பூமியில்விழுந்தபோது அவனைப்போல் கோடிஅசுரருண்டாக அப்போது சிவன் வியசனமுற்று விஷ்ணுவைத் தியானஞ்செய்ய அப்போது விஷ்ணு ஸஷ்கரோவதியென்கிற சத்தியையுண்டாக்கி விழுகிற உதிரமெல்லாம் அவள் நாக்கைப் பூமிபோலாக்கி விழவும், அவளதைப்பானம்பண்ணவுஞ் செய்து உருத்திரனை யிரட்சித்தானென்றும், இனி வாமனவதாரமெடுத்தபோது அவர்பாதம் பிர்மலோக பரியந்தம் வளர அவர்பாதத்தைப்பிர்மா தன்கமண்டலசலத்தால் பூசைசெய்ய அந்தச்சலம் அண்டமெல்லாமடித்துப்போமென்று சிவன் தம்முடைய சடையில்விஷ்ணு பாதோதகத்தைத் தரித்தானென்றும், ஒருகாலத்தி லுருத்திரன் யுத்தஞ்செய்து வில்லைப் பூமியிலூன்றிக்கொண்டு அதின்மேல் சிரசைவைத்தபடி நித்திரைசெய்கையி லந்த வில்லின்குதையைச் செல்லரிக்க அந்நாரியற்று வில்லுகிளர்ந்து வுருத்திரன்சிரசை யெடுத்துப்போகையி லந்தச்சிரசைப் பிடித்து வைத்துச் சிவனை எழுப்பினானென்றும், ஆகாசகங்கை விஷ்ணுவானவன் பாதோதகமென்றும் அதைச் சிவன் தரித்தானென்றும், இந்திரன்சாரதிமாதலியானவன் ஆதிசேஷனுடைய பேரனுக்குப் பெண் கொடுக்கிறேனென்னச் சேஷன் கெருடனுக்குப் பயப்படுவேனென்ன அப்போது ஆதிசேஷன்பேரனுக்கு விஷ்ணுவு மிந்திரனும் அபயஸ்தங்கொடுத்து மணஞ்செய்து கொடுக்க அப்போது மாதலி யானவன் தன்மருமகனைத் தேவலோகத்துக் கழைத்துவர அவனைக்கெருடன் கண்டு பகையாளியை நீயிங்கேயழைக்கிறதென்னவென்று இந்திரனையும் விஷ்ணுவையும் யுத்தத்துக்கழைக்க விஷ்ணு கெருடனுங்காரத்தையடக்கப் பின்பு கெருடன் பயப்பட்டு வணங்கினானென்றும், இனித் தாருகாவனத்தில்இரிஷிபத்தினிகளை உருத்திரன்பிட்சைகேட்கப் போகும்போது இரிஷிபத்தினிகள் மோகித்துஉடுத்த உடைகள் கழன்றுவிழ அப்போதுஇரிஷிகள் உருத்திரனது லிங்கமுந் தங்கள் பத்தினிகள் யோனிகளும் விழுந்துபோகச் சபித்தார்களென்றும், அதுயோனியே பீடமுந்தண்டேலிங்கமுமாகையால்இருபுறத்திலும்யானைதூரத்திலுமீஸ்வரன்கோவில் சேவிக்க வொண்ணாதென்றும், மயானபூமியி லாடுகையால் மயானருத்திரனென்றுஞ் சிவனுக்குச்சூலம் விஷ்ணுகொடுத்தானென்றும் யோனியும் இலிங்கமுங் கூடினதாகையால்இலிங்கதீர்த்த பிரசாதமாகாதென்றும், விஷ்ணுவுக்கு உருத்திரன் பிரதானபத்தனாய் அனுருத்தனா யிருக்கிறானென்றும் ஈஸ்வரனும் விஷ்ணுவு மொருகாலத்தில் கூடியிருக்கும்போது நீரும் நாமும் விலாசார்த்தமாக ஸ்திரிபுருஷராகக்கூடவேண்டுமென்றும் அப்போதுஉரு

த்திரன் - ௩௪௲ - கோபால ஸ்திரீரூபமெடுத்துக் கிருஷ்ணாவதாரமெடுத்த போது கூடினுறொன்றும் இதை மதனகோபால தந்திரஞ்சொல்லுமென்று ம் அநுமார்சிவனுடைய விந்துவில்பிறந்துஇராமருக்குச் சேவகனானொன்று ம், விபூதியானபஸ்மமானபடியாலும் பசுவின்சாணமாகையாலும் விபூதித ரித்தால் நரகமென்றுஞ் சிவபுராணங்களெல்லாந் தாமஸபுராணம் மோஹபு ராணமென்றும் உருத்திரன் தாமசகுணனென்றும் இராவணனுக்குச் சிவன் பார்வதியைக் கொடுத்து அழைத்துப் போகும்போது விஷ்ணு உபாயஞ் செய்து வண்டோதரியைக் கொடுத்துப் பார்வதியை விடுவித்தாரொன்றும் பின்னொருசிருஷ்டியில் விஷ்ணுசகோதரி ஈஸ்வரியாகையால் சிவனுக்குவரு கிற உபத்திரவமெல்லாம் விஷ்ணு பரிகரிப்பாரொன்றும்,

துவாரபாலகரைச் சத்துருவாய்வரச்சொல்லிமதுகையிடவனைக் கொன் றாரென்றும் விஷ்ணுவை பூசைசெய்து நித்தியரானபேர்கள் வியாசர் வா மதேவர் புண்டரீகர் சவுனகர் பிரகலாதர் விபீஷணர் முதலான பத்தர்க ள் - ௨௨ - பேரொன்றும் விஷ்ணுகொடுத்தவரத்தை யழிக்காரொன்றுஞ் சி வன்கொடுத்தவரத்தை யழிப்பாரொன்றுஞ்சரபாவதாரமெடுத்தவீரபத்திரனை நரகேசரிகொன்றாரொன்றும்- ௩- [illegible] இது விஷ்ணுபுராணத்தில் பின்னொ ருகாலத்தில் பிரமா விஷ்ணுவோடு மாறுபட்டுப்பிரமா வுலகமெல்லாஞ் சி ருட்டித்தேனென்ன அப்போது உலகத்தைபெல்லாம் விஷ்ணுவிழுங்கி இ னிச் சிருஷ்டியென்னஅப்போது பிரமாவணங்க நாபியால் விட்டாரொன்றுங் கவியென்கிற அசுரனை யிந்திரனுக்காகக் கொன்றாரொன்றுஞ் சொல்லும் -௪- [illegible] இப்படி நாராயணோபநிஷத்து துவாதசோபநிஷத்து விஷ்ணு புராண ங் காருடபுராணம் நாரதபுராணம் பாகவதபுராணம் விஷ்ணுதன்மோத்தரம் ஆகமங்கள் சுருதி ஸ்மிருதி யிதிகாசங்கள் புருஷசூக்த முதலான தெல்லாமி ப்படியேசொல்லுமென்றறிக. இந்த விஷ்ணுவின் மகிமையெல்லாம் மயேஸ் வரன்சரிதையிற்கண்டிக்கப்படும்.

---

## ௨௩- வது—அத்தியாயம்.

## மஹேஸ்வரன்சரிதை.

### மஹேஸ்வரன்உற்கரிஷமானசரிதை.

அதெப்படியென்னிற் பரமசிவனில் பராசத்தி யிது குடிலையோடுகூடி நாதம் நாதத்தில் விந்து விந்துவில் சதாசிவன் இந்தச் சதாசிவனில் அனேக பேதமுண்டு, அதெப்படியென்னில் அநுதியில் சதாசிவருண்டாம் இவர்விஸ் வமெல்லாங்கண் விஸ்வமெல்லாமுகம் விஸ்வமெல்லாம்புஜம் விஸ்வமெல்லாம் பாதம் இப்படிரூபமுடையவர், இருக்குவேதத்தில் விஸ்வமெல்லாம் சுரோத்தி ரம் இதுமுத லொருபனிஷயெல்லாஞ் சொல்லும். இவரிடத்தில் அநுதி ஈஸ்வரருண்டாம் இவரையும் வாக்கியஞ்சொல்வது-௫- [illegible] என்று இதுமு தல் விரிவாய்ச்சொல்லும் இவரிடத்தில் அநுதி மஹேஸ்வரருண்டாம்இவரை வேதஞ்சொல்வது புருஷசூக்தம் சஹஸ்ரஹஸ்த சிருஷ்டிபுருஷஹஸ்த இதுமுதல்

வேதாகமங்கள் விரிவாய்ச்சொல்லும் ஒருபுருஷனென்பது அநாதி விராட்டு சொரூபமான மஹேஸ்வரனென்றும் இவரிடத்தில்- ௰௫ - முகம் - ௰௫-பாதம் - ௰௫ - அஸ்தம் - ௩௰ - கண்ணும் இப்படி ஆதிசதாசிவருண்டாப இவரிடத்தில் ஆறுமுகம் - ௰௨ - தோள் - ௩ -பாதமுடைய ஆதிமஹேஸ்வரருண்டாம் இவரை வேதம்ஆத்தியன்னியவஸ்நரிதி இதுமுதல் விரிவாய்ச்சொல்லும் இவரிடத்தில் - ௨௫ - முகமும் - ௰௫ - கரமும்- ௰௫- பாதமுமுள்ளஆதிமஹேஸ்வரனுண்டு இவரைச்சர்வதேவதைகளாலுங்காணக்கிடையாதவராய் வேதாகமங்களால் விரிவாய்ச் சொல்லப்பட்டவரான இவரிடத்தில் ௫- முகமும்-௰- அஸ்தமும்- ௨ - பாதமுமுடைய சதாசிவதேவருண்டாம் இவர்நிற்பாவமுகத்தில் ஆத்மாவும் ஈசானுதி - ௫ -முகமும் இதில் அஞ்சுபூதமும் மனதிற் சந்திரனும் சட்சுவிற்சூரியனும் இந்த எட்டுஅஷ்டமூர்த்தி தனுவாய்ப் பிண்டப்பிரமாண்டரூபமா யிருப்பார் இவரில் ஈஸ்வரனுண்டாம் இவர் - ௨௫ - லீலை எடுத்து எல்லாவற்றையும்இரட்சித்துப் பஞ்சகிருத்தியஞ் செய்து அண்டபிண்டங்களைப் படைத்துக்கர்த்தராயிருப்பார் இவரில் உருத்திரனுண்டாம் இந்தஉருத்திரனுக்குக் காலாக்கினி உருத்திரனென்றும் பிரளயகாலஉருத்திரனென்றுஞ் சங்காரகால உருத்திரனென்றும் பெயராம்.

இவரிலுண்டான விஷ்ணு பிரமனேடொருவனென்று சொல்லுவார்கள் இந்த உருத்திரபேதம் அனந்தமுண்டாம் இவரிற் பிரதானர் - ௰௧- உருத்திரர் இவரிற் பேதம் - ௰௧- கோடி இந்தஉருத்திரர் சகலவரங்களையுஞ் சாலோகாதி பதங்களையுங் கொடுத்துத்துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்து ஆத்மாக்களை இரட்சிப்பாரொன்னில் திரிபுரத்தையெரித்துங் காலனையுதைத்துந் தெட்சன்யாகத்தை யழித்துங் காமனையெரித்தும் பிரமாவைச் சிரசைக்கிள்ளியும் ஆலகாலத்தையுண்டும் மகிடாசுரனைக்கொன்றுஞ் சலந்தரன் சூரபத்மன் சிங்கமுகன் தாருகாசுரன் இந்த நால்வர்முதல் அனந்தம் வெள்ளஞ் சேனையைக் கொன்றும் கயமுகாசுரனையுரித்தும்அந்தகாசுரன் தாரகாசுரன் நிவாதகவச காலகேயரைக்கொன்றுஞ் சங்காரகாலங்களில் பிரமா விஷ்ணுவாதிகள் சிரசுகளையும் எலும்புகளையும் அடையாளந்தரித்தும் அவர்சிகை மயிரைப்பூணூலாய்த் தரித்தும் பின்னொருசங்காரத்தில் மாலயனைச் சூலத்திற் குத்தியெடுத்து உலர்ந்தபிறகு நெற்றிக்கண்ணு லெரித்தும் விஷ்ணு தசாவதாரங்களில்நிக்கிரகாவதாரத்தில்ஆமையோடும் பன்றிப்பல்லும் மீனின்கண்ணுந் திருவிக்கிரமத்தின் முதுகெலும்பும் நாரசிங்கத்தின்தோலும்இதுகளைத் தரித்தும் ரிஷிகள் யெக்ஞத்திற்பிறந்த புலி அக்கினி மான் பாம்பு பூதங்கள் நருதலை மந்திரங்கள் முயலகன் சர்ப்பங்களாகிய இதுகளை யாபரணமாகத்தரித்தும் இந்திரனை யற்பமாகக்கோபித்தும் விஷ்ணுவுக்குப்பிறுந்தைமோகந்தீர்த்தும் தர்மதேவதையை இரிஷபமாயேறியும் விஷ்ணுவுக்குச் சக்கரமுதலாக வனேகங்கள் கொடுத்தும் அனுக்கிரக வவதாரம் -௫- ல் அனேகம் அனுக்கிரகஞ்செய்தும் கங்கையைச் சடையிற்றரித்தும் ரவி சசி சிகிமூன்றையு மூன்றுகண்ணாகத்தரித்தும் பிரமாவிஷ்ணுஇந்திராதிகளுக் கதிகாரங்

கள்கொடுத்தும் இவர்கள்சாபத்தைத்தீர்த்தும்-உரு-அவதாரத்திலும்நிக்கிரகா னிக்கிரகஞ் செய்துவந்த இப்படி அனேகங்கதைகளுண்டு.

இனிவிஷ்ணுவானவர்.

எகூ. ஆதியாயருவமாகி யகண்டபூரணனாய்ஞானச்
சோதியாய்நின்றமாயன் சுவேச்சையாலுருவங்கொண்டு
நீதியார்கருணையாலே நீர்கடற்றுயின்றநாலு
மோதினனென்றுபாஞ்ச ராத்திரியுரைப்பானுற்றே.

விஷ்ணுஆதியாகில் அனாதியுண்டு அருவமாய் அகண்டபூரணனாய்ச்சோதியானால் அப்படிஇருக்கவேண்டும் சுவேச்சையாகில் ஞானவாசிட்டத்திற் பிரமமாகிறஞானசொரூபத்தில்விஷ்ணுவந்தான் அவன்மனக்கமலத்தில் பிரமாவருகையாற்சுவேச்சையல்ல,இதல்லாமற்சங்கு சக்கராவதாரியாய்லட்சுமிசையுத்தனாய் வைகுண்டபதியாய்ச் சகுணமாயிரான் அவன் ஏகதேசத்திலிருந்தாலும் அவர் அனந்தகலாப் பிரசன்னராய் அனந்த கல்யாண குணமாயிருப்பாரென்னிற் சூரியன் சந்திரன் கலையைப்போல் கண்ணில் காணவேண்டுங் கல்யாணகுணமா யெல்லாம் விஷ்ணுமயமாகில் எல்லாருக்குங் கல்யாண குணமாகவேண்டும், அரி யயோனிசன்யஜாதன் பவவற்சிதன் சென்னமில்லாதவன் லயமில்லாதவன் என்றும் உத்தரகீதையில்- சு - ௵

இப்படிப்பட்ட விஷ்ணுவானவருக்கு முன் சொன்னதெல்லா முண்டாகிறசகுணமாகார், சகுணத்துக்கு முன்குணங்களெல்லாமில்லை அல்லது உண்டாகிற் பிறப்பிறப்புவராது சுவேச்சாவினோதத்தால் தசாவதாரமுதலான தெடுப்பாரென்னிற், சுவேச்சையால் மஹேஸ்வரன் - உரு - அவதாரமெடுத்துந் திரிசியமாய்க் காண்பித்து அதிரிசியமாய்ப் போகையால் உருத்திரனெடுத்ததே சுவேச்சாவினோதமாம் விஷ்ணுவும் உலகரட்சகார்த்தமாகவுஞ்சத்துருசங்காரநிமித்தமாகவும் ஒவ்வொருவர்தபத்துக்காகவும் இன்னின்னஅவதாரமெடுக்க வேண்டுமென்று எடுக்கையால் சுவேச்சையென்னில்தேகமெடுத்து மற்றேகம் விடுகிறபோதும் அதிரிசியமாகாமல் தேகங்களைவிட்டுப் போகையாலும், அயோனிசாதனங்களாதலாலும் எடுத்ததேகத்தில் வருத்தங்கள் வருவதாலும் மாயைகன்மங்களோடு கூடிச்செனனமெடுத்ததென்றறிக. ஆனால் சிவன் கிராதார்ச்சுனத்தில் வருத்தம்போலும்- கூஙு- நாயன்மாரைச்சோதிக்கும் வருத்தம்போலும் - கூச - திருவிளையாடல் வருத்தம்போலும் அரியும் வினோதார்த்தவருத்தமாகில் அப்படியெடுத்ததேகங்களில் அறிந்துநடித்தால் அத்தேகமுந் திரிசியா அதிரிசியமாய் நடிப்பாரொன்றறிக. இனிக் கருணையால்பால்சமுத்திரத்தில் நித்திரைசெய்துவேதமோதினனொன்னிற் கருணையானது சாக்கிரத்திலொழிய நித்திரையி லில்லை நாலோதினனொன்னிற் கோமுகாசுரன் மதுகையிடவன் வேதங்களையெடுத்துப் போனதுகேட்டு அவர்களோடு யுத்தஞ்செய்து அவர்களைக்கொன்று சில ஏடுகளைக் கொண்டுவந்து வியாசர்முதலானபேரை வேதத்தின் அடுக்கு கலைந்ததென்று கோவையிடைச்சொல்லி அயக்கிரீவாவதாரமாய்ப்போதித்

தும்,இந்தவேதங்க ளெல்லாம் இல்லாமற்போவானேன் முந்தவேதமோதின வர் மீண்டும் ஓதாமையால் முந்தவும் வேதம் ஓதினவரல்ல அப்படியோதி னது மெய்யாகில் பாட்டமானமர்த்திரமோதிஞரென்றறிக. இப்படியே விஷ்ணுவைப்பற்றி யிந்த கிரந்தகர்த்தாசொல்லியிருக்கிற சரித்திரங்களைக்கடைசிப்பாரந்தனியாகப்பதிப்பித்துத் தெரிவிக்கப்படும்.

---

உ௯-வது—அத்தியாயம்.

## ஆகமம்வந்தவரலாறு

ஆகமங்களின்பெருமைதன்னை யறிவோாநாமமங்ாகமத்தின்,பாகபேதமும்பலபொருள்தொகையும் பதிகமாகப்பகர்ந்ததுதானே.

ஆகமங்கள்வரலாறு காமிகம் யோகஜம் சிந்தியம் காரணம் அசிதம் தீப்தம் சூக்ஷமம் சஹசிரம் அம்சுமான் சுப்ரபேதம் விஜயம் நிஸ்வாஸம் ஸ்வாயம்புவம் ஹனலம் வீரம் ரௌரவம் மகுடம் விமலம் சந்திரக்கியானம் விம்பம் புரோற்கீதம் லலிதம்சித்தம் சந்தானசர்வோத்மம்பாரமேச்சுரம்கிரணம் பேதம் வாதுளம் ஆ- ஆகமம்-உஅ-இஃது- எவ்விடத்தி லுற்பவித்ததெனிற் சதாசிவனுடைய சத்தியோசாதமுகத்தில்-ரு-வாமதேவமுகத்தில்-ரு-அகோரமுகத்தில்-ரு-தற்புருஷமுகத்தில்-ரு- ஈசானமுகத்தில்-அ-இது-காமிகமுதல்-சுப்ரபேதம்அந்தமான ஆகமம்-ய-சிவசம்பந்தமாம் விஜயமுதல்வாதுளமந்தமான ஆகமம்-யஅ- ருத்திரசம்பந்தமாம் இச்சிவாருத்திரரால்இச்சிவாகமங்கள் பிரபலமானதெப்படி யென்னில் சத்தியோசாதத்தி லுண்டான காமிகாகமங் கேட்டவன் பிரவணன் இவனிடத்திற்கேட்டவன் திரிகாலன் இவனிடத்திற் கேட்டவன் ஹரன்-ஆ-கா-ம்-யோகஜாகமங்கேட்டவன் சுயாகன் இவனிடத்திற்கேட்டவன்பஹவன் இவனிடத்திற்கேட்டவன்விஜயன்-ஆக-கா-ம்-சிந்தியாகமங் கேட்டவன் நிபன் இவனிடத்திற்கேட்டவன் யோகாவயன் இவனிடத்திற் கேட்டவன் அம்பிகன்-ஆ- கா-ம்- காரணாகமங்கேட்டவன் காரணாகமன் இவனிடத்திற் கேட்டவன் பீஷ்யன் இவனிடத்திற் கேட்டவன் பிரஜாபதி ஆ-கா-ம்- அசிதாகமங் கேட்டவன் சிவன் இவனிடத்திற் கேட்டவன் சுசிவன் இவனிடத்திற் கேட்டவன் அச்சுதன்- ஆ-கா-ம்- இவ்வைந்தாகமங் கேட்டவ ரைவர்,இவ்வைவரிடத்திற் கேட்டவர் பதின்மர் ஆ-யரு ம்-வாமத்திலுண்டான தீப்தாகமங் கேட்டவன் ஈசன் இவனிடத்திற் கேட்டவன் திரிமூர்த்திஇவனிடத்திற் கேட்டவன் அதாசீனன்-ஆ-கா-ம்- சூக்ஷமவாகமங் கேட்டவன் சூட்சன் இவனிடத்திற் கேட்டவன் வைசிரவணன் இவனிடத்திற் கேட்டவன் சப்பிரபஞ்சன்-ஆ-கா-ம்-சஹசிராகமங் கேட்டவன் காலருத்திரன் இவனிடத்திற் கேட்டவன் சீமஉருத்திரன் இவனிடத்திற் கேட்டவன் தர்மன்-ஆ-கா-ம் - அம்சுமாநாகமங்கேட்டவன் அம்புவன் இவனிடத்திற் கேட்டவன் உருத்திரன் இவனிடத்திற் கேட்டவன்ஔரசன் ஆ-கா-ம்-சுப்ரபேதாகமங் கேட்டவன் தசேஸன் இவனிடத்திற்கேட்டவன்

விக்கினேஸ்வரன் இவனிடத்திற் கேட்டவன் சசி ஆ-௩-ம்- இவ்வைந்தா கமங்கேட்டவ ரைவர் யிவ்வைவரிடத்திற் கேட்டவர் பதின்மர் ஆ-௰௫-ம் அகோரத்தி லுண்டான விஜயாகமங்கேட்டவன் உருத்திரன் இவனிடத்திற் கேட்டவன் நாதி இவனிடத்திற்கேட்டவன் பரமேஸ்வரன்-ஆ-௩-ம்-நிஸ்வா சாகமங் கேட்டவன் உதையன் இவனிடத்திற் கேட்டவன்கிரீஜன்-ஆ உ-ம்- ஸ்வாயம்பாகமங்கேட்டவன் நியமேசன் இவனிடத்திற் கேட்டவன் ஸ்வ யம்பூதன் ஆ-உ- ம்- அனலாகமங்கேட்டவன் வியோமன் இவனிடத்திற் கேட்டவன் உதாசனன்-ஆ-உ-ம்-வீராகமங் கேட்டவன் தெஜஸன் பிரசா பதி-ஆ-உ-ம்- இவ்வைந்தாகமங்கேட்டவரைவர் இவ்வைவரிடத்திற் கேட்ட வ ரைவர்-ஆ-பதின்மராம். தற்புருஷத்திலுண்டான ரௌரவாகமங் கேட்ட வன்பிரமணேசன் இவனிடத்திற் கேட்டவன் நந்திகேஸ்வரன்-ஆ- உ-ம்-ம குடாகமங் கேட்டவன் ஷேஷாக்கியன் இவனிடத்திற்கேட்டவன் மகாதே வன்-ஆ-உ-ம்-விமலாகமங்கேட்டவன் சர்வாத்மன் இவனிடத்திற் கேட்டவ ன் வீரபத்திரன்-ஆ உ-ம்-சந்திரக்ஞியானகமங் கேட்டவன் அனந்தன்இவனி டத்திற்கேட்டவன் பிரகஸ்பதி-ஆ-உ-ம்- விம்பாகமங்கேட்டவன் பிரசாந்த ன் இவனிடத்திற் கேட்ட ்ன் ததிசி ஆ-உ-ம்- இவ்வைந்தாகமங்கேட்டவ ரைவர் இவ்வைவரிடத்திற் கேட்டவரைவர் ஆ-பதின்மராம் ஈசானத்திலு ண்டான புரோற்கீதாகமங்கேட்டவன் சூலி இவனிடத்திற் கேட்டவன்கவ சாக்கியன்-ஆ - உ-ம்- லளிதாகமங்கேட்டவன் மலையன் இவனிடத்திற் கே ட்டவன் அளிதன் ஆ-உ-ம்- சித்தாகமங்கேட்டவன் இந்திரன் இவனிடத் திற்கேட்டவன் சண்டேசன் ஆ- உ- ம்- சந்தானசர்வோத்மாகமங் கேட் டவன் சிஸ்டன் இவனிடத்திற் கேட்டவன் சைபாலன் ஆக-உ-ம்-பாரமே ச்சுராகமங் கேட்டவன் தேவிசோமன்இவனிடத்திற்கேட்டவன் நரசிம்மன் ஆக-உ-ம்-கிரானகமங்கேட்டவன் தேவபிதன் இவனிடத்திற்கேட்டவன் ச ங்கவற்கன்-ஆக-உ-ம்-பேதாகமங்கேட்டவன் தேவிகாலோத்மன் இவனிடத் திற் கேட்டவன் பேதஸ்யன் ஆக-உ-ம்-வாதுளாகமங் கேட்டவன் சிவருத் திரன் இவனிடத்திற் கேட்டவன்மகாகாசன் ஆக- உ-ம்- இவ்வெட்டாகமங் கேட்டவர் எண்மர் இவ்வெண்மரிடத்திற் கேட்டவ. ரெண்மர்-ஆக-௰௬-ம்- இவ்வாகமம்-உ௮-ம்-சிவஉருத்திர சம்பந்தமாய் இதை பாரம்பரையாய்க்கேட் டபேரனேகருண்டென்றறிக. இந்த-உ௮-சங்கிதைகளை யிலக்கம்பார்க்கில்இர ண்டுசங்கமும் ஒருபத்மமும் ஒருஅற்புதமும்-௰௩ - கோடியும்- ௩௮- லக்ஷம்- ச௰சஅ- கிரந்தமுண்டென்றறிக.

இதல்லாமலிந்த ஆகமங்கள்- ௱௬௰௬- பேதமாயிருக்கும். அஃதெப்படி யென்னில் காமிகமாவது உத்தர பயிரோத்தரநாரசிம்ம வென்று-௩- பேத மாம். இனி-உ-ஆன-யோகஜமாவது பீணசிரோத்ரம் தாரதந்த்ரமசவுக்கியாக ம்-சாந்தாக்கியாகம யோகமென்று-௫-பேதமாயிருக்கும். இனி-௩-ஆன சிந்தி யாகமமாவது சுசிந்தியாகம-வாம-தந்த்ர பாபஞகன சரோத்வ அமிர்தாகம மென்று-௬- பேதமாம்-இனி-ச-ஆன- காரணகமமாவது, காரணதந்த்ர பாவ

ணதந்த்ர தார்க்ஷியதந்த்ர மகேந்திரதந்த்ர ஈமதந்த்ரமாரணதந்த்ர ஈசான தந்த்ர மென்று-எ-பேதமாம். இனி- ரு-ஆன- அசிதாகமமாவது ப்ரப்ரூதாகம பரோபுதாகம பார்வதிதந்த்ர பத்மசங்கிதை யென்று - ச - பேதமாம். இனி-கூ-ஆன தீப்தாகமமாவது அமேயாகம ஆஸ்யாகம அஸங்கியாகம அமிர்தாஜனகம அநந்தாகம மாதவோதாகம அத்பிறுதாகம அமிர்தாகம மென்று-அ- பேதமாம். இனி-எ-ஆனசூட்சுமாகமமாவது சூட்சுமசங்கிதை யென்று- க- பேதமாம். இனி-அ-ஆன ஸஹஸ்ராகமமாவது, அதிதாகம அமலாகம சுத்தாகம - அப்ரமேயாகம ஜாதியானகம ப்ராபூக்த்ரயாகம விபுதாகம அஸ்தாகம அலங்காராகம சுபோக்தாகம மென்று- ௰-பேதமாம் இனி- கூ- ஆன ஹம்சுமானகமமாவது வித்யாபுராணம பாஸ்வராகம நீலலோகிதம தத்ரப்ரசிரனகம ரூததற்சங்கும ஆத்மாலங்காரம காவியாகம கௌதாகம மஹேந்த்ராகம ப்ரம்மாகம வசிஷ்டாகம ஈப்ராணேத்ரம வென்று-௰௨- பேதமாம் இனி-௰-ஆன சுப்ர பேதாகமமாவது இதின் பேதம்-ச- கண்டுகொள்க.

இனி ௰க-ஆன-விஜயாகமமாவது விஜயதந்த்ரம உற்பவதந்த்ரம அகோரதந்த்ரம மிர்த்தியநாசகதந்த்ரம குபேரதந்த்ரம விமலதந்த்ரம மஹாகோர தந்த்ரம வென்று-எ-பேதமாம். இனி-௰௨- ஆன-நிஸ்வாஸாகமமாவது நிஸ்வாஸம உத்தர நிஸ்வாஸம மூகோதயம நிஸ்வாஸநயநம நிஸ்வாஸகாரிகேகம கோரஸம்மிதைநம சுசௌக்யடிக்ஞான வென்று - எ- பேதமாம். இனி ௰௩-ஆன ஸ்வாயம்புவாகமமாவது ஸ்வாயம்புதம ப்ரஜாபதிம்நம பகுதநந்த்ரம் வென்று-௩-பேதமாம் இனி- ௰ச - ஆன ஹனலாகமமாவது ஆக்நேய மென்று-க-பேதமாம் இனி- ௰ரு - ஆன வீராகமமாவது ப்ரஸ்தாரதந்த்ரம ப்ரஸ்வாததந்த்ரம ப்ரவோததந்த்ரம. ஹோததந்த்ரம போதகதந்த்ரம அமோகதந்த்ரம மோகசமையதந்த்ரம சகடதந்த்ரம சாகடியதந்த்ரம ஹலதந்த்ரம விலேஹனதந்த்ரம பகுததந்த்ரம வீரதந்த்ரம வென்று-௰௩-பேதமாம். இனி ௰சு- ஆன இரௌரவாகமமாவது கலாதஹனம காரவோத்ரம கௌமாரம காரும மஹாகாரும இந்தாகம வென்று-கூ- பேதமாம். இனி-௰எ- ஆன மகுடாகமமாவது மகுடதந்த்ரம மகுடோத்ரம வென்று- உ - பேதமாம். இனி ௰அ- ஆன விமலாகமமாவது அனந்தபோதாகம ஹக்ராந்தாகம ஸ்ரீதவஹஸ்ராகம ஹலிக்ர்தாகம ஹற்புதாகம மாரணதந்த்ரம வென்று- கூ- பேதமாம். இனி-௰கூ-ஆன ஸந்த்ரக் ஞானகமமாவது - ஸ்தாஸம்மிதை ஸ்தாணு ஸம்மிதை மஹதந்த்ரஸம்மிதை இரததந்த்ரஸம்மிதை நந்திகேஸ்வரஸம்மிதை ஏகபாதபுராணஸங்காரம நிலபத்ரதந்த்ரம சிவபத்ராகம கலபேதாகம ஸ்ரீமுகாகம சிவசாஸனகம சிவசேகராகம தேவிமத மென்று- ௰ச- பேதமாம். இனி உ௰- ஆன பிம்பாகமமாவது சதுர்முகதந்த்ரம லயதந்த்ரம மஹாயோகம ஸ்ஸ்தபாகம ப்ரதிபிம்பாகம ஹத்தாலங்காரம வாயுவீயதந்த்ரம காடிகதந்த்ரம குதூடிநீகாம துலாவிருத்தம துலாயோகம குஷ்டிமதந்த்ரம வர்க்கசேகரம மஹாவித்யேம மஹாசௌரம வென்று-௰ரு-பேதமாம். இனி-உக-ஆனபுரோற்கீதாகமமாவது காவாஸாகம வாரஸதந்த்ரம பிங்களமதம பாசபெந்தாஸம்மிதை தண்டதந்த்ரம குஜதந்த்ரம தனுதாரிணம சிவக்ஞானம விக்ஞான

ம திரிகாலஞ்ஞானம ஆயுர்வேதம தனுர்வேதம சர்ப்பதம சுரூஷம் பேதனஸ ம்மிதைபாதஹாதோத்யம என்று-௰௬- பேதமாம். இனி- உஉ- ஆன இலளி தாகமமாவது இலளிதம் இலளிதோத்ரம கமாரதந்த்ரம விக்நேஸ்வராகமவெ ன்று-ச-பேதமாம். இனி-உ௩-ஆன சித்தாகமமாவது ஸரோக்தம தேவஜோ க்தம காலபேதம சத்திமண்டலம வென்று-ச- பேதமாம். இனி-உச-ஆன ச ந்தானஸர்வோத்தமாகமமாவது இலிங்காத்தியக்ஷம சுதியக்ஷம சங்காரதந்த் ரம மஹேஸ்வராகம ஹஸங்கியாதந்த்ரம ஹனிலாகம துவந்த்வாகம வென் று-எ-பேதமாம். இனி-உ௫-ஆனபாரமேஸ்வராகமமாவது மாதங்கதந்த்ரம எ க்ஷணிசாஸ்திரம பரமாகம பௌஷ்கிரம சுப்ரயோகம ஹம்ஸாகம ஸாமான் யாகம வென்று-எ-பேதமாம். இனி-உ௬-ஆன கிரணாகமமாவது கருடாகம நைருத்ரியாகம நீலதந்த்ரம ரூக்ஷாகம பாநாகமவைக்ரவாகம புத்தாகமப்ரபு த்தாகம காலதந்த்ரம வென்று-௯-பேதமாம். இனி-உஎ-ஆனபேதாகமமாவது இதின் பேதம்-ச- கண்டுகொள்க. இனி-உஅ-ஆன வாதுளாகமமாவது த்வா தூலம உத்தரவாதூலாகம காலஞ்ஞாநாகம ப்ரரோசிதாகம சர்வஷ்டாகம சி நஷ்டாகம நித்யாகம சுத்தாகம மஹாநாகம விஸ்வாகம விஸ்வாத்தாகம் வென்று-௰௧-பேதமாம் இப்படி- உஅ - ஆகமங்களில்- ௱௧௰௬- பேதமுண் டென்றறிக.

இனி முன்சொன்னசகல ஆகமங்களிலுஞ் சரிதை கிரியை யோக ஞா னமென்று நான்குபாதமாம்இதிற்சொல்வது பதி குண்டலி மாயை பசு பாச ந் தீட்சையென்று ஆறுபதார்த்தமாம் இத்துமுகத்தாலே நிற்கதமானஞா னம் பிறத்தியாதிப்பதார்த்தரூபஞேயம் லிங்கார்ச்சனை லட்சணம் அனுஷ்டி ய பஸ்மாதாரணகமகஅதிகிருதமான சிவமந்திரரூபசாதனம் சிவசமானதாமு த்திரூபசாத்தியம் ஆகப்பதார்த்தம் - ௬ - இதுகளைப் பிரதிபாதிக்கும். இனித் தீட்சா விசேஷயுக்தமான அனாதிசைவ ஆதிசைவ மகாசைவஅனுசைவ அவா ந்திரசைவ பிறவாசைவ அந்தரசைவ மென்று - எ - விதமாம் இதிற் சிவனே அனாதிசைவன் சிவன் முகம் - ரு - ல் தீட்சதரான கோப்தசுகாதிரிஷி யேஸ் வரரோ ஆதிசைவர் இந்தரிஷிகள் கோத்திரமுமாய்த் தீட்சதருமான சிவதத்து வரோ மகாசைவர் சிவஸம்ஸ்காரியான க்ஷத்திரியரோ அனுசைவர் சைவதீட்சா சம்பன்னரான சூத்திரரோஅவாந்திரசைவர் சிவதீட்சாயுக்தரான அம்பஷ்டகு லாலாதிகளெபிறவாசைவர் தீட்சாவிதரான அந்தரசைவரென்று ஆகமஞ் சொல்லும் பின்னு மிந்தச் சைவம் - ச - விதமாம் வாமதட்சண மிசிர சித்தா ந்த மென்று -ச - பேதமாம் இதிற் சத்திபரமானதேவாமம் வயிரவபரமான தேதெட்சணம் சுத்தமாதுற்பரமானதே மிசிரம் பரசிவமானதே சித்தாந்தம் பின்னு மிந்தச்சைவங்களில் சாமான்னியசைவம் மிசிரசைவம் சுத்தசைவம் வீரசைவம் என்று - ச - விதமாம் இதில் விபூதிதாரணமந்திரத்தினாலே சுத்தா த்மனாய் சுயம்பு லிங்கந் தேவநான ரிஷிமானவாதி பிரதிஷ்டைலிங்கம் இ துகளைக் கண்டவிடத்திலே நமஸ்காரப் பிரதெட்சணபூசைகள் வித்தானுசா

ரமாய்ச்செய்து பத்தமாஹேஸ்வர விஸ்வாஸம் சிவபூசையிலாதரவு சிவார்ச்சனை சிவகாரியவிவகாரஞ் சிவபுராண சிரவணஞ் சிவத்தியான சிவானுகூலம் பரமசாத்திகமென்கிற அஷ்டவிதபத்தி யுக்தனுயிருக்கிறவன் சாமான்னியசைவன் இனிப் பீடத்தின்மேல் சிவலிங்கம் விஷ்ணு உமை ஷண்முக விக்கினேஸ்வர சூரியன் இந்த ஐந்தையுமாவரணதேவதைகளாய்ப் பூசைசெய்து இதுக்கேற்றகாரியத்துடனுங்கூடி நடக்கிறவன் மிசிரசைவன் பின்னும் அனுதிசைவனுன சதாசிவனை ஐந்துமுகத்திலும் தீட்சதரான கவுசிக காசிப பரத்துவாச அத்திரி கௌதம ஆதிசைவரான இவர்கள் கோத்திர சம்பவனுயிருக்கிற மகாசைவனுகிறவனே சுத்தசைவன் இவன் சகலாகமபுராண சாத்திரவேதசம்பன்னனுய்த்தூலசூட்சுமகாரணமாகிறலட்சணமும்சுத்தமிசிர சங்கிரண சிவசொரூபங்களுஞ் சிவாகருஷ்ணுதிகளுஞ் சகலதேவதாகருஷ்ணகளும் லிங்கப்பிரதிஷ்டைமுதலானசகல தேவதாப்பிரதிஷ்டைகளும் லிங்கஸ்தாபனுதி சர்வதேவதாஸ்தாபனுதிகளும் நித்தியோற்சவ மாஹோற்சவ ரதோற்சவ ரவிக்கிரமங்களும் புட்ப கந்த மது இட்சு நாளிகேர க்ஷீர ரஜநிசூரண சர்ப்பிதயிலசெல்வன என்கிற சிவனத்துவாதேசொற்சாகங்களு மிதுமுதலான ஆர்த்மார்த்தபசார்த்த பூசகனே சுத்தசைவனென்றறிக. பாவன் கன்ம மின்னம் வெகுவா யுண்டென்றறிக. இனிமேல் வீரசைவலட்சணம் இனிமேல் வீரசைவமதஞ் சொல்லுகிறவிடத்திலே காண்கவென்றறிக.

---

## உரு-வது—அத்தியாயம்.

## சுத்தசைவசித்தாந்தம்.

### சுத்தசைவசித்தாந்தபதி

(சொருபலட்சணம்.)

எசு. பலகலையாகமவேதம் யாவையினுங்கருத்துப் பதிபசுபாசந்
தெரித்தல் பதிபரமேயதுதா, னிலவுமருவுருவின்றிக்குணங்
குறிகளின்றி நிற்குணமாயேகமாய்நித்தமாகி, யலகிலுயிர்க்கு
ணர்வாகியசலமாகி, யகண்டிதமாயானந்தவுருவாயன்றிச், செ
லவரிதாய்ச்சேர்கதியாய்ச் சிறிதாகிப்பெரிதாய்த் திகழ்வதுத
ந்சிவமென்பர் தெளிந்துளோரே.

மெய்மொழியில்.

எரு. இப்படியிருப்ப தொன்மென்றியம்புவதொன்றதின்றி
யொப்புடனுணர்வுசூழ்ந்த வுணர்விறந்துணர்வாயென்றுந்
தப்பில்பேரின்பமாகிச் சந்ததம்விளங்கியெங்கு
மப்படியிருப்பதொன்றங் கதற்குறுஞ்சிவமதன்றே,

எசு. எல்லாந்தன்னுள்ளதாகி யெல்லாத்துக்குள்ளுமாகி
சொல்லாதபொருளுமாகித் தொல்லையாயெல்லையின்றி
யல்லாதவடிவொன்றின்றி யானந்தவடிவேயாகிக்
கல்லாதோர்காட்சியாகிக் கலந்துதானிருந்ததன்றே.

தத்துவாத்துகரம்.

எஎ. நானுவிதமாய் முதனடுவீறுகிஞானநேயத்தோ
டானுதுயர்தத்துவமாகிபவைதானல்லவறிவாகி
யூனுருயிருள்ளுயிராகி யுயர்சத்தியஞானத்துடனே
தானுமனந்தானந்தமதாய்த்தானே தானுந்தற்சொருபம்.

எஅ. துரியாதீதப்பரமசிவந் தோன்றுதந்தப்பரமசிவந்
தெரியாவுயிர்க்குளானசிவஞ் செகமுற்றுமதாய்த்தீர்ந்தசிவ
மரியாவுதியாதானசிவம் மாசற்றொளிர்வதான்சிவ
மரிதாஞ்சொருபானந்தசிவ மனைத்தாயில்லவாயசிவம்.

தடத்தலட்சணம்-சிவம்-௩௧-பேதமான விபரம்.

எகூ. நாதநற்சிவாகமஞ்சொல் நாலுபாதத்துஞான
பாதநற்பொருள்கண்மூன்றும் பதிபசுபாசமென்றே
யாதிநற்பதிசிவன்று னணுப்பசுபாசமைந்தாந்
தீதிலாப்பதியாயுள்ள சிவமூதற்றத்துவங்கேள்.

அ0. திரிவிதத்துவங்கள் சிவசதாசிவமகேசம்
விரியுநற்சிவமதென்றும் விளம்பிடிற்சகளமல்ல
புரிதருசகளாசகளம் பொருந்திடுஞ்சதாசிவன்முன்
றெரிதருசகளமாகுஞ்செப்பிடின்மகேசமன்றே.

முன்சொன்ன ஒன்றானபதிதானே சதாசிவன்-௫-பேதமும் மகேஸ்வான்-உ௰௫-பேதமும் ஆக முப்பதுபேதமுமானதெப்படியென்னில்.

அக. தத்துவஞ்சகலோம்பத்தி தான்சகசிருட்டியாக
வுத்தமயோகிகட்கு முபகாரநிமித்தமாகச்
சுத்தநற்சிவத்தோர்சிந்தை சுபாவசத்தியினாற்றோன்றி
யத்திலாயிரத்திலொன்றி லரும்பராசத்திதானே.

இந்தப்பராசத்தி ஆயிரத்தொன்றில்ஆதிசத்தி யிதிலிச்சாசத்தி யிதில்ஞானசத்தி யிதிற்கிரியாசத்தி யிந்த-௫-ம் ஒன்றிலொன்று ஆயிரத்தொன்றானது இந்த-௫-ம் நிஷ்களமென்றறிக. இந்த நிஷ்களசத்தி-௫-ல் ஒன்றிலொன்று பத்திலொன்று பத்திலொன்றாக சிவசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியம் மூர்த்திசாதாக்கியம் கத்துருசாதாக்கியம் கன்மசாதாக்கியம் இந்த-

ரு-ந் தோன்றி யிந்த-ரு-ம் தத்துவமூர்த்தி பிரபாவமென்று மூன்றுவி தமாய்க்கூடித் தியானித்துப் பூசிப்பார் நிமித்தமாக ஒன்றாய்ச் சகளநிஷ்க ளமாய்ச் சதாசிவதேவரென்றுங் கன்மசாதாக்கிய மென்றும் பேராய் எந் நேரமுஞ் சிவத்தியானத்தால் சதாசிவரா யிருப்பாரென்றறிக. இந்தக்கன் மசதாசிவரோ விந்துபீடமாய் நாதம் லிங்கமாம் இதில் விந்துவாவது அடிபீ டமாய்க் கன்மசாதாக்கியரானதென்றும் நாதமாவது லிங்கமாயிற்றென்று ங்கொள்க அதெப்படியென்னில் கன்மமே அடிபீடம் கத்துருவேகண்டம்மூ ர்த்தியேயிதின்மேற்பாணிவட்டம் அமூர்த்தியே யிதின்மேல்துவாரம் இந்த நான்குங்கூடில் விந்துவாம் இதின்மேல் சிவசாதாக்கியம் லிங்கமாம் இதுநா தம் இப்படி விந்து நாதமாய் லிங்கமாயிற்றென்றறிக. இந்தக்கன்மசதாசி வ தத்துவமூர்த்தி பிரபாவமானது சத்தியிலேதோன்றின் சாதாக்கியம்-ரு ந ம்மூர்த்தி யிந்த-ரு-ல் சிவசாதாக்கியமுதலாக ஒன்றிலொன்று சிவதத்து வம் சதாசிவதத்துவம் பரதத்துவம் ஈஸ்வரதத்துவம் ஈசானதத்துவம் இந்த ரு-தத்துவமுந் தோன்றும்வகைநிமலசத்தி-ரு-ம்-மகாமாயாவிந்துவில் பதியு ம்போது சூரியகிரணத்தால் காந்தத்தில் அக்கினிபோல நிவிர்த்தாதிகலை-ரு ம் உண்டாயிதனால்-ரு-சாதாக்கியத்தில்-ரு-தத்துவமுண்டானதென்ற றிக. இந்த-ரு-சாதாக்கியத்திலுஞ் சிவகலையாகிற இந்திகை தீபிகை நோ யிகை- மோசிகை-ஊற்சுவர்காமினி யிந்த-ரு-கலையுண்டா யிதனாலேசாதா க்கியங்கள் மூர்த்தியாயிற்றென்றறிக. இந்த தத்துவமூர்த்தி இரண்டுங் கூடி னவிடத்தில் பிரபாவமாயிற்றென்றும் கன்ம-சதாசிவர்-விந்து-மற்ற நால்வரு ம்-நாதமென்றுமாம். இனி விந்துநடுவே நாதங்கெதம்-நாதநடுவே-மூர்த்திகெ தம்-மூர்த்திநடுவேதத்துவங்கெதம்-தத்துவத்தினடுவே-சிவங்கெதம் இப்படி யைந்து சாதாக்கியமுமொன்றாய்க் கன்மசாதாக்கியமொன்றுபோம். இந்தச்- சதாசிவர்-கன்மசதாசிவர்முதல் ஒன்றையொன்றாய்ச் சரிக்குமென்றும் இந்த வைந்துஞ் சிவனை ஆசரிக்குமென்றும் இப்படி தத்துவமூர்த்தி பிரபாவமான லிங்கத்தில் சருவபூதமாயிருந்துள்ள சராசரங்களெல்லாந் தோன்றுகிறதற் கும் லயமாகிறதற்கும் யோனியிலிங்கமாயிருந்துள்ள வதிவிருப்பவர் கன்மச தாசிவரென்றறிக. இவர்கத்துருவில் இவர் மூர்த்தியில் இவர் அமூர்த்தியில் இ வர் சிவத்தில் இவர் பரமசிவத்திலடைந்திருப்பர் இப்படி-ரு-முகமும்-ல-அஸ்த மும்-ல-ஆயுதமுமுடைய கன்மசதாசிவருடைய ஆயிரத்தொன்றில்-மகேஸ்வ ரதேவராய்-இவர்-உ௰ரு-அவதாரலீலையாய் விளையாடுவரென்றறிக.ஆகப்-பதி- க-சதாசிவன்-ரு-மகேஸ்வரன்-உ௰ரு- ஆக-௩௰க-பேதமுமூன்றுவிதமாயிற்று. அதெப்படியென்னில் பரமசிவன்-க-ரு-சாதாக்கியமும்-க-உ௰ரு-மகேஸ்வர னும்-க-ஆகத்-தத்துவம்-௩-இந்த மூன்றின்விரிவுஞ் சுருங்கக்கூறினதென்ற றிக. இதில்மாகேசுவரத்திற் கோடிகூற்றில் உருத்திரர் இவரில் கோடியிலரன் மால் வேதன்தோன்றினரென்றறிகசாட்சி.

அஉ. கோதிலாமகேசர்தம்பாற் கோடிகூற்றுரன்றில்வந்து
தீதிலாவரன்மால்வேதன் செனித்தனரென்றுகொள்ளணீ

சோதியாமிரவியிந்து சுடருமுக்கண்ணிற்றேன்றி
யாதிநற்கணேசன்கண்டத் தறுமுகனிரதையத்தே.

அ௩. பன்னிராதித்தருந்தி பகர்ந்திடிலுரோமமான
தன்னிலேநாலேழ்கோடி தனித்தனிதேவர்தோன்றித்
துன்னியேயிருடிமாரும் தோன்றினர்நாலேழ்கோடி
மன்னிபமகேசரோம மற்றவற்றக்கிறத்தே.

அ௪. தத்துவபேதஞ்சொன்னேஞ் சத்தியும்பவங்கேள்விந்து
பத்திலொன்றுமாபதிக்குப் பத்திலொன்றுமுமாம்பி
யத்திலுங்கெளும்பியாங்கே யதிலுமீசுவரியுமாங்கே
சுத்தமாமனோன்மணியும் தோற்றினளதிலுமாங்கே.

அ௫. உன்னுமம்மனோன்மணியா மதன்கோடிகூற்றிலொன்றின்
மன்னுநற்கவுரிதோன்றி மற்றவள்கோடிகூற்றிற்
றன்னிலேசெல்வியோடு சரஸ்வதிதுர்க்கையாதி
பின்னுமாயனந்தசத்தி பிறந்தனவென்றுகொண்ணீ.

இன்னுமொருவிதம் சிவநெறிப் பிரகாசத்தில்.

அ௬. ஞானமேவடிவாமாறசத்தாருவாகும்ஞானமுடன்கிரியையொத்துநண்ணியிடும்வடிவ, மானதாலுத்தியுத்தாரூபாரூப மாயிடுவர்கிரிகைதானதிகமாகி, யூனமாஞானமுடனுதித்தவாற்ரு லுருவமாம்பிரவத்தருண்ரின்மூன்று, மீனமானம்பாசமொழிக்கப் பாவித்திடப்பூசித்திடவணங்கியேற்றவன்றே.

என்றது சத்தாஞானமே சொரூபமாகையால் அருவமாகும் ஞானக்கிரியையொத்தவிடத்தி லுதித்தவர் யுக்தி யுக்தராகையால் அருவாருவமாம் இனிக் கிரியைபதிகமாய் ஞானஈனமா யுதித்தவராகையா லுருவமாகும் இவர் பிரவர்த்தராகும் இவர் பாவிக்கப்பூசிக்க வணங்கியேற்ற விருப்பாரொன்றறிக.

அஎ. ஈசருலகனைத்தினையுமுருவமாக்கி யிசைந்துலகுக்குயிருமாயிருப்பர்சதாசிவராம், தேசருலகனைத்தினுக்கும் பரமகாரணமாய்ச் சிந்திக்கப்படுவராம் திகழுஞ்சிற்றுயிர்க, ணேசாருட்சத்தருலகனைத்தினுக்குமதீத நிலையாகநின்றிடுவர் நினைப்பவரிதாயே, மாசரிதையறியாமற் றேவரிலேயொருவன் மாதேவனென்றுரைக்கும் வாய்மைபழுதாமால்.

இவர்களுக்குச் சத்தனென்றும் பரமசிவனென்றும் யுக்தியுக்தா கன்மசாதாக்கியர் சதாசிவனென்றும் கன்மசாதாக்கியர் சதாசிவனென்றும் பெயர் பிறகு பிரவர்த்தரென்றும்மகேஸ்வரரென்றும்பெயர்ஆகச்சத்தாயுத்தியுத்தர பிரவர்த்தரானதென்றறிக. இனிப் பரமசிவனிற் சதாசிவன் சதாசிவனில் மஹேஸ்வரன் (உ௫) பேதம். மஹேஸ்வரனில் உருத்திரன் இவன் வலதுபாரிசு

இதயம் பிரமாவும் இடதுபாரிச இதயத்தில் விஷ்ணுவு முண்டானென்ற றிக. இந்த உருத்திரருக்கு ஸ்ரீகண்டருத்திரனென்றும்பெயர்.

சித்தியாரில் உதாரணம்

அஅ. சிவஞ்சத்திநாதம்விந்து சதாசிவன்றிகழுமீச
னுவந்தருளுருத்திரன்றான் மாலயனென்றிலொன்றாய்ப்
பவந்தருமருவநாலிங் குருவநாலுபயமொன்றாய்
நவந்தருபேதமேக நாதனேநடிப்பனென்பார்.

சிவஞ் சத்தி ௭-து பாநாதம் பரவிந்து சுத்த தத்துவத்தில் நாதவிந்துவுக்கு அபரநாதம் அபரவிந்து இந்தநான்கும் அருபஞ் சதாசிவன் அருபாருபம்மஹேஸ்வரன் உருத்திரன் விஷ்ணு பிர்மா இந்த நால்வரும் உருவம் இந்த-௯-ம் ஒன்றிலொன்றுண்டாம் நவபேதமு மொருவனாகி நடிப்பனென்றறிக.

தத்துவரத்நாகரம்.

அ௯. முதனடுமுடிவொன்றில்லா முதுபாராற்பரம்பரந்தான்
றிதமுறவதனிற்சீரார் சிவானந்தசத்திதோன்றப்
பதியுறுபராற்பரந்தான் பயந்திடவதன்பாற்பன்னடைத்
திதழுறுஞ்சிவையேதோன்ற வதற்பரந்தெரிவாற்றோன்றும்.

௯௰. பதியெனுந்துரியாதிதப் பரத்தினிற்பரையாஞ்சத்தி
கதிதரத்தோன்றுந்தானே காரணசத்தியாகி
விதிதருமிச்சாஞானக் கிரியைபான்மிகுமூன்றாகத்
துதிபெறுசத்திதோன்ற யாவையுமவற்றுட்டோன்றும்.

௯௧. வேறதாங்கிரியாசத்தி மிக்கவுற்சாகசத்தி
பேறதாம்பிறபுசத்தி பெருகுமந்திரத்தசத்தி
கூறுமாறடையேவயாகக் குறித்ததொல்டானசத்தி
ஈறிலாமுன்னர்மூன்றிற்றென்றிடிமிவையேரூபம்.

௯௨. அவற்றுளேயிச்சாசத்தி யானதிற்குடிலைவேறாங்
தவத்தகுண்டலினிதாரந் தானிவைமூன்றுந்தோன்ற
வுவப்புறுஞானசத்தி தனிலுயிர்பரையேமற்றைக்
கவற்புறுபரையிலாய பராபரைகருதுமூன்றும்,

௯௩. அவ்விடைக்குடிலைதன்னிற் பரவிந்துபரநாதம்மாஞ் [ய்
செவ்வையிற்றேன்றத்தன்னுற் செறிந்தவம்பரனோர்வன்னை
குவ்விடைத்தோன்றவாக்காய்க் கூறுமென்னெனகலாதி
யொவ்விடைத்தோன்றவிவ்வா றுள்ளதாங்குடிலோற்பத்தி.

௯௪. அன்னதேயன்றிவேறாங் குண்டலினியகத்துள்
மன்னியவபரநாதம் வருதருமபரவிந்து

தன்னிலீசானன்றன்பான் மகேசன்பான்மகேசையாகு
முன்னியமகேசைதன்பா லுருத்திரனுதித்துளானுல்.
௬௫. ஓதியவுருத்திரன்பா லுயரரியவன்பால்வேதா
வாதியாம்பிரமனுலிவ் வகிலிடமனத்தியான
சாதவண்டசமுற்பிசஞ் சுவேதசஞ்சராயுசத்தோ
டோதலாஞ்சனனபேதஞ்சிருட்டியாலுதித்ததன்றே.
௬௬. அன்னகுண்டலினியிற்றுனைதத்துவமாமாயை
துன்னியமாயைதொல்லை வயிந்துவஞ்சூழைம்பாச
மின்னுவிஞ்ஞாகலத்தர் பிரளையர்சகலர்வேறு
மன்னுமைவகையாமாத்மா வாய்வரும்வகுப்பினோடே.
இதனுள் ஐவகையாத்மாவானது ஆத்மா - அந்தராத்மா - பூதாத்மா - பரமாத்மா - ஞானாத்மா - என்றுகொள்க.
௬௭. கூடியகுடிலைமூன்று வலையங்குண்டலினியைந்தா
நாடியமூன்றுகோணம் வயிந்துவநாடுவட்டம்
வீடியவிந்துநாதப் பிரணவம்வீசுநாக
மாடியவிந்துவட்டமாமறை யறையுங்காலே.
இனி யாத்மாவுக்குச் சுத்த தத்துவம்- ௫ - ம் இதி லாத்மாவுக்குச் சிவதத்துவ ஞானமாயிருக்கும். சத்தி கிரியை யெழுப்பும் சதாசிவம் ஞானங்கிரியைசமனுயெழுப்பும் ஈஸ்வரம் ஞானஈனமாம் சுத்தவித்தை கிரியாயீனமாம் இப்படி யாத்மநிமித்தமாய்த் தொழிற்படும் இந்த - ௫ - ம் வயிந்துவத்திலுண்டாய்ச் சதாசிவாதிகளுக்குத் தனுகரணபுவனபோகமாயிருக்கும் இந்தவயிந்துவத்தில் அகாராதி-௫ - ம்-௫-கலையாம் இந்தக் கலையாகிற அகாராதியில்-௫-வாக்குண்டாம் இந்த அகாராதியாகிற கலையில் ஆறத்துவாவுமாகும்.
௬௮. அத்துவாவாகிநின்ற வாதிகலையோரைந்தா
லுத்தவீசானமூர்த்த மைந்தோடாமுயரிரெட்டு
வைத்திடுமகேசமாறாறுடனூற்றெண்பானின்மற்ற
துத்தனபலவுஞ்சுற்ற தத்துவத்துதித்தொடுங்கும்.
இனிக் கிரியாபூமி ஞானபூமி யோகபூமி அனுபவபூமி யிந்த - ௪ - வில் கலை - ௨௮ - ௱௰ -இதுகளெல்லாம் பரையாலேயாகும் பரசிவன் சந்நிதி சாட்சியாக முதல் துணை நிமித்த மூன்றால் அண்டபிண்டங்களைக் குலாலன் மண்ணைக்கொண்டு கடங்களைவனைவதுபோல் சிவன் பரையைக்கொண்டு மாயையாகிற மண்ணாற்செய்வான் இனி முன்சொன்ன பராசத்தியி லிச்சாஞானக் கிரியாசத்தியால் நவசத்தியுண்டாய் நவசத்தியா லனந்தகோடிசத்தி யுண்டா யெல்லாஞ்சத்தி மயமாய்ச் சிவபரனுஞ் சத்தியாலாமென்றும் இப்படிச் சிருஷ்டிவிதங்க ளனேகமாய் ஆகமங்கள் சொல்வது உகாந்தபேதங்களால் வந்ததென்றறிக.

௬௬. காலம்போலவடிவிலதாயுருவாதியாக்கிக் காயவனல்போலவி
னையின்கனைங்கடன்னை, யேலவேபாகமுறச்செய்துகாயத்தெ
ழிற்கிரியையாத்மாத் தானியற்றறன்னைப், போலவேசராசர
ங்கடன்னினின்று புரிந்திடுவன்பிரேரகத்தைப் புனிதன்ருனு
ஞ், சிலமோதிரிவில்லேக்கதிரோன்முன்னஞ் செய்திகமலாதி
கள்போற்றெரிந்துகொள்ளே.

இதல்லாமல் மதமொன்ருகிலுந் தந்திரபேதங்கள் வெகுவிதமாகையாத
சிருஷ்டிவிதங்களும் பேதங்களாயிருக்கும் இதுகளெல்லாஞ் சொரூபத்தில் ல
டத்தலட்சண மென்றறிக.

இனிச்சுத்தமாயை யுபக்கிரமலக்ஷணம்.

௩. ஆரும்பரமசிவன்றன் பராசத்தியிற்குடிலே
சேருங்குடிலேயினுதமங்நாதத்திற் சேர்ந்தவிந்து
சாருநல்விந்திற்சதாசிவந்தோன்றுஞ் சதாசிவத்திற்
கூருமகேசமகேசத்தில் வித்தையுங்கூட்டிடுமே.

௩௧. பதிபசுபாசமூன்றும் பார்த்திடின்வியாபிகித்தம்
பதியவன்சத்திமூன்றும் பரசத்திக்கனந்தசத்தி
விதியினுற்பசுவனுதி மலரிறைவிமலனுகும்
கதிபசுபதியையொத்துக் கண்டுகொண்டிருக்கலாமே.

என்றது-பரசிவன்பால் பராசத்தியருளால் குடிலையாகிற சுத்தமாயை
யாவது கர்த்தாவினுடைய லயபோகவதிகாரங்களுக்கிடமாய்ச் சுத்தமாய்ச்
சடமாய்க் கர்த்தாவுக்குப்பரிக்கிரக சத்தியுமாய் நித்தமாய்க் காரணமாயொ
ன்ருய் அச்சுத்தாசுத்த மிரண்டிலும் வியார்த்தமாய் விஞ்ஞானகலருக்குத்
தனுகரண புவனபோகமும் பிரளயாகலர் ——ருக்குச் செலுத்துந் தத்துவ
மாயுமிருக்கும் இந்தமாயையில் சிவசத்தியதிட்டிக்கையால் சிவதத்துவம் -ரு-
ம் கலைகள் - ரு-ம்-தோன்றும். அதெப்படியென்னில் பரமசிவன் பராசத்தி
சொரூபமாய்த் தனது ஞானசத்தியைக்கொண்டு அதிஷ்டிக்கையால் முழு
ஞானமான சிவதத்துவமும் தனது கிரியாசத்தியைக்கொண்டு அதிஷ்டிக்
கையால் முழுக்கிரியையான சத்திதத்துவமும் தனது ஞானக்கிரியையிரண்
டையுஞ் சமனுகக்கொண்டு அதிஷ்டிக்கையால் ஞானக்கிரியை சமனுனசதா
சிவதத்துவமும் ஞானானமுங் கிரியாதிக்கமுமாக அதிஷ்டிக்கையால் ஞான
ஈனமுங் கிரியாதிக்கமுமான ஈஸ்வரதத்துவமும் கிரியாஈனமும் ஞானுதிக்
கமுமாக அதிஷ்டிக்கையால் கிரியாஈனமும் ஞானுதிக்கமுமான சுத்தவித்தை
யும் இப்படி ஞானசத்தி கிரியாசத்திகளைக் கொண்டு சிவதத்துவம் - ரு - யுந்
தோற்றுவிப்பானென்றறிக. இனி முன்சொன்ன பரன் பராசத்தியும் சுத்
ததத்துவத்திற் சிவஞ் சத்தியும் ஆ - ச - ம் கர்த்தாவுக்கு நிஷ்களமான திரு
மேனியும் லயத்தானமுமென்று பேராம் இனிச் சதாசிவன் சதாசகளம்

மஹேஸ்வரன் உருத்திரன் விஷ்ணு பிரமா இந்த நால்வருஞ் சகளம். இந்த ௯-ம்- சிவனுக்குக் காரண சூட்சும ஸ்தூலதனுவாயிருக்குமென்றறிக. இனி முன்சொன்ன குடிலையிற் றோன்றினவிந்துவிற் சூக்குமாதி - ௪ - வாக்கும் -௫௧- அட்சரமுஞ் சத்தகோடிமந்திரங்களும் - ௨௮ - திவ்வியாகமமும் - ௪ - வேதமுந் தோன்றும். இனி முன்சொன்ன சுத்ததத்துவம் - ௫ - ல் சிவதத்துவத்திற் பரனிருக்கும் சத்திதத்துவத்திற் பராசத்தியிருக்கும் சதாசிவதத்துவத்திற் சதாசிவனிருப்பர் ஈஸ்வரதத்துவத்தில் மஹேஸ்வரனிருப்பார் சுத்தவித்தையில் உருத்திரதேவரிருப்பார் இந்தச்சுத்ததத்துவந்தோன்றினது குடிலையில் நாதம் நாதத்தில் விந்து விந்துவிற் சதாசிவம் சதாசிவத்தில் மகேஸ்வரன் மகேஸ்வரத்திற் சுத்தவித்தைதத்துவம் தோன்றினது இந்த - ௫ - ல் ஈஸ்வரதத்துவத்தையிச்சாசத்திசெலுத்தச் சாதாக்கியத்தையுஞ் சத்தியையுங் கிரியாசத்திசெலுத்தச் சுத்தவித்தையுஞ் சிவதத்துவத்தையும்ஞானசத்திசெலுத்த இந்த - ௫ - ம் காலதத்துவம்- ௭ - ம்- செலுத்த இந்த- ௭- ம்- ஆத்மதத்துவம் - ௨௪ - யுஞ் செலுத்துமென்றறிக. இந்தச் சுத்தம் - ௫- இ-முற்பாடுசொல்லக் கூடாது ஏனெனில் காலதத்துவமில்லாதபடியாலும் இதை நின்மலசத்திகள்- ௫- ம் சேட்டிக்கையாலும் சுத்தமென்றதென்றறிக. இனிப்பரன்பராசத்தி சதாசிவன்மகேஸ்வரன்உருத்திரன்இந்தவைவரும்சிவஞ்சத்தி சதாசிவம் ஈஸ்வரன் சுத்தவித்தையில் அமர்ந்திருப்பார்களென்றறிக. இதல்லாமல் அருவம்- ௪-ம்-சிவனுக்கு நிஷ்களமானகாரணதனுவாய் இலயத்தானமுமாம் ரூபாரூபம் சூட்சதனுவாயும் போகதானமுமாயிருக்கும். இதில் அட்சரசொரூபமாய் சகளமாயிருக்கிற பரை பைசந்தியான அபரநாத அபரவிந்துவும் அனுசதாசிவர்களுமடங்கும். இனியுருவம்-௪-ம்-சிவனுக்குச் சகளமானதூலதனுவா யதிகாரத்தானமுமா யிருக்கும். இதிலிவர்களும் அஷ்டவித்தியேஸ்வரரும் ஈஸ்வரதத்துவத்திலிருப்பார்கள். இனிச் சுத்தவித்தையில் சத்தகோடிமகாமந்திரங்களுஞ் சத்திசொரூபமாயிருக்கிற வியோமவியாபிமுதலான மந்திர ஆகமவேதங்களடங்கும். இவ்விடத்தில் சிவன் அருவம் ரூபம் உருவம் என்று மூன்றுவிதமாம் அப்போதுசத்தியுமூன்றுவிதமாம். அதெப்படியென்னில் சிவன் பரனானபோது சத்தியும்பராசத்தியாம் சிவதத்துவத்திற் சிவன்நாதமானபோது விந்து சத்தியுமாய் நிஷ்களமாம். கர்த்தா சதாசிவனாய்ச் சகளநிஷ்களமானபோது சத்தியும் மனோன்மணியாய்ச் சகளநிஷ்களமாம் கர்த்தா மகேஸ்வரன்உருத்திரன் விஷ்ணு பிரமாவானபோது சத்தியும் மகேசை யுமை திருவாணியென்று நான்காய்ச் சகளமாம் இனிக்கலையுற்பத்தி எப்படியென்னில்,

௱௨. பரஞ்சித்திலுதியாநின்ற பலகிரணம்பதிந்தாங்கா
யிரஞ்சித்தபோதுநாம மெழில்கொள்குண்டலிமாயைக்குச்
சிரஞ்சித்தின்புணர்ச்சியாலே சேறனைதமுன்கெற்பந்தாங்கி
யுரஞ்சித்தாநின்றுதானே யுலங்களீன்றதன்றே.

என்றது பரமாயிருந்துள்ள சைதன்னியசத்தியிலுதிக்கப்படாநின்ற கிரணங்களானவைசென்று விழுந்து இரஞ்சித்தபொழுதுமாயைக்குக் குண்டலியென்றுபெயராய்நிலையாயிருந்துள்ள சிற்சத்தியினுடைய கிரணச்சையோகத்தால் செகத்தைக்கெற்பந்தரித்துத் தானேசைதன்னிய சொரூபமாய்நின்று செகத்தையுண்டாக்கும்.

௱௩. பஞ்சசத்திவிந்துவினிற்பதியுங்காலை பரிதியொளி காந்தத்
தேபதிந்தபோதில்,விஞ்சுசுடருதித்ததுபோற்கலாசத்தியைந்
தை வேறறவேயீசானாதியைந்தா, யெஞ்சலிலாப்பஞ்சமந்திர
சத்தியுதிக்கு மிவைதனுவாய்க்கரும சாதாக்கியர்தானிசைந்
தே,தஞ்சமாயனைத்துயிர்க்குங் கருணைசெய்யச்சதாசிவதத்
துவத்திறையாய்த் தரிப்பர்தானே.

என்றது பஞ்சசத்தியானது விந்துவாகிற மாயாசத்தியோடு போய்க்கூடினபோது சூரியகிரணமானது காந்தத்திற் கூடி அக்கினிப் பிரகாசமுதித்ததுபோல் நிவிர்த்தாதிகலை ஐந்துமுண்டாம், அதெப்படி என்னில் பஞ்ச சத்திகள்தானே மாமாயையில் பிரதிபிம்பமானதே பஞ்சகலையாயிற்றென்றறிக. வேறறவேயென்றபதத்துக் கிப்பாவிதில் சொல்லப்பணியிலையாதலா லிந்தக்கலையின்செய்தியெப்படியென்னில் நிவிர்த்தியென்பதுதன்னிடத்தில் பொருந்தினவாத்மாக்களுடைய சங்கற்பம் நிவிர்த்திசெய்கையாம் இனிப் பிரதிஷ்டை யென்பது தன்னிடத்திற் பொருந்தின ஆத்மாக்களுக்கு முன்சொன்னசங்கற்பம் விடுதிநிலைபெற்றுத் திடமாகப் பிரதிஷ்டைக்கையாலென்றறிக. இனி வித்தியாகலையென்பது தன்னிடத்தில் பொருந்தின வாத்மாக்களுக்குச் சங்கற்பம் விடுதிநிலைபெற்றுத் திடமானத்திற்சருவார்த்தஞானம் பிரகாசிப்பிக்கையால் ஞானத்துக்கு வித்தையென்றுபெயராகையாற்கலைக்கும்வித்தையென்றுபெயராயிற்று. இனிச்சாந்திகலையாவது தன்னிடத்தில் பொருந்தினவாத்மாக்களுக்குச் சர்வார்த்தஞானப் பிரகாசத்தால் இராகத்துவேஷமின்றி யிருக்கையாலும் விகற்பஞானஞ் சாந்தமாகையாலுஞ்சாந்திகலையென்றுபெயராயிற்று, இனிச்சாந்தியாதீதகலையாவது தன்னிற் பொருந்தினவாத்மாக்களுக்கு அந்த விகற்பஞானஞ் சாந்தமானதென்கிற முன்னினைவுங்கழிந்து அதீதமாய்ப்பரமாகச் சொரூபமாய் நிற்கையாற் சாந்தியாதீதமென்றுபெயராயிற்று இந்தக் கலைகள்-ரு-ம்-தத்துவம் புவனங்களுமாத்தசொரூபமாயிருக்கும் இனி வாக்கு நாலும் அட்சரங்களாகிற வர்னமு மந்திரபதமும்ஆகம வேதங்களுஞ் சத்தசொரூபமாயிருக்கும். இனி மாமாயை சத்தமாகவும் அர்த்தமாகவு மிரண்டுவடிவாயிருக்கும் இதினுடையவிரிவை ஆகமங்களிற் கண்டுகொள்க. இனி முன்சொன்ன விந்துவில் வாக்குகள் தோன்றும் அதெப்படியென்னில் மூதலாதாரத்தில் விளங்காநின்ற விந்துவில் சூக்குமைதோன்றிச் சொல்லுதற்கரிதாய வறிவுமாய் விளக்கமுமாய் ஆத்மா பகுதியாலே ஒருநாதமுமாய்த்துரியதானத்தைப் பொருந்திநிற்கும் இதில்நிற்கிறநாதமான சூக்குமையில் பைசந்திதோன்றிச் சுழுத்தித்தானத்

தைப்பொருந்தி அட்சரங்களை வெவ்வேறாய்த் தோற்றுவித்துத் தன்னுள்ளேயொடுக்கிப்புத்தியினுற் சுட்டப்படாத வக்கரத்தையுடைத்தாய்ச்சத்தமர்த்தமில்லாததாய் வெவ்வேறுனவக்கரங்கள்தோன்ருமல்மறைத்து மயிலின் முட்டையில் மயில்ரூபிகரித்துத்தோன்றுகையிலதையுடைத்தாற் சலந்தோன்றும்போலச் சித்தத்தில் அறிவாய்நிற்கும். இனிப் பைசந்தியில்மத்திமை தோன்றிப் பிராணவாயுவுடனேபொருந்தி வரப்பட்ட அக்கரங்களையும்அவற்றின் பொருள்களையும் புத்தியில் நிறுத்தி முற்பட்டுவருகையில் செவிக்குக் கேளாமலுள்ளேயுணரத்தக்கதொனியாய்க் கண்டத்தில் முழங்கும். இதில் வைகரிதோன்றி உதானவாயுக்கட்டுண்டு பிராணவாயுவுங்கூடிச் சத்தத்தையிவனுடைய செவியில் கேழ்க்க நினைந்ததுசொல்லும் இந்தவாக்குகள் சுத்தவத்துவாவிற் சூக்குமமாயும் மிசிரவத்துவாவிற் றூலமாயும் அசுத்தவத்துவாவில் வெகுதூலமாயுஞ் சீவிக்கும்.

௱சு. உந்தியேயிதையங்கண்ட மோஷ்டமேதந்தந்தாலு
முந்தியநாசியுண்ணு றுறைமுறைதோன்றும்வன்னந்
தந்திடுஞ்செவிக்குளான சத்தவத்தங்களாகிப்
புந்திகாரணமாய்ப்பிராணன் போக்குதையாத்துமத்தாம்.

இந்தமுறையில் சிவனருளால் ஆத்மாக்களறிகிற வறிவுக்கீடாகாதே நாலுவாக்காலுஞ் சுத்ததத்துவமைந்தாலும் ஞானம்பிரகாசிக்குமென்றறிக. இனிச் சுத்த தத்துவமான அருள்சத்தி முதலான வாறுசத்திகளிலுஞ் சுயமாகத்தானே தோய்வர் இனி மகாமாயையிலுண்டான சுத்தவித்தைமுதல் தத்துவங்களில் தமதுசத்திகளைத் தேகமாய்க் கொண்டுதோய்வர் இந்தச்சத்திகளால் சுத்த தத்துவங்களைத் தேகமாகக்கொண்டு சுத்தா சுத்தமான காலதத்துவங்களிற்றோய்வர். இனி அசுத்தமான்தத்துவம்-உசு- விலும் இதற்கு அதிதெய்வங்களைத்தேகமாகக்கொண்டுதோய்வர்.

௱ரு. தத்துவங்கள்சடமாகி யறிவுதொழிலின்றாற் சத்திசிவனும்
பிரவேசித்திடுவர்சாற்றிற், சுத்ததத்துவமதனிற் சுயமேதோ
ய்ந்திடுவர்சொலுஞ்சுத்தாசுத்தத்திற்றோய்வர்சத்தியிடமாய்ச்,
சித்தமுதலானவற்றிற்றேவர்களைச்சேர்ந்தே செறிந்திடுவரிவ்
வாறுமூவகையாற்சிவ, ஞெத்துறுதல்செய்தருளாற்றத்துவத்
துக்குணர்வுதொழிலாக்கியிடலுணர்ந்திடுவாமுனோ.

௱சுா. வன்னியுடனிந்திரனுமுபேந்திரனுமறலிமாமலரோன்ருனுமி
வர்வாக்காதியைந்தைத், துன்னியிருந்தேவசனகெமனதானஞ்
சொலில்விசற்கானந்த மைந்தாந்தொழில்புரிவித்திடுவ, ருன்
னியிடிற்செவிதோல்கணுக்குமூக்கி லுற்றிருந்தென்டிசைத்
தேவன்வாயுவினன்வருணை, னன்னியமிலாவிருவரசுவினிதே
வதைகளடைந்தறிவிப்பார்சத்தமாதியைந்துமடைவே.

௱௭. மனமதனிற்சந்திரனுமாங்காரமதனின் மன்னியவீமேசர்பு
ந்தியினிற்புத்தி, யெனவுரைக்குஞ்சத்தியாங்குணங்களோர்மூ
ன்றி லிசைந்துமலரோன்மாலுநீலவுருத்திரரு, முன்பற்றல்
கைக்கொண்டலகங்கரித்தேயோங்க லூற்றதனைப்பகுத்தறித
லுயர்தன்மாதிகளய்ப், பனவுளதாம் பஞ்சாசற்பாவந்தா(
கப் பண்ணிடுவரிப்பரிசேமேலுளதும்பகர்வாம்.

௱௮. என்னரிதாமிராகத்திற்பிராகேசரிசைந்தே யியற்றிடுவர் பு
ருடனையுமிச்சையையுமுணர, நண்ணியிடவிடயத்தே செ
ய்யும்வித்தை நண்ணிடுவள்வித்தியாதேவிநலமார, பண்ணி
யிடவறிவுதொழில் விளங்கியிடத்தலைக்கே பதிந்திடுதல் கலா
தேவியெனப்பகர்வர்காலத், தன்னைல்காலேசரணைந்தாக்கியு
ளித்தழித்த லாவனவுந்தோற்றுவித்தேநியமனமாக்கிடுவார்.

௱௯. சுத்தவித்தைதனைவிமலவித்தியாதேவி சொல்லீசதத்துவத்
தைமகேசர்சதாசிவத்தை, யத்தர்சதாசிவர்பொருந்தியவ்வவ
ற்றுலனைத்து மாக்குவர்காணந்தந்தத்துவத்தினடைவு, மித்த
கையதத்துவங்கட்கீசுரர்தம்வடிவுமெழில்கிரியைகுணங்குணி
யுமியம்பில்விரிவாகு, நித்தனுயிர்க்குயிராகிச் சராசரங்கடன்
னி னின்றனைத்துஞ்சேட்டிக்கு நிலையுணரவரிதே.

௱௰. கரையிறந்தசத்தியுடன்காரியரூபாகிக் கலங்கியேநின்னுடை
யகாரியமாயையின்கலை, புரைவறவேயீசர்சத்திபுணர்ந்ததனை
வடிவாய்ப் போற்றடமாயா தேவியெனும்பெயரும்புனைந்தே,
திரைநுரைகடிவலைகடான்கடற்பாலாகுஞ் செய்வகைபோற்ற
னுவாதிசிறக்கச்செய்தே, தரையிறுதிகலையாதிதத்துவத்தாரு
யிர்க டான்மயங்கிச்செய்யுமெனச்சாற்றிடுமாகமமே.

இனித்தாத்திகங்களாவது.

௱௧௧. நவமணிதாதேரோழு நரர்சுரர்நாகராதி
யவயவம்வாயுப்பத்து மறிந்திடிற்றுத்திகங்க
ளுவமையில்சதிரோனுதி யொளிபதியுருவேயாகும்
தவமிலாருள்ளம்போலத் தாவிருள்பாசந்தானே.

இந்தச் சுத்தமாயையில் விஞ்ஞானகலர்க்குத் தனுவாதியாக்கியும் பிர
ளையாகலைச் செலுத்துவதாகியும் இலயகாலத்தில் கலையினோர்க்குக் காய
மாக்கியு மிப்படிச்செய்வதொன்றறிக. இனித் தன்மை முன்னிலை-படர்க்கை-
யென்று-௩-விதமாம் இதில் தன்மையாவது-பரிபூரணம் - முன்னிலையாவது-
இந்தப்பரிபூரணத்தால் இச்சாஞானக்கிரியாசத்திகளைப்பிரேரிக்கும்.படர்க்கை
யாவது-முன்னிச்சாஞானக்கிரியை பிரமாதிகளைச்செலுத்தும் - பிரமாதிகள்-

அகாராதிகளைச்செலுத்தும் அகாராதிகள் மனுதிகளைச்செலுத்தும் இப்படி-ஒடு-பிரகாரமாயிருக்கும் இஃதின்னமொருவிதம் - தன்மை-இச்சாஞானக்கிரியை - முன்னிலை- அவ-னவ-ளது வாம்-படர்க்கை - இவ்விரண்டிலுந்தட்டாத வுண்மை-யிதுகள்-பெத்தநிலைக்குச்சொன்னதென்றறிக. இனி முத்திநிலைக்குப்பின்னுமொருவிதம்-சிவமயமாய்நின்றது தன்மை-அகிலமெல்லாஞ்சிவமயமாய்த்தோன்றுகிறது - முன்னிலை - பிந்தவிரண்டுந்தோன்றும லனுபவசொரூபமாகிறது - படர்க்கை-இஃதின்னுமொருவிதம்-தன்மையாவது- ஆணவத்தைப்போக்கித் தன்னையுள்ளபடிதோற்றுவித்தல்- முன்னிலையாவது- அவ-னவ-ளது - முன்னிலையாகச்செலுத்தல் - படர்க்கையாவது - புண்ணியபாவபலனை நூலினுலுணர்ந்து-நரக - சொர்க்க-முண்டென்பது - இனி அருள் முகிட்டு பராசத்தி-மலத்தைச்செலுத்தல் ஆதிசத்தி சிருஷ்டியாதி அறந்திகழவுன்னியது இச்சாசத்தி அனைத்தையுநோக்கல் ஞானசத்தி அன்னியமாகக்கிரியைசெய்தல் கிரியாசத்தி-ஆ-டு-இந்தச் சுத்தமாயையிற்சத்தி கூடினபோது நிவிர்த்தி-பிரதிஷ்டை-வித்தை-சாந்தி சாந்தியாதீதை-திரோதைநாதம்நாதாந்தம்-சத்திவியாபினி - சமனை-உன்மனை - வியோமரூபிணி- அனந்தை-அனுதி-அனுசிருதை - சோடசகலையாகப் பிரசாதகலையுண்டாம் - இனிச்-சுத்தமாயை-௯௰க-பெயராம் - அதெப்படியென்னில்- ஓங்காரம்-பரப்பிரமம்- வயிந்துவம் - மாயேயம்-மாமாயை - மாயை-படங்-குடிலை-பிரணவம்- பேரொளி-நாதம் - விந்து-சிவனுக்குத் தனுகாணபுவனபோகம்-ஆ-சு-வாக்காதி-சு-நிவிர்த்தாதி -டு - சத்தாதி-டு-குண்டலி யாகச் சுத்தமாயைப்பிரியாயநாமம்-௯௰க-இப்படிச் சிவசத்தியினுலித்தனைபெயராயிற்று ஆனு லிந்தச் சிவசத்திதானேவிந்துவாமென்னில் - சித்து-அசித்தாய்ப் - பந்தமாகாது-இது உயிர்க்கு ஞானங்களாய்ப் பெந்தங்களை விடுவிக்கிறதாகும் கடத்திற்குமண்போலச்சிவனுக்கு உபாதானகாரணமான பரிக்கிரக சத்தியாயிருக்கும்.

௱௪உ. அறிவிலதாய்ச்சுத்தமாயனுதியாய்நாத மாதியாந்தத்துவங்
களக்கரங்கள், பிறிவிலாச்சூக்குமைமுதல்வாக்கியாவும் பிறப்
பிடமாய்விஞ்ஞான கலர்க்குருவமாகி, நெறியுளதாய்ப்பரமா
னமுத்தியினிற்ரூனு நீங்குவதாய்நித்தமாய் வியாபியாயெங்கு
ஞ், செறிசிவற்குப்பரிக்கிரகசத்தியாகிச் சேர்ந்துளதுவிந்து
வெனத் தெரிக்குநூலே.

இனிச் சுத்தாசுத்தாமாயையுபக்கிரமலட்சணம் முன்சொன்னசுத்தமாயையில்சுத்தாசுத்தமாயையுண்டாமிதுசுத்தாசுத்த மாவானேனென்னிற்முன் சுத்தத்தில் தோன்றித் தன்னிடத்தில் பிரகிர்தியாகிற அசுத்தமாயைதோன்றுவதற் கிடமாகையால் சுத்த அசுத்தமாமென்றறிக. இதற்குஅதோற்மாயையென்றும்இது பிரளையாகலர்சகலருக்குத் தனுகரணபுவனபோகமுமாயிருக்கும் இந்த அதோற்மாயா சிருட்டிவிபரம் அனந்ததேவராகிற மகேஸ்வரனருளினுல் மாயையில் காரியமாயையுண்டா யிதில் காலமும்பின்நியதியும் பின்

கலையுந்தோன்றிக் கலையிலேவித்தைதோன்றி யிதிலேராகந்தோன்றும்-ஆக-டு-இந்த வைந்துடனும் ஆத்மா கூடினபோது ஆத்மா அதோமுகப்பட்டு அப்போதுபுருஷதத்துவமென்றுபெயராம் முன்சொன்னகாலதத்துவத்தோடிதுவுங்கூட காலதத்துவம்-எ-இனி அசுத்தமானபிரகிர்தி சிருஷ்டிக்கிரமம் முன்சொன்னகலையிலே பிரகிர்திதோன்றும் இதில் உருத்திரதேவரால் முக்குணங்கள்தோன்றும் இந்தக்குணங்களைக்கூடி யொத்தவிடம் அவ்வியத்தம் இந்த அவ்வியத்தத்தில்சித்தமுண்டாகு—அதத்தில்புத்தியுண்டாம் புத்தியில் ஆங்காரமுண்டாம் இந்த ஆங்காரம்-தைசத-வைகரி-பூதாதி- என்று மூன்றுவிதமாம் சாத்மீககுணஞ்சார்வாகத் தைசதவாங்காரமாம் இதில் மனமும் பத்தேந்திரியமாகிற சுரோத்திராதிகளுமுண்டாம் இராசதகுணஞ் சார்வாக வைகரியாங்காரத்தில் கன்மேந்திரியமான வாக்காதிதோன்றும் தாமசகுணஞ்சார்வாகப் பூதாதியாங்காரத்திற் சத்தாதிதோன்றும் சத்தாதியிற் பஞ்சபூதமுண்டாம் இதற் கதிதேவதைகள்சதாசிவாதிகள் ஆ-தத்துவம்-உஙசு-முன்சொன்னகாலதத்துவம் -எ- சுத்ததத்துவம் -ரு- ஆ- தத்துவம்-ஙயகூ-இந்த முப்பத்தாறும் மூன்றுமாயையிலுஞ் சிவன் உபக்கிரமபேதத்தாலுண்டென்றறிக. இதல்லாமல் சிவன் தற்சத்தியில் ஆதிசத்தியை ஆத்மாக்கள் சென்னமரணங்களிற் படுகிறதுன்பத்தை யறியவொட்டாமற் கன்மசாம்மியம் பிறக்குமளவு மறைப்பித்துப் பக்குவப்படுத்துமளவும் நிறுத்தின ஆதிசத்திக்குத் திரோதானசத்தியென்று பெயராம் ஆனால் முன்சொன்ன மூன்றுமாயையையுந் திரோதானத்தையு மிங்கே சிவசிருஷ்டியில் சொல்லுவானேனென்னில் ஆத்மாவுக்கு அநாதியேமலமுங் கன்மமும் பந்தித்து ஆத்மா தன்னையுந்தலைவனையுமறியாமல் மூடிக்கொண்டிருக்கையால் இந்தவியாதிதீர்க்கும்பொருட்டுவயித்தியன் மருந்துகளைக்கொண்டுவியாதிகளைத்தீர்ப்பதுபோலவும் வண்ணான்புடவைகளிற் பற்றின அழுக்குப்போகவேண்டிப்பின்னும் ஆட்டுச்சாணி-உழுமண்-கார-க்ஷாரங்களி லூரப்போட்டு முன்பற்றின அழுக்கையுந் தான்போட்ட அழுக்கையும்வாங்கி வெள்ளையாக்கினாற்போல இந்தநாலையு முபாதானமாகக்கொண்டு மும்மலமாகிய வழுக்கைத்தீர்க்கையினால் சிவனுபக்கிரமத்தில் சொல்லவேண்டியதென்றறிக. சிவனாலே ஆத்மாக்கள் மலகன்ம நிவிர்த்தியோபகார நிமித்தியமாகவும் மாயையிலுந்தனுகரண புவனபோகங்களை யுண்டாக்கின உபக்கிரமலட்சணம் வெகுசங்க்ஷேபமாகச் சொன்னதென்றறிக. சாட்சி-ஆகமம்-கூ, ❧

❧

## உகூ-வது—அத்தியாயம்.

## வேதாந்தமுஞ் சித்தாந்தமு முபக்கிரமஞ் சரியூகச் சொல்வது.

அதெப்படியென்னில் மாயாவாதி பிரமமென்றதைப்பதியென்றும் மாயாவாதி பிரமசாந்தியென்றதை அருளென்றும் இந்தப் பிரமந்தானே மூலமா

யையோடு கூடினபோது பிரதிவிம்பித்ததைப் பரமாத்மாவென்று பெயராம் அதனைச்சித்தாந்திபரமசிவனென்றும்இந்தப்பரமாத்மாவானவன் மூலமாயை யைப்பார்த்தபோது பிரதிவிம்பித்த மகதத்துவத்தை அதோசிருட்டியான சுத்தாசுத்த மாயையென்றும் இந்தமகதத்துவத்தில்பரமாத்மா அதிஷ்டித்தபோது பிரதிவிம்பித்தசீவாத்மாவைப் பசுவென்றும் இந்தச்சீவாத்மா மகதத்துவத்தைப் பார்த்தபோது மகதத்துவத்திலுண்டானமூலாங்காரத்தை அசுத்தமாயை பிரகிர்திஅவ்வியத்தமென்றும் இந்தப்பிரமந்தானே-பரனுய்-பரன்-சீவபாவம் வகித்துக்கொண்டபோது தான் பிரமத்தைமறந்த மறப்புத்தானே அஞ்ஞானமென்றதை ஆணவமென்றும் சுகதுக்கங்களைக்கன்மமென்றும்ஆச்சாதானசத்தியை மறைக்கிற திரோதான சத்தியென்றும் இதுகளைக் கிரமமாகச்சொல்வது பிரமத்தைப் பதி பிரமகிரணத்தை அருள் பரமாத்மாவைப்பரமசிவன்சீவாத்மாவைப்பசுவிவர்த்தனமூலமாயையைமகாமாயையென்றும் மகதத்துவத்தைச் சுத்தாசுத்தமாயையென்றும் மூலாங்காரத்தைப் பிரகிர்தியென்றும் ஆச்சாதானசத்தியைத் திரோதானமென்றும் சீவன் பிரமத்தைமறந்தமறப்பை ஆணவமென்றும் - சுக - துக்கங்களைக் கன்மமென்றும் - பதிக - பசு - க - பாசம் - க - ஆகப் பதிபசுபாசமூன்றும் பிரமம் என்றுண்டோ அன்றுதுடங்கி நித்தியமாய் வேருயிருக்குமென்றும் இப்படி வேதாந்தஞ்சொல்லுகிறதை ஆகமம் விரித்து மோட்சமார்க்கத்துக்குக் கிரமமாகச்சொல்லுமென்றறிக. ஆகையால் சித்தாந்தம் வேதாந்தத்தால் வந்ததென்றறிக.

௱௬௩. என்னரிதாய்நித்தமாயிருண்மலத்துளழிந்தி யிருவினையின் றன்மைகளுக்கிடானவாக்கை, யன்னவலருளானன்ணியவை யவராயதனு லலகினிகழ்போகங்களருந்துமாற்றுற், புண்ணியபாவம்புரிந்துபோக்குவரவுடைத்தாய்புணருமிருண்மலபாகம்பொருந்தியக்காலருளா,லுண்ணிலவுமொளியதனுலிருளகற்றிப்பாத முற்றிடுநற்பசுவற்கமெனவுரைப்ப ருணர்ந்தோர்.

௱௬௪. பசுக்களுக்குப்பொதுவென்றுந் தன்னியல்பதென்றும் பகருமிலக்கண மூன்றதிற்பொதுவைப்பகரி, னசித்திடாஞானத்தையாணவத்தாற்றடுக்க நலந்திங்கையுணராதே நானுகாரதையாம், பொசிப்பின்றிநித்தமுமாயென்ணிலதாய்விபுவாய்ப் பொருந்தியது தானுகிப்புந்திமுதலின்ருய், வசிப்பதுமாய் மாயையிலேக்லைமுதல்களாகி வந்ததுதானுணவத்தின் மறைப்பொறுக்கிச்சிறிதே.

௱௬௫. ஞானமுடனிச்சைதொழினன்ணிபிடவதனு ஞனுபோகங்களையுநாடியேநானேன், மானமதாலிருவினையும்வளர்ந்தடவேயதனுல் வானமொடுபூமிகீழ்மருவிப்போந்தே, யீனமுறத்திரி

காலத்திருவினையுமொக்க விறைசத்திபதிந்தபோ திறைகு
ருவாய்வந்தே, தானவனும்படி செய்யத்தத்துவங்கள்வினைக
டமோமயமுநீங்கி யிடத்தற்சிவமாந்தானே.

௱௧௬. அவத்தைகேவலசகலசுத்தமெனமூன்றுமடையுமாணவமா
யையருட்சத்தியதனு, லிவத்துள்கேவலமுயிர்க்குச் சகசபு
குமிறைவன்றான் மாயையினிற்கலாதிகளையிசைக்கப், பவத
துவக்காஞ்சகலமாயிருவினையுமொத்த பருவத்தேபராசத்தி
பதிந்தருளினுலே, சிவத்துடனுமதுசுத்தஞ்செப்பியவிம்மூன்
ந்தேருங்காலையைந்தாய்மூவைந்தாய்த்திகழும்.

இந்தப்பசுலட்சணம் சத்திநிபாதத்திலுந் தீட்சாக்கிரமத்திலும் விரிவாகச்சொல்லியிருக்கையால் இவ்விடத்தில் வெகுசங்க்ஷேபமாகச் சொன்னதென்றறிக. இனிப்பசுவானது விஞ்ஞானகலர் ஆணவமலமொன்றும் பிரளயாகலர் ஆணவ கன்மமாகியவிரண்டு மலமொன்றுஞ் சகலர்ஆணவகன்ம மாயைமூன்றுமலமென்றுஞ்சொல்லிப் பின்பு சகலருக்குஆணவம்-க-கன்மம்-க-மாயை-உ-திரோதானம்-க-ஆ- ௫- மலத்திலும் பந்தப்பட்டுச் செம்புக்குக் காளிதம்போலும் நெல்லு முளை தவிடு உமியைப்போலவு மூடப்பட்டு ஆத்மாதன்னைத்தலைவனையறியாமற் கேவலத்திற்கிடக்கும் அதெப்படிஎன்னில்.

௱௧௭. அறிவிலன்மூர்த்தனித்தன் ராகாதிகுணங்களோடுஞ்
செறிவிலன்கலாதியோடுஞ் சேர்விலன்செயல்களில்லான்
குறியிலன்கத்தாவல்லன்போகத்துக்கொள்கையில்லான்
பிறிவிலன்மலத்திேனுடும் வியாபிகேவலத்திலாத்மா.

இப்படிக் கேவலத்திலுஞ் சகலவிஷயங்களிலுந் தனுகரணபுவனபோகங்களிலுந் திரிவதுபோற் கேவலசகலத்திலும் அவத்தைப்பட்டுச் செனனமரணப்படுகிறது பெத்தநிலையென்றறிக. இனி முன்சொன்னமலம் - ௫ - ல் மூன்றுமாயையுஞ் சிவன் தனக்கு உபாதானமாக்கிக்கொண்டுஆத்மாவுக்குத் தனுகரணபுவனபோகங்களைக் கொடுத்து இந்த மாயாவுபாதிகளால் ஆன்மாக்கள் மொத்துண்டு செனனமரணங்களில் முன்செய்த கன்மம் பின்சென்மத்தில் தெரியாமற் பின்செயல் முன்தெரியாமற் சீவனுக்குக் கன்மசாம்பியம் பிறக்குமளவுஞ் சுகதுக்கங்களைப் புசிப்பித்து உருசிப்பிக்க ஆதிசத்தியைவிட்டு மறைப்பிக்கையினுல் ஆதிசத்திக்குத் திரோதான சத்தியென்று பெயரா யிந்தத் திரோதானத்தைச் சிவன் தனக்குச் சம்பந்தகாரணமாக்கிக்கொண்டு தனுவாதி நாலையுங்கொண்டு ஆத்மாவுக்குச் சகசமான ஆணவகன்மங்களைநீக்கி யிதை நீக்கும்போதுமுன்சொன்ன நாலையுங் கூடநீக்கிச் செம்புக்குக் காளிதத்தைநீக்கிப் பொன்னுக்குமாறுபோலஆத்மாவைச் சுத்தனுக்கிச் சிவன் தன்னேடு அயிக்கியஞ் செய்துக்கொள்வதே முத்திநிலையென்றறிக. சித்தாந்தஞ்சொல்லும்போது இந்தவாத்மாவைப்பரமதத்தார்சொல்வது

அ[illegible]த்துமான அவயவங்கள் சேர்ந்து கூடினதே [illegible] உடலி[illegible]மொளியும்போல்இச்சாஞானக் கிரியையடைந்து அனேக[illegible]க் குணமாய்குணியாய் அபாவமாய்ப்பாவமாயிருக்குமென்றுங் குண[illegible]ல்குறியுடைத்தாயாத்மாவிருக்குமென்றும், உடலின்கண்ணுகச்சங்கியில்சேட்டைபெற்றுக்காந்தமிரும்பை வலிப்பதுபோலென்றும் உயிருருவென்றும் உயிர்பரிணுமமென்றுஞ், சூக்குமமென்றும், அந்தக்கரணவிந்திரியமுங்கடந்து சூக்குமதேகமுங்கடந்து அப்பாலைக்கப்பாலாய் சூக்குமமென்றும், அருவுருவென்றும், உருவருவென்றும், காஷ்டம் வன்னிபோலவென்றுஞ், சந்திரன்போல அருவுருவென்றும், உள்ளே யுயிராயெழுமென்றும், அருவாய் அவிகாரியென்றும், அசித்தே சித்தாமென்றும், சித் தசித்தாமென்றும், அணுவென்றும், உடலி லேகதேசியென்றுஞ், சுடரொளிபோலவென்றும், உருவெங்குநிறை வென்றும், எங்கும்வியாபியென்றுஞ், சுத்தனைத் தேக முறைக்குமென்றும் சித்தினது அருவமும் வியாபகமும்போ லல்லாமல்ஆத்மா அருவம் வியாபகமென்றும், இதெல்லா மல்லவென்றும், பலநிறங்கவரும் படிகம்போல் மாயா கூட்டரவா லாத்மா அனேக விதமாமென்றுங்கூறுப.

ாகஅ. உடம்பினைச்சேர்ந்தகால முடம்புதானுயிருக்கு
மடம்படுமாயைசேரின் மாயையினியல்பேமன்னு
மிடம்படுபரத்தைச்சேரி லீசனதியல்பேயாகுந்
திடம்படுமுயிரின்செய்தி சேர்ந்ததின்வண்ணமாமே.

இனி யுண்மையிற்சொல்வது ஆத்மலட்சணம் அவத்தைத் தன்மை ஆத்மவுண்மை சிவனுணர்த்துமுறைமைசிவஞானவுண்மை ஆத்மதெரிசனம்ஆத்மசுத்தி ஆத்மலாபம் பஞ்சாட்சரம் அணைந்தோர்தன்மை ஆகப் பத்துவிதமாம். அதில் ஆத்மலட்சணமாவது (க) ஆவது தேகத்திலுள்ளேவந்து தாக்கப்பட்ட விஷயங்களை யிந்திரியங்களாலே கண்டு மனுதிகளாலேபற்றி வித்தைகளாலேயறிய அருளானது முன்கருவிகளைக்கூட்டிப் புசிப்பிக்கிறதும் புசிப்பின்வரலாறுமிதையான்மாவறியாம லவத்தைப்படுவதும் இதுவுந்தெரியாமற் கருவிகள்நீங்கி யாணவமலநீங்காமல் தனியதிதங் கேவலாத்மாவுக்குப் பெத்தத்தி லுண்மையென்றும் (உ) உட லிந்தியங் கரணம் பிராணவாயு விதுகளல்ல சிவஞானத்தா லறியி லாத்மாவுண்டென்பது (ங) ஆத்மாதானே யறிவான் கருவிகளாத்மாவுக்கறியியாது சிவனுங் கருவிகளைக் கொண்டறியான் சிவன்ஆத்மாவுக்கு முன்புள்ளவறிவைச் சிவஞானத்தால் கருவிகளைக் கொண்டுபிரகாசிப்பிக்கும் ஆனல்செடமாயறிந்ததெதுவென்னஆத்மாவறியான் சிவனுஞ்சுட்டியறியான் பாசஞ்சடமாகையா லறியாது ஆத்மா கருவிகளையுங்கூடி யறியாது அருளையுங்கூடியறியாது அருளும்பாசமுங் கூடியறியாது ஒளியுமிருளுங் கூடாது போலென்றும் (சு) சத்தையும் அசத்தையுமறிகிறதேதென்னில் ஆத்மாகண்போலும் அருள்கதிர்க் கிரணம்போலுங் காட்ட அறியுமாத்மாமலத்துடன்கூடி மலமாயுஞ் சிவத்துடன் கூடிச் சிவமாயு

[illegible]கயாற் சதசத்தென்று பெயராமென்றும் (எ) விளக்கு குருடனுக்குக்கா
ட்டாது கண்ணறியுந்தன்மை [illegible]யா லறிவிக்கும்போல ஆத்மாவுக்கு
அறியுந்தன்மையுண்டாகையா[illegible] [illegible]னென்றும் (அ) ஆத்மா ஓ
ருதானத்திருந்தறியான் தேகத்தில் நிறைந்திருந்தறியான் பூரணமாயுமறியா
ன் அருளறிவியாமலறியான் ஆகையா லாத்மா படிகம் [illegible]யும்பற்
றி யதின் வடிவமானதுபோல வாத்மா தத்துவவன்னருபனுமென்றும் (கூ)
கேவல சகல சுத்தமான மூன்றவத்தையு மிந்தச் சாத்திரத்தில் [illegible]
[illegible] சொல்லுகிற விடத்தில் காண்க ஆ. அவத்தை - ௩ - [illegible]
(௰௨) சிவனுணர்த்து முறைமை -௰அ- கருவிகளுடன் ஆத்மாகூடி ஒருவிஷய
த்தை யறியுமென்றும் (௰௩) இனி யாத்மாஇதுகளைக் கூடாமலறியானாத்
மா யறியுமல்லாமல் தத்துவமறியாது ஆத்மாவானவன் சிவ ஞானத்தா
ல் தத்துவங்களைக் கூடிப் புசிப்ப னென்றும் (௰௪) இனி யருளறிவியாமற்
சிவஞானத்தைக் கருவியாகக்கொண்டு ஆத்மாவறிவனென்னில்அதைக்கொ
ண்டறிகிறவன்முதலாகும் அல்லது சிவஞானஞ்சங்கிரமித்து ஆத்மாவுக்காக அ
[illegible]னில் ஒருவன் பசிக்கு ஒருவனுண்டு பசிதீர்ப்பதுபோ லாமென்றும்
([illegible]) [illegible] பசிக்கு முறைமை சூரியோதயத்தி லறுதொழிலு
ஞ் செய[illegible] [illegible] ஆத்மா புசிக்குமென்றும் ([illegible]) இ
னிக் கருவிகளை ஆத்மா வறிவிக்க வறிந்து ஆத்மாவைக் கருவிகளறியா
துபோல ஆத்மா அருளாலெல்லாமறிந்து நமக்கு அருளறிவிக்க அறிகிறோமெ
ன் றறியாது கன்மத்தை யறிந்து புசியாது சிவனறிந்து புசிப்பிப்பானெ
ன்றும் (௰எ) இனிச் சிவஞானவுண்மை தத்துவமில்லாவிடி லாத்மாவறி
யாது இந்தத் தத்துவத்தால் அருளையாத்மாவறியாது முன்தபமுயற்சியால்
உள்ளேயுணர்த்தின ஞானந்தானே குருவாய்வந்து தத்துவங்களைநீக்கிச் சிவ
ன் பாதத்திலே கூட்டுவனென்றும் ( ௰அ ) இனி இந்தஆசாரியன் அறிவி
த்தபடி படிகந்தானே மத்தியானகாலத்திற் பலநிறங்களையுங் கவராமற் சூரி
யகிரணத்தைக் கவர்தல்போலப் பாசங்களைநீக்கி ஆசாரியன் சிவனோடுகூட்டு
வனென்றும் ( ௰கூ ) இந்த அருளாகியவாத்மா மலத்தோடேகூடில் தா
னுமிருளாம் இது அருளோடேகூடி லொளியாமென்றும் ( ௨௰ ) முன்
சொன்ன ஞானமுண்டாகில் ஆத்மதெரிசனம் ஆத்மசுத்தி ஆத்மலாபம் இ
திற் பிரயோசனமென்னென்னிற் பாசங்களைநீக்கி ஞானத்தைத்தெரிசிக்கிற
து ஆத்மதெரிசனம் ஆத்மாவினுடைய இச்சாஞானக்கிரியை விடுகிறதேசுத்தி
நிஷ்டையால் ஞேயத்தழுந்திச் சிவனைப்பெறுதல் பிரயோசனமாமென்றும்
௨௧-இனி ஞானத்தால் ஞானத்தைத்தெரிசித்து தா னந்த ஞானமாய்நின்று
தன்னையுந்தெரிசிப்பானென்றும்-௨௨-முன்சொன்ன மூன்றுக்கு மூலஞ்சொ
ல்வது-௨௩ இனிஞானத்துக்குஞேயமுதல்ஞேயத்துக்குச்சிவமுதல்இந்தச்சிவ
னுக்கு ஞானசத்தியாயிருக்கும் இது சூரியகிரணஞ் சூரியனை யறியாதுபோலெ
ன்றறிக ௨௪ ஆறுவிந்தச்சத்திபோதாதோசிவனேதுக்கென்னிற் சிவனை[illegible]
டச் சத்தியில்லாமலு மந்தச்சத்தியினால் சிவனைத்தன்னையறிவித்துக் கொள்
ளுவதுஞ் சூரியகிரணத்தால் சூரியனையறிந்தாற் போலென்றறிக. ௨௫ - ஆத்

மதெரிசனமென்றும் ஞானதெரிசனமென்றும் பெயர் இனிப் பணிய றநின்று முறைமைபசாசுபிடியுண்டவன்பசாசின்தன்மையானாற்போல அருளையடைந்த வாத்மா அருளைப்போலப் பஞ்சகிருத்தியஞ் செய்யவேண்டாமோவென்னி லிதுவுத்தரமல்ல ஆனால் சீவன் முத்தர்கள்தன்மை யெப்படியென்னனவர்கள் சிவானுபவத்துக்கே வுரியர் பஞ்சகிருத்தியங்களுக்கு யோக்கியரல்ல அதெப்படியென்னில் குருடன் முடவ னூமை இவர்களைப் பசாசு பிடித்தபோது ஊமைமுடங் குருடுதனைத்தீர்த்து தன்னைப்போல் ஆக்காமலவனுக்குள்ளபடியே பசாசுநடத்தினாற்போல ஆத்மாவுக்குச் சிவானுபோகத்தைக்கொடுத்து தான்சர்வஞ்ஞனாகையால் பஞ்சகிருத்தியஞ்சிவனேசெய்வானென்றும் ௨௭-முத்தராய்ஞாதுருத்துவமொழிந்து ஞேயந்தோன்றிஞேயமாய்நிற்பனென்றும்-௨௮-இந்தஞானத்தைக்கூடினவர் சிவமாவரென்றும்- ௨௯-இப்படிப்பணியற்றவர் ஞேயத்தழுந்துவது கேவலசகலந்தோன்றாமல் ஞானசத்தியில்நின்று காட்டுந்தன்மையான ஞானசத்தியுங் காணுந்தன்மையாகிய வாத்மாவுமிந்தவிரண்டும்நீங்கிநிற்பதேபராசத்திநிலையாம் இப்பராசத்தியும்நீங்கஇதற்குமேலானசிவந்தோன்றும்இதில்ஆகாசத்தில்வாயுத்தம்பம்போலும்அப்புவிலுப்புபோலவுமேகீபாவம்பிறந்திருப்பதுசாக்கிராதீதமென்றும்-௩௰-இந்தநிஷ்டையைஞானத்தாலொடுக்க வேண்டுமோ தானேயொடுங்காதோவென்னில்தத்துவங்கள்சடமானதால்தானேஒடுங்காது நான் அறிந்தொடுங்குவேனென்னில்நீயறிந்தொடுங்கி லப்போது உன்னிச்சாஞானக் கிரியைவேண்டும் அதுஉள்ளவுங்கரணங்களொடுங்காது ஆனாற் கரணங்கள்கெடநானொடுங்குவேனென்னி லப்போது உன்னறிவுகெடும் ஞானசத்தி யுந்தத்துவங்களை யொடுக்கி யுந்தன்மை சீவியாதபடி நீயுமொடுங்கி அந்தஞானமாய்நின்றாலந்தச்சிவம்தெரிசனமாமென்றும் ௩௧-இனிமத்தியானகாலத்துவிளக்கைப்போலநீமாய்ந்தாற்பிறப்பறும்- ௩௨- இந்தச் சிவனைப்பெறுவதெப்படியென்னில் கேட்டல்சிந்தித்தல்தெளிதல் நிஷ்டையில் நிலைபெறநிற்கிறதேமோட்சமென்றும் ௩௩-சிவஞானத்தால்சிவனைக்காண்பதொழியப் பாசஞானம் பசுஞானத்தாற் காணக்கிடையாதென்றறிக. ௩௪-இனிச்சிவனை யொழிந்து தனக்குச்சேட்டையில்லையென்றுநடக்கவேநிட்டைகூடும்-௩௫-ஏதப்பாவிப்பதெப்படி யென்னில் சிவன் கரணாதீதனாகையால் கரணத்தாற் பாவிக்கக்கூடாது கரணங்களிறக்கப் பாவிப்பேனென்னிற் கரணமிறந்தவிடத்தில் மறைக்கும்பாவிக்குமது வேறானென்னி லப்போது நீயிருப்பை பாவங்கெட்டுப் பாவிக்கில் ஒன்றுந்தோன்றாமையாம். பாவனையிறந்துநின்று பாவிப்பதென்றறிக. ௩௬-

௱௧௯. அறியாமையறிவகற்றியறிவினுள்ளே யறிவுதனையறிவினாலறியாதேயறிந்து, குறியாதேகுறித்தந்தக் கரணங்களோடுங்கூடாதேவாடாதேகுழைந்திருப்பையாகிற், பிறியாதசிவந்தானேபிறிந்துதோன்றிப் பிரபஞ்சபேதமெலாந் தானாய்த்தோன்றி, நெறியாலேயிவையெல்லாமல்லவாகி நிராதரமாயெப்போதுநிற்குந்தானே.

௩௭-முன்பு ஆணவத்தோடுகூடி யாணவத்தன்மைபோலுங்கருவிகள்கழன்றவிடத்திற் கேவலத்திலாணவமலத்தை ஆத்மா கூடாமலும் அதுவந்து இவனைப்பொருந்தாமலும் ஆன்மா தான்கெடாம லந்தமலத்தை யிதுவென்று சுட்டிக்காண்பானுமல்லாம லதுவும் தானுமென்றாகாம லிரண்டுமாகாமல் மறைக்கைக்குக் குணமு மிவ னதில் மறைப்புண்டழுந்துகைக்குக் குணமுமா யிருந்தன்மைபோல் ஆன்மாச் சிவனுடைய வியக்கத்திலும் த்தன்மை காணவென்றறிக. ௩௮-இனிஇந்தமோட்சத்திற்பாசமழியுமோவென்னில்ஆணவகாரண மழியாமல் மறைத்திருந்தகாரியநீங்கும் அதெப்படி விளக்கின்முன் இருள் போனதுமல்ல இருளிருந்து கண்ணைமூடினதுமல்ல இது போலென்றறிக.

௱௨௰. அறுதியாய்விபுவாகிநித்தமான வாணவந்தானீங்கும்வகை யாவதெங்ஙனென்னு துகொள்ளீசெம்பிலுறுகளிம்பனுதியிரத குளிகையினாலேயேகப்பொன்னாய், மனுதிருடாளிறைந்திருந்து பூதந்திரையாதிமணிவிழியிலங்ஙனருள்மன்னினோர்பாற், றுனைதுகெடுமாணவந்தான்மற்றோர்தய்மைத் தொடர்ந்துநிற்குமாதலினாற்சேர்வுமின்றே.

௱௨௧. இருண்மலமுமாயைவினையெல்லாநீங்கி யெவ்வறிவுமெத்தொழிலுமிறைபோலிங்கே, மருவியிடாதென்னென்னிலான்மாக்கட்கு வரம்பிகந்தசத்தியுளவவையவ்வாறே, கருமலந்தான்சத்திகளாம்மடுத்துநிற்குங் கடவுடனைக்காணுமற்றடுத்தசத்தி, குருவருளானீங்கியிடச்சிவானுபூதி கூடியிடுமற்றவைகள் கூறுங்காலே.

ஆனலிது ஆசாரியனால் முத்தியுண்டாமென்றறிக. ௩௯-ஞேயத்தழுந்த லமுற்றும்பஞ்சாட்சரம் உள்ளபடி குருவுபதேசித்து அந்தச்சிவத்தை செபிக்கவே சஞ்சித பிராரத்த ஆகாமியந் தீருமென்றறிக. ௪௰- இனிச்சிவமுன்னாகச்செபிக்க-௪௧- பஞ்சாட்சரவுண்மை- ௪௨- இவர்கள்தேகத்தோடே யிருக்கினுங் கர்த்தாவின்சுதந்தரமுங்கன்சுதந்தரஹானியும் பாசத்தின்சேடத்துவமுமறியக் கன்மமாயை நீங்க நீங்காத ஆணவநீங்க ஞேயத்தில் அழுந்திலழும்மலமுந் தீருமென்றறிக. இதுவுமல்லாமல் மன வாக்குக் காய மிந்த மூன்றால் வருகைபாற் காயத்தை ஆதனத்திலும் வாக்கை மவுனத்திலும மனத்தைட் பிராணயாமத்திலும்நிறுத்தமாயைகன்மம்நீங்கும் இதுவுமன்றிச்சஞ்சிதந்திட்சையாலும் பிரார்த்தஞ்சிவயோகத்தாலும் ஆகாமியஞ் சுட்டறுதியாலுங் கன்மாதிகள் தீருமென்றறிக. ௪௩-இந்தநிஷ்டைசாதிக்கிறவர்முன்புள்ளநியமங்களை விடுவரோவிடாரோவென்னி லிந்த நிஷ்டைவிடாமற்சாதிக்கில்நித்திரை கொண்டவன்கையிற் பதார்த்தம்நழுவல்போலஎல்லாநழுவுமென்றறிக. ௪௪ இந்தஞானத்தை உள்ளேகாண்பரோ புறமேகாண்பரோவென்னில கம்புறமில்லாமலெங்குமாய்க் காண்பரென்றறிக். ௪௫ - இந்தநிலைவராவிட்டால் எல்லாஞ்சிவனேயல்லாமல் வேறில்லையென்று தெளிவது- ௪௬ - அல்லது எ

லாம் அருளாலொழிய அசையாதென்றறிக-௪௭-பஞ்சசத்தி-௪௮- இந்நிலையும் வராவிட்டாற் குருலிங்கவேடம் பொருளென்பது-௪௯- கண்மயக்குறை-இது சிவப்பிரகாசவுண்மை-௫௧-விருத்தமுந்தொகையாகச்சொன்ன தென்றறிக. இந்தப்படி அனுபவஞானம்வருவதற்குச் சிவபூசைகள் தபங்கள் செபங்கள் அஷ்டாங்கயோகங்கள் தீர்த்தங்கள் மணிமந்திர அவிழ்தங்கள் இந்தவிதங்கள்செய்கையாலாத்ம சத்தி யெப்படிபிரிந்ததோ அப்படி ஆணவசத்திபிரியும் அப்போதுஞானத்தொழிலான சத்திவிளங்கும்இவைசொரூபத்தில்லலிங்கற்பத்திலென்றறிக. இப்படிக்கொத்த முன்செய்தபங்களாலே சிவராகமுற்றுச் சங்கையில்லாத சிவானுபூதியை யடைந்து குருவால் அறிவு தொழிற் சத்தியோடுமுத்திசேர்வர் தபங்களாலுந் தெய்வீகத்தாலுஞ் சிவானுபவமொன்றேபெற்றுப் பரமுத்திதேகபதனத்தடைவரென்றறிக. சிவராகமில்லாமல் தபயோகமுதலானது செய்யில் சிவானுபவமில்லாமல் சிலதெய்வீக சித்திகளைப்பெற்றுப்பிறகுசெனனமெடுப்பாரென்றறிக.

ஆணவமல லட்சணம் இனிமுன்சொன்னபசுவிலக்கணத்தில்-௫- மலஞ்சொன்னதிற் சிவனுபக்கிரமத்தில் இரண்டுமாயையுந் திரோதமுமாக மூன்றுபோக மற்றவிரண்டிற் கன்மமலமுமல்லாம லாணவமலத்தினுடைய விலட்சணஞ்சொல்வதென்றறிக. ஒன்றாய்மூலமலமாயிருளும் பிரகாசமென்ன இருண்டதாய் வியாபகமாய் சிவனையும் ஆத்மாவையும் பாசத்தையுந் தெரியாமற் செம்புக்குக் களிம்பும் அரிசிக்குத்தவிடுமியும் நீருக்கு உப்புபோலும் ஆத்மாவைப்பொருந்தி யிச்சாஞானக் கிரியைகளை மறைக்கும் பரிபாகத்திலே நீங்குந்தன்மையாயுமிருக்கும் எண்ணரிதானசத்தியுடைத்தா யிருளானது எல்லாவற்றையுமறைத்துத் தன்னுளடக்கித்தன்னைத்தோன்றக்காட்டிநின்றதுபோலஆணவமு மெல்லாவற்றையுமறைத்துத்தன்னையுமாத்மாவையுந் தோன்றாதபடியாயிருக்கும் ஆத்மாவினுடைய விச்சாஞானக்கிரியைகளைமறைக்குமிந்த ஆணவம் ஆகந்துகமோ சகசமோவென்னில் ஆகந்துகமானஇராஜிதஞானம் சுத்திஞானத்தைவாதிக்கமாட்டாதாகி லாகந்துகமென்னக்கூடாது ஆனாற் சகசமோவென்னிற் சகசமானால் அக்கினிக்கு உஷ்ணமுஞ் சலத்துக்குச்சயித்தியமும்போலக் குணமாகவேணுங் குணமழியிற் குணியுமழியும் ஆகையாலிப்படிச் சகசமாகாது பின்னையெப்படிச் சகசமென்னிற்செம்புக்குக்காளிதமு நெல்லுக்குத் தவி டுமிபோலச் சகசமாயினு மிதுகுணமல்லக் காளிதமுந் தவிடுமியும்போனால் மறித் ததுவாகாதுபோல ஆன்மாவுக்குச் சகசமலநீங்கிற் செனனமில்லை யாகையா லிந்தத் திஷ்டமான சகசத்துக்குக்குற்றமில்லை. இனி யிந்த மலம் மாயாகாரியமோ மாயையோ ஞானத்தினுடைய அபாவமோ ஞானத்தினுடைய ப்ராக்பாவமோ அன்னிதாஞானமோ ஆன்ம குணமோவென்னில். இது தனதுகாரியத்தால் மலத்தை நீக்கி யாத்மஞானத்தைப் பிரகாசிப்பிக்கையால் மாயைமலமல்ல காரியத்தாற் பிரகாசிப்பித்துக் காரணத்தால் மறைக்குமென்னி லப்படிச்செய்யாது அப்படி அக்கினிகாரியமானதீபச் சோதியும் பிரகாசிப்பித்து உஷ்ணமும் பிரகாசிப்பிக்கும் போலென்றறிக.

ஆனால்மாயாகாரணத்தா லென்செய்யுமென்னில் விஷயங்களில் மோகிப்பிக்கும் ஆணவம் போல்மறையாது ஆணவ மிருள்போலு மாயை விளக்குப்போலுமாம் ஆனால் மலம் ஞானத்தின் அபாவமோவென்னில் அபாவ மொரு திரவியமல்லாதபடியால் மறையாது அதெப்படி கடத்தினுடைய வில்லாமை சலத்தைக் கொண்டுவரமாட்டாதுபோ லென்றறிக. ஞானபாவமென்பது ஞானமில்லாமையாகும் ஞானத்தின் ப்ராக்பாவமோவென்னி லிது ஞானமுடிவென்பது முடிவுள்ளதற்குந்தோற்றமுண்டு ஆனால் தோற்றமென்று சொல்லில் ஞானமழியு மாகையால் ப்ராக்பாவமல்ல அன்னியதாஞானமென்னிலொன்றை யொன்றாகாமற் கருதுகை யிந்த அன்னியதாஞான மொருவேதுகூடாமற் கூடாது அதென்போலச் சுத்திவெள்ளியாகத் தோன்றும்போது கண்ணின் குற்றத்தால் தோன்றுவதாகையால் அன்னியதாஞானமல்ல. இனி ஆத்மாவினுடையகுணமோவென்னிற் சித்தாகிற வாத்மாவுக்கு ஞாதுருத்துவ குணமொழிந்து செடமானமலங் குணமாகாது அதெப்படி அக்கினிக்கு உஷ்ணங் குணமானது சீதங்குணமாகாதுபோலென்றறிக. இனி ஆணவத்துக்குப் பரியாயநாமம் பசுத்துவம் பசு நீசாரம் மிருத்தி மூர்ச்சைமலம் அஞ்சனம் அவுத்தியை ஆவிருத்தி மலகிலானி பாபமூலம் அட்சயம் பாசம் அசுத்தி அஞ்ஞானம் பெந்தம் வியாகாதம் களங்கம் ஆணவம் மோஹங் கேவலம் ஆவரணம் தமசு செடம் படலம் அரித்து நிரோதம் ஆச்சாதானம் சென்மபீசம் மூலம் இவைகள் முதலானபேர்களுண்டு ஆனாலீதெல்லாமலாதிசத்தியாத்மாவைமறைக்கு மென்னில் அது ஞானமாகையால்மறையாது அறிவையறிவுமறையாது உணர்வுக்குச்செடமே வாதையென்றறிக. ஆனாற்செனமமானது பாவமிருள்வடிவாய்மறைத்துப் புண்ணியம் வெளியுருவாய்வளர்க்கும் அப்படியறிவுண்டாகிலறிவையறிவுதடாது நாம்செய்தது நாம் புசிக்கிறோமென்று துக்கப்படாது அறியாமை யாத்மகுணமாகில் இச்சாஞானக்கிரியையாகையா லதுவல்ல மாயாகாரணமிருளாய் மறைத்துக் காரிய மொளிவடிவாமென்னில் ஒருபொருளொளி யிருளாகாது அதென்போலக் காரணவன்னியொளியைக் கொடுக்குக் காணுமொளியாயிருப்பதுபோ லென்றறிக.

௱உஉ. அஞ்ஞானமென்பதோர்பொருளேயில்லை யறைகின்றஞான
த்தின்பாவமென்னி, லஞ்ஞான்றும்பாவமோமுன்றோ பின்
றோவியம்பியிடுமெத்யர்தாபாவமென்னிற்சடமா, மெய்ஞ்ஞா
னபாவந்தான்முன்னென்னிற்பின்றாய் யேவுதலாமெய்ஞ்ஞா
னபாவம்பின்னென்னி, லஞ்ஞானமுன்னொருகாலுண்டாகா
ஞானவுருவுயிருக்கிவ்வாறிங்கோதல்பழுதுளாரே.

என்பது ஆத்மாவுக்கு அஞ்ஞானமென்று வேறொருபொருளில்லை ஆத்மாவுக்கு ஞானம் அபாவமா யில்லாமையாயிருக்குமென்னில் ஆத்மாவுக்கு எந்நாளும் அபாவமா யில்லாம லிருக்குமோ ஆத்மாவுக்குமுன்னேவந்ததோபின்னேவந்ததோசொல்லென்னில் அது ஆத்மாவுக்கு நாழியில் நெல்லு கூற

கொண்டாற்போல் ஆத்மாவை யத்தியந்தமாய் முழுதும் ஞானம் பாவமாயி ருக்குமென்னில் முழுது ஞானமில்லாவிட்டால் ஆத்மாவுங்கெடும் ஞான பாவம் ஆத்மாவுக்குமுன்னே ஆவரித்ததென்னில் ஆத்மாபின்னே யுண்டா னதாம் ஞானபாவ மாத்மாவுக்குப் பின்னென்னிற் பிறகு ஒருகாலத்திலுண் டாகாது ஞானவுருவாயிருக்கிற வாத்மாவுக்கு ஞானமில்லாமல் பாவமாயிருக் குமென்றுசொல்வது பழுதென்றறிக. இனிச் சிற்றறிவே யான்மாவுக்கென் னில் அப்போதுஎல்லாவுயிருஞ்சிற்றறிவாம் பேரறிவுண்டாகையால் அதுபி றந்து முத்திபெறவேண்டிற்று ஆணு லாணவத்தாற் றடுப்புண்டுமாயையினு ற் சிற்றறிவாமென்னில் ஆணவ மாத்மாவையாவரிக்குமோ ஞானவுருவொ ளியாகையால் ஆத்மாவும் வெளியுருவாம் ஒளியை யொழிக்கு மென்னி ல் அப்போது ஆத்மப்பிரகாசமாகிறவொளியால் ஆத்மவொளியழியாது அழி யி லுயிருமழியும் ஆணு லாணவ மான்மாவை யாவரித்தல் கூடாது ஆத்ம சொரூபத்தில் விருத்தியாய் நிகழ்ந்து ஆத்மா விச்சாஞானக் கிரியைகளைத்த டுக்கும் அதெப்படி தீயினுடைய உஷ்ணத்தை மந்திரசத்தியால் தடுத்து உ ஷ்ணமறைபட்டு ஒளிநின்றாற்போல ஆத்மஞானங்கெடாதென்றறிக. இந் த அர்த்தங்களைவிரிக்கிற் சங்கையும் பரிகாரமு மெத்தவுண்டாய் விரிவாமெ ன்றறிக.

௱உ௩. போற்றியிடும்பதிவிபுவாயான்மாவுமிதனைப் பொருந்தியெ
றுமறியாமைபுகன்றுபின்னுஞ், சாற்றுவதேனணவந்தான
னுதிபாசஞ்சாருமுயிர்தனைச் சிவனைச்சாராதென்னென்னிற்,
காற்றதுதான் வானத்தைப்பிரியாதேனுங் கந்தமுடன்வெம்
மைதட்பஞ்சலனமெய்த, மேற்றிகழுமாகாசத்திவைபொருந்
தாவாறுமேலுமோருவமானம்விளம்பக்கேளே.

இதல்லாமலுங்கடல் நீரிலே யிருக்கிறஉப்பு அந்தச்சலத்தைதரித்திருக்கிற பூமிக்கில்லாதுபோலச் சிவனுக்கு மலமாயைகூடாது ஆனுற் சிவன் அந்தகா ரவிரோதியல்லவோ சிவன் சந்நதியிலிருக்கிற சீவனை ஆணவமூடி யிருக்கு மோவென்னில் மூடியிருக்கும் அதெப்படி திஷ்டம் விஷமானது அரா விடத் திலேயிருந்தும் அந்த விஷம் பாம்பை வாதியாமற் பாம்பின்வாயினுலேகடியு ண்டவனை வாதிக்கும்அதுபோலச்சிவனிடத்தி லிருளிருந்துஞ் சிவனைவாதியா மற் சீவனை வாதிக்குமென்றறிக. இதல்லாமலும் நிர்விஷமும் விஷமுமொ ருமுதலிலேநின்றாலும் அங்கே யந்த மரத்திலேகூடியபோது அங்கேயிருக் கிற நிர்விஷம் அங்கேயிருக்கிற பச்சைநாபி விஷத்தைமறியாமலிருந்து பச் சைநாபிதின்றபேருக்கு நிர்விஷந் தீர்த்தாற்போல ஒருசீவனையடைந்த ஆண வத்தைத் தீர்க்குமென்றறிக. இதல்லாமலும் பெருங்காயத்தை ஒருமரத்தின் வேரிலே யிட்டா லந்தமர முலர்ந்துபோம் பின்னொருமரத்தின்வேரிற் பெரு ங்காயத்தை யிட விருட்சம் பலிக்குமென்றறிக.

௱உச. ஏகமாயனேக மாஞ்சத்தியுள்ளதாகி யெண்ணி லுயிர்ஞானத்
தைத் தடுப்பதாகி, மோகமுதலெழுகுணங்க ளுடையதாகி

முடிவிலதாயநாதியுமாய் முத்தியுயிர்க்காகப், பாகமாம்படியாதிசத்தியன்னைப் புலவநுமாய்ப் பக்குவத்தையடையுயிர்கள் பாலி, லாகமாதிகள்யாவுமடையாதுமுத்தியடைவதும் குதநாளிங்குமாணவமென்றறியே.

௱௨௫. ஏதுக்காயாணவமுன்னென்னவேண்டு மெனினுயிர்கள்ஞா
னத்தைத் தடுப்பதொன்றிங்கிலையேல், மாதுக்கமுறுதுயிர்க
ளெவ்வறிவுமெல்லா வல்லமையுஞ்சுதந்தரமு மருவியிடும்பி
றப்பார், தீதும்றுவருந்தாது ஞானவுருவாமாம் சிவன்போல
வேறிற்குஞ்சிற்றறிவுமாகா, கோதற்றமுத்தியென்ப தேதுவி
டிலென்றே குறித்திடியிவ்வாணவமாங் கூறுங்காலே.

இனித் தத்துவரத்திநகரத்தில் மும்மலவர்பேதஞ் சொல்வது.

௱௨௬. கேவலவிஞ்ஞானத்தர் கிளர்ந்தவிஷ்த்தேவரொன்ம
ராவையிலேழுகோடி மந்திரமூர்த்தத்தானோர்
மேவியுவராவைத்தை விட்டகத்தான்மாவென்னத்
தீவியான்குபேதத் திறத்தவிஞ்ஞாகலத்தோர்.

௱௨௭. இருமலராகியுள்ள பிரளயாகலர்தாமென்போர்
வருபலகோடிபேத வுருத்திரர்வருசீகண்டர்
தெருட்டருமண்டலேசர் குரோதேசர் தீர்த்தத்துள்ளோ
ரொருமலத்தவத்தால்விட்டோ ரொன்றிலோர்மூவருண்டாம்.

௱௨௮. பெத்தசித்ததனோடொன்றப்பேணியமுத்தசித்தும்
பெத்தமுத்தத்தசித்தும் பேசின்மூவகுப்பதாகும்
வைத்தமூன்றுகும்பேதம் வகுத்திடிலொருபத்தாகும்
வைத்தசீவாத்மாவந்த ராத்மாமன்பூதவாத்மா.

௱௨௯. பரமான்மாசீவாத்மா பகருமைங்கலைப்பாலாத்மா
திரமாமுத்தான்மாசித்தான் மாதிகழிருபான்மூன்றே
டிரமானவிருபேதத்தா லுள்ளதாமாத்மபேதம்
வரமானகிரியாபேதத்தான் மாயைபாம்பலவாமாத்மா.

இனிக் கன்மமலலட்சணம் வியாபகமாய் அந்தந்தவணுக்கடோறும்வெவ்வேறுகன்மமாய்அறிந்துசெய்வதும் அறியாமற்செய்வதும்வந்தேறுகிறதாய் சுகதுக்கத்தைச்செய்வதாம் இதவகிதங்களாலாவதாய் அனுபவத்தாலொழிந்துதீராதாய் சஞ்சிதமாவது அநாதிதொடுத்துச் செனனந்தோறும் ஆர்ச்சித்தவினைபுசித்து மிஞ்சியது ஓஆறத்துவாவிலுங் கட்டப்பட்டிருக்கிற புண்ணியபாவமாயிருக்கும் பிராரத்துவமாவது இந்தச் சஞ்சிதத்திற் சிறிது சிக்கப்பாகப்பட்டவினை சரீரத்தையெடுப்பித்துச் சாதியாயுபோகத்தைக் கொடுக்கும் ஆகாமியமாவது பிராரத்துவபுசிப்பில் வந்தேறுகிற புண்ணிய

பாவமாயிருக்கும் பின்னும் உருவெடுத்தற்குக் காரணமாய் நானுவிதங்கள ன்போகத்தையுடையதாய்செனனமரணமுண்டாக்கிவரும் இந்தக்கன்மம் உ வதாயு மழிவதாயும் வருமென்று சொல்வாருமுளர். இன்னுமனுதியா யாத்ம க்கட்டோறும் பலவிதமாய் மனேவாக்குக்காயங்களாலு முண்டாவதா யிவர் ளுடைய புத்தியை யடைந்திருப்பதாய்ப் புண்ணியபாவமாய் மாயையாலே தோன்றுவதா யிந்தக்கன்மம்நல்லசாதி தீயசாதிதீர்க்காயுள் அற்பாயுள்அற் போகம் மகாபோகமாய் தெய்வீகம் பௌதிகம் ஆத்மீகம் இப்படி மூன்றுவ தமாய்ச் சஞ்சிதம்பிராரத்தம்ஆகாமியமாய்ப்பின்னும் இச்சாபிராரத்தம் பரவ ச்சாப்பிராரத்தம் அனிச்சாபிராரத்தம் இப்படியிருக்குமென்றறிக. இதிற்சஞ் சிதமாவது பிறப்பைக்கொடுக்கும் பிராரத்துவமாகிறது எடுத்த உடலில் சு துக்கங்களைப் புசிப்பிக்கிறது ஆகாமியமாவது புசிக்கும்போது கட்டு படுகிறது. இதிற் பிராரத்துவமாவது தெய்வீகம் பௌதிகம் ஆத்மீகம் என்ற மூன்றுவிதமாம் இதில் தெய்வீகமாவதுகெற்பாசயத்தில் வரும் விதனம்பிரச வகாலத்தில் விதனம் நரை திரை மூப்பில் விதனம் அஞ்ஞானத்தால்செய்ய ப்பட்ட அளவில்லாதசங்கற்பத்தில் வரும் விதனம் மரணகாலவிதனம் நரகத்தி ல் விதனம் இப்படி யிச்சியாமல்வருகிற அனிச்சியாப்பிராரத்தம் ஆறுவிதம ம் இனிப் பௌதிகமாவது குளிராலும் மழையாலும் வெய்யிலாலுங் காற்றாலு ம் மின்னலாலும் இடியாலு மிப்படி யிச்சாபிராரத்தமாரும் இந்தவாறு வேண்டினகாரியமானலும் மிகினுங்குறையினுந் துக்கவேதுவாம் ஆனலுமவ அவசியம் வேண்டியிருக்கிற காரியமாகையால் இச்சா பிராரத்துவமாம் இதல்லாமலொருவனை அடித்துங் கட்டியுஞ் சிறைவைத்தும் வெகு உபத்தி ரவங்கள் செய்யவும்ஒருசீவனை ஒருசீவன்கொன்றும் அதிற் சிலசீவன்களைத்தி ன்றும் இதில்வருந் துக்கசுகங்கூடி ஏழுவிதமாம். இனி ஆத்மீகமாவது தேகத் தைப்பற்றி வருகிறதொன்று மனதைப்பற்றிவருகிறதொன்று ஆக விரண் டுவிதமாம் இதிற் றேகத்தைப்பற்றி வருவதாவது வாத பித்த சேத்மம் முழுகுநோய் ஒழுகுநோய் நீர்ப்பாடு வெப்பு சூலை யிதுமுதலான - ஙகூ௰ - வ் யாதிகளுஞ் சத்துருக்கள் விலங்குகள் பசாசுகள் கள்ளர் ஊர்வை பறவை ரா ட்சதர் கொசுகு மூடு ஈ எறும்பு ஸ்திரி புருஷ கூட்டப் பிரிவு குருசே வை தேவகாரியந் தபசு சம்பத்து அடாதனசெய்கை யிப்படி வருவனவும் இ தல்லாமலும் வெகுவித உபத்திரவங்களுமாமென்றறிக. இனி மனதைப்பற்றி வருகிறது சோகம் பந்துக்கள் திரவியங்கள் முதலான விவற்றைப் பிரிகையா லும் பிறருடையவறிவு முருவமு மாக்கமுங் கண்டு பொறாமையாலும் அழுக் காறு மனதுக்கழிவுவருதல் விஷயத்தி லிச்சை கோப மிவை யைந்துமுதலா கவரும் விதனம் இப்படித் தேகத்திலு மனத்திலும்வந்தேறுகிறது பிறத்தியா க விருப்பதாலும் துக்கசுகம் வருகையாலும் பரவிச்சா பிராரத்துவமென்று ங் கொள்வாருமுளர். இப்படித் துக்கத்திரயமிருக்குமென்றறிக. இது பி ன்னுமொருவிதமாம் அந்தக்கரணம் - ச - ம் இந்திரியம் - ௰ - ம் ஆக - ௰௪ - ம் அத்தியாத்மீகமாம் இதின் விஷயங்களாதிபௌதிகமாம் இதின் அதிதேவ

தைகளே ஆதிதெய்வீகமாம் இப்படியுஞ் சொல்லுமென்றறிக. இனி முன் சொன்ன பிராரத்துவத்தை யிச்சிக்கப்பட்டுவருகிறதெல்லா மிச்சாப்பிராரத் துவமென்றும், இச்சையில்லாமலிருக்க வருகிறதை அனிச்சாப்பிராரத்துவ மென்றும், ஒருவர்தெண்டனை சிநேகங்களால் வருகிறதைப் பரவிச்சா ப்பி ராரத்துவமென்றுங் கொள்வாருமுண்டென்றறிக. முன்பு ஆர்ச்சிதபுகன்மம் புசித்துத்தீருமாயின் இனிமேற் சென்மம்வருவானேனென்னில் அதுமுன்செய்ததை யிப்போது அனுபவிக்கிறேமென்ற னுபவியாமல்அதை நான் செய்தேன் பிறர்செய்தார் அவராலேவந்தது நம்மாலேதப்பிவந்தது என்றும் யானெனதென்றுசுட்டி முன்செய்ததென்கிறதை மறக்கையினால் இது தானே மேலைக்குங்கட்டுவதென்றறிக. இனிச் செய்கிறகன்ம மிரண்டுபிரகாரமாம் புத்திபூர்வம் அபுத்திபூர்வமாகச் செய்கிறது இதுவே இதாகிதமாம் இஃதேபுண்ணியபாவமென்றுஞ்சொல்லும் இது மனோவாக்குக்காயங்களால் வரும் ஒன்றொன்றலார்ச் சித்தகன்மம் ஒன்றொன்றற் போக்கவொண்ணுதாய் புசிப்புத்தவிர ஈர யிதிலொருவினையைக்கொண்டு ஒருவினையைப் போக்குதற்கு வேதாகமபபடிசெய்தாற் கூடினகன்மம் நீங்குவதாயும் விலக்கிக்கொண்டாலுந் தீருவதாயுமிருக்கு மிப்படியானுற்றான்தான் கன்மங்களைச்செய்யாமற் செய்கிறபேர் சுகிர்தங்களையெல்லாம் விலக்கிக் கொண்டு போக்கலாமென்னில் மிருதிகன்மம்போம் போகாதகன்மம் புசிக்கவேண்டுமாகையால் இதி லாற்சனமானகன்மம் மேலைக்குப் பந்தனமாமென்றறிக. இந்தக் கன்மம் வித்து மங்குரமும்போலப் பிறவாஹனுதியாயிருக்கும் இனிக் காணப்பட்டசென்மத்திலுங் காணப்படாதசென்மத்திலும் நியமித்தகாலத்திலும் புசிக்கிறதாக மூன்றுவிதமாங் காணப்பட்ட சென்மத்திற் புசிப்பாவது அன்னபானுதிகளும் தெண்டனைபண்ணுகிறவியாதிகளும் இராசதெண்டனைகளாலும்பகைவராலே பிரயோகிக்கப்பட்டமந்திரதந்திர அஸ்திரங்களாலு மிப்படி யனேகவிதமா மிந்தத்தேகத்திற் புசிப்பு இனிக் காணுதசென்மத்திலாவது சொற்க நரகத்தி லனுபவிப்பது நியமித்தகாலத்திலாவது ஒருகாலத்திற்செய்த அஸ்வமேதயாகமும் பிரமஹத்திபாவமுங் கர்த்தா ஒன்றை யின்னசென்மத்திலென்று நிறுத்தி யொன்றை யிந்தசென்மத்தில் புசிக்கவுஞ் செய்வன் இதுகள் மாயையால் சிருட்டிகாலத்திற் புசிக்கப்படும் இனிப் பொய்யுமெய்யுங் காரணமாகையாலே புண்ணியபாவமானதென்றறிக. இந்தக் கன்மம்வியாபிதமாய் சங்கிலித்தொடர்ச்சியாய்ப் புத்தியில்வசனுதிதோஷம் பொருந்திப் பந்தமாகச் சிவன்புசிப்பான் அதெப்படி யென்னில் பேறு இழிவு இன்பம் பிணி மூப்பு சாக்காடு என்ற வாறுஞ் சுக்கிலத்தோடு கருவாகிப் பற்றி வித்துமரமும் போலவுங் கழனிக்குப்போட்ட எருத்தழைகள் நைந்து அழிந்து மண்ணேடுமண்ணுய்ப் போயும்பின்பு அழிந்தது தானேபயிருக்குப் பலிக்கும்போலென்றறிக.

ரு
ஈகூ. இருவினைகட்கிடாகத்தனுவாதியிறைவ னிசைத்திடுவன்மாயையிலென்றீர்வினைகளெல்லாம், வருவனவுமனமாதிமாயாகா

ரியத்தான் மற்றவற்றுள்முன்னுகமன்னியதேனென்னி,லொருவாதஞானத்தையிச்சைதொழிலொக்க வுள்ளதாலனுதியாவுடன்மாயைவினைகள், கருவாகியதனுலேசகசமாகக் காரியமும்பலன்களுமாங் கருதிக்காணே.

௩௩௧. அனுதியேயாணவத்தின்குணங்கள்கூடு மாத்மாக்களறிவிச்சைதொழில்களாலே, மனுதியாற்புரிவதனுற்கன்மமென்று மருவுவர்கட்காகையினுலதிட்டமென்று, முனுதுபுரியாதிருக்கிற்பரிகாரத்தை யுண்ணுமலொழியாமலுறுவதாகித், தனுதியந்தம்புரிதலினுற்புசிப்பாலாகித்தானிற்கும்கன்மமின்னுஞ்சாற்றக்கேளே.

என்பது கன்மத்துக்கேடாகத் தனுவாதிகளை மாயையால் சிவன்கொடுப்பானென்றீர்மனமாதிகளால்வருவதாயிருக்கமுன்னே வந்ததெப்படியென்னில் அனுதியேயாத்மாவுக்கு மாயையால் இச்சாஞானக் கிரியைகளுண்டாகையால் அதனுல்கருப்பற்றிமனத்தினுலேகாரியமாய்ப்பயன்படும் இதல்லாமலாத்மாவுக்கு ஆணவத்தி லேமுகுணங்களுமாத்மா விச்சாஞானக்கிரியையால்கூடும் இனி மனத்தில் உன்னுமற்செய்யாமற் பரிகாரங்களை யுண்ணுமலிருந்தாலுந் தானொழியாமற் பலிக்குமென்றறிக. இப்பாற் பாரதத்தி லொருகதையுண்டு கௌதமியாகிற பிராமணத்தி புருஷன் மரித்ததுக்கத்திலே வருத்தப்பட்டுத் தன்பிள்ளையையெடுத்துக்கொண்டு தானும்போய் ரிஷிகளாசிரமங்கள்தோறுஞ் சென்று மவர்கள்சேர்வைகளைச்செய்து மோட்சமாகிலும் பெறுவோமென்று போய் ரிஷியாசிரமங்களிலே சஞ்சரிக்கிறநாளி லொருநாள் நித்திரைசெய்யும்போது பாம்புவந்துகடித்துப் பிள்ளைமரித்தது அந்தப்பிள்ளையைப் பிராமணிபார்த்து மெத்தப்பிரலாபித்து ஓ பாம்பே யென்பிள்ளையால்உனக்கு ஒரு உபத்திரவமுமில்லாதிருக்கஎன்பிள்ளையை யேன் கொன்றுயென்றுஅலறச்சே அதை உற்பதனென்கிறவேடன்கேட்டுவந்துஉன்மகனைக்கடித்த சற்பம் புற்றிலிருக்குது அதைப் பிடித்துவருகிறேனென்று பிடித்துவந்து பிராமணிமுன்னேவிட்டு இது உன்பிள்ளையைக் கொன்றது இந்தப் பாம்பை நான்கொல்லுகிறேனென்ன அப்போது என்மகனுஞ் செத்ததல்லாமற் பாம்பின்பழியு மென்மேலேகட்டவேண்டாமென்று வேடனை வேண்டும்போது அந்தப்பாம்பு வாராய்பிராமணி யுன்மகனுலே எனக்கொருதோஷமில்லை யுன்மகனை நான்கொன்றதுமில்லை மிறுத்தியுவந்து என்னைவரவிட்டான் அவனுலேகொன்றேன் என்மேல்தோஷமில்லை யென்ன அப்போது மிறுத்தியுவை நினைத்துஅழ அப்போது மிறுத்தியுவும்வந்து என்னை யமன் வரவிட்டானதினுலே நான் பாம்பைவிட்டேன் என்மேல் தோஷமில்லையென்ன அப்போது எமனும்வந்து நான் வரவிட்டவனல்ல உன்மகன்செய்த கன்மத்தினவாக அவன் மரித்தான் எல்லாவற்றிற்கும் கன்மமானதுகாரணமாகையாலே கருவிலேதானே சாவு வாழ்வு வித்தை சென்மம் புசிப்புகள்முதலானதெ

ல்லாங் கட்டுப்பட்டு அந்தப்படியே மரிப்பான் விதியதுவாகின் மதியதுவாமெ ன்று எமன் சொல்லிப்போனுனென்றறிக. ஆகையால் கன்மமே பிரதானம்

வெண்பா.

ராகூஉ. வினைப்பயனைவெல்வதற்கு வேதமுதலாம்
அனைத்தாய நூலகத்து மில்லை- நினைப்பதெனக்
கன்னுறுவதல்லாற் கவலைபடே னெஞ்சேமெய்
வின்னுறுவார்க் கில்லை விதி.

இந்தச்சுத்தசைவத்திற்பதிலட்சணமும் மாயாலட்சணமும் பசுலட்சண மும்ஆணவகன்மலட்சணமுமிதுகளெல்லாஞ்சொன்னதென்றறிக. இனிமுன் சொன்ன மஹேஸ்வரவாதிக்கு மிந்தச் சைவத்துக்கும்பேதமுண்டென்றறிக.

---

## உள-வது —அத்தியாயம்.

## சிவசமவாதிமதம்.

பதிபசுபாசபதார்த்தத்தின் விதியதுவாய் வ..................ாறே.

இனிச் சிவசமவாதிமதம் பதி பசு பாச மூன்றும் நித்தியமாம் இந்தமூன் றின் சொரூபலக்ஷணமாவது பதியாவது நாமரூபக்கிரியா ரகிதனாய் நித்திய மாய் நிஷ்களனின்மலனாய் சுத்தனாய் பற்றில்லா..வனா யிருப்பதுபதி. இனிப் பசுவானது அனேகருமாய் நித்தியருமாய் வியார்த்தருமா யனாதி மலசம்பந்த ருமாய் மலத்தோடுகூடித் தன்னைத்தலைவனையறியாம லிருப்பது பசு.இனிப் பாசமானது நித்தியமா யனாதியா யனந்த வியாபகசத்தியை யுடைத்தாயிரு க்கும், இது மூன்றுக்குஞ் சொரூபலட்சணமென்றறிக. இனி யிந்தமூன்றின் தடத்தலட்சணமாவது முன்சொன்ன பதியினிடமாக அனேகசத்திகள் மூர் த்திகளுண்டாம் அதெப்படி முன்சொன்ன சுத்தசைவனுக்குச் சிருஷ்டிக்கி ரமமானபடியே யிவனுக்கும் ஆத்மாவின் மலபந்தம்நீக்கும்பொருட்டு விரிவா னதென்றறிக. இனிப் பசுவானது மலந்தீரும்பொருட்டுச் சிவன் மாயா யுபா தானமாக ஆத்மவர்க்கங்களுக்குத் தனுகரண புவனபோகாதிகளைக் கொடுத்து அதிலேதிரிவன். இனிப் பாசமாவது சிவனால்விரிந்து மலம் பக்குவப்படுவது இ ந்தமூன்றின் தடத்தலட்சணம் முடிந்தது இனிப் பந்தநிலையாவது சிவன் மாயையினாலே கன்மவசத்தாக மலந்தீரும்பொருட்டுத் தனுகரணபுவன போ கங்களைக்கொடுத்துச் செனனமரணப் படுத்துவனென்றறிக. இனி முத்திநி லையாவது கன்மசமத்துவமு மும்மல பரிபாக முண்டானபோதே நான்குவித சத்திநிபாத சமயவிசேஷ தீட்சைபெற்று விதியாகச் சிவனைப்பூசித்துப் பி ன்புதீவரதர சத்திநிபாத பக்குவத்திலே அத்துவாசுத்தி பண்ணுவதான நிரு வாணதீட்சையினால் தத்துவம்-கூசு-ம் பஞ்சகோசங்களும் போக்கிப் பதிபசு பாசபந்தங்களறிவித்துப் பாசந்தீர்த்து பசுவானது தேகத்தில் ஈஸ்வரனை ப்போல் எங்கும் பரிபூரணனாய் சர்வஞானத்துவஞ் சர்வார்த்த கர்த்தத்து

வத்தையு முடையனாய் பஞ்சகிருத்தியமும் பண்ணவல்லவனாய் சிவனுடனே கூடிச் சாயுச்சியமாகாமல் வேறாயிருப்பது முத்திநிலையென்றறிக. இனி யிவன்கொள்ளுவது மலம் - ௫ - ம் தத்துவம் - ௯௬ - ம் பிரமாணம் - ௬ - ம் முன் சுத்த சைவனுக்குள்ளதெல்லாங் கொள்ளுவானென்றறிக. முன்சொன்ன சுத்தசைவனுக்கு மிவனுக்கும் பேதமென்னென்னி லிருவருக்கு முபக்கிரமம் உபசங்காரம் மற்றுமெல்லாஞ்சரி. அதில் மோட்சத்திலே சிவனுக்குவேறாய் சர்வகத்துருத்துவமுண்டாய் தேகாந்தத்தில் பஞ்சகிருத்தியமுஞ் செய்யுமென்றது பேதமென்றறிக. இந்தமதமும் ஒரு உருத்திரரா லுண்டாக்கப்பட்டுச் சிவஞானசரியாகையால் சிவசமவாதியானதென்றறிக. ஆத்மாசித்த வியாபகசைதன்னியனென்றறிக.

---

## உஅ-வது—அத்தியாயம்.

# அயிக்கவாதிமதம்.

### மலம்போமுத்தியில் அயிக்கவாதிமதலட்சணம்.

முன்சொன்ன சிவசமவாதியைப்போல் இவனுக்குந் திரிபதார்த்தத்தின் சொரூபலட்சணமுந் தடத்தலட்சணமும் ஆத்மாபந்தப்பட்டுச்செனனமெடுக்கிற பந்தநிலையும்முத்திநிலையுஞ் சரியென்றறிக. இதில் அயிக்கவாதிக்குப் பேதமென்னென்னில் ஆத்மா அனாதிசுத்தனொன்றுங் கேவல வவத்தையிலாணவமில்லை மாயையுங் கன்மமுமேயுள்ளதென்றுங் கன்மசாம்மிய பரிபாகமுண்டானவாறே நாலுவிதமாம் சத்திநிபாதமுண்டான வளவில்ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளி யவர்கையிற் சமையவிசேஷதீட்சைபெற்று விதிப்படி சிவனைப்பூசித்து அத்துவாசுத்தி பண்ணுவதான நிருவாணதீட்சையினாலே மாயாகன்மங்களைப் போக்கி அனாதியில்சுத்தாத்மாவுக்கு நடுவேவந்தமாயை கன்மம்போனபிறகு பாலும்பாலும் நீருநீருங்கலந்தாற்போலச் சிவனுடன் கலப்பதென்றதுவும் பேதமென்றறிக. இதுவுமொரு உருத்திரராலுண்டாக்கப்பட்டதென்றறிக.

---

## உ௯-வது—அத்தியாயம்.

# பாசுபதிமதம்.

### மலம்போமுத்தியிற் பாசுபதிமதமாவது.

பதி பசு பாச மூன்றுநித்திய மிதிற் பதிசொரூபலட்சணம் பதியானது நாமரூபக்கிரியாரகிதனாய் நிஷ்கள நின்மல நிராமய நிராளம்பநிந்த சுத்தனாயிருப்பது பதி. இனிப்பசுசொரூபலட்சணம் அனேகருமாய்நித்தியருமாய் வியார்த்தருமாய் அனாதிமலசம்பந்தராய் பரமாணுசொரூபமாயிருப்பதுபசு. இனிப்

பாசமாவது நித்தியமாய் அனந்தவியாபக சத்தியுண்டாயிருக்கும் இது மூன்றின் சொரூபலட்சணமுடிந்தது. இனி மூன்றின் தடத்தலட்சணமாவது இதிற் பதியின் தடத்தலட்சணமாவது பதியினிடமாகச் சத்திகளுண்டாய் உருகளிடமாக மூர்த்திகளுண்டாய்ப் பஞ்சகிருத்தியங்களைச்செய்வது அதெட்படி பதியின்சந்நிதியில் அணுத்திரள்கள்கூடிப் பஞ்சபூதங்களாய் இது முதலாக வுலகங்களையுண்டாக்கும். இனிப் பசு வின்தடம் பசுவுக்குச் சிவன் மாயையினிடமாகப் பரமாணுக்கள்தானேகூடி மாயை கன்மம் பிரபஞ்சங்களாய் பசுவும் பரமாணுவாய்த் தனுகரணபுவன போகங்களோடுகூடி விரிகிறது. இனிப் பாசத்தின்தடம் அணுக்கள்தானேயிறையவன்முன்னக மாயை பூதமூலங்களாய் விரிகிறது இப்படி மூன்றுதடமு முடிந்தது. இனிப் பெத்தநிலையாவது பசுவானது அணுத்திரள்கூடி மாயைகன்மம் பிரபஞ்ச தனுகரணபுவனபோகங்களோடுகூடிப் பந்தப்பட்டுச் செனனமரணப்படுவதென்றறிக. இனி முத்திநிலையாவது கேவலத்திலாணவமில்லைமாயையுங்கன்மமுமே யுள்ளது இதைச் சிவன் அறுதிசுத்தராயிருக்கிற ஆத்மாவினிடத்தில் கூடின கன்மசமத்துவத்தில்சத்திநிபாதமுண்டாக்கி ஆசாரியமூர்த்தியாக எழுந்தருளிமாயாகன்மங்களை அத்துவாசோதனையாணநிருவாணதீட்சையில்போக்கி நித்தியவியாபக சைதன்னியவாத்மா சிவபூசையால் பேதமில்லாமற் சிவனுடன் பாலும்பாலும் நீரு நீருங்கூடினாற்போல் கலப்பது முத்திநிலை யென்றறிக.

௱௩௩. அணுத்திரளிறைவன்முன்ன ரகிலமுமுளதேயாக்கு
மணுப்பலபேதத்தாகு மானவைமலங்கணீங்க
வினைப்பிலாவமலபூசை யிறைவன்பாலியற்றறன்னுற்
றணைப்பிலாமுத்தியென்னச் சாற்றும்பாசுபதிதானே.

௱௩௪. அகிலமிறைமுன் பணு த்திரளேசெய்யுஞ் சகலாத்மாக் கடளையாமலங்க ளகலவம்பூசையா லொப்பாகைமுத்தி புகல்கிருன்பாசு பதன்பரமாணுவு.

௱௩௫. பரமாணுவுதானமாயவற்றிற்புணர்ப்பதுகாரணமாகியுலகம்
பண்ண,வரமாகவிறைநிமித்தமாகிநிற்கு மலமூன்றின்பிணிப்
பாகும்பசுக்களெல்லாந்,திரமாகவாகமத்தின்முறைமையாலே
திகழாவாகனமுதலாம்படியேயர்ச்சித், துரமாகும்பாசமறவ
ணுக்களெல்லா மொன்பதியொத்திருப்பதேயுயர்வீடாகும்.

என்பது சிவன் நிமித்தகாரணனு யிவன்முன்னுகப் பரமாணு வுபாதானமா யிதிற்புணர்ப்பது காரணமாக வுலகத்தையுண்டாக்க ஆத்மாக்க ளெல்லா மூன்றுமலத்திலுங்கூடப்ப டுப் பந்தனையாம் இந்தப்பந்தம்விட ஆகம முறைமையாலே ஆவாகனமுதலானபடியே பூசைசெய்து மலங்களெல்லா நீங்கிப் பதியோடொத்திருப்பதேவீடாமென்றறிக. இதல்லாமலும் ஐம்மலங்களு மணுப்பேதத்தாலுண்டென்றும் அதுநீங்கிப் பதியோ டொப்பதென்றுஞ்

சொல்லுவதென்றும் ஆத்மா நித்யவியாபக சைதன்னியன் கர்த்தத்துவமே சங்காரமாகையா லதைநீங்கி ஞெப்திமாத்திரமாதல் மோட்சம் இதுவுமொரு ருத்திரராலுண்டானதென்றறிக.

## ௩௰-வது—அத்தியாயம்.

## சங்கிராந்தி வாதிமதம்.

### மலம்போமுத்தியிற் சங்கிராந்திவாதிமதம்.

பதி பசு பாசம்-௩- ல் பதிசொரூபம் பதியாவது நிர்விகாரமாய்ச் சுத்த ஞயிருப்பர் இனிப் பசுவானது அணுவியாய் சுத்தராயிருப்பர் இனிப் பாசமா னமாயை சடமாயிருக்கும் இதுமூன்றின்சொரூபலட்சணம் இனி யிந்தமூன் றின் தடத்தலட்சணமாவது பதியொன்றையுஞ்சுட்டாமல் விளக்குப்போலயிருப்ப ன் இனிப் பசுவானது அனேகம் இதுகள் சூரியன்சந்நதியில் காந்தமிரும்பை ச்சேஷ்டிக்கும்போல மாயையால் கற்பிதமான வுடம்பைச் சேஷ்டிக்கும் இனி மாயையாகிறது தனுகரணபுவனபோகங்களாய் விரிகிறது ஆ-௩-இனிப் பந் தநிலையாவது உடலியங்கு மவசரத்திற் சலிக்கிறபூட்டையின் அவயவங்கள் தந்தம்தொழிலைச் செய்யுமாறுபோலச் சத்தாதிகளை யிந்திரியங்கள்கிரகிக்கும் இதில்வந்த பயனை யந்தக்கரணங்களனுபவிக்கும் அந்தக்கரணநீங்கின் விந்தி ரியங்கள் விஷயமாகிறபயனை யனுபவியாது பிராணவாயு ஒடுங்கி லுடல்சேஷ் டியாது இப்படிப் பந்துக்கட்டான தத்துவங்களுடனேகூடிச் செனனமரண ப்படுவது. இனி முத்திநிலையாவது ஆசாரியன்செய்யப்பட்ட கிரமதீட்சையி னால் முன்னுள்ள தத்துவவிகற்பங்களான மலங்கள் நீங்கிக் கண்ணாடியிலேநிழ லாகச் சங்கிரமித்தாற்போல ஆத்மாவில் நிழல்போன்ற சிவனுடைய ஞானஞ் சங்கிரமிக்கும் அப்பொழுது அக்கினியைச்சேர்ந்த காட்டமக்கினியானாற்போ லவும் அளத்தைச்சேர்ந்த துரும்பு உப்பானாற்போலவு மிவன்பசுகரணமாறிச் சிவகரணம்புரிந்து அறிவும் ஏகமாய் யானென்னதற்றுச் சிவனாயிருப்பனென்ற றிக. இதுமுத்திநிலை இனி யிவனுக்கும் முன்சொன்னபாசுபதிக்கும் பேதமெ ப்படியென்னில் அவன் சிவன் முன்பே அணுத்திரனுண்டாக்கின வுலகத்தி னால் பசுக்களுக்குப் பந்தமென்றும் ஆவாகனாதி பூசையாலேமலம்போய்மோ ட்சமென்றுஞ்சொல்லுகையில் இவன் சொன்னதெல்லாம் பேதமென்றறிக.

## ௩௧-வது—அத்தியாயம்.

## பிறவாஹேஸ்வரவாதிமதம்.

### மலம்போமுத்தியிற் பிறவாஹேஸ்வரவாதி மதமாவது.

பதி பசு பாச மூன்றின் சொரூபலட்சணமாவது ஈஸ்வரனொருவனுண்

டென்பது ஆத்மாக்களனேகருண்டு மாயையுங்கன்மமுமுண்டு இந்தமூன்றும் அனாதியிலே யுண்டென்றறிக. இனித் தடத்தலட்சணமாவது ஈஸ்வரன் ஒருவன் அதிகாரத்துக்கு ஒரு முத்தாத்மாவந்து பட்டங்கட்டிக் கொள்ளுகிறது இனி யாத்மாக்களுக்கு அனாதிமலமில்லை மாயைகன்மத்தாலே பந்தப்பட்டுக் காரியகாரணங்களாயிருக்கிற தத்துவக்கூட்டத்தால் தனுகரணபுவனபோகங்களைக்கூட்டிச் செனனத்துக்கேதுவாகிறது. இனி மாயையுங்கன்மமு மாத்மாக்களுக்குப் பாசமாய்விரிகிறது இந்தமூன்றுந் தடத்தலட்சணமென்றறிக. இனிப் பந்தநிலையாவது பசுவானது மாயையாலுங் கன்மத்தாலும் பந்தப்பட்டுப் பிறவித்துன்பத்தையனுபவிப்பன் இனி முத்திநிலையாவது இவனுக்கு ஒருபக்குவத்தில் வயிராக்கியஞ்செனித்துப்பக்குவகாலத்திற் குருவைத்தேடித் திட்சாக்கிரமங்களால் மாயைகன்மமிரண்டையும் நீக்கி யாத்மாசுத்தனான பிறகு ஈஸ்வரன் தன்னுடையஞானத்தை யிந்தவாத்மாவினிடத்தில் சங்கிரமிப்பித்துத்தான்செய்கிறபஞ்சகிருத்தியங்களை யிவனுக்குக்கட்டளையிட்டுத் தன்னதிகாரத்துக் கிவனைநிறுத்தித் தான்பாரமற்றிருப்பன். அதெப்படி யென்றால் ஒருவன் குடும்பபாரத்தைப் புத்திரனிடத்தில் வைத்துப் பிதாசந்நியாசியானதுபோலவென்றறிக. இனி யிவனும் பின்னொருவன்முத்தனான வாத்மாவைத் தன்னதிகாரத்துக்குவைத்துத்தானும்பாரமற்றிருப்பன். இப்படிப்பாரம்பரையாக ஒருமுத்தாத்மாவைவைத்து ஒரு ஈஸ்வரன் பாரமற்றிருப்பனென்றறிக. இதுமுத்திநிலை யிதல்லாமற்பாரமற்றிருக்கிறஅனீஸ்வரன் அநித்தியமானபோது ஆத்மாவொருப்திமாத்திரமாயிருப்பதேமோட்சமென்றறிக. இனி யிவனுக்கும் முன்சொன்னவனுக்கும் பேதமென்னெனின்விதில் முன்சங்கிராந்தவாதி சிவன் விளக்குப்போலே யிருக்க ஆத்மாக்கள் சூரியன்சந்நிதியிலேகாந்தமிரும்பைச் சேட்டிப்பதுபோலச் சிவன் சந்நிதியிலுடலைச்சேட்டிக்கு மென்றுந் தத்துவங்கள்கூடிச் செனனஅதிகாரங்களுக்கு அவ்வளவைத்தும் பரமற்றிருப்பனென்று சொல்லுகையில் இருவருக்கும் பேதமுண்டென்றறிக.

---

## கூஉ-வது — அத்தியாயம்.

## மகாவிரதிமதம்.

### மலம்போமுத்தியில் மகாவிரதிமதம்.

பதி பசு பாசத்தின் சொரூபமாவது சிவனொருவனுண்டு ஆத்மாக்களநாதியில் மலத்திரையங்களோடு கூடியிருப்பர் மும்மலங்களு மநாதியேயுண்டு இப்படிப் பதி பசு பாச மூன்றும் நித்தியமென்றறிக. இனித் தடத்தலட்சணமாவது பதியானது தன்னுடைய கிரியாசத்தியில்லாமல்தான் ஞானசத்தியைக்கொண்டு ஆத்மாக்களைப் பெத்தாவத்தைப் படைச்செய்வது இனிப் பசுவானது மும்மலத்தினாலும் பந்தப்பட்டுச் சிவன் ஞானசத்தியால் செனனவேதுவாகிறது. இனிப் பாசமாவது பசுவுக்குப் பந்தமாய் ஞானசத்தியால் ப

லங்கெட்டுப் பக்குவமாவது இதுமூன்றின் தடமென்றறிக. இனிப் பந்தநிலையாவது மும்மலத்திலுமநாதியில் பந்தப்பட்டவாத்மாக்கள் மாயையிடமாகச் சிவஞானந் தனுகரணபுவனபோகங்களையுண்டாக்கி மலபக்குவமாகச்செனனமரணப்படுத்தித் துக்கங்களையநுபவிக்கப்பண்ணுவது இனிமுத்திநிலையாவது ஆத்மாவானது ஒருபக்குவத்தில் தீட்சையாலே மலத்திரையங்களுநீங்கி அதிகரித்து ஆகமப்பிரமாணங்களாலே பூசைசெய்து தேகாந்தத்திலே கர்த்தத்துவசங்காரத்தைவிட்டு நித்தியவியாபகசைதன்னியஞான வாத்மாசிவனுடைய ஞானசத்தியொன்றையு முடையராய்ச் சிவலோகத்தில் ஞானமாத்திரத்துடனே யிருப்பார்களிது முத்திநிலையென்றறிக.

௱௯௬. வேணியென்பக்கமுதற்றரித்துமெய்விரதத்
தானுவுரைப்படியிற்றப்பாமற்-பேணிப்
புரைதங்காதானசிவலோகம்புகலாம்
விரதங்கள்ராமுன்றன்வீடு.

௱௯௭. வேணிபோடென்புமக்கு மிக்கமுத்திரையதாகத்
தானுமுன்னுரைத்தநூலிற் சமையாசாரங்கள்பேணி
யாணியாமாகமத்தி னடைவிலேயனுவிதிக்கக்
காணியாமுத்திமாவி ரதிகாளாமுகனேகூறும்.

என்பது சடையும் எலும்பும் ருத்திராட்சமுந் தரித்துச் சிவவாக்கியந்தப்பாமற் சிவபூசை செய்யிற் சிவலோகத்தில் திவ்விய ஞானியா யிருப்பானென்றறிக. நித்தியவியாபக சைதன்னியஞானவாத்மா சங்காரமே கர்த்தத்துவமாகையா லதைநீங்கி ஞெப்திமாத்திரமானதே மோட்சமென்றறிக. இவனுக்கும் பிரவாகனுக்கும் பேதமென்னென்னிற் பிரவாகன் ஒருமுத்தனுக்கு ஒருமுத்தன் பாரமற்றிருப்பானென்ன இவன் மும்மலபெந்தமு மோட்சமுஞ் சிவஞானசத்தியாலென்றுஞ் சிவலோகத்தின் பூசையாலே ஞானமாத்திரமாயிருப்பாரென்றுஞ் சொல்லுகையாற் பேதமுண்டென்றறிக. இதுவுமொரு ருத்திராலே கற்பிக்கப்பட்டதாம்.



௯௩-வது—அத்தியாயம்.

## காளாமுகன்மதம்.

காளாமுகன்மதமாவது, முன் சொன்ன மகாவிரதிபோல் சொரூபம் உபக்கிரமம் பெத்த முத்தி எல்லாஞ்சரியென்றறிக. உதாரணம்.

௱௯௮. அத்தியக்கஞ்சடைமுதலா மடையாளங்கொண்டன்பாற்
பத்தியொடுவழிபட்டுப் பருநியமக்கொலையாமன்
மெத்தரியலவ்வுமேல் வினையாலுடலம்விடும்பொழுது
சித்தர்தொழுஞ்சிவலோக மடைவர்சிவார்ச்சனையாலே.

மகாவிரதிக்கு மிவனுக்குந் தந்திரபேதஞ் சிஞ்சித்துண்டு ஆத்மாநித்திய வியாபக சைதன்னியனென்பதொன்றறிக.

## ஙச-வது—அத்தியாயம்.

## காபாலிமதம்.

காபாலிமதமாவது முன்சொன்ன மகாவிரதி காளாமுகன்போலே யுபக்கிரமம் உபசங்காரம் பெத்த முத்தி நாலுமிவனுக்குஞ் சரியென்றறிக. இவனுக்கு மவனுக்கும் கிஞ்சித்பேதமுண்டென்றறிக. இதுவுமொரு ருத்திரராலே கற்பிக்கப்பட்டது. பாசுபத மகாவிரத காபாலிக மிந்த மூன்றுசாத்திரமும் மாயாதத்துவத்திலும் வித்தியாதத்துவத்திலு மிருக்கிற மூன்று ருத்திரராலே சொன்னதென்றறிக.



## ஙரு-வது—அத்தியாயம்.

## அவ்விகாரவாதிமதம்.

அவ்விகாரவாதிமதமாவது சொருபலட்சணம் விகாரமற்று அவிகாரமாய் நித்தியமானபதியொன்றுண்டு ஆத்மாக்களனேக ராணவத்தாலே மூடப்பட்டு அஞ்ஞானமாயிருப்பார் ஆணவமலமிருளாம் ஆட பதி பசு பாச மூன்று மநாதி நித்தியமென்றறிக. இனித் தடத்தலட்சணம் பதியானது தன்னிரும் நிழலும்போல் வந்தடைந்தவரை விடாயுந்தாகமுந்தீர்த்து அடையாதாரை வாவென்றழையாதுபோல விருக்கும். இனிப் பசுவானது சிவனுடையஞானத்தைக்கொண்டு சர்வத்தையுமறியும் பாசமானது ஆத்மாக்களைமறைத்திருந்து ஆத்மாசிவஞானத்தைக் கொள்ளுகையால் நிவ்ருத்தற்கேதுவா யிருப்பது ஆட மூன்றின் தடத்தலட்சணமு மிப்படியென்றறிக. இனி ஆத்மா பெத்த நிலையாவது ஆத்மாக்க ளாணவநீங்கும்பொருட்டு ஒருகர்த்தா வறிவிப்பதில்லாமற் சிவஞானமாகிறதைத் தாங்களேபற்றிக்கொண்டு இதினால் இந்திரியங்களைக்கொண்டு சத்தாதி விஷயங்களைப்பற்றி விஷயங்களால் பந்தப்பட்டுச் செனனமரணப்படுவது பெத்தநிலையென்றறிக. இனி முத்திநிலையாவது ஆணவமலபரிபாகம் வந்தவிடத்து இருட்டறையில் இருக்கிற பதார்த்தத்தையெடுக்கத்தீபத்தைக் கொள்ளுமாபோல ஆணவ விருள்போக ஞானமாகியவிளக்கைத் தம்பிரானு டருளால்பெற்று நீரு நிழலும் வந்தாரை வாவென்றும் போனாரைப் போவென்று மில்லாமல் விகாரமற்றிருக்கத் தண்ணீர்வேட்டவனும் வெய்யலி லடிபட்டவனும் வயிற்றைச்சேர்த்து விடாயுந் தாகமுந்தீர்ந்தாற்போல விகாரமற்றிருக்கிற சிவனைப் பிறவித்துன்பத்தில் வருந்தினஆத்மாக்கள்தானே ஞானத்தாலேசேர்த்து துக்கமற் றிருப்பார்களென்றறிக. இவர்கள் வேஷம் நரகபால பிக்ஷடனமென்றறிக. கத்துருத்துவமே சங்காரமாகையா லதுநீங்கி ஞப்திமாத்திரமானதே மோட்சமென்றறிக. இதுவு

மொருருத்திர கற்பிதமாம். இனி முன்சொன்ன காபாலிக்கு மிவனுக்கும் பே தமென்னெனின் ஆத்மாக்கள் சிவஞானசத்தியாலே மலத்திரையுற நீங்கி த் தீட்சையாலே பூசைசெய்து தேகாந்தத்திலே மோட்சமென்று சொல்லு கையில் இவன் சிவஞானத்தைக்கொண்டு ஆத்மாக்கள் தாமே மோட்சமடை வார்களென்கையா லிருவருக்கும் பேதமுண்டென்றறிக. ஆத்மா நித்தியவி யாபக சைதன்னியனென்றறிக. மலம்போமுத்தியிற்சிவசமவாதி அயிக்கவா தி பாசுபதி சங்கிராந்தவாதி பிறவாஹேஸ்ரவாதி மகாவிரதி காளாமுகன் காபா லி அவிகாரவாதி இந்த - கூ - பெயரும் மும்மலவர் சிலர் இரண்டுமலவர் சிலர் இதுகள்தீர்ந்தவிடத்தில் மோட்சம் பெறுவாரென்றறிக.

---

## ௩௬-வது—அத்தியாயம்.

## சம்மேளிதசைவன்மதம்.

ՐՐ௩௯. நித்தமாம்பதியினொடுபசுபாசந்தா னிகாயகாப்பசுவுக்குப்
பாசந்தானு, முத்தனும்பதியவனுமனாதியாக முழுமலனும்ப
சுபெத்தமவனாமேவாம், பத்திஞானத்ததாலும் பாசங்கெட்டு
ப்பதியோடுமெளிதொன்றாய்ப்பசநமுத்தி,சுத்தமாஞ்சம்மே
ளசைவமன்றித் தூரிசறநற்பொருளெதோசொல்லுங்காலே.

இனிப் பதி பசு பாச மூன்றின் சொருபலட்சணம். பதி பசு பாச மூன் றும் நித்தம் இதிற் பசுவுக்கு அநாதியாய்ப் பாசம் பந்திக்கும்பதி அநாதி முத்த ன்பாசமநாதி செடமா யாத்மாவுக்குப் பந்தமுமாமென்றறிக. இனித்தடத்தல ட்சணம் ஈஸ்வரன் வயிந்துவசரீரமுடையவன் பசுவானது அனேகமுந் தனு கரணபுவனபோகங்களுடனே கூடுகிறதும் பாசமானது ஆத்மாக்களைப் பந் தித்து விடுகிறதற்கேதுவானது இப்படிமூன்றின் தடமென்றறிக. இனிப் பெ த்தநிலையாவது பசுவானது பாசத்தினாலே பெந்தப்பட்டுத் தனுகரணங்களி லேகூடிச் செனனமறணரப்படுவது இனி முத்திநிலையாவது சிவனைத்தியா னம்செய்து ஞானபூசையாலே பாசபந்தங்களைவிட்டுச் சிவனோடுகூடுகிதே முத்தியென்றறிக.

வெண்பா.

ՐՐசO. பாசமாம்பெந்தம் பசுபெத்தன்முத்தனு
மீசனநாதியிவர்ஞான- பூசையா
லம்மோகமாறி யவரொன்றல்வீடென்றான்
சம்மேளிதசைவன் றான்.

ՐՐசக. பந்தமாம்பாசபெந்தன் பசுபதிமுத்தனாகு
முந்தியவனாதியீசன் மூதுயிர்ஞானபூசை
யந்தவாய்மையினாற்செய்ய வழிவிலாச்சீவபந்தத்
துந்தலாமுத்தியென்னச் சிவசம்மேளிதனுரைக்கும்.

முன்சொன்ன அவிகாரவாதிக்கு மிவனுக்கும் பேதமென்னென்னில் அவன் சிவஞானத்தால்தானேபோய்ச் சிவனையடைவானென்ன இவன் ஞானபூசையாற் சிவனோடுகலப்பானென்கையாற் பேதமுண்டென்றறிக.

---

## ௩௭-வது—அத்தியாயம்.

## சைவத்திற் பேதாபேதவாதி மதம்.

### சொருபலட்சணமாவது.

௱௪௨. அறிவிலதாய்ச் சச்சிதானந்தமாகி யகண்டிதமாப்பித்தமா
யனாதியாகிப், பொறிகரணங் குணங்குறிகள் விகாரமின்மையாய்ப்
பூரணமாய்யாப்பிலதாயமலமாகிச், அறிவரிதாய் மிகச்சிறு
தாய்ப் பெரிதுமாகிச் சித்தசித்தாயுள்ளதனைச் சேட்டித்தொ
ன்றாய்ப், பிறிவிலதாய்ப்பேரொளியாய்ப் பேரின்பமயமாயவன்
றாய்ப், பெறும்பொருளாம் பதிசொருபம் பேசுங்காலே.

### தடத்தலட்சணமாவது, சிவநெறிபிரகாசத்தில்.

௱௪௩. அன்னியமாயனைத்துயிர்க்கும் மலமதையாஞ்சிவன்றானனைத்
தினையும்வியாபிக்கு மதனாற்றானதுவாய்ப், பின்னமறவின்றுயி
ரின்றன்மைக்கின்றாய்ப் பெறுவிப்பன்வினைக்கீடாய்ப் பிரிவில
தாஞ்சத்தி, தன்னையோர்காரணமாய் மாயைதனிலுயிர்க்குந்
தனுவாதிநான்கினையுந் தானென்போலென்னின், மன்னியிட
க்காற்றதுதான் விசையுடனேகடற்பால் வந்துதிக்குந்திரையா
திவாறுபோன்மதியே.

### இனி மெய்மொழியில்.

௱௪௪. சுருக்கமில்சிவத்திற்சத்தி தோய்ந்தபின்மாயாசத்தி
செருக்கியேகெம்பந்தாங்கிச் செகத்தைதமுன்பின்றதன்மை
யருக்கன்றன்கிரணயோகா லந்தரத்திலங்குமேகப்
பெருக்கநீர்கெம்பந்தாங்கிப் பெய்யுமாமழைபோலன்றே.

௱௪௫. சத்தியின்றன்பேதத்தாற்சிவனுமங்ஙன் சத்தனொடுத்தியுத்
தந்தானாகிமேலும், புத்திமுத்தியுதவுபிரவித்தனென்று பொ
ருந்தியிடுமிலையமொடுபோகவதிகார, மிந்நகைமூவரிலேக
த்தாருவாகியெழில்ஞானமேவடிவாயிச்சைதொழிலிசைந்து,
சுத்தமாங்கலாதிநோற்றுருனமிலையத் தொலைவதனிற் புரிவ
ரருட்சூக்குமவைந்தொழிலே.

என்பது சத்தியின்பேதத்தாலே சிவனும் சத்தன் யுத்தி யுத்தன் பிரவதனென்று மூன்றும். இவர்கள் லயபோகவதிகாரஞ்செய்வார் இதிற் சத்

தர் உருவாகி ஞானமேவடிவா யிச்சைதொழிலுடனிசைந்து சுத்த தத்துவ மூங் கலாதிகளுந் தோன்றுகிறதற்கு முன்பே லயமா யெல்லாமிறந்து மூடியுமிடத்திலே சூட்சுமமைந்தொழிலைச் செய்வர் இனிச் சத்தராகிறவர் சூக்குமமைந்தொழில் செய்வதேதென்னில் லயகாலமுடிந்து சிருஷ்டிதொடங்குகிறகாலத்தில் பக்குவாத்மாக்களுக்குப் பரமுத்தியளித்துப் பின்பு பக்குவமில்லாத வாத்மாக்களைமறைத்து அவர்கன்மங்கள் தொலையப் பருவமுறச்செய்து மாயாசூக்குமமான மகாமாயையுந் தூலமான சுத்தாசுத்த மாயையுந் தோன்றும்வகைசெய்து கர்த்தா தனதருளாகிற சமவாயசத்தியைக்கொண்டுவிந்துவாகிற மகாமாயையைக்கலங்கல்செய்வித்து அந்தச் சமவாயமாகிற சிற்சத்தியோகமாயையென்னும் பெயருண்டா யெல்லாமுண்டாகிறதற்கு யோனியுமாய்நிற்கும். இஃதெப்படி யோனியாய்நின்று எல்லாவற்றையு முண்டாக்குமென்னில்.

மெய்மொழியில்.

௱௪௬. பரஞ்சத்திலுதியாநின்ற [illegible]ணம்பதிந்தாங்கா
யிரஞ்சித்தபோதுநாம மெழில்கொள்குண்டலிமாயைக்குத்
திர[illegible]புணர்ச்சியாலே செகத்தைமுன்கெற்பந்தாங்கி
யுரஞ்சித்தாய்நின்றுதானே யுலகங்களீன்றதன்றே.

பரமாகிற சைதன்னியசத்தியி லுதிக்கப்பட்ட கிரணங்களானவைசென்று விழுந்து மகாமாயையிலே போய்க் கூடினஉடனே மாயைக்குக் குண்டலியென்றுபெயராய் முன்சொன்ன சிற்சத்திகிரண சையோகத்தாலே செகத்தைக் கெற்பந்தரித்துத் தானே சைதன்னியரூபனாய்நின்று செகத்தையீன்றது மாயையென்றறிக. ஆகையால் சிற்சத்தியாலே மாயாசத்திகெற்பமாயுலகையீன்ற தன்மையினால் சிற்சத்தி இஃதோடு கூடினபோது அதற்கும் யோகமாயையென்று பெயராகையால் யோனியாய்நின்று உண்டாக்கினதென்றறிக. இதற்கெல்லா முதன்மையாகிற சத்தராகிறவர் தமது சிற்சடசத்திகளைக் கொண்டு உண்டாக்கி நிமித்தகாரணமாவன. இவருக்கெல்லாவற்றையுமுண்டாக்கிறவிந்து உபாதானகாரணமாகு மிதிலே சத்தராகிறசிவனுஞ் சமவாயசத்தியாகிற சிற்சத்தியு மிருவரும் திஷ்டிக்கும்போது நாதவிந்துகளுண்டாம் இந்த விந்துவில் சத்தருடைய கிரியாசத்தியடைந்து கலங்கல் செய்து அக்கரங்கள் நாதாதிக ளனைத்தினையு முண்டாக்கும். அதெப்படி யென்னில் முன்சொன்ன குடிலையிலே தோன்றின விந்துவில் அதோபாகத்திலே யம்பிகையுதையமா யிவளிடத்திற் சயைகாளவுத்திரி செஷ்வாமை யிவைநாலுமுண்டா யிந்தநாலுசத்தியும் நிவிர்த்திசத்திமுத லீராறு சத்திகளையுண்டாக்க ஆ முன்சொன்ன நாலுசத்திகூடப் பதினாறுசத்தியு மெல்லாவற்றிலும் வியாபிக்கும் இந்தச் சத்திகளாலே வர்ணங்களுதித்திடு மிதில் முந்தி நாதமயமாய் விஞ்ஞானவொளியாய் மொழியவைக்குமுதலாய்ச் சூக்குமைபிறக்கும் இந்தச் சூக்குமை விந்துமயமாய் விர்த்தியைப்பொருந்திப் பைசந்திவாக்காம் இதமயிலின்முட்டையிலே பலவர்னங்களிருக்க அந்தவர்னங்கள்தோன்றுமல்

நீராயிருந்தாற்போல அந்தமுட்டையை யெடுத்து சாய்ந்துச்சாய்ந்து பார்த்தால் வர்ணங்கள்தோன்றியும் உடைத்தால் வர்ணந்தோன்றாமல் நீராய்ப் போம் இத்தன்மைபோல முன்சொன்ன சத்திசொரூபமான பதினாறுயிரொழுத்தும் பலவர்ணங்களையுமடக்கிக்கொண்டு மணியோசைபோலே நிற்கும் இந்தப் பைசந்தியிலுண்டான மத்திமைவாக்கானது அகரமாய் வாமை சேட்டையொளத்திரியை யாகமாக்கொண்டு பதினாறட்சரமாய்த் தானே பிரமமாய் வேதாதிக்குபாதானமாய்ப் பிறகுதான்விரிந்து கவ்வாதி - ௫ - வர்க்கமும் கவ்வாதி க்ஷவ்வந்தம் -௰- வர்க்கமும் ஆ பதினைந்துவர்க்கமாம் ஏராறுசத்திகளாலே கம்முதல் - ௩௰ - அட்சரமுமாய்ச்-சத்தமுமர்த்தமுமாய்க் கருவியிருக்கும். இனிச் சத்தமு மர்த்தமுஞ் செவியிலேகேட்க கவனிப்பது மத்திமையிலுண்டான வைகரி வாக்கென்றறிக. முன்சொன்ன உயிரொழுத்தப்பதினாறையுங் கர்த்தா அதிட்டிப்பர் இதற்குட்பிய - ௩௰ - எழுத்தையுஞ் சத்தி அதிட்டிக்கும் ஆகையால் சிவன் சத்தியானது குடிலையிற்பிறந்த நாதவிந்துவை யதிட்டிக்கையாலே யிதினுடைய பெயராலே சிவனுக்குஞ் சத்திக்கும் பரநாதம் பரவிந்துவேறுபெயராயுங் குடிலையில் நாதவிந்துவுக்குச் சிவன் சத்தி பெயரால் சிவன்சத்தியென்று பெயராமென்றறிக. பின்னும் வாக்காதிகளை யுண்டாக்கையால் வாகீசனென்றும்பெயராம். இந்தவாக்குநாலும் நிவிர்த்திகலைகளாலே பிரேரிக்கப்பட்டு நிவிர்த்தாதியிலுண்டான வுயிர்களுக்கு வாக்குகள் திரைபோலும் கலைகள்சமுத்திரம்போலும் உள்ளத்திலே யுதித்துச் சித்தாதியில் திகழ்தல்செய்து பந்தமாய்ச்சிவஞானமுண்டானபோது நீக்கும் பருதி முன்னிருள்போலவென்றறிக.

௲௪௭. பவனசுத்தகாலமுடனியதிகலையாதி
பவனுக்கிப்புவனங்கள்பதினைந்தாக்கிச்
சிவனுக்குச்சமனுகிற்பரமுத்தியடைவோர்க்கு
யவ்விடத்திலேதனுவாதியாக்கிவிப்பன்.

இப்பால் விந்துவால் சாதாக்கிய தத்துவத்தையுண்டாக்கி யிதில் கன்மசதாசிவர்முதலான அணுச்சதாசிவர்களை யிருக்கச்செய்து இந்தவகையாலே தத்துவங்களனைத்திலுஞ் சத்தியால் சிவனியற்றச்செய்து இயற்றப்பட்ட மந்திரமுதலான ஆறத்துவாவிலுஞ் சிவன் பிரிவறநிற்பன். இம்மட்டுஞ் சுத்தாதிசூட்சும வைந்தொழிலென்றறிக. இனிக் கன்மசாதாக்கியர் வரலாறு.

௲௪௮. பஞ்சசத்திவிந்துவினிற்பதியுங்காலை பருதியொளிகாந்தத்
தேபதிந்தபோது, விஞ்சுசுடருதித்ததுபோற்கலாசத்தியைங்
தை வேறறவேயீசானதியைந்தா, யெஞ்சலிலாப்பஞ்சமந்தி
ரசத்தியுதிக்கு மிவைதனுவாய்க்கரும சாதாக்கியர்தானிசைத்
தே, தஞ்சமாயனைத்துயிர்க்குங்கருணைசெய்யச் சதாசிவதத்
துவத்திறையாய்த்தரிப்பர்தானே.

என்றது சிவசத்திகளாகிற பஞ்சசத்திகளும் மகாமாயையிலே பதிந்தகாலத்தில் பருதியொளிகாந்தத்திலே உதித்த அனல் பிறந்தாற்போலப் பஞ்சக

லாசத்தியுண்டா யிதிலேசாளுதி பஞ்சமந்திரமுண்டா யிவை தனுவாய்க் கரும சாதாக்கியர் முன்சொன்ன சாதாக்கியதத்துவத்திலே யிருப்பர் இவருருவில் லாத பஞ்சசத்திகளு முருவுள்ள விந்துவிலேகூடத் தோன்றினகலையால் உண்டானபஞ்சமந்திரம் ரூபாரூபமாகையாற் சதாசிவரும் ரூபாரூபமா யுத்தியுத்த பொக்தமொன்கிற நாமமுண்டாயிருப்பர் இவர் ஆணவத்தின்பருவநோக்கித் தூல்வைந்தொழிலுஞ்செய்வர். இனி யிந்தச் சாதாக்கிய தத்துவத்தில் ஈஸ்வ தத்துவமும் இதில் சுத்தவித்தையு முண்டாக்கி சதாசிவமுதல் மூன்றுதத் துவத்திலு மூவாறு புவனமாக்கி யிருவினையு மாயையுநீங்கி யாணவமொன்றே யியல்பான விஞ்ஞானகேவலரிடத்தில் தீவிரதர சத்திநிபாதஞ் சேர்ந்தபோது சிவமாகப் பரமுத்திசேர்ப்பர் தீவிரசத்திநிபாதஞ் சேர்ந்தபிறகு பக்குவ மைந்துபேதமாம். இதில்முதல் பக்குவருக்கு அபரமுத்தித்தானத்தில் புனிதஞான மூதன்மை யெல்லாம்பொருந்திச் சிவசமமாயிருக்கச்செய்வர்.

இரண்டாம்பக்குவருக்கு.

௱௪௯. இருமொழித்திட்டெவ்வறிவு முதலாயுள்ள விருமூன்றுகுணம்விளங் கியெங்குமாக,வருள்புரிந்துவிந்துவானதத்துவத்தே யமர்விப்பன்.

இனி மற்றமூன்று இளம்பக்குவருக்கும் பாசநீக்கிச் சதாசிவ ரீஸ்வர ருத்திரராகச்செய்வது இம்மூவருஞ் சதாசிவம் ஈஸ்வரஞ் சுத்தவித்தையில் மெஞ்ஞானம்பெற்று அதில் இருந்து பிரளயகாலத்தே பரமுத்திபெறுவர் இனி முன்சொன்ன கருமசதாசிவரிடமாக ஞானவனந்தேசரை மருவிவித்து முந்தின வீஸ்வரதத்துவத்துக்கதிபராகி அதோமாயாகாரியத்தைப்புரிந்து பிறவத்த மென்கிற நாமமுண்டாயிருப்பர் இனி ஞானவடிவாகையாற் சத்தரருவமாயுலகினைத்திலுக்கும் திதமாயிருப்பர் கிரியைசமமானவடிவாகையால் ரூபாரூபமாயுத்தியுத்த ருலகினைத்திலுக்கும் பரமகாரணமாய்ச் சிந்திக்கப்பட்டவராயிருப்பர் இனி ஞானங்குறைந்து கிரியை அதிகமான வடிவமாகையாற் பிரவர்த்தரான வருருவுமாயுலகினைத்திலுக்கும் பூசாயோக்கியருமாயும் தியானயோக்கியருமாயு மிருப்பர் இனிக் கருமசாதாக்கியத்தில் - ௨௫ - பேதமான மஹேஸ்வர தேவரிருப்பர் இவரிதையத்திலு ருத்திரதேவருதிப்பர் வலதுபாரிசத்திற் பிரமா இடதுபாரிசத்தில் விஷ்ணு மூன்றுநேத்திரத்திலும் ரவி சசி சிகி மூன்று முதிக்கும் வாக்கிற் பரஞானஞ் சுருதி யாகம முதலானது தோன்றும் சுவாசத்தில்வாயு களத்தில்கணேசன் பின்னும் இதயத்தில் கந்தர் கன்னத்திற் கொடிமுனிவர் ரோமத்தில் - ௩0 - கோடி தேவர்கள் உதரத்திலளவிறந்த சீவராசிகளுண்டாம் இவைகளுக்கெல்லாம் பின்னமாய் நிமித்தனுமா யுபாதானமுமாயிருப்பர் இந்தமஹேஸ்வரதேவர் தம்மிடத்தில் ஸ்ரீகண்டருத்திரதேவரை யுண்டாக்கிச் சுத்தவித்தைக் கதிபராயிருக்கச்செய்வர் இதிற் பிண்டிதார்த்தம் சத்தராகிறவர் மாயாளுக்குமதால்சத்தினை இதில் தமது சமவாயசத்தியால் மகாமாயையைக் கலக்கல்செய்வித்து அந்தச் சமவாயசத்திதானே யோகமாயையாயெல்லாமுண்டாக யோனியாயிருக்கத் தானேயெல்லாவற்றிற்கும் நிமித்தனுகுவன் விந்துவைத்தனக் குபாதானமாக நாதவிந்துக்கலையுண்டாக்கி யிந்தவி

ந்துவைத் தமது கிரியாசத்தியால் கலங்கல்செய்வித்து அதோபாகத்தில் அம்பிகையுண்டாகி யிதில் வாமை முதலான நாலுசத்தியுண்டாகி யிந்த நாலிற் பனிரெண்டுசத்திகளுண்டாகி ஆகப் பதினாறுசத்தியாலும் வாக்குநாலுந்தோன்றியிதில் நாலுசத்தியால் உயிரெழுந்துப் பதினாறுமுண்டாக இதைச் சிவன் திட்டிக்க மற்றப்பனிரெண்டுசத்தியும் கம்முதல் -௫௧- வர்க்கமா யுடலெழுத்து - ௩௫ - ம் முண்டாக்கி இதைச் சத்தி யதிட்டிக்க இந்தவாக்குகளை நிவிர்த்தாதி பிரேரிக்கச்செய்து இதின்பிறகு முன்சொன்ன விந்துவால் சாதாக்கியத்தையுண்டாக்கி யிதில் கன்மசாதாக்கியர் அணுச் சதாசிவரை யிருக்கச்செய்து இதில் ஈஸ்வர தத்துவத்தையுண்டாக்கி இதில் முன் கன்மசதாசிவரிடத்திலுண்டான ஈஸ்வரனுக் கிருப்பிடமாக்கி யிந்தமஹேஸ்வரரிடத்தி லுருத்திரனையுண்டாக்கி யிவரைச் சுத்தவித்தையி லிருக்கச்செய்வர். இப்பா லீஸ்வரரானவர் பிரளயாகலர் வினையொழித்துப் பரமுத்தி மேவச்செய்து பக்குவமில்லாதவனுக்கு வினையொழித்து மலமாத்திரம் நிறுத்தி ருத்திரர்களாகிப் புவனேசராகச்செய்து சங்காரகாலத்தில் சுத்தமுத்தியளிப்பர். இப்படிப்பட்ட ஈஸ்வரன் புவனங்களுக் காதாரமாகத் தத்துவங்களையுந் தாத்திகங்களையும் அதோமாயையிலுண்டாக்குமுறைமை இனி யீஸ்வரசத்தியானது அதோமாயையைக் கலங்கல்செய்ய அந்தச்சத்தியால் காரியமாயாசத்தியுண்டா யிந்தக்காரியமாயையில் காலநியதிகலை முறைபாடின்றியுதிக்க இதிற்புவனங்களைச் சேர்ப்பர் இனி மகேசரிடத்திலுண்டான உருத்திரர் கலையை யதிட்டித்துப் பிரகிருதிமாயையையுண்டாக்கி யிதில் வித்தைதோன்றி யிதிலிராகந்தோன்றி யிப்படி காலம் நியதி காரியமாயை கலை ஆ - ச - ம் இஃதோடு முன்சொன்ன கலையிலுண்டான பிரகிருதி -அ- இதற்கு அவ்வியக்தமென்றும் மானென்றும் பிரகிர்தியென்றும் பெயராம் இந்தப்பிறகிருதியிலுண்டான வித்தைராகம் - உ - ஆ ஆறுமுண்டாம் இதனோடுகூடின ஆத்மாவுக்குப் புருடனென்று பெயராமென்றறிக. முன்கலையிலுண்டான பிறகிர்தியில் முக்குணமுண்டா யிதை மும்மூர்த்திகளுக்குங்கொடுத்து மூவரு மூன்றுகுணத்தின்படியே ஆக்கி யளித்தழிப்பார் அதெப்படியென்னில் மானி லதோபாகத்திற் சித்தமு மிதிற் புத்தியுமா யிது - ௫௰ - பாவமுடைத்தா யிதி லாங்காரந்தோன்றி யிந்தவாங்கார முன்சொன்ன முக்குணபேதத்தாலே தைசத வைகரி பூதாதியென்று மூன்றா மிதில் தைசதவாங்காரத்தில் மனமுஞ் சோத்திராதியும் வைகரியில்வாக்காதியும் பூதாதியிற்சத்தாதியும் சத்தாதியிற் பஞ்சபூதமுமாக உச- முண்டாய் முன்சொன்னதுகூட மூன்று மாயையிலும் -௩௬- தத்துவமுண்டாமென்றறிக.

சித்தியாரில்.

௱௫௰. வித்தைகள்வித்தையீசர் சதாசிவரென்றிவர்க்கு
வைத்துறுபதங்கள்வன்ன புவனங்கள்மந்திரங்க
டத்துவஞ்சரீரம்போகங் கரணங்கடாமெலாமு
முப்த்திடும்வயிந்துவந்தா னுபாதானமாகி நின்றே.

என்பது. உருத்திரன், ஈஸ்வரன். சதாசிவன், இம்மூவரும் மந்திரம் பதம்.வன்னம், புவனம், தத்துவம், சரீரம், போகம், கரணங்களெல்லாம் மகாமாயையிலுண்டானதென்றது. இனிப் பரனவன் தனது சத்திகண்ணாக எல்லாமறிவன். அதெப்படி, பலாயே விழி, திரோதையேகருமணி, யிச்சாஞானக்கிரியையே அதற்குள்ளொளியாகக் காண்பன். இந்தச்சிருஷ்டிபேதஞ் சிவ சிருஷ்டி, சத்தி சிருஷ்டி, மூர்த்திசிருஷ்டி, யிதின்பெயர். சங்கற்ப, விகற்ப. அதிகார மென்றுமாம். இந்த மூன்று சிருஷ்டியையுஞ் சதாசிவன், மஹேஸ்வரன், உருத்திரன், இம்மூவரு மூன்றுவகைச் சீவனுக்கு மும்மாயையிலும் பெந்தமுண்டாக்குவர். அதெபபடி. சிவன், சத்தியையுண்டாக்கிச், சத்திகள் மூர்த்திகளை யுண்டாக்கி, மூர்த்திகள் மும்மாயையிலு மூவகைச்சீவராசிகளுக்கும் பெந்தப்படுத்துவர். இனி மாயைகண்ணாகக் காண்பது பசுவர்க்கம்.

௱௫க. பரன்பிரமசாரிபலாகன்னியாகும் பரம்பரனைச்சத்தியனுபவியாதென்றும்,வரம்பிலணுக்களையிறையோடாக்கி மன்னுமுயிர்ப்பாங்கியெனநீங்குஞ்சத்தி, குரம்பையிலைம்புலனுயிர்களருந்துமாறு கூடிமைம்பொறிபுலனின்பயன்கொளாவா, யரும்பொறியையொழிந்துயிரைம்புலனைக்கூடா வத்தனையச்சத்தியொழிந்தடைந்திடாவே.

இது பிரமத்துக்குத் தடத்தலட்சணமு மும்மாயைக்குத் தடத்தலட்சணமுஞ் சிவநெறிப்பிரகாசப்படி சொன்னதென்றறிக.

இனிப் பசுலட்சணஞ் சிவநெறியில்.

௱௫உ. சாற்றியிடுஞ்சம்பந்தமானதுதான்பதிக்குஞ் சத்திக்குஞ்சமவாயம் பதிக்குமுயிர்தனக்கும், போற்றியிடவேறெனவே பொறுப்பதுமாய்ப்பிரியாப் புணர்ச்சியிலேதாதாத்மிகமாய்ப் புகலு, மாற்றியிடச்சிவனருளாற்பசுக்கள்பாற்பாச மாறுவதாலனுதியாஞ்சையோகமாகு,மேற்றிகழுமுலகுக்குமுயிர்க்குஞ் சம்பந்த மேவியிடுஞ்சையுத்தசமவாயமெனவே.

என்பது. பதிக்குஞ் சத்திக்குஞ் சம்பந்தமென்றது, நிர்மாணஞ்செய்கிறவேலைக்கு உபகரணங்கள் போலச் சிவனுக்குச் சத்தியானதென்றறிக. பதிக்கு முயிருக்குஞ் சமவாயமென்றது, மண்ணைவிடக்கடமில்லை. நூலைவிடப் படமில்லை யென்றதுபோலப் பதியைவிடச் சீவனில்லை யென்றது "போற்றியிடவேறெனவேபொறுப்பதுமாய்,, என்றது, வேறென்று சொல்லத் தக்கதாகவுஞ் சொல்லப் பெறுகிறதாய்த் திரும்பத் தாதாத்மிக மாவானென்னிற் பதியைவிட வாத்மாவுக்குப் பிரிய வேறிடமில்லாம லஃதோடு பொருந்தியிருக்கையாலென்றது. ஆனால் ஆத்மா சிவனுக் கன்னியமோவென்னில் அல்ல பாசுக்கள்பாற் பாசத்தை நீக்கினால் நீங்குவதாகையால், அனாதியே பதிக்கு மாத்மாவுக்குஞ் சையோகமென்றறியவேண்டும். அதெப்படி

ஏன்னில், மலத்தால் வேறுபட்டதாகையால் மலம்போனால் ஆணுதிசையோக மென்றறிக. இனி உலகுக்கும் உயிருக்குஞ் சம்பந்தமாவது, சையுத்த சமவாயமா யிருக்கும். அதெப்படி, கூடினதாகிலும் வேறென்று சொல்லப் போகாமற் கூடியிருக்கையாலென்றறிக. இனிசமவாய மென்றவர்த்தம், அவயவங்கள் வேறாயிருந்தாலும், அவயவியைவிட வேறில்லை. அதெப்படி, முகத்தில் மூக்கு, கண், தாடை, வேறானாலு முகத்தைவிடவதுகள் வேறல்லவென்றறிக.

மெய்மொழி.

௫௫௩. சின்மயமாதலாலே செகத்தினிற்சராசரங்க
டன்மயமுணர்ந்துபார்க்கிற் சத்தியுஞ்சிவமுமேகாண்
சின்மயசிவன்றான்சிவன் சிற்சத்தியறிவுமாயை
தன்மயங்காயமென்றே சாத்திரநிச்சியார்த்தம்.

௫௫௪. விண்ணினின்மழைக்குப்பத்தி வேலைநீர்வெய்யோன்காந்த
கண்ணியதீக்குற்பத்தி கலந்ததியன்றியில்லை
நுண்ணியபிறப்பிறப்பி னுடங்குசைதனங்கட்கெல்லாம்
மெண்ணின்மற்றுண்டோசொல்லினிருஞ்சிவமன்றிவித்தே.

சிவானந்தமாலையிற் பசுலட்சணத்தில்.

௫௫௫. சார்வறிவுபோதஞ் சதசத்துசித்தறிவு
பேரறிவுவென்றிவனைப் பேசாதே-நீர
விவன்செய்தி யொன்று மிலாயிங்கிவனையெண்ணிற்
சிவன்செய்தியென்றே தெளி.

௫௫௬. வாராயறிவுடைய மாணவுனக்கினிய
பேராவகைபலவும் பேசினோம்-நேரா
வுவமையெலாமோய்வுற் றொழிந்தவிடத்துன்னைச்
சிவமயமென்றுள்ளே தெளி.

௫௫௭. மும்முதலுரித்த மௌனமொழிந்தோமுத்தியினு
மம்முறையாமென்றோ மாங்கதுகேள்-மும்மைக்
கழிவின்மைகாட்டுங் காலாரானின்ப
மொழிவின்மையேமுதன் மூன்றும்.

௫௫௮. எங்குஞ்சிவமொழியவில்லையில்லையென்றனை
யங்கந்திரள்கருவி யானவமாம்-பொங்குமிருள்
மைசெய்தமாமாயை மாயைவினைமற்றுமெலாம்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய்.

தனி

௫௫௯. தம்மைத்தமக்கறிந் பெற்றார்கள்தானிந்த
மும்மைக்குமொன்றே முதல்.

வெண்பா

௱௯௰. ஆணவமேதாருயிரோ தாதிமுதலே தென்று
காணவெடுநூல்விரித்து கற்றதே-மாணுகே
ளொன்போதங்கிழாயிங்கெப்போதுஞ் சிவனமா
நின்போதமம் மலமாய்நில்.

சிவவாக்கியத்தில்.

௱௯௧. சத்தியாவதும்முடற் றயங்குசோதியுஞ்சிவம்
பித்தர்காளிதற்குமேற் பிதற்றலாவதில்லையே.

௱௯௨. என்னகத்துளென்னைநா னெங்குநாடியோடினே
னென்னகத்துளென்னைநா னறிந்திலாமையாதலா
லென்னகத்துளென்னைநானறிந்துமெய்தெளிந்தபின்
னென்னகத்துளென்னையன்றி யாதுமொன்றுகண்டிலே.

திருமந்திரத்தில்.

௱௯௩. வித்தினிலன்றி முளையில்லையம்முளை
வித்தினிலன்றி வெளிப்படுமாறில்லை
வித்துமுளையுமுடனல்ல வேறல்ல
வத்தன்மைத்தாகுமரநெறிதானே.

இப்படிச்சிவனை யல்லாம லாத்மா வேறல்ல வென்று, சகல ஆகமங்களுஞ் சொல்லும், இதல்லாமல் வேதத்தில் நீலோற்பல வாக்கியமுங்கண்ட வாக்கியமுஞ்சாட்சி இனி உயிரானது ஆணவ மலத்தடையுந்தீர்ந்துமற்றபாசங்களும் நீங்கிச் சிவமாகிறது தன்னியல்பு. சென்ன மரணப் படுவது பெபதுவியல்பு இப்பாச சாலமெல்லாஞ் சிவனேயென்னி லொக்குஞ் சத்தி சிவத்மகமாகையாலெல்லாஞ் சிவமென்றறி.

மெய்மொழியில்.

௱௯௪. சித்துடன்சித்திடத்தே செகத்தினும்பத்திதானுஞ்
சித்துடன் சித்திடத்தே செகத்தினிற்சராசரங்கள்
சித்துடன்சித்துமாகிச் சிவசத்தியிருப்பதென்றுஞ்
சித்துடன் சித்தாயுள்ள சிவசத்தி மயஞ்செகத்தே.

சிவஞானதீபத்தில்.

௱௯௫. பகருயிர்கேவலமருவியிருளினுமும் பரவுபிரகிருதியெனும் பண்பினுகும், தகவுயிருக் குணர்த்துசகலத்துமாயா சத்தியருளிருவகையாஞ் சார்புநீங்கி, யிகலருமேலாலவத்தை யுணரிலாத்மா வேயசிவதத்துவமாமருளினுமம, மகமருவு முடலைவெறும் பொய்யென்றுவி யறிந்தகலி லருணுமங் கடாட்சமாமே.

௱௬௬. ஆடுமுயிர்தன்னியல்பையுணர்ந்தருளேக்காணுவவதரத்திலரு ணுமந்திரோந்தையாவி, யேமவருளுணரிலரு ளறிவாமென்ப ரெய்துசைதன்னிய்னருளுருவமாகி, ஞமமருடனக்கினியகரு ணையாகு நாடியசிவன் சிவனேநணுகும்போதும், ரேமிலரும் பெயரருட்கானந்தமாகுஞ் சொற்றருவரருட்கருநா றுணிந்து ளோரே.

இதல்லாமல் ஆத்மா பதிஞலு அவசரப்பெயராய்ச்
சிவனுவனென்றறிக. இனிச் சித்தியாரில்.

௱௬எ. சத்தியுஞ்சிவமுமாய தன்மையிவ்வுலகமெல்லா
மொத்தொவ்வாவாணும்பெண்ணு முணர்குணகுணியுமாக
வைத்தனன்வாளாவந்த வாக்கமிவ்வாக்கையெல்லா
மித்தையுமறியார்பீட லிங்கத்தி னியல்புமோரார்.

௱௬அ. அருவினிலுருவந்தோன்றி யங்காங்கபாவமாகி
யுருவினிலுருவமாயே யுதித்திடு முலகமெல்லாம்
பெருகிடுஞ்சுருங்கும்பேதாபேதமோடபேதமாகு
மொருவனேயெல்லாமாகி யல்லவாயுடனுமாவன்.

௱௬௯. உலகினையிறந்துநின்ற தானுருவென்பதோரா
ருலகவனுருவிற்றேன்றி யொடுங்கிடுமென்றுமோரா
ருலகினுக்குயிருமாகி யுலகமாய்நின்றதோரா
ருலகினிலொருவனென்ப ருருவினையுணராரெல்லாம்.

ஞானசாரத்தில்.

௱எ௰. நீயறச்சிவமாய்நிற்ற னிலைபறுநிகட்சித்தன்மை
மாயமுன்னிலைபுரைக்கி லகிலமுஞ்சிவமாய்த்தோன்ற
லேயபின்னிரண்டுந்தோன்று திருத்தலேபடர்க்கையாகு
நேயவானந்தாதீத நிலையதாநிலையாமென்றான்.

திருமந்திரத்தில்.

௱எக. பாசம்பசுவானதாகுமிச்சாலோகம்
பாசம்பரனுனதாகுமிச்சாமீபம்
பாசஞ்சிவமானதாகுமிச்சாரூபம்
பாசங்கரைபதி சாயுச்சியமாமே.

திருவாசகம்.

௱எஉ. பாரொடுவின்ணுப்பரந்தவெம்பரனே
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்.

இப்படி வேதாகம சாத்திரங்களிலும், ஆப்த வாக்கியங்களிலும், சகசீவமெல்லாஞ் சிவமயமென்று சொல்லுமென்றறிக. இந்தப் பசுக்களைத்

திற் சுவானுபோகசமாது ஈலானுபாவ அமாதம புனததமாகளாறுதி யிட்டது பதிதானே, யாத்மாவானதென்றும், பதியினது சுபாவ சத்திதானே அவசரப் பேராய் மாயையாயிற்றென்றும், பதி, பசு, பாச, மூன்றுஞ் சிவசத்தியேயானதென்று யிந்தமூன்று மீறி மூன்றுக் கொரு முதலாய் ஆத்மாதானே நின்றதென்றும், அனுபவிகளால் சொல்லப்படும். இந்த வாத்மா மும்மலத்தடையினால் தன்னைமறந்து செனனமரணப்படுவது பெத்தநிலையாம். ஈதெல்லாம் நீங்கிக் குருவினால் சுவானுபோக நிஷ்டைகளால் அனுபவ சமாதியான நிர்விகற்பசமாதி சாதித்துத் தானே தானாய் சிவமயமாகிறது முத்திநிலை யென்றறிக. இனி முன்சொன்ன சுத்த சைவனுக்கும், இவனுக்கும் பேதமெப்படி யென்னிற் சுத்தசைவன் மூன்றுமுதலு மனாதி நித்தியமென்றும், மோட்சத்திலும் ஆத்ம கெவுரவசத்தியும் ஆணவசத்தியுங் கெவுரவங் கெட்டுக் காரணம் நிற்கு மென்றும், பசு, பாசம், சூரியகிரணத்தால் சந்திரன் கிரணங்கெடாம லடங்கியிரண்டற்றுச் சூரியகிரணமேயானாற்போலத் தன்னை யிழந்த விடத்திற் சிவவுதயமென்றுஞ் சிவனை யிழந்த விடத்திற் றன்னுதயமென்றுஞ் சொல்லுகையில் இந்த பேதாபேத சைவன் சிவனுக்கும் ஆத்மாவுக்குஞ் சமவாயமென்றும், பதிக்கும் அருளுக்குஞ் சம்பந்தமென்றும், உலகுக்கும் உயிருக்குஞ் சையுத்த சமவாயமென்றும் அருளே, யோனியாய் நின்று செகத்தை யெல்லா மீன்றதென்றுஞ் சொல்லுகையால் பேதமுண்டென்றறிக. எல்லாச்சைவமும் வேதாந்தத்தில் விரிவாகச் சொல்லும், இப்போது சொன்ன சைவமெல்லாம் சித்தாந்தபட்சமாக ஆகமங்கள் சொன்னதென்றறிக. இதில் பந்தப்படுவதும், முத்தியும், இந்தப் பசு லட்சணத்தில் தானே வெகு சங்க்ஷேபமாய் முடித்ததென்றறிக.

---

க-அ-வது.—அத்தியாயம்.

## வீரசைவம்.

சொரூப லட்சணமாவது.

அனாதி மூலத்துக்கப்பாலுக் கப்பாலாய், மகாமூலத்துக்கு மூலமாய், இரண்டாவதொரு பொருளில்லாததாய், மூன் மூல சுவாமி யொருவனே நின்றதென்றறிக. இப்படி ஒருவனாய்த் தனிமுதலாய் நின்ற சுவாமி யிடத்திற் பாரம்பரையாயுண்டான பொருள்கள்தானே யிவருக்கு அவயவங்களான விபர மெப்படியென்னில் தணிந்த நிபந்தமேசிரசு திவ்வியானந்தம், திவ்விய மகானந்தம், திவ்விய ஞானாதீதம், நிராகாரம், நிராகார தீதம், இந்தப் பிரணவங்கள் புருவத்துவயம். அசலாதீதப் பிரணவமே நெற்றியாம். அசலம் நாசியாகும். நிராலம்பாதீதம் உஸ்வாச நிஸ்வாசமாம். நிராலம்பமே கன்னங்களாகும். நிர்லக்ஷ நிர்லக்ஷாதீதமே ஹனுத்துவயங்களாகும். நிர்வயல், நிர்வயலாதீதமே, கபோலமாகும். அமலம், அமலாதீதமே கட்டமீசையாகும். குமலம், குமலாதீதோத்தரமே கோனாத்தாடை. அகண்டநாதம், அகண்டவிந்

து, அகண்டசிற்கலை, தாலோஷ்டமாம். சகசம், சகசானந்தம், சகசானந்தாதீதம், ஆனந்தம். ஆனந்தாதீதம், அனந்தச்சோதி, அனந்தச்சோதியாதீதம், அதிமகானந்தம், அதிமகானந்தா தீதம், அதிமகாநந்தாதிதோந்தனை, மகாவகண்டச்சோதி, மகாவகண்டச்சோதியாதீதம், நிர்மலம், நிர்மலாதீதம். நிர்மலாதீதோத்தரம், சிற்பிரணவம், சிற்பிரணவாதீதம், மகாசிற்பிரணவம், மகாசிற்பிரணவாதீதம், சிதானந்தம், சிதானந்தாதீதம், சிற்கூடம், சிற்கூடாதீதம், சித்துயோமம், சித்துயோமாதீதம், நித்தியம், நித்தியாதீதம், நிராமயம் நிராமயாதீதம், அனந்தபூதம், அனந்த பூதப்பிரளையம், சர்வசூனியப்பிரளையமிந்த ௱௨. பிரணவமும் அனந்தகோடிப் பிரகாசமானகாந்திகளோடு கூடின. ௱௨. தந்தங்களாகும். நிராகுளம், கண்டஸ்தானம், அகோசரம், புசத்துவயங்களாம், பரம், பரமானந்தம், பராபரம், பராபராதீதம், கர்த்துவயமாம் சிவம், சிவச்சோதி, மணி பந்தமாம். சூனியம், சூனியாதீதம், அஸ்தவிரலங்குலிகளாம். பரப்பிரம், மூரஸலமாம். சிவப்பிரமம், பரசிவப்பிரமம், மூலைகளாம். நிருபம், நிருபானந்தம், கக்ஷங்களாம். நிருபமாதீதம், மகாநிருபவாமதெட்சணபாரிசமாம். நிர்வாச்சியம், அநிர்வாச்சியம், வென்னனுமாகும். சூட்சுமானந்தம், சூட்சமானந்தாதீதம், நெட்டெலும்பாம். பஞ்சசவுஞ்ஞையும், கோளகாகாரமும், கெற்பவாசமாகும். அனந்தகோடி, மகாசோதி, நாபிமண்டலமாம். இந்தமூலசுவாமி கெற்பத்திலே யிருக்கிறது. நிரஞ்சனாதீதப் பிரணவம், நிரஞ்சனப்பிரணவம், அவாச்சியப் பிரணவம், சிற்கலாப்பிரணவம், அனாதிப்பிரணவம், ஆதிப்பிரணவம், இந்த ஆறு பிரணவங்களிலும் உற்பத்தியான அனேக பிரணவங்களிலும் இதிலொன்றி லொன்று பேதாபேதங்களான சிருஷ்டிக்கிரமங்களுங் கூடிக் கோடானகோடிபிரணவங்களும், கோடானகோடி பதிபாசங்களும், கோடானகோடி மந்திரபத வன்னபுவன தத்துவகலைகளும், கோடானகோடி வேதாந்த, சித்தாந்த, போதாந்த, நாதாந்த, யோகாந்த, காலாந்தங்களும், இப்படி ஆறந்த ஞானங்களும், ஆறந்தா தீதஞானங்களும், அனேக விராட்புருஷர்களும், அனேகமகாகிரணங்களும், அனேக அனந்த சங்காரம், மகாசங்காரம், சுத்தசங்காரம், பூதங்களும், அனேகம் அனாதிசதாசிவன், அனாதி மயேஸ்வரன், அனாதி ருத்திரர்களும், ஆதிசதாசிவன், ஆதி மயேஸ்வரன், ஆதி ருத்திரர்களும், அனேக விஷ்ணுப் பிரமாதிகளும், எண்ணிறந்த சத்திகளும், அனேக வயிரவ வீரபத்திர சண்முக கணாதிகளும், அனேக மாயாவிதங்களும், எண்ணிறந்த நர, சுர, பசு, பட்சி, தாபர, சலதர, சங்கமங்களும். எண்ணிறந்த சந்திரன், சூரியன், நட்சத்திரம், நவக்கிரகாதிகளும், அனேக பிர்மாண்ட, மகாபாண்ட பாண்டங்களும், அனேகவித பஞ்ச பூதங்களும், அனேகலட்சியத்தியானங்களும், அனேக மணிமந்திர அவிழ்தங்களும், அனேக சமையங்களும், இதுகள் முதலானதுஞ் சொல்லாதுகளனந்தகோடி பேதாபேதங்களும் உற்பவ முண்டென்றறிக.

இனி வியோமம், வியோமா தீதம், நடு யிடையாம். திவ்விய கலானந்தப்பிரணவங் கடிஸ்தலமாம். கோதண்டம், கோதண்டாதீதம் பிட்சபாரிச

மாம். அனாதி ஆதி சதாசிவர்கள், இலிங்கஸ்தானமாம். இதின்னெண்ணிறந்த சிவராசிகள் சென்னத்துக்கு மூலமாம். நிரஞ்சனம், நிரஞ்சனாதீதம், அருத்து வயங்களாம். அவாச்சியம், சிற்கலாப்பிரணவம், கணைக்காலத்வயங்களாம். நிச்சப்தக்கிரகம், நிச்சப்தக்கிராகாதீதம், கரடுகளாம். அகண்டோங்காரம், மகதோங்காரம், பாதங்களாம். தாரகபிர்மாதிகள், புறங்கால், உள்ளங்கால், பாவிரல்களுமாம். சத்திகள், சாதாக்கியங்கள், அங்குலிகளாம். அனேக அக்ராதிகள் முதலானகலைகளும், கால்விரல் நகங்களும், நககாந்திகளுமாம், அனேக பாமுகள் வாக்கின் சத்தங்களாம். அனந்தப் பிரகாசாதீதம் வாக்காம். அனேக சூனியாசூனியம் பரிவட்டமாம், அனேககோடி லிங்கம் பூஷணமாம், அனேக சத்து, சித்து, நித்திய ஆனந்தபரிபூரணம். இதுகள் கிரிகிடமாம். அனேககோடி சிவப்பிரணவம், சத்திப்பிரணவம், சத்தியாகிரதப்பிரவணம், மாயாப்பிரணவம், மாயாதீதப்பிரணவம், சித்தாகாசம், சிதாகாசம், சுத்தாகாசம், சுயாகாசம், சிவாகாசம், பராகாசம், நாதவிந்துக் கலையாகாசம், பிரணவாகாசம், மகாகாசம், மகதாகாசம், விந்தாகாசம், கவிந்தாகாசம், மகந்தாகாசம், கலாகாசம், சத்தியாகாசம், பிரணவாகாசம், பூதாகாசம், சூட்சுமாகாசம், தூலாகாசம், இதுமுதலான இன்னம் அனேக ஆகாசங்கள், உரோமங்களாம். இப்போது சொன்னதெல்லா மவையவியவையவங்களாய் அங்கம், பிரத்தியாங்கம்;சாங்கம்,உபாங்கங்களாம். இப்படி எண்ணிறந்ததெல்லாங்கூடி அகண்டமூலசுவாமி ரூபிகாரமாயிருப்பார். இதெல்லாம், அவரிடத்திற் பாரம்பரையாகத்தோன்றுதற்கு முன்பு ஏகமாய்த்தனியாயிருப்பர். இனிநாமரூப கிரியாரகிதமாய் வாக்குமனாதீதமாயிருக்கின்றது. அகண்டமூலசுவாமி சொரூபலட்சண முடிந்தது, இனி தடத்த லட்சணம், இவரிடத்தில் உபக்கிரமம், சிருட்டிவிபரம், இப்படியிரண்டாவதில்லாமல் ஏகமான மூல சுவாமி நினைவில் உலகச்சிருஷ்டிவேண்டி நினைத்த நினைவுதானே நிரஞ்சனாதீதப் பிரணவமுண்டாயிற்று. இதினினைவிலேநிரஞ்சனப்பிரணவம்,இதினினைவிலே அவாச்சியப் பிரணவம்,இதினினைவிலே சிற்கலாப்பிரணவம், இதினினைவிலே அனாதி பிரணவம், இதினினைவிலே ஆதிப்பிரணவம். இப்படிவிஷ்ணுஸ்தப் பிரணவமுண்டாம். இனி அனாதிப்பிரணவமானது அனாதிஅகார உகார மகார மூன்றுண்டாம். இது மூன்றுங்கூடின விடத்திலிதினினைவிலே ஆதி அகார உகார மகார முண்டாம். இது மூன்றுங்கிரமமாக நிராளசுவாத்மகன நிராவயாத்மகன் என்று பெயராம். இதுதானே நாதம் விந்துக் கலையாம். இது அகாராதிக்கு ஆதாரம். இந்த நாதவிந்து கலைக்குப் பிரகிர்தியாதாரம். இதற்குப் பிராண ஞதாரம், இதற்கு அகண்டமாசோதி லிங்கமாதாரம், ஆதி அவ்வெனும் பிரணவமனாகதமாம், ஆதி வவ்வெனும் நாதவிந்துக்கலையிறங்கி ஆதி மவ்வோடு விந்துங்கூடி அகண்டசோதி கோளகாகாரப் பிரணவமாம். இப்படி ஆறு பிரணவ வுற்பவமென்றறிக. இதிலாதி அகாரத்தில் தாரகதண்டம், நிராள சுவாத்மகன், அகாரமதிதெய்வம், இதிலயமாம், இதில்தசப்பிரணவமுண்டாம். இனி உகாரத்தில் குண்டல மர்த்த சந்திரனுண்டாம், நிரஞ்சனாத்மகன்,தெய்வம், உகாரமிதிலயமாம், இதில் ஏகாதசப்பிரணவமுண்டாம்

இனி மகாரத்தில் தல்பணம, சோதியுமுண்டாம். பிரமயாத்மகன், மகார மதிதெய்வம், இதிலயமாம். இதில் துவாதசப்பிரணவமுண்டாம். இனி ஆதி அகார, உகார, மகார மூன்றுங்கூடி ஓ மென்னுஞ்சோதிரூபமாய் ஓங்கொளியாய் நிற்கும், பிரதமம், தாரகம், துவிதியம், தண்டகம், திரிதியம், குண்டலம் சதுர்த்தம், அர்த்தச்சந்திரன், பஞ்சமம், தற்பணம், ஷஷ்டி, சோதி, இதுகோப்பியம். ஓங்காரத்தி லெல்லாமுண்டாம். இனி உகார மாதியான பிரணவமாவது, உகாரம், மகாரம், அகார மூன்றுங்கூடி அகண்டசோதிபரம், ஓங்காரம். உகாரத்தில் தாரகதண்டம், சுயம்பு லிங்கந் தெய்வம், உகாரமிதிலயமாம். இதில் ஏகாதசப் பிரணவமுண்டாம். இனி மகாரத்தில், குண்டலி, அர்த்தச்சந்திரன், ஓம் பர சிவதத்துவம் அகாரமதிதெய்வமிதிலயமாம். இதில் துவாதசப் பிரணவமுண்டாம். அகாரத்தில் தறபணம், சோதி, குருத்துவசின்மயந்தெய்வம், அகார மிதிலயமாம். இதில்திரயோதசப் பிரணவமுண்டாம். இனி உகாரம், மகாரம், அகாரம், விந்து, நாதம், கலை யொன்றாய் ஓம்பரமேஸ்பரனும். முதலாவது, தாரக முதலாறும் வரிசையாய் நிற்கும். இந்த ஆறும், விஞ்ஞெயம், உகார மிஷ்டலிங்கம், மகாரம், பிராணலிங்கம், அகாரம், பாவலிங்கம், உகாரத்தில் தாரகதண்டம், அதிதெய்வ மிஷ்டலிங்கம், விந்துவிலயமாம். இதில் அஷ்டாதசப் பிரணவமுண்டாம். மகாரத்தில் குண்டலி அர்த்தசந்திரன், இதற்குப்பிராணலிங்கந் தெய்வம் கலையிலயமாம். இதில் நவதசப் பிரணவமுண்டாம். அகாரத்தில், தற்பணம், சோதி ரூபமாம். பாவலிங்கந் தெய்வம், நாதத்திலயமாம். இதி லிருபது பிரணவமுண்டாம். இந்த நாதவிந்துக்கலை, யொன்றாய் சோதி யகண்டோங்காரமாம். இனிமகாரமாதியான பிரணவ வுற்பவ பேதம் இனி மகார அகார உகாரம் இந்த மூன்றுங்கூடியகண்ட மகதோங்காரமாம். மகாரங் கலை, அகாரம் நாதம், உகாரம் விந்து, மகாரஞ் சர்வாத்மன், அகாரம் பரமாத்மன், ஒகாரம் சிவாத்மன், மகாரத்துக்கு ஆதாரங் கலை, அகாரத்துக்கு ஆதாரம் நாதம், உகாரத்துக்கு ஆதாரம் விந்து, இந்த மூன்றுக்கும் பிரகிர்தி யாதாரம், இதறகுப் பிராணனுதாரம், பிராணனுக்ககண்டமாசோதி லிங்கம், ஆதிமவ்வெளிற்கலை, ஆதி உவ்வெளில் விந்து, ஆதி அவ்வெளில் நாதம், இந்த மூன்றுமொன்றா யகண்டமகதோங்காரப்பிரணவமாம், மகாரத்தில் தாரகதண்டம், உகாரத்தில் தற்பணஞ்சோதி, சீவாத்மகன் உகாரந்தெய்வம், இதிலயமாம், சத்ததசப் பிரணவமுண்டாம், மகார அகார உகார மூன்றுங்கூடிச் சோதி ரூபமாம், தாரகமுதல் வரிசையாக ஆறுமாம், இந்த ஆறும் விஞ்ஞெயம். ஓங்காரத்தில் சாவித்திரி, காயத்திரி, வேதசுர மெல்லாமுண்டாம், இதில் முன்சொன்னதெல்லாந் தொகையாகச்சொல்லுவது நிரஞ்சனுதி, ஆறு பிரணவமுண்டாம், இதில் நாதாதி கூடினது அகண்டச்சோதி, கோளகாகாரப்பிரணவம், ஆதி அகாராதி கூடினது சோதி, சோதிரூபோங்காரப்பிரணவமாதி, உகாராதி மூன்றுங்கூடினது அகண்டச்சோதி, பரம், ஓங்காரம், இனி ஆதி மகாராதி மூன்றுங் கூடினது அகண்டமக தோங்காரப்பிரணவமாம், ஆதி விந்து நாதகலை மூன்றுங் கூடினது ஓம் பரமேஸ்வர வோங்காரமாம், இனி முன்சொன்ன உகாராதி

யுண்டான திரிவித லிங்கம், லயமான நாதவிந்துக்கலை யொன்றாய்ச் சோதிய கண்டோங்காரமாம், அப்படி ஆதிப்பிரணவபேதங்களானதென்றறிக.

இப்பால் அகண்டசோதி லிங்கோற்பவம், இனிமுன்சொன்ன ஆதி நாதாதி கூடின அகண்ட சோதி கோளகாகாரப்பிரணவத்திற் சோதிச்சொரூபில் மகாரம், குண்டத்திலகாரம், தாரகத்தில் உகாரம், இந்த அகாரமே சிவம், உகாரமே சத்தி, மகாரமேபரம், அகாரம் நாதம், உகாரம் விந்து, மகாரங்கலையிந்த ஆறும், நிஷ்களம். இது பர, சிவ, சத்தி, சங்கற்பத்தாலே நாதவிந்துகலை சையோகமா யாகண்டசோதி, லிங்கமாய்க் கர சரணங்களின்றி யுற்பவமாம். இது அகண்டசோதி கோளகாகார சவுஞ்ஞையாயிருக்கும், இனி அவ்வியத்த லிங்கோற்பவம், முன் சயுஞ்ஞை லிங்கத்தில் அவ்வியத்தலிங்கமுண்டாம். அதெப்படி முன்சொன்ன இலிங்கத்தில் அகார உகார மகார சையோக மத்தியத்தில் தோன்றும். அவ்வியத்தலிங்கஞ் சோதி சொரூபமாய் விந்து பீடம் சின்னுதஸலிங்கமாகச் சிருஷ்டிக்குக்காரணமாய் சித்து மாயோமலிங்கமாய் சிற்பூமி பீடமாயிருக்கும். இதில் சதாசிவாதிகள் முதலெ மூவகைத் தோற்றமுமிதிலே யெல்லாம் லயமுமாமென்றறிக. இந்த லிங்கஞ் சம்பு பீடஞ் சத்தி சிவசத்தி யோகத்தாலே யுற்பவமா மிதுதானே ஆதியோங்காரபீடம். இனி அகாரம்கண்டம், உகாரம் கோமுகம், மகாரம் வட்டம், சின்னுதம் விந்து, நாதம் லிங்கம், இப்படி லிங்காகாரமாயொளிரும், இந்த லிங்கம் ஆதி மத்தியாந்த மின்றி அவ்வியத்தகோசரமாய் நிர்நாம நிற்குணமாய் நித்திய நிரஞ்சன நிராள மின்றி நின்றது, லிங்கமாம். இனி அனுதி சதாசிவன், ஈஸ்வரன், மயேஸ்வரன், உற்பவம், முன் லிங்கத்திலே அனுதி சதாசிவருண்டாமிவரையிருக்குவேதத்திற்சொல்வது எ; [illegible] என்று சொல்லுமிவரை யின்னம் வெகுவாக வேதங்கள் சொல்லுமினி யிவரிடத்திலனுதியீஸ்வரருண்டாம், இவரை வேதஞ்சொல்வது. அ. [illegible] என்று சொல்லும். இவரையும் வேதாமங்கள் வெகுவாய்ச்சொல்லும். இவரிடத்திலே அனுதி மஹேஸ்வரருண்டாம், இவரை வேதஞ்சொல்வது. புருஷசூக்தம் சொல்லும் ஒருபுஷனை யென்பது மயேசனை யென்றறிக. மகாயீஸ்வரனென்பது மஹேஸ்வரனை யென்றறிக. இனி யிவரிடத்தில். ௰௫, முகமும், ௰௫. பாதமும், ௰௫. அஸ்தமு மிப்படி ஆதிசதாசிவருண்டாம், இவரிடத்தில், ௯. முகமும் ௰௨. தோளும், ௩. பாதமுமுடைய ஆதி யீஸ்வரனுண்டாம் இவரை வேதஞ்சொல்வது, ஆகமாங்கம்பயீபதிரிதிஃ என்றிதுமுதலனேகவேதஞ்சொல்லும். இனி யிவரிடத்தில், உ௫. முகமும், ௰௫ கையும், ௰௫. பாதமு முள்ள ஆதி மஹேஸ்வரனுண்டாம். இவரைச் சர்வதேவதைகளாலுங் காணக்கிடையாதவராய் வேதாகமங்களாலே மகாதோத்திரரா யிவர்மகிமைசொல்லப்போகாதவரென்றறிக. இனி யிவரிடத்தில், ௫. முகமும், ௰, கையும், உ. பாதமுமுடைய சதாசிவ தேவருண்டாம். இனி யிவரிடத்திலுண்டான விதம் இவரிடமிற்பாவ முகத்திலே ஆத்மாவும், ஈசானுதி, ௫. முகமும், இதில் ௫. பூதமும், மனதில் சந்திரனுஞ் சட்சுவிற்சூரியனும் இந்த எட்டுங்கூடி அஷ்டமூர்த்திக

னுவாய் பிண்டப்பிரமாண்ட ரூபமாயிருப்பர். இந்த அஷ்டமூர்த்தியைவேதஞ்சொல்வது. க, [illegible] என்று சொல்லும் இவனைவேதங்கள் வெருவாய்ச்சொல்லு மென்றறிக. இவரி லீஸ்வரனுண்டாம். இவர் உ௫. அவதாரமெடுத்து எல்லாரையும் இரட்சித்துத் தியானபாவனை பூசாயோக்கியராய்த் தமக்குக் கீழ் மூவருக்கும் அனுக்கிரக கர்த்தாவாய் ருத்திரன், விஷ்ணு, பிரமா தேவர்கள் முதலான செகத்துக்களை உண்டுபண்ணியுமவரவர் கேட்டவரங்கள் கொடுத்தும் பஞ்ச கிருத்தியமும் பண்ணு நிற்பரொன்றறிக. இவரில் ருத்திரருண்டாம். இந்த ருத்திரன், காலாக்கினி ருத்திரன், பிரளயகாலருத்திரன், சங்காரகால ருத்திரனென்றும் இவனைமூவரிலொருவனென்றும், காலாக்கினி ருத்திரம், ஸ்ரீருத்திர முதலான வேதாகமங்கள் சுருதி, ஸ்மிருதி புராணமுதலான நூல்களெல்லாஞ் சொல்லுமென்றறிக. இவரில் விஷ்ணு, இவரில்பிரமாவுண்டாம், இவர்களையும் வேதாகமபுராணங்கள் சொல்லுமென்றறிக,இனி ரு. முகச்சதாசிவன்முதல் ஐவரும் ஐந்து பூதத்துக்கும் அதிதேவதையாயிருப்பர். முன்சொன்ன சதாசிவர் நிற்பாவமுகத்திலே விஸ்வாதிகோருத்திரனுண்டானார்.இவனைவேதஞ்சொல்வது ஓம் விஸ்வாதிகோரி நாமகிருஷிபி இவனைநிறம்பித்து இவனைத்தம்முகத்திலுண்டானபஞ்சபூதங்களை உபாதானமாக்கிக்கொண்டு பஞ்சபூதப் பிர்மாண்டங்களைச்சிருஷ்டிக்கச்சொல்லிக்கட்டளையிட்டார். இப்பால் விஸ்வாதி கோருத்திரன் சிருஷ்டிவிதங்களெப்படி என்னில், ஷசக்கரங்களுற்பவம்,முன்பிரமமான அகண்டசோதி கோளகாகாரப் பிரணவத்தில் அறுசக்கரமுண்டாம். இதில் பச்சிமம்,இதில் சிகரசக்கம், இதில்பிரமசக்கரம், ஆக. ௬. மற்றது,ஆஞ்ஞாசக்கரமுதலொன்றிலொன்றாக ஆறு சக்கரமுண்டாம் ஆ ௰. இதுதானே இன்னமொருவிதசிருஷ்டியாம், அகண்டசோதியில் பச்சிமதிக்கி லறுசக்கரம், உத்தரதிக்கிற் பச்சிமம், பூர்வதிக்கில்சிகரசக்கரம், தெட்சண திக்கிற பிரமசக்கரம்,இப்படி நாலுதிக்கிலும் நாலுசக்கரமுண்டாம். இனி இருதயங்கோதண்ட சக்கரஞ், சோதி ஆகிறுதி முதலாறினும், ஆஞ்ஞை முதலாறு முண்டாம், இப்படிப் பதினொருசக்கரமுண்டாம், இதல்லாமற் பின்னுமொருவிதம். ஆஞ்ஞைமேல்விஷாதம், இதின்மேல் சுறுஷுத மிதில் பிரம்மரந்திரம், இதில்சிகை இதில்பச்சிமம் இதிலறு ஆ ௬. இனிமூலாதாரமுதல் ஆஞ்ஞையந்தம்ஆதாரம் ௬.ஆ சக்கரம், ௰உ. இதின்மேல் நிஷ்களம், இதின்மேல் நிராளம். இதின்மேல் சாரளம், இதின்மேல் கலா, இதின்மேல் விந்து, இதின்மேல் நாதம், இதின்மேல் நாகுரு, இதின்மேல் சரம், இதின்மேல் பரம், ஆ ௬. இதின் கூடச்சக்கரம், உக. இதுமூலாதார முதலாக ஒன்றுமேலொன்றாக விருக்கிறசக்கரம்,உக-லும். முன்சொன்னவரிசையாக இதழுகள். ௪-௬-௰-௰உ-௰௬-உ-௬-௱-௲-௬க-௬௲. லட்சம். கோடி. அற்புதம். கறுவம். மகாகறுவம். பத்மம் க்ஷோணி,க்ஷிதி. அக்ஷயம். இப்படி உக. சக்கரத்திலும், இதழுகள் நிற்குமென்றறி.

இனி அக்ஷரங்களும் இதழுகளெத்தனையெத்தனையுண்டோஅத்தனை யி

ஆம், அத்தனை அக்ஷர நிற்குமென்றறிக. இனி உக. சக்கரத்திலு நிற்கிறது, ஒவ்வொன்றில் பூதம், கோணம், வர்ணம், இதழ், இதழ்நிறம், முகம், லிங்கம், கலை, சாதாக்கியம், திக்கு, நாதம், சாகினி, சத்தியாதி, கிரியாசத்தியாதி, வேதங்கள், அஸ்தங்கள், பத்தன், பூசாரி, சவுஞ்ஞை, ஆத்மன், பிரமநாதாதிகள், பிரணவங்கள், குதமுதல்ஸ்தானங்கள், சத்தாதிமுதற் றிரவியங்கள், பத்தாதி அங்கங்கள், பிரமங்கள், பதினொரு மந்திரங்கள், பதங்கள், வன்னங்கள், புவனங்கள், தத்துவங்கள், கலைகள், பரிணமங்கள், பூகாட்சரங்கள் ஆக ஙகூ. இதுமுதலாக ஒவ்வொரு ஆதாரத்திலின்னமனேக முண்டென்றறிக. இந்தச்சக்கரங்களில் இதழ், அக்ஷரம், பூத முதலிலுஞ் சிலச்சக்கரங்களுக்கில்லாமலிருக்கிறது முண்டென்றறிக. இனி நிராள தசசக்கரமாவது, சிவப்பிரிதிவி, சிவவப்பு, சிவவக்கினி, சிவவாயு, சிவவாகாசம், சிவவிருதையம், ஆக பூதம். சு. இதிற் சிவப்பிரிதிவியின் மேலாய் நிராளமூலாதாரமாம். இதில் இதழ் ருசம. அக்ஷரம். ருசம. நிராளசத்திகன்னுதம், நிராளப்பிரம மதி தெய்வம், பீசாசக்கரம், அனுதி அகரம். இனிச் சிவவப்புவின்மேல் நிராளசுவாதிஷ்டானம், இதழ், சுஅம. அட்சரம், சுஅம. இது வர்னரூபில்லை நிராளயீஸ்வரி நித்யானந்தப் பிரமமதிதெய்வம், பிரணவநாதம், பீசாட்சரம், அனுதி உகாரம், இனிச் சிவாக்கினிமேல் நிராள மணிபூரகம். இதில் பத்மம், ஙகூம அக்ஷரம். ஙகூம. வர்னமில்லை. நிராள சிவசத்தி நிரஞ்சனப்பிரமமதி தெய்வம் பிரமநாதம், பீசாக்ஷரம், அனுதிமகாரம், இனிச்சிவ வாயுவின்மேல் நிராள அனுகதம் இதிற் பத்மம், உஉம. அக்ஷரம், உஉம. நிராளமாசத்தி, ஆனந்தப்பிரமமதிதெய்வம் சுநாதம், ஆதிப்பிரணவநாதம் பீசம் வர்னரூபில்லை, இனிச் சிவாகாசத்தின்மேல் நிராளவிசுத்தி யிதழ். ஙஅம. அக்ஷரம். ஙஅம, வர்னரூபில்லை, நிராளமனோன்மணிசத்திமகாநாதம், சகலாதீதப்பிரமபீசாட்சரம், ஆதிவிந்துப்பிரணவமினிச்சிவயிருதயத்தின்மேல் நிராளஆஞ்ஞை அனேக யிதழ், அனேக அக்ஷரம், நிராளப்பிரணவசுத்தி விமலானந்த நாதம், நிராள தீதகனலிங்கப்பிரமம் தெய்வம், பீசங்கலாப்பிரணவம். ஆக சக்கரம். சு. இதின்மேல் நிர்வாண லிங்கசக்கரம், இதின்மேல், நிர்வாண மகாலிங்கசக்காம், இதன்மேல் மகாலிங்கச்சக்கரம், நிர்வாண மகாமகாலிங்கசக்கரம், ஆக ச. இதுகள் வர்னரூபில்லை, ஆக சக்கரம், ம. இனி நிரஞ்சனுதீத சக்கரம், இதற்குப்பரதத்துவப் பிரிதிவி, பரதத்துவ வப்பு, பரதத்துவ அக்கினி, பரதத்துவ வாயு, பரதத்துவ வாகாசம், பரதத்துவயிருதயம், ஆக சு. இந்த ஆறுபூதத்திலும் ஆறாதாரமும் அதற்கேற்றதுகளும் ரூபங்களாயிருக்கும், இதின்மேல், சூனியமாய் கனசுயானந்தசக்கரம், கதிசுயானந்தசக்கரம், உயர்சுயானந்தசக்கரம், அருஞ்சுயானந்தசக்கரம், ஆக ச. ஆக ம. இதல்லாமல் முன்சொன்ன நிரஞ்சனுதீதப் பிரணவ முதலாறில், நிரஞ்சனம், ம. அவாச்சியத்துக்கு, ம. சிற்கலைக்கு. ம. அனுதிக்கு, ம. ஆதிக்கு. ம. ஆகருக முன். உம. ஆக எம. அகண்டமூலசுவாமிநிராமயசக்கரம். ம. ஆக அம, முன்சொன்னது. உகஆகாக. இதுகளை விரிக்கில் விரிவாமென்று தொகையாய்ச் சொன்னதென்றறிக.

இனி அஷ்டதள சக்கரபேதமாவது, காது, உ. கண், உ. மூக்கு, உ.

நாக்கு, ௧. அவலோகக்ஷம், ௧. ஆகதுவாரம். ௮. இதை முககமல அஷ்டதள மென்றுசொல்லுவார். இந்த அஷ்டதள கமலத்தைத் தீண்டித் தீண்டாமற் சதுர்த்தளமிருக்கும், இதில் சிவாம்ஸ பரமாம்ஸ அக்ஷரம் நாலுமிருக்கும், இதில் மத்திமத்தில் கரணிகாவாசமாய் அனந்தகோடி சந்திர சூரியர் அக்கினிப்பிரகாசமாய்ப் பிரபையாய் சுயம்பு லிங்கமாயிருக்கும், இதைச் சூழ முன்சொன்ன அஷ்டதள சவுக்க மத்தியமாம், இது நிராகார நிர்வயவமாகி யுதித்த பத்மம், ௰௨. இதிலெட்டிதழ் அதோமுகமாயிருக்கும், நாலிதழ் ஊர்த்தமுகமாயிருக்கும், இது அஷ்டதள காணிகையென்றுஞ் சவுக்க மத்திய காணிகை யென்றும், எட்டிதழில் பரமாத்மன், நாலிதழில் சிவாத்துமன், இரண்டுங்கூடி யோக சமாதியாயிருக்கில் இவனே சிவயோகியாம். யோகச்சக்கரமாக யோகம்பண்ணில் அஷ்டமாசித்தி அஷ்டஐஸ்வரியமுண்டாமென்றறிக. இனி அகாரமே அஷ்டதளம், இதின்மேல் உகாரமே சவுக்கமத்தியம், மகாரம் சோதிரூபானலிங்கம், இது விகாரமின்றியிருக்கும், இதல்லாமல் நிராமய அஷ்டதளமென்றுஞ் சவுக்கமத்தியமென்றும் இன்னம் நிரஞ்சன அஷ்டதள மூஞ் சவுக்கமத்தியமுமென்றும், இதுமுதலாகப்பத்துவித அஷ்டதள சவுக்க மத்தியசக்கரமுண்டென்றறிக. இது யிதழ் அக்ஷரமதிதெய்வம், முன்சொன்னதுபோல் அதோமுக ஊர்த்தமுகமென்றறிக, இது தொகைமாத்திரஞ் சொன்னது இனி பத்மமுதல் சில தத்துவங்களுற்பவக்கிரமம். இதில் பத்ம உற்பத்தி நிராதாரப் பிரம நினைவில் பிரமமுண்டா மிதுதானே பத்மசொரூப முகங்களாம், இனிப்பராபர தத்துவத்திலுண்டான சோதிமுத லாகிறுதியிலும் ஓம் யவாசிமந என்று ஆறட்சரமுமுற்பத்தியாம், இனிப்பிரணவத்தில் சிவாம்ஸபரமாம்ஸஆகாரத்தில், அகா, முதல், ௰௬. வகாரத்தில், கா, முதல் ௰௨, சிகாரத்தில், டா, முதல், ௰, மகாரத்தில், பகர, முதல், ௬, நகாரத்தில், வகர முதல், ௪. ஆ அக்ஷரம். ௫௨. இதில் சிவபரஅம்ஸமாவது, ஹம், ஸம், ஏம், க்ஷம், என்று ௪. மாம். இனி அஷ்டநாதமுற்பவம். நிஸஸ்பதபிரம நினைவிலே ஒன்றிலொன்று அஷ்டநாதமுண்டாம், இனி ஆதி உகாராதி கூடின அகண்டசோதி பரம் ஓங்காரத்தில்சோதிமுதலாறுகிருதியிலும் ஆகாசாதி பூதமுண்டாம், இந்தப் பிரணவத்தில் தானேபதம். ௯௪. உண்டாம். இந்தப் பிரணவத்தில் தானே தாரகுண்டலசோதி மூன்றில் அகாராதி மூன்று முண்டாம். இந்த மூன்றுங்கூடி ஓங்காரப் பிரணவமாம், இனி ஆதிவிந்து வாதிகூடின பரமவோங்காரத்திலுண்டான சோதி முதலாறிலும், மனங்கூட இந்திரியமாறுமுண்டாம். இனிச் சிற்சத்தி முதலொன்றிலொன்றாக ஆறு சத்திகளுண்டாம். இந்தசத்திகளில் ஆறு மூர்த்திகளுற்பவம். இனி அகண்டசோதி கோளகாகாரப் பிரணவத்திலுண்டான தாரகாகிருதிமுதலாறிலும் இருதயாதி யாறுமந்திரமுண்டாம். ஈசானாதி முகத்தில் ஈசானாதி மந்திரமுண்டாம். ஆ மந்திரம். ௰௧. இனி முன்சொன்ன பிரணவத்தில் சோதிமுதலாறிலும், மகாலிங்க முதலாறுண்டாம். பின்னுமொருவகை மகாலிங்க முதலொன்றி லொன்றுண்டாம். இந்த லிங்கங்களில் சாந்தியாதீதோத்தரா

முதலாறு கலையுண்டாம். இதிலாறு சாதாக்கியமுண்டாம். முன் சோதி ஆறில் பாவ வஸ்த முதலாறு அஸதமுண்டாம். பின்னு மொருவிதம். பிரமத்திலொன்றி லொன்ருக வஸ்தங்களாம். இனி நிரஞ்சன அஸ்தமினவில் பின்ன சத்தி, இதில் நிற்பிராந்த சத்தி,யிதில் நிர்மாய சத்தி, யிதில் ஆகினியசத்தி, யிதில்தாகினிய சத்தி, யிதில் டாகினியசத்தி யிதில் வாகினியசத்தியில் ராகினிய சத்தி,யிதில் காகினியசத்தி ஆ சத்தி ௬. இனிச் சோதியாதியில் நவதேவதைகளும் உற்பவம். ஆத்மன். சதாசிவன். ஈஸ்வரன். உருத்திரன். விஷ்ணு. பிரமா. ஆ ௬. இனிஅந்தராத்மன். பரமாத்மன் .சர்வாத்மகன். லிங்கம். ஆ ௩. ஆ ௬. வேதம். ௪. காயத்திரி, ௧. அசபை, ௧. ஆ ௬. இனிச்சௌஞ்ஞை யுற்பவம். அஞுதி சௌஞ்ஞை, லிங்க க்ஷேமம், சரீரசவுஞ்ஞை, கூடசவுஞ்ஞை பரசவுஞ்ஞை, நிராகுள சவுஞ்ஞை,ஆ ௬.இதிலயிக்கஞுதி,ஆறுபத்தருண்டாம்.இனிஆதிமகாராதிகூடினமகதோங்காரத்தில் ௨௨௪.புவனமுண்டாம். அந்த ஓங்காரத்திலுண்டானதாரகாதியில் ஆறு பிரமமுண்டாம். அதேது பரப்பிரமம், விஞ்ஞானப்பிரமம்,மகாஞானந்தப்பிரமம் கலாப்பிரமம், பிண்டப்பிரமம், மூர்த்திப்பிரமம், ஆகப்பிரமம் ௬. இன்னமொருவித சிருஷ்டி ஓம் பிரதமத்தில் அஞுதி சற்சித்தமானநாமரூபக்கிரியைகளில்லாத நித்திய நிராள நிர்வயஞன அஞுதி பத்தனிலே வாஸ்தயம், வாஸ்தயத்தில் சங்கமம், சங்கமத்தில் மகுடம், மகுடத்தில் சூனியம், சூனியத்தில், சிதம்பரம், சிதம்பரத்தில் சிவசத்தி, சிவசத்தியில் சதாசிவமூர்த்தி யிந்தச்சிருஷ்டிக்கு அர்த்தமெப்படியென்னில், நிரஞ்சஞதீதப்பிரமத்தில் சமரசபக்திதரித்திருக்கிற படியால், அஞுதி பத்த பத்தஞயிறறு. நிரஞ்சஞதீதப்பிரமத்தில் பரவசமான நினைவுதானே யிர்தயா யிர்தயமாயிறறு. சத்தார்த்தம் பேதமில்லாதுபோல் முன்சொன்ன நிரஞ்சஞ தீதப்பிரமத்தில் அன்னியமில்லாதிருந்த சத்து விவேக வறிவுதானே, சங்கமமாயிறறு. சூரியனெங்கும் பிரகாசமாஞற்போல நிரஞ்சஞதீதத்தில் சமரசமாயிருந்தது. அண்டபிண்ட மெல்லாம் பூரணமான மூலஞானந்தானே மகுடமாயிறறு. அப்படிச் சொன்ன பத்தாதி சொரூபந் தானேயாய்த்தோன்றுகிற நிரஞ்சஞதீதப் பிரமந்தானே சங்கமம், அதின் மகுடநுனியில் திர்தியடங்கின அக்கினிபோலிருக்கிறபிரகாசம் வசந்தமாருதம்போல் சத்த மடங்கினதோஷமும், அதுவிரண்டுங்கூடி, அகார, உகார, மென்கிற வன்னதத்துவ யாத்மகஞனதாரகுண்டலிசோதியாகிருதியால் பொருந்துகிறஓங்காரசொரூபமெய்தின்றுசமஸத தத்துவங்களையுமுண்டாக்கி அதற்கு இலயஸ்தான மாகையால் மகுடசூன்னியப்பிரசாதமென்கிறதற்கு அர்த்தமாயிற்று. அந்தச்சூன்னியலிங்கமென்கிற பரசிவ தத்துவமெப்படியிருக்குமென்னில். நித்திரைபண்ணுகிற பாம்புபோல் சுயானந்தத்துள்ளே பரவசஞகி உப்பரிகையின்மேல் வார்த்த எண்ணெயில் சூரியகிரணம்பிரதிவிம்பத்தால்அந்தக்கிரணங்களெப்படிச் சூட்சமாய்க்காணுமோ அதுபோல் அதிசூட்சும தச்மயமாயிருக்கும். இது சூனியலிங்கஸ்தலம். அந்தச்சூனிய லிங்கமே அகண்டாத்துவய நித்திய நிர்வயபரிபூரண சச்சிதானந்தசொரூபமான நிஷ்களப் பிரமமாயிறறு. அது

நிஷ்கள லிங்கஸ்தலமாயிறறு. இப்படிப் பஞ்ச சவுஞ்ஞை யாயிருக்கிற நிஷ்கள லிங்கத்தினுடைய லீலாஸ்மரணேயில் அந்தற்கதமான அஷ்டஐஸ்வரியத்துக்குப் பூஷண சுயம்பிரகாசமென்கிறது. பகிக்கதமாகி நாம நிர்ஞமத்துக்கு வாராத மூல சித்தென்கிற நாமத்தைத்தரித்ததுக்கும் அந்த நிஷ்களம் பிரமத்துக்கு மாதாரமாகையால் சூனிய ஜாதம் சிதம்பர அர்த்தமாயிறறு, அந்த நிஷ்களப்பிரமத்துக்குப் பிரதம நினைவானபடியால் மூல சித்தென்றுயிறறு. இனி தற்பணசையோகத்தால் கெற்பகிரகப் பிரவேசமான சூரியப் பிற்பாதி தீக்ஷணம்போல அந்தமூலசித்தி ஸ்ரீடத்தில் பிரதிவிம்பிக்கப்பட்ட சிற்பிரகாசமே சிற்பிந்து. ஆகாசம் வாயுவினுல் பிறந்த சத்தத்தைப்போல் அந்தச் சத்துச்சித்துகளிலிருந்து நிஸ்வதமான சீவாதாரகோஷமே சின்னுதம். புட்பத்திறபிறந்த வாசனைபோல் அந்தப் பிரமத்தினுல் பகிக்குகமான நிசானந்தமே சிற்கலை. இந்தத்திரிவிதமும் அபரஞ்சிற்பிரகாசம்போல் மூர்த்திகொண்டு அக்ஷரத்ரய ரூபமான ஓங்காரசொரூபமாயிற்று அந்த ஓங்காரமே விந்துமயமானசத்தி, அந்தமகாநாதமே அவாச்சியப் பிரணவரூபமான சிவமயமாகையால் சிதம்பரஞ் சிவசத்தியுற்பவமென்று அர்த்தமாம். இனிப் பஞ்சசலட்சண பஞ்சநாத முதலாகிச் சருவாதிமூல ஸ்தம்பமாய் விளங்குகிற சிவதத்துவத்தில் பஞ்சகலாப் பரியாயமான பஞ்சசத்தியுண்டாயிறறு. அந்தப் பஞ்ச கலாசத்திகளுடைய ஒவ்வொன்றில் பத்திலொன்றில் பஞ்சசாதாக்கிய முண்டாயந்தச் சாதாக்கியங்களின் பிரகாசங்களே யவையவங்களாய்த் தோன்றின மூர்த்திசதாசிவனுகச் சிவசத்தி சதாசிவன் உற்பவமாயிற்று. இது பஞ்சமூர்த்தி லிங்கஸ்தலம். இனிப் பஞ்சசத்தி ரூபமானது, பராசத்தி, விந்து, ரூபம், ஆதிசத்தி, நாதரூபம், இச்சாசத்தி. சிவன் சத்தி ரூபு, ஞானசத்தி சத்தரூபம், கிரியாசத்தி சிவன்வாக்குரூபம். இனிச்சாதாக்கிய லக்ஷணமாவது, சமஸ்ததோஷரகிதமாகச் சுத்த தத்துவமாகையால் அறிவே வடிவு சிவசாதாக்கியமாயிறறு. ஒரு மூர்த்தியில்லாமல் சோதிப்பிரகாசமாகையால் அமூர்த்திசாதாக்கியம், இச்சாசத்தி, குணத்துவமாய் அக்கினி ஸ்தம்பாகாரமாய் சிரசுமூண்டாகையால் மூர்த்திசாதாக்கியம், செகத்துதைய முண்டாக நாலுமுக முண்டாகையால் கர்த்துருசாதாக்கியம், கிரியாசத்தியோகத்தால் ஐந்து முகமுடைய கன்மசாதாக்கியம். இந்தச் சாதாக்கியங்கள் கிரமத்தில் சதாசிவ, ஈச, பிரமேச, ஈஸவர, ஈசானிய மென்கிற நாமமாயிறறு. இலிங்கமூர்த்தி சிருஷ்டிமுடிந்தது.

பின்னுமொருவிதம் நிஸ்சுன லிங்கஸ்தலம், சூனிய லிங்கஸ்தலம், நிஷ்கள லிங்கஸ்தலம், மகாலிங்கஸ்தலம், பஞ்சமூர்த்தி லிங்கஸ்தலம். என்று ருு. விதமாகச்சொல்லும். இனி அங்கஸ்தலம், லிங்கஸ்தலம், சிருட்டிவிபரம், என்றது, சச்சிதானந்தப் பிரமந்தானே தன்னுடைய சுசத்திக்ஷோபமாத்திரத்தால் ஸ்தலமிரண்டு விதமாயிறறு. ஒன்று லிங்கஸ்தலமென்றும், ஒன்று அங்கஸ்தலமென்றுமாம், இலிங்கம், அங்கம், உபாதியினுல் பின்னமாயிறறு. அதெப்படிப் பின்னமானதென்னில், ஒரு ஆகாசங் கடாகாசமான்றுறபோலென்றறிக. பிரமந்தானே தன்னுடைய லீலாவிலாச

த்தால் உபாசிய உபாசகனாகித் தன்னைத்தானே பூசிக்கவேண்டிப் பூசிப்பானும் பூசைகொள்வானுமாகவேண்டி ஆகாசமானது. கடாகாச மகாகாசமானதுபோல் தன்னுடையசமவாயசத்தியின்பேதத்தால்சிவமென்றும், ஆத்மாவென்று மிரண்டுபிரகாரமாயிற்று. இதில் சிவம் இலிங்கஸ்தலமும், ஆத்மா அங்கஸ்தலமாயிற்று. இனிச்சத்தியானது. சத்தியென்றும், பத்தியென்று மிரண்டுவிதமாம். இதில் சத்தி லிங்கஸ்தலத்தோடு கூடி ஆறுசத்தி, ஆறுகலை, ஆறுசாதாக்கியம், ஆறுலிங்கம், இதுமுதலான வெகுவிதரூபமூர்த்திகளுடனே அனந்தரூபமாயிற்று, இனிப்பத்தியானது, அங்கஸ்தலத்தோடுகூடி ஆறுபத்தி, ஆறஸ்தம், ஆறர்ப்பணம், ஆறவதானம், இதுமுதலான அனேக பத்திகிரியைகளாக அனந்தரூபமாயிற்று. இனி அங்கஸ்தலமான ஆத்மாவுக்கு பத்தியானது அந்தரங்கமாய்த் தான் பிரமமாய் நிற்றல் இடமாகச் செய்வது. இனிச் சத்தியானது ஆத்மாவுக்கு அந்தரங்கமாய் மந்திரதந்திரங்களாய் அனேகங் கோடி தத்துவங்களாய் அனேக தனுகரண புவன போகங்களாய் பாயரங்கமாய்க் கிரியைகளைச் செய்வித்து மலபாகம் வருத்துவிக்கும், அங்கத்தி லயமானவாத்மா லிங்கத்தி லெத்தனை யாயிற்றோ அத்தனைபத்தனாய்ப் பூசைசெய்வன். இலிங்கஸ்தலம், அனந்தரூபமாய் பூசைகொள்ளும். இதிலிரண்டுவிதமும், பிரமந்தானே ஆயிற்றென்றறிக. பத்தி, சத்தி, இரண்டுவிதமுஞ் சத்திதானே ஆயிற்றென்றறிக இனி ஷடாங்கவுறபத்தி. இது சர்வாங்கலிங்க சாகியத்துக்கு மங்கமாம். முன்சொன்ன பிரமமாறில், ஷடாங்கவுறபவவிபரம். இனி பரப்பிரமத்தில் பரசிவன், க்ஷேக்ஞன், கர்த்தன், பாவன், சைதன்னியன், மகதாகாயம், ஆக. ௬. இனி விஞ்ஞானப்பிரமத்தில் சதாசிவன் ஆகாசம், சத்தம், ஞானம், சோத்திரம், வாக்கு. ஆக. ௬. இனிப்பிர்மானந்தப்பிரமத்தில் ஈஸ்வரன், வாயு, பரிசம், மனம், தொக்கு, பாணி. ஆக. ௬. இனி கலாப்பிரமத்தில், உருத்திரன், அக்கினி, ஆங்காரம், ரூபு, நேத்திரம், பாதம், ஆக. ௬. இனிப் பிண்டப்பிரமத்தில் அரி, அப்பு, இரஸம், புத்தி, சிங்குவை, குய்யம். ஆக. ௬. இனி மூர்த்திபிரமத்தில், சித்தம், ஆக்கிராணம், குதம், பிர்மா, பிருதிவு, கெந்தம். ஆக. ௬. ஆகப்பிரம ஷடாங்க தத்துவம். ௩௬. இனி யிதுதான் சத்தி ஷடாங்கமான விதம் சிற்சத்தி சம்பந்தம் பரமசிவன், ௧. சதாசிவாதி. ௫. ஆக. ௬. பராசத்தியில் க்ஷேக்ஞன். ௧. பூதம். ௫. ஆக. ௬. இனி யிச்சாசத்தியில் ஞானம். ௧. கரணம். ௫. ஆக. ௬. இனி ஞானசத்தியில்சேதனன். ௧ ஞானேந்திரியம். ௫. ஆக. ௬. இனி கிரியாசத்தியில்கன்மாங்கம். ௧. கன்மேந்திரியம். ௫. ஆக. ௬. ஆகாச திஷ்டாங்கம். ௩௬. இனியிதுதானே ஆறுமுகத்திலும் ததாம்ஸங்களாய் வந்துசேர்ந்தவிதம் ஈசுரன்முக மதிதேவதையாகச்சோத்திரம், சத்தம்,வாக்கு, வசனம், செவி, வாய், ஆகாசம், இந்தயேழும் பேதமில்லை. இனித் தற்புருஷ முகந்தெய்வமாக தொக்கு. பரிசம், பாணி, தானம்,தோல், அஸ்தம்,வாக்கு, இந்த ஏழும் பேதமில்லை. இனி அகோரமுகந் தெய்வமாகச் சட்சு, ரூபு, பாதம், கெமனம், கண், கால், அக்கினி யிந்த ஏழும் பேதமில்லை, இனி வாமந்தெய்வமாக ஜிங்குவை, ரஸம், குய்ய

ம், ஆனந்தம், நாக்கு, சலத்துவாரம், அப்பு, இந்தயேழும் பேதமில்லை. இனி சத்தியோ சாதந்தெய்வமாக ஆக்கிருணம், கெந்தம், குதம், விசற்கம், மூக்கு, மலத்துவாரம், பிருதிவு, இந்தயேழும் பேதமில்லை. இனிப் பாவமுகந் தெய்வமாக யிருதயம், சோத்திராதி, சத்தாதி, வாய்வாதி, வசனாதி, செவியாதி, வாயாதி, ஆகாசாதி யிதுகள்பேதமில்லை. இந்தவாறு முகத்துக்கும் ஆறுமுகமே அதிதெய்வமாக யிதுகளெல்லாமிருக்கும். இனித் தூலாங்கத்தில் இந்திரிய மிருக்கிற ஸ்தானங்களுக்கு அஷ்டலிங்கம் இனிச் சூட்சுமாங்கத்தி லிந்திரியங்களுக்குப் பிராணலிங்கம். இனிகாரணாங்கத்தில், அந்தக்கரணங்களுக்குஞ் சத்தாதி விஷையங்களுக்கும் பாவலிங்கம். இந்தமூன்று லிங்கமும் ஆதிசதாசிவன், ஆதி யீஸ்வரன், ஆதிமயேஸ்வரன், தானேயாணதென்றறிக. இந்திரியங்களுக்கு மந்தக்கரணங்களுக்கு மாறுலிங்கந்தானே முகமா யறியு மென்றறிக. இனி ஆறாதார நிலையாவது, மூலாதாரத்தில்பிருதிவு, பூதம், நாற்கோணம், பொன்னிறம், நாலுபத்மம், சிவப்பு, நாலக்ஷரம், முகம், சத்தியோசாதம், ஆசாரலிங்கம், நாதரூபம், நிவிர்த்திகலை, கன்மசாதாக்கியம், திக்கு, மேற்கு, வெண்பதும்பிரநதம், காகினி, சத்தி, கிரியாசத்தி, ருக்குவேதம், சுகித்த அஸ்தம் ஆக்கிருணமுகம், சற்பத்தன், பிர்மபூசாரி, அறுதிசவுஞ்ஞை, நகராத்மன், பிரமநாதம், மந்திரமூர்த்திப்பிரணவம், ஸ்தானங்குதம், திராவியம், கெந்தம், அங்கம், பிருதிவு, மூர்த்தி பிர்மா, அத்திருயநம், மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை, ஆகவிதம். ௩௩. இதல்லாமலும், இஃதோடு சேருகிறது, இன்னஞ்சிலவுண்டென்றறிக. இந்த மூலாதாரத்துக்குசொன்னதுபோல்மற்ற ஐந்தாதாரங்களுக்கு முண்டென்றறிக. மற்ற சக்கரவாதாரமெல்லா முன்சொல்லியிருக்கிறதென்றறிக. இது தடத்தலட்சணமுடிந்தது.

இனி ஆத்மா செனன மரணப்படுகிற பந்தலட்சணம். இனி பந்த தலத்துக்கு வருகின்றவனுக்கு முதலான பிண்டலட்சணமெப்படி யென்னில் மந்தபிண்டம், மத்திமபிண்டம், சிற்பிண்டமென்று மூன்றுபிரகாரமாம். நித்திய நின்மல சதாசிவனுடைய இர்தயமத்தியத்தில் சுத்தசாத்மீக குணசம்பந்தமான உத்தர கலாசத்தில் ஆயிரத்தொன்றிலாத்மா உதயமாகிச் சிவாஞ்ஞையால்ரசோகுணசம்பந்தமானபஞ்சபூத காயமெடுத்துக் கிளியின் கூடு நடுவேயிருக்கிற கோவிலேறினவுடனே தன்னைத்தானே மெய்மறந்தகிளி போலத் தற்காயப் பிரமையால் சிவபாவமறந்து தமோகுண சம்பந்தமுள்ள அவித்தையா ரூபிணியான மாயாசத்தியோடு கூடி ஆத்துமாவின் சுயஞானமானதும், மனோச்சஞ்சலத்தோடுகூடி ஞாதுருசத்தத்தால், சீவாத்மனுகி யிருக்கையில் தற்பணம் பிடித்த குழந்தைபாவம்போல் நானென்னுதென்கிற மோகரூபமான மூலாங்காரதற்பண சானித்தியத்தினு லந்தப்பிரபஞ்ச சீவாத்மாவென்கிற பிரகிருதி மார்க்கத்தைப்பிடித்துச்சாதிவர்ணுசிரம குலகோத்திரப் பிரவேசிதனுய்ச் சம்சாரபந்தனுயிருக்கிறதினுல் மந்தபிண்டமென்ருயிற்று. இதற்கு அர்த்தம், சென்மசாரதியான அனிஷ்டமாகிற சம்சார பிருந்தியால் சிவசைதன்னிய விரஸத்தை மறந்து உலர்ந்தன சிவ

-ஷயில்லாமல் தத்துவம், ௯௬. ல் அகப்பட்டு அதினால் தனுகரணபுவனபோகங்கள், அத்துவாக்கள், பிண்டப்பிரமாண்டங்கள், கன்மவிதம், மலமாயா விதம், ஆத்மீகம், பௌதீகம், தெய்வீகம், சஞ்சிதம், பிராரத்வம், ஆகாமியம் நவக்கிரகபீடைகள், சாதிகுலம், என்பெண்சாதி, பிள்ளைகள், பந்துக்கள், பொன், மண், பெண், இதுமுதலாகச் சிவன் சிருஷ்டிக்கப்பட்ட விதமெல்லாவற்றிலும் தனுவெடுத்து அதோ அவஸ்தையில் விழுந்து பந்தப்பட்டுச் செனனமரணப் படுவது மந்தபிண்டமென்றறிக. இனிப்பக்குவதேகிலட்சணமாவது, பிரகிருதி காயத்தினால் ஒன்றாகி மாயாபாசங்களில் விழுந்த சீவாத்மா பாசப்புண்ணியத்தால், பசுபுண்ணியமாய்ப் பசுபுண்ணியத்தால் பதிபுண்ணியமாய்ப் பதிபுண்ணியத்தால் ஒரு தீவரபக்குவம் பிறந்து ஒருதெய்வமுண்டாகவேண்டுமென்று தோன்றி அந்தக்கரண சுத்தமாய்ப் பக்குவமானபழம்போல் சிவசமஸ்காரமும்பூரணமான சர்மதேகமேமத்திமபிண்டமாம். இனிசிற்பிண்டமாவது, நிஜாத்மத்திரையங்கள், குருலிங்கசங்கமம். சொருபமாகிச் சரற்காயமாகிறது. பிரசாதமயமாகி சர்வாங்கசைதன்னியம் பாதோதகமாய்மனதிலிருக்கின்ற சிற்கனலிங்கப்பிரகாசம், சற்பாவத்தாலுண்டானமூலமந்திர கோஷசம்பிரயஞானத்திலிருக்கின்றசிவானந்தம், இந்தமூன்றுவிதமும் பரநாதவிந்துரூபமா யதுவேபிசாக்ஷாத்திரையமாம். அந்த அக்ஷரத்திரையமே நிஷ்களப் பிரணவமாம். அந்த நிஷ்களப் பிரணவ சொரூபத்தில் பிரமரந்திர ஸ்தானத்தில் சூனியாதி பிர்மாந்தம், பிர்மாதி சிவாந்தம், சிவாதிருத்திராந்தம், உருத்திராதி பிர்மாந்தம், பிர்மாதி நிரஞ்சனாந்தமான பஞ்சவித சிருஷ்டியுமுட்கொண்டு விளங்குகிற மகாகன நிஷ்கள லிங்கத்தில் மூலசித்ரூபமாய் சிதாங்கமாயிருக்கிற பரமாத்மனிப்போது சிற்பிண்டமாயிற்று. இதினபிப்பிராயம் குருகாருண்யத்தில் இலிங்கதேகி இலிங்கப்பிராணியாகிப் பஞ்சலிங்கதத்துவங்களும், பஞ்சாக்கர சொரூபமாகிச்சுத்தநின்மலகற்பூரமபோல்சிவஞானமளவிட்டதனுவையிப்போதுசிற்பிண்டமென்பது. இன்னுஞ் சிவதத்துவத்திலுதையமான ஆத்மாவுக்குச் சிகிகற்பூரயோகம்போல் தோன்றுகிற தீவரசத்திநிபாதமுள்ள சிற்பிண்டத்தை உட்கொண்டவன் காஷ்டானல் சம்பற்கம்போல் தோன்றுகிறமத்திய சத்திநிபாதமுள்ள மத்தியபிண்டமே முக்கியமென்றுகதலிரம்பாஅனல்சம்பற்கம் போல் மந்ததரசத்திநிபாதமான மந்தபிண்டமென்பது. செம்பருத்தம்பூ சமீபத்திலிருந்தபடிகம்போல சத்திகாரசிதஞ், சொப்பனம், ரஜசு, சற்பம், ஸ்தாணு, சோரமிறுத் திஷ்ண திஷ்டம்போல் ஆகாசத்தைமூடினபனிப்போலச்சத்தியமல்லவென்று நேதிகளைந்து சற்குருவால் அந்தமந்தபிண்ட மத்தியபிண்டத்தைச்சிற்பிண்டசொருபமாக்கிப் பரசிவத்தி ஸமிக்ரு நிமித்தத்தினால் விளையில் விருக்ஷஞ்சாதிப்பதுபோல் சூரியகாந்த வக்கினி சந்திரகாந்தநீர் திதுபோல் ஆத்மாவந்தரங்கத்தில் சிதங்கசமிவித்தைந்த சிறந்த சமிவித்தைந்த

காத பஞ்சலட்சணசொரூபத்தில் சாதிக்கப்பட்ட அங்கதலிங்கத் தலங்கள் முற்றும்ஸங்க்ஷேபமென்றறிக.

இதின் அபிப்பிராயம் குருகாருண்யத்தினால் இலிங்கதேகி இலிங்கப்பிராணியாகிப் பஞ்சவிம்சதி தத்துவங்களும் பஞ்சாட்சரசொரூபமாகிச் சுத்தநின்மல கர்ப்பூரம்போல் சிவஞான மளவிட்டதனு இப்போது சிற் பிண்டமென்பது. முன்பஞ்சசிருஷ்டியின்நிர்ணயமெப்படியென்னில், இதைத் தொகையாகச்சொல்வது, அனாதி பக்தன் இதில் இர்தயம் இதில் சங்கமம், இதில் மகுடம், இதில் சூனிய இலிங்கம், இதில் சிதம்பரம், இதில்“பரீவ, என்ற அக்ஷரத்திரையமுண்டாம். இந்தப்பஞ்ச சவுஞ்ஞையாதியாக, அந்தற்பாவமான சின்னங்க ளிப்போது சூனியாதி பிர்மாந்தமான சிருஷ்டி, இனிப் பஞ்சநாதம், பஞ்சப்பிரணவம், பஞ்சகலை, பஞ்சசத்தி, பஞ்சசாதாக்கியமுதலான தனுகாந்தியின் சின்னங்களிப்போது பிரமாதி சிவானந்தமானசிருஷ்டி., இனிப் பஞ்சாக்ஷரி, பஞ்சமூர்த்தி, பஞ்சமுகம், ஈஸ்வராஷ்டகம்,மாயேஸ்வரம்,பஞ்சவிம்சதி,ஏகாதசம்,உருத்திரத்திரயாவயம், இரணியகெற்ப, விராட்டு, முதலான சாகாரவிக்கிரகத்தின்சின்னங்கள். சிவாதிருத்திராந்த சிருஷ்டி., இனி அஜ, அரி, இந்திரமுனிவர்க்கமுதலான சாலோக்கியாதி பதத்திரையங்களுடையவர் உருத்திராதி பிர்மாந்தமான சிருஷ்டி, இனி சீவசாதி. தானவர், மானவர் முதலான சாதிகள் உலோகாதிலோகங்கள் பிர்மாதி திரணாந்த சிருஷ்டி பிண்டத்திரையமுற்றும்,

இந்தப்பக்குவதேகியாய்ப் பக்தாதிகளாகிறவருக்கு இந்தப் பிண்டத்தலமூன்றும், நூற்றொருதலமானவிபரம். இனி மந்தபிண்டத்தலமாவது,தன்னைமறந்து சிவன்செய்தியை யிழந்து எனது யான் என்னுங் கன்மத்தினால் இருவினைகள்செய்து அதைப்புசித்து யிறந்து பிறந் துழலுமுயிரானது யிருவினையொப்பில் மலத்தடைசற்று நீங்கி ஈசனருளால் பக்திப் பிரவேசமாய்ச் சத்தினிபாதம் பிறந்து மேகத்தில் மின்னும் நீரிற்கெங்கையும, பழத்தி லிரசமும், ஆனைமத்தகத்துமதம்போலும், சந்திரகாந்தத்தில் நீர்போலும், குழந்தை சொப்பனம்போலும், அரும்பிற்கந்தம்போலும், உயிரிற்சைதன்னியம்போலும், தயிரில்நெய்போலும், முத்துள் அடங்கினநீர்போலும், பீசத்தில்விருட்சம்போலும், மகாகனத்தைப்போதித்துக் காணவேண்டும். இனிப் பாஷாணத்திலக்கினிபோலும், பக்தருடன் கூடின நிசபக்தர்போலும், அடங்கியிருக்கிறதைப் பிண்டத்தலமென்றுசொல்லுவார். ரூபுரூபிலடங்கி ரூபமாகி நின்ற ரூபு நிச்சயமாய்ச் சஞ்சலமில்லாமல் பாரமாகி நின்ற நிசபதங் கூடல்செனனநிவர்த்தியென்றறிக. இனி மத்திமபிண்டஞானத் தலமாவது பரையறிவினாலண்டபிண்டங்களை மெய்யென்றிருப்பதைக் கானல்நீர்போல் பிரமையென்றுஇலக்கமில்லாதசெனனமெடுத்த நான்பரமுமல்ல, அசத்துமல்ல, நான் சிவமாம்சமேயென்று தானென்பதிழந்து உலகுயிர்கள் தன்னிற்றோன்றி யொடுங்கப்பரையுருக்கொண்டு லீலையாகி நிசத்தை விளக்கிக்கொண்டவன் சிவனென்று நித்தியாநித்தியங்களையறிந்து சுவானுபவவுதையத்தில் ஞானநேத்திரத்தைமூடின திரையைத்துறந்து தன்னிசத்தைக் கண்டு

தெளிந்து சித்தவிந்துப் பிரகிருதியாகிறதைநீங்கித் தத்துவவிவேகியாகிநிச்சல நிசாந்தரங்கம் நிச்சயித்துச் சுகமுகத்தையறிந்து இந்தஞானமுகத்துள்ளடங்கிப் பார்த்துத் தன்னைத்தானே விட்டுத் தானேதனக்கன்னியமில்லையென்பதை யறிந்து மாயையைநிவர்த்திசெய்து சிவத்தியானத்தால்மனதைச் சாதனத்தில் நிறுத்தி மனோபாவியாகி விந்துநாதங்களை யழித்துச் சிற்சொரூபவிந்துவாய்நின்று விளங்கி ஞானமே வடிவானவன் பிண்டஞானியென்றறிக.

இனி சிற்பிண்ட விபரம். "சம்சாரஹேய ஸ்தலமாவது,, மயிர், தோல், உதிரம், இறைச்சி, மேதை, நரம்பு, குடல், எலும்பு, சீழ், புண், கோழை புழு, மலம், நீர், மூளை, மச்சை, வழும்பு, இதுகளுடனே கூடியழிகிறவுடலான பாம்பின்வாய்ப்பட்டு அதினால்நிலையில்லாதஇகபரமும் வெறுத்துச்சிவனே மெயனக்குப்பந்தம் விடுவிக்கவேண்டுமென்றுருகிப் பதைத்தலறிச் சகலமும் பகையாய்ச் சுக்கில சுரோணிதப்பந்தமான மலத்தினால் நான் பிரகிர்திகாயத்துக்கனுகூலமான மாயாமலத்திரயத்தினால் சகலப்பிரபஞ்சமும் அனுகூலமாகப் பிராப்தியாகிச் சுகிர்த சிந்தனைசெய்ய வொட்டாமல் அஃதே தோன்றி யிருக்கிறவெனக்கு விகாரனென்னுமற் கருணையினால் மாயாவிகற்பங்களை பரிகரிப்பாயென்று நம்பினேன் ஐயனே இனி என்னைச்சம்சார மென்னும் பந்தத்தினின்று அகற்றி உண்மைஞானானந்தத்தைத்தந்து ரக்ஷிக்கக்கடவா யென்று பிரார்த்திப்பதே சம்சாரஹேயஸ்தலமென்றறிக. இனிக்குருகாருண்யத் தலமாவது, நானு பவபயசம்சார அஞ்ஞான செடத்தைத்தீர்த்து, ஞானானுக்கிரக சென்மத்தில் செனிக்கச்செய்து, பின்புகன்மசாத செனிதேந்திரியதுஷ்கர்மத்தால் பூர்வாச்சரியத்தைக் கெடுத்துச் சிவஞானவர்மத்தைக் காட்டிக், கரகமலத்தைச்சிரசில் கருணையால்வைத்து, துஷ்கர்ம லிங்கத்தைத்துடைத்து, நரசென்மமாகிற பூர்வாசரியதோஷத்தைத்தீர்த்து, அருள்புரியப்பட்ட குருவடிவாகிற பிரமத்தைச் சேர்ந்து துதித்து உருகுகை யிலவன்பாசத்தைத் தீரக்கடிந்து சிவ ஆத்ம சுத்தி பண்ணி ஆஞ்ஞாதீக்கை உபமாதீக்கை அத்துவாகாயாரோணம்விபூதிபட்டங் கலசாபிஷேகம் இலிங்க சுவாயித்தியமிதுமுதலானதீக்கைசெய்து அங்கத்தில்லிங்கத்தை வைத்துச் சர்வாங்கமுமிலிங்கத்தலமாக்கி மேல்சுககரமான பரம ஞான நிசாங்கத்தைக் காட்டி, உட்புறம் பென்னுமற்றன்னிலேதன்னைப்பிரகாசிக்கிற ஞானசோதியைக்கண்டு தெளிய ஞானக்கண்ணை விளக்கிச் சிகிகற்பூரம் பற்றினது போல் என்னுள்ளே கலந்திருக்கிற மகாகனத்தைக்காட்டிப் பரமசுகத்திலே வைப்பதுகுருகாருண்யத்தலமாயிற்று. குருகருணைப்பட்ட மகாமகிபனைத் தாலதனுவிவகாரத்தைக்கெடுத்துச் சதாசாரசற்கிரியாவர்த்தனைக்கே சாதனமாகியங்கத்தின்மேல் இலிங்கசுவாயித்தியமானபேதமெப்படியென்னில், இதுலிங்கதாரணத்தலமாயிற்று. இதற்குகுருவானவர் வேதமந்திரக்கிரியாரூபமான மூன்று தீட்சையாலே குருவினுடைய அஸ்தம், விதிப்பிரகாரம், சீஷன் சிரசிலேவைப்பதுவேதாத்மிகை, செவியிற் பஞ்சாக்கரமந்திரஞ்சொல்வது ம

ந்திராத்மிகை, இஷ்டலிங்கத்தைச் சீஷன் கரத்தில் தரிப்பதுகிரியாத்மிகை, இந்தலிங்கத்தை ஆறுதலத்திலுந் தரிப்பதாம். இதிற்றரிக்கும்விபரங் குருவானவர் பரமார்க்கத்தை யோசித்துச் சீஷன்கையில் பிராணனைக் கடாக்ஷிக்கையால்அந்தச்சரீரம் இலிங்கதனுவர்மாகையால்அப்போதும் லிங்கந் தரித்திருக்கவேண்டும். இலிங்கசகிதநடை, இலிங்கசகிதநொடி, இலிங்கசகிதசகலேந்திரியமுகம், இலிங்கத்தில்ஆலிங்கனமாயிந்தலிங்காங்கியேசகசமாகையால்சதிசுதமித்திரர்களுமிலிங்கதாரண மாகவேண்டும்.

இனித் திரிகரணசுத்தியினுல் அவதானப் பிரகிருதி சஞ்சலமல்லாமல் அபேட்சா சத்தியினுல் திரவியங்களைக் கையில்பிடியாமலும், வாங்காமலும், வயிராக்கிய விர்த்தியாய் அகண்டபரிபூரண சரித்திரத்திலணுமாத்திர மாகிலும் இடைவிடாமற் பக்தியுத்தியால் சிவலிங்கந்தரிப்பது. அகிலத்தில் உண்டானநானுமுத்தி போக போக்கியங்களைத் தனக்குவேண்டிக் காண்பித்து ஆசையால் ஞானேந்திரியமுகத்திற் புகவொட்டாமற் சுவானுபவ நிசமுண்டாகில் இலிங்கத்துக்கே அற்சிக்கஅவன்கக்ஷத்திற்றரிப்பது இனி அங்கவிகாரத்தால் விரகதாபத்தாலே ஸ்திரி சங்கஞ்செய்யாமல் நிர்மலனுய்ச் சரீரத்தைவிட்டுவந்து தாக்கிறவிஷய சவுக்கியங்களை யறியப்பட்ட விலிங்கத்துள்ளேசமற்பித்துபரமசுகியாயிருப்பதறிந்தால், மார்பிற்செச்சையின்கண் இலிங்கந்தரிப்பது. இனி அனிர்த, அபசத்த,குதர்க்க,மன ருதகநிந்தை,நிஷ்களமுதலானவிகாரபிரமேதமச்சரங்களை யனுசரியாமல் அனுதினமும் லிங்கத்தை முகவிச்சையிலே தரிப்பது. இனிக் கரணாதி குணங்களின் சஞ்சலத்தைச்சங்கரித்துச் சிவஞானத்தால் அந்தரங்கத்திலிரண்டில்லாம லேகமாய் ஒன்பது நாளுள்ளேசஞ்சரிக்கிறபிராணவாயுவின்குணங்களைநிறுத்தி விசாரித்து உள்ளேபரிபக்குவசதானந்தசுகத்தில் நின்றவன் அமலோக்கிய லிங்கந்தரிப்பது. இனி அவிசாரகையால் உலகத்துச் செடமனுஷரை நமஸ்காரஞ்செய்யாமற் பிரமாணுச்சக்கரப்பிரவேச அனுபவிசிரசில் இலிங்கந்தரிப்பதுஇந்தக்கிரமத்தினுல் தரித்தவர் சிவதத்துவத்தில் மூலஞானசம்பவ சம்பந்திகளென்கிறநிசமகிமாபரதத்துக்குச்சானுசற்குருவேசங்காரஷேயம் குருகருணைலிங்கதாரணம். இந்த மூன்று தலமுஞ் சிற்பிண்டத்திலடங்குமென்றறிக. இதில் முத்தித்தலமுடிந்துதென்றறிக. இனி முத்தித்தலம் பெற்றவன் - ௱௧ - தலத்திலுஞ்சரிக்கவேணுமது சங்க்ஷேபமாய்த் தொகையாகச்சொல்வது, இனி விபூதித்தலமாவது சிவன் ஐந்துமுகத்திலும் ஐந்துவர்ணமான ஐந்து பசுவிற் கற்பப்பிரகாரங் கோமயம் ஐந்து மந்திரத்தால் விபூதி உண்டைசெய்து "பஸ்மவி திவகேதரகைக்ஷஸாரம," என்று பெயரானதை நித்தியநியமமாகச் சடாக்ஷரியாலே - ௧௧ - ௧௫ - - [illegible] - தானத்திலு மூன்றுபொழுதுந்தரிப்பதென்றறிக.

இனி உருத்திராட்சத்தலம். சிவன் முப்புரத்தையெரிக்கும்போது மூன்றுகண்ணிலும் நீர் வந்துவிழ விது பஞ்சவர்ணத்திலும் உருத்திராட்சமுண்டானதைச் சிகை, சிரசு, காது, களம், உரம், கை இதுகளில்விதிப்படியே யெண்ணிக்கை அளவு நிறமறிந்து தரிப்பதென்றறிக. இனிப் பஞ்

சாக்கரத்தலமாவது ஓங்காரமேபிரமம், பஞ்சசாதாக்கியமே பஞ்சாட்சரம், இந்த - ௬ - ம் நிஷ்கள சகளவடிவாம் இதை மானதம், வாயு, நாக்கையைக் கருவிலுருதென்றறிக. இனிப் பக்தத்தலமாவது. சத்தபாதகம் பஞ்சருத்தம்தனுமன் தனவஞ்சனைகளைவிட்டு மூன்று பொருளான குருலிங்கசங்கமத்தின் குறிகுணம்பாராதே ஒன்பதுவித சற்பத்தியால் தனு மனவாக்கால் வருகிற அர்த்தப்பிராண அபிமானத்தையவர் நினைவறிந்து சமர்ப்பித்துபக்தரிற் கூடிநடப்பதென்றறிக. இனி உபயத்தலமாவது. சிற்பிரமமே பிரத்தியட்சகுருவடிவான குருவாணையின் வழிநின்று அவரிலொன்றாய் பிறிவிலாதபத்திசெய்து குருலிங்கமிரண்டினும் ஆனந்தம்பொங்கி நிற்பதென்றறிக. இனித் திரிவிதசம்பத்துத்தலமாவது, ஒன்றே மூன்றானதறிந்துசரமேகனென்று குருலிங்கசங்கமத்தில் பக்தியொன்றான தென்றறிக. இனிச் சதுர்விசாரத்தலமாவது. உடல்பொருள் உயிர்பலவானதுஞ் சிவனுடைமையென்று இதையுடையவனுக்குச்சமற்பியாமலுண்பதால் நரகத்தில் வைப்பனென்றறிந்து குருலிங்கசங்கமங்கொள்ள வற்பித்து அந்தப்பிரசாதமும் பாதோதகமுங்கொண்டு குருலிங்கசங்கமம் பிரசாதம் இந்தநாலினும் பத்தியாயிருப்பதென்றறிக. இனி உபாதித்தலமாவது, முப்பொருளுக்கு முப்பொருளீந்து நடப்பது மூன்றாவது மோகமறும்உபாதி நிருபாதி சகசச்செயலாகும். இதின் முப்பொருளைச் சிவனெனநம்பி எப்பொருளையும் வஞ்சனையில்லாமற் கொடுத்துப்பலபதங்களைவிரும்பி இரண்டுவிதமாய்ச் செய்வதென்றறிக. நிருபாதித்தலமாவது சகசத்தில்வாழ்வு, பரத்தில்வாழ்வுவேண்டாமற்சிவனுடைமைஎன்று நிசபக்தியாற் குருசரலிங்கத்தினினைவறிந்துஅர்ச்சிப்பதென்றறிக. இனி சகசத்தலமாவது தன்னிடத்திற் சிவனுளமாயிவனுளம்பரத்திலயித்து,தானே தானு யெவையுந் தன்மயமாகுதலால் இடுவானுங்கொள்வானும் பொருள்களுமொன்றாகையால் முப்பொருள்கொள்வதுஞ் சிவனென்றறிக. இப்போது சொன்னதலம் - கடு - ம் நிசபக்தத்தலமாய்ப் பக்தன் நடக்கையென்றறிக. இது மந்தபிண்டத்தலமுதல் சகசம் அந்தமாகத்தலம்-கடு- இனி மஹேஸ்வரத்தலமாவது அரியயன் முதலானபேர் பசுவர்க்கமென்றுஞ் சிவன் பதியென்றும்அறிந்து முப்பொருளுக்காக வசைந்துதான் சோகபத்திவழுவாமற் கவலையில்லாமல் அகம்புறமில்லாமல் நயிஷ்டாபத்தியா லென்னவிபரீதம்வந்தாலும் அசையாமற் சிவநிந்தகரைச் செகுத்துத் துரியநிலை நின்று மற்றமதங்களைவிட்ட தீரனுவதென்றறிக. இனி லிங்கநிஷ்டைத் தலமாவது ஒளியாய்ச் சிற்பரமாய் வெளியாயுயிராய்மனதே தேகமாய்நின்ற லிலிங்கங்கையிலேவந்துதென்று மனோலயத்தானமா யஷ்டவிதார்ச்சனைசெய்து அற்தப்பிராணாபிமானம் போகவரினுந் தவறாமல் மயலகன்று அற்பிதமான அன்னோதகம் பங்கமறவுண்டு லிலிங்கமயமாகி நிற்றலென்றறிக. இனிப் பூர்வாசரிய நிரசனஸ்தலமாவது, சிவசென்மத்தில் உதித்த சிவபக்தன் முன்போலக் குலங்களிலேகூடில் மேலேறிக் கீழ்விழுவார்போல நரகத்தில் விழுவான் சாதியாவது "ப்ரவிவ சற்பத்த,, னிரண்டு குலமேயல்லாமல் வேறுகுலமில்லை பலகாஷ்டமும்வெந்து சாம்பலானதுபோல் நவசென்மராய்க்குலம்விட்டதென்றறிக.

இனி வாக்கால்துவித நிரசனத்தலமாவது, பூச்சியனும், பூசகனும் ஒன்றெனில் பூசைமோட்சமில்லையாம். சிவன் சுதந்திரனுமுயிர்வனவசத்தாம். இதனால், அத்துவிதியல்ல ஈசன்கர்த்தனாகத் தான்தொண்டாய் நிசபக்திசெய்துபதவியை யடைவதென்றறிக. இனி ஆவாகன நிரசனமாவது பக்தியினால் ஏகமாய் முத்திபதமான லிங்கத்தைத்தான் இரண்டில்லாமற்பவமறவே பரிசித்துப் பரனுருவமாதலென்றறிக. இனி அஷ்டமூர்த்திநிரசனமாவது, அஷ்டமூர்த்திரூபமாய்சிவனிருப்பனென்னிற்பூதம்,ரு-ம். செடமாம். உயிர்பரதந்திரனும். சூரியசந்திரர்பரதந்திரராம்.ஆகையால்,இந்த-அ. நாதனல்ல. எப்படியென்னில், குலாலனுலான கடங்களவனாகாது, எல்லாவற்றையுமாக்கியழிக்கிறவன் சிவனாகானுகையால்சிவனட்டமூர்த்தியல்லச் சித்துருவென்றறிக. இனிச் சர்வகத நிரசனமாவது, சிவனெங்கும் நிறைந்து எவ்வுருவிலுமிருப்பனென்னிற் பூசை யெவ்வுருவிலுமிசையாது இலிங்கத்திலிசைந்து அர்ச்சனைகொள்வனாகையால் சர்வகதனல்ல. அதெப்படியென்னில், பசுவின்பால் உடம்பெல்லாமிருந்தாலும் முலையினிடமாகத் தருவதுபோல் இலிங்கமுகமாய்ச் சிவன் மோட்சங்கொடுப்பானென்றறிக. இனிச்சிவன் செகமானதலமாவது, செகமெவையுமுட்கொண்டு சிவனகண்டபரிபூரணனாய்ச் சராசரமெல்லாம் தானாய் நிற்பன். அதெப்படியென்னில், நுரை, திரை, குமிழிகடலுக்கு வேறில்லைபோலும், பூ, இலை, காய், கனி, மரத்தைவிடவில்லைபோலும். சிவனிடத்தில் எல்லாமுண்டாயவனை யகலாதிருக்கும் அந்நிலைபோலத்தானுநிற்பனென்றறிக. இனிப்பக்ததேகித்தேகத்தலமாவது, சிவனெல்லாமாகியு மல்லாமல் நின்று வயிராக்கிய பக்திஞானமுள்ள பக்தன் தேகிகந்தானுமெல்லாருக்கும் அவன் மகிமையையுங் காட்டுவித்து அவன்குற்றமில்லாத சுகபோகியாய் பரமாய் பக்தனே தேகமாய் நின்றதென்றறிக. ஆகமஸ்தலம், ௬.

இனிப்பிரசாதித்தலமாவது, தனக்குப்புசிப்பான பதார்த்தமெல்லாந்தான்தீண்டாது இலிங்கத்துக்கர்ப்பித்துமனது நின்மலமயப்பவரோகந்நிரநிசமான அவிஷதப் பிரசாதத்தையருந்தி அனுபவத்தைநாடாதவனாய் நாள்தோறும்பியாசித்துவகமாவதென்றறிக. இனிகுருமகாத்மியத்தலமாவது, சச்சிதானந்தமான பொருளினருள்பொங்கிக் குருவுருவாய்வந்துண்மையைக் காட்ட அவற்றில் நின்றதென்றறிக. இனி மஹேசன் இலிங்கமகாத்மியத்தலமாவது, சராசரமாகிய உலகமெல்லாமொடுங்கி யுதிக்கிறதானம் மகாலிங்கமாயருச்சனைகொள்ளும் பொருட்டாயடியருள்ளத்தில்நின்று உள்ளங்கைநெல்லிக்கனிபோல் கரகமலத்திலிருந்து எல்லாந்தானாய் நின்றதென்றறிக. இனி மஹேசன் சங்கம மகாத்மியத்தலமாவது, அங்கத்தில் சைதன்னியமாய் பரமாய் பார்ப்பதுவே தொழிலாய்பற்றியமுதுண்டு செகத்தில்தடையில்லாமல் நிசபக்தர்தன்னைச்சச்சிதானந்தமான தமது பதமாக்கி வசனம் பார்வை பரிசத்தாலுயிர்கள் பாகம்பொருந்திடச்செய்ய சங்கமத்தின் பொருளறிந்து ஒன்றாய் நிற்பதென்றறிக. இனிப்பக்தன் மகாத்மியத்தலமாவது பக்தன் செய்யுந்தீமைநன்மையாயும்,பாவிகள்நன்மைசெய்வதின் மையாயும்

அதெப்படி தண்டித கனசெயல்போலக் கொடிதான பெத்தமகற்றிப் பக்தியானது இரவியெழு மிடத்திருள் நீங்கல்போலச் சம்சாரம் நீங்கி எல்லாச் செயலும் சிவன்செயலென்று தானென்பதில்லாமற் பக்திநிலை தவறாமல் நிற்பதென்றறிக. இனிச்சரணன் மகாத்மியத்தலமாவது, சுகங் கொடுக்கிற பின்னமோகங்களை விட்டுச் சுத்த சிவஞானத்தால் சூதகமில்லாமலருச்சித்து மனதை லிங்கத்திலயம்செய்து அறிவேவடிவானசிவன்தானேயாவது புனித நிசமென்றறிக. இனிப் பிரசாதமகாத்மியமாவது, அத்துவிதமாய்ப் பரமபதமாய்ச் சிற்கனமானபரமனுள்ளத்தில்மனனப்பட்டது பிரசாதமாகும். இது செனனமில்லாமல் மிகுத்தலமாய்ச் சிவன்தானே பிரசாதமாகையாலிதிற்பெரியதில்லை யிதுசத்திய மென்றறிக. இந்தயேழுதலமும் பிரசாதித்தலமென்றறிக.

இனிப்பிராணலிங்கத்தலமாவது, முன்சொன்ன தலங்களிற் கிரியை யோகமிதின்மேலான ஞானயோகம், உயிர் வாயுவின்குணம் தன்னிடத்திலில்லாமற் சத்தியவானுஞ் சத்தியமும்போல் சமரசமாய்ப் பிராணலிங்கத்தை யறிந்து தோன்றுகிற புறப்பொருளை மறந்து அனுபவத்தால் மனம் இலிங்கத்திலயித்து மனோமுத்தியாகிப் பின்னமில்லாதிருப்பதென்றறிக. இனிப்பிராணலிங்கார்ச்சனைத்தலமாவது, அபிஷேகம், பொறுமை, வஸ்திரம், சத்தியம், புட்பம், வயிராக்கியம், சாந்து, சமாதி, அட்சதை, அகந்தையறுதல், தூபம், சிரத்தை, தீபம், சத்தியஞானம், மணி, மௌனம், உக்கமெல்லாம்நைவெத்தியம்,விஷையார்ப்பிதம்,தாம்பூலம், இப்படிச் சிவபூசைசெய்வதென்றறிக. இனிச்சிவயோக சமாதித்தலமாவது, மனது அற்புதமாய் லயித்தவிடத்தில் விஷயங்கள்தோன்றாதது முன்னே சச்சிதானந்தமயந்தோற்றும். அஃதேதெனில், ஆறாதாரமுங்கடந்த சகஸ்திரகமலமீதே வெளியொளியான அகண்டபரத்தில் ஏகபாவங்கண்டு அனுமானமற்றதென்றறிக. இனிலிங்கநிசத்தலமாவது, சச்சிதானந்தரூபமாய்ச் சசி ரவி சிகி யிதின்பிரபையெல்லாம் தன்பிரபையால் விளங்குவதாய் பிண்டாண்டங்கள் இலயம்உற்பத்திக்கிடமாய்த் தத்துவங்களும் நீங்க வொன்றுமிலாததாய்த் தானேதானென்றறிவதென்றறிக. இனி அங்கலிங்கத்தலமாவது, நின்மலமாய்நேயமானலிங்கமே யங்கமாய், அங்கமே லிங்கமாய், இந்தலிங்கமே பலகிரணமாகிநன்மையாய்விளங்குமிந்த-ரு-தலமும்பிராணலிங்கத்தலமென்றறிக.

இனிச்சரணத்தலமாவது, பதிக்குப் பத்தினி பக்திசெய்து தேகசுகங்கொள்ளுவதுபோல பக்தியினால் சிவ சங்கஞ்செய்து பரானந்த மதிசயமான பரிணாமத்தால் தங்கோதகமிருக்க கானல்நீரைத் தாவுதல்போலத் தனுசுகத்தைநினையாதே பரானந்த நிலைவழுவாது சிவகதியுடையோ னென்றறிக. இனித் தாமத நிரசனத்தலமாவது, அரிஷடு வற்கத்தினால் மயங்கி மறப்பு நினைப்புமுள்ள மந்தன் குருவாலிருள்கெட்டு ஞானப்பிரகாசந் தோன்றுவதினால் சமை, தமை, சிரத்தை, பாவம், அறிவு, வயிராக்கிம், சத்தியம், பொறுமையுமுள்ள பக்தியினால் பரனிடத்தொன்றாகி மயலொழிவதென்றறிக. இனிநிர்த்தேசத்தலமாவது, மலை, மேரு, கடல் பாற்கடல், இப்

படி ஒவ்வொன்றி லொவ்வொன்று பெருமைபோலாகையால் எல்லாரிலும் குருப்பெரியவனவனால் இருணீங்கி அண்டப்பொருளை நிச்சயித்து ஒன்றாகா மற் பலசாத்திரம் படித்துக் குருவாலனுபாவமில்லாதவன் நிச்சலக்கியானமுடையனுதலென்றறிக. இனிச்சீலசம்பாதனமாவது, பதிபக்திசெய்து ஒன்றாய்ச்சுகிப்பாள்போலத் தன்னுயிரான சிவன் மகிழத் தன்னைக்கொடுத்தொன்றாகாமற்பொருள்மேலுற்ற வேசிபோல விகற்பத்துக்காலயமான சீலவிர்தநேயப்பொருளாய் மருவிச் சிவனை வழிபடுதல் துற்சீலம். ஞானத்தால் சிவனிடத்தொன்றாதல் சற்சீலமாம். இந்நாலும் சரணத்தலமென்றறிக.

இனி அயிக்கமாவது அவஞானத்தால் சிவனைப்பேதமாய்க் கண்டு சிவஞானத்தாலொன்றாய்ச் சிவோகமென்று தெளிந்து பதிபசுபாசமும் வேறில்லாதாய்த் தானே தானானசமரசநிலையென்றறிக. இனிச் சர்வாசர்ரசம்பத்துத்தலமாவது, மகாலிங்கவயிக்கியனானவ னுடலைக்கொண்டு நானாதொழிற்செய்வதெல்லாம் பரனது செய்தியேயாய்ச் சிவனிடத்தி லொன்றாகுதலால் இவனறியப்பட்ட விஷயமெல்லாஞ் சிவனுருவாய் தொழில் அர்ச்சனையாய், சிந்தனைகளே தியானமாய், உண்டல் நைவேத்தியமாய், உறங்கல் சமாதியாய், மனசங்கற்ப சூதகமற்ற தென்றறிக. இனிச் சர்வாசாரமும் அங்கத்திலயித்தவயிக்கனுக்கு ஏகபாசனத்தலமாவது, தனக்கும் பரத்துக்கும் பின்னமில்லாமற் பரனுந்தானும் பிரபஞ்சமும் அகண்டாகாரமாய் நிலையா யருந்தியகலாத நிலையென்றறிக. இனிச் சகபோசனத் தலமாவது, சச்சிதானந்தப் பிரமமுள்ளத்தில்கலந்து பெத்தமுத்தி யிரண்டு மில்லாமல் தானேதானாகிப் பிரகாசிக்கையாலுலகமெல்லாம் பிறிவில்லாமலருந்திச் சுத்தபரானந்தத்தால் தெவிட்டாம விருப்பதென்றறிக. இந்த நாலுதலமும்அத்துவிதானந்த வயிக்கியத்தலமென்றறிக.

ஆகப்பக்தனாதி அயிக்கனீறாகத்தலம், ௩௬. இது ஷடுத்தலத்தி லடங்கும் இந்த ஷடுத்தலமங்கங்கொண்ட அனுபவிகள்பரலிங்கஷடுத்தல மொன்றானவிதஞ்சொல்ல மிசிறங்களாலே-டுள-ஆனதென்றறிக.

இனித்தீட்சாகுருத்தலமாவது, சாத்திரப்படியே தீட்சைசெய்து அந்தப்பொருளைப்பெற்றதென்றறிக. இனிச்சிட்சாகுருதலமாவது, சிஷனைச் சத்தியவாசரணையில் நிற்கச்செய்து சிஷனது ஐயமில்லாமல் வினாவாலருளி அகண்டபூரணத்தி லிடைவிடாமல்நிற்கச்செய்வதென்றறிக. இனி ஞானகுருத்தலமாவது, முன்கன்மாற்கநிலை வழுவாதவனுக்குச் சச்சிதானந்தத்தை பிரத்தியக்ஷங்காட்டியதிலயிப்பித்துப் பிரமந்தானேயாய் நடிப்பதும் இந்தக் குருத்தலமூன்றும் ஏகமானலிங்கமாய் பக்தனங்கத்திலே யிஷ்டலிங்கமாவதென்றறிக. இதிற் கிரியாலிங்கத்தலமாவது, குருவருளால் நிசபக்தியால் அகண்டபூரணமாய் மயக்கமான அனிஷ்டங்கெடுத்து இஷ்டம், இதைநம்பி பரிவுடனே பூசிப்பதென்றறிக. இனிப்பாவலிங்கத் தலமாவது, இந்தக்கிரியாலிங்கத்தைமனதில் நிலைப்படப்பாவிக்கையாலுட லிந்திரியங் கரணமெல்லாம் லயமாக அந்தரங்கத்தில் பாவித்து அர்ச்சிப்ப தென்றறிக.

இனிப்பக்தன் ஞானலிங்கத்தலமாவது, உருவத்தில் கிரியையும் அருவத்தில்பாவமுமில்லாமல் ஞானபரிபூரணமானதென்றறிக. இனிப்பக்தன் சுயத்தலமாவது இஷ்டலிங்க, பாவலிங்க, ஞானலிங்கமூன்றையும் அங்கம், மனது அறிவினால்இலயித்திடச்செய்துநிஜந்தானுமெப்படிநிஜமிருந்ததோஅப்படி நிற்பதென்றறிக.

இனிப்பக்தசரத்தலமாவது,இப்படிவிளங்குவதுசுயசொரூபமென்றுஅற்சிப்பாரிடத்தும்அவரை நிந்திப்பாரிடத்தும் பிரியாப்பிரிய மில்லாமல்ஈஷணையைத்தீண்டாமல் பற்றறவேண்டி குருபக்திகொண்டு சரிப்பதென்றறிக. இனிப் பக்தன் பரத்தலமாவது, சுயசரமாய் சுவேச்சையால் சரிக்கிறதைச் சொருபமென்னுமற் பரமேயென்று சகலமுந் தன்மய மானதென்றறிக. இந்த - ௬ - ம் பக்தலிங்கத்தலமென்றறிக.

இனி மகேஸ்வரத்தலம், இதில் மகேசன் கிரியாகமத் தலமாவது, சற்கிரியைசெய்யும்போது கிரியைஞானமொன்றாய் தான்விடாமல் பங்கு மங்கனுஞ் சரிக்கும்போல அக்கினி விறகிற்றோன்றும்போல விலக்கமில்லாத கிரியைகளைச்செய்யிற் பரந்தோன்றுமென்றறிக. இனிமஹேசன் பாவகத்தலமாவது, நிருபாதிகக்கிரியைநிலையாகக்கொண்டவன் மனதுநின்மலமாய்ச்சிவோகமாய்ப் பாவனையாற் புழு வேட்டுவனும் போலச் சிவன்றானேயாய் பாவமில்லார் கண்ணில்லார்போ லென்றறிக. இனி மஹேஸ்வரன் மென்ஞானத்தலமாவது, பாவனை கற்பனை கன்மமிதுவெல்லாந் துக்கபவத்துக்கேதுவாஞ் சிவஞானமுள்ள நிசத்தைக்கண்டு துன்பம்போவதென்றறிக. இனி மஹேசன் சகாயத்தலமாவது, உடலையல்லாம லொன்றுஞ் செய்யக்கூடாது உடலாலே மோட்சமுண்டாம். படமில்லாக்கூடாரமும் வித்தில்லாத முளையும்போல உடலில்லாவிடில் ஆகாதென்றறிக. இனி மஹேசன் அகாயத்தலமாவது, தேகாதிமயமான இருள், மாயை, கன்மம் நீங்கி அகண்டத்தில் இலயித்து யேகமானயோகி தேகத்துட னிற்கினும் யானெனதில்லை தேகமழிந்தாலுந் தானழியாமையால் காயபோகமில்லையென்றறிக. இனி மஹேசன் பரகாயத்தலமாவது, சிவனேதனுவானசிவஞானத்தாற்றனைப்பட்ட உடலாதியெல்லாஞ் சிவமாய்ச் சச்சிதானந்தத் தனுவாய் பவவாதையுடல் நிற்கினும் போகினும் பராபரனாய் நிற்பனென்றறிக. இனித் தர்மாசாரத்தலமாவது, பரமுடலானசரணன் பிறர்பொருட்டாகச் சரணன் ஆசாரமுஞ் சமைதமைமுதலான குணமுந் தயாதர்மமுஞ் செபதபங்களுமுண்டா யுண்டானவர் பேரிற் சந்தோஷமுமா யிருப்பனென்றறிக. இனிப் பாவாசாரத்தலமாவது, முன்சொன்ன கருமாசாரமாய் நடந்ததெல்லாம் பரத்திலேயமைத்துப் பராற்பணஞ்செய்து ஞானசூரியனைப் பிரகாசிக்கச்செய்து சந்தியானம் விஷையாற்பிதமோமம் இப்படி நித்தியகருமஞ்செய்வதென்றறிக. இனி ஞானசாரத்தலமாவது, இப்படிப் போதித்த பரமாசாரியன் பவவினையைக்கெடுத்துச் சிவாத்துவிதமாய், யானெனதற்றுப் பிரகாசிப்ப தென்றறிக. இந்த -௬- ம் மஹேசன் இலிங்கத்தலமென்றறிக.

இனிப் பிரசாதித்தலமாவது, இதிற்பிரசாதிகாயாநுக்கிரகத்தலமாவது, சிவஞானத்தால் சீவனுடலைக் கலைப்பித்துப் பிரமமேவடிவாய தேகத்தைக் கொண்டு அதிற் ஶ்ரேயாமலிருப்பதென்றறிக. இனி யிந்திரியாநுக் கிரகத்த தலமாவது, எங்கே மனதுபற்றுதோ அங்கே இந்திரியம்போம், அதுபோலமனமானது சிவனிடத்தில் நிற்க விந்திரியமெல்லாஞ் சிவனிடத்திலேபோய்ச் சிவன் சொரூபமாய்த் தானேதானா யெழுவகைத்தீட்சையாகிநிற்கையாலென்றறிக. இனிப் பிராணநுக்கிரகத் தலமாவது, செனனமரணத் துயரைக்குருவாலே வாசனாதோஷநீக்கிப் பரலிங்கப்பிராணனு மொன்றாயப்பழமையுணர்ந்து சிவத்திற் கூடுதலில்லாமற் பரனே தானானயோகி பக்குவராயருள்புரிய நோக்குதலென்றறிக. இனிப்பிரசாதிகாயாற்பிதத்தலமாவது, ஆதிநடுவந்தமில்லாவிலிங்கார்ச்சனைசெய்து தேகாபிமானமுதல்நீங்கிநீங்கினதைச்சிவநைவேதனஞ்செய்து பிரத்தியிலு மிந்திரியவிஷயங்களையிஷ்டலிங்கார்பிதஞ்செய்து பிரசாதம் புசித்துச் சுத்தமாகிறதென்றறிக. இனிப்பிரசாதிகரணாற்பிதமாவது, மனமானது எல்லாக்கரணங்களுக்கு முதலாயிருக்குமாகையால் மனதுபற்றினதெல்லாமனலிங்கத்துக்கு அற்பித்துஉருசிப்பிரசாதங்கொள்வதென்றறிக. இனிப் பிரசாதித்தலமாவது, தனுமனபாவனையைநைவேதித்துச்சத்தியமாய்த்திரிகரணசமமாய்க் குருவருளையுஞ்சிவனையுமொன்றாகக்கொண்டு உணர்வுபரஞ் செகமொன்றுமில்லா திருக்கிறபரனே நீ என்று குருசிட்சிக்கப் பரனால்கரைத்துச் சிவஞானமானதென்றறிக. இனிப் பிரசாதிபாவாற்பிதமாவது, பாவனைமுத்திக்கேதுவாம் அதிற்றுற்பாவனைநீங்கிச்சற்பாவனைகொண்டு அதில் ஒன்றியருந்தயாவையுந் தன்மயமானபரிணமத்தையெய்தியதென்றறிக. இனிப் பிரசாதியின் சிசுருஷைத்தலமாவது சிவஞானக்கண்ணுள்ள சீஷன் குருவைச் சகுணமெது நிற்குணமெது காண்பிக்கிறவுலகெது இதுகளைக் கருதுகிறவுள்ளமெது அனுபாவவயிக்கமெது என்றுகேட்க அவனுக்கு ஐயமறப்போதித்து அகண்டத்தி லொன்றாக்குவதென்றறிக. இனிப் பிரசாதியின் செவியத்தலமாவது, இப்படிக்கேட்டுவிளங்கின சிசுருஷையால் ஐயந்தீர்ந்த சிவயோகியை யுலகமெல்லாஞ் சேவிக்கையாலென்றறிக. இந்த - கூ - ம் பிரசாதிலிங்கத்தலமென்றறிக.

இனிபிராணலிங்கத்தலம். இதிற் பிராணலிங்க சீவாத்மத்தலமாவது. பரிபூரணசின்மயஞானம் விளங்காது இருளால்மூடப்பட்டுப்படிகஞ்செம்பருத்தம்பூவோடுசேர்ந்து சிவப்பானதுபோல உடலோடுசேர்ந்து பிறப்பிலுழலுகிறசீவாத்மாவைப் பிரிந்துசீவனேசிவனுவதென்றறிக. இனிப்பிராணலிங்கியந்தராத்மத்தலமாவது, பட்சிவேறு கூடுவேறு போலஉயிர்வேறுதேகம் வேறாய் மேல்நாடுகையா லந்தரமாய் சீவன் சிவபாவமாதலாலென்றறிக. இனிப்பிராணலிங்கி பரமாத்மத்தலமாவது, இந்த அந்தராத்மா கரணமுதலானதிற்கூடாம லறிவுருவாய்த் துவிதானந்தமாய்ப்பந்தமானபிரகிருதி புருஷரூபமான பலசெகமுமாய்ஒடுங்கும்பதமாகிச் சிந்தையாதிகள்சேராதபரமாத்மாவைச்சேர்ந்து பயம் நீங்குவதென்றறிக. இனி பிராணலிங்கிநிர்த்தே

காகமத்தலமாவது, இப்படிப் பரமாத்மாவான சரணன் நிற்குணவறிவாய் விதிக்கநினைக்கப்போகாதாய் திரமான வயிக்கமாகையால் தேகதருமங்கள் சேராமற்புரையில்லாதிருப்பதென்றறிக. இனிபிராணலிங்கிநிர்ப்பாவாகமத் தலமாவது,பிரமம் நானென்பதில்லாமல் பரசொரூபமாயவன்மேற் பாவனையு மில்லாமற் போனதென்றறிக. இனிப் பிராணலிங்கி நட்டாகமத்தலமாவது, அறிபவன் ஞாதுரு இவனை விளக்குவது ஞானம் பிறித்தறியவேறில்லாத பிரமம் நேயம் இந்தத் திரிபுடியும் இலயமாய்போதமேதுமில்லையாமென்ற றிக. இனி ஆதிப் பிரசாதித்தலமாவது: ஆதியாய் எவைக்கு மத்துவிதமாய் மறைப்பொருளாய்ச் சிவப்பிரசங்நப் பிரசாதத்தை யிருட்பாவ மகன்று சச்சிதானந்தப் பிரமத்துக்காதியானதைப்பெற்றுச் செனனமறுத்ததென்ற றிக. இனிப் பிராணலிங்கி அந்தியபிரசாதிலிங்கத் தலமாவது, தந்திரமில் லாத பிரமாணமானசிவப்பிரகாசத்தாற் பரமானந்தமயமாகி அறிகிறதுமல்ல வாமென்றறிக. இனிப்பிராணலிங்கி செவியப்பிரசாததலமாவது,எந்தவகை யாலிவனுக்கு அனுபோகமாய் இகபரமில்லாமற்போமென்று நிஜமுத்தியளிக் கிற குருச் சேர்வையாலுண்டான பிரசாதஞ்சத்தியமாகையாற் சிற்பரஞ்சுக முத்தியானவனென்றறிக. இந்த கூ-ம். பிராணலிங்கத்தலமென்றறிக.

இனிச் சரணத்தலம். இதிற் றீட்சாபாதோதகத்தலமாவது, பாதமென் பதுபதம், பதமாவது பரமானந்த சமுத்திரோதகமென்கிற வாக்கியார்த்த த்தாலிதைச் சிவஞானமென்றும் பாதோகமென்றுஞ் சொல்லப்படும் இத ல்லாமல் அங்குஷ்டபாததீர்த்தமென்பது, சுழிமுனை பிரமநாடியாகையால் அது இரண்டுகவரா யிரண்டு பாதங்குஷ்டங்களைத்தொட்டிருக்கையாலுமிந் த மூன்று நாடியையும் கெங்கை, யமுனை, சரஸ்வதியென்று மூன்றுதீர்த் தமாய் யோகசாத்திரஞ் சொல்கையாலும் அசபை யிரண்டுவிரற் பிரம நாடியிலும் அங்கென்றுமுட்டிச் சங்கென்று ஏறுகையாலும் பாதந்தேகத் துக்காதாரமாகையாலும் அங்குஷ்டத்தில் ஊசிமுனைநிறுத்தித் தவஞ்செய் கையாலும், உன்பாதாரவிந்தமேகெதியென்கையாலும், சாகாக்காலும், வே காத்தலையு மென்கையாலும், திருவடிவிளக்கமென்கையாலும், நமஸ்காரங்க ளுக்கெல்லாம் பாதமேயிடமாகையாலும், பாததீர்த்தமுக்கிய மென்றறிக. இனிச் சரணன் சிட்சாபாதோதகத்தலமாவது, குருசிஷமயஞான சிஷ்டை யினாலே விளங்குகையால் ஆகமமாகிறகடலைகுருயூகமாகிறமத்தாற் பரிவோடு கடைய சிவஞான வமிர்தம்பருகி யறிவேவடிவான லிங்கமாயிருப்ப தென்ற றிக. இனிச் சரணஞான பாதோதகத்தலமாவது, ஞானத்தையளிக்கின் வன் ஞானகுரு, அவர் ஞானத்தையளிக்கையால் ஞானபாதோதக மென்று ம். இனிக்கிரியா நிஷ்பக்தித்தலமாவது, பரிபூரணப் பொருளானயோகி சித்திகளை விரும்பாமலிருப்பதென்றறிக. இனிச்சரணன்பாவநிஷ்பக்தித்தல மாவது விட்டு நீங்குதற்கரிதான சிவனிடத்தில் பாவனைசெய்வது கிளிஞ்சி லில் வெள்ளிதோன்றுவதுபோலும், இதல்லாமல் நல்லபாவனைசெய்கிற சிவ னருளும் அந்தப்பாவனை நீங்காமலிருந்தாற் சிவந்தோன்றும். முன்செய்

த பாவனைக்கு வேண்டிய வரங்கள்கொடுப்பார். பின்பாவனைக்கு மோட்சமென்றறிக. இனிச் சரணன் நிஷ்பக்தித்தலமாவது, ஞானத்தைக்கொண்டு ஞேயத்தையறியப்பட்டஞாதுருவினால்திரும்பத்தோன்றுகிறஞானத்தால் நானெனதற்றுச் சிற்கன சிவனேதானாகி ஞானநேயத்தி லழுந்தித் தானில்லாமற்போவான். அதெப்படி சொப்பனத்திற்கண்டது சாக்கிரத்தி லில்லாதுபோலப் பிரமநிலைபெற்றதென்றறிக. இனிச்சரணன் பிண்டாகாசத்தலமாவது, ஒளியாயறிவான விலிங்கஞ்சித்துருவாய்ச் சிவனுக்குக்கோயிலான தேகத்திற் பிரகாசிக்கினும் பரிபூரணமாம். அதெப்படியென்னில், கடாகாசமும், வாரியில்ாகாசமு மகாகாசமானதுபோலப் பிண்டாகாசத்தலமாயுடல்கொண்டு நடந்தசையாநின்றதென்றறிக. இனிச்சரணன் விந்தாகாசத்தலமாவது, பஞ்சபூதத்தி லொரு வாயு வெங்குமிருக்கினும் வேறாகி யந்தந்தத் தேகந்தோறுமாம்போலச் சித்குருவானது இவன் சிந்தையில் கண்ணாடியில் முகம்போலத்தோன்றி வானவர்கள் அறிவில்வேறாய்த்தோன்றியும் பூரணமானதென்றறிக. இனி மகதாகாசத்தலமாவது, கடோபாதி, மடோபாதியுற்ற ஆகாசம் பிரிந்ததுபோலப்பிரியாதுநின்றாற்போலப் பிண்டாண்டத்திலுற்ற லிங்காங்கவுபாதிப் பிரமம் பிரிந்தும் பிரியாதுபோல வெளியாய் நின்றதென்றறிக. இனிக் கிரியாப்பிரகாசத்தலமாவது, உன்னலரிதாய்ச் சச்சிதானந்த மயமாய்க் காணங்கூடாத வுணர்விற்சரணன் இலயித்துத் தானில்லாமற் போகையால் சிவனிடத்திற் பலகிரியைகளாகும். ஆகாசத்திற் கந்தர்வநகரங்கிரியைபலவிதமாகையாலென்றறிக. இனிப்பாவப் பிரகாசத்தலமாவது, உணர்வானமர்மத்தில் உலோகாதிலோகமுங் காணமுந் தோன்றும் அதெப்படியென்னில், திரை நுரை மொக்குள்கடலிற் றோன்றுவது போலிருப்பதென்றறிக. இனி ஞானப்பிரகாசத்தலமாவது, உலகவுபாதிக ளில்லாதாய்ச்சொல்லப்போகாதவுணர்வாய் பழமைகாட்டுவது சிவஞானம். இதுவுஞ் சிவனிற்றோன்றி நிகழ்வதென்றறிக. இப்படிச்சொல்லப்பட்டத்தலம் ௰உ. சரணத்தலஞ் சுத்தசைதன்னியனென்றறிக. ஆ தலம். ௬.

இனி அயிக்கியத்தலமாவது, அயிக்கனிற்சுவிகிர்தப்பிரகாசத் தலமாவது, ஆதியந்தமுக்கிய லக்ஷணமுதலானதில்லாதாய் போதமான சிவப்பிரசந்நப்பிரசாதத்தாற் புதியசிதானந்த பரிணமத்தைப்போந்து பூதாதிமுதலானதில் வளர்ந்தொன்றாய்ப் பிரசாதமயமானதிதுவே பேதமெல்லாமகன்று நிலைபெற்ற தென்றறிக. இனி அயிக்கன் சிட்டோதனத் தலமாவது பிரசாதமயமான சிவயோகி யிருளால் அப்பிரமாணப் பிறமேயமாதுருவான விஞ்ஞேதமுடைத்தான பிரமந்தானாகிப் பருதியொளியெல்லாவற்றையுங் கிரிகிப்பதுபோலவுலகமெல்லாவற்றையுமுணர்வாலே கிரிகித்துத்தானேதிரமாய் நின்றதென்றறிக. இனிச் சராசரத்தலமாவது, செகவுருவாய்மாயைவிரிந்த பிண்டாண்டங்களையெல்லாங்கிரிகித்துச் சின்மயச்சிவன்றானே சராசரமாகிநிற்கும். பகுதியில்லாமல் நின்றதென்றறிக. அயிக்கன் பாண்டத்தலமாவது, மலவிருளுக்கொளியாகச் சீவன்றனக்குச்சிவத்தை மன்னிவிக்கும் உணர்வேசிற்பனாயான பாண்டத்திசையில் உலகமுண்டாய் நின்று லயிக்க

வதில்சலனமொன்றுமில்லையாய்த் தன்னிசத்திற்றுனிருப்பதென்றறிக.இனி அயிக்கன்பாசனத்தலமாவது, இரவியுங் கிரணமும் பின்னமில்லாததுபோலச் சிவனுக்குத்தனுகரணமான அருளானது பலசெகபீசமாகிச் சிவயோகி நின்று பிரகாசிக்குமிடமாகையால் விரிவானவுலகு உயிருக்காதாரமென்றறிக. இனி அயிக்கன் அங்கலேபனத்தலமாவது, அத்துவிதமாய் நிசவுருவாகியதால் விதிநிஷேதமே வாதநிலையானசித்துருவென்றறிக. இனி அயிக்கன் சுபாரஞ்சத்தலமாவது, உணர்வான சிவனிலயமாய்த் தானேதானுகி நீ நானென்றறியாமல் முன்னே வேந்தனும் பின்னே பெத்தனும் அல்ல, ஞானி அஞ்ஞானி சுஞ்ஞானியுமல்லவாய் பரமசூனிய லிங்கமானதென்றறிக. இனி அயிக்கன்பாவாபாவலயத்தலமாவது, உவமையில்லாமல் நின்ற சிவனிற்கலந்தொன்றாய்ச்சிவோகஞ் சிந்தை நிட்பாவமில்லாமல் நிற்குணப்பிரமமாய் நின்றதென்றறிக, இனி அயிக்கன் ஞானசூனியத்தலமாவது, நீர் நீரிலும் அனலனலிலுஞ் சேர்ந்ததுபோலச் சித்தான அங்கமும் பூரணநிற்குண சூனியலிங்கத்திலயித்து ஏகமாய்த்திரிபுடியுபையஸ்தலம் சங்கம், யோகம், ஷடுஸ்தலசத்தம், நிற்சத்தமுதலான சர்வமுஞ் சூனியமாய்நின்றது சூனியத்தலமென்றறிக. இந்த கூ. அங்கலிங்கத்தலமாம். இப்படியிந்த நூற்றொருதலத்திலும் நின்று அனுபவித்து ஏறிவந்து நிற்சூனிய லிங்கத்தலத்துக்குவந்தது மோட்சமென்றறிக.

சொருபலட்சணம்-தடத்தலட்சணம்- பந்தலட்சணம் - மோட்சலட்சணம் இந்நான்கு முடிந்ததென்றறிக.

## வீரசைவதீட்சாவிதிவிபரம்.

வீரசைவமாவது, வீரசாமானியம்-வீரவிசேஷம்-வீரநிராபாரி யென்று மூன்றுவிதமாம். இதில் வீரசாமானியனுக்குக் குருவானவர் அஸ்தமஸ்தசையோகத்தால் கலசஸ்தாபிய விபூதிமந்திரங்களால் தீட்சைசெய்து இலிங்கந்தரித்து ஏககாலந் திரிகால வற்சகனுய்க் குருலிங்கபசித விசுவாசபரனுய் எந்நேரமும் விபூதி ருத்திராட்ச லிங்கமோகியானவன் சாமானியனென்றறிக. இனி வீரவிசேஷனுவது, சாதனசதுட்டயசம்பன்னனுய்ச் சுபகாலதேசாதிகளும் அறிந்தவனுய் இடம்பொருளேவல் மூன்றுமுள்ளவனுய் சரமப்பிரசாத சித்தனுய்ச் சகல வியவகார சகலவிஷையங்களிலும் சகலசற்குணமுடையவனுயுள்ள குருவைச்சேர்ந்து இந்தக்குருவனுமதியால் பக்குவதேகியான சீஷனுக்குத் தீட்சாக்கிரமஞ்செய்யும்படி யினித்தீட்சாமண்டபங் கட்டுமிடம் ஒரு ஆள் புருஷந்தோண்டி அந்தக் குழியைத்தகனஞ் செய்து அதிலிருக்கிற இப்பி ஓடுகள்சோதித்து அதிலே மணலெடுத்துவந்து சோதித்துத் துத்துக் கெட்டித்து மேல்பூமி மட்டஞ்செய்து இப்படி ஆறுகாரியமுஞ்செய்து அதின்மேல் மணியாசஞ்செய்து இதின்மேல் வித்தானுசாரமாக நவரத்நாதிகள் சந்தனுதிகள் வேணுவாதிகள் கால்கள்நாட்டி விசித்திரமாகச் சப்பரங்கட்டி, அதை பீரணே, யாரணே, தளிர்தோரண, குசும, சர, விசர, பாராவளி, தூபதூமங், தீபம் இதுகள்முதலாகத்தீட்சாவிதிமண்டபஞ் சிங்காரி

த்து அந்தச்சப்பரத்துள்ளே ஒரு கோசென்மமாத்திரஞ் சவுக்கமாக கோமயஞ்கோசலம் பால் தயிர் நெய் கோரோசனை யிதுகளாலேமெழுகிப்பின்பு யவளம் முத்து வெள்ளைக்கல், பொன், வெள்ளையப்பிறகம், அரிசி இதுகளால் சூரணஞ்செய்து இதில் நடு அஷ்டதள கமலமுஞ் சுற்றுஞ் சங்கம், சக்கரம், சூலம், டமருகம், பரசு, கண்டை, சத்திரசாமரை, ரிஷபபாதம் இதுமுதலான விசித்திரவர்ணங்களெழுதி நிரப்பி யிதின்மேல் எள்ளு, சீரகம், கோதும்பை, அரிசி, உளுந்து இதுகள் பரப்பிக்கேவலம் அரிசியாவது ௩௨. அங்குலச்சதுரமும் ௪. அங்குல உயரமும் பரப்பி அப்போதவ்விடத்தில் ஆசிரியன்வந்து சிஷனையழைத்துச் சம்பிரதாயமான ரேவணுசித்த மருளசித்த அகோராமய பண்டிதாராத்தியராகிறவர்கள் வர்க்கத்திலே சகலகுணங்களுமுள்ளஆசிரியனை நாலுரித்துக்களைச் சர்வாலங்காரத்தோடு இருக்கச் சொல்லிச் சரணஞ்செய்துக்கொண்டுவாவென்று அவனையனுப்பிப் பின்பு தாமிருந்துகொண்டு கலசத்திலப்பியஞ்செய்து பஞ்சலோகக் கலசங்களில் நூலைச்சுற்றிச்சலம்பூரித்துக் கிழக்குத்தெற்கு மேற்கு வடக்கு நடுவுகளில்வைத்து வேறுவேறாய் ஐந்துக்கும் பஞ்சவர்னவஸ்திரந்தரித்து, நவசந்துக்களையும் ஆவரணமாகச்சுற்றி, அதில் சுவர்ணுதிரத்தினுதிகள்போட்டு, மாவிலை, அறுகம்புல், தேங்காய்ப்பாளை, வெற்றிலை, இலைப்பூமுதலான திகளாலே கலசங்களை அலங்கரித்துப் பின்பு நாலுதிக்குக் கலசங்களையுங் கிரமமாகச்சுத்தியோசாதமுதலாகப் பஞ்சமுகத்தையுந் தியானித்துப் பின்பு கலச மத்தியத்திலே பரசிவசொரூபமாய் மேலே அக்கிருசனத்தனுய்க்கிழக்குமுகமாய்நடுக்கலசகர்த்தனுய் மற்றநாலுகலசத்துக்கும்முன் சொல்லிவரச்சொன்ன நாலுபேரையு மழைத்துவரச்சொல்லிஅர்க்கியபாத்திய ஆசமனங்கொடுத்து நாலுதிக்கிலும் நாலுகலசங்களை வைத்து பின்பு குருவானுஞையால் முன்னுள் இராத்திரி க்ஷீராகாரியானசிஷன் உதையகாலத்திலெழுந்து சரீரசுத்தி முதலானதெல்லாஞ்செய்துமுடித்து வெள்ளைப்பிடவை விபூதியுத்தூளனம் உருத்திராட்சந் திரிபுண்டரதாரணம் இதுகள் தரித்துச் சுவர்ணுபரணலங்கிர்தனுய் ஆசிரியன் சமீபத்தில்வந்து அஷ்டமந்திர பூர்வமாகச்சுவர்னபுட்பாதிகளால் சாஷ்டாங்கஞ்செய்து வித்தானுசாரங் குருபூசையுஞ்செய்து நாலுரித்துக்களையும் அர்ச்சித்துப் பக்த மஹேஸ்வர சமுகங்களில் விபூதிகளையும்வைத்து அவர்களனுக்கிரகமும் செய்துக்கொண்டு சிஷன் குருவிருக்கிற சவுக்கமத்தியத்தில் வந்து திரும்ப அஷ்டாங்கஞ் சமர்ப்பித்துச் சரீரம்அர்த்தம் பிராணுதிகளுஞ் சமற்பித்துச் சிஷன் வடக்குமுகமாகக்குருவுக்குவலப்பாரிசத்திற் பத்மாசனத்திலிருந்து சுத்தனுய் நரசாக்கிற ஊர்த்தத்திருஷ்டி யுள்ளவனுய் அஞ்சலியஸ்தனுய் சிவத்தியான ரூடனுயிருக்கிற சிஷனுக்குத் தீட்சைசெய்யுங் கிரமத்தை வெகுசங்க்ஷேபமாகச்சொல்வது. பின்பு தியானரூடனுன சிஷன் பக்தமஹேஸ்வர சமுகமாய் ஆசீர்வாதங்கொண்டு மங்கலவாத்தியமுழங்க நாலுகலசத்தில்நாலுரித்துக்களாலே அவரவர்கலசோதகத்தைத் தூருவாங்குரத்தால் சிஷன்சிரசின்மேல் புரோட்சித்துப் பின்பு அந்தக் கலசங்களைமுன்போல்ஸ்தாபித்துபின்னு முன்போல் தூருவாங்குரத்தாலே சிஷன் சிரசின்மேல் மூன்றுத

ரம் கமருஷ்ணஸ்நானஞ்செய்வித்துச் சீஷன் லலாடாதி ஸ்தானங்களிலே சிவமந்திரத்தால் விபூதிதரித்து விதியாகிற தூலலிகிதந்துடைத்துக் கிரியசு த்தி ஆத்மசுத்திசெய்து கலாநியாச மந்திரத்தால் நியாசஞ்செய்து மும்மலங் களையுங் களைந்து சுத்தாத்மாவாகச் செய்து குருவானவர் பின்பு தமதுவல க்கரத்தைக் கெந்தபுட்பாதி அட்சதைகளை சிவமந்திரத்தால் அர்ச்சித்துத் தேஜோமயமாகப் பாவித்து அந்த அஸ்தத்தைச் சீஷன் சிரசின்மேல் மூலம ந்திரத்தால்வைத்து அவன் சிரசிலிருக்கிற தேஜோமயமான கிரியாசத்தியாத் மக விந்துவாகிறபீடமுஞ் சிற்சத்திகூடி லிங்கமயமுமாயிருக்கிற பிரமத்தைக் குருநாதன் வலக்கையில்வாங்கி இழுத்துக்கொண்டு பிரதிஷ்டித்து அந்த அஸ்தத்திலே தாபனம்செய்து இலிங்கத்தைத் தமது மானத பூசைசெய்து பாவித்துத் தாம் நமஸ்கரித்து எப்போது மிங்கே சதாசந்நிதனாய் இருக்க வேணுமென்று விண்ணப்பஞ் செய்துக்கொண்டு இப்படிக் குருவானவர், சீஷன் துவாதசாங்குலப் பிரமாணமானதற்கு அப்பாலாயிருக்கிற களையா கிறசிவனைத் தமதுவலக்கரத்தில் வாங்கி யதில் இருக்கப்பாவித்து நிறுத்து வது வேதாதிதீட்சையென்றறிக.

மந்திராத்மிக தீட்சைசெய்வது.

சீஷன் கரணங்களிலே மௌனப் பிரணவபஞ்சாட்சரியை இருஷிச் சந்தணதேவாதிகளுந் தெரிவித்து ஆறந்தாதீதமான பொருளுஞ் சடாட்சரியி லிசைவித்துஷடுஸ்தலப் பிரமமானமந்திரோபதேசம்செய்வது. இனிக்கிரியா த்மிக தீட்சையாவது, முன்பு சீஷன் மத்தகத்தில் ஞானக்கிரியாத்ம சொரூ பமாய்சோதிமயமான இலிங்கத்தைக் குருவானவர்தன்மனோபாவனுதிஷ்டிக ளாலே தியானத்திலிருக்கிற சோதி இலிங்கத்தையாவாகனம் செய்யும்படி சுவர்ணுதிசிலைகளில் இரத்திநாதி சிலைகளில் பிரதிஷ்டிக்கவேண்டிச் சிலால ட்சணம்பார்ப்பது இலிங்கநாதம் பெரிதாகிற்கடுகச்சாவு, சத்திபீடம்பெரிதா கில் தரித்திரம், இரண்டுஞ் சமனாகிற்போகமோட்ச.மென்றறிந்து அதன் பின்பு இலிங்கநாதத்தைச்சூழச் சூத்திரம்போட்டு அதைக்கோமுகைநுனிக் கும் இலிங்கமேலுக்கும்பிடித்துச் சரியாகக்கண்டு அதைக்கொண்டு கீழ்பீட த்தையுமளந்து சரிகண்டுபின்பு அடிபீடத்துக்கும் இலிங்க நுனிக்குஞ் சரிக ண்டு இந்தச்சூத்திரத்திற்பாதி கோமுகஞ்சரிகண்டு இப்படிப் பஞ்ச சூத்திர முஞ்சரிகண்டுசிலைகளால் பீடமும் இலிங்கமுமொன்றாகச்செய்து காந்திமய மான இலிங்கங்களைத் தீர்த்தபூரித கலசம்-க. பஞ்சகௌவியகலசம்-க. பசித மிசிரோதககலசம்-க. இந்த மூன்று கும்பங்களிலும் பூரிதமான கலசஸ்தாபி யங்களில் கிரமமாக மூன்றுராத்திரிகளும் நூற்றெட்டுப் பஞ்சாட்சரமுஞ்செ பித்து அதுகளிற் பிரதிஷ்டித்துமற்றநாலாநாள் ஆசாரியமூர்த்தியிருக்கிற க லசத்துக்குக் கிழக்காகப் பூமிசுத்திசெய்து அஷ்டதள கமலஞ்செய்து ஏழு முழச்சீலைகொண்டுவந் ததிலொருமுழச்சீலையால் பிரமத்தைமூடியதின்மேற் சாமை ஒருஅங்குல உயரம்போட்டு இதின்மேல் பத்மமெழுதியிதை ஒருமுழ ச்சீலையால்மூடியிதின்மேலெள்ளுபோட்டு இதின்மேற்பத்மமெழுதி முழச் சீ

இலைமூடி இதின்மேற் கோதும்பையரிசிபோட்டு இதின்மேற் பத்மமெழுதி இதைமுழுச்சீலையால் மூடி இதின்மேல் நெல்லுபோட்டு இதிற்கமலமெழுதி முழுச்சீலைமூடி இதின்மேலரிசிபோட்டு இதின்மேற் பத்மமெழுதி இதின்மேல் முழுச்சீலையால்மூடி இதின்மேல் துவரைபோட்டு இதில்முழுச்சீலைமூடி இதின்மேல் சூதபத்திரி, வில்வம், ஆமலகம், குசை, அபரமாற்கம், இந்தப் பஞ்சப்பத்திரிகளும்போட்டு இதின்மேல் முழுச்சீலைமூடி யிப்படி ஏழுநிலை ஆதாரமாக இதுகளைப்பாவித்துப் பின்பு இந்த ஆதாரத்தின்மேல் இலிங்கத்தை இலிங்ககோமுகையுத்தரமாயிருக்கச்செய்து சீர்காரப்பிராணாயாமத்தால் மூலமந்திரமாயிரஞ்செபித்து அந்தவிலிங்கத்துக்கு "மாத்துறுகா நியாசங்கலா நியாசமந்திர நியா,, சாதிகளிற் பிராணப் பிரதிஷ்டைசெய்து பின்பு கலசோதகத்தாலே ஸ்நானஞ்செய்வித்துப்பரிசுத்தமாயிருக்கிற இலிங்கத்தை அவ்விடத்தைவிட்டுத் தன்னிடதுகையால் ஆசிரியனை எழுந்தருளச்செய்து அஷ்டவிதாற்சனை செய்து பிறகு முன்னேதன்மனோதிஷ்டியில்தியானமாயிருக்கிறசோதிமய இலிங்கத்தை யிதிலே பிரதிஷ்டைசெய்து பின்பு சிஷனதுவாமஅஸ்தமாகிற பீடத்துள்ளே கோமுகவாமபாகமாக "அயமேஹஸ்தபஹவான்,,என்கிறசுருதியால் ஸ்தாபிப்பதேகிரியாதீட்சையென்பது.

இப்படி ஏழாதாரத்தின்மேல்வைத்துப் பிரதிஷ்டை பூசைசெய்து பின்பு ஆசிரியன் தன்னிடதுகையில்வைத்துப்பூசைசெய்து சிஷனஸ்தத்தில் கொடுத்தபிறகு ௨௧. வித தீட்சைசெய்வது இதின்பெயராவன ஆஞ்ஞாதீட்சை, உவமாதீட்சை, சுவத்திகாதீட்சை, கலசாபிஷேகதீட்சை, விபூதிப்பட்டதீட்சை, இலிங்காயித்ததீட்சை, இலிங்கசுவாயித்தியதீட்சை, தேகாபிமானதீட்சைஆ. எ. இனிச்சமையதீட்சை, நிஸசம்சாரதீட்சை,நிர்வாணதீட்சை, தத்துவதீட்சை,அத்தியாத்மிகதீட்சை, அனுக்கிரகதீட்சை,சத்தியசுத்தவித்தியாதீட்சை, இப்படியான பிராணாபிமானதீட்சை. எ. இனி ஏகாக்கிரசித்ததீட்சை, திடவிர்ததீட்சை, பஞ்சேந்திரியாற்பணதீட்சை,அகிசாதிதீட்சை, இலிங்கநிஜகாதீட்சை, மனோலயதீட்சை, சத்தியோமுத்திதீட்சை, பாவாபிமானதீட்சை. எ. ஆ மூன்றுவிததீட்சையும் ௨௧. முன்புசொன்னபடி இலிங்கதாரணமானபிறகுசிஷனையழைத்துஉன்கையிற்கொடுத்த விலிங்கந்தான்பிராணலிங்கம், தத்துவாதீதமானபரவஸ்து, இதுதானேநிமிஷார்த்தமாகிலும் உன்தேகத்தைவிடாமலிருப்பாய்திரிகாலமும்பூசிப்பாய் இலிங்காற்பிதமல்லாதுமற்றொன்றுங்கொள்ளாமலிருப்பாய்சகலபோகமோட்சங்களெல்லா முன்கையில் வந்ததென்று நம்பு சர்வகிலேசமும்விடுவாய். இனிச் சத்தபாதகமாவது, வவ்விபாகம், வவ்விசங்கம், அன்னியதெய்வம், பாரத்துவாரம், களவு,கொலை, கள்ளுஆ எ-ம். பஞ்சசூதகமும்விடுவாய் என்றிப்படிச்சொல்லிக்குருவானவர் தம்மிட ஆஞ்ஞையால் நிறுத்துவது ஆஞ்ஞாதீட்சையாம்.

இனிப் புராதனசமையாசாரத்துக்கேற்றபடி அவர்கள் நடந்தபடியும் புசிப்பது உவமாதீட்சை இனிச்சுவத்திகாதீட்சை, குருபஞ்சகலசோதகங்களாலே சிஷனைசந்தானஞ்செய்விப்பது கலசாபிஷேகதீட்சை,ஆகமார்த்தப்

பிரமாணமான தானங்களில் அந்தந்தமந்திரங்களால் விபூதிதரிப்பது விபூதிப் பட்டதீட்சை, குருவானவர் தமது கையிலிருக்கிற விலிங்கத்தைச் சீஷன் சிரசில் தரிப்பது விலிங்கசுவாத்தியதீட்சை, இப்படிச் சாத்திரப்பிரகாரத்தில் இலிங்கசம்பந்தியாகிறதே விசேஷவீரசைவமென்றறிக. இந்த ஏழுதீட்சை யுந் தேகதீட்சையென்றறிக. இப்படியானபிறகு பதினெட்டுஜாதியுங்களை ந்து சரணன்குலமாவதே சமயதீட்சை. இனி தனுகரணபுவனபோக சம் சார மநித்தியமென்றும் அஃதெல்லாம்விட்டுச் சிவபூசாசம்சாரமே கொள்வ து நிஜசம்சாரதீட்சை. திரிமலபந்தத்தில்மனது பற்று மில்லையென்று தீருகிறதே நிர்வாணதீட்சை, பஞ்சவிங்சதி தத்துவமுந் தற்பததொம்பதமு ந் தெளிந்து விலிங்காங்க சம்பந்தமாகத் தெளிகின்றதே சுபகரமா ன தத்துவதீட்சை. இனி யிலிங்கமுமங்கமுஞ்சுயம்பு விலிங்கமேயாய் அது வே நீயென்று தெளிகிறதே அத்தியாத்மக தீட்சை. பரசிவன் தானே ஆறுவிலிங்கமாய் அஷ்டாங்கமாயுமிருப்பனென்றறிக. இஃதே அனுக்கிர கதீட்சை. இனிச்சச்சிதானந்தப் பிரமமார்க்கமே சாங்கமாகத் தானே தானுக்குவது சத்தியசுத்த வித்தியாதீட்சை. இந்தவேழும் பிராணதீட்சை. இனி கரத்திலிருக்கிற இஷ்டலிங்க மல்லாமல் வேறுமொருதெய்வமுண்டெ ன்னுமலிருக்கிறது. ஏகாக்கிறதீட்சை. தான்பிடித்த விரதநியமங்களைச் சரீர பரியந்தம்விடாமலிருப்பதேதிடவிரததீட்சை. இனிசரணன் சதியிலிங்கம்பதி யாக நிசகாயகரணபாவங்களால் சாக்கிர சொற்பன சுழுத்திகளிலுஞ் சர்வ காலமுமிஷ்டப்பிராணபாவங்களுக்கர்ப்பிப்பது பஞ்சேந்திரியாற்பணதீட்சை. அபராதஞ்செய்யாத சீவன்களையு மற்றச்சீவன்களையும் கொல்லாதது பரம பாவசரணலட்சணம். இதைத்தவிர்ப்பது அகிம்ஸாதீட்சை. ஆதிமத்தியாந் தமில்லாத சிவன்தானென்பது இலிங்கநிசகாதீட்சை. அந்தவிலிங்கத்தில் பா வம் இலயமாய் மனந்திரும்பாமலிருக்கிறது சமாதி மனோலயதீட்சை. இதுக ளையெல்லாமேன்பாடாக வறிந்துயாதொரு நிஜமான பொருளுண்டோ அஃ தே சுயம்பு விலிங்கமாய் பார்த்தவிடமெல்லாம் இலிங்கமயமாவது சத்தியோ முத்திதீட்சை. இந்தவேழும் பாவதீட்சையென்றறிக.

இந்தவிசேஷ வீரசைவன் இப்படிதீட்சையால் பரிசுத்தனுனும்
மந்திரநியாசாதி முதற் சகலதந்திரங்களுமுடையவனுய்
அர்ச்சிக்கவேண்டும் அதிற்கேவலஞ் சுருங்கச்
சொல்வது அர்ச்சனைசெய்யும்விதம்.

"ஓம்ஹ்ஹாஅனந்தசக்திதாகேஜ்யோதிரூபாயசிவாஸ்தராயபட்டு,,என்று மனோசுத்திசெய்துபின்பு"ஆபோர்வாயுத்யமசக்கியம்,, என்கிறவாக்கிய மெ ல்லாஞ்செபித்து அந்தஜலத்திற்கரசரணமுகம் பிறட்சாணனஞ்செய்து பின்பு சர்வசூரியநமஃ,,என்றுபூசாக்கிரகத்திற்புகுவதுபின்பு "ஓம்ஹ்ரம் பிருதிவ்யாத் மனேநமஃஹ நிவ்ருத்திகலாயநமஹஃ,,என்றிருக்கிறதானங்களைச்சுத்திசெய்து பின்புதிரியம்பகமந்திரோர்ச்சாரணத்தாலே வடக்குக்கிழக்காக சுகாசனத்தில்

# தத்துவநிஜாநுபோகசாரம்.

"ஓம்ஈம்ஈசானாயநமா,, என்று வலதுகைவிரல் மத்திமை அநாமிகை அங்குஷ்டமிந்தமூன்றுவிரலால் விபூதியாதாரத்தில் விபூதியையெடுத்து இடதுகை அங்குஷ்ட விரலில் யகாராதி நகாராந்தமான பஞ்சாட்சரமுச்சரித்து அதில் வைத்துப் "பஸ்மாயநம,, என்று விபூதிக்கு நமஸ்கரித்து வலதுகையில் மூடி வலதுடையின்மேல்வைத்து "ஓம்நமசிவாயநம,, என்று-௰-தரம் மந்திரித்து அக்கினி நிதி முதலானதாகிலும் மந்திரித்து "மானஸ்தோகித,, மந்திரத்தாலக்கையையெடுத்து விபூதிதரிப்பது "ஓம்ஹ்ராம்யம்ஈசானாயநம,, என்று சிரசில் "ஓம்ஹ்ராம்வாமதற்புருஷாயநம,, என்று முகத்தில் "ஓம்ஹ்ராம்சிம்அகோராயநம,, என்று இர்தயத்தில் "ஓம் ஹ்ராம் மம்வாமதேவாயநம,, என்றுகுய்யத்தில் "ஓம்ஹ்ராம்நம் சத்தியோசாதாயநம,, என்றுபாதத்தில் இப்படிச்சொல்லி யந்தந்தமந்திரத்தால்தரிப்பது. பின்பு சர்வாங்கத்திலுஞ் சம்புரோட்சிப்பது பின்பு விபூதியைக்கையிலெடுத்து மூலமந்திரத்தில் அக்கினிநிதிமுதல்மந்திரம்-௰-ம்-உச்சரித்து "ஓம்ஹ்ரோம்ஈசானாயநம,, என்று சிரசில், ரு. தரம் "ஓம்ஹ்ரோம் தற்புருஷாயநம,, என்று முகத்தில். ௪. தரம் "ஓம்ஹ்ரம் அகோராய,, என்று இருதயத்தில். அ. தரம். "ஓம்ஹ்ராம் வாமதேவாய,, என்று குய்யத்தில். ௰௩. தரம் "ஓம்ஹ்ராம்ஹ்ரோம் சத்தியோசாதாய,, என்று சர்வாங்கத்தில். ... தரம். இப்படி அந்தந்த தானத்திற்றானுஞ்செய்வது. பின்னுஞ்சிலயிசிறமான விபூதிதிரிபுண்டரமாக முன்சொன்னசிரசு முதலான தானங்கள். ௰௧. ௰௬. ௩௬. இதுகளில் தரிக்கும்போது திரியாயுஷமந்திரம், திரியம்பகமந்திரம், இதுகளாலே திரிபுண்டரந்தரிப்பது.

இனிக் கலாநியாசம் பாணிமந்திரம் ஷடாங்கநியாசம்பிரமநியாசம் இது முதலானது பூசாவிதிகளிலுள்ளபடி செய்யவென்றறிக.

விபூதி முடிந்தபிறகு ருத்திராட்சம் தரிப்பது.

விவரப்படி சிகையில் ஏகமுகமணி. ௧. சிரசில், உ. முகம். ௩. முகம். ௰. முகம் இந்தமூன்றுவிதமணியுந்தரிக்கலாம். இதிலேதாகிலும் ௩. மணி தரிக்கவும். மூர்த்தினியில். ௰௧. முகமணி. ௩௬. காதில். ௭. முகமணி. உ. சிரசில். உ. முகமணி. ௩௨. மார்பில். ௪. முகமணி. ௫௰. பாகுத்துவயங்களில். ௰௩ முகமணி. ௰௬. மணிக்கட்டில். ௬ முகமணி. ௰உ. எஞ்ஞோபவீதத்துக்கு. ௰௪. முகமணி. ௱அ. உற்பந்தனத்துக்கு எந்தமணியாகிலும். ௫௪. அந்தந்ததானங்களில் அந்தந்த மந்திரங்களால் தரிப்பித்து இந்தமுகங்கள்கிரமமாக கிடையாவிட்டால் எந்தமுகமணியாகிலும் தரிப்பது. இப்படி ஏகமுகமுதல் ௰௪, முகமந்தமாய் இதினுடைய முகதேவதைகளுக்கு இதினட்சரபேதங்களுமறிவது. இனிவரிசை சிகை. ௧ சிரசு. ௧. மூர்த்தினி. ௧. செவி. உ. கழுத்து. ௧. மார்பு. ௧. தோளடி. ௧. கை. உ. மணிக்கட்டு. உ. கட்கம். ௧. வயிறு. இத் தானங்களிற்றரிப்பது. பின்பு. ௰உ. மந்திரஞ்சொல்லிப்புட்பாஞ்சலிசெய்து உருத்திராட்சந் தரித்துக்கொண்டபிறகு இலிங்கத்துக்குப் பஞ்ச

கௌவியம் அபிஷேகஞ்செய்யவும். அப்போது ............ ரசிசி ல் முகமும் பாரிசத்திற்புசமும் இலிங்கத்தின்கீழே பீடமும் இப்படிப்ப பாவித்து "பத்மம் ஆசமனம் அற்கியங்,, கொடுத்துச்"சத்தியோசாதம் வா மம் அகோரம்,, இந்தமுகங்களுக்குங்கொடுத்துப் பின்பு அந்த லிங்கத்தில் ஹ்ரம்சத்தியோசா தாயஓம்நமஃகோமூத்திரஞ்சுவாஹா,ஓம்ஹ்ரீம்வாமதேவாய நமா, கோமயஞ்சுவாஹா,ஓம்ஹ்ம், அகோரஓம்நமா, பால்சுவாஹா, ஹ்ம்ரோம் தற்புருஷாநமா. தயிர்சுவாஹா,ஓம்ஹ்ரோம், ஈசானாயநமா,நெய்சுவாஹா, இ ப்படிப்பஞ்சகௌவியம்அபிஷேகஞ்செய்வது பின்புகந்தவுதகாதிமந்திரமுமா த்து றுகாதியாசக்தூபாதி மந்திரம் இப்படிக்கொத்த சேட்டசோபசாரங்களா லும் அர்ச்சிக்கிறவன் வீரவிசேஷன் இவனைவீரசைவபக்தனாகிறவன் இவன டக்குமார்க்கமெப்படி யென்னில்,

வீரசைவபக்தமார்க்கம். செகத்திற் சரம், அசரம்,என்றிரண்டுவிதமாம் இதிற் சரஞ்சரீரியாகிறவன் சமஸ்த சைவ விசிஷ்டனாகி மற்றச் சமயங்களி ற் கிரியாகன்மாதிகமும் பலங்கொஞ்சமும் வீரசைவங்கிரியையற்பமும் பலம திகமாம். அதெப்படி, மலையடியிலேந்திரக்கல்லடித்து விற்றவன்பலமும் மா ணிக்கமெடுத்துச் சாணைபிடித்துவிற்றவன்பலமும்போலவென்றறிக. ஆகை யாலிந்த விசேஷ திட்சநன் ஸ்நான போசன நித்திரைசாக்கிரம் மல மூத்திர ம் விஷயம்இதுகள் செய்யும்போது அசுசிதோன்றாமல் சதாலிங்காங்க சம்ப ந்தியாக இலிங்கபோகபோகியாகித்தன்னிஷ்ட இலிங்கத்திலே ஆவாகன விச ற்சனங்களில்லாமற் றிரிகாலலிங்கார்ச்சனனாகிஇலிங்கலோபங்கிரியாலோபம்வ ந்தவிடத்திற் பிராணனை விடுகிறவனாக குருலிங்க சங்கம தீர்த்தப்பிரசாத வி பூதி ருத்திராட்ச சிவாகம சிவக்ஷேத்திர சிவாசாரநிந்தைகேளாதவனாய் அ ன்னிய தேவார்ச்சனையில்லாதவனாய்ப் பிறத்தியில் லவ்விகளுடனே ஆசன சயன கெமன சங்கம சகபோசனமும். இனி அந்தரங்க லவ்விகளுடனே அனிர்த அஸ்திவாக்கிய வஞ்சனை பந்திபேத உதாசின நிர்த்தயமுஇதுகளில் லாதவனாய்ச் சிவமகேஸ்வரனைக்கண்டால் எதிராதல் நமஸ்காரம் அவருட ன்றிரிதல் பிரியஞ்சொல்லுதல் ஆசனத்தில்வைப்பது அன்னபானாதிகமுதலா றுருசிகள் சமற்பிக்கிறது. சாதி, செனன, மரண, ருது, எச்சில், இந்தபஞ் ச சூதகமுமுன்சொன்ன சத்தபாதகமுமில்லாதவனாய் இலிங்காசாரபிறத்தி யாசார, சிவாசார, கணாசார, நியமாசார, இப்பஞ்சாசார நிஷ்டனாய் தாச த்துவ, வீரதாசத்துவ, பிரத்தியத்துவ, சமயாசாரத்துவ, நிஷித்துவ, சக லாவஸ்தாத்துவங்களென்கிற ஆறுவிதமு முள்ளவனாய் தசகலகற்பித லோ காசாரங்கடந்தவனாய் சுதந்திர சீவனாகிச் சிவ சீவ பேதமில்லாதவனாய் உபநி ஷத்வாக்கியத்திற் பிறந்த வித்தையில் சந்தோஷனாய், செகத் பூச்சியனா ய், இருக்கிறவன் வீரபக்தனென்றறிக.

இவன் சர்வாசாரத்தலம் நடக்கும்விதம்.

இனி ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், சங்கமலிங்கம், பிரசாத லிங்கம், மகாலிங்கம், ஆறு இலிங்கம். சு. இதின்விபரம், ஆசாரலிங்கம் திரிவி தம். சதாசாரம், நியதாசாரம், கணாசாரம், இதின்விபரம் தீட்சையினாலே

பூர்வசென்மம்போய்க் குருரூபமாகிறதே சதாசாரம். இலிங்கயிக்கத்தினால் குரக்குமனங்கெடுத்து இலிங்கவிரதமாக நிற்றலே நியதாசாரம். சங்கமப க்தியினாலே நானெனதென்கிற தமறநிற்பதுவே கணசாரம். ஆ ரு.

இனிக்குருலிங்கந்திரிவிதம். திட்சை, தீட்சை, சுவானுபவம், இதிற்றீ ட்சையாவது. குருசிட்சையாவது. சங்கமம், சுவானுபவமாவது. தன்னைத் தானறிவது. ஆ ரு. இனிச்சிவலிங்கந்திரிவிதம். இஷ்டலிங்கம், பிராணலிங் கம், திரிதிலிங்கம். இதில் இஷ்டலிங்கமாவது. குருநாதனீதுவே நீயென்று கொடுத்தது பிராணலிங்கமாவது, மனோகுண விகற்பங்களற்றது. திரிதிலி ங்கமாவது, சாக்கிர, சொப்பன, சுழுத்தியினும் இலிங்கமல்லாமல் மற் றொன்றுமறியாதவறிவு. ஆ ரு. இனிச் சங்கமலிங்கந் திரிவிதம். சுயசரபரம் இதிற் சுயமென்பதுதான் சரமென்பது லாஞ்சன மூன்றாய் நடப்பது பர மென்றாலறிவைப்பிடித்து நடப்பது. ஆ ரு. இனிப் பிரசாத இலிங்கந்திரிவி தஞ் சுத்தப்பிரசாத சித்தப்பிரசாத பிரசித்தப் பிரசாதம்.

இதிற் சுத்தமாவது குருமுகத்தினால் மலத்திரயமும்போய்த் தான்சி வத்துவானது சித்தமாவது இலிங்கத்தினால் காணதன்மம்போய்த்தான் சுபா வமாய் நின்றது பிரசித்தமாவது சங்கமத்தினாலே சைதன்னிய சொரூபந்தா னேயாய்க்கண்டிதமற்று நின்றவறிவு. ஆ ரு. இனி மகாலிங்கந்திரிவிதம். பிண்டாகாசம், அண்டாகாசம், விந்தாகாசம், இதிற்பிண்டாகாசமாவது, பி ண்டத்தை அயிக்கங் கொண்டலிங்கம். அண்டாகாசமாவது, அண்டத்தை விழுங்கினலிங்கம். விந்தாகாசமாவது, அறிவை விழுங்கினலிங்கம். ஆ ரு. ஆ சு-இ-டஅ-தலமறிய. இனி அங்கத்தலமாறாவது, பக்தன்-மகேசன்- பிர சாதி-பிராணலிங்கி-சரணன்-அயிக்கன் ஆக. சு. இதிற் பக்தன்-திரிவிதம்-கு ருபக்தி-இலிங்கபக்தி-சங்கமபக்தி. இதிற் குருபக்தியாவது, தனுக்கிரியையா லே தனுவை யற்பிப்பது. இலிங்கபக்தியாவது, மனக்கிரியையால் தனுவும மனமுமற்பிக்கிறது. சங்கமபக்தியாவது, தனக்கிரியையாலே தனுமனதனங் களையற்பிக்கிறது. ஆக ரு. இனிமஹேசன் திரிவிதம், இகலோகவீரன்பரலோக வீரன்-இலிங்கவீரன். இதில் இகலோக வீரனாவது, மத்தியலோகத்துக் கண ங்கள் மெச்சும்படி சர்வசங்க பரித்தியாகஞ்செய்து அதற்கேற்ற நடைநொ டிபாவனையனுபவித்து நடப்பது. இனி இலிங்கவீரனாவது, அங்கலிங்கவயி க்கியனாய்ச்சகலகாணமுஞ்சமைதமையாதிசாதன சதுஷ்டயம்வந்து சமாதி நிஷ்டையிலடங்கி நிற்பது. ஆக. ரு. இனிப்பிரசாதித்தலந் திரிவிதம், அற் பிதப்பிரசாதி-அவதானப்பிரசாதி-பரிணாமப்பிரசாதி. இதிலற்பிதப்பிரசாதியா வது, சகலபதார்த்தங்களையும் காய்க்கிறபடியா லதைத்தொட்டு இஷ்டலிங் கத்துக்கற்பித்துக் கொள்கையாலும் அற்பியாதெல்லாம் விடுகையென்றறிக. இனி அவதானப்பிரசாதியாவது. பஞ்சேந்திரியங்களில் பஞ்சலிங்கபிரதிஷ் டைசெய்துசத்தாதி விஷயங்கள் வருகிறதைமனவசத்தாலேதொட்டுப்பஞ் சேந்திரியவிலிங்கங்களுக்குமறவாமலற்பிக்கிறது. பரிணாமப்பிரசாதியாவது அ ங்காச்சரியமழிந்துலிங்காச்சரியமாய்நின்று பாவித்து, அடங்கிநிற்பது ஆக-ரு.

இனிப்பிராணலிங்கந்திரிவிதம். ஆசாரப்பிராணி இலிங்கப்பிராணி சங்கமப்பிராணி இதில் ஆசாரப்பிராணியாவது, மனோவாக்குக்காயங்களினால் ஆசாரவியவகாரத்தைக்கிரகித்து அனுசாரங்களைக்கைவிடுகிறது. இலிங்கப்பிராணியாவது,பயரங்கவுபசாரக்கிரியையற்று அந்தரங்கத்தில் இலிங்கத்துக்குத்தன்னுடைய பிராணனாகிறசிவனைத்தானே இலிங்கமாக தியானசமாதியினால்பூசைபண்ணுகிறவன்இலிங்கப்பிராணி சங்கமப்பிராணியாவது, "பாகியபக்திமறந்து,,தன்னுடையதனுமனப்பிராணன்களுடனேகூடியறிவில்மூழ்ந்தியவவ்வறிவும்போகஅறிவைச்சமர்ப்பித்தவன்,ஆக-௩. இனிச்சரணத்தலந்திரிவிதம்,இஷ்டலிங்கார்ச்சகன்,பிராணலிங்கார்ச்சகன்,பாவலிங்கார்ச்சகனிதிலிஷ்டலிங்கார்ச்சகனாவது, அனிஷ்டகாரியங்கள், நஷ்டமாக்கிக்கொண்டவனாய்பிராணலிங்கார்ச்சகனாவது, சுப்பரமறிந்தவனாய் பாவலிங்கார்ச்சகனாவது, இகபரமறிந்து இகபரம் விட்டவனாகையால். ஆக-௩. இனி அயிக்கியத்தலந்திரிவிதம், காய விலிங்கவயிக்கன், சிவலிங்கவயிக்கன்,பரலிங்கவயிக்கன், இதிற்காயலிங்கனாவது, கிரியாகாரமற்றது. சிவலிங்கனாவது, அனுபாவமற்றது. பாவலிங்கனாவது, தான் இலயமாகிறது. ஆக-௩. இப்படி ஆறுதலத்துக்கும் ௰௮-த்தலமென்றறிக. இந்த ௩௬-தலமான சர்வாசாரதலத்தைக்கூடல் சென்னசங்கயனிடத்தில் வசவணனே அறிவானென்றறிக.

இப்படியறியும்போது வீரசைவத்திலுள்ள சாத்திரமெல்லாம் குறைவறப்பார்த்தவனுக்கு இதின் விஸ்தாரந்தெரியுமென்றறிக. இனிப்பின்னும் பக்தனே ஆறுவிதலிங்கங்களிலும் வர்த்தனைப்பேதத்தால் ஒன்று ஆறாகி-௩௬ பேதமாம். இதில் ஆசாரவிலிங்கபூசகன் ஆறுவிதமாம். ஆசாரவிலிங்கமோகியானவன்ஆசாரவீனரான ஸ்திரிபுத்திராதிகளைவிட்டு நிர்மோகமாயிருப்பது. ஆசார விலிங்க பக்தனானவன் சிவாசாரத்துக்கு விருத்தமான பூர்வாசாரங்களைவிட்டவன், ஆசாரவிலிங்கபூசகனானவன் அன்னியதெய்வவசனங்களை விட்டு இலிங்கார்ச்சனை செய்கிறவன், ஆசாரவிலிங்கவீரனானவன்தான்பிடித்த ஆசாரம் பிராணஹானி வரும்போதும் விடாமற்செய்கிறவன் ஆசார விலிங்கப்பிரசாதியானவன், சுசித்தம சித்துவாதி, சங்கற்பரகிதன் ஆசார விலிங்கப் பிராணியானவன் சிவமஹேஸ்வரனை நிந்தியாதவன். ஆக்-௬. இனி குருலிங்கபக்தன்-௬-விதம். மாதா பிதா புத்திரமோகம்விட்டுக்குருவினிடத்திலே மோகமானவன் குருலிங்கமோகி, பந்துக்களுபசாரம் விட்டுக் குருவினிடத்திலனுராகமுடையவன் குருலிங்கபக்தன்.வேறு வேறு பூசைதோத்திரமில்லாமற் குருபூசை குருதோத்திரமுள்ளவனே குருலிங்கபூசகன். அன்னியமார்க்கங்களைவிட்டுக் குருமார்க்கமே வர்த்திக்கிறவன் குருலிங்கவீரன். குருவினாஞ்ஞைதப்பாதவனே குருப்பிரசாதி. அன்னிய சர்வைகளுக்கு வெட்கிக் குருசேர்வைப்பிரியனே குருலிங்கப்பிராணி. ஆக-௬ இனிச்சிவலிங்கபக்தன்-௬-விதம். அன்னிய மோகமில்லாதவனே சிவலிங்கமோகி, அன்னியதெய்வநிராகரனே சிவலிங்கபக்தன், அன்னியதெய்வத்தைச்சேவியாதவனே சிவலிங்கபூசகன், புண்ணியக்ஷேத்திரயாத்திரை விட்டவனேசிவலிங்கவீரன், இனிச்சுகதுக்காதிகளைச்சயிக்கிறவன்சிவலிங்கப்பிரசாதி

சம்போகாதிகளில்லாதவனேசிவலிங்கப்பிராணி,ஆக-௬-இனிச்சங்கமபக்தன் ௬-விதம்.

இதிற்றன்பூர்வாசாரங்களை விட்டவனே சங்கமலிங்கமோகி, சாதிகு லாபிமானம் விட்டவனே சங்கமலிங்கபக்தன், அன்னியாற்சனைகளைத்தேடா தவனே சங்கமலிங்கபூசகன், அர்த்தப்பிராணுபிமானங்களைச் சங்கமத்துக் குக் கொடுத்துத்திரும்பியதில் ஆசையில்லாதவனே சங்கமலிங்கவீரன், இ னிச்சங்கமன் சகலதிரவியங்களுந் தொட்டதல்லாமல் வேறுகொள்ளாதவ னே சங்கமப்பிரசாதி, சங்கமனே சிவனென்கிற விசுவாசமே சங்கமப்பி ராணி ஆ.

இனிப் பிரசாதபக்தன்-௬-விதம் இதில் அன்னியருசி யறியாதவனே பிரசாதலிங்கமோகி பூர்வாசாரங்களைவிட்டவனே பிரசாதலிங்கபக்தன் அன்னியருடனே ஸினேகசம் பாஷணமில்லாதவனே பிரசாதலிங்கபூசகன் அன்னியதிரவியாதிகளில் கையிடாதவனே பிரசாதலிங்கவீரன் சிவயீங் கிசையாதிகளில்லாதவனே பிரசாதலிங்கப்பிரசாதி தன்னாத்மாவை நிக்கி ரகஞ் செய்யாதவனே பிரசாதலிங்கப்பிராணி ஆ - ௬ - இனி மகாலிங் கப்பக்தன் - ௬ - விதம் இதில் லோகவிருத்தாந்தங்களெல்லாம் நானேயென் கிறவன் மகாலிங்கமோகி பூர்வபத்தியாதிக ளனுசந்தானமில்லாதவனே மகாலிங்கபக்தன்அஞ்ஞானாதிகளுடனே சங்கம சம்பாஷணமில்லாதவனே மகாலிங்கபூசகன் உற்பத்தி திதி லயங்களிலே சிந்தனையில்லாதவனே மகா லிங்கவீரன் பந்திபோசனங்களில் வஞ்சனையில்லாதவனே மகாலிங்கப்பிர சாதி பிறத்தியி லர்ச்சனையற்பணைகளெல்லா மந்தாங்கக்கிரியா நிஷ்டனே மகாலிங்கப்பிராணி ஆ - ௬ - இப்படி ஷடுஸ்தல வர்த்தனைகளிலே பிண் டாதிஞான சூனியமான-௱க - தலக்கிரமத்தில் அங்கஸ்தலம் - ௬௪ - இலிங் கஸ்தலம் - ௫௭ - ஆ - ௱க - இப்படி - ௱க - தலமுஞ் சர்வாசாரத்தலமு மனுபவிக்கிறவன் வீரவிசேஷசைவனென்றறிக. முத்திநிலையான அனுபவ மாவது, நிராபாரவீரசைவநிலை காயாற்பணபேதங் காயாற்பண மாவது பிடித்துண்கிறதொழில் ஆசாரலிங்கம், உதகமுதலான்தெல்லாங் குடிக்கிற தொழில் குருலிங்கம் கடித்துத்தின்கிற தொழில் சிவலிங்கம், உறிஞ்சுந்தொ ழில் சங்கமலிங்கம்,நக்கிறதொழில் பிரசாதலிங்கம், இந்த ஐந்துதொழிலையுங் காண்கிற சாட்சித்தொழில் மகாலிங்கம் ஆ - ௬ - இந்தஆறு தொழிலையுங் குருலிங்கமாகிற நாக்கல்லவோசெய்யுதென்னிற்குருலிங்கம் ருசிகளையறிகிற தல்லாம விதைப்போலத் தொழிலைச் செய்யாதென்றறிக. காயாற்பணத் தைத்தந்த தாலு லோஷ்டகுரவளைகளாலே செய்வதென்றறிக. இனிக் கர ணாற்பணமாவது, மூக்கு, நாக்கு, கண், தோல், செவி, இர்தயம், இந்த ஆறுதானத்திலும் ஆசாராதி யாறுலிங்கமிருக்கும். இந்த ஆறுதலத்திலும், வருகிற எதிர் விஷயமான கந்த, ரஸ,ரூப,பரிச சத்தம்,இந்த -௫-ம் அறியும் இந்த ஐந்தின்திர்த்தியை மகாலிங்கமறியும் இப்படி யாசாராதி யாறுலிங்க மறியுமென்றறிக. இனி பிசிருற்பணமாவது, பஞ்சீகரணபேதத்தால் ஒன் றிலொன்று மிசிறமாய்க் கூடுகையால் மிசிருற்பணமென்றறிக. இனி மூக்

இலாசாரலிங்கம் கெந்தமறியும்போது துற்கந்த சுகந்தங்களை யாறுவிதமாய றியும். அதெப்படி வேர்கிழங்கிற் கெந்தமாசாரத்திலாசாரலிங்க மறியும் மரம்பிசினிற் கெந்தமாசாரத்திற் குருலிங்கமறியும் இதிற் பட்டைகெந்தமு மரத்தோடேகூடிற்றென்றறிக. தளிரிலை இதின் கெந்தம் ஆசாரத்திற் சிவ லிங்கமறியும் அரும்பு பூவின்கந்தம் ஆசாரத்திற் சங்கமலிங்கமறியும் காய்ப ழத்தின்கந்தம் ஆசாரத்திற் பிரசாதலிங்கமறியும் இந்த ஐந்துகந்தத்தின் திர்த்திகளை யாசாரத்தில் மகாலிங்கமறியும் இனிப் பிண்டாண்டசெகத்தில் உள்ளகெந்த விதங்களெல்லா மிந்த ஆறுவிதத்தி லடங்குமென்றறிக. இனி நாக்கிலிருந்து குருலிங்கம் நல்லரசம் பொல்லாரசங்களையறியுங் குருவிலாசா ரலிங்கந் தித்திப்பானவகையெல்லா மறியுங் குருவிற் குருலிங்கந் துவர்ப்புவ கையெல்லாமறியுங் குருவிற் சிவலிங்கங் காறல்கார முதலானதெல்லாமறியுங் குருவிற் சங்கமலிங்கம் புளிப்புவகையெல்லாமறியுங் குருவிற் பிரசாதலிங்கங் கசப்புவகையெல்லாமறியும் இந்த ஐந்துருசியின் திர்த்தியுங்குருவில் மகாலிங் கமறியும் இனி உப்புமுதலான பின்னுஞ் சிலருசிகளெல்லாமிந்த ஆறிலடங் குமென்றறிக. இனிக் கண்ணிற் சிவலிங்கமாறுவிதமாக நல்லரூபு, பொல் லாரூபுகளைக் காணும் இனிச் சிவத்திலாசாரம் பொன்னிறமறியுஞ் சிவத்திற் குருவெள்ளைநிறமறியுஞ் சிவத்திற் சிவஞ் சிவப்புநிறமறியுஞ் சிவத்திற்சங்க மங் குங்கும நிறமறியுஞ் சிவத்திற் பிரசாதம் நீலநிறமறியும் இவையைந்து ரூபுத்திர்த்தியுஞ் சிவத்தில் மகாலிங்கமறியும் இனித் தொக்கிற் சங்கமலிங் கம் நல்லபரிசம் பொல்லாப்பரிசங்களை யறியுஞ் சங்கமத்தி லாசாரலிங்கங் கடினபரிசவிதமறியுஞ் சங்கமத்திற் குருசயித்திய பரிசமறியுஞ் சங்கமத்திற் சிவம் உஷ்ணபரிசமறியுஞ் சங்கமத்திற் சங்கமமிருது பரிசமறியுஞ் சங்கம த்திற் பிரசாதம் மிசிறபரிசமறியுஞ் இந்த ஐந்துவித பரிசதிர்த்தியுஞ்சங்கமத் தில் மகாலிங்கமறியும் ஆ - ௬ - இனிக் காதிற்பிரசாதலிங்க மாறுவிதமாக நல்லசத்தம் பொல்லாசத்தமறியும் பிரசாதத்தி லாசாரந் தாளமுதலான கஞ்சவாத்தியமறியும் பிரசாதத்திற் குருதந்திவிதமறியும் பிரசாதத்திற் சிவ ந்தோற் கருவிவிதமறியும் பிரசாதத்திற் சங்கமந் துளைக்கருவிவிதமறியும் பிரசாதத்திற் பிரசாத வசன கீத முதலான கண்டவாத்திய விதமறியும் இந்த ஐந்துவிதத்திர்த்தி யெல்லாம் பிரசாதத்தில் மகாலிங்கமறியும் ஆ ௬- இனி யிர்தயத்தில் மகாலிங்க மாறுவிதமாய் நல்லதிர்த்திபொல்லாத்திர்த்தி களை யறியும் இனி மகாலிங்கத்திலாசாரங் கெந்தத்திர்த்தியறியும் மகாலிங்கத் தின்குரு ரசதிர்த்தியறியும் மகாலிங்கத்தின் சிவலிங்கம் ரூபதிர்த்தியறியும்ம காலிங்கத்தின்சங்கமம்பரிசதிர்த்தியறியும் மகாலிங்கத்தின் பிரசாதஞ்சத்தத் திர்த்தியறியும் இந்த ஐந்துவிததிர்த்தியும் மகாலிங்கத்தில் மகாலிங்கமறியும் ஆ-௬-இப்படி யாறுலிங்கத்திலும் - ௩௬ - லிங்கமிசிறமா யறியுமென்றறிக.

இனிமிசிருற்பணத்தில் மிசிறமாகப் பாவாற்பணமாவது, முன்மிசிருற்ப ணம்-௩௬-லிங்கமாக ஒவ்வொருமுகத்திலிருந்து வொவ்வொருவிஷயத்தைக் கொள்ளும்போது ஒன்று ஆறுவிதமாக-௩௬-க்கு-௨௧௬-இலிங்கமானபேதமெப் படியென்னிற் சத்தாதி விஷயங்களைப் பற்றும்போது யாதாமொருவிஷ

யாதிபேதங்களிலே முந்தப்போய்த்தொடுவது ஆசாரலிங்கம் அதின்பிறகு உறத்தொட்டு இது வென்றறிவது குருலிங்கம் பின்பு அறிந்ததைச் சந்தேகமறநிச்சயஞ்செய்வது சிவலிங்கம் பின்பு அதினுடனேசுகித்துப்பொருந்துவது சங்கமலிங்கம் இதில் பரிணமிக்கிறது பிரசாதலிங்கம் இந்த ஐந்து விதலிங்கத்தில் வந்த -௫- விதத்திர்த்தியுங்கொள்வது மகாலிங்கம் இப்படி ஒன்றுக்காறு விதமாய் -௨௧௬- இலிங்கமாம் இப்படிக் காயாற்பண கிரியைசெய்யும்போது ஒருகிரியை செய்தவுடனேயதிலேபேதமானக்கிரியைகள்வரும் இனிக் கரணாற்பணங் கொள்ளும்போது சத்தாதி விஷயத்திலொரு விஷயம் புசிக்கும்போதும் அதில் பேதமான புசிப்புகள்வரும் இனி மிசிருற்பணங்கொள்ளும் போதும் ஒருலிங்கத்தி லாறுலிங்கமா யொரு விஷயத்தையாறுவிதமாய்ப் புசிக்கும்போது அதிலேயும் பேதமான புசிப்புகள்வரும் இனி மிசிறத்தில் மிசிறமான பாவாற்பணமா யாறுகரணமாகிற ஆறுலிங்கமு மறியும்போது அதிலேயுஞ் சூட்சுமபேதங்களாய்வரும் இப்படி வருகையாலே -௨௧௬- லிங்கமென்று நிச்சயிக்கப் போகாதென்னில் எத்தனைவிஷயங்களிலு மெத்தனைபேதங்கள் வந்தாலும் ஆசாராதி யாறுலிங்கமேதிரும்பத்திரும்பவருகிறதல்லாமல்வேறில்லாதாகையா லந்தப்படி இலக்கஞ்சொன்னதென்றறிக. இப்படி யனேகவிதமாக விரிகிறலிங்கம் பரிபூரணமாய் ஞானானந்தமாய்ப் பிண்டாண்டங்களிலொட்டற்றுப் பிண்டாண்டங்களிலேயெப்போதும் பிரசன்னமாகி யகலாதிருக்கும் இதைச் சாதிக்கிறதெல்லாருக்கு மரிதென்றறிக. ஆனால் சாதிக்கிறதெப்படியென்னிற் சித்தகுணங்கெட்டுச் சித்தநிலைவந்தஅஸ்தத்திலாசாரலிங்கம் பதியும்இனி புத்திகுணங்கெட்டுச் சுபுத்திநிலை யஸ்தத்தில் குருலிங்கம் பதியும் ஆங்காரமாண்டு நிராங்காரவத்தத்திற் சிவ குருலிங்கம்பதியும் மனதுமாண்டுசுமன அஸ்தத்திற் சங்கமலிங்கம்பதியும் அஞ்ஞானமாண்டு சுஞ்ஞானவத்தத்தில் பிரசாதலிங்கம்பதியுந் துற்பாவமாண்டு சற்பாவஅஸ்தத்தில்மகாலிங்கம்பதியும் இப்படிமாயாசம்பந்தங்களானகரணங்கள்கெட்டுச் சித்துசம்பந்தமான கரணங்கள் பிறந்தவிடத்தில் இலிங்கங்கள் சத்தியமாய்ப் பதியுமென்றறிக.இந்த இலிங்கங்கள்பதிந்தாலொழிய இலிங்கசையோகமில்லை சையோகமானாலொழிய இலிங்காற்பிதமில்லைஇலிங்காற்பிதமானாலொழியப்பிரசாதபிரசன்ன தத்துவமில்லையாகையாலஸ்தங்கள்சுத்தமாகிறதும் நிலைகொள்ளுகிறதும் பேதமெப்படி என்னில் மூலாதாரச் சக்கரபேதங் குருமுகமாயறிந்து அதிற் சிவப்புவர்ணமும் நாலிதழும்வா, சா, ஷா, ஸா, என்கிறநாலட்சரமும்பிரமாஅதிதெய்வமுஞ்சாக்கிரா அவஸ்தையும் இந்த ஆறுவிதத்தையும் நகாரபீசாக்கரத்தாலறிந்து கிரியாசத்தியாலுண்டாகிற பிராணவாயுவாலுண்டாகிற மலைவுகளெல்லா மறுத்திட்டுப் பிராணவாயுவியங்காமல் நிறுத்திச் சற்பத்திபால் மேற்குத்திக்குச் சத்தியோசாத முகத்தால் பிருதிவியின் கடினகுணத்தைக் கிங்கிறுவாணபயபக்தியால் அறுத்துத் தனுகுணபேதங்கள்நாஸ்தியாய்யோக நிஷ்டைகளைசாதிக்கிறது மாயாசித்த மாண்டுசுசித்தமாம் இந்தச் சுசித்தமே இலிங்கப்பிரசன்னத்துக்கு அஸ்தமென்று மிப்படிக் கைவந்ததே பக்தத்தலமென்றறிக.

இப்படி ஆருத்தாரங்களுஞ் சோதித்துநின்றுபார்த்தாற் சுத்தஅஸ்தத்தில் இலிங்கசாயித்தியமாம். இதல்லாமலுஞ் சர்வ சங்கப்பரித்தியாகத்திலேயுத்தமசங்காரத்தில்மத்திமம். இதிலெதுதனுக்கனுகூலமாயிருந்துதோ அதில்சமைதமாதி ஷட்கசம்பத்தியகுணம்வந்து சகலஅஞ்ஞானகுணங்களும் விட்டு நடைநொடிபாவனைமூன்றிலும் ஞானமேமிஞ்சித் தான் மதானுசாரமான குருலிங்கசங்கமமே பாயரங்கத்தில்பொருளாய்ச் சத்துச்சித்தானந்தமேஅந்தரங்கத்தில்பொருளா யிந்தவிரண்டு மேபாவமென்றறிந்து நடக்கைவந்தாலும் அஸ்தம் சுசியாய் இலிங்கம்பதியுமென்றறிக.

பின்னுமொருவிதம். அனுபவ சடத்தலத்தில்நிரசனநிர்த்தேசத்தல மறிந்து பக்தாதி தலமாறு பேருக்கு மின்ன வின்ன குணமுநடைநொடி பாவனையும் வந்தால் ஆணவாதி மலங்களுந்தீர்ந்து அஸ்தமும் நிலைகொண்டு இலிங்கமும் பதியுமென்கையாலிப்படியுமாமென்றறிக. பின்னுமொருவிதம். இலிங்கப்பிரசன்னமாய்ப் பதிகிறது யோகாப்பியா சங்களால் திச சக்கரங்களிலும் பேதாபேதமாய் இலட்சியமாகிறதண்டகாகிருதி, தாரகாகிருதி, குண்டலாகிருதி, அர்த்தசந்திராகிருதி, தற்பணகிருதி, சோதியாகிருதி, முதலான சோதிமயங்களைக் கண்டு இன்னலட்சியம் இன்னவிலிங்கமென்றறிந்து அதில் இலயமாகிறதொருவிதம், இனி அறிவையறிந்து நிர்விகற்ப சமாதி நிஷ்டைகளால் மூன்று துரியதெரிசனமுமாய் இதுவே சத்துசித்தானந்தமாகிற இஷ்டப்பிராண பாவலிங்கமென்றறிகிறதொருவிதம். இப்படி யிலிங்கசாயித்தியமாகிற உபாயங்கள் நாலுவிதமுண்டு. இதில் யோகாப்பியாசங்களாலே எல்லாக்குணங்களையுங் கெடுத்து வாயுத்தாரணைகள் செய்து சமாதி நிலைவந்து இலிங்க சாகித்தியமாவது நல்லதென்றறிக.

௲எ௩. இசைத்திடுமாறுசத்தியினமதனத்தினாலே
விசைப்புளதேசவாய்வைமேலறவேநிறுத்தி
திசைப்படுசக்கரமாறுந்திகழுமாறுநிறமு
நிசத்தறுவிததளமு நிகழுறுவிதவர்னமும்.

௲எ௪. மூவிரண்டதிதெய்வமுமுயங்குமாரவத்தையையு
மேவுறுவீசாகரத்தால்மேவாமலேயறிந்து
பாவந்தறமுகமாம்பகர்சத்திசவ்விசார
மோவிடாதேபிடித்தேயுபாறுவிசாரத்தாலே.

௲எ௫. காணவேபட்டதானகனபத்தியாறினாலே
சேணுறுதத்துவமார்க்கந்திகழாறுதிக்குடைய
மாணுறுமுகமாறையுமாயமதறவறிந்தே
வீணுறபூதமாறின்விடமானகுணமாறையும்.

ஆறு பக்தியாலே மங்குவித்து ஆருதாரத்திலும் இலிங்கமங்கங் கொள்ளுமென்றறிக. இந்த விதத்தால் ஷடுஸ்தல அனுபவம் வரவேண்டும். இனிக் குருலிங்க சங்கம மூன்றில் நாதவிந்துக்களை யறிந்து ஆத்மத் திரயத்தி லிஷ்டப் பிராணபாவலிங்கங்களைச் சம்பந்தித்துத் தனுமூன்றில் தியாகாங்காதி மூன்றையுஞ் சம்பந்தித்து நிர்த்தேசத்திலாறங்கமு மொன்றுவது, பக்தன், மகேச, னிரண்டுந் தியாகாங்கம், பிரசாதி, பிராணலிங்கி, யிரண்டும் போகாங்கம். சரணன், அயிக்கனிரண்டும் யோகாங்கம். இப்படி பக்தாதியாறுதலமும் மூன்றங்கமாம். ஆறுஇலிங்கமு மூன்று இலிங்கமாம். இது இஷ்டப்பிராணபாவமாம். இப்படி இலிங்கத்தலமு மங்கத்தலமு மாறுவிதமாம். இதிற் பக்ததலம் பக்த சங்கமம் இரண்டுதலமாம்.

அதெப்படியென்னில், பக்தன் பிரசாதி மஹேசன் மூன்றும் பக்ததலமாம். பிராணலிங்கி, சரணன், அயிக்கன், மூன்றுதலமும் சங்கமத்தலமாம், இஃதிரண்டும் "ஏகமேவாத்விதீ யம் ப்ருஹ்மா,, என்கிறவாக்கியத்தால் "பச்சிம நிஜபதத்தே,, விளங்கப்பட்ட நிசப்பிரகாசமானதுதானே-உ-௩-௯-௩௯-உ௯௯-இப்படியாய் நிசிறப்பிண்டாண்டத்தில் பரிபூரணமாய் ஏகமாய் விளங்கிறது கண்டு இதின்மே லொன்றில்லாமையால் இதுதானே முன்சொன்னதெல்லாம் ஆனதென்று கண்டு திரும்ப-உ௯௯-ம்-௩௯-ல் கண்டு-௩௯-ம்-௯-ல்-கண்டு-௯-ம்-௩-ல்-கண்டு ௩-ம்-உ-ல்-கண்டு உ-ம்-க-ல்-கண்டு நினைப்பும்மறப்பு மற்றுச்சிவயோகசமாதியிலே முன்சொன்னதெல்லாமிறந்து நிற்குனியநிராளமாய் வாக்குமனதீதமாய் நின்றது அகண்டபரிபூரணலிலிங்கமென்றுஅனுபவத்திற் குருமுகத்தாலறியவேண்டும். இதுவும் சர்வாங்க லிலிங்கசாகித்தியமென்றறிக.

எல்லாம் இலிங்கமாச்சுதென்பானேன், லீலியமகமசிருஷ்டி,லியசிருஷ்டிக்குப்பிரம மாதார பூதமாகையாலுஞ்சர்வமுமதினிடத்தினின்றுண்டாகையாலும் அதுவே செகமாகையாலும் எல்லாம் இலிங்கமென்றதென்றறிக.

சாட்சி உபநிஷத்துகளில் "ஸத்யஜ்ஞான,, அனந்த ஆனந்தப் பிரமந்தானே கடோபாதி பரிச்சின்ன பேதங்களால் பிண்டாண்ட செகமெல்லாமுள்ளும்புறம்பு மாகையாலும் "அஹம்ப்ருஹ்மாஹமஸ்மிப்ருஹ்மாஹமஸ்மி,, என்கிற வாக்கியத்தாலுஞ் சர்வாங்க லிலிங்கமாயிற்றென்றறிக. இப்படிச் சர்வாங்கலிலிங்க சாகித்தியுள்ள நிராபார வீரசைவன் பூரண ஞானியானடியால் சம்சார சவுக்கியங்கள்விட்டு இப்பால் வித்தையே சந்தோஷமே பிள்ளை, விராகமே பந்துக்கள், க்ஷமையே பரிகாரகன், சாந்தியே தோழன், பக்தியே தாய், ஆசாரமே தகப்பன், சத்தியமே பெண், சிரத்தையே அண்ணன் தம்பி மித்திராதி, சற்குணமே புத்திரர், ஞானமே தேகம், விசாரமே க்ஷேத்திரம், "அகிம்சையேஎதாவஷி,,அஸ்தையேவேதாசனு,தர்மமே வாகனம்,தயையே ஆசாரியன்,முத்தியே தேசம்,இதுமுதலான பரமார்த்தகுடும்பசம்சாரியாய் கந்தை, தெண்டு, கமண்டலம், பாத்திரை,விபூதி, கக்ஷப்பாளம்,என்கிற பயிரங்க பஞ்சமுத்திரைகளும் அந்தந்தமந்திரங்களால்தரித்துக் கொண்டு அந்தரங்கத்திற் சமதையேகந்தை, ஞானமே தெண்டு, தயவேக

மண்டலம், வயிராக்கியமே பிட்சாபாத்திரம், க்ஷமையே விபூதி ஆதாரம் இந்த அந்தரங்க பஞ்சமுத்திரைகளுமுண்டாய் சடைபோலும் அஜிநதிகம் பரவிசித்திரவேஷங்கள் தரித்து நியமமாகப் பிட்சை பண்ணிக்கொண்டு விபூதி தூளன தாரணனுகிச் சிவார்ச்சனதியானஸ்தல குளவிசார இலிங்காங்க சையோகவிரதனுகி-ஞானக்கிரியாசம்பன்னனுகி ரஸ ரஸாயன வாதவசிய சோதிரிஷக்கிறைய விக்கிறையாதி லௌகீக விசாரங்கள்விட்டு வனிதாதி விஷய விரத்தனுகிக் காட்டிலிருந்து குரூரதாதி மற்றுமுள்ள அவகுணங்களைவிட்டு இருக்கிறவன் நிராபார வீரசைவனென்றறிக. இப்படி ஷடுஸ்தலஅனுபோகியான நிராபாரி சகலவர்ணஞ் சகல ஆசிரமஞ் சகல சீவனுக்கும் நிராபாரி சேஷ்ட னென்றறிக. அதிவன்ஞசிரமி யென்றும்பெயர். ஆகையால், வீரசாமானியன், வீர விசேஷன், வீரநிராபாரன், இம்மூவர் தீட்சையும் முடிந்ததென்றறிக.

அங்கத்தில் இலிங்கந்தரிக்கிறது சிரேஷ்டமென்று வேதஞ்சொல்வது. ஶ்ருதி கக.

இந்தவேதங்கள் இலிங்கதாரணவிதி சொல்லுமென்றறிக. இதெல்லாம் ஆகமபுராணங்களிலே வெகுவாயுண்டு சாட்சி ஆகமத்தில். ஶ்லோ கஉ.

இப்படி வீராகமத்திற்கோடி சம்மிதையுண்டாமென்றறிக.

இதல்லாமல் வாதுளாகமத்திற் சிவசித்தாந்த தந்திரமெல்லாம் ஆறுயிரங்கிரந்தம் அனுபவவீரசைவஷடுஸ்தலம் எட்டு நிர்த்தேசத்தலமுஞ்சொல்லுமென்றறிக. வாதூலசுத்தாக்னை ஆயிரத்தில் மந்திரகீலகப்படலஞ் சொல்லுமென்றறிக. இதல்லாமற் பிரங்கி, தூறுவாசர், அஜன், சகராட்சணன், வாணுசுரன், பிரமா, விஷ்ணு, உருத்திரன், இந்திரன், நந்திகேஸவரன், கந்தன், வீரபத்திரன், இவர்கள் முதலாய் சகல தேவதை ரிஷிகள், முனிவர்களெல்லாருஞ் சாயுச்சிய பதத்துக்குச் சிரசு, சிகை, கழுத்து, லலாடம், மூர்த்தினி, கக்ஷம், அஸ்தம், அமலோக்ஷம், இது முதலான தானங்களில் தரிப்பார்களென்று சொல்லுமென்றறிக. இலிங்கபூசை செய்யும்போது "ஸ்திரிருத்ரவ காலாக்னி ருத்ரோபநிஷத்," நமசமக்கம்பாணிமந்திரமுதலானதெல்லாம் சொல்லிப் பூசைபண்ணவும். இனிப்பிர்மா விஷ்ணு முதல் சகலதேவருக்குஞ் சகல சீவராசிக்குஞ் சிவன் தகப்பனென்றுஞ் சிவனுக்குச் சரியான தெய்வங்களில்லையென்றும், சிவனல்லாத பேரைப் பூசிக்கிறது பிராமணருக்கு யோக்கியமல்ல வென்றும், ஹரி யயனோடு சரியென்பார் பறையராய்ப்பிறப்பாரென்றும், சிவனுக்கு உத்தமாங்க நமஸ்காரமென்றுஞ், சிவனைத்தோத்திரஞ்செய்வதே நாவென்றும், சர்வேந்திரியங்களுக்கும், சர்வசீவராசிகளுக்குஞ், சிவன்கர்த்தனென்றும், சிவப்பிரசாதமல்லாமல்பிறவியறுக்கிற மருந்து வேறில்லையென்றும், சிவஸ்தோத்திரஞ்செய்யும் பூசிக்கிற கையையும் வேதம் புகழுமென்றுஞ் சிவபாதோதகத்தைக் கொள்ளாமல் இதரங்களை கொள்ளவொண்ணுதென்றுஞ், சிவபூசை யில்லா புசிப்பும் மலமுங் கிருமியுமென்றும் சிவபத்தர் சண்டாளரானுலுமவர்கள் வீட்டில் புசிப்புஉத்தமமெ

ன்றும் இப்படி இன்னம்வெகுவாய் வேதங்கள் சொல்லும், அதுகளை யெழு தில் விரிவாமென்று விட்டனம், சர்வ வியவகாரத்திலுஞ் சிவன் கர்த்தனெ ன்று வேதஞ்சொல்லுவது சாட்சி. ஸ்ரீ கங.

இனி இலிங்கதாரண மாகாதென்று சொல்வது, ஸ்ரீ கச.

இதினர்த்தம் முத்திராங்கிதஞ், சக்கராங்கிதம், வச்சிராங்கிதம், இலிங் காங்கிதம், இதுகள்போலக் காச்சிச்சுட்டுக்கொண்ட பேருக்குச்சொன்னத ல்லாமல் இலிங்கதாரண விதிக்குச் சொன்னதல்ல வென்றறிக. இனி முன் சொன்ன பேதாபேதசித்தாந்திக்கும் இவனுக்கும் பேதமென்னெனில், அவ ன் ஆத்மாவுக்குஞ் சிவனுக்கும் உயிருக்கும் சமவாயமென்றுஞ், சத்தியைவிட வுலகில்லையென்றுஞ் சொல்லிப் பின்பு பேதமாய்சொல்லுவான். இந்தவீர சைவன் சிவன்தானே விலாசார்த்தமாய் அங்கஸ்தலம் இலிங்கஸ்தல மாயிற் றென்றுஞ்சர்வாங்கமும் இலிங்கமாயிற்றென்றுஞ் சொல்லுகையாற்பேதமு ண்டென்றறிக,

விபூதியுற்பவமும் அதின்மகத்துவமுஞ்சொல்வது சகலவர்ணச்சிரமத்து க்கும் பஸ்மதாரணம் வேண்டுஞ் சாட்சி. ஸ்ரீ கரு.

என்று சொல்லுகையால் விபூதிவந்த விபரம் சிவன் பஞ்சமுகத்திலும் ஐந்து பூதமுண்டா யிதில் நிவர்த்தியாதி கலை யுண்டாய் நிவர்த்தியிற் கபில வர்னகந்தை, பிரதிஷ்டையிற்கிர்ஷ்ணவர்ண பத்திரை, வித்தையிலிரத்தவர் ண சுரபி,சாந்தியிற்சுவேதவர்ணசுசிலை, சாந்தியாதீதையிற் சித்திரவர்ன சும னை,இந்தஐந்துபசுவுங்கிருசாங்காதிதோஷமில்லாதநல்லஇலட்சணத்துடனே பிறந்தது இந்தப்பசுக்களிலே துற்கந்தமில்லாததாய்ப் பார்த்துக் கோமயங்க ளைப் பிரணவத்தோடே பஞ்சபிரமமந்திரங்களைக் கிரமமாக அந்தந்தமுகத்தி ற் பிறந்த அந்தந்தவர்னப்பசுக்கள்கோமயத்தையெடுத்துக்கொண்டு "க்ரிஹ ணகவளனசோஷணதஹந சோதன,, என்கிற ஐந்து கிரமத்தாலும் விபூதி "பசிதபஸ்மக்ஷாரரக்ஷை,, என்கிற-ரு-வித பூதிக்கிரமத்தாலேதகனஞ் செ ய்துசர்வதோஷ நிவர்த்தியாகக் கற்பம் அனுகற்பம் அகற்பமென்று-ச-வகை யாம் இப்படிசெய்யவும், இதுசகலருக்குமாம். இதல்லாமலும், "பிர்மக்ஷத்தி ரிய வைசியருக்கும்,, அக்கினிகோத்திரவிபூதியாம்இதுவும் உத்தமம், சூத்திர ருக்குச் சரோதரதாயாகார பசனக்கினியாவது, வைதீகர் வீட்டு விபூதியாவ து யோக்கியம். மற்றுமுள்ள சங்கரசாதிகளுககுத் தாவாக்கினியில் வெந்த விபூதியோக்கியம். சம்சாரிகளுக்கு வீரஜானலாக்கினி வாசனக்கினிகளிலுண் டான பஸ்மம் யோக்கியம். எதிஸ்வரராகிற சந்நியாசி,வானப்பிரஸ்தன், முத லான தபசிகளுக்கெல்லாம் எல்லாவிடத்திலும் விபூதி யோக்கியமாம். அதிவர் ணச்சிரமிகளுக்கு மயானபஸ்பமும் யோக்கியமாம். இப்போது சொன்ன வெல் லாருக்கும் தேவஸ்தல விபூதி யோக்கியம், இந்தவிபூதிகளெல்லாம் மலர்ந்த உத்தூளனத்தாரணமாகிறமூன்று பிரகாரமாம். இதுகள் தரிக்கும்போது வி பூதி தரிக்கவிதித்த பிரகாரத்திலே தரிக்கவும். பின்னுமொருவிதம் புராணர்

த்தமாய்ச்சொல்லில் தேவர்கள் கூடி அமிர்தம் கடைகிறபோது அதிலனேக வஸ்துக்களெல்லாம் பிறந்தது அப்போது காமதேனுவும் பிறந்தது அந்தக் காமதேனுவில் பஞ்சகௌவியம் பிறந்தது சாட்சி,

சிவதன்மோத்தரம்.

௩௭௬. கோமயமதனில்வில்வங்குறுமுறிகூடத்தோன்றும்
பூமகளந்தவில்வம்புரிந்ததிற் பொருந்துமாற்றுற்
றூமமார்வில்வந்தானுமசிபலமென்றேசாற்று
நாமமுமுனைருமீசன்றிருமுடிக்கணியென்நாளும்.

௩௭௭. உற்பலமகலமூலம்பின்பதிலுதிக்குநீரிற்
பொற்புறுகுங்கிலியம்பொலிந்தெழும்புரியயாரு
மற்புதன்றனக்குமற்றையனைவர்க்கு முளைர்வதாகக்
கற்புறுசெந்நெல்பாலிற்கதிரொடுகலந்துதோன்றும்.

௩௭௮. சந்தனமுதலாயுள்ளமங்கலத்ததியினுகும்
அந்தரத்தமரருண்ணுமமுதமுநவநீதத்தாஞ்
சிந்தையாற்சித்திபேதஞ்சிறக்கரோசனையுஞ்செய்யும்
அந்திவான்வண்ணன்மேனிக்கருகமிவ்வாறுமாமே.

ஆகையால் பஞ்ச கௌவியங்களிலும் இதிலுண்டான திரவியங்களிலுஞ் சுகந்த வர்க்காதிகளிலுஞ் சிவனைப் பூசைசெய்வது இந்தகோமயத்தில் விபூதி செய்யும்விதம் ஆகமப்படி விபூதி கற்பஞ்சொல்லுகிற பிரகாரஞ் செய்யவும்

இனி உருத்திராட்ச உற்பவம்.

சிவன் திரிபுரசங்காரஞ் செய்யும்போது தேகம் உட்பொங்கி யானந்தம் பிறக்க அப்போது சோம சூரியாக்கினி ஆகிற மூன்று கண்களிலும் ஆனந்தமாகிற சலஞ்சிந்தி விழ விழுந்தசலத்துள் சுப்பிரவர்னத்திற்பதினாறு விதமும் இரத்தவர்னத்தில் பன்னிரண்டு விதமும் கிருஷ்ணவர்னத்தில் பத்துவிதமும், இப்படிமூன்று கண்களின்பேதத்தால் சூரியன் சம்பந்தம் வெள்ளையும், சந்திரன் சம்பந்தங் கறுப்பும், அக்கினிசம்பந்தம் சிவப்பும், இப்படி மூன்று வர்னபேதமாய் உலகோபகாரமாகப் பாபக்ஷய நிமித்தமா யுண்டானதென்றறிக. இந்த உருத்திராட்சத்தின் மூலமே பிர்மா, நாளமே விஷ்ணு, முகமே உருத்திரன், கேசரங்களே தேவதைகளாயிருக்கும் இப்படி உருத்திராட்சம் வந்ததென்றறிக.

௩௯-வது-அத்தியாயம்.

## அனேகேசுர வாதிமதம்.

அனேகேசுர வாதிமதம். தேர்கள் மாடமாளிகை கோபுரப்பிரகார மண்டபங்கள் முதலிய வற்றைக் கட்ட ஒருவனாலே கூடாமல் அனேகர்கூடிச் செய்வதுபோல் அனேக ஈஸ்வரர்கள் கூடிச் சிருஷ்டியாதிகளைச் செய்வார்கள். அப்படி போலப் பலவான் ஈஸ்வரராலே பஞ்சகிருத்தியமும் நடக்கிறது சொரூப நிலை யென்றறிக. இனித் தடத்தலட்சணமாவது, ஆனால் எத்தனைபேர் கூடினாலும் ஒருசிற்பனாவது ஒரு எஜமானாவது செய்யச்சொன்னபடியே அனேகருஞ் செய்கையினால் ஒருவனே கர்த்தனென்னில், இந்த எஜமானுஞ் சிற்பனுந் தனக்காகிற உபகரணங்களைக் கொண்டு அவர்களைச்செய்யச்சொல்வதுபோல் ஈஸ்வரனுந் தன்னாலே யனேக சத்திகளை யுண்டாக்கி அவர்களைக்கொண்டு பஞ்சகிருத்தியங்களுஞ் செய்வானென்னில், நாமுமப்படித்தான் அவன்சொன்னபடியே அனேகர்கூடி ஆகவேண்டுமென்ற றென்றறிக. ஆனால் ஒருவனாலே யாமென்பதுபொய். ஒருவனொருதொழிலைச்செய்யும்போது அனேகவுபகரணத்தாலும் அனேகராலுங்கூடி அந்தந்தத்தொழில்முடிவதுபோல்,ஈஸ்வரனுமனேகமுபாதானவுபகரணங்களுமனேகருங்கூடிச்சிருஷ்டியாதி தொழிலைச்செய்வதென்றறிக. இப்படியனேகராலேதொழில்கள் பலவிதமாய் விரிகிறதே தடத்தலட்சணமென்றறிக. இனிப் பெத்த நிலையாவது, இப்படியனேகர் கூடி யனேகந்தொழிலைச் செய்யு மிடத்து அதில் விழுந்து தொழிற்படுகிறபதார்த்தம் போலச் சீவராசிகள் அனேக ஈஸ்வரர்தொழிலிலகப்பட்டுச் செனனமரணப்படுவதென்றறிக. இனிமுத்தி நிலையாவது, தொழில்செய்வாரு முபகரணமுமில்லாத விடத்துத் தொழிற்படுகிற பதார்த்தம் தொழிற்படாதுபோல அவர்களெப்போது தொழில் விடுவார்களோ அப்போது சீவனுஞ் செனன மரணப்படாமல் சுகத்திலே யிருக்கும் இதுவே மோட்சமென்றறிக. முன்சொன்ன வீரசைவனுக்குமிவனுக்கும் எல்லாம் பேதமுண்டென்றறிக.

---

௪0-வது-அத்தியாயம்.

## வாமமதம்.

இனிச்சத்தி மதமாவது, இவர்கள் தந்திரஞ்சத்தியாவதுசிற்சத்தி ஒன்றாக வேறொன்று மில்லாம லேகமாய் நின்றது சொரூபநிலை யென்றறிக. இதினின்னிலே பராசத்திமுதலாக ஒன்றிலொன்று ஐந்துசத்திகளுண்டாயிவர்களால் பரமசிவன்முதலாகிச் சதாசிவாதிகள் பேதம், விஷ்ணு வாதிகள் பேதம், பிர்மாதிகள்பேதம், இந்திராதிகள்பேதம், இப்படியொன்றிலொன்றாய் அனந்தகோடி தேவர்கள் முனிவர்கள்ருஷிகள் முதலான மூன்றுவகை சீவன் நால்வகையோனி எழுவகைதோற்றம்-அ௰சா௲-அச்சுகளு முண்டாய்

இதுகளுக்கெல்லாம் தனுகரண புவன போகங்கள் முதலான எண்ணிறந்த வஸ்துக்களுமுண்டாய் சிருஷ்டி திதி இலயத்துக்கு மூலமாய் சத்து சித்தானந்தமாய் பதி பசு பாசமாய் விந்துநாதகலையாய் எண்ணிறந்த சத்திபேதம் புருஷபேதமுமாய் இருக்குமென்றறிக. இனிச் சித்தென்கிறதும், ஞானமென்கிறதும், அறிவென்கிறதும், பிரமமென்கிறதும், ஆனந்தம், அருள், கிருபை,கடாட்சம், மோட்சம், சொர்க்கம், நரகம், போகம், போக்கியம்,சுகந்துக்க முதலான அனந்தகோடி வியவகாரங்களனைத்தும் அம்மைசொருபம் இது தடத்தலட்சணம். இனி முத்தியாவது, இந்த சத்தி யெண்ணிறந்த பேதமானதில் முக்கியமான சத்திகள் குணரூபத்தில் வாலை சிவலை திரிபுரை என்று மூன்றும், இம் மூவருக்கும் மூன்று சக்கரமுண்டு இதற்குப் பொன் முதலான பஞ்சலோகங்களிலே சிற்பசாத்திரப்பிரமாணமாகத் தகடு அடித்து இதிற் பூவிஸ்தாரம் மேருவிஸ்தாரம் முதலான பிரமாணமாக வார்ப்பித்து அதுகளிலே தங்களுக்கிஷ்டமான தேவிசக்கரங்களை ஸ்தாபித்துத்தேவிமகாத்மியம் சொல்லுகிற விதிகளிலே மூலமந்திரம் பீசாட்சரம் ஆவரண தேவதைகள் முதலாக ஸ்தாபித்து ஆவாகனஸ்தாபன சன்னிதான சன்னிரோதன அவுத்துவாசன விதிகளாலே பூசைசெய்து தேவியைப் பிரசன்னத்துவமாக்கிக் கொள்ளும் வகைக்குசாட்சி.

௲௭௯. தளைக்கின்றபவமறுக்குஞ்சக்கரபூசைக்கென்று சமைத்த
வாசம், விளைக்கின்றநறுமலரும்விரைநாறும்பசுஞ்சாந்துமெ
ழில்சூழ்வண்டு,திளைக்கின்றதெளிமதுவுஞ்சேதாவின்செவ்வி
றைச்சிக்கறியுந்தேவர், வளைக்கின்றபதயுகத்தாண் மாகாளத்
திடைகொண்டுவரச்சொல்லாயே.

௲௮௰. உத்தமமாகும்பூசையொளிமதுமுதலைந்தால
முத்தமசத்திமாருமொன்புலைமாதராகு
மத்தமத்தானந்தானுமுறைத்தவரிடங்களாகு
யத்திரமாத்தம்போலோருடம்பவாமடவாரன்றே.

௲௮௧. வலைபுலைவண்ணார்செம்மார்மற்றுமிப்படியில்வந்த
குலமதிற்றையலாரைக்குறித்துநாயகிதானென்றே
யலமறவவரையற்சித்தவரொழிற்சேடம்வாங்கித்
தலையுறக்கொண்டங்குன்னை றலைவிசன்னதியாமென்றே.

௲௮௨. சக்கரமீதிலந்தத்தலைவிசன்னிதியைப்பண்ணு
முக்கிரயாத்திரத்துமுடம்பினுமவளைப்பாவித்
தக்கரசரீரமாக்கியானந்தசத்திதானைத்
தக்கவொன்னாறவையுன்னைத் தலைவிதன்வடிவேதானும்.

௱௮௩. வாக்கொடுமனத்துக்கெட்டாமனோன்மணிதன்னையுன்னி
நீக்கிலாமதுவையுண்டா னினைவெலாமிறந்தொன்றேயா
யோர்க்கொணாவின்பவெள்ளவொளியதாய்ப்புத்திமுத்தி
பாக்கியந்தானேதானும்பரமசாம்பவமீதன்றே.

௱௮௪. ஆக்குதலழித்தல்செய்ய வல்லதமத்தியந்தா
னீக்கொருசமயத்துண்டோ நிகரில்சாம்பவத்தினல்லாற்
றேக்கிடமதுவையுண்டுதெரிவைமார்முலையேதோய்ந்து
வேட்கைவேண்டியவாசெய்யாவினையும்வீடெங்கட்கன்றே.

௱௮௫. சோமனைப்பணையம்வைத்துந் தொடர்புலிதனைமேற் கொ
ண்டு, சூமனைப்பேசுவித்துமூலகத்தையுருகப்பார்த்து
மேமமுற்றிடப்பிணத்தைதயெழுப்பியும்பின்னுமெல்லாந்
தாமநற்சாம்பவத்திற் றகுபவர்செயல்களன்றே.

௱௮௬. சத்தியேயனைத்தினுக்குந் தாவரமாதலாலே
சத்தியையாராதித்துத்தகுமரன்சமைத்தவாற்றால்
வத்துவேகொள்ளத்தன்னில்வருதருமூலாசமுத்தி
யத்தனுரைத்தவாறென்றறைந்தனன் வாழியாவோன்.

வெண்பா.

௱௮௭. தன்னியசுடகச்சமயிகாளெவ்வுருவும்
பெண்ணுருவிற்காணும்பிறப்பதெலா-முன்னறவே
புத்தியுடன்முத்திப்பொருளுந்தரும்பிணமே
சத்தியிலாததெலாந்தான்.

இப்படிச் சக்கர்பூசைகளைச் செய்து இந்தப்படியாக ஸ்திரீகளுடைய யோனிச்சக்கரங்களையும் பூசைசெய்து சாபானுக்கிரக சாமர்த்தியராய் அஷ்டமாசித்திகளை யடைவாரென்றறிக. இப்படிப் பெற்றபேர்கள் அனாதியாக அனேகருண்டு. பின்னும் நவநாதசித்தர் முதலனேகருண்டென்றறிக. இனிப் பஞ்சகிருத்தியமுதலான தொழில்களுந் திருக்கு திருஷ்டா திரிசியமுதலான வஸ்துக்களும் புசிப்பும் புசிக்கிற பதார்த்தமும் கொல்வதுஞ் சாவதும் பிறப்பது மிறப்பதும் பொய் மெய் பாவம் புண்ணியஞ்சொர்க்க நரகமெல்லாம் அவளையல்லாமல் வேறொன்றில்லாமையால் அவளே யல்லாமற்றன்சேஷ்டை யற்றதுமோட்சமென்றறிக. இனிச்சிற்சத்தி நாமரூபகிரியாரகிதமாயொன்றாயிருப்பது சொரூபலட்சணம், இனித் தானேமாயாசொரூபமாய்ப் பிண்டாண்ட சீவ ராசிகளானது தடத்தலட்சணம். இனிப்பஞ்சமகாபாதகமுதலான தொழிலைத் தேவிசெய்கிற தொழிலென்றுமற் றன்செயலாய்க் கொண்டு நரக சொர்க்க மனுபவிப்பது பெத்தநிலையென்றறிக. இதுவெல்லாமவள் சொரூபமே யவள்தொழிலே யல்லாமல் தன்செயலனு

மாத்திரமுமில்லை யென்று அம்மையைச் சக்கரபூசைசெய்வது மோட்சமென்றறிக. இவர் ஆனந்தமே யாத்மாவென்பர் மோட்சமு மானந்தமுமே யென்பரென்றறிக. இனி முன்சொன்ன அனேகேசுரவாதிக்குமிவனுக்கும் பேதமென்னென்னில், அவன்அனேகேசுரராலா மென்கையில் இவன் அம்மையாலெல்லாமாமென்கையால் வேறென்றறிக.

---

சக-வது-அத்தியாயம்.

## வயிரவமதம்.

ரஅஅ. ஆதியாம்வயிரவன்றனெட்டதத்துவங்களாகிச்
சோதியாமவையேவர்தெட்டாகியகலையாய்த்தோன்றி
நீதியாங்கலைகடானேயகிலமாம்பெத்தமுத்தி
யாதியாம்வயிரவத்திறைனையாலுயிர்கடாமே.

என்பது, ஆதிபயிரவன் எட்டுத்தத்துவமாகிற எட்டு வயிரவனு மிந்த எட்டும் எட்டுகலையாய்த்தோன்றி யிந்தக்கலைகள் தானே யகிலமும் பெத்த முத்தியும் ஆதிவயிரவனுஞ்ஞையாலே சிவராசிகளுமாமென்றறிக.

ரஅக. என்றவத்தத்துவங்களியைந்தவவ்வடைவிற்கேளாய்
துன்றுநற்சுதந்திரன்றன்சுவேச்சையான்லோகன்கால
னின்றவுக்கிரன்பிரச்சைநின்மாணன்பூடணன்று
னென்றபயிரவமெட்டாகுமினிக்கலைவிதமுங்கேளாய்.

என்பது, தத்துவங்களாகிற வயிரவன் பெயராவது, சுதந்திரவயிரவன்-சுவேச்சையா வயிரவன்-உலோக வயிரவன்-காலவயிரவன்-உக்கிரவயிரவன்-பிரச்சையா வயிரவன்-நின்மாண வயிரவன்-பூஷண வயிரவன்-என்று அ-ம். இனி கலைகளாகிற விதமுங் கேட்பாய்.

ரகூ0- வானவளியங்கியப்பு மண்ணெனவறைந்தவைந்தின்
றனுறுபிசமாகுந்தருகலையைந்துஞ்சாற்று
மூனமிலமுதமோடுவிடகலைகாரணந்தா
னெனவெண்கலையாமிந்தவகிலமற்றுஞ்ஞையுங்கேள்.

என்பது, முன்சொன்னஅட்டவயிரவரும் எட்டுகலையானவிபரம். ஆகாசாதிபூதம்-ரு-ம். அமிர்தகலை விடகலை காரணம் இப்படி எட்டுகலையாயிந்தக் கலைகளால் அகிலங்களாஞ்ஞையாலே யுயிர்கள் நடக்குமென்றறிக. இப்பால் ஆபத்து-விக்கம்-பயம்-அந்தம்-இந்தநாலாஞ்ஞையும் உத்தாரணப்பயிரவர் நால்வராலேநடக்கும். இனி காலங்-கருமம்-உ[illegible]ாமை-சென்மமாகிற நாலாஞ்ஞையும் மற்ற நாலுவயிரவராலேநடக்கும். ஆகையால், எட்டாஞ்ஞையும் உதராதிபோக வயிரவர் நால்வராலே நடக்கும். போக போக்கியமுஞ்

செனனமரணமுநடக்கும். இனிக் காலவயிரவராதிநால்வராலேயோகமுஞ் சுத்தநிர்வாண முத்தியுஞ் சீவராசிகளுக்குண்டாமென்றறிக. முன்போகமார்க்கத்திலே செனனமரணப்படுகிற பேருக்கெல்லாம் பூசையாலும் பலிகளாலும் முத்திரைகளாலும் இதுகளாலே விபங்களுண்டாம். இதுகளல்லாமல்யோகமு மூர்த்தமுமிரண்டால் நிர்வாணமாகிற மோட்சமுண்டென்றறிக.

௱௯௧. அனாதிபயிரவமொன்றெட்டாமதிலெட்டோடவையுமாகுந்
தனாதியாநால்வர்நால்வர்தந்தசாத்திரங்களெட்டாம்
முனாதியாம்போகயோகமுறைமுறைவகுத்துவைத்துப்
பினாதியாமுத்திநல்குமெனவயிரவன்றான்பேசும்.

என்பது, அனாதிபயிரவனொருவனே எட்டு வயிரவனாய் அவ்வெட்டு வயிரவரும் எட்டுகலையாய் இந்த வயிரவர்தானே எட்டாஞ்ஞையாம். இந்த ஆஞ்ஞை எட்டாலே நாலுவயிரவர் எட்டுசாத்திரமுண்டாக்கினார். இதினாலே நால்வர்போகமும் நால்வர்யோகமுஞ் சொல்லிப் பினாதியான முத்தி கொடுக்குமென்றது. பின்னுமொருசாத்திரம்.

வெண்பா.

௱௯௨. ஏகமாய்வயிரவமென் னுத்துவமாயென்கலையா
யாகியஞாலந்தன்னாஞ்ஞையாற்-போகமா
முத்தரிக்குநால்வரானால்வராலியோகத்தால்
வித்தரிக்குமன்னரவால்வீடு.

பின்னொன்றில்சங்காரகாலவயிரவன்-அசிதாங்கவயிரவன்-குரோதவயிரவன்-சண்டவயிரவன் இந்தநால்வராலும் சிருஷ்டியாதிகளுஞ் சீவன்களையுஞ்செகத்துகளையு முண்டாக்கிப் போகபோக்கியங்களையுங் கொடுத்துக்காவலாயும் காப்பனென்றறிக. உன்மத்தவயிரவன்-கபாலவயிரவன்-விபூஷணவயிரவன்-மார்த்தாண்டவயிரவன் இந்தநால்வராலும் யோகபாவனையாலே சீவராசிகளுக்கெல்லாம் வயிரவர்சொன்ன சாத்திரப்படியே வயிரவச்சக்கரத்தைப் பூசைசெய்து மதுபான சுராபான மாம்சாதிகளாலும் சுத்தநிர்வாணமுத்தியைக்கொடுப்பர். இனி ஆதிவயிரவனொருவனாயிருப்பது சொருபலட்சணம், இவன் எட்டுவயிரவன் எட்டுகலை எட்டாஞ்ஞை சீவராசிகளாய் விரிகிறது தடத்தலட்சணம். இந்த எட்டில் நால்வரால் செனனமரணப்படுவது பெத்தநிலை. நால்வரால்யோகமாய்மதுவுண்டு வயிரவமந்திரத்தியான பூசையாலே துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்துவயிரவனையடைகிறது மோட்சமென்றறிக. இனி முன்சத்தி மதத்துக்குமிவனுக்கும் பேதமென்னென்னில், அவனந்தசத்தியே யெல்லாமாயிற்றென்று சொல்லும் போதுவயிரவர்நால்வரால்போகமும்நால் வராலியோகமுமென்கையாற்பேதமுண்டென்றறிக.

சஉ-வது—அத்தியாயம்.

## கவுளயாமளை மதம்.

கவுளயாமளைமதமாவது, சத்தியாலெல்லாமாயிற்றென்கையா விவளை யடைந்தபேர்கள் சத்துவநாத, சலோகநாத, ஆதிநாத, அகுளிதநாத, மதங்கநாத, மச்சேந்திரநாத, கடயந்திரநாத, கோரக்கநாத, குக்குடநாத,மென்கிற இந்த நவநாதர்களால் கற்பிக்கப்பட்ட கொலையாதி பஞ்சபாதகமான நிஷேதகன்மமுதலானசாத்திரங்களி லுச்சாடன, மோஹன, ஸ்தம்பன, மாரண, ஆக்ருஷ்ண, வித்துவேஷண மென்கிற ஆறுவிதத்தில் உச்சாடனமாவது, பூர்வசுகாசியை முதலான மிருத்துக்களேயும் பெண்டீர் பிள்ளை பந்துக்கள் சிநேகிதரையு முண்டாயிருக்கிற வொருவனுக்கிதுகளெல்லாம் வேறுபட்டு அவனுங்கூட ஓடிப்போகச்செய்வதும் சத்துருக்கள் தண்டுவிட்டராசாக்கள் இவர்கள் முதலான பேரோடிப்போகச்செய்வதும்.

இனிமோஹனமாவது, சுழித்தி யவஸ்தைபோல மெய்மறந்து கிடக்க விஷங்களேறித்தலைமண்டைக்கொள்ள மூர்ச்சையடிக்கடிவரச் செத்தாற்போல மோகமாயிருக்க இப்படித் தனக்கு வேண்டாதபேரைச்சதுர சீகரணமான விலட்சணஞ்செய்வதும் இதல்லாமற்றன்மேலெல்லாருமோகமாயிருக்கச்செய்வதுமாம்.

இனி ஸ்தம்பனமாவது, அக்கினிஸ்தம்பனம், சலஸ்தம்பனம், இந்திரியஸ்தம்பனம், பிஷ்கஸ்தம்பனம், சிங்குவைஸ்தம்பனம், கதிஸ்தம்பனம்,ரூபஸ்தம்பனம், வாய்வுஸ்தம்பனம், பூமிஸ்தம்பனம், ஆகாசஸ்தம்பனம், சந்திரசூரியநட்சத்திரஸ்தம்பன முதலானதுகளுஞ்சரிக்கிற சீவராசிகளெல்லாஞ்சரியாமலும் ஸ்தம்பிக்கச்செய்வதாம்.

இனிமாரணமாவது, அவசாரகன்மஞ்செனிக்கிற வியாதி வழியாகவும், நானாவிதமாகவருகிற பயங்கள்வழியாகவும், ஒருவர்பேதிப்பிக்கிற பயங்கள்வழியாகவும், அகாலமிருத்துக்களாய் மரணமாய்ப் போவது.

இனி ஆக்ருஷ்ணமாவது, மண்டலாதிபர் சத்துருக்கள், வஸ்திராபரணவாகனவனிதாதி, இரத்தினாதி, மற்றுமுள்ள வஸ்துக்கள்முதலான தெல்லாந் தானிருக்கிற விடத்தில் வரத்தக்கதாகச்செய்வது.

இனி வித்துவேஷணமாவது, பிராணசகித அன்னியோன்னிய முதலான பேர்களை யொருவனுக்காகாமல் துவேஷஞ் செய்விக்கிறது.

இந்த ஆறுமல்லாமல் வசியமாவது, இராஜவசியம், ஸ்திரீவசியம்,ஜநவசியம். ஜ்வாதபிராஹாவேதமும்மாவது, இதல்லாமல் ஆயேரணமாவது,பாதுகாகாசித்தி, அஞ்சனசித்தி, குளிகாசித்தி, மூலிகாசித்தி,இரஸவாதசித்தியிதுமுதலான சித்திகளாவது, இப்படியிந்த அஷ்டகர்மமும் வந்து ஆகாசகெமனமுதலான தூரதிஷ்டி, தூரகெமனம், இதுகள் கைவந்தாலிதுவே மோட்சமென்பார். இதுகள் வருகிறவித மெப்படியென்னில், சத்திகளில்வெகுபேதங்களுண்டு ஆறுகோடிமாயாசத்திகளும் பின்னுஞ் சத்தமாதர் சத்த துற்கி

கள் சத்தகன்னிகைக ளிப்படி யனந்தபேத சத்திகளுண்டு, இவர்களெந்தக் காரியம் நினைத்தாலு மந்தக்காரியத்துக்கேற்ற சத்திகளும் அதினதின் மந்திரங்களும் செபங்களுந் தியானங்களும் வேறுவேறாயுண்டு. அப்படிக் காரியத்துக்கேற்ற கற்பங்கள் சொல்லுகிறபடியே செபம் பூசை ஓமந் தற்பணம் பலி தானதர்மம் இதுமுதலானதுசெய்து பக்திவயிராக்கியத்தாலே தேவதாப்பிரசன்னத்துவமாய் நினைத்தகாரிய மாமென்றறிக. இவரும் ஆனந்தப்பிராப்தியே மோட்சமுமிதுவே யாத்மாவுமெனபர். இப்படிவெகுவித்மாயுண்டு இதுவெகுதொகையாகச்சொன்னதென்றறிக. இனியொருசத்தியே முதலென்பது சொரூபம், இந்தச்சத்தி யெண்ணிறந்த சத்தியாய்ச் சர்வதந்திரத்துக்கும் வியாத்தி வியாபகமாய்ச் செகசீவ தந்திர மந்திரமாய் விரிகிறது தடத்தலட்சணம். இனி நவநாதசித்தர்களாற்செய்யப்பட்ட சாத்திர வழிகள் நடவாமற்போவதே பெத்தநிலையென்றறிக. இனி முன்சொன்ன அஷ்டகன்மங்களுங் கைவந்து ஆனந்த பூர்த்தியாகிறதே மோட்ச மென்றறிக. இனிவயிரவத்துக்கு மிதற்கும்பேதமுண்டென்றறிக.

---

## சரு-வது—அத்தியாயம்.

## ஊர்த்தசைவம்.

ரசஙரு. சொன்னவீரெட்டாஞ்சைவர்தந்திரத்தொழிற்பாடோதி
லுன்னியவூர்த்தசைவர்க்கோதுபல்சடைருத்ராட்சம்
துன்னியவிபூதிபூசைதோன்றுநூலுடனேயீசன்
பின்னவில்தத்துவாதீதனெனப்பெயர்பேசலாமே.

என்றது, பதினாறு சைவர்தந்திரபேதங்களிலூர்த்த சைவமாவது, சிவனொருவனுண்டென்றும், அவன் தத்துவாதீதனென்றும்சொல்லுவர். இந்தச்சிவனையடையும் வகை பலசடைதரித்து உருத்திராட்சம் விபூதி தரித்துச் சிவலிங்கத்தைப்பூசைசெய்து பூணூல்தரித்து வேடம்பொருளாகப் பக்தி செய்து பஞ்சாட்சர செபிதனாய்த் துறவியாகிலுஞ் சம்சாரியாகிலும் இப்படி யிருப்பதென்றறிக.

---

## சச-வது—அத்தியாயம்.

## அநாதிசைவம்.

ரசஙச. பதிபசுபாசமூன்றும்பார்த்திடிலநாதிநித்தம்
விதிபெறுவியார்த்திமென்ன விளங்குமுக்குணத்தாலொக்கு
முதியவேடங்களோடேமூடுகுயர்ப்பாசநீங்கிப்
பதியுடன்கூடிக்கும்பிட்டிருத்தலேபரமாமுத்தி.

என்றது, பதி, பசு, பாசமூன்று மனுதியாய் நித்தமாய் வியார்த்தமாய்ப்பிரகாசிக்கும். இப்படிக்கொத்த சிவனைமுக்குணம்விகற்பமில்லாமலொத்து விபூதி உருத்திராட்ச பஞ்சாட்சரங் குருலிங்க வேடம் பொருளாகக் கொண்டு சிவபூசைசெய்து பாசங்களைநீங்கிப் பதியுடன்சேர்ந்து ஆத்மாவானவன் சிவனைக்கும்பிட்டிருத்தல் பரமாகியமுத்தியென்றறிக. இன்னொருவிதம்சிவனே அனுதிசைவனென்றுசொல்லும்.

---

## சரு-வது—அத்தியாயம்.

## ஆதிசைவம்.

௱சகூ. ஆதிக்குஞ்சிவனேயாகியவன்றன்னுற்கருமமைந்து
மீதுற்றகாதலாலேவிளங்கிநிட்களத்தினோடு
கோதற்றசகளமாகும் பதியதுபோகங்கூடி
லாதத்தால்முத்திவேடம்பூணலாலம்மையாமே.

என்றது, பசுவின்பொருட்டாக அவன்மேல்மோகத்தாலெல்லாவற்றிற்கும் சிவனேயாகிப் பஞ்சகிருத்தியங்களைத் தூலக்கி நிஷ்களத்தோடு சகளமாக விருக்கும். பதியாவது, இந்தப்பதியோடுபோகங் கூடவேண்டல்மோட்சசாதனங்களுக்கேற்றவேடங்களு நடக்கையும்பூண்டு எல்லாஞ்சிவபோகமாயனுபவித்து விபூதி உருத்திராட்சங்கள் வேடத்தின்மேல் விசுவாசமாயிப்படி நடந்தாற் பதியோடு கூடியவனிருந்தாற்போல அவன் போகமாயாத்மா விருப்பானென்றறிக. பின்னொருவிதம்சிவன் முகமைந்திற்றீட்சதரானகௌசிகாதிரிஷியேசுவரரோ ஆதிசைவரொன்றுசொல்லும்.

---

## சசு-வது—அத்தியாயம்.

## மகாசைவம்.

௱சசு. யாததாமூர்த்தாமூர்த்தமனேத்தினுமேலதாகி
யோதிடுஞ்சிவனைவேதமுயருமாகமங்களோது
மேதமில்சடையேபூதிவேடம்பூண்டிறையைப்பூசித்
தேதமிறியானங்கூடவிறைபருள்கூடலாமே.

என்றது, சிவனானவன் மூர்த்திகள் அமூர்த்திகளான பேருக்கெல்லாவற்றிற்கு மேலானதுசிவ்மென்றுவேதாகமங்கள்சொல்லும். அப்படிக்கொத்த சிவனைச் சன்மார்க்கத்துடனே கூடிச் சம்சாரந்துறந்து சடை விபூதி வேஷமெல்லாந்தரித்து நித்தஞ் சிவபூசாதந்திரங்களுடனே சிவ பூசையுஞ்செய்து பின்பு சிவனைச் சகுணரூபமாகத்தியானஞ்செய்து குருலிங்கவேடம்பொருளாகக்கொண்டு இப்படி நடந்தா லருள்கூடி முத்திபெறலாமென்றறிக. பின்னுமொருவிதம் முன் இரிஷிகள்கோத்திரமாய்த்தீட்சதருமான சிவத்துவசரோ மகாசைவரொன்றுசொல்லும்.

சஎ-வது—அத்தியாயம்.

## பேதசைவம்.

௱கூஎ. பேதசைவந்தானீசனுருவருருபாரூப
மாதலால்வேடம்பூண்டிட்டடைவியலுருவந்தன்னை
நீதியால்வணங்கமுத்தியெனதடல்.

என்றது, சிவனானவன் ரூபம் அரூபம் ரூபாரூபமாயிருப்பன். இந்தச்சி வனைச் சன்மார்க்கத்துடனே கூடித்துறவிலாவது சம்சாரத்திலாவது விபூதி உருத்திராட்சம் பஞ்சாட்சரமிதுமுதலான வேடங்கள்பூண்டு சிவனடியார்க ளையும் இலிங்கத்தையும் குருவையும் வழிபட்டுச்சிவனுடைய மூன்றுருபிலு ந்தியானஞ்செய்து வணங்கல் மோட்சமென்றறிக.

---

சஅ-வது—அத்தியாயம்.

## அபேதசைவம்.

௱கூஅ. பூதியேசடையேவேடம் பூண்டலேமுதலாயுள்ள,நீதியால்.

என்றது, பேதமில்லாமல் அபேதமாயிருக்கிற சிவனைச் சைவத்துக்கு ள்ள வேடம் விபூதி ருத்திராட்ச பஞ்சாட்சர குருலிங்க வேட மிதுவெல்லா ம் பொருளாய்க்கொண்டு சன்மார்க்கமாகச் சிவனைத்தேடி யவன் சொருப மறிகிறதே முத்தியென்றறிக.

---

சகூ-வது—அத்தியாயம்.

## அந்தரசைவம்.

௱கூகூ. எவ்வகையுயிர்க்குமீசனுள்ளுளாயிருத்தலாலே
யவ்வயினதனைநாடிவேடமாதிகளால்.

என்றது, எவ்வகையுயிருக்கு முள்ளேயிருந்துணர்த்துவிக்கிற சிவனை தேடி யவனுக்குச்சாதனப்பட்டுச் சைவவேடங்களெல்லாந் தரித்து வே மேபொருளாக அவனிருக்கிற வியல்பை நாடுவதே முத்தியென்றறிக. பி ன்னொருவிதம் தீட்சாவிதரான சாதிகளே யந்தரசைவமென்றறிக.

---

௫0-வது—அத்தியாயம்.

## குணசைவம்.

உ௱. குணசைவங்குணமெட்டாலுங்கூடியசிவனையேத்தல்.

என்றது, சிவனானவன் எட்டுக்குணங்களேயுங் கூடி யிருக்கிறவனுடை யால் தன்னெட்டுகுணத்தாலுஞ் சிவனை யேற்றிவேடங்கள்பூண்டு அடிமை யாகத்திரிவதே முத்தியென்றறிக.

## ருக-வது—அத்தியாயம்.
## நிற்குணசைவம்.

உாக. குணமிலாச்சைவநிற்குணத்தருவுருவைக்கூடல்
பிணையிருவிகற்பத்தாலும்பேதங்கூடலாலே.

என்றது, குணமில்லாம லருவுருவுமல்லாமலிருக்கிற நிற்குண சிவனை யிரண்டு பேதமு மற்றுக்குணமில்லாதே கூடல்முத்தியென்றறிக.

---

## ருஉ-வது—அத்தியாயம்.
## அத்துவாசைவம்.

உாஉ. வன்னமேகலையேதத்துவமந்திரம்பதமேபூமி
யன்னவாரத்துவாவினந்தமிராறினந்தந்
தன்னிலேமனனஞ்சாரச்சாதித்தன்முத்தியாமே.

என்றது, சிவனானவன் நாமரூபக்கிரியாரகிதனாய் சுத்தனாய் நிஷ்களனாயிருக்கிற சிவனைச் சத்திநிபாதம்வந்த சீஷன் குருவையடைந்து தீட்சதனான சீஷன் சைவத்துக்குள்ள வேஷங்கள் தரித்துக் குருலிங்க வேடம் பொருளாய் அத்துவாசோதனை செய்து அவற்றின் முடிவைதியானித்துசகசமாதி நிஷ்டைசாதித்து வழிப்படுவது மோட்சமென்றறிக.

---

## ருஈ-வது—அத்தியாயம்.
## யோகசைவம்.

உாஈ. யோகமட்டாங்கந்தன்னிலுயர்தருசாதனத்தா
லாகியசித்தி.

என்றது, நிற்குணனாயிருக்கிற சிவனைக்குருவாலறிந்து யோகசாதன வேஷங்கள்தரித்து ஏகாந்தஸ்தலங்களிலிருந்துக்கொண்டு யோகசாத்திரப்படியே அஷ்டாங்க யோகங்களைச்சாதித்து அதுகளிலே தவறுகள்வராமல் நின்று அஷ்டமாசித்திகளைப்பெறுவது மோட்சமென்றறிக.

---

## ருச-வது—அத்தியாயம்.
## ஞானசைவம்.

உாச. மீதுவேடமதேயிக்கசடையுடன்மெய்மைகூடிப்
போதமேயாகிமிக்கபரத்துடன்புணரும்போதில்.

என்றது, நித்தனாய் நின்மலனாய் நிஷ்களனாய் பரமசிவனாயிருக்கிறவனைக் குருமுகமாய்த்தெளிந்து சைவத்துக்குள்ள வேடமெல்லாந் தரித்துச் சீவ

பரபேதமறிந்து ஆத்மாபரத்துடன் கூட நிஷ்டைசாதித்துச் சுத்தாத்மாவாய்ப் பரத்துடனே கூடுவது மோட்சமென்றறிக.

---

## ருரு-வது—அத்தியாயம்.

## அணுச்சைவம்.

உாரு. அகம்புறமிரண்டுமீசனைந்தொழிலதனுஞ்செய்ய
திகம்பரமதனல்வேடஞ்சீர்பெறப்பூண்டுதானே
சுகம்பெறவீடதென்றான்.

என்றது, நித்தியமாயிருக்கின்ற சிவனையுள்ளும் புறம்புமாய்ப் பஞ்சகிருத்தியமுஞ்செய்கிறவனென்றறிந்து திகம்பரவேடங்கள் பூண்டுசன்மார்க்கலட்சணத்துடனே கூடிக் குருலிங்கவேடம் பொருளாய்ச் சிவன் செய்கிற தொழில்களையனுபவத்திலே பார்த்து ஆனந்தம்பொங்கியதில் மனோலயமாகிறதேமோட்சமென்றறிக. பின்னுமொருவிதம்சிலசற்காரியான க்ஷத்திரியரோ அணுச்சைவராமென்றறிக.

---

## ருசு-வது—அத்தியாயம்.

## கிரியாசைவம்.

உாசு. சமயமேவிசேடம்வேறுதகுநிருவாணத்தோடு
மமைவிலாக்கிரியாதிட்சையானவைசெய்துபூசை
நியமுடனித்தமுத்தியென்றிடநிகழ்கன்மத்தா
லமைவதாமுத்திகூடவருச்சனைகிரியையாமால்.

என்றது, சுத்தமான சதாசிவமூர்த்தியையறிந்து குருவையடைந்து சமயவிசேஷ தீட்சையும்பெற்று அத்துவாசோதனை யாசாரியனாலே செய்யப்பட்டு நிர்வாண தீட்சையோடு கிரியாதீட்சையும் பெற்று ஆவாகனாதிபேதமுமறிந்து பஞ்சசுத்தியுஞ்செய்துகொண்டு சைவசாத்திரப்படியே நியமமுடனே நித்தமுத்தி பொருந்த இதற்கேற்ற கன்மங்களைச் சாதித்து அதிலேபமைந்து சிவனையர்ச்சனைசெய்து சோடசோபசாரம் அஷ்டவிதார்ச்சனையுஞ்செய்வதுமோட்சமென்றறிக.

---

## ருஎ-வது-அத்தியாயம்,

## நாலுபாதசைவம்.

நாலுபாதசைவமாவது, சரிதையாதி நாலுபாதத்திலும் ஒன்றொன்றாக நின்று ஏறிவந்து பின்பு ஞானபாதத்தில் வந்து எவர்களுஞ் சிரிக்கவும் எவர்களுக்கும் விரோதமாகவும் அச்சமாகவும் நடந்து தீவிரதர சத்திநிபாதமு

டையனும் சுத்தவிரத்தனுய் சனக சனகாதிகளுக்குப்போதித்தவொருமொ ழியால் சமாதிநிஷ்டைபொருந்திபிரமத்திலடைகிறது மோட்சமென்றறிக.

---

## ௫அ-வது-அத்தியாயம்.

## சுத்தசைவம்.

டாஎ. ஓதியசமயமெல்லாம்பாசசாலத்தொழித்து
நீதியாஞ்சுத்தசைவநிலையதுநிகழ்த்துங்காலை
வேதகவேதாந்தத்தோடாயிடமிகுசித்தாந்த
போதமென்ருகவுன்னிப்பொருளதாய்நிற்மலாமே.

என்றது, பதி பசு பாசமூன்றும் நித்தியமென்றறிந்து இதிற் சச்சிதா னந்தப் பிரமம் நிச்சயம் பிறந்து முன்சொன்ன சமயங்களெல்லாம் பாசசா லமாக்கி வேதாந்த சித்தாந்தத் தீர்வாய்ப் பசுபாச முதலான பந்தங்களுமிற ந்து நாலுமுத்திநிலையுங் கடந்து மகாமவுனமே பொருளாக. இலயமாக நிஷ் டை சாதித்துப் பிரமத்தோடு ஏகனுவது மோட்சமென்றறிக. இனி ஊர் த்தசைவமுதலாகச் சுத்தசைவ மந்தமாகப் பதினறு சைவமு முடிந்தது.

இந்தப்பதினறும் பேதசைவமென்றறிக. இவைகளுக்குச் சொரூபந் தடம் பந்தம் முத்தி இவைகள் சொல்லுகிறதற்கு வெகுசங்க்ஷேப மாய்த் தொகையாய்ச் சமயப்பெயர் மாத்திரஞ் சொல்லுகையால் அந்த நான்குஞ் சொல்லவில்லையென்றறிக.

---

## ௫கூ-வது-அத்தியாயம்.

## உலோகாயிதன்மதம்.

உலோகாயிதன் மதமாவது, சொரூபலட்சணம் நித்தியமா யொருக்கா லுங்கெடாத யியல்பாயொருவராற்கற்பிக்கப்பட்டதல்லவாய் நின்றதுநான் குபூதமுமென்றறிக. இனித்தடத்தலட்சணம், இந்தநான்குபூதமுங்கூடின விடத்தி லெழுவகைத் தோற்றமான சீவராசிகளான தென்றும்,நான்குபூத முங்கண்ணுக்குக்காண்கையாலே பிரத்தியட்சப்பிரமாணமேயுள்ளதென்று ங், கந்த ரஸ ரூப பரிசம் இந்தநான்கு நித்தியவியல்பா யிருக்குமெனறுஞ், சுண்ணும்பும் வெற்றிலையும் பாக்கும் கூடினவிடத்தில் ஒரு சிவப்பெழுந்தா ற்போலும், காஷ்டத்தைக்கடையும்போது அனல்பிறந்தாற்போலும்,நான்கு பூதத்தின்கூட்டுறவால் புத்தி குணம் பொறி புலன்முதற் பதினறுகரணமா னபோதமுண்டாயிதனுலேபிண்டப்பிர்மாண்டங்களெல்லாச்சீவனு முண்டா ம். அதெப்படி யெனனில்,

உாஅ. ஒத்துறுபுணர்ச்சியினுருக்கள்பலவாகும்
வைத்துறுகடாதிபலமண்ணின்வருமாபோற்
புத்திகுணநற்பொறிபுலன்களிவையெல்லா
மித்தில்வருநீரினிலெழுங்குமிழியொத்தே.

இந்த நான்கிலொருபூதம் பிரிந்தால் மரணமென்றும், மரணமானாற் பிண்டத்திற்பூதம்நான்கும் அண்டத்திற் பூதத்தோடுகலந்துபோமென்றும், மறுபிறப்பில்லை, சாகிறபோது வாயுமுந்தப் பிரியும் பின்பு மூன்று பூதமும் பிரியும், பூதம் நான்குங்கூடின விடத்திற்போதம்பிறந்து சகலவிஷயபோகங்களை யனுபவிக்குமென்றும், ஈசன், ஆத்மா, ஆகாசம், விண், மறுபிறப்பு காலம், திக்கு இதுகளில்லையென்றும், இனி ஷட்பாவஞ விகாரங்களையும் நான்குவன்னமும் நான்காசிரமங்களுஞ்சகலவியாதிமுதலானசுகதுக்கங்களை யனுபவிக்கிறதும், பிரத்தியட்சமான தேகமேயல்லாமல் உள்ளேயாவது புறம்பிலாவது பிரிவாய்க்கண்டதில்லை என்றுங் கரணமாவது, மனதேயல்லாமல் வேறில்லை, பூதமுங்காலமும் நித்தியவியல்பு, வினை யாத்மா சிவன் உண்டென்பது, ஆகாசத்தில் மரம் பூத்துக் காய்த்துப் பழந்தின்றதற்குச்சரியென்றும், மலடிமகன் முசற்கொம்பேறி ஆகாயப்பூவைப்பறித்த தொக்குமென்றுந், தேகத்தை யறுத்துப்பார்த்தால்நான்குபூதச் சம்பந்தங்கண்டதல்லாமல் வேறுசீவன் சிவன்கன்மங்களைக்கண்டதில்லையென்றுஞ் சொல்லுவாரென்றறிக. அறிவாவது உடற்குணம், சிற்றுடல்பேருடலாவது, பூதத்தன்மையல்லதுவேறில்லை. இந்ததேகம் விட்டுப் பின்னொருதேகத்திற் பிறக்குமென்று சொல்லில் ஆறிப்போனதிபம் ஒருவிடத்திற் போயிருந்து திரும்ப ஒருதிரியிலேவந்து பற்றுவதொக்கும். ஒருவனுண்ட சோறு அவனுதிரத்தில் அற்ப்பின்பு பலிக்கிறதற்கொக்குமென்றும், அறிவு புத்தி வாழ்வு சுகதுக்கம்வித்தியாசப்படுகின்றமையால் கன்மமுண்டென்னில்.

உாகூ. இருவினையென்னையின்பத்துன்பங்களியல்பதென்னி
லொருதன்மையியல்புக்குள்ளவொருவனுக்கிரண்டுசெய்தி
வருவதென்மலருந்தீயுமருவலின்வாசம்வெம்மை
தருவதேனீரொன்செய்துதானியல்பாகுமன்றே.

உாய. இம்மையின்முயற்சியாலேயிருநிதியீட்டியின்ப
மிம்மையேநுகர்வர்செய்தியிலாதவர்பொருளுமின்றி
இம்மையேயிடருழப்பர்வேறிருவினையதுண்டே
லிம்மையின்முயற்சியின்றியெய்திடவேணுமிங்கே,

கைவிரல் கால்விரலேறக்குறைவும் உருசிப்பதார்த்தங்களேற்றக் குறைவும் துற்கந்தம் நற்கந்தமேற்றக்குறைவு மாயிருத்தலால் இதுகளென்னகன்மஞ்செய்தது. ஆகையாலிந்த ஏற்றக்குறைவெல்லாம் பூதத்தி னேற்றக்

குறைவென்றுஞ் சுகதுக்கங் கன்மமென்னில் நீரிற் சந்தனங்கலந்த போது குளிர்ந்தும் அனலிற்கூடினபோது வெப்பமிருக்கையால் அந்த நீரொன்னகன் மஞ்செய்ததென்றும், ஆறுலந்தக்கன்மமாய்ந்து பலிக்குமென்னில், தழை எருபோட்டவிடம் விட்டுப் பின்னொருகழனிக்குப் பலியாதுபோல இவன் செய்தகன்ம மிந்த தேசத்தி லிந்தச்செென்மத்திலே பலிக்கிறதல்லாமற் பின்னோரிடத்திற் பின்னொருசென்மத்துக்குப்பலியாதென்றும், மறித்துபோனபேருக்கு அவர்கள்புத்திரர் பிதுர்கன்மஞ்செய்யிற்பலிக்குமென்னில் அவிந்தவிளக்கில்நெய்யை வார்த்தால் திரும்பத் தீபம் வந்து அந்தநெய்யைப் புசிக்கிறதற்கொக்குமென்றுஞ், சிவனொருவனுண்டாகி லவனுருவமாகில்வாயுவாம். உருவமாகில் நான்கு பூதமுங்கூடினவனும். ரூபாரூபமாய்ச் சோதியாகில் அக்கினிபூதமாம். ஆகையால், நீ சொல்லுகிற தெய்வம் நான் சொல்லுகிற பூதத்திலொருவனுந் தெய்வமில்லாவிட்டால் சிருஷ்டியெப்படியென்னில், பூதத்திலொஷதியுண்டாய் ஒஷதியில் அன்னமுண்டாய் அன்னத்தி லிருநீருண்டா யிரு நீர்களாலுடம்புகளாம். இப்படிச் சார்வாகன்சொல்வது தடத்தலட்சண மென்றறிக.

இனி பந்தலட்சணமாவது, இந்தசார்வாகன் மதமார்க்கத்தைவிட்டுப் பிறமதங்களில் திரிவதும்சற்சந்தன வனிதாதிபோகங்களைவிட்டுத்தபசுசெய்து இம்மைச்சுகத்தைவிட்டு மறுமைச்சுகம்விரும்பி யதுபுசிக்கச்சென்ன மெடுக்கவேண்டுமென்கிறதே பந்தநிலை.

இனி முத்தியாவது, சற்சந்தன வனிதாதி போகங்களைக்கூடிஸ்திரீகளிட ஆலிங்கனஞ் சும்பனந் தாடனம் மைதுனம் நகவர்ணனையிப்படிபஞ்சலீலைகளுடனுங் கூடி யிதுவே பஞ்சமுத்திரையாகக்கொண்டு இவர்கள் பாதத்தில் விழுந்து வருந்துவதேதபசு. இவர்களை முத்தியிடுகிறதே சுகமுத்தி. இவர்கள் யோனியே சுகானந்த சொர்க்கவீடு. அந்தயோனியைக்காணுததே நரகம். இப்படி ஸ்திரீ புருஷர் கூடுகிறதே மகாயோகம், இவர்களது லீலையில் நடக்கிறதே சற்கன்மம், இப்படிநடவாததே துற்கன்மம், இப்படி நான் சொல்லுகிறதைவிட்டுக் காணுமலிருக்கிறதற்காசைப்பட்டுச் சிறைவைத்தாற்போலத் தபசுகள் செய்கிறது எப்படியிருக்கின்றதென்றால், கண்ட தண்ணீரைவிட்டுப்போய்த் தாகவிடாய் மீறி செத்தாற்போலும், பிர்மா விஷ்ணு உருத்திரன் ஸ்திரிகளை நாவிலும் மார்பிலும் பக்கத்திலுந் தலையிலும் வைத்துக்கொண்டு எந்நேரமும் பிரியாலீலையாயிருக்கையால் அவர்கள்பெரியவரானார்கள். அப்படியே இவர் நாஞ்சொன்னபடிகேட்கிற் பெரியவராவா ரென்றறிக. இப்படியிகத்தில் கன்மபோகங்களைப் புசிக்கில் முத்திநிலை யென்றறிக. இதிற்றேகமே யாத்மாவென்கிறவன் சார்வாகன் இந்திரியமேயாத்மாவென்கிறவன்சார்வாகவயிக்கதேசர்பிராணனேயாத்மாவென்கிறவன் இரணிய கெற்பன் சார்வாக வயிக்கதேசர். மனதே யாத்மாவென்கிறவ னொருவன், இப்படி நான்குவகையாமென்றறிக. இந்தநால்வருக்கும் நான்குபூதமேசரீயென்றறிக.

உகக. அறிவுடையவூனதுவே யாத்மாவன்றியகத்தாதல்புறத்தா தலறியிலுன்டோ, பிறிவுடையகரணங்களாதல்பேசிற்பெயர் த்துமனமேயாதல் பிறிதொன்றுண்டோ, முறையொழிய மொய்குழலார்மணமேமுத்திமுகரியசந்தனமவரோசுவர்க்கமா கும், பிறியிலதுவேநரகமெனவும்பேசிப் பின்பினியொன்றில் லையெனப்பிறவிதானே.

உகஉ. சைதனவீசனுத்மாசார்வினைமறுபிறப்பும்
பொய்யதாமளவையென்றேபூதங்கள்புணர்ச்சிகாலஞ்
செய்தவவ்வியல்பாமெல்லாஞ்செனித்தவாறங்குமுத்தி
மைதுனமுலோகாயிதன்வ:டித்தநற்பொருளீதன்றே.

உகங. சுத்தநீராடிவெள்ளைத்துகிலுடுத்தகிலின்றூபம்
வைத்துமெய்க்காரம்பூசிமாலையுஞ்சாந்துஞ்சாததி
யுத்தமமங்கைமாரோடுறைந்துண்டிபாலோடுன்னாச்
சித்தமுங்தெளியுமித்தைச்செய்துநீர்தெளிந்துதேறீர்.

வெண்பா.

உகச. இறந்தார்பிறவா ரிலதுவானீச
னறம்பாவமாயிழையார்கூடல்-சிறந்த
நலமார்சுவர்க்க நரகம்பிரித
லுலகாயிதன்றனுணர்வு.

இந்தச்சாத்திரம் பிரகஸ்பதி பகவான் சொன்னது சாகிறதே நிச்சய மோட்சமென்றறிக. இனிப் பூதம் நான்குமே சொரூபம் இதிற்போதம்பிற க்கிறதே த...த்தம் சற்சந்தன வனிதாதி போக விஷயங்களைவிட்டதே பந் தம் இஃதோடு கூடி வாழ்கிறதே முத்திநிலையென்றறிக.

---

சூ௰-வது-அத்தியாயம்.

## புத்தரிற்சவுத்திராந்திமதம்.

உகரு. முந்துபிடகமுன்றுணர்ந்துசெயிர்நான்கொழிந்துமுதுசில மைந்தும்புனைந்துபார்மீதேயாறைந்தடக்குமியல்புடையோன் கந்தங்கெடுதன்முத்தியெனக் காட்டுங்குரவனிருப்பவுடன் சந்தஞ்சிறந்தபுயிருபனிருந்தான்றுணைபுடைசூழ்க.

உகசூ. நீதியார்வேதநூலி னெறியலாவறங்கணூலு
மோதியோரைந்துசில முடையராயுடலமுடிப்

போதிநீண்மரத்தின்மேவும் புத்தர்நால்வரினும்வைத்துச
சாதிதானிலாதகொள்கைச் சவுத்திராந்திகன்முன்சாற்று.

என்றது, புத்தசுவாமியார் போதிமரத்தின்கீழிருந்து பிடக மூன்றுசாத்திரமுதலானதுகள் வெகுவாயோதி குற்றமாகிற கொலை களவு கள் காமம் இந்தநான்குமொழிந்து இவை சீராவதற்குச் சரணடைந்து நிற்பாருக்குஞ்சாமணபதத்துக்கும் தச சீலம் உபஸமவ நெவதக்னவென்று நிற்பாருக்கும் நூறு சீலம் ஸ்தாபிரபதத்துக்குக் கோடிசீலம்நீலுக்கடையான முதிர்ந்த வர்த்த நிலைதோறுஞ் சீலமாம். உயர்ந்த சனத்திருத்தல்கிடத்தல் ஆக-ரு. இஃதுடனே மாலை கந்த மருவுதல் பொன் வெள்ளி தீண்டல் கூத்துக்காண்டல் பாட்டுக்கேட்டல் பொழுது பிழைத்துண்ணல் இவையைந்தும் கூடச்சீலம். ௰. இதில் முன்சொன்ன-ரு-ம். பிடிப்பது.பின்சொன்ன-ரு-ம். விடுவது. பிரதம சீலமாகையால் ஐந்தெனக்கொள்க. பூமியிற் குற்றமான இராகாதியறு குணங்களைக்குறைத்தல் இந்த ஆறுவது மோகம் ,மதம், இராகம், விஷாதம் சோதிருஷம், வைசித்திரியம், இந்த ஆறுடனுங் கந்தமாகிற ரூபாதியைந்தையு மடக்கி கந்தங்கெடுகிறதே முத்தியென்று சொல்லுகிற ஆசிரியனுர் கூடவிருக்க கந்தகஸ்தூரி சந்தனமுதலான சுகந்தம் புஜத்திலணிந்து சீஷர்களெல்லாஞ் சூழ விருந்தாரென்றறிக.

நீதியார்ந்திருக்கப்பட்ட புத்த சுவாமியார் சொன்ன வேதநெறி யல்லாததா யிருக்கப்பட்ட கொலையாதி யறங்களைத் தின்முமோதி யதுகளைவிட்டு முன்கவியிலர்த்தஞ்சொன்னதென்றறிக.உடல்களைக்கடுக்காய்த்துவர்ப்பிடித்த பிடவை சீவரத்தால் மூடிக்கொண்டு போதிமரத்தின் கீழிருக்கப்பட்ட சவுந்திராந்திகவை சேஷிகமகாயோகி சௌஸ்தா வென்கிற நால்வரில் தர்க்க யுக்திகள்தவருது சாதிபேதமில்லாத கொள்கையான சவுத்திராந்திகன் முன் வைத்துச்சொல்வது.

உகஎ. முழுதுணர்ந்துலகிற்கோறன்முதற்செயன்முனிந்துமற்றும்
பழுதிலாவருளினலேபரதுக்கதுக்கனுகித்
தொழுதுவானவரும்போற்றத்தொல்பிடகங்களான
வழுவிலாகமங்கள்சொன்ன மாதவனுதனுவான்.

என்றது, உலகத்தைமுழுதுணர்ந்து கொலை, களவு,கள், காமம், பொய் இந்த ஐந்துந் தவிர்ந்து குற்றமில்லாதவருளினல் பிறருடைய துக்கத்துக்குத் துக்கிதனுய், பிரத்தனுய், வானவர்களெல்லாருந் தொழுதுபோற்றும்படி பழைய பிடகமென்று பெயரான தப்பில்லாத சாத்திரங்களை யனுக்கிரகிக்கப்பட்ட தகைமையுடையவன் புத்தசுவாமியென்றறிக. இனிக் கண்ணங்கராகு காவீரர்முதலான-உஙு. புத்தர்களுஞ்சொன்ன பிடகசாத்திரங்கள் மரபேசொன்னமையால் அவையாவது விினயன்பிடகம, அவிதன் பிடகம், சூத்திரபிடகம், இம்மூன்றுமெனமற்று மென்றது பிடகம் பன்னிருசார்பு முதலானதென்றறிக.

உகஅ. கொலைமுதற்றவிர்ந்துகூறுங்குற்றமில்லருளினாலே
நிலையிலாமுழுதுணர்ந்துநின்றவர்துயர்கட்கெல்லாம்
மலைவிலாததுக்கியானநிலையினைமதித்துச்சொன்ன
தலைவனேசுத்தநாதன்சாற்றியபொருளுங்கேளாய்.

என்றது, கொலையாதி யைந்துந்தவிர்ந்து குற்றமில்லாதவருளினால் நிலையில்லாமலிருக்கிற அகிலமெல்லாமுழுதுமுணர்ந்துநின்றசர்வசீவன் துக்கத்துக்கெல்லாந் தானுந்துக்கிதனாகி நூல்களையுணர்ந்து சொன்ன தலைவனே, சுத்தநாதன் அவன்சொன்னபொருளுங் கேட்பாய் இந்த விரதங்களுடனுங் கூடிச் சர்வ சீவன் மேல்வைத்த அன்பினால் பலயோனிதோறும் பிறந்து உயிர்களுக்கெல்லாமுறுதிசெய்ய ஒருவடிவுகொண்டு பஞ்சகந்தங்கள் கூடிப் பல வுணர்வுண்டாகி க்ஷணபங்கப்படுவது பிறவித்துன்பமாம். இஃதழிந்து போவதேமுத்தி சொரூபமாயிருக்கிற பரமேஸ்வரனே புத்தனென்றறிக.

இந்தப் புத்தசுவாமி மற்றத்தெய்வங்களைப்போலவல்ல. அதெப்படியென்னில்.

உகக. பூசல்புக்கிடுவானல்லன்புரங்கள்சுட்டிடுவானல்லன்
வாசமார்குழலாட்டன்னைவடிவினில்வைப்பானல்ல
னாசையுற்றிடுவானல்லனருகதமழுத்தல்செய்யா
னேசமுற்றவர்க்குமொப்பானிற்குணன்புத்தனெம்மான்.

உஉ0. அலைகடலலறவெய்யானணையடைத்திடுதல்செய்யான்
சிலைமணிகனகமென்னனச்செருக்களத்தழிவுசெய்யான் [ன்
கொலைபடுநெறியிற்சேரான்கொடுதொழிற்படைகை யேந்தா
றலைகடையொன்றொன்றில்லான்றருநாயகனெங்கோமான்.

உஉக. ஊதிக்கண்பீளைசாறியுடைபொழிந்துணர்வுமாறித்
தாதுக்கள்கலங்கும்வண்ணந்தலைமயிர்பறிக்கச்சாற்று
னேதுக்குமீயவேண்டாமீய்ந்திடிற்பாவமென்னான்
போதிக்கண்ணீழன்மன்னும்புண்ணியமூர்த்தியெம்மான்.

இப்படி இருக்கிறது புத்தசுவாமிசொரூபலட்சணம். இனித்தடத்தலட்சணமாவது, இந்த புத்தசுவாமி பிண்டப் பிரமாண்டங்களைச் சிருஷ்டிலயமெப்படியென்னில், பஞ்சகந்தமும் காலமும் சீவனும் கன்மமு மநாதியாயிருக்கும். இதிற் கன்மமான புண்ணியபாவங்கள் தானே சிருஷ்டி திதி சங்காரங்களைச்செய்யும் அதெப்படியென்னில்,

உஉஉ. பாவமேயுயிர்கள்பண்ணிப்பாவந்தான்பெருத்ததாலே
கோவமாய்க்கோவத்தீயின்கொண்டெழுந்தழிக்குமெல்லா

மாவத்தாயுயிர்கள்சென்றேபெருவமாம்பிரமதேகம்
தாவிச்சென்றிருக்கும்பாவஞ்சமிக்குமவ்வளவுமன்றே.

உஉக. புண்ணியம்பெருத்துப்பின்புபொழிந்ததுமழைதானென்
றிவ்வணியவெள்ளங்காற்றுற்சென்றுபாலேடேபோல [னிற்
மண்மிசைபரந்தமண்ணைவந்துயிர்நுகரும்போது
நண்ணியேயுருவமாகுநல்வினைபடைத்ததேகேள்.

என்றது, உயிரானது பாவங்களைமிகவுஞ் செய்து அந்தப்பாவங்க ளுத்துக்கூடிக் கோபாக்கினியாயெழுந்து செகத்தையுஞ் சீவனுடைய தேக ங்களையும் எரிக்கும்போது உயிர்களானதுமெத்த அவஸ்தையால் அண்டவிட மில்லாமல் நவத்தானத்தி லரும்பிப் பிரமாக்கள் தேசத்திலேபோய் அடைந் திருக்கும். அந்தப்பாவமாகிற கோபாக்கினி சமிக்குமளவுமென்றறிக. அதன் பின்பு புண்ணிய மானது, அற்பமாயிருக்கிலும்பெருத்துக்கூடி அதோர்த்தா ரையானமழைபெய்து அது கோபாக்கினியை யாறச்செய்து தான் மகாப் பிரளயமாய் மூடிக்கொண்டு அந்தப் பிரளயத்தை வாய்வானது வந்தடித் துச்செல்லகாய்ச்சினபாலேடுபோல் நீரும்வற்றியவ்னீரின்மேல் மண்ணும்ப றந்து அந்தமண்ணை முன்பு அவத்தையாலே யரும்பிப்பிரமாக்கள் தேசத்தில் போயிருந்த சீவர்கள் வந்திழிந்து பஞ்சகந்தங்களுடைய சமூகத்தில் பன்னி ரண்டு சார்வாலே யந்தமண்ணைப்புசித்து உருவங்களை யெடுத்துத் திரியும். இப்படி பாவபுண்ணியங்களே இலய சிருஷ்டிகளைச் செய்யும். இந்தப் பிர காரத்தால் ஏழுறுப்புண்டாமென்றறிக. இது நடத்தலட்சணம். இனிப்ப ந்தலட்சணமாவது.

உஉச. ஒன்றுரைபஞ்சகந்தமூறுநவத்தானம்வாய்மை
யென்றுநாலளவையொன்றொன்றிலக்கணமூன்றுறுப்பேழ்
சென்றுறுசார்பீராறுதெசபாரமங்கமெட்டாம்
பொன்றுதல்புத்திமுத்தற் கில்லைச்சிசீசவானே.

என்றது, புத்தர்சொன்ன பிடகநூல் மூன்று முதலாதியாக முன் பி ன் மலைவில்லாமற் சொல்லுகையாலென்றறிக. இனிஉருவம் வேதனை-குறி ப்பு-பாவனை-விஞ்ஞான மென்றுபெயர் இதினர்த்தம். ரூபகந்தமாகிறது வா யு,முதற்பூதங்கள் நான்கும் பரிசமுதல் விஷயங்கள் நான்கும் கூடியிருந்த எட்டினுடைய சமுதாயமே ஆத்மாக்களுடையதேகம். இனி விஞ்ஞானகந் தமாகிறது விஷயங்களுடையவும் இந்திரியங்களுடையவும் கூட்டுறவாலு ண்டான ஞானம். இனி சுகதுக்க மோகங்களையறிகிறது, ஐந்துறுப்பை யுடைத்தாயிருக்கும். இதின் பெயர், குணந், தொழில், சாதி, பொருள் இப்படி-ரு-ம்-இதிற்பெயராவது, கோவுக்குக் கோவென்றபெயர். சாதியா கிறது கோவாகிறசாதி. குணமாவது,வெள்ளைமுதலான நிறம்.தொழிலாவது,

கெமருதி தொழில். பொருளாவது, கொம்புறு நார் முதலான அடையா ளங்கள். ஆ_டு. இனி ஸமஸ்காரஸ்தலமாவது, இந்தப்பஞ்சகந்தத்தையொ ழிய வாத்மாவேறில்லை, கர்த்தாவும் வேறில்லை, யென்றறிக. அஃதெப்படி யென்னிற் பஞ்சகந்தம் அறுதியாய் அதின்சமுகத்தில் எல்லா முண்டாகி றது பிறக்கிறது மாகையாற் கர்த்தாவேறில்லை. இனி யறுதியான சீவன் க ளிதின்வகையாகத் தனுக்களெடுக்கையாற் சீவனுமிதைவிட வில்லையென்ற றிக, இதற்குச்சாட்சி புத்தன் தேவனல்லவோ வென்னில், அவரும் இ ந்தப் பஞ்சகந்தங்களையுங்கெடுத்தவராகையால்தேவனென்றது.

உஉ௫. எட்டிவையுருவமூன்றுவேதனையாறுஞான
மொட்டியகுறிப்போராறுசெய்கையுமிருபதாகக்
கட்டியபஞ்சகந்தங்கணத்தினிற்பங்கமாகித்
தொட்டநாற்பத்துமூன்றுஞ்சுற்றநூற்றுணிவுதானே.

என்பது, உருவகந்தமாவது, பூதம்-ச-ம். உபாதாயம்-ச-ம்.ஆ_ அ. வே தனைஸ்கந்தமாவது, ௩. விஞ்ஞானம். ௬. குறிப்பாவது. ௬. செய்கையாகிற பாவனை, உ௰. இப்படிபஞ்சகந்தங்களுங் கணத்திற் பங்கமாகிறதாய். சங. விதமாயிருக்குமென்றறிக. இனி-அரு-உரு-பிரமா-உம்பர்-அசுரர்-நாகர்-நரர்- பேய்-விலங்குஇப்படி. ௯. தானமாம்-இன்பமின்பகாரணம்,துன்பம்-துன்பகா ரணம், ஆ_ ச. பிரத்தியட்சம். க. அனுமானம். க. ஆ_ உ. அனித்தந் து ன்பம் அநாத்மிகம் ஆ_ ௩. பிரமா, உம்பர், அசுரர், மாணிடர், விலங்கு, பே ய், நரகர் இந்த எழுவர் கதியுமாம். பேதைமை இதின் சார்வாகச்செயல் இ தின்சார்வுணர்ச்சி. இதின்சார்வு, அருவம். இதின்சாரருவம் இதின்சார்வு வா யிலாகும்இதின்சார்வு ஊறு,இதின்சார்வு, நுகர்ச்சி, இதின்சார்வு, வேட்கை, இதின்சார்வு பற்று, இதின்சார்வு, கன்மத்தொகுதி, இதின்சார்வு, மூப்பு. இதின் சார்வு, சாக்காடாம். இப்படியிந்தப் பன்னிரண்டு சார்வு. முன்சொ ன்ன பஞ்சகந்தங்களுடைய சமுகத்தில் உலகங்களையு முன்சொன்ன எழுறு ப்பையுமுண்டாக்கி இந்த எழுறுப்பையுங் கொண்டு முன் சொன்ன நவத் தானத்திலும்போய் அமர்ந்திருந்து வந்தும் போயுஞ் சந்ததியுமாறிப் பிறப்பர் இப்படிப்பிறக்கிறது உறுப்பேழான சீவன்களானது ஒழுக்கந், தானந், துற வு, அன்பு, முயர்ச்சி, ஞானம், நிலைமை, பொறை, வாய்மை, நன்னெறி, ஆ_௰. இனி நரகாட்சி, நல்லூற்றம், நற்செய்கை, நன்முயர்ச்சி, நல்வாட் கை, நல்வாய்மை, நற்கடைப்பிடி, நல்லுள்ளத்தோர் தோற்றம், ஆ_ அ இதல்லாமல் முன்சொன்னவாய்மை-ச-ம். இலக்கணம்-௩-ம். தேசபாரம்-௰ -ம். அங்கம்-அ-ம். ஆ_ உ௫-ங் குணமாகிறதத்துவத்தோடுங்கூடி யுறுப்பே ழானசீவன்களுக்கும், பஞ்சகந்தங்களால் போதமுண்டாய் வியவகாரமாய்ச் சென்னமரணப்படும். இந்தப்போதங்களும் க்ஷணபங்கப்படுமென்றறிக. இந் தஅர்த்தமெல்லாம் "ஒன்றுரைபஞ்சகந்த,, மென்றவிருத்தத்தில் தத்துவம், கந்தம், ௫-ல் உருவகந்தமானவிதம்-அ-, விஞ்ஞானகந்த பேதம் விஷயம்

இந்திரியம்-அ. வேதனுஸ்கந்தபேதம், சுகம் ,துக்கம், மோகம். ஆ ௩. ஸை க்ஞுகந்தபேதம்-ரு. ஸம்ஸாரகந்தபேதம்-ரு. இந்தபஞ்சகந்தத்தில் வேறில்லாத ஆத்மாவுங் கர்த்தாவும்-உ. ஆகப்பஞ்சகந்தங்களில் பேதமானதத்துவம் உகூ. இதல்லாமல் பின்னொருவிதம். எட்டிவையென்ற தத்துவம்-சா௩-ல் ரூபகந்தபோதம் முன்சொன்னதில் ஈட்டுபோய் மீந்தது-௩ரு. ஆககந்தபேதம்-கூக. நவத்தானம்-கூ. வாய்மை-ச. அளவை-உ. இலக்கணம்-௩. உறுப்பு-எ. சார்பு-கஉ. தேசபாரம்-ம. அங்கம்-அ. ஆ௦தத்துவம்-ருரு. ஆ ௱ாககூ கந்தம்-ரு. ஆக-௱ாஉக. இதல்லாமற் பிருதிவிமுதல் புத்தி யீருக ஆகாசம் நீங்கலாய்த் தத்துவம்-உ௩. இதிற்பிரதானம்-ம. புத்தியிதுகளெல்லாம் பஞ்சகந்தங்களாலுண்டானதென்றும், இந்தப்பஞ்சகந்தங்களும் க்ஷணபங்கப்படுமென்றும், ஏழுறுப்பிலுண்டான சீவன்கள் கணிதமென்றும், பஞ்சகந்தங்கெடுகிறதே முத்தியென்றுஞ் சொல்லுவார்களென்றறிக.

உஉகூ. என்றவம்முறைமையாலேயியைந்தவுற்பவச்சார்வாகித்
துன்றிடுமுறுப்பில்வந்து சொன்னவத்தானத்தேயு
மன்றியசார்வுங்கேட்டங்காயசந்ததியுமாறச்
சென்றனர்சார்புசெப்பிற் றெபாரமங்கமெட்டே.

உஉஎ. போதமாங்கந்தமைந்திற் போதமும்பங்கமாகும்
பேதமைபாதிசார்வாம் பிறந்தபின்பனித்தமாகும்
ஆதிநன்கன்மநோன்புண்டாசமீசனுத்மா
சாதியேயில்லையென்று சாறுநற்சுத்தநன்னூல்.

இந்தமுறைமையால் இசைந்திக்கிற உற்பவச்சார்பாகநிறையப்பட்ட பிறப்பில்வந்து நவத்தானத்திற்பேச் சார்புகெட்டுச் சந்ததியு மாறத்தேசபாரமங்க மெட்டான நல்வழிகளாற் நடந்து கந்தத்திற் போதமும் பங்கப்பட்டுப் பேதமைசார்பாக அனித்தாகிக் கன்மநோன்புண்டாய்ப் போதமான புத்தி சந்தானபாரம்பரையாகக்கெட்டுப் பேதமைமுதற் சார்பெல்லாந் தோன்றி க்ஷணபங்கப்பட்டு அதி வழித்தாகச்சென்ன முண்டாகிறது பெத்தநிலை யென்றறிக.

முன்சொன்னதத்துவமெல்லாம் அற்றுச்சந்தானபரம்பரையறப் பஞ்சகந்தம்கெடுகிறதே முத்தி யென்றறிக. இனி இவன்மோட்சம் புத்தி தத்துவத்திலடைதலாகையாற் புத்தனென்றறிக. இனிப் புத்தர் நடக்கையுமிவர்கள் கொள்ளும்பொருளுமிவர்கள் மகாவிரதங்களு மிவர்கள் மதஸ்தாபியமும் பரமதமறுப்புஞ் சொல்லுகின்றோம்.

அஃதெப்படியென்னில் முன்சொன்ன கந்தங்களால் கருதிய பொருள்களெல்லாம் ஞானஞேயப் கணத்திற்பங்கப்படும் விதம். உருவம், அருவம், வீடு, வழக்கு ஆ ச. த-ச-ம்-ஒன்றிரண்டாய்-அ-ம், இந்த எட்டான

விபரம். உருவமென்பது பூதம், உபாதாயம் ஆ உ. அருவமாவது சித்தம் கன்மம் ஆ உ. வீடாவது குற்றங், கந்தம் ஆ உ. வழக்காவது உள வழக்கு இலவழக்கு ஆ உ. ஆ அ. இந்தஎட்டு மென்செய்யுமென்னில் முன்சொன்ன உருவமாவது, பூதநான்குமாம். உபாதாயமாவது, வலி-கந்தம்-இரஸம்-வன்னம். ஆ ச. இந்தஎட்டுங்கூடிச் சகலரூபங்களுஞ்செகத்துகளுமாம். இனி அருவம்-உ-ல். சித்தமானது ரூபத்தி லுறப்பட்டபுலனுகிற உபாங்கத்தோடு கூடி ரூபத்தைக்கண்டது. கன்மமாவது, கண்டரூபங்களை நன்று தீதென்பது, இனி வீடு-உ-ல். குற்ற வீடாவது, இராகாதி குணங்களைக்குறைப்பது. கந்த வீடாவது, ரூபமாதியாகிற பஞ்சகந்தங்களையு மாற்றுகிறது. இனிவழக்காவது, உள்ளவழக்கும் இல்லாதவழக்குமிந்த் விரண்டும் அங்கமாய்க்கொண்டு தொகை-தொடர்ச்சி-மிகுத்துரையென்று மூன்றும். இந்த மூன்று மொன்றி லிரண்டாய் ஆறும். அதெப்படிதொகையுண்மை தொகையின்மை ஆ உ. தொடர்ச்சியுண்மை தொடர்ச்சியின்மை ஆ உ. மிகுத்துரையுண்மை மிகுத்துரையின்மை ஆ உ. இப்படி ஆறு விதமாம்.

உஉஅ. ஒருவனென்றேதப்பட்டானுருவாதியைந்துங்கூடி
வருவனென்றுரைத்தன்மறைத் தொகையுண்மைவழக்கதா
முருவமங்காதியாயவைந்தையுமொருவனின்று [கு
தருவதுதொகையினின்மையுழக்கதாஞ்சாற்றுங்காலே.

என்றது, ஒருவனென்றேதப்பட்டவன் முன்சொன்ன பஞ்சகந்தங்களாகிற உருவமாதி-ரு-ங்கூடி யொரு தேகமெடுத்து வருவன். புத்தசுவாமியே யொருவனென்பது, தொகையுண்மை வழக்காகும். இந்த உருவமாதியைந்தையு மொருவனே நின்று கொடுப்பானென்பதுதொகையின்மை வழக்காம்.

உஉகூ. காரணகாரியத்தின்றொடர்ச்சியாய்க்காலமூன்றின்
சோர்வறத்தோன்றுங்கேட்ட லுமென்கை தொடர்ச்சியுண்
யோர்தரினொருவனேயெக்காலமுமுள்ளானென்று [மை
தேர்வதுதொடர்ச்சியின்மைவழக்தாஞ்செப்புங்காலே.

என்றது, முன்சொன்ன ஏழுறுப்பானவன்களுமதினுடைய போதங்களுங்கெட்டுப் போனாலுங் காரணமாகிற வித்து கெட்டுக்காரியமாகிறமரத்தின் வழியே யந்த விதைதிரும்பவந்தாற்போல் இறந்தவர்த்தமானமெதிர்காலமூன்றிலுஞ் சோர்வில்லாமற் றோன்றும். கெட்டவழி வந்தென்பது, தொடர்ச்சியுண்மையாவது, இனி விசாரிக்கில் ஒருவனே, முக்காலத்திலுமுள்ளானென்று தெளிவது தொடர்ச்சியின்மையென்றறிக

உகூய. தோற்றியபொருள்களெல்லாநாசமாமென்றுசொல்லு
மாற்றமுன்னுரைத்தன்மற்றைமிகுத்துரைவழக்கினுண்மை
போற்றியபொருள்கள்கட்குப்போனதுபோன்முதிர்ந்து
வேற்றுமைப்பட்டதென்கைமிகுத்துரையில்வழக்கே.

என்றது, தோன்றப்பட்ட பொருள்களெல்லாம் நாசமாகிறது. நிபத்தி யென்று சொல்வது, மிகுத்துரைவழக்கினுண்மையாவது, போற்றப்பட்ட பொருள்களெல்லாம் கண்ணுக்குப்போனதுபோல முதிர்ந்து வேறுபட்டுத்திரியு மென்பது, மிகுத்துரையில் வழக்காவதென்றறிக. இப்படியாறுவிதமாம். முன்சொன்னதைத்திரும்பத் தொகையாகச்சொல்வது. முன்சொன்ன உருவமாதி பஞ்சகந்தங்களுங்கூடி வருகிற புத்தசுவாமியே யொருவனென்பது தொகையுண்மை. இந்தவுருவாதியைந்தையுஞ்சீவராசிகளுக்குக் கொடுத்துத் தானிதின் சொருபமல்லாமலிருப்பானென்பது தப்புரையாகையால் தொகையின்மை. முன்பு புத்தர்நூலில் சொன்ன ஏழுறுப்பானசீவன்களுமதின்போதங்களுங் கெட்டுப்போனாலும் வித்தின் வழிவித்துப்போல க்ஷணபங்கப்பட்டு அது தானேதோன்றுவது தொடர்ச்சி யுண்மை. இதல்லாமலொருகடவுளெக்காலத்து முள்ளவனென்பது பொய்யாகையாலது தொடர்ச்சியின்மை. இனித்தோற்றிய பொருள்களெல்லாம் நாசமாகிறதே புத்தன் பட்சமாகையால் மிகுத்துரையுண்மைவழக்கு இனித்தோற்றியபொருள்கள் எல்லாம் போனதுபோலமுதிர்ந்து வேற்றுமைப்பட்டதென்கைமிகுத்துரையிலவழக்கு இப்படி ஆறு விதமாமென்றறிக.

இந்த ஆறுமல்லாமல் முன்சொன்ன உளவழக்கில் வழக்காவதுதிரும்ப ஆறுவிதமாம். அதெப்படி உளவழக்கு இலவழக்கு உள்ளதுசார்ந்த உளவழக்கு உள்ளதுசார்ந்த இலவழக்கு இல்லதுசார்ந்த உளவழக்குஇல்லதுசார்ந்தஇலவழக்கு இப்படியாறும். இதில் உளவழக்காவது, கெட்டவிடத்திலுணர்வுண்டென்கை. இலவழக்காவது முயற்கோடுபோலக் கெட்டவிடத்திலுணர்வில்லை என்று மாறுமதக்காரர்சொல்வது. உள்ளதுசார்ந்த உளவழக்கு என்பது, கெட்டவிடத்தி லுணர்வு முண்டாயந்த உணர்வைச்சார்ந்து உணர்வுதிக்கை என்பது, உள்ளதுசார்ந்த இலவழக்காவது, உணர்வு கெட்டவிடத்திற் பின்புணர்வுதிப்பதில்லை யென்று மாறுமதத்தார்சொல்வது. இல்லதுசார்ந்த வுளவழக்காவது, உணர்வு முன் பில்லாவிடத்திற் றோன்றுவது. இல்லதுசார்ந்த விலவழக்காவது, உணர்வில்லாமற் போவது இப்படி யாறுவிதமாமென்றறிக, இதுபெத்தநிலை முடிந்தது.

இனி முத்திநிலை சொல்வது, முன்சொன்ன உருவம் அருவம் வீடு வழக்கு இந்த நாலுமிதின் பேதமல்லாமல் வானம் ஆன்மா மனது காலந் திக்குமனேவாக்கு காயமிறந்த இதை யுண்டென்பது பித்தேறிச்சொல்வதென்றறிக. இதுகளில்லையென்றுசொல்வது ஆகாசமானது சொல்லப்பட்ட பொருள்களெல்லாந் தாங்கி நிற்குமென்னி லருவமாதலாலுருவங்களைத் தாங்கி நில்

லாது. வானிலோசை பிறங்கு மெனில், அது உருவின்கூட்டத்திற்பிறக்கு மல்லாமல் வானில்பிறவாது. வானில்லாமல் நிற்குமெனில், நீசொல்லுகிறபடிக்கு அப்போது எங்குமில்லாமல் போமென்றறிக. •இனி ஆத்மபோதமாகிற விந்திரியம் புலன் நூல்களிதுகளோடு கூடியறியுமெனில் இராத்திரியிற் பச்சைசிவப்புடன்கண்கூடியபொழுது அதுஎன்னமோவென் றையப்படுதலாலிந்திரியங்களறியாது விந்திரியங்களைக் கொண்டு ஆத்மாவறிவானென்னில் அப்போது ஐந்திலுமேகதேசத்தி லொன்றாக அறியவேண்டுஞ் சார்பிலறிந்திடுமெனில்நம்மைப்போலநீயுமொருபுத்தனுகவேண்டும். ஆனால்ஞானஞேயஞாதுருவுமல்லாமற்பூமிபோலஎல்லாவற்றையும் விளைவிக்குமோரறிவுண்டெனிற் பருப்பாலே சமைத்தசோற்றுக்குத் தானேகறி யென்றதுபோலென்ற' றிக. இந்தவுயிரை அருவெனில், அருவமுருவோடுற்று நில்லாது உயிரையுருவெனில் உடலினில் உடலடங்காது உயிரையணுவெனில்உடலின்பலதுவாரத்தில் பிறப்பட்டுப்போம் உடலையும் அணுச் சுமக்கமாட்டாது உயிரினை நித்தமெனில் உணர்வுக்குஉதையாஸ்தமனமில்லையாம். உயிர் எங்கும் நிற்குமெனில் எங்கும் விகாரமில்லையாம். தத்தஞ்சரீரங்கடோறும் அணுவுக் கணுவு மகமேருவுக்கு மகமேருவுமாய் நிறைந்து நிற்கு மெனில் உடலோடழியும் உடலி லோரிடத்தே நிற்குமெனில் நின்றவிடமல்லாமல் மற்றவிடம் அறிவில்லையாம்.

இனி அந்தரங்கத்தில் ஈசன்றானே உயிர்பிறப்பு வீடாமென்று வேதப்பொருள்சொல்வது, மறைவாயிருக்கையால் அதுபொய் இந்திரியமுமுடம்பு மேயுணர்வாகிறது, கண்ணுரக்காண்கையா லிதுவேயுயிராவது நிபத்தி யிது மறுப்பு முற்றும்.

இனிப் புத்தன்பட்சம்.

உடம்பைவிடவுயிரில்லை உயிரைவிட வுடம்பில்லை வித்து மரமும் போலப் போதமுங் கந்தமும் பிரிவில்லை யென்றறிக. 'இனி க்ஷணபங்கப்படுவதும் பட்டவிடத்திற் றிரும்பச் சீவன முண்டாகிறது. எப்படி எனில் நீர்வரவுமுன்போகுங்கால்பின்னேநீர்வருகிறதுபோலுந், தீபச்சுவாலைமுன்போகப் பின் சுவாலைவருவதுபோலும், அக்கினிச்சுவாலை முன்போகப் பின்வருவதுபோலும், வித்துக்கெட்டு வித்துவருவதுபோலு, மருந்தெண்ணெயில்மருந்துமாய்ந்துஎண்ணெயிலூறினெண்ணெய்பலிப்பதுபோலும், எருத்தழைமாய்ந்து பின் பயிருக்குப்பலிப்பதுபோலும், அறிவுகெட்டுக் கெட்டதின்வழியே அறிவாகிறபோதம்பிறக்குமென்றறிக. இந்த புத்தி யினுடைய போதமு மிப்படிக்கணத்திலே பிறந்து நசிக்குமென்றறிக. இனிக்காலத்திலுலே பஞ்ச கிருத்தியமும் நடக்குமெனில் மூந்தகாலத்திலுண்டான பொருள்களிலே புகுந்து பிடுறிக்கிறவ னொருவனுண்டென்பது தப்புளயாகவேண்டும். நீ சொன்னது நான்சொன்ன இலவழக்காயிற்று எல்லாக் கிருத்தியமுந் திரவியத்தியல்பாமென்றறிக.

இனித் திக்குகளுண்டெனில் ஒருவனுக்குக் கிழக்கே ஒருவனிருந்தா லிவ னுக்கு முன்னிருந்தவன்மேற்காம். எனக்குமேற்கிருந்தவனுக்கு நான்கிழக் காம் இப்படி எந்தத் திக்குந்தடுமாறுமாகையாற் றிக்குகள் நான்சொன்னஇ லவழக்கி லின்மையாமென்றறிக. புத்தியையல்லாமல் மனமென்பது வேறி ல்லை இனி ஒருகடவுளுலகினைப்படைத்தானெனில் ஒருவனுண்டான போதே முன்பே யுலகுண்டாம்ஒருவன் படைக்கவேண்டாம் ஒருவனில்லாவிடில் உ லகினைப்படைக்க ஒண்ணாது முன்பேயுள்ளதை யுபாதானமாய்க் கொண்டு அதின்காரியத்தாலேஉலகினைப்படைப்பானெனில் முன்பேயுண்டானதில்லா மற் போகவொண்ணாது உள்ளத்திற் கடாதிபோல வுதிப்பித்தானெனில்,எங் கேநின்றுதிப்பித்தான் உலகின்மேல் நின்றானெனி லிவனுக்கு முன்னே யுல குவந்ததாம் எங்கும் பூரணமாய் நிற்குமெனில் எங்குமுன்வந்ததாமென்றறிக.

இதல்லாத லோகத்தைகருணையாலுண்டாக்கினனெனிற் சிங்கம், புலி நாகம், கூற்றனிவர்களை யுண்டாக்கிறவன் கருணையில்லாதவன் பித்தனெ ன்றறிக. வலியினால் படைத்தானாகிற் பயித்தியக்காரனும் விளையாட்டெனி லிறை சிறுபிள்ளையாகும் கன்மத்தாற்படைத்தானெனில் முன்பேயுண்டா ய்ச்செய்வோருண்டாகவேண்டும். இனியுண்மையானஅறிவுதெரியவேண்டி ல்ஞாலமெல்லாமனாதி என்றறிக. சிவனருவெனிற்பவத்தில் நின்று செனன மெடுப்பிக்கமாட்டான். ஆகாசம்போலப் பிறவான் நிழல்போலநிற்பனெனில் நிழலிலிருந்தபேருக்குச் சுகமுண்டு. பேரறி வுண்டெனில், அந்த அறிவைக் க ருத உருவம் வேண்டு மில்லையாகிற் கருதவுங்கூடாது. எங்கள் நூல் அனாதியி றைவனுண்டென்னு மெனில், உங்கணூலுரைப்பா ரில்லாமற்றானே யுண் டான தாகவேண்டும். அவனை நூலாலறிந்து அவனைக்கொண்டு நூலறிந்தோ மெனி லிதுவுமொரு ஆச்சரியமென்றறிக. சிவனுருவம் எனில் உருவத்தை முன்படைத்தார்வேண்டும். உருவம் அவனிச்சை எனில் உலகெலாமவரவரி ச்சையாகும் கன்மத்தால் உலகருக்குருவுண்டாயிற்றெனி லுருவுடையோர்க ட்கெல்லாங் கன்மமுண்டென்றறிக. வினை புசிப்பிக்க ஒருவர்வேண்டு மெ னிற் சோறுண்டாற் பசிபோவதற்கொருவர்போவென்ன வேண்டுமோ தா னேயேறின கல்லை யொருவரிழிக்கவேண்டுமோ சர்ப்பந்தீண்டில்விஷமொரு வரேற்ற வேண்டாந் தன்வினையைத் தானே புசிக்கிறதற்குக் கர்த்தாவே ண்டாமென்றறிக. இனி ஸ்தாபராதிகள் சீவனில்லாத பூதவுருவமாய் பூமி யிலுண்டாம். அதெப்படி எனில், மேடுகள் புற்றுகள் கொம்பாதிகள் போ லவுந் தேகத்தில் மயிர்போல பூமியிலே பயிர்களுண்டாம் இதுகளெல்லாஞ்ச ரசீவனுக்குப் புசிப்பாம். அந்தச் சரசீவன்களைத் தானேகொல்ல வொண்ணா து செத்தபிறகு அந்தவுடலையும் ஒருத்தர் கொன்றதுந் தின்னலாஞ் சீவன் போனபிறகு அந்தவுடல் மண்ணுக்குச்சரியாகையாலே தின்னலா மென்ற றிக. இப்படிமுன்சொன்ன உருவரு வீடு விளக்கின்பேதமுமறிந்து வானம் ஆன்மா மனது காலந் திக்கு சிவனுண்டென்பதும் நன்றாகவில்லை என்றறிந் து க்ஷணபங்கமுங்கெட்ட விடத்திலுண்டாவது மறிந்துபிறமதங்கள் பொய் என்று அவர்கள் சொல்லுகிற தெல்லாமறுத்துச் செகமனாதி என்றறிந்து

இதுகளெல்லாமறிந்துதான்இராகாதிகுணங்களைமாற்றியறங்களையுண்டாக்கி யிழிவானபுலன்களைப் போக்கி யின்பதுன்பங்களை வாட்டி யில்வாழ்க்கைமுதலான அஷ்ட ஐஸ்வரியமும் ஒழிந்து ஞானசீல சமாதியினுறுதியாலே பஞ்சகந்தங்களுங் கூடிச் சந்தானத்திற் கெடுவது பந்தந் துக்கமென்றறிந்து அந்தப்புஞ்சகந்தமுழுமூலமறக்கெடுவதே முத்தியின்பமென்றறிக. இவன் ஆத்மாவை யணுப்புணர்வென்றுஞ்சொல்வன் இது புத்தரிற் சவுத்திராந்திமதநதந்திரமுமோட்சமும் என்றறிக.

---

௬௧-வது-அத்தியாயம்.

## யோகாசாரன் மதம்.

௨௬௧. போதமேபொருளாய்த்தோன்றும் பொருளதாயெழலாற்
வாதனையதனுற்கூடிவருதலால்வடிவிலாமை [போதம்
யாதலாங்கனவேபோலுஞ் சகளமுள்ளறிவாமென்றும்
ஓதினுரோதானுய வுணர்விலியோகாசாரன்.

என்றது, போதமாகிற காணேந்தியாதிகள் பொருளாய்த் தோன்றுமிந்தப் போதம் பொருளாய்த்தோன்றலால் எப்படி வாதனுதோஷத்தில் கூடி வடிவில்லாமற் பொருளாயெழுந்து கனவுபோலச் சகளமாகும். பின்பும்போதமானது உள்ளே யறிவா யிருக்குமென்று சொன்னனென்றறிக. இவன்க்ருத்துச் சலத்தின்பிரபாகம்போலவு மருந்தெண்ணெயில் மருந்துமறைந்திருந்து சூக்கமாகிப்பலிப்பது போலும் போதமானது உள்ளாயிருந்துதொன்றுதொட்டுப்பலிக்குமென்றறிக. இவன்தெய்வம் மாதாயோனியில்பிறவாமல்வயிற்றைப்பீறிவந்தாரென்றும்பிறதுக்கதுக்கனுயிருப்பானென்றுமிவனுக்கு முன்சொன்ன சுவாமியேகர்த்தன்தந்திரம்வேறென்றறிக.

---

௬௨-வது-அத்தியாயம்.

## மாயத்தமிகன் மதம்.

௨௬௨. அவயவம்பொருளாய்த்தோன்றுமவயவமழிந்தாற்பின்னை
யிவைபொருளென்னவேருென்றில்லையாம்பொருள்களின்று
மவைபொருளிலாமையாலேயறிவுமின்றாகுமென்று
நவைதருமொழியினுலேநவிலுமாய்த்தமிகனென்றான்.

என்றது, தேகமானது அவயவங்களுடனே கூடி ஒரு ஆகாரமான பதார்த்தமுஞ்சீவராசிகள் தேகமுமாம். இந்த அவயவங்களெல்லா மழிந்துபோனலந்த தேகத்திலழியாதபொருளொன்றில்லை ஆதலாலதிலே சூட்சுமமா யிருக்கிற பொருளைக்கண்டதில்லை ஆகையால் அதிலறிவிருக்குமென்பதில்லை தேகமேபொருளென்றறிக. சுவாமியானவர் சுகதுக்கங்களைப் பரீசி

யான்சுத்த ஞானவொழுக்கமென்றறிக. இவனுக்குமுன்சொன்ன புத்தசுவாமியே யென்றறிக.

---

கூ௩-வது—அத்தியாயம்.

## வைபாஷிகன்மதம்.

உ௩௩. அரிசனநீறுகூடவருணம்வந்தெழுந்தாற்போல
விரிசுகம்பொருள்ஞானங்கம்விரவிடமேவித்தோன்றும்
தெரிசனமிதுவேயென்று தெளிந்திடுந்தேரார்வீடு
பரிவொடுமடைவரென்றுபகரும்வைபாடிகன்றான்.

என்றது, மஞ்சளுஞ் சுண்ணாம்புங் கூடினவிடத்தில் ஒருசிவப்புப் பிறந்தாற்போல விரியப்பட்ட சுகம்பொருள் ஞானமிது முதலான தெல்லாம் விசாரிக்க மேவித்தோன்று மிப்படி யல்லாமல் வேறுசொல்லுகிற தெல்லாம் பொய் என்றறிக. இவன்சுவாமி முன்சொன்ன புத்தனே என்றறிக. இவன் கருத்து தீபமுந் திரியும் நெய்யும் போனவுடனே தீபமுமாறிப்போம்போலப் பஞ்சகந்த ஞானமெல்லாஞ் சூனியமாகிறதே மோட்சமென்றும் ஆத்மாவையணுவென்றுஞ்சொல்வான்.

உ௩௪. அரியநன்புத்தனுலுமதமுளவவற்றிற்பேத
முரியபேருலகமூலத்துரைப்பதுவன்றிவேறு
பெரியநல்வானமீசன்பேணுறுமாத்மாவின்றிப்
பொருவிலாவீடுகொள்ளும்பொருண்மையும்புகலிலொன்றே.

௩௫. ஆனபொருளித்தனையுமனித்தமென்றேமறிவானே யுள்ளென்கைசத்தியமென்றே, ஞானமுளததுநாலாய்நடக்குமென்றே நடக்கும்வகைநேராதை நல்வீடென்றே, மூனமிலாப்பொருளாகியுலவாதாகி யுள்ளதுநிர்வாணமெனுமொன்றேயென்றே, மீனமிகுமுடம்பான வருவமெட்டி னியைபாகவினையிழைக்குமிழைப்பென்றேமே.

௨௩௬. இறந்தார்பிறவாரென்றுரைத்துமேகமுலகத்திலதென்றும் பிறந்தோனுடம்போடினைரென்றும். பிறந்தானொருவ னிலதென்றும், துறந்தோன்வீட்டிலிலனென்று முணர்வாதாரந் தொக்குடம்பென், றறைந்தோன்புத்தனாதலாலுலகாயிதனோடறிவொன்றும்

உ௩எ. செத்தவர்பிறந்ததில்லைச் சீவனுத்மாவுமில்லை
முத்தியாமதுவொன்றில்லை முயங்குமாகாசமில்லை

நித்தனு மீசனில்லை நினைந்து தாம் வணங்குகின்ற
புத்தருமில்லையென்றார் பொருளறிவின்மையாலே.

இந்த நூலைச்சுகதரிஷி சொன்னதென்றறிக. இனி மோட்சமாவது துக்கசுகமில்லாமற் சுத்த புத்தியாயிருக்கிறதென்றறிக.

---

௬௪-வது—அத்தியாயம்.

## அருகரில் நிகண்டவாதிமதம்.

௨௬௮. வாசமாமலரசோகுபேணிமறைநீதியோடுமலையுந்தவத்
தாசையாயுடையகன்றுமரசினையடைந்தில்வாழருமறத்தினிற்
பாசமானவைதவிர்ந்துபண்டிபடவுண்டுபாயினொடுபீலிமே
னேசமாயவைதரித்துளோர்களினிகண்டவாதியைநிகழ்த்துவாம்

என்றது, வாசனைபொருந்தப்பட்ட அசோகமரத்தின்கீழே வேதநீதியல்லாத தவத்தின் நிட்பாவத்திலாசையாயுடையில்லாமற் குற்றமுடைய வில்வாழ்வாயறத்தையும் பாசத்தையும்விட்டுக்களஞ்சியத்தி லுண்டான பண்டங்களை யுண்டு பாயினோடு பீலிமேலே நேசமாய்த் தரித்து இந்த நடை வந்த அருகரில் நிகண்டவாதி கருத்தைச்சொல்லுவோம்.

௨௬௯. ஈறிலாதவனந்தஞானமுதலெண்குணங்களெனுமொண்குணை
மாறிலாதமதிமேவுசீதமெனமன்னிவானவர்வணங்கவே
வேறுலாவுகுணஞானமாவரணியாதியெட்டினையும்விட்டசி[ன்
ரேறுபான்மையுடனீடுவாழருகனெங்களுக்கிறைவனென்றன.

என்றது, ஈறில்லாத அனந்த ஞானம், அனந்ததரிசனம், அனந்தவீரம், அனந்த கற்சகம், அனந்த போதம், அனந்தநிராயுஷம், அனந்த அர்த்தநந்து, விசுபயவின்மை அனந்தானந்தம், இந்த எட்டுக் குணங்களுடனும் அனந்த கோத்திரமில்லாமை நிர்ஞமம், நிஸ்தோத்ரம், இந்தக்குணங்களுடனுங்கூடிப் பூரண சந்திரனைக்கூடின சீதம்போல் மிருது சயித்தியமான வசனமுடையராய் வானவர்கள் வணங்க வேறுலாவப்பட்ட குணமாகிற ஞானத்தையாவரணமாக மறைக்கப்பட்ட அஷ்டவினையாகிற ஞானாவரணியந் தெரிசனுவரணியம், பெத்தநியசம், மோகநீயசம், ஆயுஷம், கன்மம், அந்தராநாம கன்மம், கோத்திரம், இந்த எட்டுக்குணமும் விட்டு எல்லாருக்கு மேற்பட்ட சற்குணமுடையராயிருக்கிற அருகனெங்களுக்கிறைவனுவானென்றறிக.

பின்னுங் கருவிகளால் வரப்பட்ட விஷயங்களான துடக்குகளையறுத்துச் சுத்தனாய்ப் பூதவர்த்த பவிஷியகால மூன்றினையும் பிரபலமாய்ஒருகணத்திலே யுணரப்பட்டபெரிய தபத்தை யுடையரானவராய்ப் பெருமையாக வழிப்பட்டவருக்கும் வழிப்படாமல் மலைவுற்றவருக்குஞ்சரியாகவிருந்து குற்றமில்லாத குணங்களையுடைத்தாய்க் குற்றமாகிற குணங்களாவது. பசித்தல்,

தாகம், பயம், செற்றம், உவகை, மோகம், சிந்தனை, பழுதனை, நோய், நசித்தல், வெயர்வினேடு, கெதம், மதம், வேண்டல், ஈண்டதிசயித்தல், புசிப்பு, பிறப்பு, உறக்கம், ஆ கஅ. இந்தப்பதினெட்டுக்கும் பின்னொரு சாத்தீரத்திற்பெயர். பசி, தாகம், பயம், வெறுப்பு, சிந்தனை, இராகம், மோகம், கசிகிறவெயர்வை, கம்பம், மதம், பிணி, மூப்பு, கேடு, வியப்பு, உறக்கம், அனந்தல், களிப்பு, இகட்சி, இந்தப்பதினெட்டு மலமும் விட்டு அஷ்டகுணனந்தராயிதில் வசிகானத்தால் காக்கிறமான பொன்னெயில்வட்டத்திலிருக்கிறவர் விகலாகத்தராகிற சயினசுவாமி ஒருசொல் விகாத்தருக்குச்சொன்னர். இவர் அஷ்டானந்த வீதராகம் பெற்றுப் பூர்வகன்மங்கள் வெடித்துப்போய் அவ்விடமே முத்தியாக எல்லாவற்றிற்குமேலானலோகத்திலிருப்பார்.

இவரது சரித்திரம்,

உ௪௰. மடவாரையுமில்லான்மகவில்லான்மனையில்லா
னுடையானதுமில்லானுறவில்லானுடலில்லான்
றிடமாகியவிரதச்செயலுடையான்செறிவினையா
னடமாடலுமில்லானமக்கிறையாகியநாதன்.

உ௪க. பகையானவுநினையான்படைபிடியான்கொலைபுரியான்
புகையாதெழுதழலாகியபொறிவாயில்களைந்து
மிகையாவகையவைமாய்தருவிரதாதிகளுடையா
னகையாகவுமிகையான்செயவசையாகவுநன்று.

உ௪உ. திரிபுரமெரித்தல்செய்யான்செய்தவேழ்வியினைச்சிந்தான்
வரியரவல்குலாளைவடிவினில்வைத்துக்கொள்ளான்
வெருவரவுலகைச்சுட்டுவெண்பொடிமெய்யிற்பூசா
னிருவினைகடிந்துவாய்மையெய்துவனெங்களெம்மான்.

உ௪௩. தேவியைப்பிரிந்துதேடித்திகைத்தலமருமானல்ல
னாவியேபழுதேயென்றெனமார்க்களத்தழுவானல்லன்
மேவியபிறவிதாயான்மேவுகானடைவானல்லன்
றூவியீருலகுங்கொள்ளான்மருமநாயகனெங்கோமான்.

உ௪௪. சகலபல்லுயிர்கடானுஞ்சரீரமேபரிணமந்தான்
சகலர்கள்கட்டுவீடுதன்மபாவங்கள்செய்யுஞ்
சகலனுக்கிரகத்தோடேதமக்குநிக்கிரகமின்றிச்
சகலலோகாக்கிறத்தோர்சரீரியேயருகரத்தர்.

இனித் தடத்தலட்சணம்.

உசரு. சகலாத்தர்தம்பாற்சென்றுதன்மமேயேணியாக
விகலாத்தர்கதம்பதென்னவிகாரமில்முரசேபோலச்
சகலாத்தமடக்கிக்கொண்டுபஞ்சாத்திகாயமென்ன
விகலாத்தர்விரித்துச்சொல்லவிளம்பினராகமங்கள்.

என்றது, கடவுளாயிருக்கிற சகலாத்தர் நிக்கிரகா நிக்கிரகமன்றி உலோகாக்கிற மாகிற பொன்னெயில் வட்டத்திலிருப்பார் இவர்பக்கற்செல்லத்தாம் புண்ணியம்பண்ணின சற்கர்மந்தானே யேணியாகக்கொண்டுகீழேயிருக்கிற மகாமுனியாகிய விகலாத்தரேறிப்போய்ச்சகலாத்தானை கீழாகத்தாம் நின்று கதம்பகவென்று வினவஅந்தச்சொல்லைச் சகலாத்தர்கேட்டுவிகாரமில்லாத முரசொலிபோலச் சர்வார்த்தங்களையுமடக்கிக் கொண்டு பஞ்சாஸ்திகாயமென்றொருசத்தம்பிறக்கஅந்தச்சத்தத்தைவிரித்துவிகலார்த்தராகிறவர் அதிலிருக்கிற கெற்பங்களைப்பேதித்து ஆகமங்களைச்செய்தாரென்றறிக.

உசக. அந்தவாய்மொழியினுலிவன்சரணமாதியோக முதலானநூ
லிந்தமானிலமயங்கிடாதவகைபீங்கியம்பினனிதற்பொருள்
வந்தகாலமுயிர்தன்மைதன்மியறமற்றோர்வின்மருவுபுற்கலம்
பந்தம்வீடினேடுறுதியாயிவைபடைப்பதின்றியுளபத்துமே.

என்றது, முன்சொன்ன பஞ்சாத்திகாயமென்ற மொழியினால் அவன்சரணமாதியாகிற யோக முதலான நூல்களை இந்தமானிடர் மயங்கி நரகம்புகாமல் எல்லாருமீடேறும்பொருட்டு ஆகமங்களைச்செய்தார். இந்த ஆகமத்தின்பொருளாவது, காலம், உயிர், தன்மை, தன்மி, அறம், மற்றோர்வின், மருவு, புற்கலம், பந்தம், வீடு, இந்த பத்துமொருவராற் படைக்கப்பட்டதல்லாமல் அனுதியாயுள்ளதாயிருக்கும். இந்தப் பத்தின் பயனை விரித்துத் திருஷ்டாந்த தாஷ்டாந்தரங்களாலே சொன்னபிரகாரம்.

உசஎ. நிற்றலோடுதலேபோதலன்னுவயங்கிழ்த்துநீடுவெதிரேகமு
முற்றதாமிவைகணத்திலேமருவியுள்ளவா புரியுமாறுதான்
கற்றகாலமளவெய்திவாழுமுயிர்காயமேநிறைவானதே
பெற்றுவேறுவருதன்மைநேர்நிவுபெற்றதாகியுளபேசிலே

...ன்றது, நிற்பனவும் ஓடுதலும் மீளுதலும், உள்ளதாகவும் இல்லாதாகவும் இப்படியுள்ள தில்லதாகவுற்று நின்று ஒருக்கணத்திலே மருவி யெப்போதுமுள்ளதையேபுரிவரன் இதுவேகடவுளாகச் சிருஷ்டியாதிகளைச் செய்யுமென்றும், இது முன்சொன்னபத்திற்காலமுதலாகச் சொல்கையாலேகாலத்தின்வகையுங் காலமேகடவுளென்றறிக. உயிரானது அந்தந்த வுடலிலவரவர்க்குள்ள வய்துப்பிரமாணமாக அளவெய்திச் சிறுமைக்குச்சிறுமையும் பெருமைக்குப்பெருமையுமாய்த் தேகமெல்லாம் நிறைந்திருக்கும். இனிவேறு

ண்டாகிற்சொல்லென்ன இப்படித்தேக மளவெல்லாமிருக்க மெலான்றறிந்த தொன்றறியாமலுமவத்தை மறப்பு நினைப்பும் வருவானேனெனில் நிறைந்த அறிவிலே யந்தக்கரண விந்திரியங்கள் நீரிலே சுழல்வண்டானது முழுகியுமெழுந்துமங்கங்கேதிரியும்போலென்றறிக.

௨௪௮. பரந்துயீது தருமாத்திகாயமழிவித்தநித்தமதுபண்ணிடு
நிரந்துகீழினதன்மாத்திகாயமதுநித்தமாய்மிகநிறுத்திடும்
புரந்தபுண்ணியமிதற்குநன்மைபுகல்பாவமானது தீமையேத
ரும், பொருட்கிடமதாகும்வானமிகு புற்கலங்களிவை சாற்று
வாம்.

என்றது, பரப்பாய் மேலேயிருந்து தரப்பட்ட தருமாத்திகாயமாவது, எல்லாவற்றையும் அழித்து அனித்தமாக்கும். ௩. அடியாகக்கீழேயிருந்து தந்த அதன்மாத்திகாயமாவது, நித்தமாய்க்கெடாமற்செய்யும். ௪. புண்ணியஞ் செய்யில் நன்மை. ௫. பாவஞ்செய்யிற்றீமையே தரும். ௬. எல்லாப்பொருளுக்குமிடமானதுவானம். ௭. மிகுபுற்கலம் என்பது பெருமையுடைத்தாகிய அணுக்கள்கூடி யிரும்பு மரங்கள் முதலெல்லாவுருக்களுமாம். ௮. இனி யறுவகைத்தொழிலுஞ் செய்வது பந்தமாய்க்கட்டும். ௯. இதைவிட்டது வீடு. ௰. இப்படி முன்சொன்ன காலம், உயிர், தன்மை, தன்மி, யறம், மற்றோர் விண், புற்கலம், பந்தம், வீடு, இந்தப்பத்தும் பின் இலக்கத்தின்படியேகாண்க வென்றறிக. மற்றோர் என்பது, அறத்தையடுத்ததாகையாற் பாவம் மருவு என்றது, அகலம் முன்விட்டது வீடாகையாலே திரும்பி யிந்தவுடலில் புசிப்பதேயது வாசனை பலத்தாலேயது இந்த உடலிற்றுறவிலே புசித்துத்தீருமென்று சொல்வாரென்றறிக.

இந்தச்சாத்திரத்திற்கு மேலெது கீழெது எனிற்சகலாத்தர் பஞ்சாத்திகாயமென்றதை விகலாத்தரவர் சமீபமாகமேலேயிருந்து விரித்ததை தருமாத்திகாயமென்றும், இறங்கிவந்து கீழேயிருந்து விரித்ததை அதன்மாத்திகாயமென்றுஞ் சொல்லுவாரென்றறிக. விகலாத்தர் ஒருசத்தத்தைப் பிடித்து எண்ணிறந்த விதங்களை எப்படி யறிந்துசொன்னாரெனிற் சொல்லுகிறவன் சித்தத்திலே யிருளுக்குச் சூரியன்போலும் விளக்கி,விளக்கத்தைப்பளிங்கு அடுத்தது காட்டும்போலுங் காட்டுமென்றறிக. இந்த விகலாத்தருக்குச் சொலிகனென்றும் இகலனென்றும்பெயர். இனிசகலாத்தர் இப்படிக்கொத்த சாத்திரங்களை யுண்டாக்குவித்து அசோக மரத்தின்கீழே தபசாயுடையகன்று அறமறங்களைத்தவிர்ந்து பொன்னெயில் வட்டத்திலிருப்பாரென்றறிக. இது நடத்தலட்சணமுடிந்தது.

இனிப் பந்தலட்சணமாவது முன்சொன்ன
சாத்திரப்படியே நடக்கிற வகை.

௨௪௯. உருவளவளைவதானலுருவணுத்தொகைநாற்பூத
மிருவகைத்தாறைந்தாகும்பொருளவைவினையிரண்டு

பரிவுவர்த்தனையைந்தட்டவினைமலம்பதினெட்டாங்கற்
றருகர்பாலறத்தாத்மாக்களணையுமெண்குணங்கள்சொண்டே

சகல சீவராசிகளுந் தேகச்சிறுமை பெருமைகளுக்குத் தக்கதாக நிறைவாய தேககாந்தியில் அனேகபரிமிதராய் மத்தியபரிணாமத்தில் சங்கோசவிகாசதர்ம யுக்தராயிருக்கும் சீவர்களானோர் பிரத்தியட்சம், அனுமானம், உவமானம், ஆகமம் இந்நாலுவிதமுமாம். காலணு, தீயணு, நீரணு, நிலவணு ஆ-சு. இந்த நாலுவிதவணுவும் அணுத்தொகையாகக் கூடி நான்குபூதமாம் அரு, உரு, நித்தம், அநித்தம், குணங், குணி, ஆஸ்தி, நாஸ்தி, ஏகம், அனேகம், தூலஞ், சூட்சுமம் இப்படிச்சகல பதார்த்தங்களு மிருவகைப்பட்டு ஆறுவிதமாயிருக்கும். சீவனந், தர்மம், புற்கலாகாசம், காலம், உறை ஆ-ரு. இவ்வைந்துக்கும் பின்னுமொருவிதம். சீவனமும் புற்கலமுதலான பூண்டுகளும் தர்மமாசங்களுங்காலமுமிப்படியும்பெயராம். நன்மைதின்மை, யோனிபிறவர்த்தனை, போகபிறவர்த்தனை, சேஷபிறவர்த்தனை, பாவபிறவர்த்தனை, பிரமாணபிறவர்த்தனை ஆ-ரு. இவ்வைந்துக்கும் காலங், கோத்திரம், பவம், யோனி, போகம் இப்படியுநாமமாம். இப்படி யிவ்வைந்தினாலே பரமாணுவான வாத்மா வினைகளுடனுங் கூடியிஃதோடு கீழும் இந்தவெட்டு வினையும் பதினெட்டு மலமுமிதின் பெயர்களை சயினக்கடவுளைச் சொன்ன விடத்தில் அவர்விட்டதாகச்சொல்லியிருக்கிறதென்றறிக.

அருகர் பாலறங்களைச் செய்த வாத்மாக்கள் எண் குணத்தோடுசேருமென்றறிக. இனி உருவமளவை என்றகவிக்குள்ள தத்துவங்கள்-கூஉ-ங்கூடி-அம்சாத-யோனிகளிலுமணுக்களாய் நிறைந்தவாத்மா தங்கள்கன்மத்துக்கீடாகத் தாங்களே தேகத்தையெடுத்துக்கொண்டு முன்சொன்ன தத்துவத்தி லிருவகைப்பட்டு ஆறுகுணமும் பிரதானமாய்ப் பின்னும் உழவு தொழவு வரைவு வாணிபஞ் சிற்பம் வித்தை இந்த அறுவகைத்தொழிலிலும் உழன்று இதுகளில் மொத்துண்டு சுகதுக்கப்படுவது பெத்தநிலையாம்.

இனி முத்திநிலையாவது.

முன்சொன்ன சீவன்தானேகன்மத்துக்கீடாகச்செனனமரணப்படுவது எப்படிஎனில், இவர்கொள்ளுகிற தத்துவங் குணமுதலாகப் பிருதிவியீறாக உகூ-ம். இதல்லாமற் காலமனாதி, கன்மனாதி, சீவனநாதி யாகையாலனாதியான கன்மத்தோடு சீவன் அனுபந்தமாயிருக்குமாகையால் தானே செனனமரணப்பட்டுக் காலபக்குவங்களால் தன்மாத்திகாயமாகிற சாத்திரப்பிரயாசத்தாலே காய்ந்தகல்லுகள் முதலானதிற் சயித்தியமுதலான சுகங்கள் பொருந்தினாற்போலப்பொருந்திக்கொல்லாமைமுதலான விரதங்களாலும், வினையெட்டும் மலம் பதினெட்டுங் கன்மமும் நீங்கி யிப்படி யரியதபங்களைச் செய்து அருகருடனே கூடியிருப்பது மோட்சமென்றறிக. இப்படிமோட்சம் பெற்றமுக்கியர் எமசந்தர, நாகசந்திர, நேமிசந்திர, மேகசந்திர, மாகசந்திர, ஆறகித, ஆதிநாத, அளகநாத, அறகளநாத, பாரிசநாத, சௌஎக, சுர

தகாதது,சுருமதி,காமரங்த,விஜையமுனா, கபணங்தவமுனை, அஸதமனமுனா, சமனேந்திரமுனி, அமரோங்திரமுனி, சந்திரமாமுனி, தருமகுரு, இந்திரமாமுனி, சந்திரகீர்த்திமுனி, இராஜேந்திரமுனி, விமலேந்திரமுனி, இந்திரத்தராகிறமுனிகளும் சுத, சித, சுநாசீவ, நிஜசீவ, நிஜஜர, பந்தமோட்சம், இப்படிப்பந்தமோட்சமாகிறசத்த பதார்த்தமும் பிரதி வாதிக்கும் இதுகளை விட்டுக்காய்ந்த கல்லிலே படுக்கையான உக்கிர தபசு முதலானதுகளையுஞ் செய்து இருபத்துநாலு தீர்த்தகரு மகாமுனிகளாயிருப்பர். இவர்களாற்கற்பிக்கப்பட்டஒட்டீசகற்ப, ஒட்டாமரேஸ்வரகற்ப, ஜாலிநிகற்ப, பத்மாவதிகற்ப, சாரதகற்ப, குக்குடநாதாதிமுதலானகற்பங்களில் கற்பிதமான மந்திர அவுஷத சித்தப்பிரயோகங்களைச் சித்தாந்தஞ்செய்து ஊனகேச திகம்பர பாணி பாத்திரம், மயூரபுஞ்ச, இவர்களும் பஞ்சமலதாரணுகதிகளும், பொய், களவு, பரதாரம், கொல்லாமை, அதிகாம்ஷை இந்தப் பஞ்சாணுவிதவிரதங்களும் மதுபலஅண்டமுதலான நிஷிதகன்மங்களும் இதுகள்முதலாக அனேக நிஷித கன்மங்களையும் விட்டு அரியதபசிகளாயிருந்து பொன்னெயில் வட்டத்தில் சயினசுவாமி பஞ்சபரமேட்டிகள் தற்சூழ விருக்கிறவரிடத்தில் தீர்த்தகர்களும் பின்பு சொன்னபேர்களுஞ் சூழவிருப்பரென்றறிக.

௨௫௰. இரவினிலுணர்வுமூனுமென்னெணயுமேமைழமார்பால்
விரவலுங்குளியும்பூவும்வெற்றிலேதினலுமின்றி
மருவலிலெலங்கணீதிவழிபடமதியொன்றுன்டேடம்
பரகதிகண்டுபிண்டிப்பரமனதுலகஞ்சார்வார்.

௨௫௧. கொன்றல்வெட்டல்குறைத்தல்கூப்பிடல் கோழிகூகைகள
காகமுங், தின்றல்சோறெனறீய சொற்கள் புலாலிறைச்சிக
ள்செப்புத, லென்றசொற்களனந்தமுஞ்செவியெய்திடிற்ச
ரிதைத்திற, மன்றுமுட்டெனவோதுமுக்குடை யாதிநாதர்
தம்மாகமம்.

௨௫௨. அடுப்புலக்கையுரற்கள்சால்சுளகம்மிகட்டிலளிக்குல [டை
மடக்கைபானைகள் வாருகோலொடு தோலுதிர் மயிர்மண்ணி
படுக்கைபாய்பரிநாய்கள்பூனைகள்பன்றியாடுகள்பாதக
முடிக்கும்வேதியர்முன்டர்நிற்றருமுட்டில்முட்டுமொழிந்தலே

௨௫௩. கண்ணிமைக்கிலுடல்துடிக்கில்கைமறித்துக்கால்பெயர்க்
து, மண்மிதிக்கிலெண்ணிறந்தபிராணிபடும்.

இப்படித்தபங்களைச்செய்வாரொன்றறிக.

௨௫௪. உருவருமுள்திள்ருகுமொன்ருதுபலமேவயாகுங்
குருவுபதேசமூன்றினளவதாங்குன்றுங்காலி

னருகனுசாரம்பேணியழியிற்பொன்னெயில்வட்டத்துத்
தெருளுறுசுகம்போலாத்மாசேருமென்குணத்ததேசம்.

## ஆ சீ வ க ன் ம த ம்.

௨௫. என்னுயிரதனைப்போலவெவர்க்குமொத்திருப்பனென்று
தன்னுயிர்வருத்தந்தானுந்தலையினைப்பறித்துப்பார்மேல்
மன்னுயிரெவற்றினுக்கும்வருந்தவேயறங்கள்சொல்லு
மன்னதோர்வாய்மையாசீவகனவமணரிற்கூறும்.

என்றது, தன்னுயிரைப்போல எவருக்கு மொத்திருந்து தன்னுயிர்வருந்தத் தன்றலைமயிரைப்பறித்துப் பூமியின்மேல் இருக்கிற சீவராசிகளுக் கெல்லாமவர்கள் வருந்த வரங்கள்போதித்து வாய்மையுடைய ஆசீவகன் கூறும்.

௨௬. வரம்பினலறிவனோதிவைத்தநூற்பொருள்கடாமு
நிரம்பவேயணுக்களாந்துநிலம்புனலனல்கால்சீவன்
பரந்திவைநின்றபான்மைபாரதுகடினஞ்சீதந்
தரும்புனல்சுடுந்தீவாயுச்சலித்திடுமுயிர்போதத்தாம்

என்றது, அளவைகளாலறிகிற சுவாமி ஓதிவைத்த நூற்பொ...... சொல்வது, நிறைந்த அணுக்களானதுமண், நீர், தேயு, வாயு, சீவன் இவ்வைந்தும் அணுக்களாய்கூடிப் பரந்து நின்றவிதம் மண் கடினம், நீர்சீதம், திசுடு, வாயுசலித்தல், உயிர்போதம், இப்படியாம் மண்ணும் நீரும் பரந்திருக்கும் தேயுவும் வாயுவுங் கீழுமேலும் படர்ந்திடும். இப்படிச் சேரும் இந்தச் சேர்தலு நீங்கி அந்தரங்கத்திலுள்ளதோடுஞ்சேரும். பின்புவேறுசார்புபெற்றபோது எந்தப் பொருளோடு சாரினும் அந்தப்பொருளின்றன்மையா யிருக்குமென்று சொல்லும். இனிஉணர்வில்லாத வணுக்கள் நாலு மொன்று கெட்டொன்றாகாது புணர்வோடு கூடி யொன்றிலொன்று புகுந்தாகிலும் பொருந்திவாழும் அணைந்து புதியதாய் வந்தழியாது பழமையான வானமும் வினையும் இதுகளைத்தாராது. ஒன்றொன்றாய் மாறிப்போவதுமில்லையாம். இந்தப் பூதங்கள் முன்சொன்ன தில்லாமற் கொண்டுவிரித்தல் நீட்டல் குறுக்குதல் குவித்தலுான்றல் உண்டு நின்றுதித்தல் ஈட்டலுடைத்திடல் ஒன்றுமில்லாமல் விட்டுப் பின்புறம்பாய்ப்போகும். வேறாய் நின்று உள்ளுமாக்கும் பூர்வமும் இன்றுமென்றும் பரந்து ஒருதன்மையாய்க் கண்ணிற் காணுததாய்ப் பிறந்து அந்தக்கன்மத்தால் நல்லருக்களாகி நின்றபின் ஞானக் காணப்போகிறார்.

விண்ணிற்றேவர்காண்பார் அதெப்படி முதலாயிருக்கிற வணு ஒன்று அந்தமுதலாய்ச் சூட்சுமமானவணு ஒன்று நாலுவான பொருள்களெல்லாவற்றையுமிசையுமென்றுசொல்லும். ஒன்றினைக்கூடி-ங-நில்லாது இரண்டை

விட்டுஉயரமில்லாது. அதேது பூமி-௪-நீர்-௩-அழல்-௨-கால்-௧, இப்படியாமிந்த-௪-பூதமும் பின்பு வெண்மை, பொன்மை, செம்மை, நிலங்களின் வெண்மை, பச்சையிந்தவுண்மையாறினுள்ளுமற்றது கழிய வெண்மையாயோங்கிவீட்டில்வண்மையாய்ச்செருமிதல்லாமல்மற்றதுருவம்பற்றி யுண்மையினுலொட்டுத்திட்டுக் கலப்பினிலுணருமென்றுசொல்லும். பின்பொரு இழிவு, இடையூறு, இன்பம், பிரிவில்லாமை, பின்னொருநாடுசேர்தல், விளைவு, மூப்புஇந்த எட்டுங் கருவோடே கூடி யூழிற் சிக்கி நடக்கிறது உலகெல்லாமென்று சொல்லும். இனிப் புண்ணியபாவம் என்கிற விரண்டனு இஃதோடே முன் சொன்ன-௬-ங் கூடி எழுனுவாகும் என்று எங்களுக்கொருவன் சொன்ன ஞாலமெல்லாம் வெறுத்த-கருத்தினோர்கள் கதியினைக்காண்பரென்று சொல்லும் இப்படி ஆசீவகன்மதமென்றறிக. இந்தநூல் ஆரகிதரிஷி சொன்னதென்றறிக. இனித் தேகாதி விலக்ஷணமான ஆத்மா தேகபரிமிதனும் மத்திமபரிணமத்தாலே சங்கோச விகாசதன்ம யுக்தனுனவனுத்மாவென்றறிக. இனிமோட்சமாவது ஆகாச மத்தியத்தி லுத்தரோத்தர கன்மமென்ப றென்றறிக. இவனுக்குஞ் சொரூபந்தடம் பந்தமோட்சம் இந்நாலு முன்சொன்ன அருகக்கடவுளுக்குச்சொன்னபடி என்றறிக.

---

கூஎ-வது—அத்தியாயம்.

## பிருதுவபூதவாதமதம.

பஞ்சபூதப் பிரமவாதியில் பிருதிவி பூதப்பிரமவாதியாவது, இந்தப்பிருதிவி சத்தபரிச ரூபரச கந்தம் ஆறு. இஃதுடனுங் கூடி ஷடுருசி முதலன சகலபதார்த்தங்களுஞ் சகலபோக யோக்கியங்களுஞ் சகலைஸ்வரியங்களும் தனுகரண புவன போகங்களும் அண்டச, பிண்டச, சுவேதச, உற்பீச, என்கிறநாலு யோனிமுதல்-௮௪-வகையோனியும் எழுவகை தோற்றமுஞ் சரசீவன், அசரசீவன், சராசரசீவன், இந்தமூன்றுக்குந்தேகமாயும் புசிப்பாயும் பிரமாண்ட பாண்டங்களாயும் மாடமாளிகை கோபுர பிரசாத மண்டபங்களாயு நவரத்தினுதிகள் பஞ்சலோகாதிகளாயு மகமேரு அஷ்டகுலபர்வத முதலாக அனேககோடிபர்வதங்களுங் கண்ணுக்குக்காணப் பட்டதெல்லாமாயு மிந்தப்பிருதிவி, காரணங்காரியம், காரியப் படுகை. காரியப்பட்டுவிடுகைகளாயும் எண்ணிறந்தபேதங்களாயும் ஆயிரகோடிஅண்டங்களாயு மிப்படியனந்தகோடி விதமாயு மிந்தப் பிருதிவியே எல்லாமாகையால் சிருஷ்டி என்று மிதுவே பிரமாவென்று மிந்தப்பிருதிவி எண்ணிறந்த ஆகாரபேதமாகி இரட்சிக்கையாலே விஷ்ணுவாகியு மிந்தப்பிருதிவியிலுண்டான காரியமெல்லாம் இலயமாய்த் தன்னுள்ளேயடக்கிக்கொண்டு தான்கெடாமற் காரணமாய் நிற்கையாலே சங்காருத்திரனுகியும் இந்தப்பிருதிவி காரணமிருக்கக்காரியமே பிரமாவாயுங் காரியப்படுகிறதே விஷ்ணுவாயுங் காரியப்பட்டுவிடுகையேஉருத்திரனுகவும் இப்படி மும்மூர்த்திசொரூபமாயுமிதைவிடவேறொன்று

யில்லையாகையாலே பிருதிவியே பிரமமென்றறிக. இதற்கு வேதம "பரங் பவிஜாநாதினன்று பின்னும் வெவ்வாய்ச்சொல்லுகையாலேபிருதிவியேபிரம மென்று சொல்லுமென்றறிக.

## கூஎ-வது—அத்தியாயம்.

## அப்புபூதவாதமதம்.

அப்பு பூதமேமூன்று தொழிலுஞ்செய்வது அதெப்படியென்னில், சகலசீவராசிகளையுஞ் சிருஷ்டிக்க வேண்டிப் பிரமாவானவன் சலமயமானசுக்கில சுரோணித சொரூபமாய்ச் சரசீவன்களைச் சிருஷ்டித்து தாபராதிசீவன்களை எல்லாம் பீஜாங்குரத்தைக்கொண்டு சலத்தினாலே முளைப்பித்தும், அப்பு வே சொரூபமா யுருகிற புழுக்களைக்கொண்டுவந்து வண்டுகள் குளவிகளானது தன்சுக்கிலத்தைக் கொட்டி யெடுக்கையில அதின் தேகத் [illegible] விட்டு வண்டு தும்பிகுளவிகளாகச் சிருஷ்டித்தும் எக்ஞாதிகளிச் [illegible] சலமயமாகையா [illegible] ங்களுஞ் சலத்தினாலுண்டாயதுகளைப் புசித்துச் சகல பிராணிகளதுதேகநிற் கையாலுந், தாபராதி யெண்ணிறந்த தெல்லாஞ்சலத்தையுண்டுதேகநிற்கை யாலுந், தேவாதிகள் அமிர்தம் புசித்துத்தேகம்நிற்கையாலுஞ் சலதரசீவன்க ள் சலத்திலிருந்து பிழைக்கையாலுமிந்தச்சலம் பெயராலேநாராயணநாமந்த [illegible] இரட்சித்தும், ஆனால்பிருதிவியையல்லாமல் சலமிரட்சிக் [illegible] வெளிற் கிருதகுளபாயசநிறைய அமுதுசெய்தாலும், எத்தனை சோ றறைத்தின்றாலும், எத்தனை பலகாரங்கொண்டாலும்,தாகமெடுத்தபோது த ண்ணீர்குடியாவிட்டால் சீவன்போயும், பானங்களாலே அனேகர்தேகத்தை நிறுத்தியும், அன்னமில்லாமல் சலங்களைக் கொண்டு சீவராசிகள் பிழைக்குந் [illegible] கொண்ட சீவன்கள் பிழையாது. ஆகை [illegible] மழைபெய்யாவிட்டாலுஞ்சலங்கி [illegible] சகல சீவனுமடிகையாலே ஆபோற்சோதி உருத்திரரு [illegible] சங்கரித்தும் இப்படி முத்தொழிலுஞ்செய்வது அப்புபூதமென்றறிக.

முன்னே பிருதிவியினாலே மூன்று தொழிலும் நடக்குமென்று சொல்லி இப்போதுஅப்பு பூதத்தாலேமுத்தொழிலு நடப்பதெப்படி, பிருதிவிசலஞ் சககாரியாய்ச் செய்யுந் தானேமுத்தொழிலுஞ் செய்யாது சுக்கிலசுரோணித மாயும் அமிர்தமாயு முலைப்பாலாயும் யோகீஸ்வரருக்கவரவர்தேகததில் அமிர் தமாயுந்தீர்த்தங்களாயும் இதனாலே பாபட்சயந் தேகசுத்தியாயும் பிருதிவிக் குப் பதின்மடங்கதிகமாயுஞ் சந்திரன் அமிர்தமாயு மதுரபானமாயும் விஷய சுகமாயு மதுபான சுராபானமாயும். உப்புத்தண்ணீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், சுத்தசலம் இப்படி யேழுசமுத்திரமாயும் பூலோகத் திலு மிந்த எழுவிதமாயும் மழையாயும் ஏரி குளம் தடாகமாயும் இப்படிநாலு

விதமாய் முத்தொழிலுஞ் செய்யுமென்றறிக. ஆனுலிதுவெல்லாம் பிருதிவி சகாயத்தாலென்னி லதற்கிதுவு மிதற்கதுவுஞ் சககாரியாமென்றறிக. ஆகை யாலிதுவேபிரமமென்றறிக.

---

சுஅ-வது—அத்தியாயம்.

## அக்கினிபூதவாதிமதம்.

அக்கினியே மும்மூர்த்தியாகாரமாய் முத்தொழிலுஞ் செய்யும் அதெப் படி எனில், அக்கினியாலே யாகார சித்திரை மைதுனம்பயம் இந்த நாலில் ஆகாரத்தாலே சத்ததாதுக்கள் முதலெல்லாதத்துவமும் வர்த்தித்து இதினுல் சுக்கில சுரோணிதம் வர்த்தித்து இதினுல் விஷயங்கள் வர்த்தித்து இதினிட மாக நால்வகையோனியும் எழுவகைத்தோற்றமும் அடசாத-ம். அச்சுமுண் டாய்ச் சரசீவனெல்லா முற்பத்தியுண்டாய்த் தாபராதிகளுக்கெல்லாஞ் சூரிய கிரகணஞ் சந்திரக்கிரகண மிதுகளாலே பூத்துக்காய்த்து விதையுண்டாம் அ க்கினியிலுற்பத்தி யுண்டாமாகையால் அக்கினியேசிருஷ்டியுண்டாக்கையா ல் பிர்மாவென்றும், இனி அக்கினியினுலே பசாபாகமான தண்டுலம், பிண் டிபேத ஆகாரங்கள்புசித்தும், சகலசீவனுதரத்தினுள்ளே அக்கினியாயிருந் து சீரணிப்பித்துந் தாபராதிகளுக்கெல்லாஞ் சூரியனது உஷ்ணக்கிரணத் தால் கிரகித்து திரும்பச்சலபானங்கள்கொண்டு வளருகையாலுஞ், சகலசீவ ராசிகளுக்கும் அக்கினி யுள்ளேயிருந்து ஆகாரங்கள்கொண்டு தேகநிற்கை யாலும், அக்கினி விஷ்ணுமயமாய் இரட்சிக்கு மென்றறிக. இனி அனுத்திர ண காஷ்ட முதலானதுகளையுஞ் சகல சீவராசிகளையுந்தகனஞ் செய்கையா லும், அக்கினிப் பிரளயத்திற் பிருதிவி அப்பு விரண்டையுமுட்கொண்டு வி ழுங்கிக் காலானல் சொரூபமாய்க் காலாக்கினி உருத்திரனுய் எண்ணிறந்த பிர்மாண்டங்களையுந் தகனஞ்செய்துக் கடலில் வடவாமுகாக்கினியாய்த்த ண்ணீரைக்கிரகித்தும், காலாக்கினி,மூலாக்கினி, உதராக்கினி, காமாக்கினி, ஞானக்கினியாயும்அனுத்திரண சீவராசிகளிலுமிருந்துஞ்சோமசூரியாக்கினி, நட்சத்திரங்கள், மின், இடி, பிரகாசங்களாயும், அந்தகாரத்தைப்போக்கிக் க ண்களுக்குத்தெரியக்காட்டுகையாலுஞ், சகலவிதத்தாலும் அக்கினி பூதமே பிரமமென்றறிக. ஆனுல் அக்கினிதானே முத்தொழிலுஞ்செய்யுமோ வெ னிற் பிருதிவி யப்பு சககாரியாய்ச் செய்யுமென்றறிக.

உறுள. அக்கினிதானேயண்டமும்பிண்டமு
மக்கினிதானேயாயித்துண்டாவ
தக்கினிதானேயாவதழிவ
தக்கினிகாயமென்றறிந்துகொண்டேனே.

---

சுகூ-வது—அத்தியாயம்.

## வாய்வுபூதவாதிமதம்.

வாயுவானது சரம், அசரம், சராசரம், இந்த மூவகைச்சீவன், ஐவகை யோனி, இதுகூடப் பின்னும்-சுச. வகையோனி எழுவகைத்தோற்றம், எண்ணிறந்த சீவராசிகளெல்லாவற்றையுஞ் சுக்கிலசுரோணிதத்திலே வாயுமுந்தப் புகுந்து அதைச் சுருளக்கூட்டி விரித்துப் பின்பு மற்ற மூன்று பூதத்தையுந் தனக்குச்சககாரியாகக்கொண்டு அவயவி அவயவ பேதங்களை யுண்டாக்கி அந்தந்த அச்சுமாகிச் சுவாசபேதத்தாலே தாய், தகப்பன் சுவாசபேதங்களாலே கூன், குருடு, மூங்கை முடவன், நெடுவல், குள்ளல், அழகு, குரூபி, ஆண், பெண் இப்படிச் சரசீவனிலும் அசர சீவனிலும் இந்தவிதங்களையெல்லாம் உண்டாக்கி - எ௰உத-ம் நாடியிலும் பூரித்து இயக்குவித்துத் தான்பிரமாவாயிப்படிச் சிருஷ்டித்துஞ் சிருஷ்டித்த தனுக்களிலே வாயு வெத்தனைநாளிருந்தாலுஞ் சாவில்லாமலிருக்கையால் விஷ்ணுவாய்இரட்சித்தும், வாயுப் புறப்பட்டுப்போனாற் பிணமென்று சுட்டும் புதைத்தும் எறிந்துபோடுகையால்உருத்திரனாய்ச்சங்காரஞ்செய்துஞ்சித்த புருஷர்களுக்கும் யோகிகளுக்கும்-அசு-சித்திகளைக்கொடுத்தும் பஞ்ச கிருத்தியங்களைச் செய்வித்தும், தான் பிராணனென்றும், சீவனென்றும், பேராயும் வாயு வடங்கிற் பிரமமாயும் இப்படி எண்ணிறந்த பேதங்களாயும், இனி வாயுப்பிரளய சங்காரத்தில் முன் மூன்று பூதத்தையுஞ் சிதறவடித்துத் தன்னுள்ளடக்கித் தானழியாமல்நின்றுதிரும்பத் தன்னிலக்கினி யக்கினியிலப்பு அப்புவிற்பிருதிவியுண்டாய் பிண்டப்பிரமாண்டங்களை எல்லாமுண்டாக்கையாலும் வாயு பூதமே பிரமமென்றறிக.

---

எ௰-வது—அத்தியாயம்.

## ஆகாசபூதவாதிமதம்.

ஆகாசபூதப் பிரமவாதி முன்சொன்ன நான்கு பூதங்களையுந் தாங்கிக்கொண்டு அந்தநான்கிற்கு மாதாரமாய்இந்த நான்கிற்குமுள்ளும் புறம்புமாய்த் தான்கூட ஐந்துபூதத்திலுமுண்டான பிண்டப்பிரமாண்டங்கள் எண்ணிறந்தனுந் தனு கரண புவனபோகாதிகள் முதலானதற்கும் பஞ்ச மூர்த்திகள் முதலெண்ணிறந்த தேவர்கள் முதலான பேருக்கு மிடங்கொடுத்தும் அசராத்மிகம் அனட்சராத்மிகமான சத்தங்களாயு மிந்த ஆகாசத்தில் எண்ணிறந்த சத்திகள் எண்ணிறந்த சோதிசொரூபங்கள் எண்ணிறந்த மின் இடி மேகங்கள் சந்திரசூரியாதி நட்சத்திரங்கள் இதுகள்முதல் எண்ணிறந்ததெல்லாஞ் சரிக்க விடங்கொடுத்தும் இந்த ஆகாசமில்லாவிட்டால் ஒன்றுக்குமாதாரமில்லையாகையால் இந்த ஆகாசபூதமே பிரமமென்றறிக.

அஃதெப்படி எனில், இந்நான்கு மிறந்தாலுந் தான்கெடாமலுந் தன் பிரளயத்தில் நாலுபூதமுந்தோன்றுமலடக்கிக் கொண்டு தானழியாமல் நிற்கையாலென்றறிக. ஆகையாலிந்த ஐந்து பூதமும் பிரத்தியேக பிரத்தியேகமாயாதிக்கஞ் சொல்லுகிறபோது அதுவதுவே பிரமமாயிருக்கும் விசாரித்துப்பார்க்கும்போது ஒருபூதத்துக்கொருபூதஞ் சககாரியாயிருக்கு மென்றறிக. இந்தஐந்துபூதத்துக்குங்காரணபூதமேசொரூபலட்சணம். இதின்காரியம் பிண்டபிர்மாண்டங்களாய் விரிகிறது தடத்தலட்சணம். இஃது காரியப்படும்போது சீவராசிகளிதிலே கட்டுப்பட்டுச் சென்னமரணப்படுவது பந்தலட்சணம். இந்தப் பூதங்கள் காரணகாரியங்காரியப்படுகை யிந்த மூன்று மிறந்தவிடம் முத்தி நிலையென்றறிக.

---

ஏக-வது—அத்தியாயம்.

## பஞ்சகோசவாதிமதம்.

பஞ்சகோச வுற்பத்தி.

உ௫௮. எவ்வுயிர்க்குமானந்தம் விஞ்ஞானமென்றே யிருகோசமி
றை சுத்தமாயைதனிலிசைப்ப, னெவ்வுயிர்க்கு மேலுமதோ
மாயைதனிற்கலாதியானதோர்மனோமயமாக்குவன் பின்னுகச்
செவ்விதனிற் பிராணமயகோசமுமுண்டாக்கிச் சேர்த்திடுவரன்
னமயகோசத்தைத்திகழு, வெவ்வுயிர்களைங்கோச பாசத்தை
யுற்றுவினைவிக்குமன்னமயம்வருமாறுவிரிப்பாம்.

உ௫௯. முன்னைவினைக்கீடாகச்சூக்குமரூபத்தான்முதற்றந்தையிட
ம்புகுந்து மோகமிகவாகி, யன்னைவயிற்றிற்றந்தை சுக்கிலத்
தோடணைந்திட்டவ்விடத்திற்சோணிதத்தோடாகிநிற்கும், பி
ன்னையதைப்பிரியாது சூக்குமகாயத்தே யிறப்பதுவாந்தூல
வுடல்பிரமனருளாலே,தன்னைவிரித்துமைக்கிலது பெருக்குமு
ன்னஞ்சாற்றியசூக்குமபூதத்தாகியிடுந்தனுவே.

மூன்றுமாயையிலுமுண்டாகையாலிதுவே பிரமமாய் நிற்கும்.

உ௬௰. சொன்னமெய்வாயுடன் மூக்குரிசெவிவிழி தூயகைகா
லென்னுமுருவுடல்கொண்டிறுமாந்துமற்றெவ்வுலகு
மன்னும்பெண்பிள்ளைமற்றுளசுற்றமும்வாழ்வுமெல்லா
மன்னமயத்தின்பெருமையல்லாதில்லையம்புவிக்கே.

இது பிருதிவிபூதசம்பந்தமென்றறிக.

உ௲௧. தரித்தவுடலைப்பிணமென்றுவையகஞ்சாற்றலறப்
பொருத்தமுறநின்றியற்றியவற்றினைப்போற்றுகின்று
ரொருத்தருலகினிலுண்டோவுறக்கத்தினுற்றதுணை
பெருத்தபிராணமயத்தையல்லாதென்கொல்பேசுவதே.

இது அப்பு பூதசம்பந்த அன்னமயமாகிற தூல தேகத்தோடுகூட்டி வாயுபூதசம்பந்தமென்றறிக. இனி மனோமயகோசமாவது.

உ௲உ. நெறியுற்றிடாதபொறிபுலன்வாழ்வினையளித்துச்
செறிவுற்றகத்தினின்றபிராணன்சிதைவறவே
பிறிவித்திடாமலடக்கியியக்கிப்பிறழ்வறவே
யறிவித்துநின்றமனோமயமன்றியறிவில்லையே.

இது அக்கினி பூதத்துடன்கூடிச் சூட்சுமதனுவையனுசரித்து மனதானது பிராணவாயுவை எழுப்பிப் பொறிபுலன் விஷயங்களோடு கூட்டிப் பிரிவில்லாமல் நின்றது மனோமயமென்றறிக.

உ௲௩. பொறியுற்றுநின்றமனோமயந்தன்னினம்புற்றிநின்றே
யறிவித்திடிலிச்சைகோபமுபாயமதன்மந்தன்மஞ்
செறிவுற்றதுக்கஞ்சுகம்பயில்வாதனைசேர்நவமும்
பிறிவற்றவிஞ்ஞானமயம்புத்தன்பேசும்பெருமதமே.

இதுவாயுபூதத்துடன்கூடிச் சூட்சும தேகத்தையனுசரித்துப் புத்தியானதுமனோமயத்துடனேகூடிஇச்சை, கோபம், உபாயம், அதன்மம், தன்மம், துக்கம், சுகம், வாதனை, விஷயம் இவ்வொன்பதுடனுங்கூடி யறிவிக்கையால் விஞ்ஞான மென்றறிக.

ஆனந்தமயம்பொருளென்பது.

உ௲௪. சாற்றுமுறக்கமுதன்மனம்புத்தியைச்சார்விடைய
தோற்றமினியசுகம்பலவாகமுன்சொல்லுகின்ற
வேற்றம்பெருவடிவாகநின்றுலித்திருமைபெறப்
போற்றுமானந்தமயமதல்லாதொருபோதமுண்டோ.

என்றது, ஆகாசபூதத்துடனேகூடிக் காரணதனுவை யனுசரித்துச்சித்தமானது உறக்க முதலாக மனது புத்தியைச் சாரப்பட்டுத் தோற்றின விஷய சுகங்களையுமனுபவிக்கச்செய்து அஃதெல்லாமிறந்த விடத்தில் பெருவடிவான வடிவில்நின்று ஆலித்து ஆனந்தம்பொங்கி மோட்சங் கொடுக்கையாலானந்தமயமேபொருளென்றறிக. ஆகையால், பஞ்சகோசமே பிரமமெ

ன்றறிக. இனி பஞ்சகோசமேசொரூபம் இவ்வைந்து கோசமே வெகுவா ய்க் காரியமாய் விரிகிறதேதடம் இவ்வைந்துகோசத்தில் சீவனகப்பட்டுச்செ னன மரணப்படுகிறதேபந்தம் இவ்வைந்தையும் நானல்லவென்று நீங்கிச சொரூபமறிகிறதேமோட்சமென்றறிக.

---

எஉ-வது—அத்தியாயம்.

## நவக்கிரகவாதிமதம்.

நவக்கிரகப் பிரமவாதமாவது, இனி நவக்கிரகங்களாலே சிருஷ்டி திதி இலய மிந்தமூன்றுமாம். அஃதெப்படி கிரகசாரத்தாலே பிறக்கிறதும் இரட்சிக்கிறதும் சங்கரிக்கிறதுமா மென்றறிக. அஃதெப்படி நவக்கிரகங்க ள், நட்சத்திரங்கள், இராசிகள், இதல்லாமல் திதி, வாரம், நட்சத்திரம், யோ கம், கரணம் ஆ டு-ங் கூடிக்கொண்டுகிரகங்கள் இராசாவாயிருந்துஎல்லாக் காரியமு நடப்பிக்கும். அஃதெப்படி ஒருவனுக்கு சாதக நிர்ணயத்தில்இவ னுக்குப் பெண்ணித்தனை ஆணித்தனை என்றுசொல்வது சிருட்டி இந்தப் பி ள்ளைகள் ஐஸ்வரியவான்கள் தரித்திரவானென்பது திதி அதுகளித்தனை வயதில் சாமென்பது சங்காரம் ஆகையால் முத்தொழிலுங் கிரகங்களே ந டப்பிக்குமென்றறிக.

இதல்லாமல் பூதவர்த்த பவுஷியமுமறியலாம். அஃதெப்படி அந் தரதிசை, மகாதிசை, சூட்சுமதிசை, அந்தராந்தரதிசை, பிராணதிசை இது கள்நடக்க இன்னுனுடதிசையில் அந்தரபுத்தியில் இவனுக்கு நன்மை தீமை வருகையினாலும் அவ்வந்தரபுத்தியிலுஞ் சூட்சுமதிசையாலு நன்மை தீமை யாலுமதிலுமற்றவிரண்டுதிசையிலுநாள்நாழிகைகிமிஷங்களில்நன்மைதீமை யாலுந் தகப்பனுக்குஞ் சுபக்கிரகமாய் அதிலே புத்திரருண்டாய் அந்தப் புத் திரர் புத்திரிகள் சிரோதய பூமியுதயகாலங்களில் சுபக்கிரகங்கள் உச்சத்திலே ஸொக்ஷேத்திரத்திலே -டு-கூ-ங்கூடியிருந்தால் மண்டாலதிபதி சக்கரேஸ்வர னுவனென்றும். வியாதி,பீடை, சஞ்சலங்களில்லாமல்நீதிமானுய்ச் சர்க்குண சம்பன்னதீர்க்காயுள்ளவனென்றும். நீசம்பகைகளிலே கனிஷ்டக் கிரகங்கள் கூடினுற் றரித்திரன், வியாதியஸ்தன், துக்கி, சலனி, அற்பாயுள், அனீதிம னுவனென்றும். இனி நட்பு, ஆட்சி, யுச்சம், நீசம், பகை, கவிப்பு, சத்திரம் இந்தப்பேதங்களாலும், பஞ்சதிசையில் இராசி,நட்சத்திரக் கிரகமிருக்கிற ஸ்தானபேதங்களாலும் பஞ்சாங்கத்தாலும் பார்வை தாண்டுபேதங்களாலு ம், இன்னஞ் சோதிஷபேதங்களால் நல்லநடக்கை பொல்லாதநடக்கைநல் லபுத்தி பொல்லாப்புத்தி, நல்லகல்வி பொல்லாக்கல்வி, ஞானம் அஞ்ஞான ம், சன்மார்க்கம் அசன்மார்க்கம், சம்பத்து தரித்திரம், வியாதி வியாதியில் லாது, யாஜகன் அயாஜகன், செனன மரணம், யோகம் அயோகம், பத்தி பத்தியீனம், தயாதாட்சணியம், கூன் குருடு, மூங்கை பூதவர்த்தபவுஷியம் திருட்டு கன்னம், கெற்பநிச்சயம், புண்ணியம் பாவம், விடன் குலாமன்,

ஞானி யோகி, ஆசிரமி வன்னுசிரமி, சம்சாரி இதுமுதலான உலகநடக்கைக ளெல்லாங் கிரகசாரமென்கையாலு, மிவன் பிறந்தவேளையென்று மிவன்பிறந் தநட்சத்திரபலனென்றும் என்கிரகசாரமென்றும், பிரமா விஷ்ணு உருத்தி ரன் முதலான சகலதேவர்களையும் இருஷிகளையுங் கிரகம்பிடித்து தென்று ஞ் செனனுதி மரணுந்தமெல்லாஞ் சாதகங்களில்லெழுதுகையாலும் நவக்கிரக ங்களே பிரமமென்றறிக. இனி நவக்கிரகமே சொரூபநிலை யிந்தக்கிரகங்கள் நட்சத்திரராசி முதலான தோடு கூடிவிசிறதே தடத்தநிலை யிதுகளிலே கட்டுப்பட்டுச் செனன மரணப்படுவதே பந்தநிலை யிந்தக்கிரகபூசை ஓமங் களைச்செய்து அதின்வழித்தாகநடக்கிறதே முத்திநிலையென்றறிக.

---

எ௩-வது-அத்தியாயம்.

## சூரியவாதிமதம்.

உ௬ரு. உதையந்தனிலயனுய்வரு முயிர்காவலிலரியாய்
வதைவந்திடுலரனுய்வருமாறும்பிறவங்களே
யிதையங்களிலிவனேயினுறபெவையெங்கணுமிவனே
கதையென்றறிகாணுவிறைகாணுமிறைகதிரோன்.

உ௬௬. அறியாதவன்னமணுமேருவாக வணுவாயடங்கியருளும்
பிறியாதவன்டபகிரண்டமந்தவணுவாகவேபெருகிடுங்
குறியாலமைந்தநெறியாகிநின்று குருவாகிவந்துகுருகும்
செறிவாஙிறைந்தசிவமாயமர்ந்துதெளிவாயவன்றினகரன்.

என்றது, உதையத்தில்அயனுய்சராசரங்களெல்லாம்எழுப்புகையால் இருஷ்டியும் உதையமான பிறகு எல்லாரையும் எழுப்பி யறுவகைத்தொழி லாலே எல்லாரையும் இரட்சித்தும் இவன் உஷ்ணகிரணத்தாலே சகலஜலங் களையுங் கிரிகித்து மேகங்களிலே கட்டிமழை பெய்வித்து அதுகளாலே தா னியமுதலான தெல்லாமுண்டாக்கி யிதினுல் தண்டுலபிண்டிபேதமாகிற ஆ காரங்களாய் எறும்புமுதலானயிருக எல்லாவற்றிற்கு மாகாரமாய் வருஷ கிரணங்களாலே இரட்சித்தும் இப்படி இரட்சிக்கையால் விஷ்ணுவாயும் இ னி உஷ்ணகிரணங்களாலே மழையைத் தடுத்து மழை பெய்யாவிட்டாற் ச கல தானியங்களும் விளையாது கருப்பாலெல்லாரையுஞ் சங்காரஞ்செய்கை யாலுருத்திரனும் இப்படி மும்மூர்த்திகள் சொரூபமாயுஞ் சர்வ சீவனிருத யங்களையும் விளக்கி பாயரங்கத்திலு மிருளைப்போக்கி யிதல்லாமல் சூரியகி ரணமாகிற அணுக்களெல்லாம் மேருமுதலான அண்டபகிரண்டங்களாய்வள ர்ந்து அந்தவணுவாலெல்லாஞ் போய்ச் சங்காரமாயுங் குருவாகியுஞ் சிவமா கியு நிற்பவன்றினகரனென்றறிக.

உ௬எ. இப்படிமுழுதுமாயபராதித்தன்கதிரோனென்றுஞ்
செப்பிடுஞ்சிவாதித்தன்றேகத்திலுயிராமென்று

மப்படியவனேடொன்றுமவன்றன்மந்திரத்தாலொத்த
தப்பிலாமுத்தியென்றுஞ்சாற்றிடுஞ்சவுரமன்றே.

உகூ௮. தோற்றமேநிலையேயீறேசொல்லுசூரியனலாகு
மாற்றலாற்பிரத்தியக்கத்தாகியபானுவன்றித்
தோற்றிடுங்கருத்தாவில்லையெனத்துணிந்தவனைநாளும்
போற்றிடும்புத்திமுத்தியென்றுதான்புகலுகின்றான்.

இப்படிப் பெயருண்டான சூரியனை அவன்மந்திரத்தால் செபதபபூசை யைச்செய்யமோட்சமுண்டாமென்றறிக. மறுப்பு.

உகூகூ. ஈசன்றனியவேயிறுவிழியிறந்தான்
மாசுணவாயின்மறைவுற்றான்-தேசிகனு
முற்பவமாமுள்ளத்திருமொழியானொருவன்
றற்பரனேவல்லவனேதான்.

சூரியனே சொரூபம் இவன் கிரணத்தால் செகவியாபாரமெல்லாம் நடப் பிக்கையே தடத்தலட்சணம். இவன் கிரணத்தாலே சகலமு முற்பத்திக் கேதுவாய் சீவன் செனனமரணப்படுவது பந்தலட்சணம். இவன்மந்திரத் தாலே யிவன்றுஉலக மடைகிறதேமுத்தி யென்றறிக.

---

எ௨-வது-அத்தியாயம்.

## சந்திரவாதிமதம்.

உஎ௦. மதியிரவிபொருந்துநிலைதிருந்தக்கூறின்மன்மதியாமனந்தனி ல்வேர்கொண்டவாயு, முதிரிநனுமிதுமதியின்களங்கமாகமொ ழிந்திடுவர்மூலவளிகிறனுமாகு, மதியில்ருகலைகளிருபக்கமாக மரித்தொடுங்கியுதிப்பதுமவ்வளியின்பாலாங், கதிநிறுவுகுண மாதிகரணமெல்லாங்கருதியகாற்றினிலடங்கியுதிக்குமாபோல்.

என்றது, சந்திரசூரியர் பொருந்தியிருக்கிற நிலைநன்றாகச்சொல்லில் ம னமேமதியாம் அந்தமனத்தை விஷயத்தில்விடுகிறதுமனதில் பற்றிவேர்கொ ண்ட வாய்வுபோல் அண்டத்திற் சந்திரனில் வேர்கொண்டு களங்கமாயிருக் கிற வாயுவே சூரியன் இந்தச் சூரியனுகிற மூலவாயுவே பிராணமாகுஞ் சந் திரனுனவன் கலைகளிரண்டு பட்சமாய் மாறிவருவது தேகத்திற் பிராணவா யுவானது இடம்வலமாறிமாறிக்குணமாதியான கரணமெல்லாம் ஒடுங்கியுதிக் கிறதுபோலென்றறிக. இனி அண்டசந்திரனுஞ் சூரியகிரணத்தினலே கலை வளர்வதுங் குறைவதுமென்றறிக.

௨௭௧. இந்துவினிலெழுகோடிரேகையுண்டாமிரேகையொன்றிலெழுகோடிகலைசடோன்றும், வந்துகலையொன்றுதனிலேழுகோடிமதியுண்டாமதியொன்றிற்பிறையேழ்கோடி, யந்தமிலாப்பிறையொன்றிலாங்கே யுண்டா மகிலத்தையாக்கியழித்திடுதற்காக, வந்துபிறைபிறந்திறந்துமதியிற்கூடி வருவதுபோவதுமாமதியல்புதானே.

௨௭௨. ஆதலான்முழுது மாகியபரமவமிர்தநற்கலையதாமதியேயோதியவமிர்தகலையதாயுள்ள வொப்பிலாச் சக்கரமுணர்ந்துதீதறுமமிர்தயந்திரமதனாற்றிகழருச்சனையினான்மதியோடேதமதறவேயேகமாவதுவீடவனெலாமியற்றுமீசனுமாம்.

௨௭௩. திகழ்தருமமிர்தக்கலையுணர்பவர்க்குத்தெறுகனல்குளிருநீர்திடமாந், தகுவிடமமிர்தஞ்சார்பிணி பூதக்கோள்கள்பேய்தானெலாமகலு, மிகுதருபோகம்வீடதுமெளிதாம்வேலைநீர்தண்ணீராம்விளம்பின், மகிழ்தருமறைகளறிகிலதவர்கள்பெருமையையறியவல்லவரார்.

௨௭௪. ஊனாயுயிராயுணர்வாயொளியா
யானாவறிவாயனுபோகமுமாய்
நானாவிதமாய்நறவாயுறவாய்
வானாய்நிலனாய்வருவார்மதியார்.

௨௭௫. மனுவாரமிர்துமடவாரமிர்து
மனுபோகமுமாமருளாரமிர்தும்
தனுவானதிலேதகுவாரமிர்தும்
கனியாரமிர்துங்கலையாரமிர்தே.

என்றது, சந்திரன் அமிர்தமானது நிலநீர் பை முட்டை மந்திரமிந்த ஐவகையோனியுமாம். அஃதெப்படி, சந்திரனாலேவிகாரம்பிறக்கும் அப்போது சுக்கிலசுரோணித மாகச் சந்திர கலை வர்த்திக்கும் வர்த்தித்தவுடனே ஸ்திரி புருஷ கூட்டங்களாலே சிருஷ்டியாம். தாபராதி களுக்கெல்லாஞ் சந்திரனதுகலையாலே பீஜாங்குரமாய் முளைக்கும்போது அவனமிர்தங்கூடி யங்குரிக்கையால் வேர் முளை வெள்ளையாயும் பயிர்களெல்லாம் பால்கட்டாய்க் கதிர் வாங்கியு மந்த அரிசிகளெல்லாம் வெள்ளையாயு மிப்படித் தானியங்களாயும் தாபராதிமுதலான தெல்லாமுளைவேர்வெள்ளையாயும் ஆனால் மற்ற தெல்லாம் பச்சைவர்ணமாவது அவனதுகலையிங்கு கறுப்பாயிருக்கையாலும் வெளளை கறுப்புக் கூடின பேத கலைகளாலே பண்டு பலாதி பூவுகள் பலவர்ண

மாயும் இப்படி நாலுவர்ணமானதுஞ் சந்திரகளாபேதத்தாலே சுக்கில முட்டைகள் வெள்ளையாயும், நவரத்தினுதிகளிலே சந்திரகளைபாய்ந்து நீராடுகையாலுஞ் சர்வ சீவனது முகபேதங்களும் அவர்களதுகாந்தியின் கிளைபேதங்களும் எண்ணிறந்த சீவராசிகளெல்லாஞ் சந்திரகலையாலுண்டாகு மென்றறிக. இனி அமிர்தம, பால், தயிர், நெய், அன்னமுதலானதுந் தண்டுலபிண்டிபேதமு மிதுவெல்லாஞ் சந்திரகளாபேதத்தாலாகையாற் சந்திரனலே சிருட்டியென்றறிக. இவன் சிருட்டித்த பண்டபதார்த்தங்களை எண்ணிறந்த சீவராசிகளெல்லாம் புசித்துப் பிழைக்கையா லதுவே திதியாயும், இனிச் சகல சீவராசிகளுக்குஞ் சந்திரகளை வாங்கிப்போனால் மரணமாயும், இப்படி மூன்றுதொழிலுஞ் சந்திரனேசெய்வானென்றறிக. எங்கெந்தவர்ணங்களி லுண்டானது மதின்மெருகு நுண்மைகளுஞ் சந்திரன் அமிர்தகலையென்றறிக.

இதற்குத்திருஷ்டாந்தம். சந்திரன் கெற்பத்தை வர்த்தனை செய்கிறவனுகையாற் பூரணகாலத்தில் கெற்ப ஸ்திரீகள் சந்திரனைப் பார்த்தா லந்தக் கெற்பமொட்டை யுருவாய்ப்போம் ஆகையால் சந்திரனே பிரமமென்றறிக.

சொருபநிலையாவது, சந்திரன். இந்தச் சந்திரன்களையானது ஏறுகிறதும் மிழிகிறதுந் தடத்தலட்சணம். இந்தகளைகளிலே சீவராசிகள் கட்டுப்பட்டுச் செனனமரணப்படுவதே பந்தநிலை. சந்திரனைப்பூசையினுலும் தியானத்தாலும் பூசித்து சந்திரலோக மடைகிறதே முத்திநிலையாம். இதற்குவெகுவாய் மறுப்புண்டென்றறிக.

---

## எ௫-வது-அத்தியாயம்.

## வாழ்வாதிமதம்.

உஎ௬. வாழ்பரனுலென்மறைநெறிஞானமதனுலென்
கேழ்விகளாலென்கிளர்மனுவாலென்கிளையாலென்
வேழ்விகளாலென்விள்ளனவராலென்வினைவெல்லா
மூழ்வினைதானேதருதலினூழேயிறையென்றான்.

என்றது, பரசிவத்தாலென்ன வேதநீதி நடந்தாலென்ன ஞானயோகங்கள் முதலான யோகஞ்சாதித்தாலென்ன சிரவணமுதற் சாதனங்களாலென்ன விஞ்ஞானேஸ்வரநீதியாலென்ன வேதாந்தசித்தாந்த முதலான ஆறந்தாதித முணர்ந்தாலென்ன பெண்சாதி பிள்ளை பந்துக்களாலென்ன பஞ்சயெக்ஞங்கள் சோடசதானம் மாடமாளிகை கோபுரபிரசாதஞ். சிவபூசை விஷ்ணுபூசை முதலான தேவாராதனைதோப்பு நந்தவனந்தண்ணீர்ப்பந்தல் வாவி குளம்ஏரி கிணறு பஞ்சமூர்த்திகள்பஞ்சகிருத்தியங்களாலென்னஉபகாரம் அபகாரத்தாலென்ன பகை யிஷ்டத்தாலென்ன திதிவாரநட்சத்திரகரணயோக நவக்கிரக இராசிகளாலென்ன சாந்திர[illegible]ண கிறிச்சிராயண முதலான மகாவிரதங்களாலென்ன தீர்த்த யாத்திரை தேசாந்திரங்களாலென்ன மணிமந்திர அவிழ்தங்களாலென்ன இவன் கன்மத்துக்கீடாகப்பஞ்சகிருத்தியஞ்

செய்கையாலுமெல்லாங்கன்மத்துக்கீடாகையாலும்எல்லாப்பிரவிர்த்திநிவிர்த்திகளுங் கன்மத்தைக்கொண்டு நடக்கையாலும், என்விதி நான்செய்தகன்மம் என்புண்ணியம் என்பாவம் ஒன்றுநினைக்க ஒன்றுசெய்யவேறொன்றாகையாலும், வேண்டுமென்றது வேண்டாமலும் வேண்டாமென்றது வேண்டியும் வலோத்காரத்திலே புசிப்பித்தும் இதம் அகிதம் துக்கஞ் சுகஞ் சுகந்துக்கமாகையாலுந் தரித்திரஞ் சம்பத்து தீர்க்காயுள் அற்பாயுள் சன்மார்க்கம் அசன்மார்க்கங் கோபங் குரோதம் இப்படி அனந்தகோடி விதங்களாகையால் கன்மமேபிரமமென்றறிக.

உளஎ, வினைப்பயனைவெல்வதற்குவேதமுதலா
மனைத்தாயநூலகத்துமில்லை-நினைப்பதெனக்
கண்ணுறுவதல்லாற்கவலைபடேனெஞ்சேமெய்
விண்ணுறுவார்க்கில்லைவிதி.

என்றது,வினைச்சொரூபமாகிற கடவுளே சொரூபம்.கன்மம் விரிந்துசஞ்சிதாதி முதலான அனந்தங்கன்மமாய் விரிகிறது தடத்தலட்சணம். இதின் வசமாய்ச் செனனமரணப்படுவது பந்தம். இந்தகன்மம் பக்குவப்பட்டுச் சொரூபநிலையறிந்து தானில்லா துயிக்கமாகிறதே முத்திநிலை என்றறிக. தானென்பதென்றுண்டோ அன்றும் வினைவிடாதென்றறிக.

---

எசு-வது-அத்தியாயம்.

## காலவாதிமதம்.

காலமெனுங்கடவுளினைக்கழியவுளதேதுமிலை
மாலமர்ந்தவருமரிபிரமாதிகளெவருஞ்
சிலமுடைச்சிருட்டிமுதற்றிகழ்வனவர்கச்சுழற்றித்
தூலமொடுசூக்குமமாய்த்தொடர்ந்துதொடர்ந்தேவருமால்.

உஎகூ. ஊழியுமாய்க்கற்பமுமாயுகங்களுமாயாண்டாகி
வாழியதிற்றிங்களுமாய்வாரங்கொளும்பக்கமுமாய்
நாழிகளாய்ராசிகளாய்நாளாகிஞாயிறுமாய்ச்
சூழுலகமுயிர்காலசக்கரத்தாற்சுழற்றியிடும்.

உ௮௰. கணந்துடிநிமிடமாத்திரைவிநாடிகருதுநாழிகையிறுட்டிங்களினைந்திடுமாண்டு நாலுநூறதன்மேன் முப்பதோடிரண்டாயிரத்தா, லணைந்ததுகலியாந்துவாபரமிருமைமும்மைபாந்திரேதைநாற்கிரேதை, யிணைந்திடுச்சதுர யுகமொன்றிரண்டாயிரத்தினற்பிரமனுக்கொருநாள்.

உ௮க. முன்புபோலன்னாட்டிங்களாண்டாகமொழிதரு லயனுந்,தன்பதமழியுந்தனதொருபகலிற்சகலமுமழிதரும்பிரமன்,பின்பொராயிரத்திற்பெரியமான்மடியும் பெரியமானு

கோடியினி, லன்புருத்திரனுமடிதருமகேசன் சதாசிவன்மு
லுமவ்வண்மே.

உ அஉ. ஆதலான்முழுதுந்தோற்றிநின்றழிய வழிவிலாக் காலமாம்ப
ரத்தி, னேதமில்வசமேமுழுதுமென்பதுதானெவர்க்குமேற்
றிடப்பகர்ந்திடுவன், பேதகாலத்திற்கலியினுக்கியல்பாய்ப்பே
சியவகைவரும்பரிசங், கோதவுங்கட்டேயொத்திடின் முழுது
மிப்படிக்கொக்குமென்றறிவீர்.

கலியுகநடக்கைவெகுவாயுண்டு. அது திரட்டிற் காலவாதத்திலு மனுவி ஞ்ஞானத்திலும் உண்டென்றறிக. இதினர்த்தந் தொகையாகச் சொல்வது பஞ்சமூர்த்திகள் முதலெண்ணிறந்த சீவராசிகளுங்காலத்தின்கண்ணேயிறந், துபோய்த் திரும்பவுமுண்டாய் பூட்டைபோல வருகையாலுங் காலத்துக்கு இத்தனை ஆயுள்சென்றதென்று மூப்பிளமையில்லாமையாலு மெல்லாந்தன்க ண்ணே கழியத் தானொன்றிலழியாமலும் இருப்பதால் காலமே பரப்பிரமமெ ன்றறிக. இனிச்சொரூபமாவது நித்தியமாய்க் கண்ணுக்குக்காணுமலொன் ருகநிற்பது. தடமாவது நிமிஷமுதல் இலக்கமில்லாத காலமாய் விரிகிறது பந்தமாவது சீவராசிகளெல்லாம் இதிலே செனனமரணப்படுவது. மோட் சமாவது காலங்கடந்த கடவுளைச்சேர்வதாம் இதற்குவெகுவாய் மறுப்புண் டென்றறிக.

---

எஎ-வது-அத்தியாயம்.

## மந்திரவாதிமதம்.

உ அங. மந்திரத்தாலழைத்திடவேவானவரும்வந்திடுவர்
மந்திரத்தால்வசிகரணமுதல்வலிகள்வந்தெய்து
மந்திரத்தலாக்கியளித்தழித்திடலுமாக்கியிடு
மந்திரத்தின்வலியவர்காண்வானவருமானவர்தாம்.

உ அச. மந்திரவானகத்தேவான்முதலாம்பூதங்கள்
மந்திரவானகத்தேமன்னுசராசரங்களெல்லா
மந்திரவானகத்தேவரம்பில்லாஞானமது
மந்திரத்தின்தன்பெருமையாவர்களுமறியாரால்.

உ அரு. மூலமானாதத்துண்மையுணரவிப்பொழுதேமுத்தி
யாலமுண்டானுமாலுமயனுமிப்படியுணர்ந்தே
சாலமாவிறைவராகிச்சமைந்தனுசகத்துக்கென்று
லேலுமந்திரவாதத்தேயிருமையம்பெறலாமன்றே.

உ அசு. பாரகத்திலிருக்கவும் பரகாயமானதுபாயவு
நீரகத்திலிருக்கவுமெய்நினைத்திடத்தினிலேகவும்

போரகத்தினில்வெல்லவும்பொருளன்றுபொன்னுலகேறவு
மாரகத்தின்மதிக்கவுமிவைமந்திரத்தவர்வல்லரோ.

என்றது, மந்திரங்களைச்செபித்துப் பிர்மாமுதலான தேவர்களைவரச் சொல்லவு மந்திரத்தால் வசீகரணமுதலாய்அஷ்டகர்மங்களு மந்திரத்தாலாக் கியழித்திடலும் மந்திரத்தின்வலியால் தேவர்களுமானிடரு மந்திரவானுடைய தேகத்திலே ஐந்துபூதங்களுஞ் சராசரங்களும் ஞானங்களு முண்டாயிருக்கும். அம்மந்திரத்தின்பெருமை யாவராலுமறியவொண்ணாது. மூலநாதத்தைசெபித்துப் பிர்மா விஷ்ணு வாதிகளும் பஞ்சகிருத்தியமும் பூமியிலெத்தனைகாலமிருக்கவும் பரகாயப்பிரவேசமாகவு நீரில்முழுகியிருக்கவு மண்ணிலே புதைத்திருக்கவும் நினைத்த விடத்திற்போகவும் உயித்தியம்வெல்லவுந் தேவலோகங்களிலேபோகவுங் காமரூபுகொள்ளவுமிப்படி வெகுசாமர்த்தியமுண்டாகவுங் கொல்லப் பிழைப்பிக்கச் சாபானுக்கிரக சாமர்த்தியங்களும் இப்படிச்செய்விக்கிறது மந்திரமாகையால் மந்திரமே பிரமமென்றறிக. இனியிதின் சொரூபம் மூலமந்திரம் இந்த மூலமந்திரமொன்றுமே விரிவாயேழுகோடி முதலான மந்திரமானது தடத்தலட்சணம் இந்தமந்திரத்தின்வழிநில்லாமற் சென்னப்படுகிறது பந்தநிலை இந்தமந்திரங்களை விதிப்படி செபித்துத்தேவத்துவமடைவது முத்திநிலை யென்றறிக.

---

## எஅ-வது-அத்தியாயம்.

## யந்திரவாதிமதம்.

உஅஎ. இயந்திரமனேகந்தன்னுலெய்துமெட்டானகன்ம
நயந்திகழ்புத்திமுத்தியெனநவிற்றிடுவோங்களா
யியந்திரந்தன்னைக்கீறுமியந்திரமிலதமான்மா.
நயந்தனையுணராமூடர்நரதனுவாகாரன்றே.

இப்படியந்திரபேதங்களாவது சிதம்பரசக்கரம், வாலை திரிபுரைபுவனைசக்கரம், வயிரவசக்கரம், வீரபத்திர விநாயக சண்முக காளி துற்கி முதலான சத்திபேத சக்கரங்களும், சூரியசந்திரர் முதலான நவக்கிரக யந்திரங்களும், காலசக்கரஞ், சர்வதோபத்திர சக்கரம், விஷ்ணுசக்கரம், நரசிம்மசக்கரம், இராமசக்கரம், இலட்சுமிசக்கரம், அனுமசக்கரம், இப்படி சகலமதசக்கரபேதங்களுங் கக்ஷபுடபேதசக்கரங்களும் அனேகயந்திரங்களும் அறிந்து இதின் புனச்சரணை இதின் செபங்கள் இதின் ஆவாகனஸ்தாபன சந்நிதான சந்நிரோதன அவுத்துவாசனங்களுடனே பஞ்சசுத்திசெய்துக் கொண்டு எந்தக்கன்மத்துக் கெந்தசக்கர மெந்தமந்திர மெந்ததந்திர மெந்தபீசாட்சரமப்படியே புனச்சரணை செய்து பூசைசெய்தாலிவணினைத்த காரிய மெல்லாமாமென்றறிக. இதுவெகுவிஸ்தாரமாம் இதைதொகையாகச் சொன்னதென்றறிக. இதின் சொரூபமாவது மூலமந்திரமாகிற பிரணவம்இனித்தடமாவது அனந்தகோடி யந்திர மந்திர தந்திரங்களாய் விரிகிறது, இனிப்பந்தமா

வது இந்த யந்திரமே தனுகரண புவனபோகமய மென்றறியாமற் போவது இனி முத்தியாவது இந்த யந்திரசாத்திரப்படி பூசைசெய்து புனச்சரணை செய்தந்தந்தெய்வங்களை யடைகிறதென்றறிக.

---

எகூ-வது—அத்தியாயம்.

## அவிழ்தவாதிமதம்.

உஅஅ. கோதறுசெம்புதன்னைக்குலவியவிரதஞ்சேர்ந்து
வேதகஞ்செய்யுமாபோன்மெய்யெனுங்காயந்தன்னை
வேதகமருந்தாற்செய்துமேவுநன்முத்திசித்தி
நாதராயிருக்கநாதனைகவேநவிலுமன்றே.

உஅகூ. ஆகமமுறைமைபாலேபுடைத்தவம்மருந்துக்கேற்கத்
தாகமோகாதிகாற்றுதன்பணிமுதலாய்மாற்றி
யேகனுய்க்குகையிற்புக்கங்கிருந்திடவறைந்தநாளி
லாகம்வேதகமாயின்பத்தழகுறுநாதராவார்.

உகூ0. வேதித்தகாயத்தோர்க்குவிளங்குமெய்ப்பொருளுஞானம்
போதித்துத்தானேதோற்றும்பொருவிலாக்காயந்தன்னிற்
போதித்தமலநீர்வெற்பும்பொருந்திடும்பஞ்சலோகம்
வேதித்துப்பொன்னுங்கல்லும்விமலமாமணிகளாமே.

உகூக. பரவுவார்வேண்டித்தெல்லாம்பெற்றிடப்பணிக்கலாகும்
விரவிடுஞ்சித்தியோடும்விளங்கிடுந்திரிகாலங்கள்
கருதருகாயம்பின்னைகால்வருசகமாமாறு
லரியநன்மருந்தேயாவுமாய்ப்பொருள்வேறுமுண்டோ.

என்றது, அவிழ்தமாகிற தண்டுலம் பிண்டி பேதங்களே சகலசீவராசிகளுக்கும் புசிப்பாயதிலே பிழைக்கையாலும், பீரங்கி முதலான பாணப்பிரயோகமுங் கொல்லுகிறதும் பிழைக்கிறதுஞ் சகலவியாதிகளைதீர்க்கவும் உண்டாக்கவுங் கோடானுகோடி விஷங்களாகவும்விஷங்களைத்தீர்க்கவும்அமிர்தமாயும் அன்னமாயுங் கல்வி கேழ்வி யோகஞானந் தூரதிருஷ்டி தூரகெமனம்வாக்குசித்தி காயசித்தி தீர்க்காயுள் அற்பாயுள் கொடுக்கவுஞ் சராசரங்கள் பசிகளைத்தீர்த்துப் பிழைப்பிக்கவும் அன்னரசத்தாலேசாகவும் பிழைக்கவும் வியாதி தீர்க்கவும் உண்டாக்கவும் இப்படி மருந்தினுடைய பேதஞ்சொல்லிவ்விரிவாமென்று தொகையாகச்சொன்னதென்றறிக.

சொரூபம் மருந்துகள். தடமாவது இந்தமருந்துகளெண்ணிறந்தவிதமாய் விரிகிறது. பந்தமாவது, இந்தமருந்தின் வழிப்படாதிருப்பது. முத்தியாவது, இந்தமருந்தின்வழிப்பட்டதென்றறிக.இப்படிச்சமயங்க ளொன்றுசொ

ன்னதொன்று சொல்லாமல் வேறுவேறாக அதுவதுவே பிரமமாய் பரமதங்க
ளைக்கண்டித்துத் தன்சொம்மதங்களைநிறுத்துமென்றறிக. ஆகையா லிப்படி
ப்பலசமயமானதெல்லாமொரு ஊருக்குப்பலவழிபோலுஞ் சமுத்திரத்துக்கா
றுகள்போலும்,பாலொன்றாய்ப் பசுக்கள்பலபோலும் மலையொன்று வழிபல
போலும் மோட்சஞ்சேருகிறவிடமொன்றாகிலும் போகிறவழிகள்பலவாமென்
றறிக. இந்தத்திஷ்டம் ஒன்றுக்குப்பலவாகிலுந் தான் குறித்தவிடத்திலே த
ப்பாமல் நிச்சயமாய்சேரும்போல அந்தந்தமதங்களை நம்பிவழிபடிலந்தமததே
வதை பதங்களைச் சேர்க்குமல்லாமல் பிரமத்திலே சேர்க்காதாகையால்முன்
னதிஷ்டமாகாதென்றறிக. இந்தத்திஷ்டமாருக்கென்னில் எண்ணிறந்த செ
ன்மங்களெல்லா மதங்களில்நின்று பாபட்சயமா யிருவினையொப்பு மலபரி
பாகம் வந்து மோட்சவாஞ்சையடைந்து பிரமத்தைதவிரும்பினவனெந்த மத
த்திலிருந்தாலும் பிரமத்தையே யடைவனென்றறிக. இனி யெல்லாச்ச
மயங்களுமொன்றாயிருக்கிற அதிட்டிக்குவனுக் கெப்படி யிருக்குமென்னில்
வித்து ஒன்றாயிருக்க அது சாகு மூல பலாதிகளுக்கு நாமரூபக்கிரியைக
ள் வேறாயும் இருசிகள் வர்னம் ரூபுகள் தொழில்கள் வேறாயு மிப்படிவே
றுவேறான விதமெல்லாம் வித்திலே தோன்றிப் பலவாம்போலும் ஒருவன்
தேகத்தில் ஆத்மா வொன்றாயிருக்க அந்த ஆத்மாவுக்கும் அவயவி அவயவங்
கள் தத்துவங்களெல்லாம் வேறாயும் நாமரூபக்கிரியைகளும் அதின் சீவன்க
ளும் ஆத்மாவை யல்லாம லெய்துவது சுதந்தரமாய்ச் சீவித்தும் ஆத்துமா
வையல்லாமல் பிரத்தியேகமவயவங்களழிந்து மிப்படி யிருந்தாலுஞ் சீவ
ன்போகிறபோது எல்லாங்கூடப்போயும் வருகிறபோது எல்லாங் கூடவந்து
ம் எல்லாத்தத்துவங்களிலும் ஒரு சீவன்தானே யிருந்துவெறுவேறாய்த் தத்
துவங்காண்பித்தாற்போலும், பொன்மண்நூல் காற்று இதுகளிலேபணிகள்
கடங்கள் படங்கள் துவாரவாக்கிய மிதுகள்முதலொன்றாகிலுமிதுகள்காரிய
ப்பட்ட விடத்தில் நாமரூபக்கிரியைவேறானாற்போலும், விளக்குஒன்றாகிலும்
ஒளிஉஷ்ணங் கிரணம் நாம ரூபக்கிரியைவேறாகிலும்விளக்கறுமிடத்திற்போ
ய்விளக்கேற்றுமிடத்தில் வந்ததுபோலும், எல்லாசமயங்களும்பிரமந்தானே
அத்தனைபேருங்கொண்டு நாமரூபக்கிரியைவேறாய்நடத்து மெல்லாம் பிரம
சொரூபமாமேயென்றறிக. இது அனுபவிகளால் அறியலாமென்றறிக. இந்
த அனுபவிக்குச் சமயங்கள் முதல் சகலமும்வேறல்லவென்றறிக. எல்லாச்
சமயங்களிலு மொவ்வொருசமயத்துக்குத்தானேசிருட்டிகள்பேதமாகச்சொ
ல்வது உகாந்தபேதங்களாலேபேதமானதென்றறிக.

---

## தத்துவநிஜாநுபோகசாரம்.

### இரண்டாவதுவாதிகள்சமயம்-முற்றிற்று.

ஆ - அத்தியாயம் - ௱௪௰ - இ-உதாரணமுட்படச்செய்யுள்-௬௱௯௰.

உ

ஓம்பராபரப்பிரமணேநம.

# தத்துவநிஜாநுபோகசாரம்.



## 1.—பூர்வபாகம்—கர்மகாண்டம்.



## ௩ - ஆம் - அதிகாரம் - சங்கற்பப்பிரகரணம்



### முதலாவது-அத்தியாயம்.

### தீர்த்தசங்கற்பம்.

தீர்த்தத்தாற்சிதையாவினையொன்றிலைத்
தீர்த்தத்தாழ்செறியாநலமொன்றிலை
யேர்த்தத்தோடுமிருப்பதுமொன்றிலைத்
தீர்த்தத்தேதிகழ்முத்தியுமென்பரால்.

என்றது, காசி, இராமேஸ்வரம், கும்பகோணம், பாபநாசம், கங்கை யமுனை, சரஸ்வதி, மணிகரணிகை, கோதாவிரி, குருக்ஷேத்திரம், புண்ணியகோடி, துங்கபத்திரை, பலபத்திரா, மாயா, மதுரா, அவந்திகாபுரி, கேதாரம், நீலதண்டம், நேபாளம், ஸ்யமந்தம், காவேரி, கிருஷ்ணை முதலான தலங்களுந் தீர்த்தங்களுமாடித் தீர்த்தமூர்த்திகளையுஞ் சேவித்துச் சமுத்திரஸ்நாந மகாதீர்த்தங்களிலே உத்திராயனம், தட்சணாயனம், கிரஹணகாலம், சனித்திரயோதசி, துவாதசி, அமாவாசை, பூரணை, ஏகாதசி, பிதுர்திவசம், வருஷசங்கராந்தி, மாலைசங்கிராந்தி, ஆடி, ஆவணி, மூலம், தீபாவளி, மகாநவமி, உகாதி, கேதாரவிரதம், அனந்தவிரதம், விநாயகசவுத்தி, கோகுலஷ்டமி, கார்த்திகை, மார்கழி திருமஞ்சனம், மாகஸநாநயஞ் சிவராத்திரி, முக்கிய நட்சத்திரம் இதுமுதலான விசேஷ நாள்களிலும் பண்டிகைகளிலும் ஸநாநஞ்செய்வித்தாலும்வித்தானுசாரமாய்த் தானம் பரோபகாரங்களையுஞ் செய்வித்து ஸ்நானஞ்செய்யும்போது நூறு ஆயிரமென்று முழுகியும் ஆயிரம் பதினாயிரமென்று சாவித்திரி, காயத்திரி, அசபை, பஞ்சாட்சரி இதுமுதலான செபங்களைச்செய்தும் மரணமானவர்களெலும்பை முக்கியதீ

ர்த்தங்களிலேபோட்டும் பிண்டி, கரணம், பெலிகரணம், அந்திஷ்டைகள் செய்தும் தெரிசனபரிசனங்கள் செய்தும், தீர்த்தங்களை உபாஸ்திகள்செய் தும், இகத்திலே பாபட்சயமும் வியாதிமுதலான பீடைகளும் நாசமாய்ச் சுசிற்பூதனுய்ச் சர்வசெனவசீகரமுமாய்ச் சகலருக்குந்தயாளுவாய் மோட்ச மாகிற சொற்காதி பதங்களிலிருப்பார்களென்றறிக.

## உ-வது-அத்தியாயம்.

## அர்ச்சனு சங்கற்பம.

சிவார்ச்சனைசெய்யப்போகும்போது அருணோதயத்திலெழுந்துசௌசா திசரீரசுத்திதந்ததாவள்யமுதலானதுஞ்செய்து பின்பு தடாகம் நதிஇதுகளில் ஸநானஞ்செய்து ஈரவஸ்திரத்துடனிருந்து விபூதிஸ்நாநமானஸெகாகமந்திரங் களினுல் சிரசு, முகம், இருதயம், குய்யம், பாதமிந்த ஐந்துதானங்களிலுமி துமுதலான சர்வாங்கத்திலும் ஈசாநுதிபஞ்சப்பிரணவ மந்திரங்களிலேபுரோ க்ஷணஞ்செய்து பின்னு மந்திரவசத்தாக நாலாறுபத்துதரம் அனுலேபனமா கச்செய்து உத்தூளனஞ்செய்வது ஸ்நாநமாமினித் திரிபுண்டரம்-கக-கக-அ- இந்தத்தானங்களிற் றரிக்கும்போது அந்தந்தத்தேவதைகள் மந்திரங்களையு ஞ்சொல்லித்தரிக்கவேண்டும். இனி அநுமிகை பத்திமை தற்சினி இந்த-ரு-ம் அகார உகார மகாரமூன்றுக்கும் இந்தவிரலாலே திரிபுண்டரமிடுவது பின்பு உருத்திராட்ச கற்பஞ்சொல்லுகிற விதிப்படியந்தந்த ஸ்தானங்களில் மந்தி ரவசத்தாக உருத்திராட்சந்தரிப்பது.

---

## ரூ-வது—அத்தியாயம்.

## பஞ்சாட்சர முதலானமந்திரங்கள்.

பஞ்சாட்சரமந்திரங்கள் முதலானது அறியவேண்டும் முந்த சடாட்சரசித்தி அரியாகிறமந்திரசித்தி குக்குமமாகிற மாத்திருகா சக்கிரோத் தரண கூர்மசக்கிரோத்தரண இலிங்கோர்த்தரண மந்திரஜநந, ஸ்தானமா னமகாசக்கிரோர்த்தரண மந்திரோர்த்தரண மந்திராநுசந்தானமாய்ப்பரிக்ஷி த்துச் சுத்தப்பிரசாத மூலப்பிரசாத தத்துவப்பிரசாத ஆதிப்பிரசாத ஆத்ம ப்பிரசாத இந்தச் சிருஷ்டிவிதரூபமான பஞ்சமந்திரங்களும் பஞ்சதாசிவரு பஸ்திதி மந்திரங்களும் ஸம்ஹார ரூபத்திரிவிரமந்திரங்களும் பஞ்சப் பிரணவ மந்திர மூலஸ்தூல குக்ஷமமாயாக்கியப் பிரசாத இந்தவைந்து மந்திரங்களும் பஞ்சாஸ்திரமந்திரங்களும் பஞ்சபிரமமந்திரங்களும் காயத்திரி மிறுத்துஞ்செ ய தட்சணுமூர்த்தி நீலகண்ட சரப வீரபத்திர விக்கினேஸ்வர விசாக வித்தி யேஸ்வர பிரம விஷ்ணு சூரிய வயிரவாதி மகாமந்திரங்களும் தூற்கி சாரதை

இலட்சுமி, கௌரி, அசுவனேஸ்வரி,அந்தகசங்னேஸ்வரி, அன்னபூர்ணா திரிபுரா ம்பிகாதி,மகாசத்தி,மந்திரங்களுஞ் சித்தசாபாசத்தி சாபாமேருதந்திரசாகினி, தந்திரதாகினி, தந்திர கூசிமர்,தந்திரசல்லிய தந்திராதிசித்தமந்திரங்களும் திராவிடாதி லௌகீகதேசபாஷை மந்திரங்களும் விவேகித்து ஷடாங் கக்கிரமத்தில் நமஃ, ஸ்வகஃ, பவுஷடுஹூஃ, மவ்வுஷடு என்கிற ஆறுபல்லவப் பிரயோகங்களும் வெள்ளை மஞ்சள் இரத்தம் படிகஞ் சாமளங் கறுப்பு இந்த க்கிரமத்தில் இருதையாதிஅங்கவர்னமந்திரங்களும், இனிப்பஞ்சாங்கமந்திரங் களுக்குப்பல்லவமந்திரங்களுடையவிதிகளும் அங்கவீன மந்திரங்களுக்கு அங் கங்கற்பித்துக்கொள்வது நிச்சயித்துபின்னு மிந்த ஆறுவிதபல்லவ மந்திர பேதங்களைச்சாத்திரப்படிச்சொல்லில் விரிவாமென்று நாமமாத்திரஞ்சொ ன்னதென்றறிக. இனியுள்ளமந்திரங்களுக்குள் முக்கியமான பிரணவம் பரப் பிரணவம் அபரப்பிரணவமென்றிரண்டுவிதமாம் இதிற்பரப் பிரணவமாவது வாச்சியமானசத்தியஞானதியிலக்ஷணமாம். அபரப்பிரணவமாது, வாசகமா ன பிர்மாதிபஞ்சதேவதை பஞ்சவர்னமான அகாராதிபஞ்சாக்ஷரம் தண்டா காகிறுதிமுதல் ஆறு ஓங்காரம் இவ்வோங்காரமே பிரமன்முதற் பிபலிகாந்த வரையாயுள்ள வுயிர்களும் மற்றபதார்த்தங்களுமாம். இஃதேஅபரமாம்.இனி ப்பரப்பிரணவஞ்செபிக்கும்போது பிரமரிஷி காயத்திரி தேவி சந்தசு பரமசி வன் அதிதேவதை அம் ஹஜம் உச்சத்திமங் கீலக இப்படி மோக்ஷார்த்தமா ன வினயோகமாக முதலுச்சரித்து மேலே மந்திரத்தால் கரநியாசஞ்செய்து தேகநியாசம் தேசிநியாசமுதலியமந்திரங்கள் விஸ்தாரமாயுண்டாதுகளெல் லாஞ்சொல்லில்விரிவாமென்றறிக. இதின்பிறகு உலகமெல்லாந்தப்தாயபிண் டம்போல் பிரணவசோதிவியாப்தமென்கிற வனுசந்தானத்திலாவது அல்லது மூலாதாரமுதற்சக்கரபேதத்திலாவது அல்லது சுஷும்மமுனுமதந்தியகதவி ததியுறல் ஏகாத்ம விந்து சிந்தனமாகிலும் அல்லது இர்தயகரணிகாக்றசோம சூரியாக்கினி மண்டலத்திரையத்திலாவது மகேஸ்வரதியானங் கைகூடாவி டில் பத்துலட்சம்செபம் புனர்ச்சரணைசெய்தால்பின்புபிரணவமந்திரஞ்சித் திக்கும் சித்திக்கில் சகல பாபட் செயம் சட்கள சித்தி அஷ்ட வைஸ்வரியமு ம் எண்ணினதெல்லாம் கைகொடுக்குமென்றறிந்து உள்ளமந்திரங்களில் ஆத் மப்பிரசாதமாகிறதே சர்வ சிவராசிகளிலும் இரேசகபூரகமாகிறபிராணபான ரூபமாயாவிருத்திகளுடனே கூடிச்சஞ்சரித்து அம்ச சோக யுக்தமாதிசி வமந்திரமென்றும் அம்சம் மந்திரமென்றும் அசபாகாயத்திரியென்றும் பெய ரான பிராணயாம பூர்வகமாகப் பின்பு இந்தமந்திரத்திற்கு அம்சதிருஷ்டி அ வ்வியத்தகாயத்திரி சந்தசு பரம் அம்ஸநேதேவதை அம்பீ ஜம்சுவாகாசத்தி சோகம் கீலகம் பரம் அம்ஸபிரஸாதாத்மமானசெபமே வினயோகமென்று ஸ்மரித்து பின்பு கரநியாசம் அங்கநியாசம் அங்கிநியாசஞ்செய்து பின்பு ஒரு நாளைக்கு உ௧௬௲ ஜெபம் ஏழாதாரதேவதைக்குமற்பித்தால் மூலபஞ்சா க்ஷரம் முக்கியமாகும் இம்மந்திஞ்செபிக்கும்போது குருமுகமாய்-ஈ-முதற் கோடிபரியந்தமிலக்கமும் ஜெபமாலிகையிலக்ஷணமும் ஜெபமாலிகைமணிவி

சேஷமு மங்குஷ்டமாதியங்குலியிலக்ஷணமும் உச்சாடணமுதற்கன்மவியவகாரங்கள் திதி வாரநக்ஷத்திரகரணயோகங்களிற்ஜெபபலன்கள்ஸ்தானவிசேஷமானவிடங்கள் தீர்த்தவிசேஷங்கள் இதுமுதலாகவனேகமுண்டுஇந்தபிரமாணங்களில் விவேகசிந்தாமணி சித்தாந்தபடலத்தில் விதிப்பிரகாரமிருந்து புனற்சரணைசெய்தால் இகலோகபரலோகங்களில் சித்தியாகாதகாரியங்களுஞ்சித்தித்து பஞ்ச கிருத்தியமுஞ்செய்யலாமென்றறிக. இனிஜெபமாலைக்கு அங்குஷ்டமோக்ஷம் தற்சனியிற்சத்துருஹானி மத்தியாங்குலியிலர்த்தசித்தி அனாமிகை சாந்தி கனிஷ்டம் இரக்ஷணை மத்தியாங்குஷ்டயோகத்திற்ஜெபமாலைபிடித்து ஜெபிக்கிறதுகனிஷ்டசிவமாம். தற்சனியில்மாலைமத்திமம் அனாமிகாங்குஷ்டமாலிகை உத்தமம் இனிமத்தியாங்குஷ்டத்திற்பாகியஜெபஞ்செய்வது தற்சனியில்பாம்ஸஜெபஞ்செய்வது அனாமிகையில்மாநஸஜெபஞ்செய்வது பிறருக்குகேளாமற்ஜெபிக்கிறது வாசகஜெபம் தனக்குகேட்க வுதடுகளசையாமற்செய்கின்றஜெபம் உபாம்ஸஜெபம்மநதில்தியானமாகமஞ்சைஞ்சலமில்லாமல்செய்கின்றஜெபம் மானஸ்மவாசகஜெபம் க்ஷுத்திரமுதலான காரியங்களுக்கு உபாம்ஸ ஜெபம் சகல சித்திகளுக்கும் மானஸ ஜெபமாம் மோட்ச மடைதற்கு வேண்டிய கிருஷையாதென்றால்,

வாசகவாச்சியசம்பந்தமறிந்து மேல் ஷடாங்கங்களே பிரதமாவரணம் அனந்தாதி அஷ்டவித்யேஸ்வரர்களே யிரண்டாமாவரணம் உமை சண்டேஸ்வரர் நந்திகேஸ்வரர் மாகாளி பிரிங்கிரிஷி கணபதி இரிஷப ஷண்முகனென்கிற அஷ்டகணேஸ்வரரேமூன்றுமாவரணம்இந்திராதிலோகபாலகர் பிர்ம்மா விஷ்ணு நான்காமாவரணம் வச்சிராதிபத்மசக்கரங்களே யைந்தாமாவரணம் பிரகாமாதிசத்தமாதருக்களே ஆறுமாவரணம் அஷ்டவசுக்களே ஏழாமாவரணம் ஏகாதசருத்திரர் எட்டாமாவரணம் ஆதித்தாதிகிரகங்களொன்பதாமாவரணம் இப்படி ஆவரணமுள்ளதான பஞ்சாக்ஷரமந்திராதிதேவதைக ளாவரணசகிதமாகவாவது தியானித்துச் செபிக்கவேண்டும். இப்பால் அகற்பசெபம் சகற்பசெபமென்றிரண்டுவிதம்தியானரகிதமாகச்செய்கிறது அகற்பம் தியானயுக்தமாகச் செய்கிறது சகற்பம் இப்படிச் செபத்துக் குவிதித்தகற்பங்கள் வாதுலசுத்தாஞ்ஞை விவேகசிந்தாமணிமுதலான சாத்திரப்பிரமாணமாய் செபஞ்செய்துக் கொள்ளவேண்டும் சுத்தசைவனுக்குச்சிவார்ச்சனை அவசியமானபடியினால் மரத்துவேரில் வார்த்ததண்ணீர் சாகோப்சாகாதிகளுக்கெல்லாம் பலித்தாற்போலவும், அன்னம் புசித்தாற் சகலேந்திரியங்களுக்குந் திரப்தியானாற்போலுஞ் சிவபூசையால் சகலதேவதாதிரப்தியாகையாற் சிவபூசையேசெய்துமோட்சமடையவேண்டு மாகையாற் சிவபூசாவிதிக்கிறமஞ் சொல்வது முன்சொன்ன தெல்லாம் நியாசங்களும் விபூதிருத்திராட்சங்களும் பஞ்சாட்சரமு மிதுமுதலான மந்திரங்களுஞ்சொல்லியிப்பாற் சிவபூசாவிதியைச் சொல்லுகின்றது.

## ௪-வது—அத்தியாயம்.

## சிவபூஜாவிதி.

சந்திரசூரியமண்டலம்அக்கினிகங்கைஸ்தண்டிலங்கலசஸ்தாப்பியம்பொத்தகஸ்தாபியஞ் சாளக்கிருமமிருக்கிறவிடம் இதுகள்முதலான பூசாஸ்தானத்தில் இலிங்காதிஸ்தானமேவிசேஷமென்றுசொல்லுகையாற்சிவபூஜைக்குஇலிங்கமயங்கள் சொல்வது. சிலாமயலிங்கம்பிர்ம்மா, இந்திரநீலலிங்கம்விஷ்ணு,இரத்தினலிங்க மிந்திரன், சுவர்ணலிங்கங் குபேரன், இரஜிதலிங்கம் விஸ்வதேவன்,பித்தளைலிங்கம் வாயு,வெண்கலலிங்கம்வசுக்கள், இரணமயலிங்கம் அஸ்வநிதேவதைகள்,ஸ்படிகலிங்கம் வருணன், அன்னலிங்கம்அக்கினி, தாம்பிரலிங்கஞ் சூரியன், முத்துலிங்கஞ்சந்திரன், வெகுவர்ணலிங்கம்நக்ஷத்திரம்,மணிலிங்கம் புதன், கற்பொன்மயலிங்கஞ் சுக்கிரன்- வித்துருமலிங்கஞ் செவ்வாய்,மாணிக்கலிங்கம் பிரகஸ்பதி, தாம்பரலிங்கஞ்சனி, குசமயலிங்கஞ் சத்தரிஷிகள், நீலலிங்கந்துருவன்,ஸ்தாஸவநாமலிங்கம்மார்க்கண்டன் தற்பரமயலிங்கம்வசிஷ்டன், சதாசிவநாமலிங்கஞ்சனக்குமாராதியோகிகள், பிரவாளமயலிங்கஞ்சேஷாதிகள், அயோமயலிங்கம் ராட்சதர்,திரிபுலிங்கம் பசாசுகள்,திரிலோகமயலிங்கம் குய்யகர், வச்சிரமயலிங்கம் மாத்தியகர்,பிரஸூநயலிங்கம்மன்மதன், நாளுகாமயலிங்கம் இலட்சுமி சரஸ்வதி சசிதேவி மத்துறுகாதி சத்திதேவதைகளு மற்றுமுள்ள தேவரிஷி முனி ராட்சதர்களும் இவர்கள் முதலான பேர்களெல்லாம் வேறுவேறு லிங்கங்களைப்பூசைபண்ணித் தங்கள்தங்கள் பதங்கள் பெற்றுச்சுகத்திலிருப்பார் இனிக் கிறுமிகீடநரமிருகபசுபட்சிமுதலான சீவராசிகள் சுயம்.. ..கம்-வாணலிங்கஞ்சலலிங்கஞ்சங்கிரணலிங்கம்பிராணலிங்கமென்று ஐந்துவிதமாம்.இதுகளைத்தங்கள்தங்கள் சத்திமாத்திரம்பூசைசெய்து கதியடைவார்கள்.

இனிமனுஷாதிகள் முதலானபேர் பூசைசெய்யும்போது தெசகாலஸ்தானாதிகளாலே தாந்திரீக வைதீக மென்றிரண்டு விதமாம். இதில் அந்தரசௌசம் பாகியசௌசமென்றிருவிதமாம். இது சோடசதான பலகிரியைகளாலேஆத்மசுத்திஸ்தானசுத்தி திரவியசுத்திலிங்கசுத்திமந்திரசுத்திஆகும். இதிற்கால்கைகழுவிவாய்கொப்பளிக்கிறதுசௌசாசமனம்ஸ்தான பஸ்மருத்திராக்ஷாதி கவசங்கள்பூண்டு ரஸனைகள்செய்வதே ஆத்மசுத்தி. இனி சம்மாரஸ்நானுலேபனம்மொக்குவர்ணபேதம்கந்த புஷ்பதூபதீபாதிநிர்மலோபகரணத்தாலே சவுக்கமத்தியமலங்கரிக்கிறது தானசுத்தி இனி ஜல புஷ்பாக்ஷதை திரவியங்களைப் பார்த்து நிரீக்ஷணத்தாலே பஸ்மமந் திரசலத்தால்புரோக்ஷிக்கிறதேதிரவியசுத்தி இனி அநாமிகைமத்திமைநடுவே புதிதானபுட்பமெடுத்து அங்குஷ்டதற்சனிகளில்முதல்நிர்மாலியந்தள்ளிமுந்தினதற்சனிவிரற்பூவாலே லிங்கபீடத்தில்ஜலத்தைப்பிரட்சாளனம்செய்கிறது லிங்கசுத்தியாம் இனிச்சகலபூசாநிமித்தியம் ஓம்நமசிவாயசுவாவென்றுச்சரி

க்கிறது மந்திரசுத்தி இப்படிப்பஞ்சசுத்திகளும் செய்துபின்பு அஸ்திரமுத்தி
ரை சக்கரமுத்திரை மகாமுத்திரை சோதனமுத்திரை ஸம்ஹாரமுத்திரை
பஞ்சமுகிமுத்திரை சுரபிமுத்திரை திரவியமுத்திரை முதளிகாமுத்திரை
பத்மமுத்திரை சகர்னமுத்திரை சத்திமுத்திரை வீசமுத்திரை சாந்திமு
த்திரைஆவாகனமுத்திரை மனோரம்மியமுத்திரை தத்துவமுத்திரை இலிங்
கமுத்திரை காயத்திரிமுத்திரை காலகண்டமுத்திரை சூலமுத்திரை
நமஸ்க்காரமுத்திரை யோனிமுத்திரை விசசோடனமுத்திரை ஆச்சாதான
முத்திரை இதுமுதலான முத்திரைவிதங்களெல்லாமறிந்து அந்தந்தப்பிர
யோகக்கிரியைகள் வருகிறவிடத்தில் முத்திரைகொடுப்பது. கூர்ம அனந்த
ஸ்திரா பத்ம விமல இதுமுதலான யோகாதிபீடங்களில் முக்கியமா
னசிம்மாசனத்தின்மேல் பஞ்சவர்னங்களினால் சிகாகாரமாகவெழுதி தர்ம
ஞான வயிராக்கிய ஐஸ்வரியமென்கிற நாலுகிரமத்தில் அக்கினியாதி திக்
குகளிற் பாதசதுஷ்டயமாகப் பாவித்துஎழுதி இனி இராஜவர்த்தப்பிறபை
யரூபமான அதர்மம் அஞ்ஞானம் அனைஸ்வரியம் அவயிராக்கியமான நாலு
கிரமத்திற்பூர்வாதி திக்கிற் பாதசதுர்விதமு மெழுதியிதின்மே லனுமாதிக
ளைக் கிழக்குமுதல் எட்டுதிக்கிலு மெட்டுபத்மமாகவும் இனிவாமாதிசர்
வபூதமனந்தமான உருத்திரரே கிழக்குமுத லெட்டுத்திக்கிலு மெட்டுகே
சரங்களாகவும் வயிராக்கியமே மத்தியகர்னிகையாகவும் இனி வாமைமு
தல் மனோன்மணிகடையாக நவசத்திகளே கிழக்குமுதலெட்டு நடுவுமான
கர்னிகையிலிருக்கிற பீசங்களாகவும் இதின்மேல் இரவி சசி சிகி மண்டல
மாகவும் இதின்மேல் சத்துவ ரசோ தமோ குணங்க ளாகவும் இதின்மேற்
சீவாத்மா அந்தராத்மா பரமாத்மா வாகவும் இதின்மே லாத்மதத்துவமாக
வும் வித்தியாதத்துவஞ் சிவதத்துவமாகவும் இதுமுதலான தெல்லாங்கற்
பனையாகக் கற்பித்து இப்படிக் கற்பித்த ஸிம்மாசனத்தின்மேல் சிவலிங்
கத்தை ஆவாகனம் ஸ்தாபனஞ் சன்னிதானம் சந்நிரோதனஞ் சமமுக்கி
யகரணமாகிற கிரியையைச்செய்து பின்பு பூசா ஆரம்ப முதல்பூசைமுடி
கிறபரியந்தமும் பிறக்ஷாளன பாத்திரத்திற் பூரித்திருக்கிற சலத்தைத்
திரும்பத்திரும்பக் கைகழுவிச் சகலகிரியைகளு மீசுரார்ப்பணஞ்செய்துஅ
தின்பிறகு நதி தடாககூபங்களிற் சுவாது மிசிரம் லவண மிதுக ளில்லாம
ல்நல்லசுவாது சலங்களிலே கலக்கிற திரவியங்கள் வெள்ளைக்கடுகு நல்லபு
ட்பங்கள் அறுகு செங்கழுநீர்க் கோஷ்டம் வில்லாமிச்சைவேர் கற்பூரம்இ
ந்த ஆறுபாத்தியத் திரவியங்களுங் கலந்து பின்பு குசாக்கிறத்திலம் வெ
ள்ளைக்கடுகுசீவெநெல்லு க்ஷீர இந்த ஆறையும் அற்கிய ஜலங்களிலே கலந்து
இனிப்பல கச்சூரங்கோஷ்டங்குங்குமம் ஏலங் கர்ப்பூரம்இந்தஆசமனத்திரவி
யங்களை யாசமன சலத்திற்கலந்து இப்படிப்பாத்தியம் பாதார்ச்சனைக்கும்
அற்கியங் கையுடம்புகளுக்கும் ஆசமனங் கொப்பளிக்கவும் பாவித்துக்கொ
டுத்துப் பின்பு பஞ்சகவியத்தாலபிஷேகஞ்செய்து பின்புபஞ்சாமிர்தத்தா
ற்செய்துபின்புகோதும்மைபயற்றஞ்சூரணம் கந்தமுதலான லேபனத்தி
ரவியங்களால் கலங்கிட்டுப்பின்பு இளநீரிலபிஷேகஞ்செய்து கந்தோதகபுட்

போதகமிரத்திஞேதகஞ்சுவர்ஞேதகம் மந்திரோதகமிதுமுதலானமகாஸ்தா ஞேதகங்களுமபிஷேகஞ் செய்து பின்பு விதிநயசுப்பிரமாகவிதிவத்தாதி கற்பபிரமாணஞ்செய்த விபூதிதரித்துப் பின்பு பட்டுதேவவங்குமுதலானசு ப்பிரசித்திராதிசுகவஸ்துகளுந்தரித்துச் சுவர்னரஜிதப்பட்டுருத்திராஎஞ்ஞோ பவீதமுந் தரித்து கிரீடமுதலான ஆபரணங்களுந்தரித்துப் பின்புஇந்தச்சிவ லிங்கத்தைச் சதாசிவனுகப் பாவித்து அஞ்சுமுகத்திலும் கலைகள்நிறுத்தும் படி சித்தியிருத்தி துவிதி யிந்திரை மேதா காந்தி ஸ்வதி திருதி யிந்தக்கலை எட்டுக்குந்தானம் உள்ளங்கால்-உ-உள்ளங்கை-உ-கிராணம்-க-உச்சி-க-தோள்-உ-இந்த எட்டுதானங்களிலுநிற்பதுசத்தியோசாதனகலை யென்றறிக.

இனிஇரசா-சூரக்கா-இரதி-பாலி-காம்-வியாபினி-கிரியை-இக்கா-திக்கா-தாத்திரி-பிரவி-மோகினி-எமம்-அபா -ஆகக்கலை-௰௩-இதின்தானம் பாயுரு-க இலிங்கம்-க-குறங்கு-உ-முழந்தாள்-உ-கணைக்கால்-உ- பாதம் -உ - கடிகை-க-கடித்தடபக்கம்-உ - ஆக ௰௩ - இதுவாமகலை யென்றறிக. இனிமொஹங்கை யைசிட்டை தகும்பை மிருத்து உபசிந்தை திருட்டா ஆகக்கலை அ-இதின்தானம் இருதயம்-க-களம்-க-தோள் -உ-நாபி-க-மடி-க-மார்பு-க- இந்தக்கலைஎட்டும் அகோரகலை யென்றறிக. இனிநிவிருத்தி பிரதிஷ்டை வித்தை சாந்திஇந்த-ச-மீசானமுகந்தவிர நாலுமுகத்திலுநிற்கும் இது தற்புருஷகலை யென்றுபெயர் இனி நீச்சினி அங்கதை அரிஷ்டை சுவாலினி மரிசி ஆக- ரு-இது-ஐந்துமுகத்திலும்வியார்த்தமாயிருக்கும்இதுயீசானகலையென்றுபெயர் ஆக ௩அ-கலையும்-ரு-முகத்திலுநிற்குமென்றறிக. இந்த முகம்-ரு-லும்-ரு-சத்திநிற்கும்இந்த-ரு-சத்தியும்-ரு-கலையைப் பிரேரிக்கும் இந்த-ரு-ம்பிர்ம்மாதி-ரு-யும் பிரேறிக்கும் இந்த-ரு-ம் -ரு- தொழிலைச்செய்யும் இந்தலிங்கநிலை ஓம்கிரியா சத்திகலைநிவர்த்தி பிர்ம்மாசிருஷ்டி யிது அடிப்பீடம் இனி அகாரம் ஞானசத்தி கலைபிரதிஷ்டைமாலத்தியிது நடுக்கண்டம் இனி உகாரம் இச்சாசத்திகலை வித்தை உருத்திரசங்காரம் இதுமேற்பீடம்இனிமகரந்திரோதை சாந்திகலைம ஹேஸ்வரன்மறைப்புஇது உள்வட்டம் இனிவிந்துபராசத்திசதாசிவன்சாந்தியாதீதகலை அனுக்கிரகம் இது குழிநிலை இனி நாதம் சாந்தியா தீதோத்தரம் அருள்சத்தி பரமசிவன் இப்படி நிலையான இலிங்க சதாசிவன் பஞ்சகிருத்தியத்துக்கும் ஆத்மாமுதலாம் இப்படி உட்பிரம இலிங்கநிலை யறிந்து கலைகள் சொரூபமாய்த் தியானஞ்செய்து சிவபூசை செய்யக்கடவாயென்றறிக.

இனிஇப்படிக் கலாசொரூபமான இலிங்கத்துக்கு முன்சொன்னஆபரணசகிதமாயிருக்கிற சுவாமிக்கு சந்தனம் அகரு கஸ்தூரி கற்பூரம் பச்சிலைகுங்குமம் விலாமிச்சைவேர் கோஷ்ட மென்கிற அஷ்டகந்தங்களுந்தரித்துசிவகடுகு வெள்ளைக்கடுகு எள்ளு அரிசி முத்து முதலானஅட்சதைகளுந் தரித்துகிருஷ்ணவர்னக் கிரமமான நந்தியாவர்த்தம் செந்தாமரைநீலோற்பலமிதுமுதலான சத்துவசோதாமத புட்பங்களும் அறுகு துளசிவில்வமுதலானபத்திரசாலங்களுந் தரித்து கரிய அகரு வெள்ளையகரு குக்கில ஸ்ரீ கெந்தம் அரக்

கு வில்வப்பழம் நெய் தேன் சர்க்கரை கற்பூரம் இந்தப் பத்துவிதமுதலான தூபங்களுஞ் சமர்ப்பித்து தயிலங்கிர்தங் கற்பூரமுதலான தீபங்களுஞ் சமர்ப்பித்துப் பின்பு அரித்திரான்னம் பரமான்னம் முற்கான்னங் கிர்தான்னந் தத்தியான்னங் குடான்னமுதலிய ஆறுவிதநைவேத்தியங்களும் நிவேதித்துப் பின்பு பூகபர்ணசூர்ணங் கற்பூராதி தாம்பூலத் திரவியங்களும் நிவேதித்து இப்படித் திரிவிதோபசாரம் பஞ்சோபசாரம் அஷ்டோபசாரந் தசோபசாரம் சோடசோபசாரம் இந்தவிதங்களிற் செய்வது இனி௩௨-உபசாரமாவது ஆவாஹனம் ஆசனம் பாத்தியம் அற்கியம் ஆசமனீயம் ஸ்நானம் வஸ்திரம் யெஞ்ஞுபவீதம் பூஷணங் கந்தம் அக்ஷதை புட்பம் தூபந் தீபம் நைவேத்தியம் அமுதவாசனம் ஜிராசனந் தர்ப்பணம் பலார்ப்பணந் தாம்பூலம் பிரதெட்சண ம்நமஸ்காரந் தோத்திரம் புராணபடனஞ் சத்திரஞ் சாமரம் விசிறி மஞ்சஞ் சங்கீதம் நிருத்தம் வாச்சியம் ஆத்மாரோபணம் என்கிற ௩௨-உபசாரமுமந்திரவசத்தாகச் செய்வது இதுகளில்லா விட்டாற்சில புட்பங்களினாலேசிரத்தா பத்தியாக அர்ச்சித்தாலு முன்சொன்ன பூசைகளுக்குச்சரியென்றறிக.

இந்தப்பத்தியங்கங்கொண்ட பூசைசிவவிஷயமானசிரவணத்திற்றன் குசனபாதசேவை பூசைவந்தனை தாசியம் சக்கியம் ஆத்மாபரணம் என்கிற நவவிதமாயிருக்கு மென்றறிந்து பீடத்திற் சிவலிங்கத்துக்கு பாயரங்கபூசையைவிஸ்தரித்து இகலோக பரலோகபலத்தை யிச்சிக்கிறவனானாலுஞ் சகலசீவனுக்குமிதஞ்செய்கிறவனானாலுமுன்சொன்னபடியே பூசைபண்ணுவானென்றறிக. இனி நிஷ்காமியாகிற மோட்சவதிகாரிக்கு அந்தரங்கத்திலே முக்கியமானஞான பூசைக்கு உபசாரங்க ளெப்படியெனில் முதலந்தரங்கத்திலிருதயகமலத்தில் சிவதர்மமே கிழங்கு சுஞ்ஞானமேநாளம் அஷ்டமகதைஸ்வரியமே அஷ்டதளம் ருத்திரோ சராதியானவர் கேசரம் வயிராக்கியமேகர்ணிகைபின்பு சந்திரப் பிரபாவ மயமாக இருதய கமலத்தில் ரவி-சசி-சிகி-மண்டலத்திரய மத்தியத்தில்சத்தென்கிறதிவ்யமூர்த்திசித்தாகிறதே தேககாந்தி ஆனந்தமாகிறதேயழகு தத்துவ உபகற்பிதமான ஆவரணங்களாலேயலங்கிர்தமாக்கி ஸ்படிககடத்துள் ளிருக்கிற தீபப்பிரகாசம் போலப் பிரகாசிக்கிற சிவனைபாவித்துப் பிறகு சர்வாதாரமான ஈஸ்வரனே கர்த்தனென்கிற புத்தியேயாசனம் பரமாத்மன் பரிபூரணனென்கிறதிடமே ஆவாகனம் செகமெல்லாஞ் சிவன் ஸ்ரீ பாதமென்கிற தெளிவே பாத்தியஞ்சுகாமபூதிஜம்புவென் கிறஅனுசந்தானமே யற்கியம் பரமபவித்திர சொரூபம்நம்மவனென்கிற அறிவே ஆசமனம் நித்தியநின்மல னென்கிறதே ஸ்நானஞ் செகமெல்லா மதிக்கிரமித்திருக்கிறசுத்தவித்தையே வஸ்திரம் திரிகுணாதீதமான ஞானமேஎஞ்ஞுசூத்திரம்சைதன்னியமே செகதலங்காரம் பிறதீபமே யாபரணஞ்சுத்தசிற்சத்தியே அனுலேபனங் காருண்யமே யட்சதை பிரணவார்த்தமே சத்திய வசனமாகிய புட்பம் விஷைய வாசனையமே தூபஞ் செகத்துற்வத்தியெல்லாம்பாழாய்ப்பரஞ் சோதிசொரூபமாகிறதே தீபம் செகமெல்லாங் கபளீகரித்துக் கொண்டிருக்கிற வாத்மாவே நித்திய கிர்த்தனென்கிற சமவித்தை நை

வேத்தியந் திரிகுணங்களையு முட்கொண் டிருக்கிறதே தாம்பூலஞ் சோகபாவமே பிரதெட்சணஞ் சமஸ்ததத்துங்களையுமீறிநின்ற நிலையே நமஸ்காரம் சிவபரவயிக்யமே விசற்சனம் இந்த உபசாரங்களாலே யந்தரங்க பூசை ரசித்துப் பின்பு இருதயகமல கற்னிகாமத்தியத்திற் குருவினாலே இப்படி யந்தரங்கபூசை செய்வானென்றறிக. இப்படி ஆத்மார்த்தங்களைபூசைசெய்தானந்தித்து ஆடிப்பாடித் தட்டமிட்டு ஓமங்களையுஞ் செய்வானென்றறிக.

இனிக்கிரமங்கள்நதிதீராதிக்ஷேத்திரங்களிற் றேவதானவாதிகள்பிரதிஷ்டைசெய்தலிங்கங்களான பரார்த்த பூசை செய்யும்போது விடாமற்சரிக்கிறதுவிருஷபபாஸ்கர வீரபத்திர மாத்துருகைகள் ஸ்கந்த க்ஷேத்திரபால பிர்ம விஷ்ணு ருத்திராதி தேவதைகளை யவரவர் தானங்களிலேபோய் பூசைசெய்வானென்றறிக. ஈசுவரன் கோயிலில்லாமல் வேறேகோயி லிருக்கிற விஷ்ணுவாதி தேவதைகளைப் பூசைசெய்யக் கடவனல்லனென்றறிக. இனித்தான்பூசைசெய்கிற இலிங்கஞ்சோரஸ்திரீ கலகங்களாலேபோய்வராமற்போனால் அகோரமந்திரம் லட்சஞ் செபித்துப் பின்பு ஆசாரியனாலே விதிப்பிரகாரமாக எழுந்தருளப் பண்ணிக்கொள்ளவும் விரதநியமமாதி லோபங்கள் வந்தவிடத்தில் அஷ்டோத்ர சதகாயத்திரி செபம்பண்ணிச் சுத்தனாகிறது இனிச் சகலசற்கிரிகைகளும் நின்மலாந்தக்கரணமாகச்செய்கிறவன் சுத்தசைவனென்றறிக. இனிப்பரம பவித்திரமான சிவபாதோதகஞ் சிவப்பிரசாதஞ் சிவநிர்மாலியம் இதுகள் கொள்ளவும் விபூதிமாலைகள் தரிக்கவும் இதுகள் சற்பிராமணருக்கேயல்லாமல் மற்றபேருக்கெல்லாம் யோக்கியமல்லவென்றறிக.

---

௫-வது-அத்தியாயம்.

## அத்துவாசங்கற்பவாதி.

அத்துவாவடிவாகச் சிவனைப் பாவிப்பது மந்திரமாவது தேசிகன் பெயர் பதமாவது அவன்பாதம் வர்னமாவது அவனிறம் புவனமாவது அவன்பதி தத்துவமாவது அவனுடம்பு கலையாவது உணர்விறந்திருத்தல் இப்படிக்குருவைத்தியானிக்கிறது சிவன்வடிவாமென்றறிக. இதல்லாமலும் ௫-கலையும்-௫-முடியாம். சாந்திமுதல் நாலும் நாலுமுகமாம். வித்தைமுதல் மூன்றும் உள்முதலாம். பிரதிஷ்டைமுதல்இரண்டும் உந்திமுதலாம் நிவர்த்திபாதமுதலாம் அக்கரங்க ளிந்திரியங்களாம் புவனங்கள் உரோமங்களாம் மந்திரங்கள் நேயத்தோர் தாதுக்களாம் பதங்கள்தசைமுதலாம் தத்துவங்கள் சுக்கில சேணமூளை அஸ்திகளாம் சத்திகள் - ம௫ - ம் - கண்ணும் - இப்படிப் பரப்பிரம மாகிற சிவன்வடி வென்றறிக. ஆகையாலிதில் தனக்குப்பிரியமானதைப் பாவித்துப் பூசிப்பானென்றறிக.

---

## ௬௰-வது—அத்தியாயம்.

## தர்க்கவாதிசங்கற்பம்.

பதம்-பதச்சேதம்-அன்னுவயம்-கர்த்தா-கன்மக்கிரியை-சமாசவிக்கிரகம்-சத்துமதாது-புல்லிங்க-ஸ்திரலிங்கம்-விபத்திஞானம்-இதுமுத லாகக்காவிய விற்பத்திகளுமறிந்து-பிண்டிதார்த்ததாற்ப ரியமறிந்து-அன்னிய கிரந்தங்களுக் கெல்லாம் அர்த்த விற்பத்தி யறிந்து அதின்பிறகு கொளவு-மதிவியாகரண சாஸ்திரமுமறிந்து சத்தசுத்திகள் முதலான விதங்களெல்லா மறிந்து அதின் பின்பு பரிபாஷை படித்துச்-சென்னி பட்டியம்-வரதாரகம்-மணிகாண்டத்திரைய முதலான வியாக்கியானங் களுமறிந்து தர்க்க நியாயசாத்திரம் ஆரோக அவரோகமாயறிந்து சோடச பதார்த்த நிர்ணயங் களறிந்து இதற்குத் திருஷ்டாந்தர தாஷ்டாந்தர உபமான உபமேயபிரமாண பிரமேயவாதசெற்ப விதண்டை யெத்துவாபாச முதலான தர்க்கயுத்திக ளெல்லா மறிந்து ஒருத்தனேடுத்தரஞ்செய்யும்போது ஆமென்றதை யல்லவென்றும், அல்லவென்றதையா மென்றும், பிரத்தியக்ஷப் பிரமாண அநுமானப் பிரமாண உபமானப் பிரமாண ஆகமப் பிரமாண-அருத்தாபத்திப்பிரமாண அபாவப்பிரமாண சம்பவப் பிரமாண ஐதீகப்பிரமாணம் - அஷ்டப்பிரமாணமும் ஷட்பிரமாணமும் அறிந்து இதுகளுடனே தர்க்கஞ்செய்யும்போது தர்க்கயுத்தியால் அவன் சொற்களாலே யவன் சொல்லை மறுத்துப்பலநூலிலுமெடுத்துஉதாகரித்துத்தன்சொல்லைநிலைநிறுத்துகிறது தர்க்கவாதமென்றறிக.

௨. தன்பொருணிற்கப் பிறர்சொலுக்கிசைத்தருன்றுணி வானியென்பதுதான், முன்சொனற்பொருளை யொழுத் தொருபொருளைமொழிந்திட றுணிவினந்தரமாந், தன்சொனற்பொருளையழிவுறக்கொடுத்தருன்றுணிவிரோதமாமன்றித், தன்சொலுக்கழிவு வந்திடத்ததனை விடுதல் சன்னியாசமாமதுவே.

௩. எதிரிதன் வினவுக் குத்தரமறியா விழுக்கத்தப் பிரதிஞை யென்பதுதான், முதன்மொழிந்ததனைப் பின்னையு முரைத்தன் முறைபிறழ் புனருத்தியாகு, மெதிரிதன்றேல்வித் தனமறியாமை யிசைப்பருநியோகசூற்றந்தா,னெதிரிநல்லுரையும் புரையேயிசைத்த னிரனுயோகக்குறையாமே.

௪.. பிறந்த வன்சாமோ வென்றிடச்சாமென்றுரைத்திடல் பெருந்துணிவுடைமை, யிறந்தவர் முத்தியையவரோ வென்றுவிரன்டுமுண்டென வடுத்துரைத்தல், சிறந்ததே தென்றல்யாவியிலென்ன லெதிரவிச் செயன்முயற் கோட்டி, னிறங்களே தென்றுலுரைத்திடாதொழித னிலவியமறைதணிச்சயமே

ச. தர்க்கவாதத்தா லெல்லாஞ் சதிர்பெறத் தெரிவதுந்தான்
மர்க்கவாதத்தின் மிக்கோர் தலைவரென்றிடப் பட்டோரும்
துக்ககுற்றங்கடந்த தூய்நெறிதர்க்கவாத
மிக்கநன்மேன்மைவாதில்வென்றவஞ்கன்றியுண்டோ.

---

ஏ-வது—அத்தியாயம்.

## தானசங்கற்பம்.

ரு. கருமிகட்கீகைநிற்குங் கலங்தொரு பிறப்புக்கற்ற
பெரியராங்தவத்தோர்க் கீகை பிறப்பொருநூறிநிற்கு
மரியமந்திரத்தார்க்கீகை யாயிரம்பிறப்புநிற்கு
முரியயோகிக்குஞானிக் கூறிபேருழிநிற்கும்.

சு. புந்தியுடைவிலங்குகளின் மனிதர்க்கீதல்புகலுவர்கள் பலகோடியாகப்போற்றி, யந்தணருக்கீதலது தன்னிற்கோடியறிவுடையோர்க் கீதலது தன்னிற்கோடி,சிந்தைதெளிதுறவினராய்நின்றோர்க்கீதல் சிறந்தகுருவுக்கீதல்செப்பவொண்ணு, வெந்தையயனின்றிறைஞ்சியாதரித்தா லிகலோகபரலோகமெய்தும்வந்தே.

ஏ. பரிந்தொருகோடி மறையோர்க்குப்பூமிபொன் பண்புடனே
வருந்துமிடிகெட வைப்பதுதன்னின் மறைமுடிவு
தெரிந்தமெய்ஞ்ஞானிக் கொருபிடிபிச்சை சிறப்புடனே
பொருந்தவமைப்பதற் கொவ்வாதெனமறை போற்றிடுமே.

அ. கடிப்பிடுகண் முரசங் காதத்தார்கேட்ப
ரிடித்துமுழக்கியதோரோசனையார் கேட்ப
ரடுக்கிய மூவுலகுங்கேட்குமே சான்றோர்கைக்
கொடுத்தாரெனப்படுஞ்சொல்.

கூ. அகரமாயினுமந்தணர்க் கீயினுஞ்
சிகரமாயிரஞ்செய்துமுடிக்கினும்
பகரின்ஞானி பகலூண்கொடுப்பது
நிகரிலையென்பது நிச்சய ் மானே.

ம. என்பிலதனை வெயிற்போலக்காயுமே
யன்பிலதனையறம்.

௰௧. உள்ளன்பிலாஞேடே டொழுதலூன்கவன்ற
வெள்ளொலும்பைநாய்கவர்ந்தற்று.

இப்படிவேதாகமபுராணங்களில்வெகுவாகச்சொல்லுமென்றறிக,அஃதெப்படிசகல ரிஷும்பாத்திர மாகிறதுசிவயோகி, அவனும் மனுஷனென்னில் அதற்குத்திருஷ்டம். ஒருகடுகத்தனையிரும்பைக் கடலிலே போட்டால் அதுவமிழ்ந்திபோம், அப்படியமிழ்ந்திபோகிற இரும்பைக்கப்பலாய்ச் செய்து அதில் வேண்டின இரும்புகளைப்போட்டாலுங் கரையேற்றும், அதுபோலச்சிவயோகியாகிறவன் ஓடஞ்செய்த இரும்புபோலாம் அவனைப்பூசை செய்துதானங்கொடுக்கிறபேர் ஓடத்திலேறின இரும்புபோலுமென்றறிக, இரும்பாற்செய்தகப்பல் இரும்பையெடுத்துப்போய் நினைத்தவிடத்திற்சேர்த்தாற்போல்மனுஷனாகிற சிவயோகி மனுஷரைக்கொண்டுபோய்த் தான் வேண்டின மோக்ஷத்தில் விடுவானென்றறிக.

இனித்தானமாவது, அன்னதான முதல்சோடசதானமும், ௩௰௨-அறங்களும். இஃதல்லாம லநேகவிததானங்களும், வாலப்பிரமசாரி. வானப்பிரஸ்தன், சன்னியாசி, இவர்கள்முதலான துறவிகளுக்குந் தேவர்கள் - பிதுர்க்கள் தாய்-தகப்பன்-பிள்ளைகள்-பெண்சாதி-அந்தகர்-பந்துக்கள்-கிழவர் அதிதிகளியாசகர்முதலானபேர்களையும் சம்சாரியிரக்ஷிக்கவேண்டும் பரோபகராந்தயவுதாக்ஷணியம்தன்மிக்குவேண்டும். அஃதெப்படிமுன்னுள்காரிபாரி-கர்ணன்குமுணன்-முதலான.௰௧ - வள்ளலும் - ௰௪ - மனுக்களும் - ௬ - சக்கரவர்த்திகள் முதலானபேர்களும் கேட்டபேருக்கெல்லாந் தானங் கொடுத்தும் எந்தெந்தமதத்திலனுசரிக்கிறபேரந்தந்தமதத்திலே யர்த்தப்பிராணாபிமானங்களைக்கொடுத்துஞ்சிவன், விஷ்ணு, பிரமாமுதல் தேவர்கள், ரிஷிகள் முதலியோரிவர்கள் அன்புசோதிக்க வேஷமாறிவந்து கேட்டவிடத்திற் கொடாதுகளைக்கொடுத்தும், இப்படிதானங்களைச்செய்து இகலோக பரலோகங்களைப்பெறுகையால் தானம்பண்ணுகிறதே பிரமமென்றறிக.

---

## ௯-வது—அத்தியாயம்.

## விரதசங்கற்பம்.

சாந்திராயணங் கிறசிராயணம் அஷ்டமி ஏகாதசி துவாதசி திரயோதசி அமாவாசை பாட்டியமி பூரணை ஏழுவாரங்கள் கிருஷ்ணங்கார சதுர்த்தசி தசமி,யிதுகளிலும் ஆடிமாதப்பண்டிகை,ஆவணிமூலம்,கோகுலாஷ்டமி,விநாயகசவுத்தி,நாகசதுர்த்தி,புரட்டாசியில்மகர்நவமி, வரலட்சுமிநோன்பு,கௌரிநோன்பு,ஐப்பசிப்பூரம்,தீபாவளி,கேதாரிவிரதங், கார்த்திகைபண்டிகை,கந்தர்சஷ்டிவிரதம், மார்கழிபூசை,பிள்ளையார்நோன்பு,திருவாதிரை, தைமாதசங்கராந்திப்பண்டிகை, உத்தராயனம்,தைப்பூசம், மாசிமாதஞ்சிவராத்திரி, மாகஸ்நானம், மகம், பங்குனிஉத்திரம்,வருஷப்பிறப்பு,உகாதிபண்டிகை,சித்

திரைவிஷடி, பூரணை, ஆனித்தொல் ஏகாதசியிதல்லாமல் மாசசங்கராந்திவருஷசங்கராந்தி உத்தராயனந் தக்ஷணாயனம் பீஷ்மஏகாதசி பீமஏகாதசி சிரவணத்துவாதசி ரதசப்தமிஇதுகளிலொருபொழுதாகஅன்னங்கொண்டுநிர்சலமாயிருந்தும் பலகாரங்கள் கொண்டும் துளசித்தீர்த்தங்கள் கொண்டும் தாரணைபாரணையென்றும் இப்படிச்சாந்திராயண, கிறசிராயண விரதங்களைச் செய்தும் தேகங்களைக்கஷ்டஞ்செய்தும் மாதாந்தரபேதங்களாகிற நோன்புவிரதவயிராக்கியங்களிலே கஷ்டஞ்செய்தும் தானுஞ்சிவாசார அபிமானங்களாலே பிராணத்தியாகஞ் செய்தும் நிஷேதித்தபதார்த்தங்கள் நிஷேதித்தபோசனங்களை விட்டுக்காலாகாரம் அவையாகாரஞ் சாகாமூல பலாதிகள் கொண்டுங்காடுகளில் குகைகளில் சரித்தும் ஆசிரமங்களிலேநின்று ஊர்த்தபாதம் ஊர்த்தஅஸ்தம் ஊர்த்ததிருஷ்டிகளாயிருந்தும், இப்படிப்பஞ்சேந்திரியநிக்கிரகஞ்செய்துங் கோபக்குரோத மடக்கியுந்தேகாபி மானங்கள் விட்டும் இதுவல்லாமல் தேவதாராதனையில் இன்னதுசெய்வே னென்றும், ஆராதனைமுடிந்தாலொழிய வாயிலொன்றும் போடுகிறதில்லை யென்றும், அஷ்டவிதார்ச்சனை சோடசோபசாரஞ் செய்வேனென்றும் சிவபூசைகள் கைதப்பினால்சாவேனென்றும் இப்படிவெகுவிதங்களை யனுஷ்டித்து இதுகளாலே தேவப்பிரசன்ன சாபானுக்கிரக சாமார்த்தியங்களுண்டாகையால்விரதநிஷ்டையேபிரமமென்றறிக. இதுவல்லாமல் நவநாதசித்தர் முதலாக மதபேதத்தாலுஞ் சாஸ்திராந்தபேதங்களாலும்மதுமாம்சம்அபினி கஞ்சாஎட்டிபச்சைநாபி விஷம் இரசம் கெந்தகம் பாஷாணங்கள் ப்ரஸ்திரிகெமனங்கள் இதுகள்முதலானநிஷேதகன்மங்களுடனே கூடிநிஷேதித்த திரவியங்களும்புசித்துச்சோகிகள்பக்கிரிகள் இலாடர்கள் பரங்கிகள் துலுக்கர்கள் முதலானபேர்மதுபானசுராபானங்களும் புசித்து அவரவருக்கேற்ற விரதங்களு மனுஷ்டித்துமோக்ஷம்பெறுகையாலும் விரதசீலங்களே மோக்ஷங்களைக் கொடுக்கையால்விரதமே பிரமமென்றறிக.

---

கூ-வது—அத்தியாயம்.

## சரிதை சங்கற்பம்.

கஉ. ஆவலாமெமக்காமலர்மரங்களாக்கலம்மலர்பறித்தலம்மலரார்
றுவிலாவகைத்தார்பலசமைத்த தணப்பிலெம்புகழ் சாற்றலன்புடனு, மேவுமாலையமலகிடன்மெழுகல்விளங்கநல்விளக்கிடுதலெம்மடியார், ரேவலானவைசெய்யுமிச்சரிதையியற்றவல்லவர்க்கெம்முலகளிப்பேம்.

இவன்நந்தவனஞ்செய்து அம்மலர்களாலேமாலைகள்கட்டித்திருக்கோயிலுக்குப்போய் மாலைதரிப்பித்துதோத்திரம்பண்ணிக் கோவில்விளக்கிமெழுகிஅலகிட்டுஅடியாரேவல்செய்துமாடமாளிகை கோபுரப்பிரகாரமண்டபங்கள் ஏரி,குளம்,தடாகம்,நடைவாவிகள்,தோப்பு,சாலை,நந்தவனம்,தண்ணீர்பந்தல்

நன்மக்கஞ்சி வழிகளில் மண்டபம் சாவடி திருநாள் தீர்த்தம் அபிஷேகம்பூசைநைவேத்தியமுதலானதர்மங்களுஞ்செய்து பஞ்சமகாபாதகங்கள்வந்தவிடத்திற்பிராச்சித்தங்களும் தெக்ஷணுபந்தமான ஜோதிஷ்டாதியோமங்களும் வைகாரிகபந்தமான பஞ்ச எக்ஞாதிகளும் செய்வித்துப் பிராகிர்த ஞானமும்விளங்கிமுக்கியஸதல சேர்வையு முக்கியதீர்த்த ஸநாநமும் தானதர்மபரோபகாரங்களும் நரமிருகபசுபட்சி தாபரங்களுக்குப் பாதைவந்த விடத்தில்விடுவித்து ஸநாநபானங்கள்பண்ணிச் சுசிபூதனுய் அனுஷ்டானமுதலான நியமங்களுங்கோவில்களுக்கு அபிஷேகம் அஷ்டவிதார்ச்சனை சோடசோபசாரம் பிரதக்ஷணம் தீர்க்கதெண்டம் அங்கப்பிரதக்ஷணம்ஆடல்பாடல் அழுகைவிழுகை உரோமாஞ்சலிதம் ஆனந்தம்இதுமுதலானவெவ்வுபசாரங்களுஞ்செய்துகுருலிங்க வேடத்தைச் சிவனென்றுவணங்கி அவரேவற்பணிவிடைசெய்துபக்தியும் விரதங்களும்பூததயவுநியமங்களும்அதிதிபூசையும்பொறுமையுமுண்டா யிதுமுதலாகநடந்தால் சிவலோகத்திற்போய்ச்சிவபோகம் புசித்துச்சுகத்திலேயிருப்பார்கள். இந்தசரிதைத்தொழில் அறுபத்துமூவர்முதலான எண்ணிறந்தபேர்நடந்து கயிலாசமடைந்தார்கள். இதற்குச்சமய தீக்ஷையுங் குருபக்தியும்காரணமாம் இஃதல்லாமற் பின்னுஞ் சிலசமயங்களும்மதானுசாரமாகஇந்தப்படி நடக்கும் ஆகையாற் சரிதையேபிரம மென்றறிக.

---

௰-வது—அத்தியாயம்.

## துலுக்கமதம்.

௧௫. ஞாலமொடுவானுலகமும் பருதிசோமனொடு நாலுதிசைகங்குலிவையுஞ், சாலவிடிமின்மழைகளுங்கடல்களுஞ்சகலலோகமொடுமேருகிரியு, மாலநபியாலுடையபாதியொளியாலிவையாகவருள்செய்கவொருவனே, சீலமுடனே தொழுதுன்னுமமென்னுவிலில்லாகியோதவருள் செய்வாய்

சொரூபலக்ஷணமாவது. நாமரூபக்கிரியாரகிதனுய் ஒட்டற்றுபற்றற்று ஒருவனுய் நிற்பதென்றறிக. தடத்த லக்ஷணமாவது உலகசிருஷ்டி வருமாறு மூலமாய் விளங்குகின்ற அல்லாவானவர் தன்னிடத்தில் ஒருவொளியையுண்டாக்கி யதில் அல்லாவானவர் புகுந்து பாதியொளியில் மகுமதனையுண்டாக்கி மற்றபாதியொளியில் எண்ணிறந்த உயிர்களை யுண்டாக்கி பின்பு நாயன் பாதியொளியில் மகுமதருயிரையுண்டாக்கியந்தவுயிரை நாயன் பார்த்தவுடனே பாதாதிகேசபரியந்தம் வெயர்வுவர அந்தவெயர்வையில் முதற்பாகத்தை அம்பியா அவுலியாக்களுயிரைவகுத்து அதிற்சிலவெயர்வையில் மசாகுளோர்க் குயிர்வகுத்து பின்பு இவற்றில்தானே ஊழியர்கள்வானுளோர்களுயிர்வகுத்து மீந்தவெயர்வையில் பாவிகளுயிர்வகுத்து இதில்மீந்த வெயர்வையில் காபர்களுயிர்வகுத்து சிலபரிகளுயிர்வகுத்து இதில்மீந்த வெயர்வை

யில் சின்னுகள் சயித்தா னுயிர்படைத்து இதில்மீந்த வெயர்வையில் மிருக பக்ஷிஊர்வன சலதரவுயிர்களைப்படைத்து இதில்மீந்தவெயர்வையில் தாபரா தி யுயிர்களைப்படைத்து இதில்மீந்த வெயர்வையில் ஒருதுளியைக் கொண்டு அரிசுங் குருசும் மறையெழுதப்பட்டகலமானமகுபூதுஞ் சொர்க்கநரகமும்ப டைத்துஇவற்றிலொருதுளிவெயர்வையிருந்ததுஅதிலொருமாணிக்கமுண்டா க்கியதைநாயன் எதிராகப்பார்த்தபோது அந்தமாணிக்கம் அக்கினியாயும்சல மாயும் பிரிவுபட்டுநின்று மீண்டும் ஒன்றாய்கூடி வெந்துகொதித்தலஎழுந்த புகையினால்விண்ணுலக மேழுதட்டுமுரியடுக்குபோல் படைத்துஇது ஒன்று க்கொன்று ௫௱ஆண்டைப்புஅகலநீளமாகும். பின்பு அந்தமணியொளியாகிறதனா ல்பரந்தமேகத்தாற் சந்திரசூரியநக்ஷத்திரங்களைப் படைத்து பின்புதேவலோ கமேழும் உரியடுக்குபோற் படைத்து மேற்சொல்லிய நீராக்கலக்க நாயன ருளாலே வாயுவையுண்டாக்க அந்தவாயுவால் அலைகளடித்துமோத அதில்நு ரைகளுண்டாய் அந்தநுரைகளாலே கண்டமான பூமியுண்டாகி கீழ்மேலேழ டுக்காகநிற்க இந்தவடுக்குகள் நீர்மேலிருக்கையால் அலையிலடுக்கு கொலை யாமலிருக்க அஷ்டகுலபர்வதம் நடுவும் மேருகிரி கூற்றுஞ் சக்கரவாள கி ரிமுதலியகிரிகளுஞ் சத்தசமுத்திரத்தில் அனேககிரிகளும் படைத்து அந்தச முத்திரத்தை பூமிக்கு ஒரு ஆடைபோலாக்கி இந்தபூமியில் சீவராசிகள் புசி த்தற்கு தண்டுலபிண்டி பேதங்களும் கந்தமூல பலாதிகளு முண்டாக்கிசூரி யனால் நாழிகை நாள் வாரம் மாதம் வருஷமுதலிய காலபேதங்களு முண்டா க்கிப்பின்னும் பஞ்சலோகங்களும் நவரத்தினாதி திரவியங்களும்இன்னுமனேக பதார்த்தங்களையுங் கர்த்தர்படைத்தா ரென்றறிக.

இதல்லாமல் பின்னுமொருவிதம் நாயன்றன்னொளியினால் நாயிற்றுக்கி ழமை தாபராதி தனுக்களையும் அவற்றிற்கு கந்தமூல பலாதிகளாகிய வுணவு களை யுண்டாக்கி, திங்களில் சூரியன் சந்திரன் உடுக்கள் இராசிகள் மலைகள் கற்கள் முதலியவற்றை யுண்டாக்கி, செவ்வாயில் மந்திரதந்திர வெந்திரங்க ள் ஷட்கருமங்கள் பம்புபில்லி சூனியம் புதையல் கன்னந் திருட்டு அவுஷ தங்கள் சூதம் பரிசைஷ முதலியவற்றையுண்டாக்கி, புதனில் சூரியகிரணஞ் சந்திரகிரணம் நவரத்தினாதி திரவியங்களையுண்டாக்கி, வியாழத்தில் தாபரச ங்கமாதிய வுயிர்களையுண்டாக்கி வெள்ளியில் இசிலா மார்க்கமாகிய துலுக்க மதமுண்டாக்கிதன்னைவணங்க ஆத்மாக்களையுண்டாக்கி,சனியில் தேவலோக மும்கீழ்மேற்பதினாலுலோகமும் படைத்துஇவற்றைச்சுமக்கவொருமலுக்கை யுண்டாக்கி யிவனைச்சுமக்க வொருமாணிக்க மலையைப்படைத்து இதைச் சு மக்க எருதைப்படைத்து இதைச்சுமக்க ஒருமீனைப்படைத்து விதைச்சுமக் கச் சமுத்திரத்தைப்படைத்து விதைச்சுமக்ககுங்குமமணலாகியவொருவ ட்டைப்படைத்து விதைச்சுமக்கவொரு இரும்புமலையைப்படைத்து விதை ச்சுமக்கவொரு மலுக்கைப்படைத்து விவனைச்சுமக்க வாயுவைப்படைத்து விவைகளெல்லாம் யுகமுடிவுமட்டும் நிற்குமென்றறிக. இப்பால் நாயனைம தியாமல் லிபிலீசுமுதலான தேவர்க ளக்கினிதேக மாகையால் நாங்களேகர்த் தரென்று செருக்குற்றிருந்தபடியால் அவர்களைச் செயிக்கும்படியாய் மண்

ணையெடுக்கப்போக அப்போதுபூமியானது ஆணையிடவதற்கு இரண்டு மலுக்கள்திரும்பிவந்து கூடியமூன்று மலுக்களும் இசிராசில்லையனுப்ப அவனையும் பூமிமூன்றுணையிட அதற்கவர் மறுஆணையிட்டுமண்ணையெடுத்துவந்து ஆதமாய்ச்செய்யென்ன வந்தமண்ணிலே மலுக்கள் நால்வரும் புனல்தீவாயுவைவிட்டு உடலைச் செய்து தலைசெய்யக் கூடாமற் கர்த்தன்தலைசெய்ய அப்போது ஆதமகனுண்டாய் ஆதமகனது வொருபாரிசத்தில் கழலையுண்டாய் அதைநாயன் சொல்லாலே ஜெபிர்நீல்போய்நகத்தால்கீறஅதில்சவுந்தரமான ஒருபெண் அவ்வாவென்னும் பெயருடன்பிறந்தாள் அவளை ஆதம் என்பவன் கண்டு கைபிடிக்க அப்போது நாயன்சொற்படி வானவரான மலுக்கள்விவாகஞ்செய்துக் கொடுக்க நாயன்ஆத்மாக்கள் சொற்கத்திலே கோதும்பை யல்லாமல் மற்றதெல்லாம் புசிக்கச்சொல்ல அதைக்கேட்டிருந்த விபிலீசுஅவ்வாவுக்குபிள்ளை கொடுத்தும் கோதும்பைதின்னச் சொல்லியும் அவர்கள்விரதத்தைக்கெடுக்க அதைக்கண்டநாயன் கோபித்து சொற்கத்தி லிருந்தவர்களை மண்ணில் தள்ளிவிட்டு அநேகம்பாடுபடுத்தினர். ஆதமகன் தபஞ்செய்ய அதைநாயன் கண்டுமகிழ்ந்து மக்காவில்வைத்தார் பின்பிருவரும் கூடிவாழ்க்கையில் ஆணும் பெண்ணும்பெற்றார்கள்அந்தப்பெண்ணை அந்தஆணுக்கே கொடுத்து மண்ணில்வாசஞ் செய்யச்சொல்ல விவ்விருவருங்கூடி மனுக்களைப் பெருகச்செய்தனர்கள். ஆதியில்கர்த்தன் மனுக்களைப்படைக்கும்போது நான்குவகுப்பாய்ப்பிரித்துமுதலாவது அம்பியாக்கள், இரண்டாவது அவுலியாக்கள், மூன்றாவது மூமீனோர்கள் நான்காவது காபர்கள் இப்படியாக சீவர்களைப் படைத்தபிறகு இந்தவுயிர்கள்பயப்பட அதைக்கண்ட நாயன் ஒருவொளியையிறக்கினன். அதைக்கண்டு எல்லாவுயிரும் மசூதுசெய்தார்கள். நான்காவதான காபர்கள் ஓதாமல் நினறார்க ளாகையால் ஓதினதெல்லா மொருபகுதி ஓதாதெல்லா மொருபகுதியாகநின்று இரண்டுவிதமானார்கள். இதல்லாமல் அந்தஒளியை முந்தவும் பிந்தவுங் கண்டபேரெல்லாம் மூமீனாய்ப் பிறப்பார்கள். முந்தக்கண்டு பிந்தக்காணாதவர்கள் இசிலாமாய் பின்காபராய்ப் பிறப்பார்கள். முந்தக்காணாமல் பிந்தக்கண்டவர்கள். காபராய்ப்பிறந்து இசிலாமவர்கள் ஒன்றுங்காணாதவர் காபராய்ப் பிறப்பார்கள். இப்படியாகப்படைத்து என்னைவணங்க வேண்டுமென்றார் பின்பு குதிசிலென்னுந் தலத்தில்வைத்து துனியாவிலே நாலுபகுதியாகக்கர்த்தன் உண்டாக்கினர். இந்ததுனியாவில் புற்பூண்டு விருக்ஷாதிகள்பயிராய் பூமிமேடுபள்ளந் தெரியாமல்மூடிக்கொள்ள அதையழிக்கும் பொருட்டு மிருகாதிகளைப்படைத்தார். பின்புஅம்மிருகங்கள் தாபரசங்கமாகிய விருக்ஷாதிகளை பெல்லாமழித்து மிருகக்காடாயின. இதுகளையெல்லாங் கொல்லும்பொருட்டுசின்செயித்தானகிற பூதப்பசாசசேனையை யுண்டாக்க அதுகள் அம்மிருகங்களைக்கொன்று பூமியெல்லாந் திருத்திசமனாக்கி பின்பு சின்செயித்தானே யிராச்சியமாண்டு கர்த்தனை வணங்காமல் கெர்விதிருக்க இவர்களைக்கொல்லும்படியாய் மிருகங்களிலொன்றாகிய குதிரைகளைவிட அதுகள் சின்செயித்தான் சேனைகளை யெல்லாங் கொல்லும்போது மல்க்கிலொருபெரியோனை வரவிட அவ்ன்பரிக் கூட்டங்

களை யெல்லாங்கொன்று வானலோகத்திற்போய் சுகமேயிருந்தான். பின்பு சொர்க்கமேலும் நரகங்கீழுமாய் நன்மைசெய்தவர்க்கு சொர்க்கமும் தீமைசெய்தவர்க்கு நரகமு மிருக்கையால் இந்தத்துனியாவாகிற பூமிநரகத்தாரிருந்து தீமையைச்செய்யவும் சொர்க்கத்தாரிருந்து நன்மையைச செய்யவும் இவர்கள் சுகதுக்கமனுபவிக்கவும் இடங்கொடுத்திருக்கும் பொதுநிலமாகையால் துனியாவென்ற தென்றறிக.

ஆதியிலுண்டானவிபரம் கர்த்தாவால்வந்தது உலகம் கலமுல்வந்தது அணிபலகை இப்பலகையால்வந்தது இசிராயிலுக்கு இவனால்வந்தது ஜெயபீராகிலுக்குஇவனால்வந்தவர்மகுமதருககுபோதிப்பவர் மகுமதர்முதல்இசிராயில்கடையாம். பின்புஇசிராயிலுக்கு அலிபீலதுமானெழுதியமகுபூதென்னும்பலகை யிப்பலகைக்கு மக்காநகராளும் இராஜாவே நாயன்சொற்படியெழுதினது. இனிபடைப்புகளுக்கு இரண்டுங்கொடுக்கவும் படைப்பின்றொழில்செய்யவும் செபிர்கிலுக்குத்தரம்அல்லாவுடைய் வரிசின்கீழ் தூதுநடந்த மீக்காயிலுக்குத்தரம் மேகங்களை யொருதலத்திலே கூட்டி மழைபெய்விக்க இசிராயிலுக்குத்தரம் படைப்புகளுயிரையெல்லாம் வாங்கஜெபிர்கிலுக்குத்தரம் இவருயிர்வாங்கிறவர்இசிராயில்இவருயிர்வைககிறவர்-நூஹுத்திற்குப்பிறகுஉயிர்வாங்குகிறவர் மீக்காயில் இப்படியிவர்களுக்குத்தொழிலென்றறிக.

இப்படிச் சிருஷ்டிப்பானபின் சிவனென்கிற விபிலீசு தூஷியம் பூமியை மேடுபள்ளந்திருத்தி பசாசாகிய சின்செயித்தானோடு சிருஷ்டித்தானென்றும் இந்தவீஸ்வரனுக்கு பிர்ம்மாவிஷ்ணு முதலான தேவர்களெல்லாம் பிள்ளைகளென்றும், அவருக்கு ஆயுள் (௯௰)லக்ஷவருஷமென்றும், இந்தநாளெல்லாந்தானே கர்த்தனென்று இராச்சியமாண்டு கர்த்தனுக்கு மாறுபட்டு ஆத்மாக்களை கற்பனையாக கெடுத்தானென்றும் பின்பு ஈஸ்வரிக்கு நரைவந்தடுக்க அவளைவேண்டாமென்று தள்ளிவிட அதைக் கண்டவள்வியசனமுற்று காட்டிற்சென்று புலம்பிக்கொண் டிருக்கையில் அங்கொருரிஷியானவர் இவள்படும் விசனத்தைப்பார்த்து இளமை வரும்படிச்செய்தனர் இவ்விளமையைப் பெற்றுக்கொண்டு ஈஸ்வரனிடத்திலவர அவர்இவளிளமையைப்பார்த்து சந்தோஷத்துடனே தன்னோடிருக்கும்படி கூடிவாழ்ந்தா னென்றும், இந்தவீஸ்வரி யீஸ்வரனது இடதுவிலாபாதத்திலொரு கழலையுண்டாய் அது வெடித்து இடது பாகத்திலிருக்க வுண்டாளு ளென்றும், இவ்வீஸ்வரன் ஈஸ்வரியோடுகூடாமல் தோல்வியடைந்து காட்டிற்சென்றுதபஞ்செய்கையில் தேவரிஷிகளெல்லா முறையிட அவர்களைப்பார்த்து கோபங்கொண்டு நீங்களேனிங்குவந்தீர்கள் நாம்வருகிற தில்லையென்று சொல்லஅதைக் கேட்டரிஷிகளெல்லாங்கூடி தேவரீரங்கத்தில் ஓரடையாளந்தாருமென்று கேட்க அவரப்படியே தன்தேகத்தில் ஒருதுண்டு தசையையறுத்துக்கொடுக்க அத்தசையை ரிஷிகள்வாங்கிப்போய் ஓராலயங்கட்டியதனுள்வைத்து பூசித்தகாலத்தில் அத்தசை புழுத்து துற்கந்தம் வீசினதென்றும், பின்புகற்களால் இலிங்கஞ்செய்து பூசித்தாரென்றும்இவ்வீஸ்வரன்வயோத்திகத்தினு

விறந்தானென்றும், இஃதல்லாமல் சிவனது முத்திரைக ளாகிய விபூதிருத்திராக்ஷமறுத்தல், பஞ்சாக்ஷர மறுத்தல், குருவைப்பிரம மல்லவென்றுமறுத்தல் சிவலிங்கமறுத்தல் சிவவேடமறுத்தல் அத்துவாமறுத்தல் சிவனைமறுத்தல் நிஜமோக்ஷமறுத்தல் சட்சமயமறுத்தல் உயிர் பலபிறவியெடுக்குமென்பது மறுத்தல் கொல்லொண்ணுமை மறுத்தல் தேவர்மனிதர் கேள்விக்கு வருவார்கள் மற்றமிருகபக்ஷி யூர்வன சலஜெந்து தாவரங்க ளெல்லாம் கேள்விக்கு வாராமல் மண்ணோடுமண்ணுய்ப் போகையால் இவைகளைக்கொன்று தின்பதால் தோஷமில்லையென்றும், இவைகளைக்கொல்லலாமென்றும் இவ்வாறு அனேகவிதமான சங்கைசமா தானங்களைச் சொல்லிச்சிவனைப் பூசைசெய்தவர்கள் எல்லாநரகத்தையுமடைவார்க ளென்றறிக.

இதன்றியில் 'இருக்கு எசுர் சாமம் அதர்வணமென்னும் நான்குவேதங்களும் வேதமல்ல. கர்த்தனுல் கூறியவேதமே முதல்வேதம் தவிரோத்து மூசாநபி பைகம்பரோதினது இரண்டாம் வேதம் இஞ்சில் இதையீசாநபி யோதினது. மூனறும்வேதம் ஐபூர்காதர்பூதுநபி யோதினது நாலாம்வேதம் விசேஷமான மகுமதரோதினர். இந்நால்வேதமும் இந்நால்வர்களால் தம்பிரான் உண்டாக்கினது. இனித்தம்பிரானுல்உலகத்தில் நடக்கவேண்டிய காரியங்களுக்கு ஒருசத்தம்பிறந்தது அச்சத்தம் பரம்பரையாக நால்வரிடத்தில்வந்து ஜெபிர்க்கீல் மகுமதருக்குச்சொல்ல அவரப்படியே காரியங்களை நடத்துவாரென்றறிக. கோவில்கள் தேர்திருவிழா திதி மதி விரதங்கள் ஸ்தானபானங்கள் விக்கிரக பூசைகள் முதலெல்லாவற்றையும்மறுத்துவிடுதலென்றறிக.

அல்லாவானவர் சீவர்களைப் படைத்தபின் இவர்களுக்கு தேகங்களைக் கொடுத்துபந்தப்படுத்தவேண்டிஎறும்புகடையில்தமது வர்மவொளியினுல் ஒருமாணிக்கமுண்டாக்க அதனை அல்லாவானவர் எதிரிட்டுப் பார்த்தவுடனே அந்தமாணிக்கம் இரண்டுபிரிவாகி அதில் ஒன்று அக்கினியும் ஒன்றுநீருமான பின்பு வாயுவையு முண்டாக்கிஅனலும்நீருங்கூடிக் கொதித்தது நுரையெழும்ப அதுதானே மண்ணுய்இந்த நாலுபூதமும் கூடினபோது ஒருதனுவாகி இஃது "தாயதுசுரோணிதத்திற் றரித்திடுமண்ணுநீரும், பாய்ந்திடுஞ்சுக்கிலத்திற் பரந்திடும்பவனமுந்தீ,, இப்படியாகப்பிறந்துநால்வகைசீவராசிகளும் கர்த்தன் கொடுத்ததேகங்களிற் புகுந்து புண்ணியபாவங்களைச்செய்தாலும் வணங்காத, விபிலீசைவணங்கினுலுங் கர்த்தனைவணங்கலாலுஞ் சுகதுக்கங்களாகிய சொர்க்கநரகங்களில் விழுந்து மறுபிறப்புண்டாகி வருந்துவது உயிர்களின் பந்தமென்றறிக.

இதைப்பார்க்கிலுங் காபர்கள், மிகுந்தபந்தப்பட்ட வர்களாம். ருஸ்நதி-சர்வசங்காரமானபோது நடுவேநாளவட்டத்தில் மரித்தசீவன்களை மகுமதர்வந்துகேள்விகேட்டு, அச்சீவராசிகள்-பூர்வம் எந்ததனுவோடு எந்தவிடத்தில் மரித்ததோ அந்தவிடத்திற்சென்று அத்தனுவோ டெழுப்பி, அவர்களைக் கேள்விகேட்டு விபிலீசையும் கல்லுகளையும்- பஞ்சலோகங்களையும் கர்த்தனுகப்பாவித்து, பூசைசெய்த வுயிர்களுக்கெல்லாம் நகாமும் கர்த்தனது சொரு

பமறிந்து, நிமாசு நோன்புகளால் வணங்கி அல்லாவாகிய கர்த்தன் ஒருவனே யல்லாமல் வேறுதெய்வமில்லை யென்றவுயிர்களை சொர்க்கத்திலே வைப்பார்.

இனிமிருகபட்சி ஊர்வன ஜலசெந்துதாபரமாய் மடிந்த உயிர்களையெல்லாம் எழுப்பிக்கேள்விகேட்டுமண்ணோடு மண்ணுக்குவார். இப்படிபந்தப்பட்டசீவனில் மல்க்குகளாகிறது மல்கல்மவுத்துகளாகிறது கர்த்தன்றூதர்கள் இவரிற்பிரதானர்.இசிராயீல்முதல் நால்வர். இனி அக்கினியேதேகமாய் வேறு கர்த்தன் இல்லையென்று தாங்களேகர்த்தனென்ற பேரையும் யுத்தஞ்செய்துகொன்றபேரையும் அம்பியாக்களாகிறபேரையும் ( ௩௱௩ )பேரில் பிரதானர் நூறுபேகம்பர்; அவுலியாக்களாகிறபேர், சாரகத்துவழியிலாவது கர்த்தனைவலாக யானத்திலிருக்கிற பேர்முசிலீன்கள் மூமின்களாகிற பெரியவர்கள்மகுமதர்முதல் (௱௨௰௪௲) பேர் ஜெபிரீல் அஹுகு முதுச்சலாநபிகள், (௩௱௰௩) இதல்லாமல் ( ௬௲௬௱௰௬ ) பேருமுண்டு அசாவாக்கள் பெரியவர்கள் மூமீன்கள் தபோதனர் இனி அபூபக்கர்,உமர் உதுமான், அலியார், மாலி, அசன், உசன், முருசலானவர், அசாவர்கள் ( ௪௰௨௲) உலுல், சுமை, அசுமயீல்,மகமதைவழிப்பட்டதோழர்,மஷாலைகள் துறந்தபேர் வணங்கிறபேருக்கெல்லாம் மூமீனோர்களென்றுபேர். இவர்கள்முதலான பேரெல்லாம் கர்த்தனைவணங்கிசொற்கம் பெறுவர் வணங்காதபேரெல்லாம் நரகம் பெறுவார்களென்றறிக.

முத்திநிலையாவது, சின்செயித்தான் முதலிய பசாசத்துவங்களை முந்திகேட்குமிடத்தில் இரிஷபகேள்வியென்றும், பாதாளகேள்வியென்றும்,ஞுருதுகிறவகைகளும், அதில் சகலசீவர்மடிகிறதும், இதில்மீந்து நின்றபேர்ஒருவரொருவரைக்கொல்வதும், எல்லாரையும் கொன்றவன் மரிக்கும்போது அதிகவருத்தமடைந்துயிர்விட்டானென்றும், அப்போது கர்த்தனொருவனே நின்று அனேககாலஞ் சென்றபின் மறுபடைப்புண்டாக முதல்நால்வரையுண்டாக்கியவர்களாலே மறுபடியுஞ் ஞுருதுவித்து உலகத்தை யுண்டாக்கினரென்றும்,

கர்த்தாவையறிந்து பின்னொருதெய்வத்தைப் பணியாமல் நோன்புவிரதங்கள்நிமாசு முதலியகிரமத்திலிருப்பவனை மோக்ஷமாகிற சொர்க்கத்தில்வைப்பான். இதற்குபுறக்கான் வேதஞ்சொன்னபடி நோன்புவிரதம் நிமாசுமுதலியவற்றூற்றொழவேண்டும். தொழுதலாவது, பரிதிதோன்று முன்னெழுந்தமாயாகுணமெல்லாம் விட்டுத் தொழுதலாம். தபமாவது, பணியும்போது ( ௰௬ ) விதமாம். அதாவது, முழங்கால் -௨- பாதம் -௨- கை -௨- நெற்றிமூக்கு -௨- இவ்வெட்டவயவங்களையும் பூமியிற்பொருந்த தெண்டமிடுவது. கிபிலாவை நோக்கிநின்றது க-மறுக்கு -௨- தொன்னியா -௩- சுபீது -௪ இருப்பு -௫- கலைதெரிசிது -௬- சலாம் -௮- இப்படி(௰௬)விதமாய்த் தொழுது

மீமாஞ்சிறதே தபம். கர்த்தனை தொழும்போது புறப்பறுது எட்டுண்டு இதில் முதலாவது, தொழுகைக்கு நேரமறிகிறது (உ-வது) தூயத்தண்ணீர்தேடிஒலுச்செய்வது (௩-வது) தூயபிடவைதேடுவது (௪-வது) தூயதலந்தேடுவது (௫-வது) பறுதான பிடவையுடுப்பது (௬-வது) கிபிலாவுக்குநேரே நிற்பது (௭-வது) நீயத்துக்கொள்வது (௮-வது) முந்தினதகுபீர்கட்டுவது இனிபுறப்பறுதுஎழுண்டு. இதில் முதலாவது நிலையில்நிற்க (உ-வது) இஃதிராத்தோத (௩-வது) றுக்குவிலேநிற்க (௪-வது) சுசிதுசெய்ய (௫-வது) பின்னிருப்பிருக்க (௬-வது) அடைவுடனே கொண்டுவர (௭-வது) வலதுபுற மிடது புறஞ்சலாங்கொடுக்க திரப்திப்பட ஆ உளப்பறுது-௭.

உள்ளும்புறம்புமானவிரண்டுபறுது (௰௫) இனிமுழுக்கில்பறுது (௩) முதலாவது வாய்கொப்பளிக்க (உ-வது) நாசிக்குதண்ணீரேத்த (௩-வது) உடம்பெங்கும் நனைக்க ஆ-௩. இனிஒதுவிலே பறுது (௪) இதில்முதலாவது முகந்தாடியுள் படக்கழுவுவது (உ-வது) முழுங்கைகழுவுவது (௩-வது) தலைநாலிலொன்றுமழுக்குசெய்கிறது (௪-வது) கணைக்கால்பரட்டை யுள்படகழுவுவது ஆ-௪. இனியறுப்புப்பறுது (௫) முதலாவது முசலிமன்னறிது (உ-வது) பிசுமில்லாசொல்லியறுக்க (௩-வது) தொடர்பிடியாயறுக்க (௪-வது) முடிச்சுத்தலையில் நிற்கக்கூட்டிப் பிடிக்க (௫-வது) நாலு நரம்புதெறிக்க ஆ -௫. இனிநலப்பறுது-௰உ- நாளொன்று தொழுகை -௫- கூறினபறுது பதினேழா ஈமான் இசிலா-௰க- தாய்மனதில்பறுது - உ - ஆ ௫௭. இதனையறிவார்கள்அல்லாவுடைய தீதாரும் மகுமதருடைய சற்பாத்துஞ் சொற்கத்துக்குடையவராவர்.

கச. ஈமானுமிசிலாமுமியல்பானபறுது
மாமானபதினொன் றழகானதொழுகை
நாமாயபதினேழ பறுதென்றுநன்றாய்
சிமானகுருவெங்கள் செய்யநபிசொன்னார்.

இனிஅல்லாசம்பத்துண்டாக தொழுகையில் சுன்னத்து (௩௰உ) உண்டு. அதில்நிலையில்-அ-சுன்னத்துண்டு. இதில்முதலாவது, தகுபீர்அவ்வலி லிரண்டுகையுமெடுக்க (உ-வது) தொப்புளின்கீழ்கைகட்ட (௩-வது) இடதுகைகீழும்வலதுகைமேலுங்கட்ட (௪-வது) சுசீதிடுந்தலத்தைப்பார்க்க (௫-வது) தாஞவோத (௬-வது) அவுதுவோத (௭-வது) பிசுமிலோத (௮-வது) ஆமீஞ்ஞெத ஆ-அ. இனிறுக்குவிலே சுன்னத்து-அ-முதலாவது தமக்குபீர்சொல்ல (உ-வது) இரண்டுகையாலு மிரண்டுமுழுங்காலைப்பிடிக்க (௩-வது) தலையுமுதுகுஞ்சமனாய் நிற்க (௪-வது) சுவாசுவானிற் பிறப்பில்வலியு மோத (௫-வது) புறங்காலைப் பார்க்க (௬-வது) கண்ணைவிழித்துப்பார்க்க (௭-வது) சமனல்லாருசொல்ல

சுசீதில் சுன்னத்து -அ-இதில்முதலாவது தமக்குபீர்சொல்ல (உ-வது) எட்டுறுப்புந்தரையிற்பட சுசீதிட (௩-வது) மூக்குதாரையைப்பார்க்க (௪-வது) சுவ

ணிற்பிலாலவென்று மூக்கால்சொல்ல (௫-வது) கண்ணை விழித்துப்பார்க்க (௬-வது)ஈரக்கையிரண்டுந் தோளிற்குச்சமனாய்வைக்க(௭-வது) உறுப்புகளைக்கிபீலாவுக்குநேரேதிருப்பிக்கொள்ள(௮-வது)சிறுவிருப்பிருக்கஆ அ.இனியிருப்பில்சுன்னத்து-அ-இவற்றில் முதலாவது தகுபீர்சொல்ல(௨-வது)இடதுகால்மடித்து வலதுகால்குந்திதிருப்பிருக்க(௩-வது)கைவிரல்கால்விரல்கிபீலாவுக்குநேரேவைக்க(௪-வது)இரண்டுகையு மிரண்டுதுடையிலேவைக்க (௫-வது) மடியைப்பார்க்க (௬-வது)சலவாத்தோத(௭-வது)சலாஞ் சொல்லும் போது வலதுதோளைப்பார்க்க (௮-வது)இடதுதோளைப்பார்க்க ஆ அ. இன்னுன்கு நிலையிலும் ருக்குவிலும் சுசீதிலும் சிறுவிருப்பிலுங் கூடினசுன்னத்து-௩௨. இனிதொழுகைவிபரம் முதலாவது,அபூதுபில்லாகிமின் ஷையித்தான் சின் பிசுமில்லாகிற்றகுமாநிற்றகீம்.

இனியிரண்டாம்

தொழுகையடைவு ஓதுசெய்த பின்புஇன்னுகன்சென்னுகு ஒதிநடக்கநீயத்துச்செய்துதகுபீர்கட்டினபின்புறுக்குவிலேபோகபின்புதுவாஓதபின்புகியாவிலே தசுவையோதபின்பு சுசீதிலேதசுவையோத பின்னிருப்பிலே யிருந்து அத்தகயாத்தும் மஷாகத்துக் கலிமாவுஞ்சலவாத்துமோதி சலாங் கொடுக்கவும்(௯வது)நோன்பாகிறது றமஞ்சாபிறையிலேவந்தால்(௧0-வது) நோன்பு பிடிக்கிறதுஅதுக்கறிகிறதுறமஞ்சான்மாதப்பிறையில் விடிந்துபிடிக்க நீயத்துக்கொண்ட பின்பு பொழுதுபுகுதநோன்புதீர்க்கிறது. விசுமில் ஓதி தீர்க்கவும்.(௪-வது)செக்காத்விதியாகிறதுஇருபது பொன்னுக்குமேல்நின்றுறப்பத்துக்குவபுவெடுத்துமஞ்சான்மாதத்தில்நாலுபங்காக்கிகுருக்களுக்கும்பள்ளிக்குந்தருபெசிக்கும்தன்கிளையில்இளைத்தபேருக்கும் கொடுக்கவும் (௫-வது) மக்கத்துக்குப்போய் அச்சுச்செய்யவும் (௬-வது)ஆமீனதுமில்லாகி ஓதுகிறது இவ்வாறுகர்த்தனை விதிவமுவாமல் ஓதிவந்த ஆத்மாக்களைக்கர்த்தன்முடிவில்கேள்விகேட்டுமோட்சந்தருவார் மற்றவர்களுக்கு நரகந்தருவார் இந்ததுலுக்கமதத்தில்சொல்லிய கிரமங்கள் அனேகமுண்டு இதை சங்ஷேபமாக சொன்னதென்றறிக.

---

௰௧-வது—அத்தியாயம்.

## அளவைப் பிரமாண லட்சணம்.

“பரிபாஷை சூத்திரப்ரமிதிபிர்ம்மாபிரமாயஃ கரணம்பிரமாண பிரம்மாகரணம் பிரமாணம்,, பிரமாவாகிறது. யதார்த்த வனுபவம் யதார்த்த அனுபவமாவது, எதிர்விஷயமாய் காணப்படுகின்ற கடபடாதிமுதலானவிஷயங்கள். அந்தபிரமாவுக்குகரணமாகிறது, சட்சுவாதியிந்திரியம் இவ்விந்திரியமேகரணம். இதுவேபிரமாணமாகும், இப்பிரமாணம் உத்தேசம், லட்சணம், பரிக்ஷையென்று மூன்றுவிதமாம். இதில் உத்தேசமாகிறது நாமமாத்திரஞ்சொல்வது. இலக்ஷணமாவது, பசுவுக்கு அசாதாரண

மான கங்கைபோல்முதலாகிறது. பரிக்ஷையாவது, இந்தக் கங்கைபோனுடையலட்சயமானபசுவுக்கு இந்தலக்ஷணமுண்டோ வில்லையோவென்றையமில்லாமல்பிரத்தியக்ஷத்தில் இருக்கப்பார்ப்பது பரிக்ஷையாம்.

௧௫. உத்தேசப் வத்துவின்பேருரைத்தலாகு மொன்றுகுறையாதுரைத்த துள்ளதெல்லாஞ், சித்தமுமாயன்னியத்தில்லையாகித் தெரிவதிலக்கணஞ் சோதித்திடுதலுன்மேல், வத்துவாமிலக்கியத்தே யிலக்கணங்கள் வாய்த்திடுதல் வாயாதன்மதித்தலாகு, மித்தகையா மிவையுளதா மென்றே நன்றுயேதுமுதலியம்பல்பிரமாணமீதே.

இப்பிரமாணம் பொருளுக்கெல்லாம் பொதுவென்றுஞ் சிறப்பென்றும்பெயர். இனியிலக்ஷணமான திரண்டுவிதமாம். அஃதாவது, தன்னியல்பென்றும் பொதுவியல்பென்றும் பெயர். இஃது கிரந்தத்தில் நிர்விகற்பமென்றும்- சவ்விகற்பமென்றும் பெயராம். இவற்றில், நிர்விகற்பமாவது, அந்நியசாதியையுந் தன்சாதியையும் விட்டு வொருகுறி தோன்றுவது. இஃது கிஞ்சின்மாத்திரஞானம். சவ்விகற்பமாவது, அந்நியசாதியெல்லாந் தவிர்ந்து தன்சாதிக்கே யிந்ததருமமுண்டென்று நிச்சயிப்பதுபொதுவாம். இஃதெல்லாப் பொருட்குமுண்டென்றறிக.

இனிமுன்சொன்னகாரணம் மூவகைப்படும். அதாவது, சமவாயகாரணமென்றும்,அசமவாயகாரண மென்றும், நிமித்தகாரணமென்றுஞ் சொல்லப்படும். இவற்றில் சமவாயகாரணமாவது,காரணத்தை சமவேதித்துக்கொண்டு பிறப்பதெல்லாஞ்சமவாயகாரணமாம். அதெப்படி யென்றால், காரணமாகிறநூலைச் சமவேதித்துக் கொண்டேபடம் பிறக்கும். பிறக்கினும் அப்படம்நூலைத்தவிர வேறில்லாமையால் நூலேபடமாகும். கடம் மண்ணைத்தவிர வேறில்லாமை யால் மண்ணேகடமாகும். இவற்றை வழக்கினும் நூற்படமென்றும், மட்கடமென்றும் வழங்குகின்றனர். ஆகையாலிவ்வாறு ஒருபெயரொருபெயராய் வழங்கிவருவதே சமவாயகாரண மெனக்காண்க. இப்படத்தைவிடாமற் சையோகமாய்ப் படமாக்குவிக்கிற துரியவியோமாதியாகிற நாடாமுதலான அச்சுபேதங்களும் கடமாக்குவிக்கிற தண்டசக்கரபேதங்களுஞ் சமவாயகாரணமென்றால் தோஷ மென்னை. அப்படியாகாது எப்படியென்றால், சமவாயமென்பதிரண்டு விதமாம். அவையாவன, சமவாயசம்பந்த மென்றுஞ் சையோகசம்பந்த மென்றுஞ் சொல்லப்படும். இவற்றை அயுதசித்தமென்றும், யுதசித்த மென்றும் வழங்கினும் வழங்கலாம். இதில் அயுதசித்தமாவது ஐந்துவிதமாய் அவயவ அவயவி நௌகுண குணிநொ க்கிரியாகிரியா வந்தௌ ஜாதிவெக்தி விசேஷநித்யத் ருஷியே என்று இவ்வைந்தும் ஒவ்வொன்றிரண்டுபெயராய் ஒன்றைவிட்டொன்றகலாமல் அபேதமாயிருக்கும். இதேசம்பந்தமாகிறதும், அயுத

சித்தமாகிறது மென்றறிக. இனிச்சையோகசம்பந்தமாவது,யுதசித்த மென்று பெயராம். இதுமுற்கூறிவந்த பேதமான நாடாதண்ட முதலியவுபகரணங்களாம். இவைகள் அழிந்தாலுங் கடபடங்களழியாமல் நெய்கிறபோதுசையோகமாயும், மற்றகாலத்தில் பேதமாயு மிருப்பதால் இதேசையோக சம்பந்தமாகிறதும் யுதசித்தமாகிறது மென்றறிக. இனிகாரணகாரியங்களில் நூல்கெட்டாற் படங்கெட்டும், படங்கெட்டால் நூல்கெட்டும்போகுந்தன்மையேயன்றி யொன்றைவிட் டொன்றிராதாதலால் இதனையே சுத்தசமவாய் காரணமென்றதென்றறிக.

இனி அசமவாயகாரணமாவது, பாவோடித்திர்ந்த பாவிலே உண்டைநூலாகிய தாரைகொண்டு நாடாவால் நெய்கிறபோது நூலோடு நூல்சையோகமானாலும் நெய்கிறநூலே படமாய் வேறொன்றில்லப்படமாகாதபடியால்நிச்சிதசாமார்த்திய மாகிற அசமவாயகாரண மென்றறிக. இனி நிமித்தகாரணமாவது, சமவாயமும் அசமவாயமு மல்லாமல் நிச்சயகாரணமா யிருப்பது. இது எதுவென்றால், நூரியவியோமாதியுஞ், சக்கரதண்டமும், நிமித்தகாரண மென்றறிக. இனியிந்தமூன்றினும் அதிசயமானதுகரணம். இதேபிரமாணமாம். கரணமாவதேதென்னில், முன்சொன்ன சட்கவாதிகரணங்களவ்விடத்திற்குச்சரி. இவ்விடத்தில் கரணமென்றது, எல்லாவிஷயவஸ்துக்களையும் அந்தக்கரணவிந்திரியங்களோடு கூடிநாமரூபக்கிரியைகளையறிகிற நிச்சயமான வாத்மஞானமாம். இதேவநிசயமும் பிரமாணமுமென்றறிக. ஆனால் அறியாதவஸ்து[redacted]ளை யறிகிறது கரணமென்னில் அறிந்ததையே யறிவிக்கிறதல்லாமல் அறியாத வஸ்துவை யறியாதபடியால் நீசொல்லுகிறதல்ல. அதெப்படி யென்னில், முன்னறிந்த தாகிலும் அறியாததாகிலும் கண்ணாற்கண்ட தெல்லாமறிந்த பதார்த்தமாகையால் கண்ணாற்காணாததையறிகிறது பொய்யென்றறிக. ஆனால் க்ஷணத்தில் அறிந்து க்ஷணத்தில் மறப்பதால் அறியாததை யறியுமென்பதும் பொய்யென்னில் ஆயிரந்தாமரை யிதழை யூசியினால்குத்தினே மென்கையாலும், கற்றதுகள் மறவாதாகையாலும், அறிந்ததையேயறியு மென்றறிக. ஆயின் எல்லாவிஷய வஸ்துக்களுங் கரணமாமென்னில், விஷயமும் விஷையையும் இருக்கினுந் தெரியாதே யென்றால் மனோவிந்திரியங்களோடு கூடியறிகிற ஞானஞ் சாதகமாகிறது. சாதகமாகிறதேதென்னில், அதிசயம்,சாதகம், சாதகதமம், இக்கரணமாகிற பிரமாணம் நான்குவகையாம். அதுயாதென்றால், பிரத்தியட்சம், அனுமானம், உவமானஞ், சத்தமெனநான்காம். இவற்றிற் பிரத்தியட்சப்பிரமாணமாவது, இந்திரியசென்னிய ஞானம். இது விரண்டுவிதமாம். நிர்விகற்பமென்றுஞ், சவிகற்பமென்றும், இவ்விரண்டுக்குங் காரணம் மூன்றுவிதமாம் இது ஒருவேளை யிந்திரியம். ஒருவேளை யிந்திரியார்த்த சம்பந்தம். ஒருவேளை ஞானமாம். இம்மூன்றில் இந்திரியகாரணமெப்போ தென்னில், ஒருவிஷயத்தில் நாமரூபக்கிரியைமுதலான வேற்பாடில்லாமல் கிஞ்சித்துவஸ்து மாத்திரந் தெரிவிப்பது.

இவ்விந்திரியம் அவாந்திர வியாபாரம் இனியிந்திரியார்த்த சன்னிகருஷ மெப்போது காரணமென்னில், நிர்விகற்ப ஞானமுடிவிலே சவ்விகற்பஞானம்வரும். அதேதென்னில் ஒருவஸ்துவின் நாம சாதி குணம் ஆதியான யோசனாத்மகஞ்செய்து இவன்பிராமணன் கறுவல் சிவலை கர்னகுணகுண்டலாதிவிசேஷணம் இந்தபசுவுக்கே கங்கைடோலாயமாகிய அலைதாடியுள்ளது மற்றமிருகங்களுக் கில்லையென்பது விசேஷணம். முன்சொன்ன இந்திரியார்த்தசன்னிகருஷகரண மென்றறிக. இது நிர்விகற்ப வவாந்திர வியாபாரம். இதற்குச் சவ்விகற்பஞானபலம். இனிஞானகரணமெப்போ தென்னில், முந்தநிச்சிதமான வஸ்துவில் சந்தேகம் வந்து இதாமோ அல்லவோவென்னுமல் நிச்சயிக்கிறபோது ஞானகரணமாம். இதற்குச்சவ்விகற்பம். அவாந்திரவியாபாரம், ஆனுபதானபுத்திபலம், ஆனால் முன்சொன்னதிரிவித கரணமெதற்கு இந்திரியமே காரண மாகாதோ வென்னில் ஆகாது. அதெப்படி யென்னில், சம்பந்த மாகிறது (௬)விதமாம். அவையாவன சையோகமென்றும், சையுக்தசமவாய மென்றும், சையுக்தசமவேத சமவாயமென்றும், சமவாய மென்றும், சமவேதசம வாயமென்றும், விசேஷண விசேஷியபாவ மென்றுமாம். இவற்றில் சையோகமாவது, கண்ணுற்கடபடாதிகளை யறிவதாம். சையுக்த சமவாயமாவது, கடபடங்களின் குணத்தையறிவதாம். சையுக்த சமவேதசமவாய மாவது, கண்ணினால் ஒருவிஷயத்திலிருக்கிற ரூபத்துவ ஞானம் பிறக்கிறது. அதெப்படியென்றால், சட்சுவுக்கு கடபடத்துக்குஞ் சையோகம். அக்கடபடத்துக்கும் ரூபத்துக்குஞ் சமவேதம். அந்தரூபத்துக்கும் ரூபத்துவத்துக்குஞ் சமவாயமாதலால் சையுக்த சமவேத சமவாயமாம். சமவாயமாவதுசுரோத்திரேந் திரியத்தாலே சத்தத்தையறிவதாம். அதெப்படியென்னில், இவ்விரண்டுங் குணங்குணியாதலா லாயிற்று. சமவேதசமவாயமாவது, விசேஷசத்தத்துக்குஞ் சத்தத்துவத்துக்குஞ் சமவேதசமவாயம். அந்தசத்தத்துக்கும் ஆகாசத்துக்குஞ் சமவேதமாகையால் சத்தத்திலே சத்தத்துவங்கிறிகிக்கிறபோது சமவேத சமவாயமாயிற்று. விசேஷணவிசேஷியபாவமாவது, மண்ணைநோக்கிக்கடமில்லையென்கிற போதில்லையாம். அதெப்படியென்றால், சையுக்தமாயிருக்கிற பூதலத்திற்குக் கடாதிபாவம்விசேஷம் பூதலமே விசேஷணமாம் இதற்குத் திருஷ்டாந்தம்.

௧௬. கூறிடுமிப்பிரமாணந் தனக்கபிவெஞ்சகமாய்க் குறித்திடு
வீர்காண்டலனு மானவுரைதன்னை, வேறுமுவமானமுதல் ப
லவுரைப்பரவர்கள் வேறல்லவிம்மூன்றின் விரித்தலாகு, மா
றிலாக் காட்சிமுதன் மூவகைக்குமிதனில் வருபேதவகை க
ளூகருமருவியலக்கணங்க, டேறும்வகைசிவாகமத்தே யாங்
கண்டபடியே தெரித்திடுவாந்தொகையாகச் சிந்தைசெய்தே.

என்றது—முன்சொன்னபிரமாணங்களுக்கு அபிவெஞ்சமாகிற துணையாகக் காக்ஷியனுமானம் உரையைச்சொல்வார். வேறும் பற்பல பிரமா

ணங்கள் கூட்டிச்சொல்வாருமுண்டு. அவைகளெல்லாம் மேற்குறித்த மூன்று பிரமாணத்தி லடங்கும். இவைகளெல்லாம் பிரமாணத்திற்கு அபிவெஞ்சகமென்றறிக. இனி காக்ஷிமுதல் மூன்றுக்கும் இதிற் பேதங்கட்குமுள்ள இலக்ஷணங்களை ஆகமத்திற் கண்டபடி தொகையாகச் சொல்வது. அளவைப் பிரமாணங்களுக்கு அபிவெஞ்சகமான துணையைக் கூட்டிக்கொண்டு ஆகமத்தால் - பதி - பசு - பாசமான திரிபதார்த்த முண்டென்று கேட்டு, அனுமானத்தால் மதித்து முத்திதாகமெடுத்து, சற்குருவை யடைந்து, அவரால் பிரத்தியக்ஷ மாகும்படி உத்தேசாதி மூன்றையும் விசாரித்துத் தெளிந்தனுபவ ஞான மடையவேண்டும்.

௧௭. அளவைகாண்டல்கருதலுரை யபாவம்பொருளொப்பாறென்ப, ரளவைமேலு மொழிவுண்மை யைதிகத்தோடியல்பெனநான்,கள்வைகாண்பரளவையிற்றின் மேலுமறைவரவையெல்லா, மளவைகாண்டல் கருதலுரை யென்றிம்மூன்றி னடங்கிடுமே.

என்றது—பிரத்தியக்ஷம் - அனுமானம் - ஆகமம் உவமானம் - அருத்தாபத்தி - அபாவம் - ஆக ௬. இந்த ஆறுமல்லாமல் - மொழி - உண்மை-ஐதிகம் இயல்பு - என ௪- ம் - இவைகளெல்லாம் காண்டல் - கருதல்-உரை-என்ற - ௩- பிரமாணத்தி லடங்கும். இதிற் பிரத்தியக்ஷமாவது, கடபடாதிதெரிசனம் - அனுமானமாவது, தூமத்தினுல் அக்கினி ஞான முண்டாவது. இது பிரதிக்ஞை - ஏது - திஷ்டாந்தம் என்று மூன்றும் இவற்றில் பிரதிக்ஞையாவது, பருவதத்தில் வன்னி யுண்டென்பது. ஏதுவாவது புகையிருக்குமிடமெல்லாம் நெருப்புண்டென்பது, திஷ்டாந்தமாவது, மகானசம்போலென்பது ஆக ௩ - ம் - ஆகமமாவது, நதிதீராதி பலாதிகள் சற்பாவஞானம். உவமானமாவது, ஒரு வஸ்து இன்னதுபோலென்று கேட்டு பின்னேரிடத்தி லாவது வனத்திலாவது காண்டல். அருத்தாபத்தியாவது, இரண்டு விதமாம். அவையாவன காக்ஷியருத்தாபத்தி யென்றும், சிரவணு வருத்தாபத்தி யென்றுமாம். இவற்றில் காக்ஷி யருத்தாபத்தியாவது, பகற்காலத்தில் புசியாத ஒருவனைக் கண்டு இரவிற் கரவாய்ப் புசிப்பானென்பது.. சிரவணு வருத்தாபத்தியாவது, ஒருவன் வீட்டி லில்லையென்றால் வேறிடத்திலேகி யிருப்பானென்பது. அபாவமாவது, மண்ணிற் கடமில்லையென்பது, சம்பவமாவது, ஆயிரஞ் சங்கையில் நூறுண்டென்பது, ஐதிகமாவது, ஆலமரத்தில் யக்ஷனுண்டென்னுஞ் சொற்படி யங்கு தோற்றுவது. இதில் - சாருவாகன் (௧) சையினபவுத்த வைசேஷியர்க்கு (௨) சாங்கியற்கு - (௩) நியாயர்க்கு (௪) பிரபாகரர்க்கு (௫) பாட்ட வேதாந்திகட்கு (௬) - புராணிகர்க்கு (௮) இந்த கிரமப்படி சமையிகள் கொள்வாரெனக் காண்க.—இவையெல்லாம் மூன்றி லடங்குமென்றதை விரிவாகச்சொல்வது. பிரத்தியக்ஷப்பிரமாணமாவது, கடபடாதி தெரிசனம், இந்திரியக்

காக்ஷி - மானதக்காக்ஷி - வேதனைக்காக்ஷி - யோகக்காக்ஷி - யென்று (௪) ம் இவற்றில் இந்திரியக்காக்ஷியாவது, பரிபாஷையில் ஒருவேளை யிந்திரியமென்றும் நிர்விகற்பமென்றுமாம். இது தமிழில் - நிர்விற்பம் - ஐயம்-திரிவு- விகற்பமென்றுமாம். இவற்றில் நிர்விகற்பமாவது, ஒரு வஸ்துவைக்கண்டு இதென்னேவென்பது. ஐயமாவது, இருபொருளுக்குச் சமமான திரவியத்தை ஒரு திரவியத்தி லிருக்கக்கண்டு இதுவோ வதுவோவென்பது இனித்திரிவாவது ஒருபொருளை யொருபொருளாகக்கொள்வது. இம்மூன்றுமல்லாமல், கண்டவஸதுவை நாமரூபக்கிரியைகளுடனே விசாரித்து, சகல சந்தேகமு மற்றுக்காண்பது விகற்பக்காக்ஷியாம். முன் சந்தேகமாயிருந்துபின் சந்தேகந்தீரக் காண்ப தெதினுலென்னில், காலதத்துவங்க ளந்தக்கரணங்களுடனேகூடி அந்தக்கரணங்கள் வாயுவோடுகூடி வாய்வானது பஞ்சேந்திரியங்களோடுகூடி சத்தாதிவிஷயத்தை பதினெட்டு கருவிகளுடனுங்கூடி பெயர் - குணம் - கன்மம் - பகுதி - பொருள், இவ்வைந்துடனுங்கூடிச் சகல சந்தேகமுமற்றுக் காண்பது விகற்பக் காக்ஷியாம். இது பரிகைஷயில் ஞானம் காரணமென்றும் "ஆஞேபதான உபேக்ஷாப்ரதை தெஜாயந்தே" என்றுஞ்சொல்லும் இதெல்லா மிந்திரியக்காக்ஷியிலடங்கும்.

௧௮. கண்டபொருளை யிரட்டுறவே கருதலையந்திரியவே
கொண்டறிரிவாம்பேர்சாதிகுணமே கன்மம்பொருளனைவுந்
துண்டவிகற்பவுணர்வினுக்குப் பொருளினுண்மைமாத்திரத்தின்
விண்டவில்லாவறிவாகும்விகற்பமில்லாக்காட்சியே.

இதுமுன் சொன்னஐயந்திரிவு விகற்ப நிர்விகற்பத்தின் வரலா றென்றறிக. இனிமானதக் காட்சியாவது பரிபாஷையில் ஒருவேளை யிந்திரியார்த்த சம்பந்த மென்றும் நிர்விகற்ப முடிவில் சவிகற் ஞானம் வருமென்றுசொல்லும். தமிழில் இந்திரியத்தினுல் சகல சந்தேகமுந்தீர்ந்து வந்த விஷயத்தை மனதினுள்ளே பந்தனையாகச் சிந்திக்கிறது. வேதனைக்காக்ஷியாவது, அருந்தப்பட்ட வின்ப துன்பங்களை யுயிருக்குக் காலதத்துவங்கள் கூடிப்புசிப்பைக் கொடுக்கையினுலென்றறிக. யோகக்காட்சியாவது புறக்கருவிகள் நீங்கி யுட்கரணமான அந்தக்கரணமும் பொருந்தலின்றி யோகசமாதிகளி லாணவநீங்கித் திரிகாலத்தியல்பு முணர்தல் இந்தயோகக்காக்ஷியிற் பேதமானஞானக்காக்ஷியாவது, ஆத்மாவுஞ்சிவனு மன்னிய வனுபவத்தா லறிதல் ஆகமப்பிரத்தியக்ஷம் நான்குமுடிந்த தென்றறிக.

௧௯. உயிர்க்ளுமொளர்வாயிலொளியுருவாகிப்பற்றிச்
செயிரொழிவி ற்பமின்றித்தெரிவதிந்திரியக்காட்சி
யயர்விலிந்திரிய ஞானமைம்புலன்சார்ந்துயிர்க்கலை
மயர்வறவந்தஞானமானதக்காண்டலாமே.

௨௰. அருந்தின்பதுன்பமுள்ளதறிவினுக்காரகமாதி
தருந்தன்வேதனையாங்காட்சிசமாதியான்மலங்கள்வாட்டிப்
பொருந்தியதேசகாலவியல்பகல்பொருள்களெல்லா
மிருந்துணர்கின்றஞான மியோகநற்காட்சியாமே.

இனி யிலிங்கமாவதியாது, பராமரிசையாவ தியாது என்றால். இலிங்கமாவது வியாத்தி பலத்தாலே யதார்த்தத்தைத் தெரிவிக்கிறதெரிவு - அதே யிலிங்கமாம், இது எதுபோலுமென்னில் அர்த்தம் வன்னி - யிதையறிவிப்பது தூமம். இதே யிலிங்கமாம். ஞானம் பராமரிசை யெங்கே தூமமுண்டோ வங்கே வன்னியுண்டு. இந்தச் சககாரிய நியாயம் வியாத்தியாகியிருக்கும். இனி யிலிங்கம் மூன்று விதமாம். அவையாவன, மகானசமாகிற வீட்டில் அடுக்களையிலேநெருப்பையும்புகையையுந்தீர்க்கமாகப் பார்த்துநெருப்பைத் தவிரபுகையில்லை,புகையைத்தவிரநெருப்பில்லை யென்றநிச்சயம்பிரதமக்கியானம். நமதுவீட்டிற்கண்டவப்பியாசத்தினால் பருவதத்தில் தூமங்கண்டதே துவிதையஞானம். முந்த மகானசத்திலே வியாத்திகிறிகித்ததையவ்விடத்திற்கினைத்துக்கொண்டு புகைகண்ட பருவதத்தில்தானே திரும்பவும் வன்னிக் கேதுதூமமிருக்கிறதென்னுந் திடமே திரிதியைக் கியானமாகிற பராமரிசைஇஃதேயிலிங்கபராமரிசை.இவ்வனுமானமிரண்டுவிதமாம்.

அதாவது, சுவார்த்தமென்றும்-பரார்த்தமென்றுமாம். இவற்றில் சுவார்த்தமாவது, தனக்குத்தானேதூமத்தினால் வன்னிஞானந் தெரிகிறது. பரார்த்தமாவது, தானறிந்த வக்கினியை யன்னியனுக்கறிவிப்பது. அதில்ஐயமுண்டானால் அனுமானவாக்கியஞ் சொல்வது. அதெப்படியென்றால், இப்பருவதத்தில் அக்கினி யிருக்கவேண்டுமென்கிறது- க - எப்படியெனக் கேட்கில் அதோ புகைகிறதென்கிறது - உ - எங்கே புகையிருக்கிறதோ வங்கே நெருப்பிருக்கிறதென்று மகானசநியாயஞ் சொல்கிறது - ௩ - நெருப்புக்கேதுவான புகையிருக்கிறதென்றது - ச - இந்த புகையிருப்பதால் நெருப்பிருக்கிறதென்று பிறருக்கறியச்சொல்வது-ரு-இது பரார்த்தவனுமானமாம். இவற்றையன்னுவய வெதிரேகியென்று சொல்லப்படும். இதில் அன்னுவயமாவது, புகையிருக்கிற விடத்தி லக்கினியுண்டென்று வீட்டிற்பார்த்த பழக்கத்தால் அன்னுவய வியாத்தியாவதாம். வெதிரேக வியாத்தியாவது, மடுவிலக்கினியில்லை, யவ்விடத்திற் புகையில்லை, ஆதலால் அக்கினியில்லாவிடமெல்லாம் புகையில்லையென்பது வெதிரேகம். அக்கினியுள்ளவிடத்தி லுண்டாயும் இல்லாதவிடத்தி லில்லாமலுஞ் சொல்வது அன்னுவயவெதிரேகமாம்.

இனிக்கேவல வெதிரேகியாவது, பஞ்சபூதாத்மிய மல்லாவற்றிற்கு சீவத்துவமில்லையென்றும். [illegible] கேவலான்னுவயமாவது, [illegible] பிரமேயமென் [illegible] பொருள் [illegible] தனைக்கும் [illegible]

ல்லாம் அபிதேயமும் பிரமேயத்துவமு மென்றிரண்டுவிதமாம். இவைகளை யறிவது சட்சுவாதி யிந்திரியங்க ளாகையாற் பிரமாணமாயிற்று இதனைக் கேவலான்னுவயமென்று சொல்லப்படும். உலகத்திலுள்ள வஸ்துவாதி யே துவெல்லாம் இம்மூன்றேதுவில் ஒவ்வொரு ஹேதுவை ஒவ்வொன்று கொண்டுமுடியுமாம். இம்மூன்றிற்கும் ஐந்துரூபமுண்டு. அதெப்படியெ ன்றால், இவற்றில் அன்னுவய வெதிரேகத்துக்கு ஐந்துரூபமுண்டு. அவை யாவன, பக்ஷதர்மத்துவம்-சபக்ஷதர்மத்துவம்-விபக்ஷத் வ்யாவித்தி -அபாதி தவிஷயம் -த்வம் - அச்பிரதிபக்ஷத்வம் என்று ரு-ம். முதற்பக்ஷ தர்மத்துவமா வது சந்தேகமான சாத்தியமுண்டாகிறது. உ-வது,நிச்சித சாத்தியமுண்டா கிறது ௩-வது, மடுவில் சாத்தியப்புகை அனல்சாத் தியமில்லாதிருப்பது. ச-வது, பிரமாணாந்தரத்தில்உபாதிகளில்லாமல்நிச்சிதமானசாத்தியமிருப்பது. ரு-வது, சாத்தியம் அபாவமில்லாமல் இங்கேயிருக்கிறதென்பது. கேவ லவெதிரேகிக்கு முன் சொன்னவைந்தில் சபக்ஷத்வமில்லாமல் மற்றநான்கு முண்டு கேவலான்னுவயத்துக்கு விபக்ஷாத்வ்ய வ்ருத்தியில்லாமல் மற்றநான் குமுண்டு இம்மூன்றேதுவு மில்லாமலிருக்கிறது ஜாதிஹேதுவல்லாமல் விஜா தியஹேதுவாம். இது சாத்யேதுவைப்போற் றோற்றினும் நன்றாய்விசாரி க்கில் ஆகாது. இது ஹேத்துவாபாசமாகிற ஹேதுவைப்போ லேதுவன்றி யேதுவாகாது. இவைபோல்வன அநேகமுண்டு. அவையாவன சிப்பியை வெள்ளிபோற்றோற்றினும், கட்டை கள்வனைப்போற்றோற்றினும், பழுதை பாம்புபோற் றோற்றினும், ஆகாது. இதன்றி அசித்து விருத்தம் அநேகா ந்திகம் பிரகரண சமையகாலாதீதமாய இஷ்டபேதம் இவ்வைந்தில் அசித்து மூன்றுவிதமாம். அவையாவன ஆசிரயாசித்தம், சொருபசித்தம், வியாப் பியத்துவாசித்தமென்றுமாம். இவற்றில் ஆசிரயாசித்தமாவது, ஆகாயத்தி ற் றாமரைப்பூவென்றா லில்லையெனமறுத்தல். சொருபசித்தமாவது, சத்த முண்டாவது, கண்ணுக்குத்தெரியுமென்றால் சத்தம் ரூபமானாலன்றோ கண் ணுக்குத்தெரியும் அங்ஙனமில்லாமையாற் றெரியாதெனமறுத்தல் வியாப் பியத்து வாசித்தமென்றது இரண்டுவிதமாம் அவற்றில் வியாத்தி நிச்சயி க்கிற பிரமாணமல்லாததொன்று, உபாதியுள்ளத்தாலொன்றுமாம். இவற் றில் சத்துவமெல்லாம் க்ஷணிகமென்னில் மேகத்திற் சத்துவமாய்க் காண கிறதும் காணாமல் க்ஷணிகமாகிறதுமா யிருப்பதால் நித்திய வஸ்துவாகிற பிரமத்தில் சத்துவமல்லாமல் க்ஷணிகமில்லை யாதலால் வியாத்தி நன்றாய் நிறுக்காதவிடத்தில் வியாப்பியத்துவம் அசித்தமாயிற்று உபாதியுள்ளத் தால் சித்தமாம். அதெப்படியென்றால், மாகத்திற்செய்கிற இம்சையதர் மமல்லவோவென்னில் அது தர்மமானாலுங் கொல்லுகையாலும் நிஷித்தவு பாதியுண்டாகையாலும் அசித்தமாயிற்று. விருத்தமாவது, சாத்திய அபா வத்தோடு வியாத்தியாயிருக்கிறசேது விருத்தலக்ஷணம். அதெப்படி யெ ன்றால், சத்தம் அநித்தியமாயிருக்க நித்தியத்துவங் கிருத கிருத்துவத்தால் சாதிக்கிறது விருத்தமென்றுசொல்லப்படும். இனியநேகாந்திகமாவது, இரண் டுவிதமாம். அது சாதாரணமென்றும், அசாதாரணமென்றும், அவற்றில்

பக்ஷ சபக்ஷ விபக்ஷத்திலிருப்பது சாதாரணம். பக்ஷத்திலிருப்பது அசாதாரணம். இனி ப்ரகரணஸமயமாகிறது, சாத்திய விபரீதசாதகமாயிருத்தலாம் காலாத்தியாபதிஷ்ட பேதமாவது, உஷ்ணமான வக்கினியை குளிர்ந்திருக்கிறதென்று கிருதகிருத்துவ ஹேதுவினால் சாதித்தலென்றறிக.

௨௧. குறைவிலாவியார்த்தியான்மறை பொருளைக்காண்டல் கூறி
யிடுமனுமானமிதன் பேதங்கூறின், மறைவானதரு மிதனை
த் தருமத்தாலறிதன்மதித்திடுதல்காரியத்தாற்காரணத்தையுங்
ஙன், றிறனுருங்காரணத்தாற் காரியத்தைத்தெரிதல் செப்பி
யிருமுவமானத்தாற்பொருளைத்தெளிதன், முறைதேரிற்பக்க
நிகர்பக்கமிலாப்பகக மூன்றுருமன்னுவய மாதியுமோர் மூன்
றே.

அனுமானமாவது, குறைவிலாவியாத்தியால் மறைபொருளென்றது தூமம் வியாத்தி மறைபொருளக்கினி தூரதேசத்தில் தன்மி மறைபொருள் அவன் கொடுக்கிற தானதர்மம் வியாத்தியாயிருந்தவ னின்னவிடத்தி லிருக்கிறானென்பதுபோலும், புத்திரன் பிறந்தவுடனே தாய் தகப்பன் இறந்துபோனால் புத்திரன் ஜாதகநிலையில் தாய் தந்தைகள் இறந்துவிட்டாரென்றறிவதுபோலும், சோதிடத்தால் கிரகங்கள் பூதவர்த்த பவுஷியங்களை நிச்சயிப்பதுபோலும் காரியமாகிய புகை தர்மம் பிள்ளை சோதிடம் இதுகளால் காரணமான அக்கினி - தருமி - தாய்-தந்தை - கிரகணம் - இவைகளையறிவிப்பதுபோல், காரியத்தால் காரணத்தை யறிவ திப்படியென்றறிக. இனி காரணத்தால் காரியத்தை யறிவது மேற்கேயிடித்து மின்னியிருண்டு மேகமெழுந்தால் மழைபெய்யுமென் றனுமானித்து மறுநாள் ஆற்றில் வெள்ளம் வரக்காண்டலாம். உடம்பைக்கண்டு பூதமுண்டென்றுற்போலும் செவியாதி துவாரத்தால் இந்திரியம் திஷ்டம்போலும். இப்படிக்காரணமாகிற மின்னலிடியும் உடம்புஞ் செவியுங்கொண்டு ஜலமும் பூதமும் இந்திரியங்களையுங் காண்பதுபோல் காரணத்தால் காரியமறிவ திப்படியென்றறிக. இனிச் சொல்லப்பட்ட உவமானத்தால் அநுமானகாரண காரியங்களைத் தெரியவேண்டும். இம்முறையை விசாரிக்கில் பக்கமாவதோரிடம் நிகர்பக்கமாவது அவ்விடத்தி லொருபொருளைக் காண்பது. இலாப்பக்கமாவது இல்லாதவிடத்தி லில்லையென்பது. இப்படி மூன்றும் இஃதன்றி அன்னுவயவெதிரேகி கேவலான்னுவயம் கேவலவெதிரேகி ஆகமூன்றும் இவ்வன்னுவய வாதியவற்றால் மேற்குறித்தவைகளை யறியவேண்டும்.

௨௨. பக்கமுன்றான்மூன்றேதுவுடையபொருளைப்பார்த்துணரத்
தக்கதுதானந்தன்பொருட்டாம் பிறர்பொருட்டாமனுமானந்
தொக்கவிவற்றும்பிறர்தெளியச்சொல்லலாகுமச்சொல்லு
மிக்கவன்னுவயத்தினொடும்வெதிரேகச் சொல்லெனவிரண்டாம்

என்றது - பக்கம்-சிகர்ப்பக்கம்-சிகரிலாப்பக்கமென மூன்றும். இதனையே பட்சம் சுபட்சம் விபட்சமென்றுஞ் சொல்லப்படும். இதிற்பட்சமாவது, ஒருபொருளைச் சந்திக்கிறவிடம். சுபட்சமாவது, முன்சொன்னவிடத்திலொருபொருளைக் காட்டுதல். விபட்சமாவது, அவ்விடத்தி வில்லாத பொருளில்லை யென்பதுவாம்.

உ௩. மூன்றுபக்கம்பக்கசிகர் பக்கசிகரில்பக்கமெனத்
தோன்றும்பக்கந் துணிபொருளுக் கிடமாமுவமை சிகர்பக்க
மான்றபொருள் சென்றடையாத விடமாசிகரில் பக்கமுத
லேன்றவிரண்டும் பொருளுண்மைக் கிடமாமொன்றுபொருளி
ன்றும்.

இனி பிரதிக்கை ஏது திஷ்டாந்த மெனமூன்றும். இவற்றையே தமிழில் இயல்பு,காரியம், அனுபலத்தியென்றுஞ் சொல்லப்படும். இதில் இயல்பாவது, மா என்கிறபதசத்தத்திற்கு அனேகம்பொருளுண்டாயினும், மா பூத்ததென்றால், மரத்தின்மேலும் மாவோடுதென்றாற் குதிரையின்மேலும் மா விழக்கிறதென்றால் பிண்டியின்மேலும் மாக்கல் பொருந்துவதுபோல் இவ்விடத்தில் நெருப்பிருக்கிறதென்பது. காரியமாவது நெருப்புண்டென்பதற்கு புகையேகாரணமெனக்கொள்ளல். அனுபலத்தியாவது, அடுக்களைபுகைகிறதும், நெருப்பிருக்கிறதும், பலநாளும் பார்த்தபழக்கத்தையே சாட்சியாகக் கொள்வது. இவ்வாறுகியவேதுகளைக் கொண்டறிவது சுயார்த்தஞானமாம் இதனைப்பிறருககுச் சொல்ல வேண்டுமாயின் அன்னுவய வெதிரேகமென்றிரண்டுண்டு அதாவது.

உச. புகையாலனலுண் டடுக்களைபோ லென்னப்புகற லன்னுவ
யம், வகையாலனலில்லாவிடத்துப் புகையின்றுறுமலரின்றெ
டு, முகையாரீரிற் போலென்று மொழிதல்வெதிரேகச்சொலி
வை, தொகையாருறுப்டைபஞ் தொடுங்கூடச்சொல்லுவாருமுள
ர்துணிந்தே.

என்றது - அன்னுவயமாவது, இந்தப்புகையால் அனலுண்டு எதுபோலுமெனின், அடுக்களையிலுண்டானது போலென்றது, வெதிரேக மாவது அனலில்லாவிடத்திற் புகையில்லையென்ப தெப்படியென்னில், மடுவிலக்கினியில்லையாகையாற் புகையுமில்லையென்பது, மேற்சொல்லிய மூன்றும் இவ்விரண்டுங்கூட்டி ரு - ஆ - சொல்லுவாருமுளர். அன்னுவய வெதிரேகமாவது, உள்ளவிடத்திலுள்ளது இல்லாதவிடத்தில்லாததுஞ்சொல்வதாம். இவற்றைப் பிறருக்குச் சொல்லும்போது இவ்வைந்துறுப்பினால் முறையேசொல்லவேண்டும். அதெப்படி யென்றால், இந்தபருவதத்தில் அக்கினியிருக்கவேண்டு மென்பது - க - உனக்கெப்படி தெரியுமென்றால் அதோபுகைகின்றது பாரெனக் காட்டல் - உ - எவ்விடத்திற் புகைகின்ற

மீது வவ்விடத்திலெல்லா மக்கினியுண்டு. இதற்குச்சாட்சி [illegible]யைக்காட்டல் - ௩ - அக்கினிக் கேதுவானபுகை யிருக்கிறதென்பது - [illegible] இப்புகையால் நெருப்பிருக்கிற தென்பது - ரு - இவ்வாறு பருவதத்தை [illegible]டல் கேவலான்னுவயம். அக்கினியைக்காட்டினது அன்னுவயம். அன்லில்லாவிடத்து புகையில்லையென்பது, வெதிரேகி. சீதமில்லாவிடத்து பனியில்லையென்பது கேவலவெதிரேகி. முன்சொன்ன அன்னுவயாதி- ௩ - அன்னுவயவெதிரேகத்திலடங்கும். அதெப்படி யென்றால், காட்டுங் குறியெல்லாம் அன்னுவயம் காணுதகுறியெல்லாம் வெதிரேகமென்றறிக.

௨௫. போதுநாற்றத்தாலுணர்தல் பூர்வக்காட்சியனுமான
மோதுமுறையாலறிவினள வறிதல்கருதலனுமான
நீதியான்முற்கன்மபல நிகழ்வதிப்போதிச்செய்சி
யாதியாகவரும்பயனென் றறிதலுரையாலனுமானம்.

என்றது—பூர்வத்தில் பழகின பூவின் வாசனையால் மணம் வந்தவிடத்தில் இன்னபூ வின்னசுகந்தமென்றறிவது பூர்வக்காக்ஷியனுமானமாம். ஒருவன் ஓதுகின்றவுரையால் அவனறிவையளவிடுகிறது கருதலனுமானமாம். ஒருவனது ஐஸ்வரியம் தரித்திரம் இதுகளைக்கண்டு பூர்வத்தில் இவனின்ன புண்ணியமின்னபாவஞ் செய்தானென்பது ஆகமவனுமானமாமென்றறிக. அனுமானப்பிரமாணஞ் சங்க்ஷேபமாய்முடிந்தது. இனி யாகமப்பிரமாணம் வருமாறுகாண்க.

ஆகமப் பிரமாணமாவது, திருஷ்டவாதியாப்தனு யிருப்பவன் சொல்வது நதி தீராதிகளில் பலாதிசற்பாவஞானம்போல் இரசங்களோடு கூடியிருக்கும் அதுயாதென்றால், ஆகமமானது தந்திரகலை - மந்திரகலை - உபதேசகலை - யென மூன்றாம். அவற்றுள் தந்திரகலையாவது, வேறு தெய்வமில்லை கடவு ளொருவனே தெய்வமென்பது. மந்திரகலையாவது, மனுதிகளை யடக்கி தெய்வத்தை வழிபட்டுச் சமாதிநிலையடைவது. உபதேசகலையாவது, ஆதியந்தமில்லாத கடவுளைப் பக்குவ தேசிக்குபதேசிபபதென்றறிக. பிரத்தியக்ஷம் அனுமானம் ஆகமம் ஆகியமூன்றில் இனிச் சொல்லுகின்ற வைந்தும் அடங்குமென்றறிக. உவமானப் பிரமாணமாவது, மரையென்னுமிருகத்தை யறியாதவனுக்கு ஒருவன்பசுப்போலிருக்குமென்று சொல்வதைக் கேட்டுகாட்டிற்போய் அம்மிருகத்தைக்காண்டல். இதன்றியில் சந்தனமரமறியாதவனுக்கு ஒருவன் இந்த மரத்தைப்போ லிருக்குமென்று கேட்டுகாட்டிற்போ யவன்சொன்னகுறியெல்லாமிருக்ககண்டு இதுவேசந்தனமரமென்றறிந்தாற்போலும், இன்னுனின்னுனைப்போ லென்றதைக் கேட்டவன் அவ்வடையாளத்தோடவனைக்காண்டல் போலும், உவமானமென்றறிக. அருத்தாபத்திப் பிரமாணமாவது, பகற்காலத்திற் புசியாத ஒருவன் தேகம் பூரித்திருப்பதைக்கண்டு இவனிரவிற் கரந்துண்கிறா னென்றறிவது. அபாவப்பிரமாணமாவது, இம்மண்ணிற் கடமில்லை யென்றறிவது. ஐதிகப் பிரமா

ணாமாவது, இம்மரத்தில் இராட்சச னிருக்கின்றானென்று சொல்லக்கேட்டு அம்மரத்தில் இராக்ஷசனைக் காண்டல் ஆகப்பிரமாண மெட்டு முடிந்ததென்றறிக. இனி பரிபாஷையிலுள்ளது நான்கு பிரமாணமாம். மற்ற அருத்தாபத்தி அபாவஞ் சம்பவம் ஐதீகமாகிய நான்கு மவற்றிலடங்குமென்றும், இவற்றைச் சென்னிபட்டிய முதலிய வியாக்கியானங்களில்வெகுவாய்ச் சங்கையு முத்தரமு முண்டு இது வெகு சங்க்ஷேபமாய்ச் சொன்னதென்றறிக. இனிப் பிரத்தியட்சத்தி லடங்குகிறது அபாவமும் ஐதீகமுமடங்கும். அதெப்படி மண்ணிற் கடமில்லையாலும் ஆலமரத்திலே யக்ஷனில்லாமையாலும் மண்ணு மாலமரமும் பிரத்தியட்சமாய்ப் போயுங் கடமுமில்லையாம். பிரத்தியட்சத்தி லடங்கினதென்றறிக. இனி அநுமானத்தில்அருத்தாபத்தி சம்பவ மிரண்டுமடங்கும்.அஃதெப்படி அருத்தாபத்தி உண்ணவில்லையென்றவனைத்தேகபுஷ்டியாலிராத்திரியிற்போசனமுண்டென்கிறது மனுமானமாகையாலுஞ் சம்பவமாவது, ஆயிரஞ் சங்கையில்நூறுண்டென்பது மனுமானமாகையாலு மிதிலடங்குமென்றறிக. இதல்லாமற் சைவ சித்தாந்தத்திற் பிரத்தியட்சமனுமானமு மாகமமு மிந்த மூன்றில் மற்ற ஐந்து மடங்குமென்றது அதெப்படி உவமானமும் பிரத்தியட்சத்தி லடங்குமென்றறிக.

## ௰௨-வது—அத்தியாயம்.

## அண்டகோசலக்ஷணம்.

அண்டகோசமாவது, [illegible]யிரணத்தினால் கவாட்சி மத்தியந் திற்றோன்றுகிற அணுக்களுக்குப்பரமாணுவென்றும், [illegible]வென்றும். பெயர். இப்பரமாணு -அ- கூடினது [illegible]ரேணு -அ- [illegible] -அ- கூடினது நெல்லின் வாலாக்கிரமாம். இது -அ- கூடினது [illegible]யாம் இது -அ- கூடினது [illegible] -இது-அ-கூடினது யவை [illegible] -அ- கூடினது. உத்தம மாறுங்குலம். இது -எ- கூடினது மத்திமமாறு[illegible]லம். இது -சு- கூடினது அதமமாறுங்குலம். இவ்விமாறுங்குலமாவது, [illegible] மாங்குலியின் மத்திமபர்வத்திர்க்கம் [illegible] முன்[illegible] மத்திமமாத்திராங்குலம். இதிலைரப்[illegible] [illegible]க்கத்துக்கு. அர்த்தம் மத்திமவிரல் [illegible] கலப்தாங்குலமாவது, [illegible] ளாங்குல சங்கையிலுள்ளே [illegible] றும், எற்பாடுசெய்வது. [illegible] ரப்பிரகார மண்டபங்கள் [illegible] னிக்குண்டமண்டபாதிக் [illegible]கள். [illegible] திராங்குலத்திற் செய்வது [illegible] வதான லங்தாங்குலத்திற் செய்வது இப்படியக்குல பேதமாவது. [illegible] அஸ்தபேதமாவது, முன்சொன்ன மாறுங்குலி -உ-கூடினதுமுழுதிருக்[illegible]

மகாபூசஷனிருக்கும். இந்த கசங்கள் சேஷர்கள் ஒருவரொருவராகார் சமயத்தில் விலகிப்போயிருப்பார்கள் அதினால்பூமிதாழ்ந்து குங்கிப்போயவர்கள்வந்து தாங்குகிறபோது எப்போதும்போலவாம்.

பின்புகசமஸதகஞ் சேஷன்படமீதிற் கோடியோசனைக் கனமும் அதின்விலாசமுமாய்ச் சர்வாதாரமுமாய்ச் சுவர்னமய பூமியிருக்கும். இக்கடாகபூமியின்புறம்பாகத்துவாரவாசல் காவலாகநூறு புவனத்தில்நூறுருத்திரரிருப்பார் இதின்மேலுமிரண்டு புறமிருக்கும் இனியிந்தக் கடாகத்தி னுள்ளிலிந்திரன் முதற்பத்துத் திக்கிலும் பத்துருத்திரர் ஒவ்வொருவர்க்கு நூறுகோடி பரிசனங்களுடனே அவர்களுஞ்சர்வாயுதத் துடனுஞ்சர்வசோபிதராய்த்தற்சூழ அதினடுவாகக் காலாக்கினிருத்திர ரிருப்பார் இவர்சர்வாயுதராய்ச்சர்வசோபிதராய்க் கோடியோசனையுயரமாய் இரத்தவர்னமாயிருப்பார். இவர் புவனம் ௫-கோடியோசனை யகலமுமொருகோடியோசனையுயரமுமாயிருக்கும்இதினடுவே பரமனைநாலுவிரத்திநசகிதமாயிரண்டுகோடியகலமுமொருகோடியுயரமுமா யிருக்கும். செகச்சங்காரமாகும்போது அதோமுகமாவன முன்சொன்ன அரண்மனையிற் சிங்காசனத்தின்மேல் காலாக்கினி ருத்திரர்கொலுவா யிருப்பார். இவர்தேகத்தின்சுவாலை -௰- கோடியோசனை யுயரம் இதின்புகை -௫- கோடியோசனை யுயரமாயிருக்கும் இந்தப்புகையின்மேலே யியமராசன் ஆக்ஞையாலே யிருக்கிறது -௯௰- லட்சம் யோசனைவெளிமேலே -௩௩- பட்டணமுண்டு - அதினடுவேலட்சம் லட்சம் யோசனையகல முமாய் -௩௰- கோடியும் -௨- லட்சம் யோசனை யுயரமுமாய் உ௰அ - இராசநரகமுமாய் ஒவ்வொன்றை யொவ்வொருகோடி நரகந்தற்சூழ — உ௰அ- கோடிநரக மிருக்கும். இந்நரகங்களையும் அனேகநரகந்தற்சூழ இடையிடையிலே படிகரைபடுகுழி வெளிகளுண்டு. இதுமுன் சொன்னவுயரத்திலடங்கும் பின்சிலவதிக படிக்கரையும் குழியாழங்களும் வெளிகளுமிதின்புடைவிரிவானபுறம் இருப்புமயமாய் -உ௰௯- உண்டு. இந்தப்புறம் ஒவ்வொன்று கோடிமேலொரு லட்சமும் -அதகூஈஉ௰- யோசனையகலம்விரிவென்றறிக.

இதல்லாமல் -௩௰௨- இராசநரகமென்றும் -௩௰௨- கோடிநரகமென்றுஞ்சிந்தாமணி சொல்லும் இதிலேவிழுகிற பாவாத்மாக்கள் செய்தபாதகமும் இவர்கள்படுந்துயரமுஞ் சூக்ஷ்சங்கிதை விவேகசிந்தாமணியிற் காண்க இந்தநரகலோகத்தின்மேலே -௩௰௩- யோசனைவெளியுண்டு. இதின்மேல் கூ-லட்சம்யோசனை பூமியுண்டு. இதற்குமேற்குப்புறம் -௬- லட்சம்யோசனைசுமர்னபூமி -மற்றநாலரைலட்சம்யோசனை கிழக்குத்திசையிற் பொன்மயமாயும் இருப்புமயமாயும் பூமியிருக்கும். இந்த -கூ- லட்சத்துக்கும் முன்சொன்ன நரகத்துக்கு மதிபதியான இயமனுக்கும் கூஷ்மாண்டாதிபதியாயிருப்பார். இவர்சர்வாயுத சர்வசோபிதங்களுடனே நனக்குச்சமான கோடிமகாபூதங்களுடனே பயங்கரமானசொரூப மாயிருப்பார். இந்தக்கூஷ்மாண்டத்தின்மேல் ஆயிரமாயிரம் மேன்மேலுயரமாய்ப் பிரத்திமேகம் பிரத்தி

[illegible]யும் புஷ்பராகக் கொம்மையும் மற்றலங்காரமுமுள்ள [illegible] ப ட்டணமிருக்கும், இனி நைருதிக்கு லோகவர்ணக் கோட்டையும் [illegible] மையு மற்றலங்காரமுமுள்ள இரக்ஷோவதி பட்டண மிருக்கும், [illegible] ணனுக்குச் சுதாவர்ணக் கோட்டையும் வைடூரியக்கொம்மையு மற்றலங்கா ரமுமுள்ள சுத்தாவதி பட்டணமிருக்கும். இனி வாயுவுக்குப் பச்சை வர்ண க் கோட்டையும் வைடூரியக் கொம்மையு மற்றலங்காரமுமுள்ள கந்தாவதி பட்டண மிருக்கும், இனிக் குபேரனுக்கு நானாவிரத்தினக் கோட்டையு மு த்துக் கொம்மையு மற்றலங்கார முடனும் மகோதய புரியாகிற பட்டண மிரு க்கும், இனி யீசானனுக்குச் சுப்பிர வர்ணக் கோட்டையு மிரத்தினக்கொம் மை மற்றலங்காரமுள்ளஇரட்சோவதிபட்டணமிருக்கும். இப்படிப்பெயரான வெட்டுப்பட்டணமும் ஒவ்வொன்று-௯௬-யோசனையகலமா யிருக்கும். இனி மேகவிக்கிரேவதி முதலான ௫௰ பட்டணம் அமராபதியைச் சூழ்ந்திருக்கும் அதில் சார அப்ஸரஸ சித்த துவாத சாதித்ய சாத்தியர் இவர்கள் முன்சொன் னவைந்திலு மிருப்பார்கள். இனித்தேசோவதியைச் சூழவிரண்டுபட்டணமி ருக்கும் இதில் இயமவிஸ்வகர்மாதி தேவதைக ளிருக்கும் - உ- ஸஹ்ய மி யைச்சூழ மூன்றுபட்டணமிருக்கும் இதில்கின்னரரிருக்கும் குபேரன்மகோ தயத்தைச்சூழ- ரு- பட்டணமிருக்கும், இதிற் சித்திராத - சாரத-தும்புரு- குஷ்யருந் தர்ம தேவதைகளு மிருக்கும். ஈசானனுடதேஜோவதியைச்சூழ ௩-பட்டண மிருக்கும். இதில் விஷ்ணு பிர்மாதிதன்வந்திரியுமிருக்கும். இப் படி யெட்டுப்பட்டணத்தைச் சூழ்ந்த பட்டணங்களுடனுங்கூட இந்திராதி கள் தங்கள் தங்கள் ஸ்திரிகள் வாகன வஸ்துக்களுடனே மகதை ஸ்வரிய த்துடனு மிருப்பார்கள். இனி யீசானதிக்காகிற ஈஸ்வரக்ஷேத்திரத்திலொ ருதலமுண்டு அதில்நந்திகேஸ்வரன் சர்வாலங்கிர்தருபத்துடனே தன் சிஷரா ணஜுனற்குமாரர் முதலானபேருடனே பூசைசெய்வார்.

இனி -உ-வது. நடுக்கங்கணத்தில் சித்தரும் முனீஸ்வரரு மிருப்பார்கள் இதல்லாமலு மிந்தக்கங்கணத்தில் - ரு௰- யோசனையகலமாய் நவரத்தின ச கிதமான அஷ்டதளமா யிதில் நூறாயிரங்கோடி குகைகளா யிதினடுவே ப ளிங்குமேடைபோலப் பிர்மாதிகள் சூழச்சிவன் கொலுவா யிருப்பர் இனி மூ ன்றுவதான கீழ்க்கங்கணத்தில் நக ஜதிவிஜ கந்தருவரிருப்பார்- இனி மே ருமூலகு காந்தாரத்திலே மருதகணங்க ளிருக்கும். இனிமேருவி னடிவாரத்தி லே - ௫௰,௬ - யோசனை யுயரத்தில் மேருவை யொட்டினாற்போலப் பிறந்த லேக பர்வதங்க ளுண்டு. அதெப்படி மேருவுக்குக்கிழக்காகச் சுவேதவர்ண மான மந்தரகிரி யிருக்கும். தெற்கிற் கதவர்ணமான கந்தமாதன பர்வதமிரு க்கும். மேற்குத்திக்கில் நீலவர்ணமான விபுலகிரி யிருக்கும். வடக்கில் அருண மான சுபாரஸ்வ கிரியிருக்கும். இந்தநாலு கிரியிலு மிருக்கிற சகல தேவதை களுஞ் சதாசிவ லிங்கத்தைப் பூசிப்பார்கள். இனிமேருவி னடிவாரத்தில் முன்சொன்ன மலைகளையு மடுத்துக்கிட்ட கிழக்குத்திசையில் பத்மராகமலை - அக்கினிதிசையில் வச்சிரமலை - இயமதிசையில் முத்துமலை - நிருதிதிசையில்

சர் - கின்னரர் -கிம்புருடர் கருடபசாச குய்யர்களும் விசேஷவாச்சியங்களு ம்தேவதாவிட புங்கவரும் - அரம்பை - ஊர்வசி - திலோத்தமை - சித்திரரே கை - மஞ்சுகோஷனி - மேநகை - மிருதா - புஞ்சிசுகேசி - முதலான தேவ தா கணிகஸ்திரீ கூட்டமுஞ் சங்கீதமுதலான வித்தைகளைச் சேட்டிப்போரு ங் கூத்தாட்டுவோரும் இருமுதலான நாளுவிசித்திரங்களு முடைத்தா யிரு க்கும்.

இதல்லாமல் மேருவுக்குக் கிழக்குமுதல் மந்தராதி பருவதங்களுக்கு நடுந டுவேகேசரா அசலங்களிருக்கும். அதெப்படி கிழக்கில்மந்தரகிரிக்குந் தெற்கிற் கந்தமாதனகிரிக்கும்நடுவே சித்தாந்தசாருகுந்தமுதலான-௫-பருவதமிருக்கும் தெற்கான கந்தமாதனத்துக்கும் மேற்கு விபுலாத்திரிக்கும் நடுவேதிரிகூட கிரிமுதல்-௫-கிரியிருக்கும்.இனிவிபுலாத்திரிக்கும் உத்தரமான சுபாரஸ்வகிரிக் கும் நடுவே வைடூரியகிரிமுதல் ௫- கிரியிருக்கும். இனி உத்தரம் சுபாரஸ்வகி ரிக்குங்கிழக்கு மந்திரகிரிக்கு நடுவே சங்ககூடகிரிமுதல் ௫ - கிரியிருக்கும் இ ப்படிநான்குகிரிக்குநடுநடுவே-கூக யோசனை யுயரத்தில் முன்சொன்னகிரிகள் சமஸ்ததேவதைகளுக்குமாகிறைய மாயிருக்கும். இனிமேருவைச்சுற்றிலும் நவகண்ட மிருக்கும் அந்தமேருவுக்கும் முன்சொன்ன கிரிகளுக்கும் உத்தர மாக நீலஸ்வேத சிருங்கமென்கிற சீமா கிரித்திரையங்கள் ஒவ்வொன்று-உக யோசனை யகலமும் க0க- யோசனையுயரமும் -கூக- யோசனைஅந்தராளமுமு ண்டாய்க்கிழக்கு மேற்குச் சமுத்திரபரியந்தம் அட்டமான நீளமா யிருக்கும் இந்தமூன்று கிரிகளிலுஞ் சகலமான அபூர்வங்களு முண்டா யிதில் மஹேஸ் வரலிங்கம் பூசைகொள்ளும் தெட்சண பாரிசத்தில் நிஷாதஹேமகூடஹே மாத்திரிகளென்று மூன்று கிரிகளுண்டு. இதற்குமுன்சொன்ன கிரிகள்போ ல அகல நீகள முள்ளது கிழக்கு மேற்குச் சமுத்திரபரியந்தமுமாய் சகல வ ஸ்துக்களுமுண்டாய்ப் பார்ப்பதி யென்கிறலிங்க மிருந்து பூசைகொள்ளும் இனி கிழக்குப் பாரிசத்திற் கிழக்குமுதல் மேற்குப் பரியந்தமுன்சொன்ன கிரிகள் நடுவாகப் புறப்பட்டுஒன்றுக்கொன்று கூக- யோசனை தூரமாக வி டைந்து மாலியவந்தன - கந்தமாதன மென்றிரண்டு சீமாகிரிகளுண்டு - இ து - ௲ யோசனையகலமும் ௫க - யோசனை யுயரமு முண்டாய்த் தெற்குவ டக்குத் திசையாக முன்சொன்ன வடக்குக்குத் தெற்கா யிருக்கிற நீலநிஷா த கிரிகளை யவலம்பித் திருக்கும். இவ்விரண்டு கிரிமேலுஞ் சகல வஸ்துவுமு ண்டாய் மகாதேவமகேஸ்வர லிங்கஞ் சர்வராலும் பூசிதராயிருக்கும்.

இனி யிளாவிர்தகாண்டமாவது, மேருவுக்கு வடக்குத்தெற்கு மேற் குகிழக்குத்திக்கில் நீலநிஷாதமாலியவந்த கந்தமாதனங்களாகிற சதுஷ்டயத்தில் நடுவே யிளாவிர்தகாண்டமிருக்கும். இது- கூக- அகலமுமாய் நா ற்சதுரமு நிரவியிருக்கும். இதிற் சித்தாந்த முங்காதிபருவதம் - கஙு - மந்தர பருவதத்தின் கிழக்கிலிருக்கும் இனிச் சையிலதவிகிரிமுதலான பருவதங்க ள் - ௰ - முன்சொன்ன கந்தமாதனகிரிக்குத் தெற்காயிருக்கும் இனிச்சா த்திமுதலானகிரி - கரு - ம் விபுலகிரிக்கு மேற்கிலிருக்கும். இனிச்சங்ககுடக

கனகாதிபருவதம்-௧௭-ம் முன்சொன்ன பாருகவிரிக்கு வடக்காயிருக்கும். இப்படி முன்சொன்ன மேருவினடிவாரத்திலிருக்கிற நான்கு பருவதங்களின் கிழக்குத் தெற்கு மேற்கு வடக்கில் இப்படி-௫௬- கிரிகளிருக்கும். இது குலபருவதங்களென்று பெயர். இதிற்றேவர்கள் சித்தர்களிருப்பர் இனி முன்சொன்ன இளாவிர்த வருஷத்திற் பிரத்தியேகம் பிரத்தியேகம்-௨௬-யோசனை யுயரமாய் -௨௪- கிரிகளுண்டு. இதின்மேல் மகாபட்டணங்களிருக்கும் இதின்விபரம் அதிலே சந்திரகாந்தமுதல்-௩-பட்டணமுண்டு. இதில் தானவர்கள் வாசஞ்செய்யும் -அ௱- பட்டணமுண்டு. இனி திரிகூட சாருதி ஸஹஸ்ரசிகரியென்னுங் கிரியில் -௩முசி- மகாநட -மஹாதம்பாதி தயித்தியர்களுக்கு அனந்த பட்டணமுண்டு. இனிச்சதுசிங்கபருவதத்திலக்ஷா வியாதிமுதலானவிராக்ஷதருக்கு -௨- லக்ஷம் பட்டணங்களுண்டு. இனிச் சுவிருதமென்னுங் கிரியில் நீலாதி அயக்கிரிவர்களுக்கு -௧௬- பட்டணமுண்டு. இனி மகாநீலகிரியிற் கின்னரர்களுக்கு ௵ - பட்டணமுண்டு. சுவேதோதக்கிரியில் பக்ஷஅச்ர ஸ்கந்த -ரேணுக -உதாக -ஸ்மசன்ன மென்கிறவர்முதலான ஸுபர்ந்தர்களுக்கு -௫௬- பட்டணங்களுண்டு. இனி வேணுசாணுகிரியில் வித்தியாதரர்களுக்கு -௭௱- பட்டணங்களுண்டு. இனிக் கராளஜகிரியிற்கந்தருவர்களுக்கு அனந்தம் பட்டணமுண்டு. இனி வஸுதாரகிரியில் அஷ்டவசுக்களுக்கு -அ- பட்டணமுண்டு இனி யிரத்தினதாரகிரியில் சித்தசாரணர்களுக்கு அனந்தம் பட்டணங்களுண்டு. இனி மேககிரியிற் சத்தரிஷிகள் முதலான -௮௮௬- ரிஷிகளுக்கும் அனந்தமாசிரமங்களுண்டு. இனி புஷ்பகேதுகிரியில் தும்புரு நாரதாதிகளுடைய மகாமந்திரங்களிருக்கும். இனி யெமகூடகிரியில் ஆவாதசாதித்தியர் பட்டணங்களிருக்கும் பஞ்சகூடகிரியில் யக்ஷருக்கு -௫- கோடி பட்டணமிருக்கும். குமுதகிரியில் மகாபத்மாதி நாகங்களுக்குப் பட்டணங்களிருக்கும் பாரியாத்திரகிரியிற் குபேரன் பட்டணம். மரியாத்திரகிரியில் விச்வேஸ்வரன் பட்டணம்-சொத்துங்ககிரியில் மகாதுர்க்கைபட்டணம். எமசிருங்ககிரியிற் பிரமாவுக்குப்பட்டணம். கிரிகூடகிரியில் விஷ்ணுவுக்குப்பட்டணம். ஸ்ரீகண்டகிரியில் ஈஸ்வரனுக்குப்பட்டணம். இந்த ஸ்ரீகண்டகிரி சமீபத்தில் எமகூடகிரி நவரத்தினமயமான அஷ்டப்பிரகாரமா யிதில் வடவிருக்ஷம் ஆயிரம்யோசனை யகலமு நீளமுமாயிருக்கும். இதினடியிற் சிம்மாசனத்தில் தெக்ஷணாமூர்த்தியிருப்பார். இந்த இளாவிர்தகண்டத்திற் சம்புவிருக்ஷாலங்கொண்டு -௬௬௨- வருஷமிருப்பார். ஈஸ்வரநாமலிங்க பூசைசெய்வர்.

இனிப் பத்திராஸ்வ வருஷகாண்டமாவது மேருவுக்குக் கிழக்காக ௯௰ - யோசனைக் கப்பாலிருக்கிற மாலியவந்தமாகிற சிமாங்முதல் கிழக்கு லவணசமுத்திரமட்டாய்ச் சந்திரகாந்த வர்ணமாயிருக்கும். இது -௩௨௰- யோசனை சதுர்சியமாயிருக்கும். இதிற் சக்ரகுலபருவதமும் இதினடுநடுவே புண்ணியநதிகளுமுண்டாய்ச் சந்திரகாந்தமயமான சனங்கள் -௰௲- வருஷமாயுளுடையராயிருப்பார். இவர்கள் மகாதேவநாமமுள்ள லிங்கத்தைப் பூசைசெய்து சுகசீவிகளாயிருப்பர். இவர்களாகாரம் நீலாத்தலிம

ன்கிற - கோடி - யிலை - தின்றிருப்பார். இனிக் கேதுமாலிய வருஷகாண்டமாவது மேருவுக்கு மேற்கில் - ௯த - யோசனைக் கப்பாலிருக்கிற கந்தமாதன பருவதமுதல் மேற்கு லவணசமுத்திரமட்டாகப் பொன்வர்ணபூமியாய் ௩௨த - யோசனை சதுர்சியமாயிருக்கும். இதிற் சத்தகுலகிரியு மங்கங்கேயனந்தநதிகளு முண்டாயிருக்கும். அதிற் பொன்மயமான சனங்கள் பலாப்பழரசங்கள்கொண்டு - ௰த - வருஷமிருப்பார். மகாதேவநாமமுள்ள லிலிங்கபூசகராயிருப்பார். இனி ரம்மியகவருஷமாவது, மேருவுக்கு வடக்கு-௯த-யோசனைக் கப்பாலிருக்கிற நீலஸ்வேதகிரி யிரண்டுக்கும் நடுவெளியிற் கிழக்கு மேற்குச் சமுத்திரமட்டாக விருக்கும். இதுநீலவர்ணபூமியா யிதிற்சத்தகுலபருவதமு மங்கங்கே விஸ்தாரமான நதிகளுமுண்டா யிதிலிருக்கிற சனங்கள் நீலாஞ்சன காந்தியுடனே கருப்பஞ்சாறுகொண்டு - ௧௨த - வருஷம் ஆயுளுண்டாய் தேவநாமலிங்க பூசைசெய்வார்கள். இனி யிரணியவருஷகாண்டமாவது ஸ்வேதசிருங்கமாகிற சீமாகிரி யிரண்டுக்கு நடுவே - ௯த - யோசனை விரிவான பூமியாய்த் தவளவர்ணமாய்க் கிழக்கு மேற்குச் சமுத்திரபரியந்த நீளமுள்ளதாயிருக்கும். இதிற் சத்தகுலபருவதமு மனோகரமான நதிகளுமிருக்கும். இதிலிருக்கிற மனுஷர் சந்திரகிரகணம்போல லாகுளவிருக்ஷபழம் புசித்து - ௧௨த - வருஷமாயுளுடனே மஹேஸ்வரலிங்க பூசகராயிருப்பார். இனிக் குருவருஷமாவது, சீமாகிரியான சிருங்ககிரிமுதலாக லவணசமுத்திரபரியந்தம் - ௯த - யோசனையான பூமியாய்க் கற்குழம்பூவர்ணமாய் அர்த்தசந்திராகாரமாய் அதிற் சத்தகுலபருவதங்களு மகாநதிகளுமுண்டாய்க் கொசும்பைப்பூவர்ணமான சனங்களுண்டா யிச்சாபலங்களைப் புசித்து - ௩௨த - வருஷம் உருத்திர நாமலிங்கபூசகராய் வெகு சுகமாயிருப்பார். அந்தக் குருவருஷத்திலிருக்கிற ஸ்திரி புருஷர் ஒரு சமயத்திலேதானே ஆண் பெண் பெறுவார். அந்த ஆணும் பெண்ணுமே கலியாணமாயிருப்பார். பின்னுமந்தக் குருவருஷத்திற் சமுத்திரசமீபத்தில்-ச௰த - யோசனையிலே வாயுதிக்கில் நீலாஞ்சனவர்ணமான பூமி சந்திராகார பத்திராகாரமென்கிற தீவிரண்டுண்டு. அதிற் சந்திரகலைபோலும் நீலாஞ்சனம்போலும் நிறமான மனுஷர்காவற்பழம்புசித்து- ௧௨த- வருஷம் உருத்திர நாமலிங்க பூசகரா யிருப்பார்.

இனி ஹரிவருஷமாவது, மேருவுக்குத் தெற்குப்பிறதேசத்திலே சீமாகிரியான நிஷதஹேமகூடமென்கிற கிரியிரண்டின் வெளியிலே-௯த-யோசனையகலத்தில் வெள்ளிமயமான பூமியாய்க் கிழக்கு மேற்கு லவணசமுத்திரபரியந்தமாய்ச் சத்தகுலபருவதமுந் திவ்வியநதிகளும் வெள்ளிமயமான சனங்கள் இக்ஷுரஸங்கொண்டு - ௧௨த - வருஷம் ஈசானநாமலிங்க பூசகராயிருப்பார். இனிக் கிம்புருஷவருஷமாவது, முன்சொன்ன சீமாகிரியான ஹேமகூட ஹேமாசயில நடுவெளியில் - ௯த - யோசனை விரிவாய்ப் பொன்மயமான பூமியாய்க் கிழக்கு மேற்கு லவணசமுத்திர பரியந்தமாயிதிற் சத்தகுலபருவதமுஞ் சாகரநதியுமிருக்கும். இதிற் பொன்வர்ணமான சனங்கள் [illegible] பலாகாரத்தாலே - ௰த - வருஷ மீசானநாமலிங்க

விசாலமா யிருக்கும். இந்நெய்யைச்சூழ இரத்தவர்ண பூமியாய்-௯௬-லக்ஷ ம் யோசனை விசாலமாய்ச் சான்மலித் தீவிருக்கும். இதற்கதிபதி யிருதிமந்த னென்கிற ராஜா யிவன் குசலன் முதலான ஏழு குமாரர்களுக்கு ஏழுபங்கா க்கிக் கொடுத்தான். அது இவர்கள்பேராலேவிளங்கும். இதில்சீமாகிரியேழு நதியேழுங் கிழக்குமுதற் பிரதக்ஷணமாய்ச் சமுத்திரகாமியா யிருக்கும் இதிற்றேவ கந்தருவ ரிருப்பார், இதல்லாமற் சத்தகுலகிரிகள் சிலசாமானிய கிரிகள் சிலநதிகள் வெகுவனங்களிருக்கும்.

இதிலிருக்கிறசனங்கள் மூன்றுநாளப் பிரமாணமாய்க் கற்பகவிருக்ஷப லாகாரத்தாலே ௨0௲- வருஷம் பிரமேஸ்வரலிங்க பூசகராய்ச் சுகத்திலிருப்பார் இந்தசான்மலித் தீவைவளைய இக்ஷுரஸ சமுத்திரம்-௯௬-லக்ஷம்யோசனை வி சாலமாய் வளைந்திருக்கும். இந்த சமுத்திரத்தைச் சூழ வெத்தவர்ண பூமியா ன கோமேதகத்தீவு ௱௨ லக்ஷம் யோசனையாய் வளைந்திருக்கும். இதற்கதிப தி பவ்வியனென்கிறவிராஜாயிவன் [illegible] முதலான குமாரர்களேழுவரு க்கு மித்தத்தீவை யேழுபங்காக்கிக் கொடுத்தான். இது அவர்கள்பேராலே விளங்கும். இதிற் சீமாகிரியேழு மேழுநதிகளுங் கிழக்குமுதற் பிரதக்ஷண மாய்ச் சமுத்திரகாமியா யிருக்கும். இதிற்பின்னுஞ் சந்தகுல பருவதங்கள் ந திகள் வனங்கள் வெகுவா யிருக்கும். இதிற்சனங்கள் மூன்றுநாளப் பிரமா ணமாய்க் கற்பகவிருக்ஷ பலாகாரத்தாலே ௨0௲ வருஷம் விஸ்வேஸ்வரலிங்க பூசகராய்ச் சுகத்திலிருப்பர். இதைச்சூழச் சுராசமுத்திரம் ௱௨ லக்ஷம் யோ சனையாய் வளைந்திருக்கும். இந்தச்சுராசமுத்திரத்தைச்சூழ் [illegible] வர்ணபூ மியான புஷ்கரத்தீவு [illegible] லக்ஷம்யோசனையாய் வளைந்திருக்கு [illegible] சவனராஜாயிவனுக்கு தாக்கி, சுகோத்திரனென்கிற [illegible] குமாரர்களுக்கு இ ந்தத்தீவையிரண்டு பங்காக்கிக்கொடுத்தான். அது அவர்கள்பேராலே [illegible] அதின்மத்தியத்தில் விருத்தாகார மயமான சொத்திரமென்கிற [illegible] க் கும். அதின்மேலே [illegible] பட்டணம் [illegible] அந்த மலைக்கு வடபாரிசத்தில் தாக்கியென்கிறவிராஜா [illegible] சத்திலே சுகோத்திரனென்கிறவனிருக்கிறவன், [illegible] டமுமாகுவார்கள். அதில்மானதம் [illegible] லிகளா யிருக்கும். இதிலிருக்கிற சனங்கள் மூன்றுநாளப் [illegible] மாய்க்கற்பகவிருக்ஷ பலாகாரங்கொண்டு ௨0 வருஷம் [illegible] சோமேஸ்வரலிங்க பூசகராய்ச் சுகத்தி லிருப்பார்கள் [illegible] வைவளைந்து கொண்டு ஸ்வாதூதக சமுத்திரம் [illegible] லமா யிருக்கும். இது [illegible] த்துச் சகலலோகோபகாரமாயிருக்கு [illegible] துகொண்டு சகலதேவதா பீடமாய் [illegible] யோச னை விசாலமாய் ஜம்போமாத்திரம் [illegible] விஸ்லை யென்றறிக.

இதைவளைந்து கொண்டு சராசந்ததிக்கு ஆலவதமாய்ச் சூரியனது இரதசக்கரத்துக்கு ஸ்தலமா யிருக்கிற உலோகாலோகசக்கர மென்றுஞ் சக்கரவாளகிரியென்றும் பெயராயிருக்கும். இதின்றென்பாகத்திலே சூரியப்பிரகாசமுண்டா யுத்தரபாகத்திலே சூரியப் பிரகாச மில்லாம லிருளாய்ப் பொன்பூமியை வளைந்துகொண்டு -௫௰௲-யோசனை விசாலமும்-௮௰௲-யோசனையுயரமுமாயிருக்கும், இந்தச் சூரியனது சஞ்சாரத்துக்கு அந்தத் தமோ பூமியிலிருக்கிறராக்ஷஸர் சூரியனது தேரோவரவொட்டாமல் விக்கினம் பண்ணியுபித்தஞ்செய்வார்கள் அதற்கு இந்திராதி திக்குப்பாலகர் தங்கள் தங்கள் பலத்தோடு கூடிக்கொண் டிருப்பார்கள். இவர்கள் சூரியனைத் தக்ஷிணபாகத்திலே நடக்கச் செய்வார்கள் இந்தச் சக்கரவாளத்தைச்சூழ வொருகோடியும் ௨௭ லக்ஷம் விரிவாய்ப் பெரும்புறக் கடலிருக்கும். இதைவளையப் பேராந்தகாரமாய் வெகு இருளாய்-௩௰-கோடியும்-௧௯-லட்சத்து-௫௰௲- யோசனை விரிவா யிருக்கும். இதில் பிசாசரர் இராக்ஷசரிருப் பார்கள், இது பின்னொரு விதம் பேராந்தகாரத்தை மூன்றாகவுங் கெற்போதக சமுத்திரத்தைப் பின்னுகவுஞ் சொல்லுஞ் சாத்திரமுமுண்டென்றறிக. இந்தச் சமுத்திரத்திலே தக்ஷணுவர்த்தசங்கிரியுண்டு. இதல்லாமல் திமிங்கிலாதி யாகிறமீனுண் டுஇந்த திமிங்கில மச்சங்கள் ஒன்றையொன் று பார்த்துச் சையோகமதனம் பண்ணும்போது கெற்போதக சமுத்திரங்கலங்கி யுபுக்கிறபோது சகல தீவுகளுமுழுகிச் சலப்பிரளயமாம். அதினடுவாக மகாபருவதாகாரமான ஆமையொன்று பிரகாசமா யிருக்கும். பின்னுமிதற் கப்பாற் பிர்மாண்ட கடாகாந்த பரியந்தமா யிருக்கிறவெளி கோடி யோசனை விசாலமா யிருக்கும், இந்தக்கிரமத்திலே யெண்ணிப்பார்த்தாற் சம்புத்தீவுமுதல் தீவுகள் ஒருகோடியும், ௨௭-லக்ஷம் மொன்றி சமுத்திரம் ஏழுக்கும் ஒருகோடியும்-௨௭- லட்சம்பொன் பூமி-௫௰-கோடி சக்கரவாளகிரி-௫௰௲-யோசனை யிருள்பூமி-௩௰-கோடியும்-௧௯-லட்சத்து -௫௰௲. கெற்போதகம்ஒருகோடியும்-௨௭-லட்சம் அப்பால் வெளிஒரு கோடி யாகமேருவைச் சுற்றும்-௮௰-கோடியும் -௮௰௲-யோசனையிதிற் சம்புத்தீவில் லட்சம் யோசனைக்கு நடுவாக மேருவிருக்கையால் சுங்கு-௮௰௲-யோசனை மேருக்கொண்டு போகையால் இந்த பூமிபஞ்சாசத்கோடியாமென்றறிக.

இது சமுத்திரத்திற் கப்பால்.

௨௬. ஆயிருகோடிசொன்னத் தனிப்பிலிருநூறுநேமிச்
சையமேராயு மாகுஞ் சார்தருபுறத்தினேமி
யெய்தியகோடிமேலு மிருபதோடிலக்கமேறா
மையிருண்மெறிக்கபாரி னெல்லைமேல்வகுப்பன்மன்றே.

௨௭. ஆயிருளுலகமப்பா லத்தொருகோடிமேலு
மோரிரு பத்தொன்பா னிலக்கநான்கயுதமாகும்
மேவிருஞ்சேர்ந்தவண்டத் தின்னகமோர்கோடி
பாரினையகலஞ்சேரிப் பதினையம்பஃதுகோடி.

இதுமத்தியபூமியகலநூறுகோடிக்கு மேருநடுவாகையால் மேருவைச் சுற்றி-௫0-கோடியாம். மேருவைச்சுற்றிநாலுதிக்கும் நூறுகோடியோசனையகலமென்றறிக. இனி ஊர்த்தலோக வர்ணனைச்சொல்வது. பூமிமுதல் துருவமண்டலமந்தமாக-௧௫-லட்சம் யோசனையாயிருக்கும். புவலோகம் இந்தப்புவலோகத்திலே வாயுவாதாரமாய்ச் சமஸ்த மேகங்களுஞ் சித்த கந்தருவாதிக ளாசிரமங்களுஞ் சூரியாதி நவக்கிரகங்களுங் கிரமமாகவொன்றின்மேலொன்று யிருக்கும். முதல்தத்து வாயு பூமிக்குமேல்-௫0- யோசனை யுயரமாய் வியாபித்துப் பூமியிலுள்ள ஔஷதாதிகளிலும் வியாபித்திருக்கும். இந்தவாயுவிலுண்டான அசுண்டவாயு பூமியெல்லாம் வியாபித்துச் சமஸ்த சீவன்களுக்குந் தீபனம் பிறப்பித்து இராக்ஷதர் கமணத்துக்கும் பக்ஷிகள்கமனத்துக்கு மாதாரமா யிருக்கும். பின்னுமிந்தவாயுவி லுண்டான பிரசேதனென்கிற வாயு ஒருவேளை சுழிகாலியாயும் விருக்ஷங்களை முறித்தும் அக்கினியையெழுப்பி வீடுகளி லிருக்கச் செய்து சமுத்திரத்தில் வடவா முகாக்கினியையு மிஞ்சாம லடக்கியிருக்கும். இனி யிதின்மேல் ௱ யோசனை யளவா யிக்கிறரெசனி என்கிறவாயு மிஞ்சுவர்ணமான மூகமென்கிற மேகத்தைச் சுவதோதகசமுத்திரத்துக்காலும், இலவணோதகசமுத்திரத்துக்காலுங்கடப்பித்துக்கொண்டுபோய் அந்தச் சமுத்திரத்தில் முழுகிமொண்டதைப் பூமிக்குமேலே-௱௫0-யோசனைமட்டாக வெழுந்து அந்தமேகத்தைத்தெப்பம்போலதெளித்துக்கொண்டு வந்து ஆகாசத்தில் பூமிக்கு ஒருபருகுநிலத்தில்நிறுத்தி அந்தமேகத்தி லிருக்கிறசலத்தைத் தோற்றுருத்தி தண்ணீரைப் பிதுக்கிறாற்போலச் சிதற இறைத்து மழையாகப் பெய்து பின்னுமந்த மேகத்தை முன்போலத் தேக்கப்பண்ணிக் கிரிகள் வனங்கள் கிராமங்கள் யோக்கிய ஸ்தலங்களி லிருக்கிற பருவு நிலத்தில் நிறுத்தி யங்கங்கே மழைகள் பெய்வித்துப் பின்பு இந்த மேகத்தின் காந்தி மிஞ்சிவாயு அக்கினிசலம் இதுகள்கூட ஆலாங் கட்டிகளாம் பின்னுமிந்த வாயுதானே பூமிபேதங்களால்சலத்தின் ருசி நானாவிதமாம்போல இலவண சமுத்திரத்திலேசலத்தையு மெடுத்தமேக சம்பர்க்கத்தினாலும், வாயுவசத்தினாலுஞ் சுவாதோதகமாம். பின்னு மெந்தெந்த் திக்கிலே மழைபெய்ய வேண்டினு லந்தந்தத்திக்குகளுக்குப்பூமிக்குப்பருவு நிலத்தி லிரங்கிநின்றுபெய்யுமென்றறிக. பின்னுமுன் சொன்ன ௧௫0 யோசனைக்குமேலாக நூறுயோசனை யுயரத்தில் ரெலசனியென்கிறவாயுசத்துவவகமென்கிற மேகத்தாலே பெய்வித்த மழையால்தவளைமீன்ஆமைகள் ஜலசரமாகிற வருஷமும் விபரீதமாய்ச் செத்துப்போம். பின்னுமதின்மேல்-௫0 யோசனையுயரத்தில்மோகமென்கிறவாயு கோக்ஷமென்கிறமேகத்தால் கொண்டுவந்த சலத்தை வருஷித்துப் பூமியிலிருக்கிறசனங்களுக்கு அந்தமழைகளாலே துக்கங்களைச் செய்யும். பின்னுமிதின்மேல்-௫0-யோசனை யுயரத்தில் அமோகமென்கிறவாயு மாருகமென்கிற மேகத்தாற் கொண்டுவந்தசலத்தைப் பெய்வித்துப் பூமியிலிருக்கிற பூசல் பிராணிகளுக்கு மரணமாம். பின்னுமிதின்மேல் -௫0- யோசனை யுயரத்தில் வச்சிராங்கனென்கிற வாயுபலகாம்பமென்கிற மேகத்தாற் கொண்டுவந்த சலத்திற்பெய்த மழையாலே சகல

விருக்ஷாதிகளெல்லாந் துளிர் பூ காய் பழங்கள்வர்த்திக்கும்பின்னுமிதின்மேல் ௫௰-யோசனையுயரத்தின் மேலிருக்கிற வைத்துதியமென்கிற வாயுவைத் துதியமென்கிற மேகத்தாலே வருகிறதொனிகளால் அவிடத்துப் பூமியிருக்கு அது அந்தப்பூமிக்கு-சா௫௰-யோசனைவிசாலமுமுண்டாய்த் திரும். பின்னுமிதின்மேல்-௫௰-யோசனைமேலே நின்று ஸாவைகமென்கிறவாயு விருஷ்டிவதமெனகிற மேகத்தாற்கொண்டுவந்து பெய்தமழையாலே பிருதிவு மனுஷருக்குப் புஷ்டியுண்டா யிருக்கும். பின்னு மிதின்மேல்-௫௰-யோசனை யுயரத்தில், ஸம்வர்த்தனென்கிற வாயுகுரோதமென்கிற மேகத்தைக் கொண்டும் கோஷிதமென்கிற மேகத்தாற் கொண்டுவந்த சலத்தைமழையாகப் பெய்து அந்த சலத்தாற் பூமியிற் சனங்களுக்குரோகம் பிறக்கும். பின்னுமிதின்மேல்-௫௰-யோசனை யுயரத்தில்நின்று பஸம் வர்த்தனென்கிற வாயு குரோதமென்கிறமேகத்தைக் கொண்டு பெய்வித்த மழையால் பூமியிற்சனங்களுக்குக் குரோதவுயித்தம் விளையும், அந்தமழையா லிராக்ஷஸ சங்காரமுண்டாம்.

பின்னுமிந்துநாமச்சோதிசவிலமாருதம்ஒன்றுணமேகததாலவருஷம்பொழியும்இதற்கு -௧௨-இராசியும் -௨௭-நக்ஷத்திரமுந் தங்களதிகார பேதத்தாற் சோதிடசாத்திரப்படிஒவ்வொருமேகத்திற்குஅதுகளதிபதியாகையாலவர்கள் சேஷ்டைகளுக்குத் தக்கதாக வெகுவருஷ மற்பவருஷம்வருஷிக்கும்பின்னுமதின்மேல்-௩௰௲- யோசனைமேல் நின்று ஏழுவாயுவாதாரமாய் ஒன்றின்மே லொன்று யனேகமலங்காரத்தோடுகூடினபட்டணங்களுண்டு. அதுயாருதன்னில் மோகனென்கிறவாயு முதலாவது அதின் ஆசிலையமாயிருக்கிற பட்டணத்தில்-௩௰௲-காத்திர மூர்த்திகளாய் மூன்றுபேர் முதலான பசாசு தேவதைகள் முதலானபேர் கந்த சுவாமியை யாராதித்துக் கொண்டிருக்கும். இதில் தாரவிஷணகாளிகவீமருபிணிமுதலான -௩௬-பேர்பசாசதேவதா சத்திகள் பூலோகத்திலே -௧௰-நாள்-௧௧-மீ-௧௬-வயதுமட்டாகப்பிள்ளைகளைக் கிரகமாய்ப் பிடித்துத் தங்கள் தங்கள் விகாரங்களாலே விகாரங்கள் செய்வித்துப் பலிமுதலான ஆகாரங்கள் கொண்டிருக்கும். பின்னுமிதின்மேலே யிரண்டாம்வாயுவாகிற அயோகவாயுவாதாரமானமேகாசிலைய பட்டணத்தில்-௩௬௲. விநாயக ரிருப்பார் அவர்கள் மத்தியலோகத்தில் துன்மார்க்கர் செய்த பூசைகொண் டிருப்பார்கள்

இதின்மேல் மூன்றுவதுவச்சிரகம்பவாயுவாதாரமான மேகாசிலையபட்டணத்திற்கோடானுகோடிவீரரிருப்பார்களிவர்கள்பூலோகத்தில்மசானபூதவேதாளமந்திரசாதகரை யாசரித்திருப்பார்கள். இவர்கள் லோகத்தி லிருக்கிற சுழிகாற்றிலும் வினைச்செய்த கற்பிரதமையிலும்பலிகொண்டிருப்பர். நாலாம்வாயுவைத் துதியனுதாரமான மேகாசிலையபட்டணத்தில்தேவேந்திர னுக்ஞையாலே அச்சாசலாகிற வீரதேவதைக ளிருக்கும். இந்த நரலோகத்தில் வீரத்துவமாய்ச் செத்தபேர் தேவகன்னிகைகளோடு மகாசுகத்துடனே யிருவரு விரசொற்கம். இனி ரு. ஆவதான ஸாவதனென்கிற வாயு வாதாரமானமேகாசிலைய பட்டணத்திற் சித்த ரிருப்பார். இவர்கள்பூமியிலே சிலமந்

திர சித்தியுள்ள சாதகனை யாசரித் திருப்பார். இனி. ௯. வதான சஸம்வர்த்தவாயு வாதாரமான மேகாசிரைய பட்டணத்தில் ௬கோடி வித்தியாதபரிருப்பர். இதின்மேல் ஏழாவதானவிதுர்த்தக வாயு வாதாரமானமேகாசிரைய பட்டணத்தில் வீணைதிவித்தையானசித்தர்களிருப்பர். இப்படியேழுவித வாயுவாதார மேகபட்டணவர்த்தமானமிப்படியென்றறிக.

பின்னுமிதின்மேல்நூறுயோசனைதெசவாயுவாதாரமானமேகாசிரையம் ௧௦ இந்தபத்து மொன்றின்மேலொன்று யிருக்கும். இதில் முதலாவதான வாயுவாதாரமேகஸ்தானங் காசிபரிஷி கற்பிதத்திலேலே வேறே விருஷ்டி மின்னலுக்குக் காரணமான ௧௦ கோடிவாரிதரமான மேகமெப்படியெனில் அப்பிரகதளரேகைகள்போல அடுக்கடுக்கா யிருக்கிற மேகத்துக்குச் சுதந்தரமில்லாமல் வாயுவே நடப்பித்துக்கொண்டுவந்து முன்சொன்னபடி பூமிக்கு விருஷ்டி பெய்விக்கும் காலிபடலத்தைப்போலத் தேலித்துக்கொண்டு போய் முன்னிருந்த தானத்தில் நிறுத்தும் இந்தப்பிரதமஸ்தானத்தி லிருந்த வாரிதரமேக மானது பூமிக்குமேல் - ௧௦த -யோசனைக்குமேலாகவிருக்கும் அங்கே கொண்டுபோய் நிறுத்தும். இரண்டாவதானவாயுவதின்மேல் ௧௦த யோசனையிலிருந்து தன்னுதாரமான மேகத்திலே தூலகாயமான சேத வித்தியாதருங் கந்தருவரு மிருப்பார்கள். கந்தருவர் பூர்வசிருஷ்டியில் வந்தவர் தேவகந்தருவர் மத்தியலோக புண்ணியவசத்தாலான பேர். மனுஷகந்தருவர். பின்னுமதின்மேலே ௧௦த யோசனையில் மூன்றாவதானவாயுவாதார மேகஸ்தானத்திற் சத்தமாதாக்கள் உருத்திர கன்னிகைகளுஞ் சித்தபுருஷரும் - ௬௰ச - யோகினிகளு மிருக்கும். இவர்களை ஸ்தோத்திரம் பண்ணினாற் சகல கிரகபீடைகளும் விடுமென்றறிக.

பின்னு மிதின்மேல் - ௰த - யோசனைமேலே நான்காவதான வாயுவாதாரமேகஸ்தானத்திற் சர்வாயுதத்துடனுங் கூடியிரண பூமிக்குப் பொற்கட்டாயிந்தமாய் கணதேவதைகள் வெகுவாயிருக்கும். பின்னுமதின்மேலே-௰த யோசனையாக ஐந்தாவதான வாயுவாதாரமேகத்தி லிந்திரன் அயிராவத முதலான யானைகளிருக்கும், பின்னுமதின்மேலே - ௰த - யோசனையி லாறாவதானவாயு வாதாரமேகத்தி லோகேஸ்வர ரொருடனிருக்கும்பின்னு மதின்மேல் - ௰த - யோசனையில் ஏழாவதான வாயுவாதார மேகத்தில் தேவகங்காஜலம்-௰-லக்ஷம் யோசனைவிஸ்தாயிருந்த தன்னைக்கண்டபேர் நின்டினபேர் ஸ்நானஞ்செய்தபேருக்கெல்லாம்பாபக்ஷயம் பண்ணிப்பரம பாவனைபண்ணும்இதின்மேல்-௰த-யோசனையில் அஷ்டமாருதாதாரமான மேகஸ்தானத்திற் பிறமத கணங்களுடனேனந்திகேஸ்வர னிருக்கும். பின்னு மிதின்மேல் - ௰த யோசனையில் நவமாருதாதார மேகத்திலே தக்ஷப்பிர சாபதி யிருக்கும், இதின்மேனே சத்தமேகா சிரையத்திலிருக்கிறபேர் தேககாந்தியினாலே சந்திர சூரிய கிரணமேபேக்ஷை யில்லாமலெல்லா விஷயங்களுந் தெரியுமென்றறிக. பின்னுமதின்மேலே-௰த - யோசனையி லிருக்கிற தசவாயுவாதாரத்தில் மேக முன்சொன்ன வாயுமேகங்களுக்கு விமானஸ்தானமாய் ஆதாரமா யிருக்கும்.

இதின்மேற் சூரியன் புவலோக மிருக்கும இதில்மகேஸ்வரன் முதலான தவீரபத்திரன் முதலான ஏகாதசருத்திரர் அதிபூச்சியமா யிருப்பர். தாத்திராதியன் முதலான அஷ்டவசுக்களுந் துவாதசாதித்தியருமிருப்பார்கள். இந்தச்சூரியலோகம் பூமிக்குலக்ஷம் யோசனைமேலே யிருக்கும் இதிற்சூரியனிருக்கும் இவனது இரதமும் இரதோப கரணத்துடன் அந்தரத்திற் சிங்காசனத்தின்மேல் - தபிநி - வாஸநி- தமு-மரிசி-ஜ்வாலநி-ருசி-ஸுஷும்நை-போக்தா-விஸ்வா - போதிநி - தாரிநி-க்ஷமா-இப்படி - ௰௨ - கலையோடும் ஹேமகிரணம் - ௲௰ - உஷ்ணகிரணம் - ௲௰ - வருஷகிரணம் - ௲௰ம் பீஜப்ரமதாங்குரமான அமுர்தகிரணம்-௧-இப்படி ஆயிரங்கிரணத்தோடும் ௬௲த - யோசனை யுயரமும் - ௨௲த - யோசனையகலமு மண்டலமுங் கூடி - ௱௬௲த - யோசனை விசாலமு மாயிருக்கும். இதின்மேலே - ௨ - லக்ஷம் யோசனைமேல் சிரலோக மிருக்கும் இதிலிருக்கிறது தக்ஷாமுதலான ஏழுவிஸ்வதேவதை களுடனும் பிதுர்த்தேவதை களுடனும் சோடச அமுர்தகலையுடனும் தவளவர்ன சரீரமுடனுஞ் சகலௌஷாதிக்குமீஸ்வரனுஞ் சந்திரனிருப்பான். இவனது இரதத்தை-தூவன்-சம்பஹம் என்றும் வாயுவாகிற ரஜ்ஜுவைப்பிடித்து நடப்பிக்கும். முன்சொன்ன சூரியரதத்தையுந் துருவன் பிரவனென்கிற வாயுக் கயிற்றைப் பிடித்து நடப்பிக்கும் பின்னு மிதின்மேல் இலக்ஷம் யோசனைமேல் நக்ஷத்திர மண்டலமிருக்கும் இதின்மேல் துருவனிருக்கும் இவன்வீவக மென்கிற வாயுக்கயிற்றைப் பிடித்து நடப்பிக்கும், பின்னு மிதின்மேல் - ௨ - லக்ஷம் யோசனைமேல் பத்மராக மயமான செவ்வாயிருக்கும். பின்னு மிதின்மேல் - ௨ - லக்ஷம் யோசனை மேலேருங்கும வர்ணமான புதனிருக்கும். பின்னு மிதின்மேல் - ௨ - லக்ஷம் யோசனை மேலேதப்த காஞ்சனவர்ன முள்ள பிரகஸ்பதி யிருக்கும். பின்னு மிதின்மேல் - ௨ - லக்ஷம் யோசனைமேல் குந்தவர்ணமான சுக்கிரனிருக்கும். பின்னு மிதின்மேல் ௨ - லக்ஷம் யோசனைமேல் அஞ்சனவர்ணமான சனியிருக்கும். முன்சொன்ன சந்திர சூரியனல்லாமற் செவ்வாய் முதலேந்தையுந் துருவன் வராகவாயுக்கயிற்றைப் பிடித்து நடப்பிக்கும். இந்தச்சனி மண்டலத்திலே அஞ்சனவர்னமுந் தாம்பிரவர்னமுமான இராகுவுங்கேதுவுமிருக்கும். இதுகள் மேலிருக்கிற துருவன்பரிவகவாயுவாகிற கயிற்றைப்பிடித்து நடப்பிக்கும். முன்சொன்ன நவக்கிரகங்கள் விரிவுயரமாவது, இதிற்சூரியமண்டலம்-௱௨௬த-யோசனையாகையாற் சந்திரமண்டலம் இதில் இருமடியாகிய - ௨௰௨த - யோசனையகலமாயிருக்கும். இவர்களிருவருக்குங் கூடின விசாலம் - ௬௭அத - யோசனையகலமாயிராகு மண்டலமிருக்கும். இனிமுன்சந்திரன் சோடசாங்கஞ் சுக்கிரன் மண்டலவகலம். இந்தச்சுக்கிரனில் நாலிலொன்றுதள்ளி மற்ற மூன்றுபங்கினகலம் பிரகஸ்பதி மண்டலம். இந்தப்பிரகஸ்பதியிற்காற்பங்கு தள்ளிமற்ற முக்காற் பங்கின்விரிவு சனி மண்டலம் சனிமண்டலத் துக்குச்சரி அங்காரகன் மண்டலவகலம் இதின்முக்கால பங்கு - புதன்மண்டல வகலம் இதற்குச் சமானம் நக்ஷத்திர மண்டலவகலம் இந்தநக்ஷத்திர மண்டலங்கள்

விரிவு - ௩அ௰ - ௫௰ - யிந்தப்பிரகார யோசனைகளாயிருக்கு மிதற்குக் குறையில்லாமல் புவலோகம் - ௰௫ - லக்ஷம் யோசனையு முடிந்ததென்றறிக.

இப்பாற் சுரலோகமாவது, முன்சொன்ன சனிக்குமேல் - அ௰௫ - லக்ஷம் யோசனை யுயரத்திலிருக்கும். இனிச் சனிமண்டலத்துக்குமேல் - ௨ - லக்ஷம் யோசனை மேலேமரீசி - அத்திரி - அங்கிரஸ - புலத்திய - புலக்கிருது - வஸிஷ்ட - இந்தச்சத்தரிஷி மண்டலமிருக்கும். இப்படி பூலோகத்தின் மேற்புவலோக முதலாய் சத்தரிஷி மண்டலபரியந்தமு மாருதாதார மேகாசிரைய மாயிருக்கும் இனிஏழுரிஷிகள் மண்டலமுதல் மேற்சொல்லப்போகிற உருத்திரலோக பரியந்தமு முள்ளஸ்தானங்க ளெல்லா மவனுதார மென்றறியவும் பின்னுஞ் சத்தரிஷி மண்டலத்தின்மேலே லக்ஷம் யோசனைமேற் சிஞ்சுமார சக்கரமிருக்கும். அந்தச் சிஞ்சுமாரன் முதலையாகாரமாய்த் தர்ம சொரூபனுகையால் மகாவிருஷ்ண வேஸ்வரனுமவன். இவன்சிரசு முதல் அவயவங் களிலே யீஸ்வரன் முதற்சர்வ தேவதைகளு மிருக்குமென்றறிக. இதின்மேலிரண்டு லக்ஷம் யோசனைமேலே தேவேந்திரன் சகலமுனீஸ்வரர் சகலரிஷிகள் சகல தேவதைகள் இவர்கள் முதலானபேர் சேவிக்கச் சகலவைபவத்துடனுமிருப்பான் இவனைச்சூழ விருக்கிற தேவதைகள் அசானதேவதை யென்றுங் கன்மதேவதை யென்று மிரண்டுவிதமாம். இதிற்சிருஷ்டிப்பின் ஆரம்பத்திலந்தப்பதவி யுண்டானவர் அசானதேவர் - பின்புமனுஷ ரஸ்வமேதயாக முதலான நிஷ்டாகன்ம தன்மங்கள் சாதித்தபேர் கன்மதேவதைகள் மகாசுகத்திலிருப்பார்கள் ஆகச்சுரலோகம் - அ௫ - லக்ஷமும் வகையெழுதில் விரிவென்று தொகையாகச் சொன்னதென்றறிக. இனியிதின்மேல் - ௨ - கோடியோசனை மகாலோக மிருக்கும் இதில் மார்க்கண்ட மகாமுனி யதிபதியாய் மரீசிமுதல் முனீஸ்வரருஞ் சிவபூசகராய் நித்தியராயிருப்பார். இதின்மேலெட்டுக் கோடியோசனை ஜனலோக மிருக்கும் இதில்வசிஷ்டர் முனீஸ்வராதிபதியாய் பிதுர்ஜனங் களுடனே கூடியிருந்து தபஞ்செய்வார். அந்தரிஷிகள்புத்திர பிதாமகுலான பேர்பூலோகத்திற் பிராமணருக்குக் கோத்திரங்களாகையா லதைப்பிதுர் லோகமென்றுஞ்சொல்வாரென்றறிக. இனியிதின்மேல் - ௧௨ - கோடியோசனை தபலோக மிருக்கும் இதிற்பிர்மா மனதிற் பிறந்தபேர்சனக-சனந்த-சனாதன-சனச்சுசாத - சனற்குமார ராசிற-௫ - பிரமரிஷிகள் அதிபதியாயோக நிஷ்டாபரரா யிருப்பார்கள். இனியிதின்மேல் - ௧௬ கோடியோசனை மேல் சத்தியலோக மிருக்கும். இதில்ரஜோகுண முள்ளசிருஷ்டிகர்த்தாவான பிர்மாவதிபதியா யிருப்பார். இதில்நாலுவித தேவதைகளுமுண்டா யனந்தபரம் பரைச்சிருஷ்டியு முடைத்தாயிருப்பார். இவர்சதுர்முகமுஞ் சரஸ்வதியும் வேதபுருஷர்மரீசி முதலானவைப்பிர்மாவுடனும் பின்னுமிந்தப் பிர்மாவுக்கு - ௬௬ - சித்தர்கள் - ௬௬ - சித்தியும் வல்லபேருடனு மிவர்கள் பஞ்சபூதம் மனேபுத்தியாய்காரம் இவ்வெட்டையும் ஒவ்வொன்றாய்ச் செயித்துத் தங்கள் வழித்தாகச் செய்துக்கொண்டு ஒன்றுக்கெட்டாக அங்கப்பகத்தின் [illegible]

பிர்மாநந்தமானதேவதைகளிருப்பார். இனிப்பிரகிர்திமுதல் செயித்தவிஷ்ணுவாதிகள் சித்திகளைச் சொல்லிமுடியாது இவருடைய சிருஷ்டிகளைச் சொல்லில் விரிவாமென்றறிக.

இனியிந்தச் சத்தியலோகத்தின்மேல் - ௪ - கோடியோசனை தூரத்தில் வைகுண்டமிருக்கும் அதில் விஷ்ணு அந்தரங்கதாமசமும் பகிரங்க சாத்மீகமுமுண்டாய் மூன்றுதொழிலுக்குங் கர்த்தாவாய் இலட்சுமியுடனே அனிருத்த-ருக்குமாங்கத-சங்கருஷ்ண பிரத்தியமம்இவர்கள் முதலானபேர் நீலவர்னசரீரமுஞ் சர்வாயுத சர்வசோபித சர்வாலங்காரத் துடனும் ஞானசத்தி பல அயிஸ்வரிய தேஜோவீரிய மென்கிற வைஷ்ணவோக்தசகிதனாய் மச்ச கூர்ம - வராக - நாரசிங்க - வாமன - பிருகுராம - ரகுராம - பலராம - கிருஷ்ண - கலிக - இப்படித்தசாவதாரயுக்தனாய் அனிருத்தருக்குமாங்கத - பிரகலாத - நாரத - பராசர - புண்டரீக - வியாச அம்பரிஷ - சுக - சௌநக - பீஷ்ம- தாலப்பிய - அர்ச்சுன - வசிஷ்ட - பலி - விபீஷண - கசேந்திர - அக்குரூர - முசுகுந்த - குசேல - உத்தவ - துருவாதிபரமபாகவதத்தேகனாய்ப்பிர்மாதிகள் சேவிக்க வைகுண்டத்தி லிருப்பார். இனியிதின்மேலொரு கோடியோசனை யதில் கந்தசுவாமிலோகமிருக்கும். இதற்கோடியோசனைமேலே மாலோரும்பனிருக்கும் இதற்குகோடி யோசனைமேல்காமதேனுவிருக்கும்.இதின்மேல் - ௩ - கோடியோசனையில் ஜோதிமயமாயும் முத்தித்தானமாயும் உருத்திரலோக மிருக்கும் இதுகயிலாய மென்று பெயராய்ச் சர்வாலங்காரமாயிருக்கும் இதிலந்தரங் கத்திலே சத்துவகுணமும் பாயரங்கத்திலே தாமசத்துணமுங்கூடி மூன்றுதொழிலு முருத்திரன் செய்வான். இவர்சர்வாயுத சர்வசோபிதத் துடனுமிருப்பார். இதின்மேற் கடாகாந்தம் ஒருகோடியோசனையிதின்முறைகை பூலோகமுடிந்த பிறகுபுவலோக லக்ஷம் - ௧0 - சுவலோக லக்ஷம் - ௯0 - ஆகவிரண்டுங் கோடி - ௧ - மகாலோகங்கோடி - ௨ - சனலோகங்கோடி - ௮ - தபலோகம் - ௧௨ - சத்தியலோகம் - ௧௬ - வைகுண்டம் - ௪ - ஷண்முகன் - ௧ - மாலோரும்பன் - ௧ - காமதேனு - ௧ - உருத்திரன் - ௩-கடாகாந்தம் - ௧ - ஆகமேலோகங்கோடி - ௫0 - கீழுலகங்கோடி - ௫0 - ஆகநூறுகோடி யுயரமும் நூறுகோடியகலமுஞ் சொல்லியொரு அண்டலக்ஷணம் முடிந்ததென்றறிக.

இனியிந்தப்பிர்மாண்டத்தின் மேலே வலையாகார ஞ்ணியி லிருக்கிற பிறதேசத்திலே - ௩௨ - கோடி யோசனை யகலங்களமுள்ளதா யிருக்கிறசிவலோகமிருக்கும் அதுஜோதி மயமான கோட்டை - ௩௨ - கோடி விஸ்தாரமாயெட்டுவாசலுமாயிதில்வாசற்காக்கிற மகாவீரானவயிரவரிற் கிழக்குவாசலிற்றனக்குச் சமானமான வெழுகோடி சேவகருஞ்சர்வாயுதசர்வாலங்காரத் துடனுந்திரிசூலாங்க வயிரவனிருப்பார். பின்னுந்தனக்குச் சமானமான ௧௬ - கோடிசேவகருடனே சத்தியாயனமாய் ஆயுதங்களலங் காரங்களுடனுங்கூடி அக்கினிதிக்கு வாசலில்-ருரு-வயிரவனிருப்பார். பின்னுந்தனக்குச்

சமானமான - ௫ - கோடிசேவகருஞ் சத்தியவாகனம் ஆயுதவலங் காரத்துடனுங் கூடி யமன்றிசையிலிருப்பார். பின்னுந்தனக்குச் சமானமான - ௫ கோடிசேவகருஞ் சத்திவாகன ஆயுதவலங் காரத்துடனுங் கூடி நிருதிவாசலிலே குரோதவயிரவ னிருப்பார். பின்னுந் தனக்குச் சமானமான - ௬ - கோடிசேவகருஞ் சத்தியவாகன வாயுதவலங்காரத் துடனுங்கூடிமேற்கு வாசலிலே உன்மத்தவயிரவனிருப்பார். பின்னுந்தனக்குச் சமானமான - ௩ - கோடிசேவகருஞ் சத்திவாகன ஆயுதவலங்காரத் துடனுங்கூடி வாயுவாசலிற் பாலவயிரவ னிருப்பார் பின்னுந் தனக்குச் சமானமான - ௧௨ - கோடிசேவகருஞ்சத்திவாகன ஆயுதவலங்காரத் துடனுங்கூடி வடக்குவாசலில் வீஷ்ணவயிரவனிருப்பார். பின்னுந் தனக்குச் சமானமான - அ - கோடிசேவ கருடனே யீசானவாசலிற் சங்காரவயிரவனிருப்பர். இப்படி யஷ்டவயிரவர் காத்திருப்பார். அந்தப்பட்டண வர்ணனையெல்லாம் அதிவிசித்திரங்களா யாச்சரியமாயிருக்கும் இதுவிரிவா மென்றறிக. இந்தக் கோட்டைக்குள்ளான பட்டணத்தினடுவே மகேஸ்வரன் அரண்மனை-௨௫-கோடியோசனை விசாலமாய்ச-வாசலிருக்கும். இதுஒவ்வொன்று லட்சம்யோசனைவிசாலமாய்க்கிழக்குவாசலில்-ச-அற்புதமானகூஷ்மாண்டகணேஸ்வரருடனே நந்திகேஸ்வரனிருப்பார். தெற்கில்அசங்கியாதிரோமஜகணேஸ்வரருடனே வீரேஸ்வரனிருப்பார். மேற்கில் அகணிதருத்திரருடனே நீலோகிதருத்திரனிருப்பார். வடக்கில்அபரிமித மித்திரகணங்களுடனே மகாகாளனிருப்பார். இந்தநாலுவாசலினடுவே யீஸ்வரசபாமண்டபம். இதினடுவே கோடிசூரியப்பிரகாசத்துக்கு மதிகமான லட்சம்யோசனை சிங்காசனமுண்டு. அதிலே சச்சிதானந்த பிரமமயமான சாம்பசிவன் சர்வாலங்காரத்துடனுங் கொலுவிருப்பார். இதல்லாமல் வேதாகம புராணங்களிலேசொல்லப்பட்ட சர்வதேவதைகளிலும் பிர்மவிஷ்ணு ருத்திரர் பெரியவர் இவரிலுமதிகமானபெரியவர் சாம்பசிவனென மஹேஸ்வரன் இதுவேதாகமத்திற்றீர்வானது. இப்படி அனந்தகோடி பிர்மாண்டமுண்டென்றறிக. பிருதிவிமுதல்பூதாண்டலட்சணம் ஸ்தூலபூதத்திற்பிருதிவியண்டம்-நூகோடியிலொருஅண்டம்வெகுசங்க்ஷேப மாகச்சொல்லிமுடித்ததென்றறிக. இந்தஆயிரகோடியண்டத்தையுமுட் கொண்டதுபிருதிவிபூதம் இந்தப்பிருதி பூதமுடிந்தவிடத்து வெளியாயிருக்கிறது பஞ்சீகரித்தபாதிபோகப்பாதிக் கேவலப்பிருதிவிபூதத்தில் இந்திராதி பத்துத்திக்கிலும் பிர்மாண்டரக்ஷகர் காபாலிமுதலானருத்திரர் இந்திரன்திக்கில்-௰-அக்கினிதிக்கில் யாமிமுதலானருத்திரர் -௧௦-யமன்திக்கில் யாமியாதிமுதலானருத்திரர்-௰-நிருதிதிக்கில் நைபுதா முதலானருத்திரர்-௰-வருணதிக்கில்பல அதிபலமுதலான்ருத்திரர்-௰-வாயுதிக்கில் சீக்கிரலகுமுதலானருத்திரர்-௰-குபேரதிக்கில்கடாமகுடதாரி முதலானருத்திரர்-௰-யீசானதிக்கில்வித்தியா வித்தியாதரர்முதலானருத்திரர்-௰-பிர்மாண்டத்துக்குக்கீழோட்டில்அனந்தர் முதலானருத்திரர்-௰-மேலோட்டிற் சம்புமுதலானருத்திரர்-௰-இப்படிப் பத்துத்திக்கிலுமிருக்கிற நூறுபேருக்கும் வீரபத்திரன் பத்திரகாளியோடேகூடிப் பிருதிவியாதிகுட்சமபூதத்திலிருப்பார். இனிப்பின்னும் ஸ்தூலரூப பிருதிவிக்கு அப்

பால் பத்துப்பங்கதிகமா யாவரித்திருக்கிற அப்புதத்துவத்திலே அமரேசர் முதலான குய்யாஷ்டகரிருப்பார். பின்னும் அப்புதத்துவத்துக்கப்பால் பத்துபங்கதிகமாயாவரித்திருக்கிறஅக்கினிதத்துவத்தில் அரிச்சந்திரன்முதலான அதிகுய்யாஷ்டகரிருப்பார். பின்னுமிதற்கப்பாற் பத்துபங்கதிகமாயாவரித்த வாயுவிலேகயாமுதலான குய்யாகுய்ய அஷ்டகரிருப்பார். பின்னுமிதற்கப்பாற்பத்துபங்கதிகமாயாவரித்த ஆகாசத்தில் ஸ்திரபதாமுதலான பவித்திராஷ்டகரிருப்பார். பின்னுமிந்தவிதத்தில் முன்சொன்ன லோகாஷ்டகருடனேகூடிப் பஞ்சாஷ்டகரானவர்-சO-புவனபதிகளாயிருப்பார். இப்படிப் பஞ்சபூதாண்ட முடிந்ததென்றறிக. இனியிந்தஸ்தூலபூதமைந்துக்குங்காரணமான சூட்சுமபூதமாகிற தன்மாத்திரைக ளைந்துக்கு மிருக்கிறபேர்கள். மந்திரரூப ஸ-பாஹு-பாஸ்வரஸ்தூலவித்வ அஜேஸ்வரராகிய பஞ்சபூதபுவனபதிகளோடேகூடி கந்தரங்க ஜோதாபானு மந்தபலவத்தாஸ-முனாதிகளாகிற ஐந்து கந்தமுதலாயிருப்பார். இதுவு முன்சொன்ன ஸ்தூலாகாசத்துக்குமேல் ஒன்றொன்றுக்குப் பத்துபங்கதிகமாயிருக்குமென்றறிக. பின்னுமிந்தத் தன்மாத்திரைக்கப்பால் வாக்காதிகன்மேந்திரியம்-ரு-இதில்காலதேசுபிறங்களாகு ரௌத்ர ஜடில விசாலமாகிற பஞ்சபுவனபதிகளோடேகூடி-ரு-ருத்திரரிருப்பார். இதுவு முன்சொன்னதிலும் ஒன்றொன்றுக்குப்பத்துப்பங்கதிகமென்றறிக. பின்னுங் கன்மேந்திரியத்துக்கப்பாற் சோத்திராதிஞானேந்திரியம்-ரு-மனம்-க ஆகு-கூ-இதில்-கூ-புவன பதிகளோடேகூடி-கூ-ருத்திரரிருப்பார். இதுவுமுன்சொன்னதில் ஒன்றுக்கொன்று பத்துப்பங்கதிகமென்றறிக. இதற்குமேற்பத்துப்பங்கதிகமாயாவரித்துக் கொண்டிருக்கிற அகங்காரதத்துவத்தில் ஸ்தாணுவஷ்டகரிருப்பார். இந்தஅகங்காரத்துக்குமேற்பத்துப்பங்கதிகமான புத்திதத்துவத்தில் தேவாஷ்டகரிருப்பார். இந்தப் புத்திக்குமேற் பத்துப்பங்கதிகமானசித்தத்தில் யோகாஷ்டகரிருப்பார். இதின்மேற் பத்துப்பங்கதிகமான பிரகிருதியில் மகாதேவ அஷ்டகரிருப்பார். இதின்மேற் றசகுணாதிகமான புருஷதத்துவத்தில் மூன்றுருத்திரரிருப்பார். இப்படிப் பிருதிவிமுதல் புருஷதத்துவ மந்தமாகதத்துவம்-உரு-க்கு ஒன்றுக்கொன்று பத்துப்பங்கதிகமா யண்டங்களொன்றுக்கொன்று ஆயிரகோடி ஆயிரகோடி யண்டங்களிருக்கும். ஆனதொன்றுக்குப்பத்துப்பங்கதிகமாகயிரட்டிப்பாய்ப்போக அண்டங்கள் பிருதிவிமுதல்-உரு-க்கு சரியாவானேனென்னிலது ஒவ்வொருபூதத்திலிருக்கிற ஆயிரகோடி யண்டங்களுக்கும் ஒவ்வொரு அண்டங்களிலிருக்கிற-கஅ-லோகங்களுக்கும் ஒவ்வொரு அண்டங்களுக்குமே லொவ்வொருஅண்டங்கள் பத்துப்பங்கதிகமாயிருக்கும். ஆகையாலே பூதாண்டங்கள்சரி இப்பூதாண்டத்திலிருக்கிற அண்டங்கள்-உருத-தத்துவத்துக்கும் ஒவ்வொன்றுக்குப பப்பத்துப்பங்கதிகமென்றறிக. இப்பால்காலதத்துவஅண்டம். முன்சொன்னபுருஷதத்துவத்துக்கப்பால்பத்துபங்கதிகமான ராகதத்துவத்தில்-கஉ-ருத்திரரிருப்பார். இந்த ராகத்துக்கப்பால் ஆயிரம்பங்கதிகமான வித்தியாதத்துவத்தில் அங்குஷ்டமாத்திராகிற ருத்திரரிருப்பார். அவர்களுடனேகூடி சிகேர்-ஐ-ஆசாரியாகசகயிருப்பார். இந்த

வித்தியாதத்துவத்துக்கப்பால் இலக்ஷணமதிகமான நீதிதத்துவத்திலே சூலதரனென்கிற ருத்திரர்முதலான ஷோடசருத்திரருடனே ஸ்தாபகர்முதலான சிரபருத்திரரும் உசி மசி கிருஷிவாணி கியானதேவநிர்மாணமாகிற பஞ்சகிருத்தியநேயமுடையவராயிருப்பார். இந்தநீதிக்கப்பால் இலட்சகுணமாவரித்துக்கொண்டிருக்கிற காலதத்துவத்தில்-௧௯-ருத்திரரிருப்பார். இந்தக்காலத்துக்கப்பாற் பத்துலட்சம்பங்கதிகமாயிருக்கிற கலைதத்துவத்தில் அஷ்டருத்திரரிருப்பார். கலைக்கப்பாற் கோடிபங்கதிகமானமாயைதத்துவத்தில்அஷ்டருத்திரரிருப்பார். இந்தப்பிரகாரத்திற் பிருதிவிமுதல் மாயையந்தமாக-௩௧- தத்துவத்திலுமிருக்கிறருத்திரர்பேராலே அதிலதிலே புவனங்களிருக்கும் அந்தப்புவனங்கள் சங்கையில்லாமலிருக்கும். இந்தப்புவனங்களிலவரவருக்குக்கோட்டைகொத்தளந் தோப்புத்துரவு நதி நந்தவனம் மாடமாளிகைகோபுரப்பிராகாரமண்டபங்கள் கீதவாத்திய நிரத வனிதாதிபோகவிஷயமகைதைஸவரியம் யக்யந்தபோதானங்களும் யோகசமாதித்தியானங்களுந் துயங்களுடனுங் கூடியிருப்பார். இது ஊர்த்தலோகவர்ணனை அதோமாயாவிபரஞ்சொல்லி முடிந்ததென்றறிக. இனி ஊர்த்தமாயாதத்துவஞ்சொல்லுகிறோம். அதெப்படி முன்சொன்ன மாயைக்கப்பாற் பத்துகோடிபங்கு யோசனை யதிகமாயிருக்கிற சுத்தவித்தையாதத்துவத்திலேவாமஜ்யேஷ்டருத்ர ஸ்ரேஷ்ட ருத்ரகால கலவிகரண பலவிகரண பலப்ரமதன சர்வபூததமன மனோன்மனதிரிகுணி ப்ரம்மவேதாளஸதாணுமதி அம்பிகாரூபிணி நந்தி ஜ்வாலினி வித்தியாதிபதியென்கிற புவனங்களிருக்கும். இதில்-௨௮-ஆகமம் ஞானசத்தியாலே கிரியாசத்தி யனுகூலமான ஏழுகோடிமந்திரமும் -௫௧- மாத்துரிகாமூர்த்தி ருத்திரரும்-௫௧- சத்திகளுடனேகூடியிருப்பாரென்றறிக. பின்னுமிந்த வித்தியாதத்துவத்துக்கப்பால் நூறுகோடிபங்கதிகமாயிருக்கிற ஈஸ்வரத்திலே அனந்தசூட்சும சிவோதத்துவ ஏகருத்திர திரிமூர்த்தி சிரிகண்டசிகண்ட என்கிற புவனமிருக்கும் இதில் அஷ்டவித்தியேஸ்வரரிருப்பார்.அதில் அனந்தனென்கிறவன் அதோ மாயாக்ஷோபகனாயிருப்பான்.

மஹேஸ்வரன் சத்தியோடேகூடி-௨௫-அவதார பேதமெடுத்து லீலாவினோதனாயிருப்பான். இந்த ஈஸ்வரத்துக்கப்பால் ஆயிரகோடியோசனைபங்கதிகமானசதாசிவதத்துவத்தில்நிவர்த்தி பிரதிஷ்டை வித்தை சாந்தி சாந்தியாதீதை பவித்திராங்க சாதக்கிய தொனிபதியென்கிற புவனங்களிருக்கும். இதில் அணுச்சதாசிவரிருப்பர். இதில் மனோன்மனிசத்தியுடன்-௩௮- கலையுடனேகன் மசாதாக்கியமுதல்-௫-சாதாக்கியர் பேதமுடன்ஸகளநிஷ்களமான சதாசிவதேவரிருப்பர். பின்னுமிந்தச் சதாசிவ தத்துவத்துக்கப்பால் -௩௭- பங்கதிகமாய்ச்சத்திதத்துவமிருக்கும். இதில் இந்திகை தீபிகை ரோசிகை ரேசிகை ஊர்த்துவாகாமினி வியாமரூபி அனந்தி அநாசிருதை என்கிற புவனங்களிருக்கும் இதில் அபரமுத்தரான சிவிகளிருப்பார்கள். பின்னுமிதற்கப்பாற் சங்கையில்லாதயோசனையிற் சிவதத்துவமிருக்கும். இந்தச் சுத்ததத்துவங்களுக்குக்காரணமானவிந்துவாகிற மகாமாயையபண்டம். உட்கொண்டு சர்வவியாத்து

வமான சிரசத்தியிருக்கும். இந்தச்சத்தி பரமசிவனுக்குச்சரீரம். இந்திரியம்அந்தக் கரணமுதலானதெல்லாந்தானேயாய் அக்கினியுமுஷ்ணமும்போலுஞ் சூரியனுங் கிரணமும்போலுஞ் சந்திரனுங் கலையும்போலும் பரசிவனோடே தாதாத்மியமாயொன்றானதாலே அனேக சத்திகளாய்ப் பேர்கொண்டிருக்கு மிந்தச்சிற்சத்திமண்டல மத்தியத்திற் சற்குருசம்புலிங்கம் பிரகாசித்திருக்கும். பின்னுமிந்தப் பிரகாரத்தால் சொல்லப்பட்ட சகல தேகாதிவிஷய சீவர்களெல்லாங் காலாக்கினிமுதலான புவனங்களை யாசரித்துக்கொண்டிருக்கும். இப்படியிலக்கமில்லாத புவனங்கள் பஞ்சபூதத்தையாசரித்திருக்கும். இந்தப் பஞ்சபூதமுதலான-௩௬-தத்துவ புவனங்களும் நிவிர்த்தாதிகலைகளை யாசரித்திருக்கும். இந்தக்கலைகள் விந்துவையாசரித்திருக்கும். இந்த விந்துசிற்சத்தியை யாசரித்துக்கொண்டிருக்கும். இந்த சிற்சத்தி ஸ்ரீகுருவாகிற சம்புலிங்கநாமந்தரித்த பிரமத்தையாசரிக்கும். இந்தப் பிரமத்தை முன்சொன்னதெல்லா மாசரித்திருக்கும் தனக்கொரு ஆசிரையமுமில்லாமல்நிர்விகாரமாயிருக்கும். இது சுத்தபுவனதத்துவ நிர்ணயமென்றறிக. இதில் முன்சொன்னது பிருதிவிபூதம் ஆயிரகோடியண்டத்தி லொருவண்டம். இதைப் பஞ்சீகரித்தது தூலமானபிருதிவி ஆயிரகோடியுஞ்சூழும் இதை மற்றதைத்தூலமான நாலுபூதாண்டஞ்சூழும். இதைச்சூட்சும பூதாண்டமென்மேலு மொன்றையொன்றுஞ்சூழும் இதை பஞ்சதன்மாத்திரை அண்டஞ்சூழும். இதை வாக்காதியண்டஞ்சூழும். இதை சோத்திராதியண்டஞ்சூழும். இதை அந்தக்கரணநாலி னண்டஞ்சூழும். இதைக்காலதத்துவ வண்டஞ்சூழும். இதை மென்மேலுஞ்சூழ்ந்த-௩௧-தத்துவ அண்டமும் அதோமாயாசிருஷ்டியென்றறிக. இனிபூர்த்தமாயையிலுண்டான சிவமஞ்சினண்டம். முன்சொன்னமாயையண்டத்தைச்சூழ்ந்துகொண்டு ஒன்றையொன்றுசூழ்ந்திருக்கும். இந்த ஐந்தையு மகாமாயையண்டஞ்சூழும். இதைச் சிற்சத்தியண்டஞ்சூழும். இதைப்பரப்பிரமஞ்சூழும். இப்படிச்சூழ்ந்திருக்குமென்றறிக. இந்தப்பூகோளநிர்ணயம் விவேகசிந்தாமணியிலேசங்கேஷபமாய்த்தொகையாகச்சொன்னதென்றறிக.விரிவாகவறியவேண்டில்விவேகசிந்தாமணியிலறியவும். இதல்லாமல் திசக்கிறந்தியாகிற சாஸ்திரத்தில் ௨௫-தத்துவத்துக்கும் முன்சொன்னதுபோல் ஒன்றுக்கொன்று பத்துபங்கதிகமாய்ச்சொல்லிக் காலதத்துவமாறுக்கும் பிரகிருதியிலும் நூறுபங்கதிகம்இராகத்துக்கு இதிலும் நூறுபங்கதிகமாம். இதிலும் நூறுபங்கதிகம் நியதிக்கு இதிலும் நூறுபங்கதிகங்காலத்துக்கு இதிலும் இலட்சத்துபதினாயிரபங்கதிகங் கலைக்குஇதிலுங்கோடியும் பதினாயிரபங்கதிக மாயைக்கு இந்த ஆறுக்குமிப்படியாகும். இனிச் சுத்ததத்துவமைந்திற்குமாயையிலுங்கோடியும் பதினாயிரம்பங்கதிகஞ் சுத்தவித்தைக்கு மற்ற நாலுக்குஞ் சுத்தவித்தையிலுமொன்றுக்கொன்று இரட்டிப்பென்றறிக.

இனிப்பின்னொன்றில்-௨௪-தத்துவத்துக்கும்நூறு நூறு குணமதிகமென்றும் இனிபுருடன் இராகம் வித்தைநியதி யிந்த நாலுக்குமுன்சொன்னதுபோலென்றுங் காலத்துக்கு பதினாலாயிரம்பங்கதிகமென்றுங் கலைக்குக்

கோடிபங்கதிகமென்றும் மாலேமாயைக்குக்கோடியும் பதினாயிரம்பங் கதிகமென்றும் இனிச்சுத்தவித்தைமுதலேந்துக்கு மொன்றுக்கொன்று கோடியும் பதினாயிரம்பங்கதிகமென்றும் இப்படி முப்பத்தாறுக்குஞ்சொல்லுமென்றறிக.

பின்னுமொருசாத்திரத்திற் பிருதிவியின்கூறு நூறுகோடியோசனை துடங்கிற் பிரகிருதியீறுகதத்தத்துவம்-௨௫-க்கு ஒன்றுக்கொன்று பத்துகுணமதிகமென்றும், புருடன்முதல் மாயையளவு தத்துவமாறுக்கும் ஒன்றுக்கொன்று நூறுகுணமதிகமென்றும், இனிச்சுத்தவித்தை யீஸ்வரன் சதாசிவம் இந்தமூன்றுக்கும் இலட்சம்பங்கதிகமென்றுஞ், சத்திசிவமகாமாயையளவாக ஒன்றுக்கொன்று பத்துலட்சம்பங்கதிகமென்றும், இப்படி -௩௬-க்குஞ் சொல்லுமென்றறிக. பின்னுஞ் சகலாகமசிகாமணியில்-௧௪- லோகங்கூடினது. அண்டம் இதுநடுவே மேருகிரிசுற்றும் ஏழுதீவு மேழுசமுத்திரமும் மேலேழு கீழேழுலோகமுமெல்லாம் நூறுகோடியகல முயரமென்றும் இப்படி-௧௦௮-அண்டங்கூடினது ஒரு புவனமென்றும், இப்படி-௨௨௪-புவனமும் அதற்குள்ள வெகுஉருத்திரர்களுங்கூடினது. ஒரு பிரம்மாண்டம் இந்தப்பிரம்மாண்டத்துக்கும் அண்டகடாகமுதல் முன்னொரு அண்டத்துக்குச் சொன்னதெல்லாம் ஒன்றுங் குறையாமலுண்டென்றறிக.

இந்த அண்டம் வெகு உயர மகல மதிகமாயிருக்கும் மற்றதெல்லாமுன்னண்டத்துக்கொப்பாம். முன்சொன்ன தனு வண்டம்-௨-வதான பிரமாண்டம் இதைச்சூழ்வது, ௩-வதான சிவாண்டம் இதைச்சூழ்வது,௪-வதான சிறுபிரமாண்டம் இதைச்சூழ்வது, ௫-வதானசிற்பிரணவஅண்டம். இந்தஅண்டங்களுக்கெல்லாம்பெருமைக்குப்பெருமையாக உயரமு மகலமு முண்டாய் முன்பிருதிவி பூதத்திலொரு அண்டத்துக்குச்சொன்ன தெல்லா மிப்போது சொன்ன ஐந்து அண்டங்களுக்கு முண்டென்றறிக. இப்படிக்கொத்தஅண்டங்களுள்மூலசுவாமிக்கு ஒரு ரோமத்துவாரத்திலே யுண்டாகிறதும் இலயமாகிறதுமாகும்இவ்விரிவுஅனேகமுண்டிதைச் சகலாகம சிகாமணியிற் காண்க வேறொருசாத்திரத்தில் பிருதிவிபூத முயரமு மகலமும் லட்சங்கோடியோசனை கொண்டது ஒரு அண்டம் இவ்வண்டகடாகத்தின்கனஒருகோடி அப்பு உயரமகலம் பத்துலட்சங்கோடி பங்கதிகம் அதின் கடாகம் கனம் ௨ கோடி தேயு௨௦ லட்சங்கோடிபங்கதிகம்கடாககனம் ௩ கோடிவாயு ௩௦ லட்சங்கோடிபங்கதிகமாயிருக்கும் கடாககனம் ௪ கோடி. ஆகாசம் ௪௦ லட்சங் கோடியோசனைபங்கதிகமாயிருக்கும் அதின்கடாககனம் ௫ கோடி. யிந்தப்பூதாண்டங்கள் ஒன்றையே சூழ்ந்துகொண்டு ஒருஅண்டத்தினிலட்சணமெல்லாமுண்டாய் உயரமகலம் பங்கதிகமானதுபோல அண்டங்களும் பங்கதிகமாயிருக்குமிப்படிமற்றத் தத்துவங்களுக்கும் இலக்கம்வெகுவாய்ச்சங்கையில்லாமற் கூடும்.ஸ்தூலாண்டம் சூட்சுமாண்டம்அதிசூட்சுமாண்டங்களிருக்கு மென்றறிக. பின்னு மிதிற்பேதமாக பூதாண்டம் தேவாண்டம் மகாண்டம் அகிலாண்டம் சுவாண்டம் பகிரண்டம்பத்மாண்டம் ஆக ௭. அதில்பூலோகத்திலொரு அண்டத்தை உக ஆகச்சொல்லும் அது கீழேழு நடுவேழு மேலேழு ஆக உக. அண்டங்களினிலட்சணம் வெகுவிதாகையாகமுடிந்ததென்றறிக. இந்த அண்டங்களை யொருசாத்திரஞ்சொன்னதுபோல் எல்லாஞ் சொல்லாமல் ஏறக்குறையச் சொல்லுவா[illegible]னெனில் உகாந்தபேதங்களால்வந்த தென்றுகம புராணங்களெல்லாஞ் சொல்லுமென்றறிக.

## ௧௩-அத்தியாயம்.

## யோகசமூகம்.

௨௮. ஆதாரநிராதாரமீதானமெனமூன் றுமுயிர்களிறைவனடியடை
யுநெறியதுதா, னாதாரந்தத்துவமே தேவதைவடிவைத்தியானித்
ததுவதுவாய்நின்றவற்றின்பலன்களருந்துவதாய், மோதாருநி
ராதாரங் கருவியெலாமகன்றே - யுயிர்க்குயிராயோங்கொளி
யோடொழிவறநிற்பதுவா, மீதானமவ் வொளிக்கு முன்னொ
ளியாய்நின்ற விமலனுடனமலமறமேவுதலாம் விதியே.

என்பது- மூலாதாரமுதல் - ஆறுதாரமும் - பிரமசக்கரம் - சிகர சக்கரம் - பச்சிமசக்கரம்- அனுச்சக்கர மாகிய - ௯-ம் - இன்னும் -௧௧ - சக்கரமுண்டு ஆ - ௨௧-ம் - இஃதல்லாமல் - அஷ்டதள சக்கரமுண்டு - இவை - சோத்திரத்துவாரம் - ௨ - நேத்திரத்துவாரம்-௨- சிங்குவைத்துவாரம் -௧-அபரோக்ஷத்துவாரம்- ௧ -ஆ-அ-ம்-இவற்றிற்கு - முக்கமல அஷ்டதளசக்கர மென்றுபெயராம் - இதுவல்லாமல் - அஷ்டதளத்தைத் தீண்டியுந் தீண்டாமற்சதுர்த்தள முண்டு இதுவல்லாமலின்னு மனேகசக்கர பேதமுண்டு இவையெல்லாம் ஆறுதாரத்தி லடங்கும் இவ்வாறுதாரங் களுக்குதேவதை - பிரமாக்ஷரமுதலாயுள்ள பேதங்களை யெல்லாங் குருமுகமா யோகசாத்திரப்படியே - அந்தந்த யந்திர வெந்திரங்களறிந்து - அங்கங்கே நின்று தியானஞ்செய்து சமாதிகூடி - அந்தந்த தானத்தில் - சகுணதேவதை களையும் - பிரகாசங்களையுங்கண்டு - அந்தந்தபத முத்தியைப் பெறுவா னென்றறிக. சுஷுமா நாடித்துவாரப் பிரகாசமானால் தேகசித்தியும் அஷ்டமா சித்தியும்வரும் இவற்றிற்கு மந்திரயோக மென்றுபெயர் இதிற்பேதமான விலையை யோகஞ்செய்ய வெத்தனிக்கும்போது நாடிசுத்தி ஆதாரசுத்தி பிராணாயாம முதலியசாதனங்கள் செய்யவேண்டும் செய்யுமிடத்தில் இவைகள் சுத்தியானதற்குச் சோதனைகண்டவாறே முன்சொன்ன வாதாரதேவதை பிரசன்னமாகும்போது தசநாதமும் பிறக்கும் அதைதியானஞ் செய்து மனமிலயமானால் மனோலய மென்னலாம் இவற்றிற்கு இலயயோக மென்றுபெயர் இனிநிராதாரமாவது அன்னுவயவெதிரேகங்களால் நேதிநேதி செய்து அறிவித்தல் வேறுபடுதல் நித்தியமாக்கல் சொரூபநிச்சயம் பண்ணல் இவற்றால் தத்துவங்களை வெருக்கி சமாதிபொருந்தி குருவால் தன்னைக்கண்டு தானுந் தனக்குயிராயிருக்கஅருளைக்கூடுவதாம்இனிமீதான மென்றது இவ்வருளுக்கும் உள்ளொளியா யுயிராய் நின்றசிவத்துடனே பஞ்சமலமு நீங்கி தானவனென்கிறதில்லாமற் கூடுவது விதியென்றறிக.

௨௯. ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று
மீதானத்தே செல்லவுந்திபெற, விமலர்க்கிட மென்றுந்திபெற

௩௰. காற்றினைமாற்றிக்கருத்தைக் கருத்தினி,லாற்றுவதாற்றலென் றுந்தீபெற,அல்லாத தல்லவென்றுந்தீபெற.

இனியோகங்கள்அனேகமுண்டுஅவைகளில்நிர்வாணயோகமாவது முன் சொன்னமந்திர இலய அட இராஜவென்றுநான்காம் இதில்மந்திரயோகமாவது ஆதாரங்களில் தியானஞ்செய்வது இலயயோக மாவது ஆதார யோகங்களைதியானஞ்செய்து ஏகசித்தனா யிருக்கையில் சதுர்த்தச நாதமுதலனேக நாதங்களுண்டாம் அது எதினாலென்னில் முன்னாதார யோகஞ் செய்யும் போது ஆதாரசுத்தி நாடிசுத்திகளாக்கிக் கொள்ளுகையால் நாதங்களும் பிறந்து நித்ததெரிசன முங்கண்டு மனோலய மாவதென்றறிக. இம்மந்திரவிலயமாகிய விரண்டும் முன்சொன்ன ஆதாரயோகத்தி லடங்கும் இனிஅடயோகமாவதுஇயம நியம ஆசன பிராணாயாம பிரத்தியாகார தாரணை தியானசமாதியென்று -அ-ம் - இதில் இயமயோகமாவது மனோவாக்கு காயத்தால்வரும் அவையாவன வாக்கில் மிருதுவான வசனமுதலான சற்பாவனைகள் தேகத்தில் அசுசிதோன்றாமற் சுத்திசெய்வது மனஞ்சஞ்சல மில்லாமற் சுசிற்றூபனாய் ஞானமுண்டாவது இவற்றைத் தசமாகக்கூறுவாரு முளர் அவையாவன தூய்மை அருள் ஊண்சுருங்கல் பொறை செவ்வை வாய்மை நிலைமை இவ்வேழையுங் கொள்ளவேண்டும் காமங்கொலை களவு ஆகிய மூன்றையுந் தள்ளவேண்டும்.

௩௧. அவற்றினுட்டூய்மையாவதுமனோ வாக்குக்காய
மவற்றினானூன்றாகுமநுமனத்தூய்மைஞானங்
கவற்றிசேர்வாக்கின்றூய்மைக்குறுதவாய்மையினுற்காயக
வற்றிசேர்காயத்தூய்மைக் கவந்தத்தால் மூழ்கலானே.

ஞானமடைதற்கு விரோதமான உலகத்தை யனித்திய மென்றும் அசுசியென்றும் நீக்கி சுசிற்றூபனாய் நடப்பது தூய்மை யென்றறிக. அருளாவது நெளிவு ஊர்வு முதலான சீவராசி களிடத்தில் பூதயை யோடிருப்பது.

௩௨. தன்னுயிர்க் கினியனாதன்மைபோற் பிறவுயிர்க்கு
நன்னிலத்தருடான்கூடி நட்டலி லெய்திக்காத்தல்

இந்தசீவாரசிகளுக்கெல்லாம் அருளைத்தவிர வசைகளில் தாதலால் அருட்சொருபமாய் நோக்கல்வேண்டும். ஊண்சுருங்கலாவது காமக்குரோதாதியெழும்பாமற் சகலபதார்த்தங்களிலும் ஆசையற்று அளவாயிருந்து ஆகாரம்புசித்தல். ஆனால் தேகத்தின் வலிகுன்றுமே யென்றால் சமாதியப்பியாசமேதேகவலிவென்றறிக.

௩௩. அற்புதமானயோகிக் கானகாமாதி யல்லாய், டிப்படையைக்குட்க்கம் படர்ந்திடா வகையிய பார்க்கி, லுற்பவுறுக்காருயதிற்குசமாதியோகத் திற்பயின்றிடால் காயபலமேயன விசைத்தாங் காளடி.

ஊண்சுருங்கலாவது அந்தக்கரணவிந்திரியத்தாலானவிஷயப்புசிப்பை வாயுவாகிற கும்பகத்தில் சுருங்கச் செய்வது. பொறையாவது நமதுகருமத் துக்கீடாக சிவனூட்டுவிக்கிறானென்றுபூமி போற்கோபமெழவொட்டாமலி ருப்பது. இதுவன்றியெந்நேரமும் வாதிக்கிற தேகாதி விஷயங் களிற் பொருந்திகோப மெழாமல் சிவன் பிரேரகத்தால் வருகிறது நம்மால் இல்லா தென்று சிவனுக்கு முறையீடாகிற ஞானசமாதி யாசனத்திற் பொருந்துவ து. செவ்வையாவது மித்துருக்களையுஞ் சத்துருக்களையும் ஒன்றாய்க் காண்ப தும் தன்னுயிர்க்கு அழிவுவந்த போதினும் பொய்சொல்லாமை யாம்.

௧௪. யாவர்க்கு நடுவணாகி நிற்றன்ன செவ்வை நாட்டி
தேவுற்றவாசவன்றன் செல்வமே பெறினுமல்லாப்
பூவற்கங்கனக வெற்பேபெறினும்பொய்சொல்லாறுதல்
பாவத்தையறுக்கும்யோகப்படரொளிசுடருருய்க்கும்,

இதுவும் பொறையுடைமையாம் இதாவயிதங்கள் செய்கிறதத்துவங்கள் கன்மங்களாகிற சத்துருக்களையுந் தாய்தகப்பன் போல்இரக்ஷிக்கிறவருளையு மொன்றாய்க்காண்பது. அதெப்படி யென்றால்அருள்பிரேரிக்காமல் தத்துவ ம் நம்மைவாதிக்க மாட்டாது தத்துவமில்லாமலருள்ரக்ஷிக்கமாட்டாதென்றி ரண்டையுஞ் சமனாகக்காண்பதென்றறிக. வாய்மையாவதுகடினங் குதற்க ம்திமை விரோதமில்லாமல் மிர்துவாகச்சொல்வது, ஞானத்திற்கு அன்னிய மானதெய்வங்களைவிட்டு பிரமமே தெய்வமென்பது.

௧௫. சந்தரிற்சவாது பூசித்தாளினை சிரத்திற்றாங்க
வந்தனைசெய்தல்போலுமற்றுடல்மடிகைக்கொண்டே
நொந்தனசெயினுந்தான்றனிலையைவீடாதுநோக்கன்
முந்தொருதொழிலினீட்டநிலைமைவாய்முத்தியாமே.

இவ்வேழையும் விடாமற் சாதித்தாலிதுவே ஞானத்திற்கும் தருமத்திற் குஞ் சகாயமாகும். இனிக்காமத்தை விடுவது அரிவையரின்பங் கொள்ளாம ல்பிரமசாரியன்சாதிப்பது. தத்துவக் கூட்டமாயுள்ள ஸ்திரிகளைச்சேராமற்பி ரமத்தோ டொன்று பட்டிருப்பது. இனிக்கொலைவிடுவதாவதுசகலசீவராசிக ளையுங் கொல்லாம லிருப்பது. ஞானத்திற்கு தன்னையறிந்துபிறகுபற்பலவிவ காரத்திலும் மரணத்திலுந் தன்னைக்கொல்லா திருப்பது. இனிக்களவுவிடுவ தாவதுபிறர் பொருளைத்திருடாமலும் ஒருவர்க்கிதவஞ்சனையாய் நடந்துநட் பாகவே பொருள்கிரகிப்பதுங் களவாம். இனிஞானத்திற்கு தானல்லாதவுட ம்பைத் தானெனக் கொள்ளாமற் சிவனுடைமை யெனப்பார்ப்பது இப்படி யிம்மூன்றையும் விட்டுவிடுவதென்றறிக. இனிநியமயோகமாவது தபம் செ பம் சந்தோஷம் ஆஸ்திகம் தானம் விரதம் ந்தாந்த கேள்வி சிவபூசைமட நாணம் ௧௦ இதில்தவமாவது நோன்புவிரதங்களால் ஊனைச்சுருக்கிதேகசவு க்கியமில்லால்தெண்டிப்பது. ஞானத்தைக் காண்கிறவனூர் எனக்கெதினாற் பிறவிவந்தது முத்தியாவதெது இதையெனக் கறிவிப்பவர் ஆரென்று அழுத

கண்ணுஞ் சிந்தையுமாய் பிரபஞ்சந்தோன்றும விருப்பது. இனிச்ஜெபமாவது மந்திரந் தாரகம் சதுர்த்தி இரிஷிச்சந்தம்கீலகம் அதிதெய்வம் இதுமுதலானதுகளையுதடு தட்டஜெபிப்பது. சுவாசத்தோடு ஜெபிப்பது மனதசைய ஜெபிப்பது தேகத்திற் துடிதுடிப்புண்டான விடத்தில் மனத்தை நிறுத்தி ஜெபிப்பதுஞானத்திற்குசகலவிஷயங்களிலும்பிரமாற்பணமாக்குவது. இனிச்சந்தோஷமாவது மேற்சொல்லிய மந்திரங்களில் திருத்தியுண்டாவதுசந்தோஷமாம் ஞானத்திற்கு நிரந்தரஞ் சமாதிசெய்து பிரமாநந்தத்தில்சந்தோஷமாவதென்றறிக.

இனி ஆஸ்திகமாவது, வேதநெறியிலே புகுந்து மென்மேலும்ஞானமுண்டாக ஞானசமாதியில் மௌனஞ்சாதிப்பது.

௩௯௬. ஆத்திகாசாரம்பண்ணுமறைநெறியினைத்துமாய்ந்து
வாய்த்தவேதாந்தத்தாத்மவண்பரமுணர்ந்துபாத்தி
யோத்திரண்டொன்று யொன்றுமின்றியொண்சுவானுபூதி
காத்திரமுடனேகூடிக்கதியினைவிதியிற்காண்டல்.

இனித்தானமாவது மேற்பயனைக் கருதாமற்கொடுப்பது. ஞானத்திற்குப் பக்குவாத்மாக்களுக்குப் பயனைக் கருதாமல் ஞானத்தைக் கொடுப்பது. சிவவிரதமாவது - குருவினுடைய சித்தவிருத்தி யறிந்து அவருக்குச் சந்தோஷமாக ஏவல்செய்வது. ஞானத்திற்கு சுவானுபோகமாகிறகுரு சொரூபத்தில் சமாதி நிஷ்டை விரதஞ் சாதிப்பது.

௩௯௭. அவவிரதங்கள்வீட்டியாதியோடந்தமில்லாச்
சிவவிரதங்கள்பூண்டுசெல்கதிசேரநாடிப்
பவமுறைபாதகத்திற்படர்வுறுதரியபூசை
விவியோகத்தாம்சாமீபாதிகள்வேண்டலாகும்.

இனிச் சித்தாந்த கேள்வியாவது -திரிபதார்த்த நிர்ணயங்களையனுமானமில்லாமற் கேட்கிறது. ஞானத்துக்கு சிந்தினுடைய வந்தத்திலிருக்கிற பொருளிலே லயமாகிறது. இனிச்சிவபூசையாவது முன்சொன்னகிரியாவிதி அர்ச்சனைப்பிரகாரம் பூசிப்பது - ஞானத்துக்கு எல்லாத். திரவியங்களுமெல்லா வுபசாரங்களும் பூசிக்கிறவனுஞ் சிவனுடைமையென்று தெளிவது, இதல்லாமற் சிவனைச்சேரும் பூசைநால்வகை கிரியை யோகம் ஞானம் நேயம் ஆக. ச- இதில் வெகுரியாக மந்திரியாக பூசை கிரியாபூசை உள்ளொளியை நோக்கிப் பிரகாசங் காண்பது யோகபூசை உயிர்க்குயிராய் நின்ற பரத்தோடே யொன்றல் ஞானபூசை பாரம்பரமாகிற சிவனுட னேகமாகிறது நேய பூசை. ஆ ச-.இனி மதியாவது வேதவேதாந்தத்தை யாதரவுடனே கேட்பதும் படிப்பதும் ஞானத்துக்கு அதிற் சொல்லுகிற பொருளை யனுபவத்திலே காண்பது.

௩௯௮. அறிவில்லாச்சமையமெல்லாமசத்தெனவறிந்துநீங்கி
நெறியதொம்போதாந்தத்துள்ணிகழுமீனாந்தவத்தை

துறையினாற்சுத்தாவத்தைதேர்ந்ததுசிவன்முத்தி
மறையின்வாசகத்தாலுன்னிமருவன்மாமதியாரென்பார்

இனி. நாணமாவது. வேதமார்க்க மல்லாததில் மனமருவருத்து அதுசெய்ய நாணுகிறது ஞானத்துக்கு ஆறந்தமு மருவருத்து நிற்பது.

௩௯. சமையிகணியதிதானுந் தவமறைத்தவமேசெய்யுங்
கமையிலாநீசர்நீதியாவதுங்காமமாதி
சுவையதாகாரமெட்டுந்தொல்லுலகத்தோர்நீதித்
தவமதுகண்டுநாணித்தவிர்ந்தவைதணத்தருனே.

இப்படி நியமம் பத்து முடிந்த தென்றறிக.

இனி. ஆசன யோகமாவது.

௪0. எய்தியவியமமீரைந்தகின்றியே, மெய்திகழ்நியமமீரைந்தொடாதனம், பொய்தகாநூறுடனெட்டும்போற்றிடி, லையமில்தன்மமாமாதனத்ததாம்.

௪௧. ஆங்கதினறுபதுநாலுமத்திம, மோங்குநாலேழவையுணரிலுத்தம, மோங்குமீரைந்திவையுத்தமொத்தம, மாங்கவற்றதிகமாம்பதுமவாசனம்.

௪௨. ஆதனம்பகருங்காலையறைந்தவொண்ணூற்றுறத்தி
னேதியவருத்தியில்லாவுத்தமாதனங்களெட்டு
நீதியாஞ்சுவத்திபத்மகிரில்கோமுகியேவீரந்
தீதிலாச்சயனஞ்சிங்கந்தெண்டம்பத்திரமுமாமே.

௪௩. பத்திரங்கோமுகம்பங்கயங்கேசரி, சொத்திகம்வீரஞ்சுகாசனமோமொழு, முத்தமமாமூதுவாசனமெட்டெட்டு, பத்தொடுநூறுபல்வாசனங்களே.

௪௪. குயிலுஞ்சோத்திகங்கோமுகம்பங்கயம், பயிலும்வீரஞ்சிங்காசனம்பத்திர, மயலில்முத்தமயூரஞ்சுகாசன, முயருமாசனமொன்பதென்றோதினர்.

௪௫. பத்திரங்கோமுகம்பங்கேருகஞ்சிங்கஞ்
சொத்திகம்வீரஞ்சுகாதனம்—முத்த
மயிலாசனந்தண்டமாயோகியர்கள்
பயிலாசனங்களிவைபத்து.

௪௬. செவ்வேயுடலுங்கழுத்துஞ்சிரமுமுற
வெவ்வாதனத்தேயிருந்தவர்க்கும்—கைவந்து
வாதமுதனோய்நவியாமதியுடையோ
ராதனமென்பதது.

இனி. ஆதனம் கட்டுகிற வகைகளை விரிவுநூலிலே காண்க. இப்படி இயமநியம ஆசனமூன்றுஞ் சன்மார்க்கமான சம்சாரத்தி லாயினுந் துறவிலாயினும் அப்பியாசம் பண்ணுவது. இனி ஞானத்துக்கு ஆசனமாவது எங்கேயிருந்தாலும் விவகார விஷயத்திலு மனோசஞ்சல மற்று பிரம சொரூபமே யல்லாமல் வேறொன்றிலசையாதிருப்பதென்றறிக. இனி. மந்தம் மந்ததரபக்குவம் வந்தவன் நித்திய அனித்தியவஸ்துவிவேகமிகவமுத்திரார்த்த பரபோக சமதெமாதி சட்கசம்பத்திய மிதுமுதலான குணங்களுண்டானவன் சிவ பரவயிக்கம் வேண்டி யிதற்குப் பிராணாயாமம் பண்ணி வாயுவை நிறுத்திமொ லொழிந்து கருவிகரணங்க ளடங்கிச் சிவயோகத்துக்கு அங்கமாகப் பிராணாயாமமுதலைந்துயோகமும் பண்ணவேண்டுமென்றறிக.

இந்த ஐந்துயோகததின் விபரம்

சஎ. பிராணனையடக்கவேபிராணாயாமமாம், விராவியநால்வகைவி
ளம்பின்மற்றது, அராவியபிரத்தியாகாரமைந்ததோர், பராவு
றுதாரணையொருபதாகுமாம்.

சஅ. தியானமீரொட்டுளசெப்பும்யோகநூ,லயர்விலாத்தியானமதை
ந்துளாயிடு,மயர்வரைசமாதியொன்றேறிற்சிவனு, யயர்வுறு
பரனுமொன்றயிக்கமாமதாம்.

சகூ. ஆதலானூறுடனறுபதுநாலெனப்,பேதமாம்யோகமோரொட்
டின்பெற்றியின், போதசாதகத்திறும் பொற்றென்சித்தியா,
நீதிதேர்சமாதியானிகழுமுத்தியாம்.

இதின் அர்த்தம் பிராணாயாமம்-ச-பிரத்தியாகாரம் -௫-தியானம்-கூ-ம்௫. லமரும் சமாதிசிவ பரவயிக்கமாம் ஆகையால் இந்த விதங்களாலே-௱கூச-விதமாம் இப்படிப்பேதமானயோகம் அஷ்டாங்கத்திலடங்கும் இதுசித்தியாறுற் சமாதியாலே முத்தியா மென்றறிக. இதுகளெல்லாஞ்சொல்லில்விரிவாமென்று ஞானத்துக் கங்கமான மாத்திரமெடுத்துச் சங்க்ஷேபமாகச் சொல்வது இனி யிந்தப் பிராணாயாமமுதல் யோகம் பண்ணத்தொடங்கும்போது துறவுவேண்டும் அந்தத்துறவெப்படியென்னில்.

௫௰. மண்ணிலுந்தனத்திலுமனைக்குவாய்த்தநற்
பெண்ணிலுமகவிலும்பெரியபேரிலும்
துண்ணெனவிழைவினைத்துறந்ததூயரோ
விண்ணிலுமின்புடன்விளங்கிமேவுவார்.

இப்படி யேஷணாத் திரையங்களைவிட்டுத் தானிருந்த தலத்துக்கு அறுபதிங்காத மப்பாற் போயொரு ஏகாந்தத்தலஞ் சம்பாதித்து அவடத்திலே குகைகட்டவேண்டும்.

௫௧. அரவினுன்மற்றுமச்சமறவருவருப்புமின்றி
மரநிறைமலருமல்கமனிதர்கள்பலரும்வந்து
விரவிடாவெல்லைதன்னில் விரும்பியேகுகையுட்செய்து
திருவிளக்குடனேதீபஞ்சிறக்கவேகுகையுட்செய்க.

இந்தக் குகை யோகசாத்திரப் பிரமாணங்களிலே கட்டுவது, இனிக் குகையுட் புகத் துடங்கும்போது கெற்பத்திற் கருப்பற்றின நாள்முதல் குகைப் பிரவேச நாள்வரைக்குந் தேகத்திலே யூறியிருந்த உப்பு முதலான ஷடுருசிகளையும் யோகசாத்திரப்படியே உள்ளு அவுஷதங்கள் கொண்டு அதுகளையெல்லாம் மலத்தோடே கழித்துத் தேகத்தை நிஸசாரமாகச்சுத்திசெய்துக் கொண்டு பின்பு குகைப் பிரவேசமாய்ப் பின்பு காற்றுமழை பனி வெய்யில் மேலே படாமலுங் கண்ணாலே காணாமலுஞ் சஞ்சாரம் பண்ணாமலும் வெகுவசனம் பண்ணாமலுங் குகையிலிருந்து தேகத்தில் வெயர்வைகள் புறப்பட முன்சொன்ன ஆசனங்களைக்கட்டி ஒரு நிமிஷமானாலும் வெளியிலே சரியாமற் சவுசாதி மாத்திரங் காற்றுவெய்யில்மழையில்லாதவேளைபுறப்பட்டு இப்படியிருந்து பத்தியமாக நடப்பது.

௫௨. புளிங்கறிகைத்தல்புல்லுற்மரிசி
களிம்புறுசுண்ணப்புகடுகுல்வண
மிளைப்படுமெடல்மெனயினைவதிண்டிலாகா
வளம்படுயோகத்தைச்சாதிக்கும்வாதிக்கே.

௫௩. சாகைமிருகம் பிர்க்குத்தங்கொம்மட்டி, சோகைதருஞ்சு
ரைசொல்லிற்கதலி, பாகல்கருங்காய்புளிகீரிவைகொடு,தாகந்
தவிர்ப்போன்சடமாமசுத்தனே.

இது ஆதியான புசிப்புகளைவிட்டுப் பத்தியமாகநடந்து பிராணாயாமஞ் செய்யத்துடங்குவான். துடங்கும்போது ஆதாரசுத்தியாக ஆதாரங்களிலேநின்று தியானிக்கவேண்டும். அதெப்படி ஆதாரநிற்கிறநிலைகளறியவேண்டும்.

௫௪. நீங்கியேஷண்ணியெல்லாமிமிர்ந்துடனிடும்பார்க்கி
லோங்கிபபுலன்கள்பீடவுன்னார்வினையுள்ளேநேக்கி
வாங்கிமாருதத்தைநாசியுச்சியின்மலர்க்கணைற்றி
பாய்கொளிருராலக்கண்ணாலடைவுதாரம்பார்ப்பான்.

௫௫. நால்வரைவிரலிநெருக்கி நயந்துமூவலயஞ்செய்யக்
கோலமாய்வெளியுட்கொண்டகுற்பதுகுய்யாதார
மேலின்மூவிரல்வான்மெட்டில்விரலிரண்டரைக்களத்தை
சோல்லியெசெய்யவங்கிமண்டலந்திரிகோணமீதாம்.

௫௬. அரைவிரல் [illegible] மேல் வாரணத்தண்டாதாரத்
தொருவிரல் வெண்மைத்தாகியுயற்நிலைவிரற்ருப்
புளைபற வொளியினுமெல் பூரணித்துமின்னோ சிவன்
[illegible] ாதாரம்.

௫௭. மண்டலமாதவத்தின் வயிற்றினி லிரண்டுசுற்றிக்
குண்டலிகிடந்ததிந்தைக் கோலியே கீழுமேலு
மெண்டகவெழுபத்திரா யிரமெனு நாடியெல்லாங்
கண்டனமனைத்துமுள்ளே கலந்துகாற்றியங்குகின்ற.

௫௮. எழுந்துநேர் மூலத்துச்சி யெய்தலுமிதயாதார
முழங்கிபமுளரிச் செவ்விமொட்டெனப்புறப்பட்டங்கே
கொழுந்தென வெழுந்துமீதுகுறுகலுங்கபாலாதாரந்
தழைந்தவானதன்மேனுதந் தாரமாய்ச்சாணுயர்ந்து.

௫௯. அருளாமாயாதாரங்கட்ககத்துளானந்தச்சோதி
பரிணமித்துயர்ந்தபன்பாகின்றதுசுழினைபார்க்கின்
முரணிலாப்பிரமநாடிவைணவிமுத்திமார்க்கம்
சரணமாஞ்சுக்கமென்றுஞ்சாற்றுவரிதனைச்சான்றோர்.

௬0. உணர்த்தியவாதாரங்கட்குறைப்பர்பேர்மூலாதாரம
வணைக்கருஞ்சுவாதிட்டானம்வருமணிபூரகந்தா
னிணைப்பரும்விசுத்திமீதங்கிலங்கனுகதமோடாஞ்ஞை
தனைப்பில்வேதாகமங்க ளன்றிக்கவணர்க்கநல்லோர்

௬௧. அங்கியோட்ருக்கன்சோமனுகுமண்டலங்கண்மூன்று
யங்குறைசெய்வர்மூலம்விசுத்தியோடாஞ்ஞைதன்னை
யிங்குயராஞ்ஞைமேலிற்குண்டலிசிவமதென்பர்
பங்கமிலங்கிகீழிற்குண்டலிபவானியன்றே.

௬௨. பூங்கனலமுதமென்னப்பரன்பராசத்தியென்ன
வீங்கிருக்குண்டலிக்கவெழுந்துறப்புணர்ந்தவின்ப
மாங்கதேபரமாமர்தவனுபவஞ்சீவன்முத்தி
யீங்கிதாப்நாடிதாய்தாயியற்றுயோகத்தாலெய்தும்.

இப்படி யிந்தக்கவியினர்த்தங்களை யறிந்துகொண்டு அந்தந்த ஸ்தானங்களிலே மயிர்ப்பிரமாணமாகிலு மந்தஸ்தானங்கள் தப்பாமல் நன்றா யூன்றிப் பார்த்து வாயுவைக்கொண்டு நிறுத்தித் தியானித்து ஆதாரங்களிலே துன் மாம்ச மலங்களை வாயுவாலேபோக்கி ஆதார சுத்திபண்ணுவா னென்றறிக இப்படியாதார சுத்தியானபிறகு நாடிசுத்திபண்ண வேண்டும் அதற்குநாடியின் பெயராவது .

௬௩. இடையொடுபிங்கலைசுழுமுனைவாருணை, கடைபடகாந்தாரிநா
டலம்புடை, தடைசெய்பூடாவத்திசிங்கைசங்கினி, படிவுறு
மைசுகியகுருநன்குகு.

௬௪. விரவிடவதிவிசுவோதரியெனப், பரவியநாடியன்மூலதாருமா
ம், திரிவுறவதில்லிடைசேருபிங்கலை, வுரவியசுழுமுனைமூன்றுதி
யோதிலே.

இனி நாடியிருக்கிற நிலையாவது, எல்லா நாடிகளுக்கும் [illegible]மையமாயிருக்கும். இதிலிடை பிங்கலை தோன்றி யிடம்வல மாறி [illegible]பாலமுற்று இடைநாடி யிடது நாசியிலும், பிங்கலை வலது நாசியிலும் [illegible]க்கும். சுழிமுனை கபாலமுடிவாகத் தொட்டிருக்கும். காந்தாரி வலது கண்ணிலுஞ், சிங்குவை யிடதுகண்ணிலும், வலக்கன்னத்தி லலம்புஷையும், இடக்கன்னத்திற்புருஷையுங், குதத்திற்குருவும், இலிங்கத்திற் புகழியும், அஸ்வனி முகத்தின் மேலிருந்து சிரசுமட்டாய்ப் பற்றித்திரும்பி முதுகுதண்டிலுநிற்கும். இப்படி யிந்தத்தானங்களை யிந்தப்பத்து நாடியும்பற்றிநிற்கும். பின்னுமிதின் கூடப்பதினேழுநாடிக்குமுறையே பெயர் நிறங் கிரிகை தானம் நன்றுகச்சொல்வது. இனி மூலாதாரத்திலே பிருதிவிசம்பந்தமாகச்சூரியனிறம்போல மூலாதாரத்தின் முக்கோணத்தினடி யிரண்டு பாரிசத்திலுந் தோன்றிக் குண்டலி முதல் நாசிமட்டாக இடைபிங்கலை நாடியானது, வாயுவை யியக்கிஆக்கிராண விந்திரியங்களோடே வாசனைகளையறியும்.

இனியிதின்பிறகேபோ யக்கினிசம்பந்தமாகப்பால்நிறமானகாந்தாரிவலக்கண்ணையுஞ்சிங்குவையிடக்கண்ணையும்பற்றி ரூபங்களையறிவிக்கும். இவ்விரண்டின்பின்போய்ப் புருஷை, அலம்புஷை, யிவ்விரண்டும் பால் நிறமாய்வானின் சம்பந்தமா யிரண்டு செவித்துவாரங்களைப்பற்றி புள்ளோ ஓசைகளையுண்டாக்கி யிருக்கும். இனி யிடைக்கும் பிங்கலைக்கு முன்பாகப்போய்ச் சுக்கிலநாடி பொன்வர்ணமாய் நுதலைப்பற்றி யிராகத்தை யுண்டாக்கும். வாணியாகிற நாடிநீலநிறமாய் நாவைப்பற்றிச் சுவைகளைத் தெரியப்பண்ணும் இவ்விரண்டும் வாயு சம்பந்தமாம். இனிமுன்சொன்ன நாடிக்குமுன்னேபோய் நீலநிறமா யப்புவின்காரியமான விஸ்வோதரி பைசுனியென்கிறநாடி நாக்கைப்பற்றி யன்னபானங்களை விழுங்கையில் விழுங்குகிறசந்திலிருந்திரசங்களைப்பிரித்துதிப்பிலையவேருக்கிக்கிரிகித்த இரசங்களைத்தேகமுதல்-எ௨த-நாடி உரோமத்துவாரங்களிலும்பூரணிக்கப்பண்ணும். இனிகுருவாகிறநாடிவியோதரிக்கீழாகக் குய்யத்தைப்பற்றி வாயுவினால் குதத்துவாரத்தாலே மலத்தைக்கழிக்கும். புகழியென்கிற நாடி லிங்கத்திலிருந்து சுக்கிலத்தைப்பற்றித் தாதுக்களை யியக்கும். இது மதிநிறமாய்வாயுவினு லென்றறிக. இனி யிந்தவாயுவாலே விஷயஞ் செய்வித்து சுக்கிலத்தைக் கழிக்கும். வெள்ளை நிறமான வாரணநாடியாவது, இனி குய்யத்துனிப்படியைப்பற்றிக் குருநாடிக்கு முந்திய நாடி மூன்றையு நீங்கவு நெருங்கவுமில்லாமற் பிடித்திருக்கிற காக்கூரசிவனியென்கிற நாடியென்றறிக. இதுநீங்கி நெருங்காமல் விகசித முகசிதம் பண்ணும் வாயுவைக் கொண்டென்றறிக. இனிமுன்சொன்ன நாடிகளில்வாயுவெல்லாம் இடைநாடியில் புகுதாமற்பிடித்து நாபிவட்டமுங் குய்யமும்பற்றி மேற்கபாலமு முருவி ஆகாசமானவி யிவை யெல்லாநாடிகளுக்கும் பின்பாகப்போ யிருப்பது வீணாதண்டென்றறிக. இந்நாடிகள்-௧௭-நிலையை யறிந்து இந்நாடிகளிருந்த விடமெல்லாம் வாயுவைக்கொண்டு நாடி சுத்திபண்ணவேண்டும்நாடிகளெங்கெங்கே ஆதிபந்தமாய்நின்றதங்கங்கே வாயுக்களைப்

[illegible] உதராக்கினியுஞ் சுவிந்து [illegible] [illegible] கண்டவாறே நாடிசுத்தியானதென்றறிந்து [illegible]

இனி முத்திரைபேதமாவது, மாமுத்திரை, கபோமுத்திரை, ஒட்டியாணமுத்திரை, சலந்தர முத்திரை, மூலபெந்தம், இதில் மாமுத்திரையாவது

௬௯. கூடுமாமுத்திரைவலக்காலீட்டியிடக்கால்குதத்தமுத்தி
நீடுதாளுயிருகையாற்பிடித்துநாடிவளைத்துநிறைத்
தோடுபிராணன்றனைமாறிமாறிவிடுதலுலர்த்த
ஞடிசோதித்திடல்கூட்டலெனவேநவில்வார்நல்லறிவர்.

இனி கபோமுத்திரையாவது, நாக்கைக் கபாலத்துள் ளேற்றிப் புருவ நடுவில் திருஷ்டிகளை நிறுத்தி யிருப்பது.

இனி ஒட்டியாண முத்திரையாவது, வயறுறுதல், நாபிமலர்தலவு மினிலாதல், பிராண வாயுவை நிறுத்துவது. இனிச் சலந்தர முத்திரையாவது, வாயுவிறுலும், நரம்புகளாலு மிடற்றை யிறுக்கி யிருப்பது. மூலபந்தமாவது, குதியிரண்டாலும் யோனியை யிறுக்கிக் குதத்துவாரத்தை யுள்ளேவாங்கி அபானவாயுவை மேலேயேற்றிப் பிராணனுக்கெதிராக ஆகுஞ்சனஞ்செய்வது. இதுமுதலான அனேகமுத்திரைகளுண்டு. அந்த முத்திரைகளாலே அபானன் பிராணனைக் கூட்டுகிறதன் சோதிக்கிறதாக. இப்படி நாடிசுத்தியு முத்திரையு மறிந்தவுடனே பின்பு காலசக்கரம் [illegible] தையறிந்து ஆயுட்பிரமாணங்கண்டு சென்றது தள்ளிநின்றது பத்துவருஷமுண்டாயிருந்தாற் பிராணாயாமஞ் செய்யத்துடங்குவானென்றறிக.

௭௰. சாற்றியயோகசித்திதான்வருமளவுஞ்செல்ல
வாற்றவங்காயுவேண்டுமாதலாலதனையிங்
னேற்றியவகையேசோதித்தாயுவினெல்லைகண்டு
போற்றுகயோகமென்றேபுகன்றனமறைகணின்றே.

௭௧. மிக்கநல்யோகந்தன்னைச்செய்யுமவ்விரும்பினீரோ
மக்கவவ்வுடலினின்றுஞ்சாவிநீர்வழங்கிறும்போ
லுக்கவப்பிராணன்றானுமுயிர்நிலைகாலமென்னுஞ்
சக்கரத்தறியவேண்டுஞ்சக்கரத்தன்மைகேண்மோ.

இந்தக் காலச்சக்கரத்திலாயுட்பரிக்ஷையறிகிற விதத்தை -௩௮-ம் அத்தியாயத்திலே பார்த்துக்கொள்ளவும். முன்சொன்ன ஆதாரநிலை, ஆதாரசுத்தி, நாடியின்பேர், நாடிநிலை, நாடிசுத்தி, காலசக்கரம், இதுகளும் ஞானத்துக் கங்கமாயிருக்கும். இனிஞானத்துக்கு ஆதாரசுத்தியாவது, ஆதாரங்களைப்பாராமல் நிராதாரமாய் நிற்பது. இனிநாடிசுத்தியாவது, ஒருவிடத்திலும் நாடிகள்வழிபோகாமல் நிருவிகற்ப சமாதியா யிருப்பது. இனிக்கால சக்கரமாவது, நமக்குக் காலமேயில்லை யென்பது. இப்படியிதுகள் கைவந்தவாறே பிராணாயாமஞ் செய்யவேண்டும். அதெப்படி, இதற்குப்பந்தத் திரையங்க

இனி அபான வாயுவானது [illegible] [illegible]களிற் [illegible] மூலாக்கினியைப்பற்றி யிந்திரகோப நிறமா யிப்படி [illegible] புரு உபத்தம் பாதங் கரம் இதுகளிற் சரிக்கும்.பின்னும் [illegible] த்தோடே கூடிமூலாதாரத்தில் நின்று அபானவாயு [illegible] தும். இதை முன்பிரேசித்த மாத்திரையிற் பாதிமாத்திரை பூரித்து இப்படி யிடம் வலமாகச் சாதித்து ஏற்றியுமிறக்கியு மிப்படி தினமுஞ் செய்ய அபான வாயு ஜெயமாம். இதை முன்சொன்ன தானங்களிலே நிறுத்தி யிறக்கித்தி ரும்ப ஏற்றியிப்படித்திரும்பத் திரும்பச் செய்யச் செயிக்கும் இனிச்சமான வாயுவானது தொக்கிலுந் தேகமெல்லாங் கலந்து சந்துகளெல்லாம் புகுந்து வெண்மை நிறமாய்ப் பின்னும் இருதயத்திலும் நாபியிலும்போ யுதராக் கினியை யெழுப்பி நிற்குமென்றறிக.

இந்தச்சமான வாயுவை முன்சொன்ன விடங்கள் தோறுமனதைப் போக விட்டு அங்கங்கே நின்றவாயுவை வாங்கிக்கொண்டு போய்ப் பூரித்து வாமநாசியாலே யிரேசகத்தைப்பண்ணியிந்தவிரேசகமாத்திரைக் கிரட்டிப் பாகப்பூரித்து நாபியிலே வைத்து .வகாரபீசமானசமானனைத் திரும்பத்திரும் பஅந்தந்தத்தானங்களிலே யிறக்கியுமேற்றியு மிடம் வலம்வலமிடமாக விரேச கபூரகத்தைச்செய்து சமானனைஜெயமாமென்றறிக.

இனி யுதானவாயுவானது அனலாகாரமாய் ரகார பீசமுமுடைத்தா யுச் சந்தலைதுடங்கிப் பாதமந்தமாக நின்று திரும்பி [illegible] சிரசுதாலுகண் டமிருதயத்திலு நிற்கும். பின்னும் நாவினாலே புசிக்கப்பட்ட இரஸங்களை யெல்லாம் பலநாடிகளாலும் பிரித்துக்கொண்டு போய்ச் சரீர மெங்குங் கலப்பிக்கு மிந்த உதானவாயுவை முன்சொன்னவிடங்களான உச்சந்தலை து டங்கிப் பாதமட்டாகத் தேகமெல்லாம் பூரிக்கச் செய்து திரும்பச் சிரசு தா லு கண்ட மிருதயத்திலு மனதாலே யந்தவாயுவைக்கொண்டு அங்கங்கே நி றுத்தி யிறக்கி இப்படித் திரும்பத் திரும்பவிரேசகபூரகஞ் செய்யில் உதா னவாயுஜெயமாம். இதுவு மிடம் வலமாகச் சாதிப்பதென்றறிக. இனி வி யானவாயு விந்திர தனுசு நிறமாய் லகாரபீசமாய்த் தேகமெல்லாம் வியாபித் துத் தொக்குப் பரிசத்தைத் தோற்றுவித்து நிற்கும் இதையு முடம்பெல்லா ம் பூரிக்கப்பண்ணி யிதைச்சுருக்கி இருதயத்திலேவைப்பது. இப்படித் தி ரும்பத் திரும்ப விரேசித்துப்பூரித்து இருதயத்திலே வைக்க வியானவாயு ஜெயமென்றறிக. இனி முன்சொன்ன ஞானவாயுவைந்திற்குமேன்றின. க ன்மவாயு ரு. இதில் நாகவாயு வாந்தியும் விக்கலும் பண்ணும். கூர்மன் கண் ணி லிமைக்கொட்டும். கிருகரன் தும்மல் கொட்டாவிசெய்யும். தேவதத்தன் உடம்பை மீறி நிமிர்ந்திடப்பண்ணும். தனஞ்செயன்சிவன்விட்டுந் தான்உட ம்பை விடாமல் வீங்கி விரிவித்து உடலைத் தலையைப் பிளந்து போமென்ற றிக. இனி வயிரம்பன் முக்கியன் அந்தரியாமி சுவேதன் இந்நாலும் பொறி கள் முகம் பிருட்டம் பாதங்கள் ஹிதங்களிலிருந்து அந்தக்கரணங்கட்குச் சே ட்டை செய்யுமென்றறிக. முன்சொன்ன பத்துவாயுவும்பத்திந்திரியங்களை ப் பிரேரிக்கு மென்றறிக. இனி யிருதயத்திலே முன்சொன்ன உதான

வாயுவை யிருத்திப் பின்சொன்ன வாயுக்களையெல்லாம் இத்தோடே கூடக் கூட்டி யிதைக்கண்டத்திலுந் தாலுவிலும் ஆசையிலும் மூர்த்தினியிலும் எல்லாத்திலு நின்று நின்றெழுப்பிக்கொண்டுபோய்ச் சிரசினுள்ளே வைப்பதென்றறிக.

பின்பு சிரசினுள்ளே வைத்தவாயுவை யூர்த்துவ ஞானத்தாலே மேலெழும்படிக் கெழுப்பித் திரும்ப முந்த எழுப்பினபடியே யிறக்கிப் பிராணவாயுவுக் கிடமான இருதயத்திலே வைத்து முன்சொன்ன கன்ம வாயுவைந்தையும் வயிரம்பாதி வாயுநாலையும், அது வது முன்சொன்ன விடங்களி லிருக்கிற வாயுக்களையு மனதினாலேவாங்கியிருதயத்திலே வைத்து இப்படித் திரும்பத்திரும்ப வலமிடமாக விரேசக பூரகத்தைச் செய்து ஏற்றியுமிறக்கியுஞ்சாதிக்கப் பின்சொன்னவாயுக்களெல்லாஞ்செயமாமென்றறிக. இந்தவாயுக்களைச் செயிக்க நாசியை ஒருபக்கத்தை விரலாலே மூடி ஒருபக்கத்தாலே பூரித்துக் கும்பித்துப் பின்னொரு பக்கத்தாலே விட்டுப் பலநாளும் வாயுக்கள் செயமாகிற பரியந்தமு மெல்லா வாயுக்களையு மிப்படிச் சாதிக்கவென்றறிக. இதல்லாமலும் பின்னொருவிதம் தலையுங் கழுத்து முடம்புந்தளராதே தெண்டுபோலச் செம்மையாயிருந்து வாயைமூடிக் கண்களை மூக்கிநுனிமேலே முகிழ்த்துப் புலன்களையடக்கி யுண்ணாக்கின் புரையிலே நாக்கிநுனியை யேற்றி எயிறூ டெயிறொன்றும் லாசனத்திலிருந்து மூன்றுவகைப் பிராணாயாமஞ் செய்வன். அதெப்படி புருவமத்தியத்திலே நோக்கென்னேரமுண்டோ, அன்னேரம் வாயு நிற்கு மன்னேரமு மனது நிற்கும். இனிமாத்திரையாவது, கண்ணிமைப்பு இப்படி -௧௨- மாத்திரை பூரிக்கிறது இரேசகம்-௨௪-கும்பகம்-௭௨-இப்படிச்சாதிப்பது இதெல்லாம் பிரயாசமானால் எளிதுமீலவாயுச்செயமாகவு மெங்கெங்கே யிருக்கிற வாயுக்களை யங்கங்கே கூட்டவுங்கேவல கும்பமென்றொன்றுண்டு. அதைக் குருமுகமாக வறிந்து ஏற்றியுமிறக்கியுங் கும்பித்தும் வாயு வெளிப்படாமற் பண்ணலா மென்றறிக.

௭௨. இட்டதவ்வீடிளகாதிரேசித்துப், புட்டிப்படத்தசநாடியும்பூரித்துக்,கொட்டியபிராணனபானனுங்கும்பித்து, நட்டமிருக்க நமனில்லைதானே.

௭௩. ஏற்றியிறக்கியிருகாலும்பூரிக்கும், காற்றைப்பிடிக்குங்கணக்கறிவாரில்லைக், காற்றைப்பிடிக்குங் கணக்கறிவாளர்க்குக், கூற்றையுதைக்குங்குறியதுவாமே.

௭௪. ஈராறுகால்கொண்டெழுந்தபுரவியை, பேராமற்கட்டிப்பெரிதுணவல்லிரேல், நீராயிரமுநிலமாயிரத்தாண்டும், பேராதுகாயம்பிரானந்தியாணையே.

௭௫. புறப்பட்டுப்புக்குதிரிகின்றவாயுவை, நெறிப்படவுள்ளேநின்மலமாக்கில், உறுப்புச்சிவந்துரோமங்கறுத்திடும், புறப்பட்டுப்போகான்புரிசடையோனே.

பின்னுமொருவிதமாத்திரை.

௭௬. இந்தமாத்திரைதனக்களவினையியம்பிடிற்
சிந்தனைதுடிப்பதாந்துடியோர்நால்சென்றதேல்
முந்தையோர்நொடிப்பதாநொடியோர்மாத்திரையதா
மந்தமாத்திரையதுமூன்றுவாயுவென்றதாம்.

இப்படி நொடிமூன்று கொண்டது ஒருவாயு இபபடி ௬0-வாயு ஒரு பிராணாயாமம். இந்தப் பிராணன்-௬-கூடுதல் ஒருநாழிகைஇந்தநாழிகை-௬0-கூடின லொருநாள் இப்படி வாயுவைச் செயிப்பாயென்றறிக. இப்படிப்பிராணாயாமஞ் செய்யும்போது தவறுகள் வந்தாலு மாத்திரைக ளதிகமானாலும் பத்தியங்கள் தப்பினாலும் ஸ்திரி விஷயங்கள் வந்தாலுந் தேகத்திலே வியாதி பிறக்கும். அதேது சுரங்கள் உஷ்ண வியாதிகள் வந்தால் தான் ஆழமான சலத்தில் அமிழ்ந்தி நீருக்குள்ளே முழுகினாற்போலத் தியானம் பண்ணில துகள் தீரும். இனிச்சயித்திய முதலான வியாதிகள் வந்தாற் றேகமெல்லா மக்கினிக்குள்ளே முழுகினாற்போலு முள்ளேயிருக்கிற அக்கினியை யெழுப்பிச் சுவாலா மாலைகளாக உடம்பெல்லாம் பற்றிக்கொண்டாற்போலுந் தியானிக்கிற் றீரும். இனிவாயுவால்வந்த நோய்களுக்குந் தமந்தங்களுக்கும் முன்போல அக்கினியைத் தியானம்பண்ணத் தீரும். இனி உதராக்கினியெழுந்து பசியானபோது அமுர்தவெள்ளமா யுடம்பெங்கு நிரம்பவும் அமுர்த வெள்ளத்தில் அமிழ்ந்திப் பாவிக்கத் தீரும். தண்ணீர்த்தாகம் வந்தாலு முன்போலப்பாவிக்கத் தீரும். இனி விபரீதமான வாயு வியாதிகளுக்கு வாயுவைப் பூரகவிரேசககும்பகம்பண்ணத்தீரும். இனிப் பாம்பு கடிக்கும்போதும்பாம்பு ஏறும்போதும் அமுர்த்தாரை யுடம்பெல்லாநிறையத் தியானிக்கத்தீரும். இந்நிட்டையுள்ள யோகிக்கிப்படிச் செய்யத்தீரும்.மற்றவருக்குத் தீராதென்றறிக.

இதுவுமல்லாமற்சரபேதத்தாலுந்தீரும். அதெப்படியோகிக்குக்காய்ச்சல் தாகந் தாபம் பசி நீர்வற்றல் பயித்திய வேர்வை விஷம் வேதனை யிதுமுதலான உஷ்ணாதிகள் வந்தவிடத்திற் சந்திரனில் நடப்பிக்கத்தீரும். இனிச் சிலேத்மவாயு மந்தஞ் சளி சன்னி சயித்தியம் இது முதலான சயித்திய வியாதியெல்லாஞ் சூரியனை நடப்பிக்கத்தீரும். இனிச் சன்னிபாதம் க்ஷயம் இதுகள் பிருதிவியிற் றீரும். சிலேத்மம் சுவாசகாசம் அப்புவிற்றீரும். சனித்திரிதோஷம் இருபாரிசத்தில் நடப்பிக்கத் தீரும். அக்கினிக்குத் தாகந்தீரும். வாயுவுக்கு வாதந் தீரும், வானுக்குத் துக்கந்தீரும். இப்படிப் பஞ்சபூதத்திலு நடப்பிக்க இந்தவியாதி தீருமென்றறிக. இப்படி யோகீசுவரன் தீர்த்துக்கொள்ளுவானென்றறிக. இப்படிப் பிராணாயாமம் விகாதமில்லாம வீடேறினால் அஷ்டமாசித்தியும் பரகாயப் பிரவேசமுந் தேகசித்தியும்வருமென்றறிக. இனிஞானத்துக்குப்பிராணாயாமமாவது, இரேசகமாவது, தத்துவங்கள்மலங்களுங்கூடத் தன்னையும் நேதிநேதியினாலேகழியப் போக்குவது. இனிப் பூரகமாவது, ஞானமுதலான எல்லாத் தத்துவங்களு மடங்கியருளேபூரணமாகப் பூரிப்பது. இனிக் கும்பகமாவது, பதிபசுபாச மூன்று மிறந்துபூதத்திலே

புகுந்துபிறந்தா லுவது கும்பகம் என்றறிக. பிராணவாயுவை யுள்ளேயடக்கலாலே பிராணாயாம மென்றறிக.

இனிப்பிரத்தியாகார யோகமாவது.

௭௭. சினத்தொடுபொறிகள்சென்றுசேர்ந்துதந்தாம்புலன்க
ளனைத்தையுப்பற்றிக்கொண்டுஅவாவினைப்பண்ணுவன்னை
நினைத்தெழுமத்தையெல்லாநிரோதிக்கையாகுமென்று
மனத்தினிற்பிரத்தியாகாரமென்றுகொண்மதித்துநீயே.

என்றது கோபத்தோடேபொறிகளாகிறவிந்திரியம்புலனாகிற தன் தன் விஷயங்களைப்பற்றி அவாவைப் பண்ணுவிக்கிற மனதானதை யந்த விந்திரியங்களிலே புகுந்து பிரத்தியா கிர்விஷயா காரங்களைப் புசியாம லந்த மனதை யந்தரங்கத்திலே யிடை பிங்கலைகளிலே சரிக்கிற வாயுவைச் சுழி முனைத் துவாரங்களிலே யேறச் சுழிமுனைக்கிற நதிகள் முனையையும் வாயுவைக்கொண்டேயுடைத்து அதிலேவாயுவையேற்றி அவ்விடத்திலே மனதை நிறுத்திச் சமாதியா யிருந்து அவ்விடத்திலே அமுர்தம் புசித்து அனந்தை அனுதை அனுசிருதையான மகாப் பிரகாசங்களையும் புசிப்பது. இனிப் பிரத்தியாகார மென்பது மனதானது இந்திரியங்களாலே பிறவிஷயங்களைப் புசிக்கிறதை விட்டது. பிரத்தியாகமென்று பெயரானகையாலே பிரத்தியாக மாயிற்று. இதைவிட்டு உள்ளே யிருக்கிற சுகப் பிரகாசத்தை மனது புசிக்கையா லாகாரமாயிற்று. பிரத்தியிலேவிட்டது முன்னே புசிப்பு மாகையாற்பிரத்தியாகாரமென்று பெயரானதென்றறிக. இனிஞானத்துக்குப் பிறத்தியான தத்துவங்களையெல்லா மாகாரமாய்க் கொள்ளாப் பாவநிலே நிறுத்திப் பரமாய் நின்றதுபிரத்தியாகாரமென்றறிக.

௭௮. ஐம்புலன்கரணநான்கோடானமுக்குணத்திறுவிட
வெம்பியவிருகால்யோகாலடங்கிடமிகச்சாதித்தா
லும்பர்யோகத்தாலெட்டோடொருபதோடீரன்டுமெட்டோ
டம்பரமாயசித்தியனைத்துமாடங்கநோக்கில்.

இது புலன் கரணங் குணமான தெல்லா மிரண்டு காலாகிற இடைபிங்கலை வாயுவை யோகத்தாலே புலன்முதல் வாயுவந்த மடங்கச் சாதிக்கில் -௩௬- தத்துவமுமடங்கி எல்லாச் சித்திகளு முண்டாம். ஆகையாலே எல்லாமடங்க நோக்குவது ஆகாரமாகையாற் பிரத்தியாகார மென்றறிக.

இனி வாயுமுதலான தத்துவங்களை யிந்தப்பிரகாரமாக உள்ளே யடக்கில் ஒருநாழிகைக்கு வயசு நாளேறும்-௧௦-நாழிகைக்கு -௩-௯-நாழிகைக்கு-௩௲-ஒருநா ளடக்கில்-௬௩-இப்படி விடாமல்பலநாளு மடக்கிச் சமாதிபொருந்தில்-௧௮-சித்தியும்பெற்று மூன்றுகாலமுந் தூரதிஷ்டி தூரகெமனமுதலானதெல்லா முண்டாமென்றறிக. இனி ஞானத்துக்குச் சிவோவுபாதிகளை செரு

க்கிப் பிரித்து அறிவைக்கண்டு முன்பின்னமான வுபாதியை யறிவிலே யடங்கக்களைந்து அறிவேவடிவாகக்கண்டு முன்பின்னமானவுபாதியையறிவேவடிவாகச்செய்வ தென்றறிக.

இனித் தாரணையோகமாவது.

௮௰. ஆதாரஞ்சுவாதிட்டானமமூலிடைமணிபூரகந்தான்
மீதாருமனுகதந்தான்வெய்யவளிவிசுத்தி
சாதாரணமாமாஞ்ஞைசந்த்ரமண்டலமேதாலு
வீதாருமவற்றிலசித்தமிருத்தறுரணையாமன்றே.

என்றது, ஆதாரமான தானங்களை முன்னுதாரஸ்தானஞ் சொன்னபடியேஅனுபவித்த குருமுகமாகவறிந்துமனத்தையும் வாயுவையு மங்கங்கே நிறுத்திப்பதங்களை பூர்தமுகமாகச்செய்துவாயுக்களிருக்கிற தானங்களறிந்துவாயுக்களைப் பலகலையாகச் சிதறவொட்டாம லங்கங்கே தரிசிக்கச்செய்து மண்டலங்க ளிருக்கிற விடத்திலுந் தரிக்கப் பண்ணி அக்கினிக ளிருக்கிற விடமான காலாக்கினி காலிலு மூலாக்கினி மூலாதாரத்திலும் உதாரக்கினி உதரத்திலுங் காமாக்கினி நெற்றியிலுஞ் ஞானக்கினி சிரத்திலு மிந்தவைந்தக்கினியுஞ் சிதற ஒட்டாம லங்கங்கே சொலிக்கச்செய்து பஞ்சாக்கினி மத்தியஸ்தலமான இருதைய கமலத்திலே நிறுத்தி விந்துவை யறிந்து விந்துதாரணைபண்ணி மனதை யறிந்தும் மனதை தாரணைசெய்து அமிர்தமறிந்து அமிர்ததாரணை பண்ணி வாயுவை யறிந்து அக்கினியையறிந்து வாயுவக்கினி தாரணைசெய்து இப்படி யங்கங்கே யிருக்கிறதுகளை மனோவாயுவாலே பிடுங்கி யெங்கே நிறுத்தவேண்டுமோ அங்கே நிறுத்தியும்பிரித்தும் பிரித்ததை யேற்று மிடங்களிலேற்றி யிறக்கு மிடங்களி லிறக்கிக் கூட்டுமிடங்களிற் கூட்டி யிப்படித் தரிக்கச் செய்கிறது தாரணையென்றறிக.

இனி ஞானத்துக்கு.

௮௧. ஆயவுடம்பனைத்துமைம்பூதத்தேவைத்து
மாயையிலேவைத்தமாபூத—மாயை
பரத்திலேவைத்தப்பரமேதானுகத்
தரித்தலேதாரணைதான்

௮௨. ஆறுவுடம்பனைத்துமைம்பூதத்தேயழியும்
வாறுதிபூதமிறுமாயையின்—ஊறு
வொழிந்தமாமாயவிருளுள்ளொளியாயும்ப
ரொழுந்தஞானத்தாலிரும்

இப்படி ஞானத்துக்கு தாரணையென்றறிக. ஒன்றோடொன்று தரிக்கையாலேதாரணமென்றறிக. இனித்தியானயோகமாவது,

௮௩. இலையமற்றிவையைக்கும்பித் திலங்குமுக்கோணத் துள்ளே
வலையமுற்றுரங்குசத்தியக்கறவெழுப்பிமென்மேற்

கலைகளைச்சுவாலையாக்கிக்கட்டுடைத்தமுறைதயுன்னைச்
சிலையமைப்புறளுசித்தத்தா னேக்குதநியானமாமே.

என்றது, மனது லயமில்லாமல் வாயுவைக்கும்பித்துப்பிரகாசிக்கிறமுக்கோணத்துள்ளே வலையைப்போலவளைந்துகொண்டு உறங்குகிறகுண்டலிசத்தியை மயக்கமில்லாம லெழுப்பி மூத்தக்கினிச் சுவாலைகளையெழுப்பி கட்டுப்பட்டிருக்கிற அமிர்தத்திலே அக்கினியைக்கொள்வித்துச் சிலாவிக்கிரகம்போல விருந்து சித்தத்தாலே நோக்குகிறது தியானமென்றறிக. இனி ஞானத்துக்கு.

அச. பொருளின்மெய்காண்டல் புலத்தியானமுன்னா
பொருணினைதல்புத்தித்தியானம்,—பொருளிழந்த
போதமறிதல்போ தத்தியானம்போதமே
யாதல்பரத்தியானமாம்.

என்றது, பொருளாகிற விஷயங்களைப் பிரத்தியட்சமாகக்காண்கிறது புலத்தியானம் அதுகளையுள்ளேபற்றிக்கொண்டுபந்தனையாக விருக்கிறது புத்தித்தியானம். இனிப்பொருளும் புத்தியுமிழந்த விடத்தில் நிற்பது போதத்தியானம். இந்தபோதமே தானுகிறது பரத்தியான மென்றறிக.

இனிச்சமாதியோகமாவது.

அரு. சேர்ந்தவிந்தியங்கரணஞ் சேட்டைகட்கேதுவாகி
யாய்ந்துடலிடத்தினின்றுமவற்றுடன் றோய்வின்றின்றி
யோர்ந்ததிலரிய வின்பத்துருவசைதனமாமென்றுஞ்
சார்ந்தனன்றன்னைத்தானே தான்காண்கைசமாதியென்றான்

என்றது, இந்திரியங்கள்கரணங்கள் முதலான தத்துவங்கள் சேட்டைகளுக்கெல்லாமேதுவாகி யுடலிடத்தில்நின்று அஃதோரேகூடியுணுமதுகளிற்பற்றில்லாமலிருக்கிற ஆத்மசொரூபமாகிறதன்னைத்தானே காண்கிறது சமாதி. அதெப்படி எல்லாக்கரணங்களுமிறந்து மனோலயமா யதீதம்புரிந்துசுத்தப்பாழாய்ப்போம் அப்போது அந்தச்சாக்கிராதீதத்திலே குருவானவர்தன்னைக்காட்டக்கண்டு தானுயிருக்கிறது சமாதியென்றறிக.

இனி ஞானத்துக்கு.

அசு. காயமுதலையா காயாதியி லழித்து
மாயையிருளிலவை மாள்வித்து—மாயை,
யொருக்கிதன்னுற்று னுள்பரத்தோடொன்று
யிருக்கைச்சமாதியியல்பு.

இப்படி அடயோக அஷ்டாங்க மூற்றும்இதிலேதானே ஞானத்துக்கும் அஷ்டாங்கஞ் சொல்விற்றென்றறிக. இப்படிச் சமாதியளவாகச் சொன்ன யோகங்களி லாதாரங்களிலே முன்சொன்ன தானங்களிற் பேதமாகப்பின்பு தேகம்வலியவும் நரைதிரைமாறிப் பாலத்துவமாகவும் ஆயுள்ளேறவுஞ் சித்திகள்பலிக்கவும் ஆதாரங்களி லங்கங்கே நின்றுதியானிக்கும்படி.

௮௭, அணுவாயசமாதியந்த மாயவட்டாங்கயோக
தணிவாயவடைவேயாதா ராதியோமென்னுமெட்டுந்
துணிவாயகுரவனாலுந் துகளிலாமறைகளாலும்
பணிவாகவறையவேண்டு மவற்றையும்பகரக்கேணீ.

௮௮, இப்படியறிந்துசேர்கைக் கியம்புமூலத்தையந்த
வொப்பிலாவெழுத்தைவிந்து நாதமோடுச்சரித்து
வப்பரஞ்சோதிநோக்கி யமைவதாதாரயோகந்
துப்பவையறியுமாக்குந்தோருன்மீதொருவர்தோன்றின்.

௮௯, நுண்ணிதாயுபர்ந்தவிந்த நோக்கருமொளியைநோக்கி
வண்ணமோரிரண்டுமூல மந்திரமனத்தாலோர்ந்து
பண்ணுமீதமிர்தயோகம் பயின்றிடஙியமத்தோடு
நண்ணுமோதாகமோக நணுகுமோபிணிகடானே.

௯௰, சொன்னமந்திரத்தைக்கொண்டு சுக்கிலவழியேயேறிப்
பன்னருமமிர்தைவாங்கிப் பலாவுணம்பண்ணிமுன்போ
லுன்னியவொளியைநோக்கு மொருமைபானந்தயோக
மின்னெறியிந்தயோக மிசைத்துறவிருந்துளோர்க்கே.

௯௧, இன்னெறியறிந்துநாசி யிருபுடங்கொண்டுகாற்றைத்
துன்னிடக்கபாலத்தேற்றிச் சுழினையாலிழித்துமூல
மன்னியவொளியுனுள்ளே வாயுவையறுக்குமீது
பன்னகயோகமென்று பரிந்தனரிருந்துநல்லோர்.

௯௨, விண்டலத்தனலைவாங்கி மேலெழமுன்போல்வீணை
த்தண்டிலையிழித்துவன்னி சக்கரத்தறுக்குமீதே
கண்டவச்சிரயோகந்தான் கலந்திவைபிரத்தியாகாரங்
கொண்டவர்முன்னையோக குணத்தவர்மரணத்தாகார்.

௯௩, ஆர்ந்தவாதாரசாலத் தழிவிலாப்பதமெழுந்து
நேர்ந்திறையிரண்டுநின்ற விடத்திலேமிகநிறுத்தி
யோர்ந்தெழுமோங்காரத்தை யுச்சரித்தொளியைநோக்கிச்
சேர்ந்துறத்தியானசீலத் திருப்பதுசித்தயோகம்.

௯௪, மூலமேதுடங்கிநாத முழங்குமாதாரமுட்டக்
கோலியேதடவிச்சித்தங் கொண்டுருத்தோறுமேறச்
சீலமாயுச்சரித்துத்திகழ்ந்தவோங்காரஞ்சிந்தை
ஞாலவாளொளியைநோக்கி யிருப்பதுஞானயோகம்.

௯௫. எழுதலும்விரிதல்கூம்பலென்றுளவிகாரமின்றி
யழிதலுமசைவுமின்றியசிந்தமாயகண்டமாகி
முழுமறைமயமாய்நின்ற மொய்கொள்சோதியினையுள்ளே
பழுதறச்சமாதியோடே பார்ப்பதுபரமயோகம்.

இப்படி ஆதாரங்களிலே வெகுவாக அப்பியாசம் பண்ணினாற் பரஞ்சோதி சொரூப மான சோட்ச கலையின் பேரொளியைக்கண்டு அதிலேயழுந்திஅமிர்தமும் புசித்து ஆனந்தபரனாய் மோட்ச மடைவானென்றறிக. இதின்பேராவது, ஆதாரயோகம்- அமிர்தயோகம் - ஆனந்தயோகம்- பன்னகயோகம்-வச்சிரயோகம்-ஞானயோகம்-சித்தயோகம்-பரமயோகம் ஆக எட்டு இன்னமனேகமயோகமுண்டென்றறிக. இனிஅணிமாதிஅஷ்டமாசித்தியோகமாவது, மூலாதாரத்தருவின் சுழிமுனைத்துவாரத்திலே மனதைவைத்து அக்கினியை ஒருவருஷம் விடாமல் நோக்கிற் பொன்னிறமா யணுவைப் பேரலருபங்கொள்வர் இது அணிமாசித்தி. இனிஅந்த அக்கினியைத்தானே மேருத்துவேவழியாக வாயுவாலே குண்டலிமட்டாக எழுப்பி அதிலேற்றி இரண்டுவருஷம் நோக்கில்நீர்நுரைகள் போலதேகமெத்தனவுண்டாம், இதுலகுமாசித்தி. இந்தக்குண்டலி மட்டாகவந்த வக்கினியை நாபித்தானத்திலு மிருதையத்திலுமேற்றி மேருத்துவேவழியாக வாயுவாலே மூவாண்டு நோக்கிலாகாயமளவாக ஓங்கிவளரலாம் அணுவிலுஞ் சிறியராகியிருக்கலாம் இது கிரிமாசித்தி. இனியிருதய மாதியாக முன்சொன்ன வனலை வாயுவினாலே மேருத்துவேயிலேற்றிக் கண்டத்தளவாக எழுப்பியேற்றி ஐயாண்டு நோக்கின் முற்காலத்துள்ள தெல்லாமறிவான் இதுபிராத்திசித்தி. இனிக்கழுத்துமுதற் கண்மட்டாக மேருத் துவேவழியாக அக்கினியை யேற்றியாறாண்டு நோக்கின் மண்ணி லெத்தனைகாலம் புதைத்திருந்தாலு மிருக்கும் பிறப்புமறும் இது பிராகாமியசித்தி. இனிக் கணதிக்கினனலை வாயுவாலே வாங்கிமேருத்துவேயிலேற்றிச் சிரசிலேற்றி ஏழாண்டு நோக்கி லெல்லாருக்கும் பாபத்துகளைப்போக்கி யெல்லாச் சீவனிலு மேகமாய்க்கலந்து நிற்பான் இது ஈசத்து வசித்தி. இனிச் சிரசி லிருக்கிறவனலை வாயுவாலே வாங்கி நாசாக்கிறத்திலே எட்டாண்டு நோக்கின் மூதண்டங்களைப் படைத்த முதல்வனாய்த் வேண்டியவண்டங்களையுஞ்சிருஷ்டிப்பான் இதுவசித்துவசித்தி. இந்நாசியினனலைக்கோதண்டமாசிற சிரசளவாக்கிச் சிகையளவுஞ்செல்லநோக்கி லீசனுமாயெந்த வடிவாக வேண்டுமோ அந்தவடி வாவான் இதுகாமருபசித்தி. வசித்துவமென்றும் பெராசமென்றறிக. இதுகள்தப்பில் வியாதிகள் வந்து நரகத்திலும் விழுவா னென்றறிக. இந்தச்சித்தியாவது அணிமா லகுமா. கிரிமா. மகிமா பிராத்தி பிராகாம் ஈசத்துவம். வசித்துவம். ஆக. அ. இதில் மகிமாசித்திவிருத்தம் நாலாண்டு நோக்குகிற தில்லையென்றறிக.

அஷ்ட ஐஸ்வரியயோகமாவது.

௬௬. ஏற்றியவியமத்தோடே யிலங்குமாதாரயோகம்
போற்றுவானெழுதறைவாயு வெழுத்துடன்பொருந்துவித்து
மேற்றிகழொளியைமேரு வியோமத்தோடியங்கவொராரன்
டாற்றவேநோக்கினுகா சத்திலே சரிக்கலாமால்.

௬௭. நேசமாகியமத்தோடே நிகழ்தருமுத்தியோக
மோசையவெழுத்தைவாயு வனலொடங்குயர்வானொட்டி

பேசுமாருதவேகத்திற் பெருகவீராண்டுநோக்கி
ஞசின்மாத்திரைக்குட்கோடியோசனைசெல்லலாமால்.

௬௯. ஆதனம்பரமதாக வானந்தயோகந்தன்னை
யோதியவனலெழுத்தா லொளிவிழியுச்சிவைத்து
ஏதமதறவேயெல்லா மிலங்குமூவாண்டுநோக்கிற்
றீதினெக்திசையினுள்ள பொருள்களுந்தெரிக்கலாமால்.

௬௬. பழிப்பினற்பிராணாயாமத் தோடுபன்னகயோகத்தை
விழிப்பிலாவிந்துநாதச் செவியினுலொளிப்புலத்தை
யொழிப்பினுலாண்டுநோக்கிற் புகறிசைபத்தினுள்ளு
மொழிப்பருந்தூரத்துள்ள வுரையெலாங்கேட்கலாமால்.

௱. மன்னுநற்பிரத்தியாகாரத் தோடுவச்சிரயோகத்தை
மின்னியவிந்துநாதம் விமலவாரணத்திற்கூட்டி
யுன்னவையாண்டுநோக்கப் பதங்களுமுயர்சங்கோடு
பன்னியபதுமமாதி பழுதிலாநிதியுமெய்தும்.

௱௧. தாரணையதனினோடே தாந்திகழ்சித்தயோகம்
வாருணையதனினோடே வருவதோர்குண்டலிக்கே
காரணவிழியினுலே கருதியாறுண்டுநோக்கி
ஞரணவராகம்போலப் பாதலநண்ணலாமால்.

௱௨. தெரிவருந்தியானத்தோடே செப்பியஞானயோகம்
விரவியவோங்காரத்தை விந்துநாதத்தால்வீக்கி
மருவியேழாண்டுநோக்கின் வாய்த்திடவெவர்க்குமெல்லாந்
திரவனுக்கிரகஞ்செய்யத் தேசுவந்தெய்துமன்றே.

௱௩. பார்த்தநற்சமாதியோடே பரமயோகதனையுந்தா
ஞர்த்தவப்பிரணவத்தோ டசபையைக்கொண்டுமிக்க
சீர்த்தவெட்டாண்டு நோக்கிற்றேவரேயெனினும்வேண்டி
லார்த்திடுஞ்சாபத்திட்டங் கழிந்திடலாகுமன்றே.

இது ஆதாராதியோகம். அமிர்தயோகம் - ஆனந்தயோகம்-பன்னகயோகம்-வச்சிரயோகம்-சித்தயோகம்-ஞானயோகம்-பரமயோகம்- ஆகயோகம்-அ. இது முன்சொன்ன அஷ்டமாசித்தி யோகத்தைத்தானே திரும்பச் சித்தி வேறு ஐஸ்வரியம் வேருகையாலே யிதையும் வேருக சமாதி சொன்னதென்றறிக.

௱௪. உத்தமமியமமாதியுண்மையை யுணர்ந்தயோகி
கைத்தலத்தொன்றையீந்தார் கடவுளர்கடவுளாகுஞ்
சித்தமாஞ்சிவன்கைத்தாகும் திசையிருநான்குஞ்சூழ்ந்த
மெய்த்தகுபுவனமூன்றுங்கொண்ட தோர்தன்மைத்தாமே.

இனிமுன்சொன்ன மந்திர லய அட ராசவென்னும்யோகநாவில் மந்திர லய அடயோகமூன்றும் முன்முந்த முந்தச்சொன்ன ஆதார நிராதார மீதான மூன்றி லாதாரயோகத்தில் லடங்குமென்றறிக. இனி ராசயோகமாவது, தாரகஞ்,சாங்கியம்,அமனஸ்கம், என்று மூன்று விதம். இதில் தாரகமாவது, அந்தரசங்கம்,பயிரசங்கம், ஆத்மசங்கமென்றும் இதற்குத்தானே அந்தர லக்ஷியம் பயிரலக்ஷியம், அந்தராந்தர லக்ஷியம் என்று மூன்றுவிதமாம். இது சிற்சத்தியானது மகாமாயையோடேகூடி லோக சிருஷ்டி யுண்டாக்கும்போது இரஞ் சித்துக் கலங்கல் செய்தபோது அவிடத்திற் சூரிய கிரணம் படிகத்திலே கலந்தபோது. அக்கினி பிரகாசித்தாற்போல நிவர்த்திமுதல் அனுசிருதை யீறுகசோடச கலைக ளுண்டா யதிலே யந்தரபூதமா யனேககோடி கலைகளுண்டா யிது தண்டகா கிருதி, தாரகாகிருதி,. குண்டலாகிருதி, அர்த்த சந்திராகிருதி, தர்ப்பணாகிருதி. சோதியாகிருதி, இதுமுதலான அனந்தவர்ண பேதருபங்களா யிதுதானே பிண்டப் பிர்மாண்டங்களான தென்றறிக. இதையோகீஸ்வரரானபே ரிந்தப் பிரகாசங்களைத் தியானம்பண்ணி வானவர் தானவர் மானவர் புற்று மரங்கள் மூடி பூமியிலே புதைந்துபோய்ச் சரீர ஸ்மரணை யறியாதிருப்பார்களென்றறிக. இந்ததாரகயோகமு மாதாரங்களிலே வெகுகுறிகளிட்டுப் பார்க்கையாலிதுவுமுன்சொன்ன அஷ்டாங்கயோகத்தில்முடிந்து பிறகுசொன்ன ஆதாரா தியஷ்டாங்கத்திலடங்குமென்றறிக. இனிச்சாங்கிய யோகமாவது, நெதிநெதி அன்னுவய வெதிரேகங்களாலே எல்லா தத்துவங்களையும் விலக்ஷணம்பண்ணி மீந்துநின்ற தன்னைத்தானே யறிகையாலே நிராதார யோகத்திலேகூடுமென்றறிக. இனி அமனஸ்க யோகமாவது, மனமிறந்துநிற்பது.

ஆகையாலே சீவோவுபாதி, பரோவுபாதி, சிவோவுபாதி யாகிய யிந்த மூன்றுமிறந்து இஃதோடு பஞ்சமலங்களும் நீங்கி ஆத்மா சிவத்துடன் கூடிச் சிவமாவ தென்றறிக. இவ்வாறு சித்தாந்தத்தில்-௯௬-தத்துவமு நீங்கி ஆத்மாவா யிது அருளோடே யருளாய் அருள் சிவத்தோடே சிவமாய்ப் பதி பசு பாச மூன்று நீங்கினது. இதுதானே மீதானயோகத்தி லடங்குமென்றறிக. மந்திர லய அட ராச வென்னும்யோகநாலு முடிந்த தென்றறிக. இதல்லாமலும்மந்திரயோகம், பரிசயோகம், பாவயோகம்,அபாவயோகம், மகாயோகம் ஆக ரு. இனிச் சந்திரயோகம், சூரியயோகம், லம்பிகாயோகம் இதுகள் முதலான யோகங்க ளனேகமுண்டு. இந்த யோகங்களின் விரிவைச் சிவயோகசாரம், சிவயோக மஞ்சரி, யோகாத்நவம், அடப்பிறதிபிகை இதுகளிலும் புராணத்திலும், இனித் தமிழில் பெருந்திரட்டு, சிறுதிரட்டு மெய்மொழி,சகலாகம சிகாமணி, சிவதன்மோத்தரம்,திருமந்திரம், தத்துவப் பிரகாசம் இதுகள் முதலான சாத்திரத்திலுங் காண்க.
இதைவிரிக்கில் விரிவாமென்றுவெகு சங்க்ஷேபமாய்ச் சொன்னதென்றறிக

முன்சொன்னலட்சியத்தில் தாரகப் பிரமங்களைத் தெரிசிக்கிற தானங்களெவ்விடத்தென்னில் பிருதிவியில்மூலாதாரநாலிதழா மிதினடுவேயூண்பேழைசெய்தபாம்புபோல் வட்டமாயெழுந்து திரிகோணத்தி லசபைமந்திரம்

ஹம்ஸமென்றெழுந்திருக்கும் இது நடுச்சுருளுக்குள்ளே பால்நிறமாய்ப் பிறைபோ லிருக்கும் இது முன்சொன்ன திரிகோணத்துள்ளும் புறம்பு மூதரமளவாக வளைவுக்குள்ளே சொரியனலாய்ச் சுவாலையாயிருக்கும். இனி யுந்திக்குமேல் நாலங்குலப் பிரமாணம் அகாரந் தழறக் கொழுந்தா யிருக்கும். தெய்வம் பிர்மா. கலைநிவிர்த்தி மாத்திரை ௩. இது இருதய மளவாயிருக்கும்.

இந்த அகாரத்தின்மேல் உகாரம் எட்டங்குலப் பிரமாணமாய்ச் சோமசூரியப் பிரகாசமாய்த் தெய்வம் விஷ்ணுவாய் கலைபிரதிஷ்டையாய் மாத்திரையிரண்டாய்க் கழுத்தளவாயிருக்கும். இந்த உகாரத்தின்மேல் மகாரம்நாலங்குலப்பிரமாணமாய் மின்பிரகாசமாம் தெய்வம் உருத்திரன். கலைவித்தைமாத்திரை ஒன்றுவிது தாலுமூலமளவாம். இந்தமகாரத்தின்மே லிரண்டங்குலப் பிரமாணமாய் விநி அனற் பிரகாசமாம். தெய்வம் மகேஸ்வரன். கலைசாந்தி மாத்திரை அரை யிது இரண்டு புருவத்துக்கும் நடுவாம். இந்த விந்துவின்மே லிரண்டங்குலப் பிரமாணம் அர்த்த சந்திர பிறைப் பிரகாசமாம். மாத்திரை கால் நடுநெற்றி யளவா யிருக்கும். இதில் அத்துவாக்களாறுங் கூடுதலாலேயிது தூலப்பிரசாதமென்று பெயர். இந்தஅர்த்தசந்திரையின்மேலிரண்டங்குலப் பிரமாணமாய் நிரோதை திரிகோணம்போலப் புகை நிறமாய் நெற்றிமயிரளவாய் நிற்கும் மாத்திரை அரைக்கால் இந்த நிரோதையின்மே லிரண்டங்குலமாய் நாதமானது மாணிக்கப் பிரகாசமாய்ப் பிரம ரந்திரமளவாம். மாத்திரைவீசம். இந்த நாதத்துக்குமேலிரண்டங்குலப் பிரமாணம்நாதாந்தம் காணி விந்து மின்பிரகாசமாயிரண்டுவகையாம் மாத்திரைஅரைம்மாவரைக்காணிநிரோதைமுதல்மூன்றுக்குஞ்சதாசிவன்தெய்வம். சாந்தியாதீதகலையிம்மூன்றுக்கும்அத்துவாக்கள் கூடாதபடியால்சூட்சுமப்பிரசாதமாம். இதுவும்பிரமரந்திரத்துக்குமேல்ரம்ஆ கலை-அ. இந்த நாதாந்தத்துக்குமேல்நாலங்குலப்பிரமாணஞ்சத்தி தலைமாறின கலப்பைபோல இதற்குமொருவிந்துப் பிரகாசம் நூறுயிரகோடி யாதித்தப்பிரகாசமாம் மாத்திரை காணிமுந்திரை இந்தச்சத்திமேல் நாலங்குலப்பிரமாணஞ்சூலம்போன்று வியாபினி யிரண்டு விந்துப்பிரகாசம் நூறுயிரகோடியாதயன்பேரொளியாயிருக்கும் மாத்திரை அரைக்காணியுங்கீழரை இந்தவியாபினிமேல் ௩ அங்குலப்பிரமாணஞ் சமனை குரு சசிவடிவுபோன்று-௨-விந்துப் பிரகாசமாம். நூராறுயிரகோடி வெய்யிலொளியாயிருக்கும் மாத்திரை முந்திரியுங் கீழ்க்கால் இந்தச்சமனைமேல் ௨ அங்குலப் பிரமாணம் வடிவுவட்டமா யிருட்பிரகாசமா யுன்மனையிருக்கும் மாத்திரை கீழரையேமுந்திரை இந்நான்கும்உடம்பைவிட்டுப் பிரமரந்திரத்துக்கு மேலானபடியாலே சூட்சுமா சூட்சுமப் பிரசாதமாம் இந்த நாலுக்கும் கத்துறு சாதாக்கியம் மூர்த்தி அமூர்த்தி சிவம் இந்நான்கு சாதாக்கியமும் அதிதெய்வமாம். முன்சொன்ன எட்டுடன் பன்னிரண்டு கலையாம். இது கலை மீந்த ௪-ம், ௧௨-அங்குலப் பிரமாணமானபடியாலே துவாதசகலை. இந்த உன்மனைக்குள்ளடுக்கா யோரங்குலம் வியோமரூபினி யிதின்மே லோரங்குலிஅனந்தை- இதின்மேலோரங்குலி அநாதி இதின்மேலோரங்குலி அநாசிறுதைஆக - ௪ -இந்த - ௪ - ம் - வியோமரூபினி யப்பதத்திலே அந்தத்திலேஅனந்தை.

இனி அனுதை ஞானசொருபமாய் ஞானசத்தியாயிருக்கும் அனு சிறுதை எல்லாவற்றையுஞ் சுட்டிக்கப்பட்ட திரோதான சத்தியாம் இந்த சூம் அதிசூட்சம மென்றுபெயர் இதைத் தூலமென்றுஞ்சூட்சமமென்றுந், தூல்லியமென்றும்அதிதூல்லியமென்றுமசொல்வர் இத்துடன்மூன்கலை-ஙெ கூடிற் சோடசகலாப்பிரசாதமாம் இதி துன்மனையாவது சரக்கால்நீதிரு ள்போல விருக்கும் இவ்விருளிலே சந்திரோதையம்போன்று இவனுடைய பி ரகாசத்தைக் காணுகிறது சாக்கிரக்கண்டது சொப்பனம் இப்படிப் பஞ்ச வத்தையுங் கடந்து முன்கண்ட பிரகாசங்களெல்லாம் வெறும்பாழாய்ப்போ னது மோட்சமென்றறிக

ҧடு. முப்பாழும்பாழாயமுதமபாழுமனுமயபாழாய
யப்பாழுமாதியந்தமற்றப்பா—ழிப்பாழிற்
சும்மாவிருக்கச்சுகமளித்தாளெங்குருவே
நிம்மாயக்கத்தடிக்கேகீர்

இந்தபிரகாரமான ஸ்தானங்களிலே அந்தற பகிற ஆத்த லட்சியங் ் பார்த்து மோட்சமடைவான் இதல்லாமல் - உடுக - கலையுண்டுஅதே தென்னில் முன்சொன்ன -ஙகூ-ம். சமனுந்தம், உன்மனுந்தம், பளையந்தம் பராந்தம், சரனுந்தம் ஆக ரு. ஆக உடுக- இனி வாக்குகள் ரு அனுதிகலை ஆதி கலை, தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை, ஆக ரு இதல்லாமற் பஞ்சப்பிர ணவம் அஷ்டப்பிரணவம்,சோட்சப்பிரணவம் ,தூலபஞ்சகிருத்தியம், சூட் சமபஞ்சகிருத்தியம், அனுக்கிரகபஞ்சகிருத்தியம, இதெல்லாங் குண்டலிச த்திமகாந்தாமான தென்றறிக.

இஃதோடு சிற்சத்திகூடி யிரஞ்சித்தபோது தாரகப்பிரமம் மூன்று வித லட்சியமான தென்றறிக. இந்தத் தாரகங்கடந்தது சாங்கியம் இதுக டந்தது அமனஸ்கம் இதுகளெல்லாம் யோகங்களாலேயறிய வேண்டுமென் றறிக.

---

## தத்துவநிஜாநுபோகசாரம்

பூர்வபாகம் கன்மகாண்டத்தி லடங்கிய

பிரகரணம் - ௩ க்கு அத்தியாயங்கள் - ҧருங.

உதாரண முட்படச் செய்யுட்கள்-௬ҧஉ.